உ

# ஜய ஜய ஹநுமான்

ஆசிரியர்
V. ஸ்வாமிநாத ஆத்ரேய
தஞ்சாவூர்

ஸ்ரீராமபக்த சரித தொடர்வரிசை .3

வெளியிடுவோர்
ஸ்ரீமஹாபெரியவாள் டிரஸ்ட்
பெங்களூர் – 560054
2010

# JAYA JAYA HANUMAN

AUTHOR

**V.SVAMINATHA ATREYA**

**Thanjavur.**

Copies avilable at

**THE KUPPUSWAMI SASTRI**
**RESEARCH INSTITUTE**
84, THIRU VI.KA. ROAD,
MYLAPORE,
CHENNAI - 600 004
(Inside Mylapore Sanskrit College)

Published By
**SRI MAHA PERIYAVAL TRUST**
Gurukrupa -94, I.T.I Layout MSRIT
Bangalore : 560 054

---

Printed at **V.K.N. ENTERPRISES**
164, R.H.Road, Mylapore
Chennai - 4
Ph: 98402 17036

உ

ஸ்ரீராம

# அறிமுகம்

ஸ்ரீகோஸ்வாமி துளஸீதாஸர் தாம் பெற்ற பெரும் பேற்றுக்காக - ஸ்ரீராமதர்சனத்திற்காக ஹநுமானே உறுதுணையாக இருந்தார் என்ற நன்றிப் பெருக்கொடு

ஜே ஜேஜே ஹநுமாந கோஸாஈ

என்று கட்டியம் கூறுகிறார். அதே போல மஹநீயர் ரா. கணபதி அவர்கள் - தாம் எழுதிய எழுத்துக்களுக்கெல்லாம் - மகுடரத்ந கிரீடமாக - ஹநுமானைப் பற்றி ஒரு நூல் எழுதி - ''ஜய ஹநுமான்'' என்று பெயர் கொடுத்துப் பெருமைப்படுத்துகிறார். அதை ஒட்டி இந்த நூலும் ஜய ஜய ஹநுமான் என்ற பெயர் பெறுகிறது.

பெயர் வைப்பதில் மட்டும் ஸ்ரீ ரா.க. அவர்களிடம் சலுகை எடுத்துக் கொண்டதோடு சரி. இந்த நூலாசிரியருக்கு அவர் போல ஆகாச வீதியில் ஸஞ்சரிக்க இயலாது. பூமியில் - மக்கள் மனப்பான்மைகளில் உள்ள மேடு பள்ளங்கள் - கல்லும் முள்ளும் பரவிக்கிடக்கின்ற வழியில் தத்தித் தத்தி நடக்கின்ற இந்த நூல் வாழ்க்கையில் உழன்று சிக்கித் தவிக்கின்ற உள்ளங்களுக்கு ராமநாம தைர்யம் என்ற ஒரே டானிக்கின் மூலம் உவகையூட்டி ஆறுதல் அளிக்க முனைகிறது. அதற்கு ஹநுமான் ஒவ்வொரு சொல்லிலும் புகுந்து அந்த டானிக்குக்கு அழியாத வீர்யத்தைக் காப்பாற்றுகிறார்.

ஸ்ரீ காஞ்சீ மஹாஸ்வாமிகள் வ்யாஸசாந்தேச்வரர் ஆலயத்தில் வெளியிட்ட தமது சிந்தனைகளின் மூலம் ஆசிரியருக்கு திசை காட்டினார்கள். அந்த ராஜபாட்டையில் புரண்டெழுந்த இந்த நூல், வாசகருக்கு வாழ்வில் தெம்பும் தைரியமும் அளித்து கருத்தில் நேர்மையையும் உண்மையையும் துலங்க வைக்கும்.

இதை எழுதும் போது - தானே - ஏதோ சிந்தித்து எழுதிய நினைப்பே வந்ததில்லை. எழுதுவதற்கு விஷயங்கள் போர் போராக வந்து குவிந்தன. அத்தனையையும் சொல்லி விடுவோம் என்ற மாளாத பேராசை கால் பங்கு நிறைவேறியிருக்கிறது.

புத்தியையும் பலத்தையும், புகழையும், தைரியத்தையும் ஹநுமான் கொடுத்துக் கொண்டே இருந்தாலும் அவற்றை ஏந்திக் தாங்குவதற்கு உடல் வளமோ மனோ பலமோ இல்லாததால் சிதறிப் போனவை பற்பல பல பல. அந்தக் கருத்துக்களின் மாண்பை எழுத்து திறன் ஓரளவு தான் தாங்கியிருக்கிறது - எங்கேயாவது FULL STOP வைத்து விட வேண்டுமென்ற அசதி - நூலை ஓம்தத்ஸத் பண்ணியிருக்கிறது.

நாடு போகிற சரிவில் மக்கள் கண் மூடித்தனமாக - மனிதப் பண்பை இழந்து - சருக்கி, வழுக்கி, உருண்டு கொண்டிருக்கிறோம் - என்ற பயமே இல்லாமல் காலத்தை வீணடிக்கின்றனர். அவர்கள் பால் ஹநுமான் கருணை பூண்டு ராம நாமத்தை முழக்கம் செய்து கொண்டிருக்கிறார் - என்ற ஸத்யத்தை உணர வைப்பது தான் நூலின் நோக்கம் அந்த நோக்கத்தையும் அருளியவர் ஹநுமான் தான். ஆதலால் வெற்றி தோல்வி அவருடையது.

ஹநுமானுக்கு தோல்வியே கிடையாது. அதையும் பார்க்கத்தான் போகிறோம்.

போதும் போதும் - என்று ஒய்ந்து கோவிந்தபுரத்திலே - ஸ்ரீகுருநாதர் ஸந்நிதியில் ராம நாமம் சொல்ல மட்டும் நமக்கு முடியும் என்று உணர்ந்து ஒதுங்கி உட்கார்ந்திருந்த இவனை உசுப்பி, எழுப்பி, அயரவிடாமல் ஊக்கமளித்து அதை எழுத வைத்தவர்கள் பங்களூர் ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்ட்காரரர்கள்.

அவர்கள் ஸ்ரீஸமர்த்த ராம தாஸ சரிதத்தையும் ஜய ஜய ஹநுமான் - நூலையும் எழுதுவதற்கு அளித்த வாய்ப்பு மனதிற்கு ஹிதமாகத்தான் இருந்தது. உட்கார்ந்த இடத்தில்

இவனுக்கு செய்திகளைச் சேர்த்து உதவிய உதாரபுருஷர்களைப் பட்டியல் இட்டு மாளாது.

இவனுக்கு அதிக சிரமம் கொடுக்காமல் - குறுகிய காலத்தில் - சிறந்த முறையில் Type set பண்ணிக் கொடுத்தவர் V.K.N. Enterprises, Mylapore.

ஸ்ரீமஹா பெரியவாள் டிரஸ்ட்காரர் ஸ்ரீமஹா பெரியவாளின் உள்ளத்து உகந்த சேவையை மிகவும் பொறுப்போடும் ஆர்வத்தோடும் ஆற்றுவதற்கு - இவனையும் துணை கொண்டதை நினைவிலிருந்து அகற்ற முடியாது.

ராம ராம ராம

தஞ்சாவூர் **V. ஸ்வாமிநாத ஆத்ரேய**

16.08.08

# ஜய ஜய ஹநுமான்

## பொருளடக்கம்

*ராம ராம*

கோரக்பூர் கீதாபிரஸ் நிறுவனத்தின் ஆன்மீக புத்தகங்களிலும், மற்றும் மாதாந்திர பத்திரிக்கை கல்யாணிலும் சிறந்த ஓவியங்கள் இடம் பெற்றிருக்கின்றன. அவற்றை வரைந்த ஓவியர் பெருமானின் புனே பெயர் பகவான் ஆனால் அந்த ஓவியங்களில் அந்த தைவவடிவங்களை நம் கண்களுக்கு விருந்தாக அளிப்பதில் பகவானே தான்.

வெகு காலமாக பகவானின் ஓவியங்கள் பலவற்றை இந்த நூலில் நூலாசிரியர் சேர்த்து வைத்திருக்கிறார். அவற்றிலிருந்து மூன்று ஓவியங்களை இந்த நூலில் பதிப்பிப்பதில் பெருமைப்படுகிறோம். இதன் பொருட்டு கீதா ப்ரஸ் நிறுவனத்தாருக்கு கடமை பட்டிருக்கிறோம்.

பதிப்பாளர்

# ஜய ஜய ஹனுமான்

## முன் பாதி

முதற்பகுதி

## ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாள் அருளிய

## ஸ்ரீ ஹனுமத் பஞ்சரத்னம்

**வீதாகில விஷயேச்ச$_2$ம்**
**ஜாதானந்தா ச்$_+$ரு புலக மத்யச்ச$_2$ம்**
**ஸீதாபதி தூ$_3$தாத்$_3$யம்**
**வாதாத்ம$_3$ ஜமத்$_3$ய பா$_4$வயே ஹ்ருத்$_3$யம் (1)**

உலகத்திலேயே சாதாரணமாக ஜனங்கள் ஆசைப்படுகின்ற சுகங்கள் இவற்றின் அனுபவங்கள் எல்லாவற்றையுமே நினைத்தே பார்க்காதவர் ஹனுமான். ராமநாமகீர்த்தன ஆனந்தத்திலேயே திளைத்து மயிர்கூச்சலோடு கண்களில் ஆனந்தக்கண்ணீர் மல்கப் பரவசமடைபவர். ராமதூதன். ஹனுமான்.பரமபரிசுத்தர். இலக்கியங்களிலேயே- முதல் முதலாகக் காணப்படுகின்ற ‘தூது’- என்ற இலக்கிய மரபை ஆரம்பித்தவர் ஹனுமான். என் இதயத்திலே உறைபவர். அத்தகைய வாயுகுமாரனை நினைக்கின்றேன்.

**தருணாருண முக$_2$ கமலம்**
**கருணாரஸ பூரபூரிதாபாங்க$_3$ம் |**
**ஸஞ்ஜீவந மாச$_+$ாஸே**
**மஞ்ஜூள மஹிமாந மஞ்சநாப$_4$ாக்$_3$யம் || (2)**

பூத்த சிவப்பு ரோஜா நிறமுடைய முக விலாஸம். கடைக்கண்களிலே எப்பொழுதுமே கருணை அமுத நீர் ஊற்றெடுக்கும். நன்கு வாழ வைப்பவர். மனத்திற்கு இனிய

*மஹிமை பொருந்தியவர். அஞ்ஜநாதேவியின் பாக்கியமே உருவெடுத்தவர். அவரையே கொண்டாடுவேன்.*

***ச$_{+}$ம்பர வைரி ச$_{+}$ராதிக$_{3}$ம்***
***அம்$_{3}$புஜத$_{3}$ல விபுல லோச$_{1}$ நோத$_{3}$ாரம் ।***
***கம்பு$_{3}$க$_{3}$ல மநிலதி$_{3}$ஷ்டம்***
***பி$_{3}$ம்பே$_{3}$ாஜ்வலிதோஷ்ட$_{2}$ மேகமவலம்பே$_{3}$ ॥ (3)***

*மன்மதனின் ஏவுகணைக்கு அப்பாற்பட்டவர்.தாமரை இதழ் போல அகன்றும் ஓரத்தில் கூராகவுமுள்ள விரிந்த கண்களை உடையவர்.வெண்சங்கு போல நடுவில் பருத்து வழுவழுவென்று ஜொலிக்கின்ற கழுத்து அழகன். வாயு தேவனின் புண்ணியப் பயனானவர். கோவைப் பழம்போல சிவந்து, பளபளவென்று ஜ்வலிக்கின்ற உதடுகள் உடைய அநுமானைப் பற்றிக் கொள்கிறேன்.*

***தூ$_{3}$ரீக்ருத ஸீதார்தி:***
***ப்ரகடீக்ருத ராம வைப$_{4}$வ ஸ்பூ$_{2}$ர்த்தி: ।***
***த$_{3}$ாரித த$_{3}$சமுக$_{2}$ கீர்த்தி$_{4}$:***
***புரதோ மம ப$_{4}$ாது ஹநுமதோ மூர்தி: ॥ (4)***

*ஸீதாதேவியின் துயர்கள் அனைத்தையும் துடைத்தவர். தனி ஒருவனாக லங்கையின் வீதிகளில் - ''எடுத்த காரியங்களில் ஒன்றில் கூட தோல்வியடையாத ஸ்ரீராமனின் அடிமை நான்'' - என்று பெருமையோடு ராமனுடைய புகழைப் பரப்பியவர். ராவணனுடைய புகழைப் பொய்யாக்கினவர். அந்த ஹநுமானுடைய திருவுருவம் என் முன்னே விளங்கட்டும்.*

***வானரநிகராத்$_{4}$யக்ஷம்***
***த$_{3}$ானவகுல குமுத$_{3}$ரவிகர ஸத்$_{3}$ருக்ஷம் ।***
***தீ$_{3}$ன ஜநா வனதீ$_{3}$க்ஷம்***
***பவன தப: பாக புஞ்ஜமத்$_{3}$ராக்ஷம் ॥ (5)***

*கிஷ்கிந்தை வாநர ராஜதானி. அங்கே வாலி வாநர அரசன். பிறகு ஸுக்ரீவன்அரசன். பூமியின் அந்தப் பகுதியில் இருந்த*

வாநரங்கள் அவர்களுடைய ப்ரஜைகள். அஞ்ஜனை வயிற்றில் பிறந்த குழந்தைக்குப் பசித்தது.அம்மாவைக் காணோம். ஆனால் அது அழவில்லை- கண்ணை விரித்துப் பார்த்தது . ஆகாயத்தில் பளபளவென்று தகதகவென்று பழுத்த பழம் குழந்தையின் கண்களை கவர்ந்தது- அது ஒரே தாவாக ஆகாசத்தில் தாவியது. உலகில் எங்கேயோ மூலை முடுக்குகளில் காடுகளில் மலைகளில் இருந்த குரங்குகள் எல்லாம் ஆச்சரியமாகப் பார்த்தன.

''அடே! அதோ பாருடா? நம்மடவன் நம்ம குரங்கு ஜாதிப்பயல் சூரியனை விழுங்குகிறானடா! வேறு யாராலே முடியும் -? நம்மடவன் அவன். நமக்லொம் இனி அவன் தான் தலைவன். நாமெல்லாரும் அனுமான் ஜாதியடா! என்று கொம்மாளம் போட்டனர். நம்ம தலைவன்- ஹனுமானுக்கு ஜே-என்று கோஷம் போட்டனராம். இதைக் குறிப்பிடுகிறார்கள் சங்கர பகவத் பாதாசாரியார்கள். 'வாநர நிகராத்யக்ஷம்' அதனால் அனுமானின் அரசன் கூப்பிடுகிறான் என்று உலகில் உள்ள எல்லா வாநரங்களும் -ஸீதாவைத் தேடும் பணிக்காக கிஷ்கிந்தா நகரம் வந்து கூடின. சூரியன் உதித்தால் - இரவு முழுவதும் மலர்ந்திருந்த ஆம்பல் மலர்களும் கூம்பி சாய்ந்து விடுமாம்.அதுபோல ஹனுமானைக் கண்டதும் ராவணனின்அரக்கர் படைகள் எல்லாம் வணங்கி ஒளிந்து கொண்டன. ஏழ்மையினால் செய்வதறியாமல் செயலற்று வாடி வதங்கி கிடக்கின்றவர்களெல்லோரையும் ராம நாம கர்ஜனை செய்து ''இதோ ராமதாஸன் நான் இருக்கிறேன். உங்களை கை தூக்கி விடுவேன் சொல்லுங்கள்'' ராம ராம''- என்று ஏழைகளைக் காப்பாற்ற கங்கணம் கட்டிக் கொண்டிருக்கின்ற - ஹனுமானை -வாயு பகவானின்- உயிர்கள்தோறும் அலைவது -என்ற பெரும் தவத்தை ஓயாமல் ஆற்றிவருகின்றதவத்தின் உயர்ந்த பயனான -ஹனுமானைக் கண்டு கொண்டேன்.

பகவத் பாதாசார்யர்கள், உள்ளத்தில் பாவிக்கின்றேன்- கொண்டாடுகிறேன். அவன் திருவடிகளைப் பிடித்துக் கொள்கிறேன். அவன் திருமேனி என் கண் முன்னே காட்சி

அளிக்கிறது. நான் கண்டு கொண்டேன்-என்ற வரிசையை ராஜ மார்க்கமாக -பக்தர்களுக்கு எடுத்துக் காட்டுகிறார்கள்.

**ஏதத் பவனஸுதஸ்ய**

**ஸ்தோத்ரம்-ய: பட2தி பஞ்சரத்னாக்2யம் ।**

**சிரமிஹ நிகி2லாந் போ4க3ாந்**

**பு4க்த்வா ஸ்ரீராமப4க்தி ப4ாக்3 ப4வதி ॥ (6)**

ஹனுமத் பஞ்சரத்னம்- என்ற இந்த ஸ்தோத்திரத்தை படிக்கிறவர்களுக்கு - ஆயுள் வளமுண்டு. வாழ்க்கை பூராவும் கஷ்டமே தொடர்ந்து வந்தால் ஆயுள் எதற்கு? ஹனுமானை நினைத்து ராமநாமம் சொன்னால் கஷ்டமே வராது. விரும்பிய சுகங்கள் எல்லாம் கிடைக்கும். பிறகு இத்தனை சுகங்களைக் கொடுத்த ராமனின் நாமத்தையே ஜபிப்போமே! அவனுடைய சரித்திரத்தையே படிப்போமே! அவனுடைய சரணங்களில் நறுமலர்களால் அர்ச்சிப்போமே! நமக்கு கிடைத்த நல்ல பொருள்களை எல்லாம் அவருக்கே சமர்ப்பணம் பண்ணுவோமே! நாமே அவனுடையவர்கள் என்று ஆவோமே! என்று ஆசை வளரும். இது தான் ராம பக்தி.

**பக்ஷீசோ அம்பு3தி4 லங்க4நே**
**ஜநகஜாவிச்+வாஸநே வாநர:**
**ரக்ஷ: ஸம்ஹரணே ந்ருஸிம்ஹ:**
**உபதே3ஷ்டா ஹ்யஸௌ ரக்ஷஸ: ।**
**ச+ த்ரு க்ஷேத்ர விதா3ரணே கிடிரபூ4த்**
**ய: பஞ்ச தை3வாநந:**
**மந்த்ரேசே+ா லஸதாத்**
**ஸதா3 -ஸ-ஹ்ருதி3மே**
**ஸ்ரீராம ப4க்திப் ரத3: ॥**

ஐந்து முக ஹநுமான் - என்று ஹநுமானுக்கு ஒரு புகழ். அப்படி ஒரு சரித்திரம் இல்லை. யாரோ ஒரு மகரிஷி இவ்விதம் ஹநுமானைப்பற்றி த்யானம் பண்ணினார்.

*கடலைத் தாண்டும் போது கருடன் ஆனார். ஸீதா தேவிக்கு ஆறுதல் கூறி தைரியமூட்டின போது வாநரனாகவே இருந்தார். அசோக வனத்தில் அரக்கர்களை அழித்த போது நரசிம்ம ஸ்வாமியாகவே ஆனார். ராவணனுக்கு உபதேசம் செய்த போது குதிரை முகத்துடன் ஹயக்ரீவராகவே ஆனார். சத்ருவின் நகரத்தை அழித்த போது வராஹ ஸ்வாமியாக ஆனார் என்று அந்த மகரிஷி த்யானம் செய்தார்.*

*அந்த ஐந்து முக ஹநுமானுக்கு ஒரு மந்த்ரமும் அவர் உள்ளத்திலேயே உதித்தது. அந்த மந்தர மூர்த்தியான ஹநுமான் நமது உள்ளத்திலே ஸ்ரீராம சரணங்களில் பக்தியை வளர்க்கட்டும்.*

**கவிச்சக்ரவர்த்தி கம்பனின் பாடல்**

***அஞ்சிலே1 ஒன்று பெற்றான்***
***அஞ்சிலே2 ஒன்றைத்தாவி***
***அஞ்சிலே3 ஒன்று ஆறாக ஆரியர்க்காக வேகி***
***அஞ்சிலே4 யொன்று பெற்ற வணங்கு கண்டயலாரூரில்***
***அஞ்சிலே5 யொன்றை வைத்தான் அவனம்மையளித்துக் காப்பான்***

*1. வாயு குமாரன் 2. ஆகாயம் வழியாக 3. நீர்க்கடலைத் தாண்டி 4.பூமியின் புதல்வியான ஸீதையை தரிசித்து 5.லங்கையில் அக்னியை வைத்த ஹநுமான் நம்மை கருணை புரிந்து காப்பான்.*

## மாருதியின் மஹத்துவம்

*(அனந்த ஸ்ரீ விபூஷித ஜகத்குரு சங்கராசார்ய ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி வரிஷ்ட ஸ்வாமி ஸ்ரீசந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீஜீ மஹாராஜ் கா ப்ரஸாதம்)*

*ஸ்ரீமத் ராமாயணம் மிகவும் மஹிமை பொருந்திய ஒரு கிரந்தம். நடந்த விருந்தாந்தத்தை நடந்தபடியே எடுத்துச் சொல்லுகின்றது. இதிஹாஸம் என்றால் "இப்படித்தான் நடந்தது" என்று அர்த்தம்.*

*அது மநுஷ்ய ஜந்மா எடுத்தவன் செய்ய வேண்டிய கடமைகளை தர்மங்களை - தர்ம சாஸ்திரம் போல - நடைமுறையில் எடுத்துக்காட்டுகின்ற உயர்ந்த க்ரந்தம். அதில் வருகின்ற கதா பாத்திரங்கள் - லட்சுமணன் பரதன் சத்ருக்நன் விச்வாமித்ரர் -ஸுக்ரீவன் - எல்லாருமே அவரவர் கடமைகளை - சரிவர அனுஷ்டித்து -ஆதர்ச புருஷர்கள் ஆனார்கள்.*

*ஆனாலும் ஸ்ரீராமன், ஸீதாதேவி இவர்களைப் போல ஹனுமானும் ராமாயணத்தில் பிரதானமான கதா பாத்திரமாகப் பளிச்சென்று தெரிகிறார். அஞ்ஜநா தேவியின் குமாரன் ஆஞ்ஜநேயன். மருத் என்றால் வாயு பகவான். அவருடைய குமாரன் மாருதி.*

*ஹனுமானுக்கு சரீரபலம் மாத்திரம் அல்ல - புத்தியும் கூர்மையானது - நேர்மையானது. பெரிய பயில்வான்களைப் போல -உடம்பு மட்டும் திடமாக - வீரியத்தோடு வளர்ந்திருந்தால் யுத்தங்களில் பராக்ரமத்தைக் காட்டி ஜெயித்திருக்க முடியும். ஆனால் உலகத்திலே நடக்கின்ற மற்ற எல்லாக் காரியங்களிலும் ராமாஜ்ஞையாலே ஏற்பட்ட கார்யங்களிலும் - ஹனுமான் புத்தி சாதுர்யத்தோடு புகுந்து ஸமயோசிதமாக பேசி நடந்து கொண்டு எல்லாவற்றையும்*

---

*(கோரக்பூர் கீதா பிரஸ் என்ற தர்ம ஸ்தாபனம் பல்லாண்டுகளாக நடத்தி வருகின்ற "கல்யாண" என்ற மாதாந்திர ஆஸ்திகப் பத்திரிகையின் நிறுவனர்கள் ஆண்டுதோறும் பல நூறு பக்கங்கள் கொண்ட ஒரு மலரையும் வெளியிடுகின்றனர். அதன் **1975**ஆண்டு மலராக வெளியிடப்பட்ட "ஹனுமான் அங்க்" பதிப்பிற்கு ஸ்ரீ காஞ்சீ மஹாஸ்வாமிகள் —"ஸ்ரீ மாருதியின் மஹத்துவம்" என்ற தலைப்பில் —ஒரு வியாசம் அருளியிருக்கிறார்கள். ஹிந்தியில்அமைந்த அதனுடைய தமிழ் வடிவம் )*

நல்ல படியாக சாதித்திருக்கிறார். தனியாக கொடுங்கோல் ராவண ராஜ்யத்தில் புகுந்தார். ஸீதைக்கு நம்பிக்கையூட்டி தைரியத்தையளித்தார். ராவணனுக்கு '"ஸீதா மாதாவை என் பிரபுவிடம் ஸமர்ப்பித்து விட்டு பிழைத்துப்போ" என்று பவ்வியமாகவும் திடமாகவும் எடுத்துக்கூறினார். எத்தனைக்கெத்தனை வீரதீரனாக ராம கார்யங்களை சாதித்தாலும் - பெரிய பர்வதங்களையே புரட்டி எடுத்து கொண்டு வரக்கூடிய தோள் வலிமை இருந்ததோ அத்தனைக்கத்தனை பிரபுவின் ஸந்நிதியில் பய பக்தியோடு கைகட்டி வாய் புதைத்து ரொம்ப விநயத்தோடு ஸேவை செய்வதைத்தான் படங்களில் நாம் கண்ணார ஸேவிக்கிறோம். ஹநுமான் இப்படி சரீரத்தினாலும் மனஸ்ஸினாலும் கபடமில்லாமல் ஸேவையே லட்சியமாக - கைங்கர்யத்தில் ஈடுபட்டார்.அப்பேற்பட்ட கொஞ்சம் கூட சுயநலமில்லாத - ஹனுமானின் ஸேவைக்கு ஈடாக ஸந்மானம் செய்ய முடியாமல் ராமன் ஏழையாகி விட்டார்.

பரதனுக்கு தனக்கே சொந்தமான அயோத்யா ராஜ்யம் -சுக்ரீவனுக்கு வானர ராஜ்யம்-விபீஷணனுக்கு லங்கா ராஜ்ய மெல்லாம் வாரி வழங்கின பிரபுவுக்கு ஹநுமானின் ஸேவைக்கு ஈடான ஸன்மானம் உலகத்திலே ஒன்றுமே கிடையாது என்று தோன்றியது. தன்னையே ஹநுமானுககு அர்ப்பணம் செய்து அவரை மார்போடு அணைத்து ஆலிங்கனம் செய்து கொண்டார்.

இதிலேயிருந்து என்ன தெரிகிறதென்றால் எவன் ஒருவன் கொஞ்சம் கூட- தனக்கு இந்த காரியத்தினால் என்ன கிடைக்கும்? - என்பதை நினைக்காமல் - ''தேவைப்பட்டவருக்கு சகாயம் செய்கின்ற ஸந்தர்ப்பம் கிடைக்கின்றதே, அதுவே பாக்கியம்'' என்று நினைக்கிறானோ அவனுக்கு - பரமாத்மா தன்னையே கொடுத்துவிடுகிறார். பரமாத்மா தன்னையே கொடுத்து விடுகிறார் என்றால் என்ன அர்த்தம்? அந்த ஜீவனுக்கு உபநிஷத்தில் சொல்லப்படுகின்ற ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிடுகிறது. அதனால் தான் ஹநுமான் அதற்குப் பிறகு எப்பொழுது பார்த்தாலும் ராமபாத

*சேவை செய்து கொண்டு ராம நாமத்தில் ஆனந்தமாக சிரஞ்ஜீவியாக இன்றைக்கு கூட ப்ரத்யக்ஷமாக இருக்கிறார். தன்னை அண்டியவர்களுக்கு வேண்டுதல்களை நிறைவேற்றுகிறார்.*

*ஸாரமென்ன? என்றால் ராம நாம ஜபத்தினுடைய பலம் கொண்டு - ஸீதா தேவியின் துக்கத்தைத் தீர்த்தார். ராமனுடைய பெருமையை உலகெல்லாம் கொண்டாடச் செய்தார். ராம நாம பலம் கொண்டு கடலைத் தாண்டினார். வானரக் கூட்டத்திற்கு ராம நாம உபதேசம் செய்து - பர்வதங்களைப் புரட்டிக் கொண்டு வருகின்ற பலத்தை வ்ருத்தி பண்ணினார்.*

*இதைத்தான் சங்கர பகவத் பாதாச்சார்யாள் ஹநுமத் பஞ்சரத்னம் என்ற ஸ்தோத்திரத்தில் குறிப்பாக எடுத்துக்காட்டுகிறார். ஸீதைக்கு ராம கதை சொல்லி அவளுடைய மனஸ்ஸில் இருந்த தாபத்தையெல்லாம் தீர்த்தார். தன்னுடைய ஸேவையினால் ராமனுடைய பெருமையை லோகம் பூராவும் தெரியப்பண்ணினார். கொடுங்கோல் ராவணனுடைய யசஸ்ஸெல்லாம் இருந்த இடம் தெரியாமல் அழித்தார். அந்த ஹநுமானின் மங்கள ஸ்வரூபம் எனக்கு தர்சனம் தரட்டும் என்று வேண்டுகிறார்.*

***தூ$_3$ரீகருத ஸீதார்த்தி:***
***ப்ரகடீக்ருத ராம வைப$_4$வஸ்பூ$_2$ர்த்தி :*** ।
***தாரித த$_3$சமுக$_2$ கீர்த்தி :***
***புரதோ மம ப$_4$ாது ஹநுமதோ மூர்த்தி :*** ॥

*இந்த மஹத்தான ஸம்பவங்களை நினைத்துப் பார்த்தால் ராம நாம கீர்த்தனத்தினுடைய பெருமை ஸ்பஷ்டமாகத் தெரியும்.*

*ஸாதாரணமாக எல்லாருமே எந்த தெய்வத்தை உபாஸிக்கிறார்களோ - அந்த தெய்வத்தின் நாமத்தைத்தான் ஜபித்துக் கொண்டே இருப்பார்கள். பூஜையெல்லாம் அந்த தெய்வத்திற்குத்தான் செய்வார்கள். அந்த தெய்வத்தின் அனுக்கிரஹத்தை வேண்டுவார்கள்.*

ஆனால் ஹநுமானுடைய வழி வேறு. ஹனுமானுக்கு ஸ்ரீராம நாமஜபத்தையோ கீர்த்தனையையோ தவிர வேறென்றும் பிடிக்காது. அவருக்கு எல்லாமே ராமன் தான். லங்கையில் ராம நாம கோஷம் செய்தே ராவணனுடைய பெரிய புகழை மறக்கச் செய்துவிட்டார்.

மஹாத்மாவான ஹநுமான் எப்போதும் நமக்கும் பிரஸந்நமாக இருக்கட்டும் என்று தான் கோரிக்கை. நமக்கும் அது போல நல்லோர்கள் எல்லாருமே ராம நாம ஜபம் செய்து - ஹனுமானுடைய க்ருபைக்குப் பாத்திரமாகட்டுமே. அவர்களுடைய ஜீவிதத்திலே நல்ல படியாக வாழட்டுமே என்று தான் கோரிக்கை.

லோகத்திலே -பணம் வேண்டுமானால் லட்சுமியை ஆராதிப்பார்கள். எடுத்த காரியம் நிறைவேற வேண்டுமானால் ஏழுமலையானை பிராத்திப்பார்கள் - எடுத்த காரியம் தடை படாமலே இருக்க கணபதியை பிராத்தனை செய்வார்கள்.

ஆனால் - நாம எடுத்த காரியம் சரிவர நிறைவேற வேண்டுமானால் - நமக்கு அதற்குத்தகுந்த அறிவு இருக்க வேண்டும். உடம்பிலே பலம் இருக்க வேண்டும். ''இவன் இந்த காரியத்தை சரியாகச் செய்வான்'' - என்று தெரிந்தால் தான் நமக்கு நல்ல வேலை கிடைக்கும். அப்படிப்பட்ட யசஸ் இருக்க வேண்டும். செய்கிற காரியத்தில் தடை ஏற்பட்டால் அதற்காகச் சுணங்காமல் மறுபடியும் முயற்சி செய்ய மனோ தைரியம் இருக்க வேண்டும். கோழையாக இருக்கக் கூடாது. நல்ல ஆரோக்கியம் வேண்டும். ஸமயோசிதமாகப் பேசத் தெரிய வேண்டும். இத்தனையும் ராம நாம சொன்னால் ஹநுமானை நினைத்தால் - கை கூடும். அப்புறம் காரியஸித்தி கை மேலே. எல்லா தெய்வங்களும் கூட இருந்து சாதித்துக் கொடுக்குமே! வேறென்ன வேண்டும்?

***புத்திர் பலம் யசே₊ா தை₊ர்யம் நிர்பயத்வம் அரோகதா |***
***அஜாட்யம் வாக்படுத்வம் ச ஹநுமத் ஸ்மரணாத் பவேத் || (8)***

*(ஆனந்த ராமாயாணம் மனோஹர காண்டம் 13 வது ஸர்கம் 13 வது ச்லோகம்)*

# தோற்றுவாய்

சற்றேறக்குறைய இன்றைக்கு (2008) முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீகாஞ்சீ மஹாஸ்வாமிகள் காஞ்சீபுரத்தில் வ்யாஸ=சாந்தேச்வரர் கோயிலில் சில தொண்டர்களுடன் முகாம் இருந்தார்கள். அந்த இடம் நகரத்திற்கு சற்று ஒதுக்குப்புறமானது. அதிகமான போக்கு வரத்து இல்லாதது. கோயிலின் விசாலமான தெற்கு பிராகாரத்தில் அவர்களுக்கு என அமைக்கப்பட்ட கீற்றுக் கொட்டகை.

பிற்பகல் மூன்று மணி இருக்கும். ஒருக்களித்துச் சாத்தப்பட்டிருந்த கோயிலின் வாசற்புறக் கதவைத் திறந்து கொண்டு ஒரு பக்தர் தரிசனத்திற்கு வந்தார். அவர் பெயர் டன்லப் கிருஷ்ணன்; கேரளாக்காரரர். கம்பெனியின் விஷயமாக அடிக்கடி வெளிநாடுகளுக்கு செல்பவர். இந்தியா திரும்பும் போதெல்லாம் பெரியவர்களுக்கென ஏதாவது அதிசயமான - அபூர்வமான வஸ்துவை வாங்கிக் கொண்டு வருவார். அன்று ஸ்பெயின் நாட்டிலிருந்து வாங்கி வந்த - உயர்ந்த குங்குமப்பூ - 10 கிராம் எவர் ஸில்வர் டப்பாவில் - ஸீல் வைக்கப்பட்டது. அதைக் காணிக்கையாக வைத்து வந்தனம் செய்தார்.

பெரியவர்கள் கையமர்த்தி அவரை அமரச் சொன்னார்கள்.

''எங்கெல்லாம் போயிருந்தே?'' என்று கேட்டார்கள்.

''ஸ்பெயின், இடாலி எல்லாம் போய்விட்டு கடைசியாக ஜெர்மனிக்குப் போயிருந்தேன். அங்கே ஒரு ஜெர்மனிக்காரரர் ஸம்ஸ்க்ருத புரபஸரை சந்தித்தேன். அவர் ஒரு அபூர்வ விஷயம் சொன்னார். ஆச்சரியமா இருந்தது. உடனே குறிப்பெடுத்துக் கொண்டேன் ....'' என்று நிறுத்தினார் கிருஷ்ணன்.

பெரியவர்கள் கையை நீட்டி ''மேலே சொல்லு'' என்று சைகை செய்தார்கள்.

கிருஷ்ணன் ஆரம்பித்தார் ''அவர் விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரத்தை ஆராய்ச்சி செய்து - ஒரு விஷயம் கண்டு பிடித்தாராம். அது பூராவும் ஹநுமானுக்கே பொருந்தும் என்று தெரிந்ததாம். ஆயிரம் நாமங்களில் கிட்டதட்ட எழுநூறு நாமங்கள் ஹநுமான் ஸம்பந்தப்பட்டது என்று உரை எழுதி இருக்கிறாராம்.

அதிலே **வாயு வாஹந :** என்று இரண்டு இடத்திலே வருகிறதாம். இரண்டுக்கும் வெவ்வேறு அர்த்தமாம். **வாயு: வாஹநம் - யஸ்ய** (அவர் சொன்னதை அப்படியே குறிப்பெடுத்திருக்கிறேன்.) என்று பிரித்து அர்த்தம் சொல்லணுமாம். ஹநுமான் லங்கையைத் தாண்டும் போது வாயு பகவானை வாகனமாக கொண்டு அதில் ஏறிச் சவாரி செய்தார் - என்று ஒரு அர்த்தமாம்.

**"வாயுநா வாஹ்யதே"** இது ஒரு அர்த்தமாம். இங்கே வாயு என்றால் முக்ய ப்ராணன் என்று அர்த்தம்.அந்த முக்கிய பிராணன் தான் வாயு பகவானையே வீசும் படியாக செய்கிறாராம். **விஜிதாத்மா** என்றால் புலன்கள் புத்தி, சரீரம், மனஸ் இதுக்கெல்லாம். கட்டுப்பட்ட ஜீவனை அவற்றின் பிடியிலிருந்து ஆத்மாவை மீட்டவர் என்று பொருளாம். **விதேயாத்மா** என்றால் ராமனுக்கு அடிமையாகி விட்ட ஆத்மா என்று பொருளாம். இன்னொன்று சொன்னார். **விஷ்ணு** என்றாலே ஹநுமான்தான். லோகம் பூராவும் வியாபித்திருக்கிறார். என்று அர்த்தமாம்.

**ஸர்வப்ரஹரணாயுத:** கையில் அகப்பட்டதையெல்லாம் ஆயுதமாகக் கொண்டு போர் புரிபவர் என்று அர்த்தம். இப்படி **''விச்வம் விஷ்ணு:"** என்று ஆரம்பித்து **ஸர்வப்ரஹரணாயுத:** - என்று முடியும் வரை எல்லா நாமங்களும் ஹநுமானுக்கே பொருந்தும்'' இன்னும் நிறையச் சொன்னார்.இவ்வளவு தான் குறிப்பெடுக்க முடிந்தது - என்று முடித்தார்.

பெரியவர் உன்னிப்பாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு மௌனமாகி விட்டார்கள். சற்று நேரம்

*கழித்து - மணி என்ன? என்று கேட்டார்கள். மணி ஐந்து என்றார் ஒரு தொண்டர். ''விஷ்ணுஸஹஸ்ர நாமம் சொல்லலாமே - என்று கை அசைத்தார்கள்.*

*ஆஸ்தான வித்வான் ராமகிருஷ்ண சாஸ்திரிகள் பாணாம்பட்டு கண்ணன் ஏகாம்பரம் - ராயபுரம் பாலு - வேதபுரி இவன் எல்லோரும் சொன்னார்கள் (இவன் இதை எழுதியவன்) பெரியவர்கள் கண்மூடி கேட்டு கொண்டிருந்தார்கள்.*

*அது முடிந்தது .மறுபடியும் சொல்லுங்கள் என்று சொல்லி விட்டு ராம கிருஷ்ண சாஸ்திரிகளையும் இவனையும் குறிப்பிட்டு ''அதிலே ஹநுமானையே நினைவு மூட்டறாப் போல் - எந்தெந்த நாமாங்கள் வரதுன்னு கவனித்து - கடைசியிலே சொல்லுங்கோ'' என்றார்கள்.*

*இவன் பேப்பரையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு கவனமாக அவர்களுடன் சொல்லிக் கொண்டு வந்தான்.*

*1. வ்ருஷாகபி ரமேயாத்மா*

*2. வரதோ வாயு வாஹந:*

*3. கபீந்த்ரோ பூரிதக்ஷிண:*

*4. காலநேமிநிஹா வீர:*

*5. ஸுபர்ணோ வாயுவாஹந:*

*6. கபி ரவ்யய:*

*என்ற நாமாக்களை இவன் குறித்து வைத்துக் கொண்டான். பல சுருதியோடு விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் முடிந்தது.*

*பெரியவாள் - சாஸ்திரிகளைத் திரும்பிப் பார்த்தார்கள். - சாஸ்திரிகள் வ்ருஷாகபி - என்ற நாமாவைத் தவிர மற்ற ஐந்து நாமக்களையும் சொன்னார்கள்.*

*இவனைத் திரும்பிப்பார்த்தார்கள். வ்ருஷாகபி என்ற நாமாவையும் சேர்த்து அதே நாமாக்களைச் சொன்னான்.*

பெரியவாள் - சாஸ்திரிகளை திரும்பிப் பார்த்தார்கள்.

அவர் சொன்னார் ''வ்ருஷாகபி என்ற பெயர் ஸூர்யன், அக்நி, இந்த்ரன், விஷ்ணு, சிவன் என்று ஐந்து அர்த்தங்களை குறிப்பிட்டு ஒரு நிகண்டு ச்லோகத்திலே வரது. . ஹநுமானையும் குறிப்பிடுவதா இருந்தால் நிகண்டுவிலே சொல்லியிருக்குமே. ஹநுமானைக் குறிப்பிடுவதாக இருந்தால் கபிவ்ருஷப: - என்று சொல்லியிருக்குமே என்று நினைத்தேன்''

பெரியவாள் கேட்டார்கள் கபி: என்று தானே வந்திருக்கிறது. அது பொதுவாக குரங்குகளாகத்தானே சொல்லும்? ஹநுமான் - என்று சொல்லமுடியுமா?

சாஸ்திரிகளும் இவனும் விழித்தார்கள். சற்று யோசித்து விட்டு அவ்யய: என்பது தனி நாமாத்தான். அப்படித்தான் அர்ச்சனையிலே வரது . மஹரிஷி : கபிலாசார்ய: - என்கிற இடத்திலே அர்ச்சனையிலே இரண்டையும் சேர்த்து- ஒரு நாமாவாக மஹர்ஷயே கபிலாசார்யாய நம: என்று அர்ச்சனை பண்ணுகிறோம். இங்கே அவ்யய: என்றாலே தேய்ந்து அழியாதவன் என்ற அர்த்தம். இதையும் சேர்க்காவிட்டாலும் அடுத்த நாமாவை அநுஸரித்து அழிவில்லாத வாநரன் சிரஞ்சீவி. ''கபி என்பது ஹநுமானைக் குறிக்கலாம்.''

ஸந்த்யாகாலம் முடிந்து இருட்டுப் பரவ ஆரம்பித்தது. சற்று தூரத்தில் ஒரு தாத்காலிக கம்பத்தில் ஒரு அறுபது வாட்ஸ் பல்பு - இருட்டை விரட்ட முடியாமல் தொங்கியது,

அந்த சமயம் - பத்து பன்னிரெண்டு பக்தர்கள் பழங்கள் துளசி மாலைகளுடன் வந்தார்கள். நெருங்கியதும் தெரிந்தது. தஞ்சாவூரிலிருந்து ஆனந்தா லாட்ஜ் கோபாலசாமி அய்யர் பழக்கடை பிரமுகர் நாராயணசாமி பிள்ளை மற்றும் பூக்கடை பிரமுகர் கோவிந்தசாமி முதலியவர்கள் வந்து வணங்கினார்கள்.

மஹா ஸ்வாமிகளின் முன்னர் சற்று அப்பால் ஒரு குத்துவிளக்கு ஒரே திரியுடன் எரிந்து கொண்டிருந்தது. கோபாலசாமி அய்யர் சற்று முன்னே வந்து ''தஞ்சாவூரிலேருந்து பக்தர்களெல்லாம் தரிசனம் பண்ண வந்திருக்கிறார்கள்'' என்று பிரமுகர்களின் பெயரைச் சொல்லி அறிமுகம் செய்து வைத்தார்.

"எல்லாரும் ரயிலடிப் பக்கத்து வியாபாரிகளா?

''ஆமாம், அந்த ரோட்டிலேயே ஒரு ஹநுமார் கோயிலை கட்டணும்னு பெரியவாள் கிட்ட அநுக்ரஹம் வாங்கிக்கணும் -னு வந்திருக்கா.....''

''ஹநுமார் கோவிலா? என்று கேட்டார்கள் ஸ்வாமிகள். அணுக்கத் தொண்டர் ராயபுரம் பாலு சொன்னார்.

''பெரியவா இப்போ ஹநுமானைப் பற்றிதான் சொல்லிக் கொண்டிருந்தார்? நீங்களும் வந்துவிட்டீர்கள்.''

ஸ்வாமிகள் ''அதிருக்கட்டும் திடீரென்று ஹநுமார் கோயில் கட்டணும்னு கிளம்பினேளே! என்ன விசேஷம்?

பழக்கடை நாராயணசாமி பிள்ளை விஸ்தாரமாக பின்வரும் சேதியைச் சொன்னார்.

இரண்டு மூன்று வருஷமாக ஒரு குரங்குக்குட்டி ரயிலடி பஜாரிலே சுற்றிக்கொண்டிருந்தது. அது மட்டும் தனியாகவே இங்கும் அங்கும் ஓடும். நம்ம கடையிலே ஒரு வாழைப்பழம் கொடுப்போம். வாங்கித்தின்னும். ஐயா லாட்ஜிலே வடை போண்டா ஏதாவது கொடுப்பாங்க. உட்கார்ந்து தின்று விட்டு -ஒரு குட்டிக்கரணம் போட்டுவிட்டு ஓடி விடும். யாரையும் தொந்தரவு பண்ணாது. எல்லாக் கடைக்காரர்களுமே அதனிடம் பரிவு காட்டினார்கள்.

அது ஒரு நாள் எதிர்த்த கடையியிலிருந்து பாய்ந்து வந்தது. அங்கு ஒரு எலக்ட்ரிக் கம்பத்திலிருந்து அறுந்த கிடந்த கம்பியை மிதித்து விட்டது. கடைக்காரப் பையன் பார்த்து

விட்டான் ''ஆஹா''ன்னு கூச்சலிட்டான். மறுகணம் குரங்கு சுருண்டு விழுந்து விட்டது.

கூட்டம் கூடி விட்டது. மின்சாரக்கம்பி அகற்றப்பட்டது. கிட்டப்பா ஐயரு ஓடி வந்தாரு .அடடா! நம்ம ஹநுமான் குரங்குடா!''

அந்த கூட்டத்தில் அதன் மரணத்திற்காக பரிதாபப்படாதவர்களே கிடையாது. அந்த உடலை எடுத்துப் போய் ஆனந்தா லாட்ஜ்க்கு வடக்கே சாலை ஓரமாக ஒரு குழி வெட்டி அந்த உடல் அடக்கம் பண்ணப்பட்டது. ஐந்தாறு நாட்களாக அந்த குரங்கு குட்டியைப்பற்றியே பேச்சாக இருந்தது. அது அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் ஒரு ஹநுமார் கோயில் கட்டிவிட வேண்டியது தான் என்று தீர்மானம் உருவாயிற்று அது. முனிசிபாலிடி இடம். முன்ஸிபல் கவுன்சில் மெம்பர்கள் எல்லாரும் ஒரு மனதாக ஏற்றுக்கொண்டு அநுமதி தீர்மானம் போட்டார்கள். அது தான் இங்கே வந்து ஸந்நிதானத்தினுடைய ஆசீர்வாதம் பெற வேண்டுமென்று வந்தோம்.

பெரியவர்கள் வெகு நேரம் மௌனமாக இருந்தார்கள். தஞ்சாவூர் பக்தர்கள் - ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து கொண்டு கைகளை பிசைந்தார்கள்.

கோபாலசுவாமி அய்யர் மெதுவாக வாயைப் பொத்திக்கொண்டு பேசினார்.

''பெரியவர்களுக்கு நாங்க போடற திட்டம் சரியில்லேன்னு தோணித்துனா - நாங்க அதைக் கைவிட்டுறோம்".

ஸ்வாமிகள் அவரைத் திரும்பிப்பார்த்து கையமர்த்தினார்கள். சில நிமிஷங்கள் ஆயின.

''கோபாலசாமிக்கு ரொம்ப நாள் பழக்கம். நான் பேசாமலே இருந்தா எனக்குப் பிடிக்காத விஷயத்தை பேசி விட்டோமே ...ன்னு தோணும். இப்போ அப்படியெல்லாம்

ஒண்ணுமில்லை.நீங்க திட்டம் போட்டது ரொம்ப நல்ல காரியம் தான்.

இரண்டு மூணு நாளாக ஹநுமான் மனஸிலே வந்து கொண்டே இருக்கிறார். என்னவெல்லாமோ ஆராய்ச்சிகள்? நடுவிலே இதெல்லாம் பற்றி எதற்காக சிந்திக்கணும்னு தோன்றது. ஆனால் மறுபடியும் அந்த ஆராய்ச்சி தலை தூக்கிண்டே இருக்கு,

நீங்க வந்து உங்க யோஜனையைச் சொன்னேளா? அது வந்து அந்த ஆராய்ச்சிக்கு முடிவு கட்டினாப் போல இருக்கு. என்ன - ன்னு சொல்லிடறேனே.

நம்முடைய பாரத புண்ய பூமியிலே வடக்கே கைலாஸம் ஆரம்பித்து தெற்கே கன்யாகுமாரி வரை மேற்கே ஸோமநாத் ஆரம்பித்து கிழக்கே காமாக்யா (அஸ்ஸாம்) வரையில் நதிக்கரைகளிலும் பர்வதங்களிலும் குகைகளிலும் எத்தனையோ சிவாலயங்கள் பெருமாள் கோயில்கள் தேவீ முருகன் - பிள்ளையார் -ஹநுமார் கோயில்கள் எழும்பியிருக்கின்றன. புராணங்களைப் படித்தால் - ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கும் ஸ்தல புராணங்கள்.

''அந்த ரிஷி பிரதிஷ்டை செய்தார். அந்த மஹாராஜா கோவில் கட்டினான். அந்த ஏழை பக்தர் பட்டினி கிடந்து அலைந்து திரிந்து யாசகம் பண்ணி கோயிலை கட்டினார்'' - என்றெல்லாம் வரலாறு கிடைக்கிறது.

இத்தனை தெய்வங்களிலே எந்த தெய்வத்திற்கு அதிகப் படியாக கோயில்கள் உண்டாகி இருக்குன்னு ஒரு கேள்வி என் மனஸுக்குள்ளே கிளம்பித்து. நினைத்து நினைத்து - எண்ணிப் பார்த்தேன் - எல்லா தெய்வங்களையும் விட விநாயகருக்குத்தான் அதிகக் கோயில்கள். குளக்கரையிலும் அரசமரத்தடியிலும் தெருமுனையிலும் திரும்பி பார்த்தா நிறையப் பிள்ளையார் கோயில்கள் என்று தோணித்து. இப்படி நினைத்த போது- ஹநுமான் மனதில் தோன்றினார். ''எனக்குத் தான் நிறையக் கோயில்கள்'' இப்படி ஒரு சவால் விட்ட மாதிரி இருந்தது.'' யோசித்துப் பார்த்தேன்.

வடநாட்டிலே நான் அதிகமாக யாத்திரை பண்ணிணதிலே- காசி வரை போய்ட்டுத் திரும்பிட்டேன். புது பெரியவா தான் இப்போ நிறைய வட நாட்டிலே யாத்திரை பண்ணிக் கொண்டிருக்கார். அவர் சொல்வதைப் பார்த்தால் வட நாட்டு கிராமங்கள் - என்று எண்ணி பார்த்தால் தெருவுக்குக் தெருவு வஜ்ராங்க பலி கோயில்தான்.

பத்ரி கேதார்நாத் என்று எடுத்துக் கொண்டால் - நடைபாதையிலேயே உயர்ந்த மலைகளிலே சின்ன -பிறை மாதிரி மலையைக் குடைந்து - அங்கு ஒரு ஹநுமார் . வழவழவென்று ஒரு பாறை தென்பட்டால் - அதிலுள்ள மேடு பள்ளங்களை வைத்து ஒரு ஸஞ்ஜீவி ஹநுமானுடைய பிம்பம். - கிழக்கே பீஹார் வங்காளம் அஸ்ஸாம் எங்கும் சின்னச்சின்ன சேரிகளில் கூட ஹநுமார் கோவில். ஹநுமார் கோயில் இல்லாத கிராமமே கிடையாது. ஒவ்வொரு கிராமத்திலும் தெருவுக்குத் தெரு ஹநுமான் கோயில்கள் என்று புது பெரியவர் சொன்னார்.

மேற்கே மஹாராஷ்ட்ரத்தில் தான் விநாயகர் ஹநுமானோடு போட்டி போட்டு கொண்டு கோயில்களில் நிறைந்திருக்கிறார். அது மட்டுமல்ல. மிக பிரஸித்தமான தேவி கோயில்கள் சிவ ஸ்தலங்களில் கூட எழுப்பியிருக்கிற - பெரிய கோயில்களில் சுவற்றிலும் கருங்கல் தூண்களிலும் ஹநுமார் பிம்பங்கள். அங்குத் தனிப்பட்ட பூஜை - தீபாராதனை ஜனங்களே செய்கிறார்கள்.

மஹாராஷ்டிராவில் ஸமர்த்த ராமதாஸர் முஸ்லிம் ஆக்ரமிப்புக்குப் பெரிய தடை போடுகிற மாதிரி ஜனங்களுக்கு ஹநுமத் பக்தியை வளர்த்து ஆயிரக்கணக்கான கோவில்களை எழுப்பினார். கன்னட தேசத்திலும் ஹநுமான் வழிபாடு மிக அதிகம். அவனுக்கு பெரிய கோயில் கட்டி அதற்குள்ளே சின்னதாக ராமர் கோயிலும் கட்டியிருக்கிறார்கள். மற்ற பிரதேசங்களோடு ஒத்துப்பார்க்கும் போது ஹநுமான் கோவில்கள் தமிழ்நாட்டில் அதிகமில்லை. தமிழ் நாட்டை பிள்ளையார் ஜெயித்து விட்டார் என்று கூடச் சொல்லலாம்.

ஆனால் தற்காலத்தில் திடீர் திடீர் என்று தமிழ் நாட்டிலே ஹநுமார் கோயில்கள் எழும்புகின்றன. 30 அடி உயரம் 40 அடி உயரமென்றல்லாம் சொல்லுகிறார்கள்.

எனக்கு என்ன ஆச்சர்யம் என்றால் இப்படி கோயில் கட்டுபவர்களுடைய இவ்வளவு ச்ரத்தைக்கு என்ன காரணம்? என்று விசாரித்தால்-யாரோ ஒருவர் ஹநுமானை வேண்டிக்கொண்டார். அவர் எதிர்பார்த்தற்கு மேலே அவர் எடுத்துக்கொண்ட காரியம் பல மடங்கு சிறப்பாக வெற்றியடைந்தது. அவர் மிகவும் ஊக்கத்தோடு பாடுபட்டு இந்த ஹநுமார் கோயில் கட்டினார். அவருக்கு கிடைத்த லாபத்தைப் போல தமக்கும் கிடைக்கும் - என்று நம்பி ஜனங்கள் பெருவாரியாக அந்த கோயிலுக்குப் போய் தர்சனம் செய்கிறார்கள். இப்படித்தான் சேதி காதில் விழுகிறது. இரண்டு மூன்று நாட்களாக இந்த ஆச்சர்யத்தையே நினைத்துக் கொண்டிருந்தேன்.

நீங்க வந்தீர்கள். குரங்குக்குட்டி கதையைச் சொல்லிக் கொண்டு வந்ததைக் கேட்டேன். இதையும் சேர்த்து வைத்து கொண்டு சித்த நாழி மௌனமாக யோசித்துக் கொண்டிருந்தேன். அதுதான் கோபாலசாமிக்கும் மனஸிலே கலக்கம் வந்திடுத்து. ஆனால் எனக்கு மனஸு தெளிந்து போயிடுத்து. ஆச்சரியமோ கலக்கமோ இல்லாமல் - உள்ளங்கை நெல்லிக்கனி - என்று சொல்வார்களே அந்த மாதிரி விஷயம் புரிந்துவிட்டது.

நம்ம பீடத்திலேயே இதற்கு முன்னாடி முன்னூறு வருஷங்களுக்கு முன்னாலே பகவந்நாமபோதேந்திர ஸ்வாமிகள்னு ஒரு மஹாபெரியவாள் இருந்தா- கலியிலே தர்மானுஷ்டானங்களெல்லாம் குறைந்து போய்விட்டது. அதற்கு காரணம் நம்பிக்கைக் குறைவோ ச்ரத்தைக் குறைவோ இல்லை. எல்லாருக்கும் சாப்பாடே பெரும்பாடாகிவிட்டது. குடும்பத்தைக் காப்பாற்ற ராவும் பகலும் உழைத்து சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. இந்த நிலைமையில் தர்மானுஷ்டானம் பண்ணுவதற்கு நேரமில்லை. இப்படி ஆயுளெல்லாம்

வீணாகிப் போகிறதே - என்று கவலைப்பட்ட நேரத்திலே அந்த குருநாதர் ஒரு நல்ல வழி காட்டினார்கள். ''பயப்படாதே -கவலைப்படாதே. ஆரஆமர அமர்ந்து தர்மானுஷ்டானம் பண்ண முடியலயே என்று வருத்தப்படாதே. வேலை பார்க்கிற இடம் ஒன்று - வசிக்கிற இடம் வெகு தூரத்தில். அங்கு தான் குறைந்த வாடகைக்கு வீடு கிடைக்கிறது. தினமும் இப்படி வீட்டுக்கும் வேலைக்குமே அலைகிறாயே. அந்த அலைகிற நேரம் வீணாகத்தானே போகிறது. அப்போது ராம ராம - ன்னு சொல்லு. எந்த நேரமானாலும் சொல்லலாம். ஸ்னானம் மடி -என்றெல்லாம் நினைக்காதே. இப்படி ராம ராம சொல்லிக்கொண்டே வந்தால் உனக்கு தானாகவே ஒரு புத்திவரும். மற்ற காரியங்களை கொஞ்சம் குறைத்துக் கொண்டு தர்மானுஷ்டானம் முடிந்த வரை பண்ணுவோமே! இப்படித் தோன்றும். இது வரை உல்லா ஸத்திற்காக அவசியமில்லாத வீணான பல விஷயங்களில் நேரத்தை செலவழித்தோமே- அந்த நேரத்தில் தர்மானுஷடானம் பண்ணுவோமே என்று தோன்றி விடும். தர்மானுஷ்டானமும் நடக்கும். ராம ராம ஜபமும் நடக்கும். இப்படியெல்லாம் இந்த குருநாதர் உபதேசம் பண்ணினார்கள்.

இதைப்போலவே ஆங்காங்கே மஹான்கள் தோன்றினார்கள். மனதை உருக்குகிறாப் போல பாடல்களைப் பாடினார்கள். அதனாலே வெளியிலே பகட்டாக இல்லாமல் ராம நாம ஜபம் - நிறையப் பரவிக் கொண்டே இருக்கிறது. வெளியே தெரியாமல் - ஸாதாரண - ஏழை ஜனங்கள் கோயில்களிலும் பஜனை மடங்களிலும் பஜனை கதாகாலக்ஷேபங்கள் கேட்டு - ராம நாம மஹிமையை பாகவதர்கள் பாடும்போது ராமாயண பாகவத கதைகளைக் கேட்கும்போது இனிமையான ராம நாம ஜபத்தை நம்பிக்கையோடு சொல்வதை பல இடங்களில் பார்க்கிறோம். ராம நாமம் சொல்லி நிம்மதியோடு பாட்டிமார்களும் கிழவர்களும் ராம நாம மாலை உருட்டுவதைப் பார்த்திருக்கிறோம். அத்தனையும் வீண் போகவில்லை. அவர்களுக்குக்கே தெரியாமல் அவர்கள் -

ஆடம்பரமில்லாமல் - சத்தம் போடாமல்- சொல்கின்ற ராம நாமங்கள் பாரத புண்ய பூமி முழுவதும் ஆகாசத்தில் பரவிக்கொண்டிருக்கிறது. ராம நாம கீர்த்தனம் எங்கெல்லாம் நடக்கிறதோ - அங்கெல்லாம் ஹநுமார் ப்ரஸன்னமாக இருக்கிறார் என்று ஒரு ச்லோகம் உண்டு. அது பொய் இல்லையே. அதனால் ஹநுமானும் அந்த ஆகாயத்தில் பரவி நிற்கிறார்.

குளக்கரை மடங்கள் விளக்குத்தூண் பிறைகள் - கோவில் தூண்கள், தேர்முட்டி மண்டபங்களிலெல்லாம் செதுக்கப்பட்ட ஹநுமார் பிம்பத்தைக் கண்டவுடன் அதன் பாதங்களில் கை வைத்துக் கண்ணில் ஒத்திக் கொள்கிறார்கள். இப்படி ஒரு ஆகர்ஷண சக்தி. - நமது கிராமங்களிலும் கூட கண்ணுக்குத் தெரியாமலே - ஹநுமானுடைய சக்தி பரவியிருக்கிறது. கோயில் தூணில் உள்ள ஹநுமானைக் கும்பிட்டு ஏக்கத்தோடு தமது கஷ்டங்களைச் சொல்லி வேண்டிச் கொள்கிறவர்களுக்கெல்லாம் காரியம் நிறைவேறுகிறது. அவர்கள் நன்றி விசுவாதத்தோடு அந்த தூணை பிரதட்சணம் செய்கிறார்கள். அவரைப் பார்த்து மற்றவர்களும் சுற்றுகிறார்கள். இதுவெல்லாம் இப்போது எனக்கு நினைவுக்கு வந்தது.

அப்போ நம்ம தேசத்தையே ஆகாசத்திலிருந்து ஆக்ரமித்து கொண்டிருக்கிறார் ஹநுமான் - என்று லேசாகத் தோன்றினது ஒரு எண்ணம். நீங்கள் வந்து ஹநுமான் கோயில் என்று பிரஸ்தாபித்தவுடன் அது ஸத்யம் தான் -என்று மனசிலே ஒரு வெளிச்சம் ஏற்பட்டது. இந்த தேசமே ஹநுமானுடைய தேசம். புருஷோத்தமனான ராமனுடைய நாமம் பரவியிருக்கிற தேசம்.

இந்த தேசத்தில் உள்ள எல்லாரும் ஒருபுறம் தான் தோன்றித்தனமாக ஒரு தர்மத்திற்கும் நியாயத்திற்கும் கட்டுப்படாமல் - மானம் வெட்கம் எல்லாம் கெட்டுப்போய் அக்கிரமங்கள் செய்கிறார்கள். துளிக்கூட பயமில்லாமல் கொலை கொள்ளையில் ஈடுபடுகிறார்கள். அதை சமாளிக்க முடியாமல் அரசாங்கம் திக்குமுக்காடுகிறது.

மறுபுறம் ஸாது ஜனங்கள் இவற்றையெல்லாம் பற்றிக் கவலைப்படாமல் - கோவில்களுக்கும் போய்க் கொண்டு தம் காரியம் உண்டு வீடு உண்டு என்று நிம்மதியாக வாழ்கிறார்கள். இந்தப்பாமரர்கள் ஓய்ந்தபொழுதெல்லாம் - ராம நாமம் சொல்கிறார்கள். இந்த ராம நாமங்களையெல்லாம் கேட்டுக்கொண்டு - அவர்களுக்கு வரம் அளிப்பதற்காகவே ஹநுமான் தேசம் பூராவும் வியாபித்து இருக்கிறார். இப்படி ஒரு எண்ணம் கொஞ்சம் கொஞ்சமாக இரண்டு மூன்று நாளாக என் மனஸ்ஸிலே திருப்பித் திருப்பி வந்து கொண்டே இருக்கிறது. அது சரிதானா? என்று நானும் ஆராய்ந்து கொண்டே இருக்கிறேன். அதற்கேற்றாற் போல் இந்த கிருஷ்ணன் - சற்று நேரம் முன்னாடி ஜெர்மனி புரொபஸர் ஆராய்ச்சியைப் பற்றி சொன்னதும் என் எண்ணத்திற்கு அநுகூலமாகவே இருந்தது. அடுத்தாற் போல நீங்க வந்து ஹநுமானுக்கு கோவில் எடுக்கிறோம் என்று சொன்னீர்கள்.. அது இருக்கட்டும்,

''இந்த யோஜனை உங்களுக்குள்ளே யாருக்கு முதல்லே வந்தது?'' என்று கேட்டார்கள்.

நாராயணசாமி பிள்ளை பதில் சொன்னார் "எங்க கடையிலே ஒரு மராட்டியப் பையன் வேலைக்கு இருக்கிறான். அவனுக்கு ஒண்ணும் தெரியாது! கண்ணைத்திற என்றால் வாயைத் திறப்பான். அவனுடைய தாத்தா என் கடையில் வேலை பார்த்தார். அவர் முடியாமல் வர இயலாத போது இவனைக் கொண்டுவிட்டார். அதற்காக சம்பளம் கொடுத்து கொண்டிருக்கிறேன். அவனுக்கு வடக்கு வீதியில் வீடு. அவன்தான் குரங்கு குட்டி எலக்ட்ரிக் கம்பியிலே மாட்டிக்கிட்ட போது - ஆஹா என்று கூச்சல் போட்டான். ராத்திரி பூரா தூங்காம - காலையலே கடைக்கு வந்து - ''முதலாளி! அந்த குரங்கு குட்டிக்கு ஒரு கோயில் கட்டிப்புடனும்ங்க'' என்றான்.

நான் பேசாமல் இருந்து விட்டேன். சித்த நேரத்திற்கெல்லாம் அடுத்த கடைப் பையன்களையெல்லாம்

சேர்த்துக் கொண்டு -கடை கடையாகப் போய் ஹநுமாருக்கு கோயில் கட்டணுமுங்க என்று முதலாளிகளிடம் சொல்லிப்புட்டான். அவர்களுக்கும் அது சரிதான் -னு தோன்றியது. ஆனந்தா லாட்ஜ் ஐயாவும் ''பேஷாச் செய்ய வேண்டியது தான்'' என்றாருங்க அதனால் தான் ஸந்நிதானத்துக்கு வந்தோம்.

சுவற்றில் சாய்ந்து கொண்டிருந்த பெரியவர்கள் தண்டத்தை கையில் எடுத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்.

சிரித்துக் கொண்டே பேசினார்கள் - ''ஒண்ணும் தெரியாத அப்பாவிப் பையனுக்கு ஹநுமார் கோயில் கட்டணும்னு தோணியிருக்கு இல்லையா? அப்போ என் மனஸிலே தோன்றியிருக்கிற எண்ணம் சரி தான். எனக்கே ஒரு பிரகாசம் கிடைச்சுடுத்து. ஹநுமான் நம்ம தேசத்தையே ஆட்கொண்டு விட்டார். ஸந்தேகமே இல்லை.''

கோபாலசாமி ஐயருக்கு பரமஸந்தோஷம் ''மஹா பாக்கியம் பாக்கியம் .நாங்கள் - எங்கள் குடும்பத்துப் பெரியவா எல்லாருமே - நிறையப் புண்ணியம் பண்ணி இருக்கா. இல்லாவிட்டால் - பெரிய மஹான்களுக்குச் சொல்லி உணர வேண்டிய விஷயத்தை இவ்வளவு விவரமா எங்களுக்கு புரிகிறாப்புல சொல்லி அநுக்ரஹம் பெரியவா பண்ணியிருப்பார்களா? தன மனஸிலே இருந்ததெல்லாம் ஒப்புச்சுப்பிட்டாளே.''

அவருக்கு நாக்கு தழுதழுத்தது பெரியவர்கள் மறுபடியும் மௌனத்தில் ஆழ்ந்தார்கள். சற்று நேரம் கழித்து பேசினார்கள்.

'கோபாலசாமி சொன்னாப் போல மனதிலே தோணினதெல்லாம் சொல்லிட்டேன். ஏன்னா? என்னுடைய ஆராய்ச்சி முடிந்து போச்சு. ஹநுமான் தான் இப்போ நம்ம தேசத்திற்கு வேண்டிய தெய்வம். அவர் தானாகவே பிரகாசிக்கிறார். காரணம் என்னஎன்றால் ஜனங்கள் எல்லாம் ராம நாம சொல்றாள்'.

*ஹநுமானுக்குச் சின்னதா ஒரு கோயில் கட்டுங்கள். அந்த இடத்தில் ரயிலுக்கு, போகிறவாளும் ரயிலிலேருந்து இறங்கி விட்டுப் போறவாளும், ஒரு நிமிடம் திரும்பி தர்சனம் பண்ணணும். அதற்கு அநுகூலமாக இருக்கும். - என்று கூறி அனைவருக்கும் பிரஸாதம் அளித்தார்கள்.*

*இரவு மணி பத்து. தஞ்சை நண்பர்கள் பிரியா விடை பெற்றார்கள்.*

*தற்போது மூன்று மாதங்களுக்கு முன்னால்* **பங்களூர்** *மஹா பெரியவாள் ட்ரஸ்ட் நிர்வாகிகள் - ஹநுமானைப்பற்றி ஒரு விஸ்தாரமான நூல் எழுதிக் கொடுக்க வேண்டுமென விருப்பத்தை இவனிடம் தெரிவித்தார்கள்.*

*அதற்கு முன்னால் - அவர்கள் விருப்பப்படியே - ஸமர்த்த ராம தாஸரின் சரித்திரத்தை - எழுத ஒப்புக்கொண்டு அதில் இவன் மும்முரமாக ஈடுபட்டிருந்தான். ''அதை முடித்த பிறகு ஹநுமானைப் பற்றி சிந்திக்கிறேன்'' - என்று சொன்னான்.*

*ஸமர்த்த சரிதம் ஒருவாறு எழுதிப் பதிப்பாளருக்கு அனுப்பிய உடனேயே அவர்கள் - ஹநுமானை நினைவு மூட்டினார்கள்.*

*ஹநுமானை நினைத்த உடனேயே மலைப்பாக இருந்தது. பதிப்பாளர்கள் ஹநுமான் கோயில்கள் உள்ள க்ஷேத்திரங்களைப் பற்றியெல்லாம் எழுத வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். எப்படி ஆரம்பிப்பது - எங்கே விஷயங்கள் தேடுவது என நினைத்த போது இதற்கு முன்னால் - ஹநுமானைப்பற்றி எழுதியிருப்பதை ஒரு முறை படித்துக் கொள்ளலாம் என நினைத்துப் பார்த்தான். ஸமர்த்தர் சரிதத்தின் பிரதி வைத்திருந்த பையை இவன் துழாவினான். அதைத்தவிர அந்தப் பையில் மற்ற பல காகிதங்களின் இடையே ஒரு பெரிய காகித உறை தட்டுப்பட்டது. அதை எடுத்துப் பிரித்தான்.*

திருச்சியில் திருலோக ஸீதாராம் என்ற பேராசிரியர் சிவாஜி -என்ற பத்திரிக்கை நடத்தி வந்தார். அவர் இவனிடம் வந்து ''இந்த வருஷம் ஆண்டு மலருக்கு நீங்கள் ஒரு கட்டுரை எழுத வேண்டும்'' என்று கேட்டார்.

அன்று தான் காஞ்சியிலே இருந்து திரும்பி வந்த - இவன் -வ்யாஸ சாந்தேச்வரர் கோவிலில் மஹாஸ்வாமிகளை தர்சித்த விபரத்தைச் சொன்னான். அதைக்கேட்டு மிகவும் ஆச்சரியப்பட்டு - ''இதையே ஒரு கட்டுரையாக எழுதிக் கொடுங்கள். ஹநுமானைப்பற்றி பெரியவாள் ஒரு மஹத்தான உண்மையை வெளியிட்டிருக்கிறார்கள். இதைப் பதிப்பிக்கிற பாக்கியம் சிவாஜிக்கு கிடைக்கட்டும்'' என்றார். அதன்படி எழுதப்பட்ட கட்டுரை அது. அதைப்பிரித்துப் பார்த்தான். இவனுக்கு முற்றிலும் மறந்து போய்விட்ட அந்த அற்புத சம்பவம். அது படிக்கப் படிக்க இவன்தான் எழுதினானா? என்று இவனுக்கே சந்தேகம் வரும்படியாக நாற்பது பக்கங்கள் விஸ்தாரமாக வந்த கட்டுரை - பேப்பர் மடங்கின இடங்களிலெல்லாம் கிழிந்து தொடர்பு அறுந்து அவலமாக இவன் மடியில் கிடந்தது.

ஒருவாறு வியாஸ சாந்தேஸ்வரர் கோயிலும் கீற்றுக் கொட்டகையும் நினைவுக்கு வந்தன. மறுபடியும் படிக்கும் போது தெளிவான மனக்காட்சி கிடைத்தது. அதன் சுருக்கமே இங்கே ஆரம்பத்தில் வந்து நிற்கிறது. கூடிய வரை பழைய கட்டுரையின் சொற்களே மஹாஸ்வாமிகளின் சொற்களே இங்கு வழங்கப்பட்டிருக்கின்றன.

சாதாரணமாக இத்தனை ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்ச்சி - நினைவுக்கு வந்தாலும் - இத்தனை விபரங்களையும் நினைவுக்கு கொண்டு வர முடியுமா? மேலேழுந்தவாரியாக - வியாஸ சாந்தேஸ்வரர் கோயிலுக்குப் போய் பெரியவாளை தர்சனம் செய்து- ஹநுமார் கோயில் கட்ட ஆசிபெற்று வந்தோம் - என்று எழுதினால் என்ன பயன்?

இங்கு தான் ஹநுமானின் ஆவேசம் உதவி செய்கிறது. ஸமர்த்த சரிதத்தின் பழைய குறிப்புகளைத் தேட ஆரம்பித்தவனுடைய கையில் அந்த ஹநுமான் தான் அந்தக் கட்டுரையை எடுத்துக் கொடுத்தான் என்று இவன் நம்புகிறான். வாசகர் எப்படி நினைத்தாலும் சரி.

ஸமர்த்த ராமதாஸ சரிதத்தை ஒருவாறு எழுதியபிறகு மறுபடியும் மஹாபெரியவாள் டிரஸ்டிலிருந்து நிர்வாகிகள் ஹநுமானை நினைவு மூட்டினார்கள். ஆனால் இவனுடைய உடல் நிலை திடீரென சீர் குலைந்து அறுபது நாட்கள் படுத்த படுக்கை. ஆனால் இந்த ''ஹநுமானின் ஆவேசம்'' என்ற கட்டுரையை திருப்பிப் திருப்பிப் படித்தே உடல் வேதனையை மறந்திருந்தான்.

நாம் எழுதினோம் - என்ற நினைவே இல்லையே - பெரியவாள் மீது ஹநுமான் ஆவேசித்துச் சிந்திக்க வைத்து - அந்தத் தவத்தின் பயனாக அவர்கள் கண்டு பிடித்த ஸித்தாந்தம் எவ்வளவு உண்மையானது. முப்பத்தைந்து ஆண்டுகளுக்குள்ளே நாட்டில் எத்தனை ஹநுமான் கோவில்கள் எழுந்து விட்டன? அவர்களுடைய ஆராய்ச்சியில் மலர்ந்தது போல இத்தனை ஆலயங்களுக்கும் உந்துதலாக இருந்தது - கட்டியவர்களின் பக்தி பரவசமல்ல .அவர்களுடைய லேசான ஆசையை காரியமாக்கியது ஹநுமானுடைய ஆவேசம் தான் - என்பது கண் கூடாகத் தெரிகிறதே. அதுபோல அந்தக்கட்டுரை கையில் கிடைத்தது. ஹநுமானின் வரப்பிரசாதம் - என்ற உணர்வுடன் இவனை மெய் சிலிர்க்க வைத்தது.

விஷயங்கள் சேகரிக்க ஆரம்பித்தான். இவன் ரா.கணபதி அவர்கள் எழுதிய தெய்வத்தின் குரல் ஏழு தொகுதிகளிலும் ஹநுமானைப் பற்றிய பல விஷயங்களை பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அத்தனையும் தொகுப்பது -என்று ஆரம்பித்தால் - முதலில் இவனுடைய அசட்டுத்தனம் வெளியாகும். அழகான சித்திரத்தின் மீது குழந்தை தாறுமாறாக கோடு போட்டால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கும் - என்று பயமாக இருந்தது.

ஹநுமானைப் பற்றியே ரா.கணபதி அவர்கள் ஜய ஹநுமான் என்ற ஒரு நூல் எழுதியிருக்கிறார்கள். அதில் பல ஸம்பவங்களைக் குறிப்பிடுகிறார் ஹநுமானைப்பற்றி.

மராட்டி மொழியில் ஹநுமத் ராமாயணம் என்ற லட்சம் க்ரந்தம் கொண்ட ஒரு நூலைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறான் இவன். அதில் ஹநுமானைப் பற்றியும் ராமனைப் பற்றியும் பல அற்புதமான கதைகள் உள்ளன. கருட கர்வ பங்கம், ராம ஆஞ்ஜநேய யுத்தம், அஹிமஹி ராவண ஸம்ஹாரம் - முதலிய சரிதங்கள் அதில் உள்ளன. ஹரிகதை சொல்பவர்கள் மிகவும் ரஸமாகவும் ஹாஸ்யமாகவும் சொல்வார்கள். அந்தக் கதைகளில் ஹநுமானுடைய அதிசயமான ஸத்குணங்கள் வெளிப்படும்.

கோரக்பூர் கீதா பிரஸ் - என்ற தர்ம ஸ்தாபனம் - விளம்பரம் ஒன்றுகூட போடாத கல்யாண் - என்ற ஹிந்தி மாதப் பத்திரிக்கையை ஸத்விஷயங்கள் மட்டுமே நிறைந்ததாக வெளியிடுகிறார்கள். அத்துடன் ஒவ்வொரு ஆண்டின் முடிவில் ஒரு விஷேச மலர் - ஐந்நூறு ஆயிரம் பக்கங்களுடன் வெளியிடுகிறார்கள். அதன் 1975 வருஷ மலராக ஹநுமான் அங்க் - என்ற பதிப்பை வெளியிட்டார்கள். ஐநூறு பக்கங்கள். ஹநுமானைப் பற்றிப் பல பெரியோர்கள் எழுதியிருக்கிறார்கள். மஹாஸ்வாமிகள் கூட ஒரு அருமையான வியாஸம் எழுதி இருக்கிறார்கள். அதையே தமிழில் - முதல் விஷயமாக கொண்டு ஹநுமானைப்பற்றிய இந்த நூல் உருவாகிறது.

காஞ்சீ மஹாஸ்வாமிகள் குறிப்பிட்டது போல பாரததேசம் முழுவதும் ஹநுமான் வியாபித்து நிற்கிறான் என்ற செய்தியை நிரூபிக்கிற மாதிரி ஹநுமானைப் பற்றி எழுத வேண்டுமென ஸங்கல்பத்தை அந்த ஹநுமான் தான் விதித்திருக்கிறார். அவனருளாலே அவன்தாள் வணங்கி ஆரம்பிக்கப்படுகிறது.

ஹநுமானைப்பற்றி -ஆநந்த ராமாயாணம், ஹநுமந் நாடகம், மாருதி விஜயம் முதலியவை ஸம்ஸ்க்ருதத்தில் உள்ளன. கோஸ்வாமி துளஸீதாசர் பிரத்யட்சமாக ஹநுமத் தர்சனம் பெற்று அவர் துணை கொண்டு ராம தர்சனம் பெற்று - ஹநுமான் சாலீஸா, ஸங்கடமோசந ஹநுமத் ஸ்தோத்திரம் முதலியவை எழுதியிருக்கிறார். இன்னும் பல விஷயங்கள் - தேடத்தேட கிடைத்துக்கொண்டே இருக்கின்றன. இவற்றையெல்லாம் இவன் எப்படி எழுதப்போகிறானோ? எல்லாம் ஹநுமான் செயல்.



## 2.வேதங்களில் ஹநுமான்

ஹநுமானுடைய அவதாரம் த்ரேதாயுகத்தில் ஸ்ரீராமாவதாரத்திற்குச் சற்று முன்னால் நடந்தது. வேதங்களோ அநாதியானவை. ராமாயணம் முதலிய நூல்கள் எழுதப்படுவதற்கு முன்னால் வேதங்கள் தோன்றின. அவற்றின் சில மந்திரங்களில் ஹநுமானுடைய சரிதக் குறிப்பு கிடைக்கின்றது. வெகு காலம் கழித்து வரப்போகின்ற ஹநுமானுடைய அவதாரம். ஸூசனையாகத் தெரிவிக்கப்படுகிறது.

கி.பி. பதினைந்தாவது நூற்றாண்டில் பிறந்த ஒரு மஹான் வேதங்களைக் கசடறக் கற்றுப் பொருள் உணர்ந்தவர். அவர் ருக் வேதத்தை அடிக்கடி பாராயணம் பண்ணுபவர். **நீலகண்ட ஸூரி** என்று பெயர். அவர் பாராயணம் செய்து வரும் போதே சில மந்திரங்களில் ராம சரித ரசனைகளைக் கண்டு பிடித்தார்- தொடர்ந்து கவனித்து பல மந்த்ரங்களைத் தொகுத்து ராமசரிதத்தை ஆதியோடு அந்தமாக கூறுகின்றவற்றைத் தொகுத்து **மந்த்ர ராமாயணம்** என்ற நூலை தொகுத்தார். அதற்கு பாஷ்யமும் எழுதினார்.

மந்திரங்கள் வேத மூலத்தில் பல மண்டலங்களில் - பல ஸூக்தங்களில் இடையே - அந்த ஸூக்தங்களின் முன் பின் மந்த்ரங்ளுக்கு அனுஸரணையாக ராமாயணத்திற்கு ஸம்பந்தப்படாத விஷயங்களைத்தான் கூறுகின்றன.

ஆனால் நீலகண்ட சூரி மந்த்ர ராமாயணத் தொகுப்பில் ராம சரித நிகழ்ச்சிகளிடையே பிற்காலத்தில் நடக்கப் போகின்றவைகளையே ஸூசனை செய்கின்றன - என்ற கருத்தை எடுத்துக்காட்டுகிறார்.

**தே$_3$வாஸ ஆயந் பர சூ$_+$ர பி$_3$ப்$_4$ரந்**
**வநா வ்ருக்ஷந்தோ அபி$_4$விட்$_3$பி$_4$ராயந்**
**நி ஸுத்ருவம் த$_3$த$_4$தோ லக்ஷணாஸு**
**யத்ரா க்ருபீட மநு த$_3$த்த$_3$ஹந்தி**

*ஸீதையைத் தேடிச் சென்ற ஹநுமான் லங்கையிலே அசோக வனத்திலே ஸீதையைக் கண்டு பிடித்த ஆனந்தத்தில் பல பெரிய மரங்கள் அடர்ந்த அசோக மரங்களை அழித்து விடுகிறார். இதைக்கண்ட அரக்கர்கள் எட்டத்தில் இருந்தபடியே வனம் நாசமாவதைக்கண்டு - ராவணனிடம் போய் முறையிடுகிறார்கள்*

*தேவர்கள் கோடாலிகளை தூக்கி வந்தார்கள். அங்கே காவல் காக்கின்ற எங்களையும் சேர்த்து காட்டை அழித்துக் கொண்டே வந்தார்கள்.*

*வெகு வேகமாகப் பரவுகின்ற காட்டுத் தீ போல கட்டிடங்களுக்கு தீ வைத்துக் கொண்டு - பின்னால் உள்ள மர அடுக்குகளையும் எரித்து தொடர்ந்து மற்ற மரங்களையும் கொளுத்துகிறார்கள்.*

*ஹநுமான் ஒருவன் செய்த காரியத்தை பல தேவர்கள் கூடிச் செய்ததாக புகார் செய்கிறார்கள்.*

***ச$_{+}$ச$_{+}$: க்ஷுரம் ப்ரத்யஞ்ச$_{1}$ம் ஜக$_{3}$ரா$_{3}$த்ரிம்***
***லோகே$_{3}$ந வ்ய பே$_{4}$த$_{3}$ மாராத் |***
***ப்ருஹந்தம் சி$_{1}$ தூ$_{3}$ஹதே ரந்$_{4}$தயாநி***
***வயத் வத்ஸோ வ்ருஷப$_{4}$ம் ஞூ$_{4}$சு$_{+}$வாந: ||***

*ராவணன் அலட்சியமாகச் சிரிக்கிறான். கூறுகிறான்.*

*குட்டி முயல் பட்டாக் சக்தியை விழுங்கிவிடுமோ? தூரத்திலிருந்த மணல் முட்டைக் கலைத்துவிட்டதனால் பர்வதத்தையே உடைத்ததாகி விடுமோ?*

*இப்போது தான் பிறந்த காளைக் கன்று வளர்ந்து காளை ஆகி பெரிய காளையைச் சீண்ட முடியுமா? ஆனாலும் நான் பரமாத்மாவை சிற்றின்ப வேட்கையினால் துன்புறுத்தி பெரிய பாவத்தைக் கட்டிக் கொள்கிறேன். ராவணன் தன் தவற்றை உணருகிறான் என்று பொருள்.*

***ஸுபர்ண இத்$_2$தா நக$_2$மா ஸிஷாயாவருத்த$_4$:***
***பரிப$_3$தம் – ந ஸிம்ஹ:*** ।
***நிருத்தச்$_+$ சிந்மஹிஷஸ்தர்ஷ்யாவாந்***
***கோ$_3$தா$_4$ தஸ்மா அயத$_2$ம் கர்ஷதே$_3$தத்***

*பட்சி போல ஆகாசத்திலே ஸஞ்சரிக்கின்ற ராவணன் எவ்வளவு அடிபட்டும் கூட அயராதவன். கம என்றால் வேதனை, துக்கம் என்று பொருள். “நகம்” என்றால் துயரப்படாதவன் ஹநுமான். அந்த ஹநுமானை பிரம்மாஸ்திரத்தினால் கட்டிப் போடச் செய்தான். ஹநுமான் சிங்கம் போலே அங்கும் இங்கும் தாவிக் குதித்தான் “ந”- என்றால் வேதத்தில் சில இடங்களில் ‘‘போலே’’ என்று பொருள். அவனை அடக்கிப் போட முடியவில்லை. - தண்ணீர் வேட்கை கொண்ட எருமை தண்ணீரை நோக்கித் தாறுமாறாக ஓடுமே அது போல தரி கெட்டு ஓடுகின்ற ஹநுமானை அரக்கர்கள் கயிற்றினால் கட்டி இழுத்துச் சென்றார்கள்.*

*பிரஹ்மாஸ்த்ர பாசத்தினால் கட்டி இழுத்துச் சென்ற போது - ஹநுமானை தேவகணங்கள் பிராத்தனை புரிந்தனர்.*

***அக்ஷா நஹோ நஹ்யதநோத ஸோம்யா***
***இஷ்க்ருணு$_4$த்வம் ரசநா ஓத பிம்சத***
***அஷ்டாப$_3$ந்து$_4$ரம் வஹதா பி$_4$தோ ர$_2$தம்***
***யேந தே$_3$வாஸோ அநயந்நபி$_4$ ப்ரியம்*** ॥

*ராம பக்தரான ஹனுமான் அவர்களே! (இங்கு ஹனுமானை அழைக்கின்ற தேவர்கள் அவரைப் பன்மையில் அழைக்கிறார்கள்.*

***(ஏகத்துவம் ந ச தா$_3$த்வ்யம் கு$_3$ராவாத்மநி சேச்$_+$வரே)***

*குருவையும் தன்னையும் ஈச்வரனையும் பற்றிக் கூறும் போது - ஏகவசனத்தில் ஒருமையில் பேசக்கூடாது என்று ஒரு சாஸ்திரம் கூறுகிறது. அது போல அரக்கர் கூட்டம் ஹநுமானைச் சுற்றி வளைத்தாலும் கூட்டம் கூடி அடக்க*

*முடியவில்லை. அநுமானைப் பாசத்தினால் கட்டி இழுத்தனர்.*

*அப்படி கட்டுப்பட்ட ஹநுமானை தேவர்கள் ப்ரார்த்தனை செய்து உசுப்பி விட்டனர்.*

***அக்ஷா நஹோ நஹ்யத நோத ஸோம்யா***
***இஷ்க்ருணுத்$_4$வம் எச$_+$நா ஞத பிம்சத***
***அஷ்டா பந்து$_4$ரம் வஹதா பி$_4$தோ ரத$_2$ம்***
***யேந தே$_3$வாஸோ அநயடந்நபி$_4$ ப்ரியம்***

*ம.10 ஸூ53 ம.7*

*ராமாயணத்தில் இந்திரஜித்து தான் ஹநுமானை ப்ரஹ்மாஸ்திரத்தினால் கட்டி வீதி வழியே ஊர்வலமாக இழுத்துப் போனான் - என்று வருகிறது. இங்கு ராவணனுடைய இளைய குமாரன் அக்ஷன் இ ழு த் து ப் போவதாக ஸூசனை உங்களைக் கட்டி இழுக்கின்ற அக்ஷன். போன்ற அரக்கன் (ராமாயணத்தில் வரும் இந்திரஜித் பெயர்) தன்னையே ம்ருத்யு பாசத்தினால் கட்டிக் கொண்டு விட்டான். - தற்போது தயவு செய்து இந்த ப்ரஹம்ம பாசத்திற்கு மதிப்பு கொடுங்கள் - (ராவணன் முன் சென்றவுடன்) விரும்பினால் ப்ரஹ்ம பாசத்தைத் துண்டு துண்டாக அறுத்தெறியுங்கள். இரண்டுகைகள். இரண்டு கால்கள். இரண்டு முஷ்டிகள். இரண்டு முழங்கால் இவ்விதம் எட்டு இடங்களில் கட்டப்பட்டிருக்கின்றன. தேர் போன்ற உங்கள் திருமேனியே லங்கையில் ஊர்வலமாக வரட்டும். அதனால் தேவதைகள் தமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வார்கள்.*

*ராவணன் அநுமானின் வாலில் தீ வைத்து ஊர் முழுவதும் இழுத்துப் போகிறான் - என்று கேள்விப்பட்ட ஸீதாதேவி அக்நி தேவனை வேண்டுகிறாள்.*

***ரக்ஷோஹணம் வாஜிநமா ஜிக$_4$ர்மி***
***மித்ர ப்ரதிஷ்ட$_2$ உபயாமி ச$_+$ர்ம ।***
***சி$_+$சா$_+$னோ அக்$_3$னி: க்ரதுபி:***
***ஸ நோ தி$_3$வா ஸ ரிஷ: பாது நக்தம் ॥***

அரக்கர்களை வதைக்கின்ற வேகமுடைய ஸ்ரீராம தூதனை இந்த நிலையில் கண்டு - துயரத்தினால் கண்ணீர் வடிக்கின்றேன். - வாயு தேவனின் பரம மித்ரன் அக்நி தேவன். அவரிடம் ஹநுமானுக்கு க்ஷேமத்தை பிராத்திக்கிறேன்.

என்கணவரால் பல யாகங்கள் செய்யப்பெற்று நன்கு வளர்க்கப்பட்டிருக்கிறார். -அந்த அக்னி நமக்கு நம் ஹனுமானை இரவு பகலாகக் கொடுமை செய்கின்ற அரக்கர்களிடமிருந்து காப்பாற்றட்டும்.

**அயோ த$_3$ம்ஷ்ட்ரோ அர்சிஷா யாதுதா$_4$ நான் உப**
**ஸ்ப்ருச ஜாதவேத$_3$ : ஸமித்த$_4$:**
**ஆ ஜிஹ்வயா மூரதே$_3$வாந் ரப$_4$ஸ்வ**
**க்ரவ்யாதோ$_3$ வ்ருக்வ்யபி த$_4$த்ஸ்வாஸந்**

இரும்பினால் ஆன - கடைவாயில் பல கோரைப் பற்கள் உடைய அக்நி தேவனே! தீ நாக்கினால் அரக்கர்களைத் தீண்டுங்கள்: நடந்ததெல்லாம் (ராவணன் ஸீதா தேவியை கொண்டு வந்ததெல்லாம்) உங்களுக்குத் தெரியுமே! கொழுந்து விட்டு எரிகின்ற - தீ நாக்கினால் தேவர்களுக்கு மூத்தவர்களான அசுரர்களை நாலாபுறமும் சூழ்ந்து கொள்ளுங்கள். எரித்து விடுங்கள். அவர்கள் மாமிசம் சாப்பிடுபவர்கள் தானே! -ஒரு சுருட்டாகச் சுருட்டி வாயில் அடைத்துக் கொள்ளுங்கள்.

**ஹரிம் ம்ருஜந்த்யருஷோ ந யுஜ்யதே**
**ச ஸம் தேநுப: கல ஸோமோ அஜ்யதே**
**உத்வாச மீரயதி ஹிந்வதே மதீ**
**புருஷ்ருதஸ்ய கதிசிக் பரிப்ரிய:**

ஸீதையைக் கண்டுபிடித்து விட்டு திரும்பிய ஹநுமான் ஸ்ரீராமனிடம் வருகிறார்.

சத்ருவிடம் கூட பகை கொண்டாடாத (**ரிபூணாமபி வத்ஸல: =வால்மீகி** ) ராமன் ஹநுமானின் தோளில் அன்புடன் கைபோட்டுக் கொண்டார். பசுவினிடம் கிடைக்கின்ற பஞ்சகவ்யம் கலந்த கலசத்தில் ஸோமக் கொடியின் ரஸம் நன்கு கலக்கப்படுகிறதே அதுபோல ஹநுமான் பவித்திரமான ப்ரேமையே நிரம்பிய ஸ்ரீ ராமனுடைய இதய கலசத்தில் - ஸீதா தேவியின் அன்புச் சேதியை நிரப்புகிறார். ராமனுடைய உள்ளம் பூரிக்கிறது. ப்ரம்ஹ தேவன் சிவபெருமான் முதலியோர் ராமனைக் கொண்டாடுகிறார்கள். இப்படி கொண்டாடப்படுகின்ற ராமனுக்கு ஹநுமானுடைய ஸீதாதேவியின் ப்ரேம வசனங்களுக்கு முன்னால் அவையெல்லாம் நிறைவு பெறவில்லை.

நீலகண்ட ஸூரியின் இந்த விளக்க உரை பெருமளவு வலிந்து கூறப்பட்டதுதான். அவரே ''ஸூசனை தெரிகிறது'' - என்று சொல்லுகிறாரே தவிர, ஹநுமானுடைய சரிதம் ருக்வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது - என்று சொல்லவில்லை. அவருடைய லட்சியம் வேதத்தைத் திரித்து கூற வேண்டும் என்பதல்ல. ராம பக்தியின் காரணமாக - எங்கும் எந்த நூலிலும் ஸ்ரீராமனுடைய பெருமை இருக்குமே. அதைத் தேடிக் கண்டுபிடிப்போம் என்பது தான்.

ஆந்திர தேசத்தில் சில இடங்களில் வைதிகர்கள் ஸ்ரீராம நவமி உத்ஸவத்தில் இந்த மந்த்ர ராமாயண மந்த்ரங்களைக் கொண்டு அக்நியில் ஸ்ரீராமனை ஆவாஹனம் செய்து ஹோமம் செய்வார்கள்.

*(டெல்லி கரோல்பாக் – பார்க் ஏரியாவில் உள்ள யோகேச்வர குரு கங்கேச்வர தர்மார்த்த டிரஸ்ட் என்ற அறக்கட்டளையின் மூலபுருஷர்.உதாஸீந ஸம்ப்ரதாய சிரோமணி. வேதாந்தாசார்ய மஹாமண்டலேச்வர பூஜ்யஸ்ரீ ஸ்வாமி கங்கேச்வரா நந்த ஸ்ரீ மஹாராஜ் அவர்கள் – சென்ற எழுபது ஆண்டுகளில் சிறந்த அறிஞர்களின் துணை கொண்டு ஆராய்ச்சிகள் செய்து – மறைந்தது போக – இன்று குருகுலங்களிலும் சிறந்த நூல் நிலையங்களிலும் கிடைக்கின்ற வேத*

*நூல்களைத் திரட்டி – ஆதாரபூர்வமான பாஷ்யங்களிலிருந்தும் மற்ற நூல்களிலிருந்தும் சான்றுகளைத் திரட்டி – வேதங்களுடைய உண்மையான கருத்துகளை – புத்தக வடிவில் தந்துள்ளார்.*

*அவர்களுடைய தஞ்சை விஜயத்தின் போது பத்து நாட்கள் அவருடைய யாத்திரையில் சேவை செய்கின்ற பாக்யம் பெற்ற இவனுக்கு (இந்த நூலாசிரியருக்கு) 3.4.72 தமது ஆஸ்தான முத்திரை பதித்து தாம் எழுதிய வேதோபதேசசந்த்ரிகா என்று நூலை நினைவுப் பரிசாக அளித்தார்கள்.*

*இந்த ஸ்வாமிகளுக்கு –பாகிஸ்தான் பிரிவினையின் போது – ஸிந்து மாநிலத்திலிருந்து ஓடி வந்த வல்லப ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த வைச்யர்களான பிரபுக்கள் சீடர்கள். அவர்களுடைய ஆதரவில் ஒரு பெரிய ஆச்ரமத்தை நிறுவி – வேதாத்யயனத்திற்கு வழிவகுத்தார்கள். அது மட்டுமல்ல அவர் வேதங்களைக் கற்க இயலாதவர்கள் கூட க்ரந்தத்தை பூஜை செய்து மன நிம்மதி பெறலாம் என்ற கருத்தோடு ருக்வேத ஸம்ஹிதை முழுவதையும் 30 இஞ்ச் நீளம் 20 இஞ்ச் அகலமுள்ள பக்கங்கள் ஆயிரம் கொண்ட புஸ்தகங்களைப் பதிப்பித்தார் .அவற்றை ஒரு அகலமான – நான்கு புறமும் கண்ணாடி உள்ள தேக்கு அலமாரியில் வைத்தார். அதை நின்றபடியே படிக்க 4அடி உயரமுள்ள தேக்கு மரமேஜைகளையும் தயாரித்தார். இவ்விதம் நூற்றுக்கணக்கான படிவங்களை எடுத்துக் கொண்டு மஹாநகரங்களிலும் புண்ய க்ஷேத்ரங்களிலும் 'வேத பகவான் ப்ரதிஷ்டை" என்ற முறையில் யாத்திரை செய்தார்கள் .அவர்களை காஞ்சீ மஹாஸ்வாமிகள் போற்றினார்கள். அந்த பிரதிஷ்டா கைங்கர்யங்களை அவர்களுக்கு ஏற்பாடு செய்து கொடுப்பதற்காக இவனையும் மற்றும் இருவரையும் நியமித்தார்கள். அவர்களுடன் சென்று – காஞ்சீபுரம், சிதம்பரம், திருவண்ணாமலை, புதுச்சேரி, கும்பகோணம் ,தஞ்சாவூர் ,ஸ்ரீரங்கம் , மதுரை முதலிய நகரங்களில் ப்ரதிஷ்டை செய்வதற்கு ஸேவா பாக்கியம் இவனுக்குக் கிடைத்தது. அவர்களுடைய பார்வையில் மலர்ந்து இவர்கள் எழுதிய வேதாபதேச சந்த்ரிகா என்ற நூலில் இருந்து சில பகுதிகள் மேலே தொடர்கின்றன.)*

***வேத த$_{+}$ர்சநா சார்ய உத$_{+}$ாஸீந ஸ்ரீ க$_{3}$ங்கேச்$_{3}$வராநந்த ஜி அவர்கள் ருக்வேதத்தில் முதல் மந்த்ரமே ஹநுமானைத்தான் குறிப்பிடுகிறது. என்று ருக்வேதத்தின் சாந்த்ரபாஷ்யத்தின் ஆதாரத்தில் எடுத்துக் கூறுகிறார்.***

***அக்$_{3}$நிம் ஈளே புரோஹிதம்***
***யஜ்ஞஸ்ய தே$_{3}$வம் ருத்விஜம்***
***ஹோதாரம் ரத்ந த$_{4}$ாதமம்***

*புரோஹிதம் - யஜ்ஞஸ்ய என்ற பதங்களுக்கு முதலில் என்ன அர்த்தம் என்று தெரிந்து கொள்வோம்.*

***அக்$_3$நிம் தூ$_3$தம் வ்ருணீமஹே***
***ஹோதாரம் விச்வ வேத$_3$ஸம்***
***அஸ்ய யஜ்ஞஸ்ய ஸுக்ரதும்***

*இந்த மந்த்ரத்தில் ஸுக்ரீவன் ஸ்ரீராமனுடைய நட்பைப் பெறுவதற்காக ஹநுமானை அனுப்புகிறான் என்பதை தூதம் என்ற சொல் ஸூசனை செய்கிறது.*

***புரோஹிதம்** - என்ற பதம் கார்யத்துவக்கத்திலே அநுகூலமாக இருப்பவன் என்ற கருத்தை கூறுகிறது. இங்கு ஸீதாதேவியை தேடுவதற்காக ஸ்ரீராமன் ஹநுமானை அனுப்பினார். ஹநுமான் செய்த இந்த முதல் உதவி தான் - தேவியை அடைவதற்கு முதலில் கிடைத்தது. ஆகவே ஹநுமான் புரோகிதன். யாகத்தில் **ஹோதா** - தேவதைகளை அழைப்பவர். ஹநுமான் முன்னே இலங்கை சென்று - அரக்கர்களை போருக்கு அறைகூவி அழைக்கிறார். அதனால் ஹோதா என்ற மந்த்ரத்தின் சொல் ஹநுமானைக் குறிக்கிறது.*

***ரித்விஜம்** - ருத்வா ஏஜம் கடலைக் கடந்து சென்று அரக்கர்களின் உள்ளங்களை கலக்கினார். ஆகவே ருத்விஜம் என்ற சொல் ஹநுமானைக் குறிக்கிறது. இந்த மந்த்ரத்தில் உள்ள ரத்நத$_4$ாதமம் - என்ற சொல் ஹநுமானைக் குறிக்கும் விஷயத்தில் மிகவும் அர்த்த புஷ்டி உடையது. ராமன் - அடையாளமாக ஹனுமானிடம் ரத்நக்கணையாழியை அளித்தார். அதை ஏந்திச் சென்றார் ஹநுமான். இந்த ஒருசொல்லே இந்த மந்த்ரம் ஹநுமானைக் குறிப்பது - என்பதற்கு முக்கியச் சான்று. சங்கமும் சக்ரமும் கதாயுதமும் ஏந்தியவர் சங்க சக்ர க$_3$தாத$_4$ர : என்ற அடைமொழி - ஹரி என்று சொல்லுக்கு பல பொருள்கள் இருந்தாலும் - இங்கு நாராயணனேயே குறிப்பிடுமோ அதுபோல*

*யஜ்ஞஸ்ய தே$_3$வம் - ஸ்ரீராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் -தோழமை - என்ற வேள்வியை - அக்நிஸாக்ஷியாக நடத்தி*

வைத்தவர் அல்லவா ஹநுமான் ? இந்த அடைமொழிகளால் - அக்நிம் - என்ற சொல் ஹநுமானையே குறிக்கிறது - என்று ஊர்ஜிதம் செய்யலாம்.

**அக்$_3$ரே நயதி அக்$_3$நி:** ஒரு கார்யத்தை முன் நின்று நடத்துபவன் -அக்நி. ஸீதையை மீட்பது - என்ற காரியத்தை முன்னே நின்று நடத்திக் கொடுத்தவர் ஹநுமான். ஈளே அவனைத் துதிக்கிறேன். என்று ருக் வேதம் ஆரம்பிக்கிறது.

**அக்நிம் தூ$_3$தம்** என்ற மந்த்ரம் இதே கருத்தை விவரமாகக் கூறுகிறது. **அஸ்ய யஜ்ஞஸ்ய தூ$_3$தம்** ஸீதையை மீட்பது - என்ற வேள்விக்கு -தூதனாக அமைந்தவர் ஹநுமான். அரக்கர் நகரத்தையே கொளுத்திய **அக்$_3$நி.**

**அஸ்ய யஜ்ஞஸ்ய தூதம்** - யஜ்ஞம் என்ற சொல் - நாராயணனைக் குறிக்கும். **யஜ்ஞோயஜ்ஞபதி: யஜ்வா**- என்று ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் ராமனாக அவதாரம் செய்த விஷ்ணுவை வேள்விகளின் ஸகல வடிவங்களாகவும் குறிப்பிடுகிறது. அந்த யஜ்ஞ புருஷனுடைய தூதன் ஹநுமான் **அஸ்ய யஜ்ஞஸ்ய ஸுக்ரதும்** ராமன் எடுத்துக்கொண்ட ஸீதையை மீட்பது என்ற - வேள்வியை செவ்வனே நடத்திக் கொடுத்தவன் ஹநுமான். எப்படி அவனால் அதை சாதிக்க முடிந்தது? அவன் **விச்$_+$வவேத$_3$ா:** அவன் எல்லாச் செயல்களையும் நன்கு அறிந்து செம்மையாகச் செய்வதில் ஸமர்த்தன். அதனால் முடிந்தது.

**வ்ருணீமஹே** - அவனையே நாமும் - நமது நல்லகார்யங்கள் செவ்வனே நடைபெறுவதற்கு துணையாக ஏற்போம்.

இந்த மந்த்ரத்தில் வருகின்ற அக்நி என்ற சொல் பொருட் செரிவு உள்ளது.

அஞ்ஜனை பெற்ற பிள்ளைக்கு ஹநுமான் . என்ற பெயர் எப்படி வந்தது. இதையும் ருக்வேதம் ஸூசிப்பிக்கிறது.

***மமச்சந தே மக$_4$வன் வ்யம்ஸோ***
***நிவி வி$_4$த்வாம் அபஹநூஜ$_4$காந***
***அதா நிவித்த$_4$ உத்தரோ***
***ப$_4$ பூவாந் சி$_2$ரோ தாஸஸய***
***ஸம்$_1$பிணக்$_3$ வதே$_4$ ந ॥***

*இந்திரனே ! நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விசாலமான தோள்கள் உடைய ஹநுமான் ஸூர்யனை விழுங்க முனைந்தான். அவனைத் தடுப்பதற்காக அவனுடைய தாடைகளை வஜ்ராயுதத்தினால் = ராமதூதனாக வரப் போகிறவனுடைய = தலையின் பகுதியான தாடையை - நன்றாக தாக்கிவிட்டீர்கள்.*

*விரிந்த தோள்களுடைய ஹநுமான் இப்படி அடிபட்டு சிறந்த வீரன் ஆனான்.*

*வேதங்கள் முக்கியமான தெய்வங்களை மறைத்துத்தான் சொல்லும் **''பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா''** தேவர்கள் மறைந்திருப்பதையே விரும்புவார்கள். அடுத்த மந்த்ரத்தில் இது நன்கு விளங்கும்.*

***அநுஸ்வதா$_4$ம க்ஷரந்நாபோ***
***அஸ்யா வர்த்$_4$த மத்$_4$ய ஆநாவ்யாநாம***
***ஸத்$_4$ரீ சீ$_1$நேந மநஸா தமிந்த்ர***
***ஓஜிஷ்டே$_2$ந ஹந்மநா ஹந் நபி. த்யூந்***

*ஆகாயத்தில் ஒரு நீலக்கடல் (மேகம்) அந்தக் கடலின் உள்ள நீல நீர் தேவர்களுக்கு யாகத்தில் ஹோமம் செய்யப்படுகின்ற ஹவிஸ்.*

*நெல்யவை போன்ற தானியங்களை உற்பத்தி செய்கின்ற தண்ணீர் நிறைந்த ஆகாயத்தில் கப்பல்கள் போகின்ற அளவுக்கு பெருத்த மேக வெள்ளத்தின் இடையே ஹநுமான் மூழ்கிவிடாமல் மிதந்தார். இந்திரன் மேக மண்டலத்தில் மிதந்த ஹநுமான் மீது தன் வாஹனமான ஐராவதத்தை ஏவினார். ஐராவதத்தையே கபளீகரம் செய்த =*

*மனதினுடைய வேகத்தை மிஞ்சுகின்ற ஹநுமான் (இங்கு ஹந்மநா என்ற சொல்லுக்கு - ஹநுமானால் என்று பொருள், ஹநுமதா என்ற சொல் மருவி ஹந்மநா என்று ஆகியிருக்கிறது.) துரத்தப்பட்ட இந்திரன் வஜ்ராயுதத்தால் அடித்தான். இவ்விதம் ருக் வேதத்தில் நூற்றுக்கு மேற்பட்ட ஹநுமானைப்பற்றிய குறிப்புகள் காணலாம்.*

***ஹிரண்ய ரூப : ஸ ஹிரண் யஸம்த்$_3$ருக்***
***அபாம் ந பாத் ஸேது$_3$ ஹிரண்ய வர்ண:***
***ஹிரண்ய யாத் டரி யோநேர் நிஷக்$_3$யா***
***ஹிரண்யதா$_3$ த$_3$த$_3$த்யத்ர மஸ்மை ॥***

*தங்க மயமான சரீரம் உடையவர் ஹநுமான்- ஹிரண்ய, தங்க மயமான புலன்களை உடையவர். கண்கள் காதுகள் மூக்கு முதலியன தங்கமயமானவை.*

*அபாம் நபாத்- முன் மந்த்ரத்தில் கூறிய படி ஆகாயக்கடல் நீரை அபாம் என்று சொல் குறிப்பிடுகிறது. ஆகாசத்தின் குமாரன் வாயு. **''ஆகாசாத் வாயு:''** வாயுவின் குமாரன் ஹநுமான். ஆகவே ஹநுமான் ஆகாசத்தின் பேரன் அபாம் நபாத் (நப்தா என்பது நபாத்). ஸேது ஹிரண்ய வர்ண = உண்மையான ஹநுமான் ஸ்வர்ண காந்தி உடையவன். தங்கமயமான ஸூர்யமண்டலத்தின் மீது உட்கார்ந்து - தங்கத்தை வழங்குபவன் ஹநுமான். அவனுக்கு சாப்பிட கொழுக்கட்டைகளை அளிப்போம். அஸ்மை அத்ரம் (அன்னம்)*

*மருத்பி: என்ற ஒன்பது தடவை வருகின்ற மந்த்ரங்களில் - வாயுவின் குமாரன். அக்நி -ஹநுமான் என்றே பொருள். இதையே மருத்பி : அக்ந என்ற தொடர் குறிப்பிடுகின்றது இவ்வாறு கேசவாநந்தஜீ அழுத்தமாக ''வேதங்கள் ஹநுமானின் அவதாரத்தை சிறப்பிக்கின்றன'' என்று ஸித்தாந்தம் கூறுகிறார்.*



## இரண்டாம் பகுதி

## ஹநுமானின் தனிச்சிறப்பு

### 1.சிரஞ்ஜீவி ஹநுமான்

*புராணங்கள் - ஏழு மஹநீயர்களை சிரஞ்ஜீவிகள் என்று கூறுகின்றன.*

***அச்$_{+}$வத்தாமா பலி: வ்யாஸ : ஹநுமான்– ச விபீ$_{4}$ஷண:* |**
***க்ருப : பரசுராமச்$_{+}$ ச ஸப்த ஏதே சிரஜீவிந :* ||**

***அச்வத்தாமா*** *– துரோணாசாரியரின் குமாரன் மஹாபாரதயுத்தத்தில் பெயர் கெட்டவன்.*

***பலி:–*** *பலி சக்ரவர்த்தி -த்ரிவிக்ரமாவதாரம் எடுத்த பகவானுக்கு மூன்றடி நிலம் தருவதாக ஏற்றுக்கொண்டு- இரண்டடிகளால் பிரபஞ்சத்தையே அளந்து விட்ட பெருமாளுக்கு தமது தலையை மூன்றாவது அடியாக அளந்து கொள்ளச் சொல்லி தானத்தை பூர்த்தி செய்தவன். இவன் பாதாளத்தில் தன் பாட்டனார் பிரஹ்லாதனுடன் பகவானுடைய பாதுகாப்பில் வாழ்கிறான்.*

***வ்யாஸ:*** *பகவான் - பராசரமுனிவரின் குமாரர். பதினெண் புராணங்கள் எழுதியவர் - கலியில் ஆயுள் காலம் குறைந்து போய்விட்ட மானிடர்களுக்கு - பிராமணர்களுக்கு நான்கு வேதங்களையும் கற்றுக் கொள்ள ஆயுள் போதாதென்று - வேதத்தை நான்காக வகுத்துக் கொடுத்தவர்.*

***க்ருப:*** *- மஹா பாரதத்தில் கௌரவர்களுக்கு ஆசார்யராக இருந்தவர்.*

***பரசுராம:*** *- ஜமதக்நி முனிவரின் குமாரர். பிராமணனாக பிறந்து க்ஷத்ரியதர்மத்தைக் கடைப்பிடித்து - முறை கெட்டுப் போன க்ஷத்ரியர்களை வதைத்து - வென்ற*

*பூமியைத் தானம் செய்து விட்டு - தானம் கொடுத்த இடத்தில் இருக்கக் கூடாது என்று - மேலக்கடற்கரை - ஓரம் கொங்கணம் முதல் கேரளம் வரை - அங்கே தவம் செய்து கொண்டு வாழ்கிறார். அதனாலேயே அந்தப்பகுதிக்கு பரசுராம க்ஷேத்ரம் - என்று பெயர் வந்தது.*

***விபீஷணன்*** *= ராவணனின் தம்பி ராமன் வென்று கொடுத்த ஸ்ரீலங்காவுக்கு அதிபதியாக இன்னும் வாழ்கிறார்.*

*ஹநுமானும் இந்தச் சிரஞ்ஜீவிக் கூட்டத்தில் சேர்ந்தவர் தான். சிரஞ்ஜீவீ= வெகு நாட்கள் வாழ்பவர் என்ற பொருள் - மற்ற ஆறு சிரஞ்சீவிகள் எங்கே எப்படி இருக்கிறார்கள் - என்ற வரலாறு கிடைக்கவில்லை.*

*ஆனால் ஹநுமான் சிரஞ்சீவியாக இன்னும் வாழ்கிறார் -என்ற வ்ருத்தாந்தத்தை மேலே கவனிப்போம்.*

*ஸ்ரீராமன் ஸ்ரீக்ருஷ்ணன் என்ற அவதார மூர்த்திகள். அவதார கார்யங்களை முடித்துக் கொண்டு வைகுண்டத்தைக் காட்டிலும் மேலான- ஸாந்தாநிக லோகத்திலும் - கோலோகத்திலும் தமது அத்யந்த பக்தர்களான வால்மீகி வியாஸர் கோபிகைகள் முதலான நித்ய ஸூரிகளுடன் விளங்குகிறார்கள். ஆனால் ஹநுமானை வைகுண்டத்திற்கு - அயோத்தி வாழ் மக்கள் புல் பூண்டுகள் அனைத்தையும் ராமன் ஸரயூவில் மூழ்கி வைகுண்டம் அழைத்துச் சென்ற போது - தன்னுடன் வருமாறு அழைத்தார். அப்போது ஹநுமான் - எங்கும் ராம நாமமே வியாபித்திருக்கின்ற இந்த பூலோகத்தையும் பாகவதர்களையும் விட்டுவிட்டு வைகுண்டம் வர நான் விரும்பவில்லை'' என்று கூறினார்.*

*ஹநுமான் - ராமனுடைய கோமள அங்கங்களெல்லாம் கோத்து ஆலிங்கனம் பெற்றுக்கொண்ட - தனது மங்கள சரீரத்துடன் பாரத புண்ய பூமியில் உள்ள - கிம்புருஷ வர்ஷம் - என்ற பிரதேசத்தில் - ராமனை உபாஸித்துக் கொண்டு ராம நாம ஜெபம் செய்து கொண்டு வாழ்கிறார். ஆர்ஷ்டி ஷேணன் முதலிய கந்தர்வர்கள்*

ஸ்ரீராமனுடைய கல்யாண குணங்களை மதுராமாகப் பாடக் கேட்டுக்கொண்டு மகிழ்கிறார்.

**ராம கோதண்டராம ராம கல்யாணராம**
**ராமஸீதா பிராம ராம பாவந ராம**

என்று நாமாவளி போட்டுக் கொண்டு ஆநந்தமாக இருக்கிறார்.

என்று ஸ்ரீமத்பாகவதம் கூறுகிறது.

பாரதவர்ஷத்திற்கு வடக்கே - ஹேமகூடம் என்ற மலைத்தொடர் - அதன் தென் கிழக்குப் பகுதியில் கிம்புருஷ வர்ஷம். காளிதாஸன் தனது அபிஜ்ஞான சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தன் என்ற கதா நாயகன் மனவேதனையோடு ஹிமவத் பர்வதத் தாழ்வரைகளில் ஸஞ்சாரம் செய்த போது - ரதத்தை ஒட்டுகின்ற ஸாரதி (கிழவன்) கூறுகிறான். ''ஆயுஷ்மன்! இது தான் ஹேமகூடம் என்கிற கிம்புருஷபர்வதம். இங்கே தவம் புரிந்தால் விரைவில் சித்தி கிடைக்கும்'' - என்று கூறுகிறான் என்று வர்ணிக்கிறார்.

அத்தகைய தபோபூமி கர்க ஸம்ஹிதையில் விச்வஜித் கண்டத்தில் பின்வரும் சரிதம்.

ஹநுமான் கிம்புருஷவர்ஷம் என்ற இடத்தில் ராமனை ஏகாந்தமாக ஆராதித்து வந்தார். குரலினிமை மிக்க கந்தர்வர்கள் கூடி ராம குணகீர்த்தனம் செய்வதை காதுகளால் கேட்டு மகிழ்கிறார் என்று கூறுகிறது.

முன்பு தேவர்களும் அஸுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்த போது - கடைசியாக அம்ருத கலசத்துடன் பகவான் தந்வந்தரி உதித்தார். நாராயணன் அதைக் கடாட்சித்தார். அப்போது அவர்கண்களிலிருந்து இரண்டு சொட்டு நீர் கலசத்தில் விழுந்தது. அதிலிருந்து ஒரு துளசிச் செடி - வேரிலிருந்தே நறுமணத்துடன் துளிர்த்தது. அதற்கு நாராயணன் ரங்கவல்லீ என்று பெயர் வைத்தார். ஹநுமான் அதை எடுத்துச் சென்று கிம்புருஷ வர்ஷத்தில் உள்ள ஹேமகூட மலையில் தாழ் வரையில் - நட்டு - வளர்த்தார். பகவான் இந்த இடத்திற்கு ரங்கவல்லீபுரம் எனப்

பெயர் வைத்தார். அந்த துளசி மாடத்தின் அருகில் ஹநுமான் ஆர்ஷ்டிஷேணன் மற்றும் கந்தர்வர்களோடு கூட ராம நாமகீர்த்தனம் செய்து கொண்டு ஆனந்தமாத நித்ய வாஸம் பண்ணுகிறார்.

**விஷ்ணுதர்மோத்தர புராணம்** - இதிலும் இதே ஸம்பவம் வேறுவிதமாக காணப்படுகிறது.

**ஸநாதந கோஸ்வாமி** தமது **ப்ருஹத் பாகவதம்** - என்ற நூலில் கூறுகிறார்.

நாரத பகவான் ஒருசமயம் ப்ரஹ்லாதனை தர்சிக்கச் சென்றார். ப்ரஹலாதன் எழுந்து வணங்கி ஆஸனமளித்து அமர வைத்தார்.

''ஸத்குரோ! தாங்கள் என்னைத் தேடி வர வேண்டுமா? ஒரு கிளியின் வாக்கில் செய்தி அனுப்பினால், நான் தங்களைத் தேடி ஓடி வர மாட்டேனா?''

நாரதர் அன்புடன் கூறினார் ''ப்ரஹ்லாத ! இவ்வளவு நாம நிஷ்டையோடு நீ அநவரதம் ஹரிநாமம் ஓதிக்கொண்டு ஆநந்த ப்பிரவாஹத்தில் மிதந்து கொண்டிருக்கும் போது அதைக் கலைத்து - என்னை நோக்கி வரச் சொல்ல எனக்கு இஷ்டமில்லை. சாபமோ அநுக்ரஹமோ - ஒரு நேரம் இருந்த இடத்தில் மறுநேரம் - நில்லாது ராமநாம கீர்த்தனைத்தை மஹதீச்ருதியில் சேர்த்து ஸஞ்சாரம் செய்து கொண்டிருக்கிற போது - உன் நினைவு வந்தது. ஓடி வந்தேன்.

உன்னைப்போல் வேறு பக்தனை நான் இதுவரைக் காணவில்லை'' என்று மனமுருகிக் கொண்டாடினார். பிரஹலாதன் சொன்னார்.

''ஸத்குருநாத! இந்த தங்கள் திருவடி ஸேவகனைக் காட்டிலும் உயர்ந்த பக்தனைக் காணவில்லை என்று கூறுகிறீர்களே! எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. என்னை சோதிக்கிறீர்களோ - என்று அச்சமாகவும் இருக்கிறது உங்களுக்குத் தெரியாதா?

*''பிரஹ்லாதா! நீ என்ன சொல்ல நினைக்கிறாயோ! அதைச் சொல், தயங்காதே!''*

*''தங்களுக்கு நான் சொல்வதா? நான் ஒளித்தாலும் தங்களுக்கு என் மனதில் உள்ளது தெரிந்து தான் இருக்கும். நான் அதை மறைக்கவில்லை:*

*ராமதாஸன் ஹநுமானுடைய பக்திக்கு ஈடுஉண்டா? இணையுண்டா? ராம நாமாம்ருதபாநம் செய்து கொண்டே இருக்கிறார். மதுரமாக ராம நாம கீர்த்தனம் தானும் செய்கிறார். மற்றவர்களின் கீர்த்தனத்தையும் ஆர்வத்துடன் மௌனமாகக் கேட்கிறார். அது மட்டுமல்ல -ராம நாமம் யார் சொன்னாலும் அது மதுரமாக இருக்கிறதோ, இல்லையோ பக்தியோடு சொல்கிறார்களோ! இல்லையோ அவர்கள் குரலிலும் ஆதரவோடு காது கொடுப்பார். அதற்குக் காரணம் அது ராம நாமம்''.*

*''நீ சொல்வதெல்லாம் - சரி. அவர் ராம நாம ரஸிகர். அவர் ராமஸேவைக்காகவே பிறந்தவர். பிறந்தது முதல் ராம ஸேவைக்காக காத்திருந்தவர். ராம ஸேவையில் பரிபூர்ணமாக ஈடுபட்டவர். இப்படிப்பட்டவர் பின்னர் ஸ்ரீராமன் வைகுந்தம் (ஸாந்தானிக லோகம் ) போக எண்ணிய போது ஹநுமான் - உடன் போக மறுத்து விட்டாரே ... என்று என் மனதில் ஒரு ஆதங்கம் உண்டு.''*

*''குருதேவ! நானும் இவ்வாறு கலக்கமடைந்து - கிம்புருஷ வர்ஷத்திற்குச் சென்று ஹநுமானை ஸந்தித்து வணங்கினேன். வரவேற்று - என்னை உபசரித்து என் உள்ளத்தில் உள்ள ஐயத்தை தானே புரிந்து கொண்டு பேசினார்.*

*''ப்ரஹ்லாத ஸ்வாமி! தங்களிடம் இது வரை யாருக்கும் தெரிவிக்காத ரகசியத்தை உடைத்து விட விரும்புகிறேன்.*

*''அவதாரலக்ஷ்யம் முடிந்து என் பிரபு ஸாந்தானிகம் போக முடிவு செய்து விட்டார். அந்த நேரம் பிரபு ஒரு நாள்*

என்னை அந்தப்புரத்திற்கு அழைத்து - மாதாவுடன் ஊஞ்சலில் அமர்ந்து கொண்டார். என்னை அருகே அழைத்துக் கூறினார்.

ஆஞ்ஜநேய! உன்னுடைய தனிப்பட்ட - வேறு யாரும் நினைத்துக் கூட பார்க்கமுடியாத - ஸேவையினால் - என் அவதார லட்சியத்தின் - ஒரு பகுதி - வெற்றிகரமாக நிறைந்தேறிவிட்டது.

என் அவதாரத்திற்கு முன்னமேயே பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் என் தாரக நாமத்தை - ஒரு பலனும் எதிர் பாராது - ஜபித்து ராம என்று சொல்லுக்கு அபரிமிதமான சக்தியை வளர்த்துவிட்டார் வால்மீகி பகவான்! அது தாரக நாமம் என்று தனிப் பெயர் பெற்றுவிட்டது. அந்தத் தாரக நாமத்தை - நான் அவதரித்தவுடன் -எனக்கு என் குருநாதர் பெயராகச் சூட்டி விட்டார். அந்த நாமம் பெற்ற மஹிமையால் என் உள்ளத்தில் தர்மத்தில் ருசியும் அந்த மாநுஷதர்மத்தை நானே கடைப்பிடித்து வாழ்ந்து காட்டி - மானுடலோகத்தில் நற்பண்புகளை வளர்க்க வேண்டும் என்ற ஒரே நோக்கமும் வளர்ந்தது. நானே ஸங்கல்பித்து - என் சிறு தாயாரின் தங்கம் போன்ற உள்ளத்தைக் கலக்கி - நாடு துறந்து பல துன்பங்களை அநுபவித்து - அப்போதும் தர்மநெறி மீறாமல் செயல்பட்டு - அவற்றிலிருந்து மீண்டு பட்டாபிஷேகம் செய்து கொண்டு ராஜ்ய பரிபாலனம் செய்தது அவதாரலட்சியத்தின் ஒரு பகுதி தான் நிறைவேறியிருக்கிறது.

மற்றது பெரும்பகுதி மீதம் இன்னமும் ஆகவேண்டியிருக்கிறது. இதில் தான் உன்னுடைய சுயநலமற்ற கைங்கரியம் தேவைப்படுகிறது. என்னுடைய திருவடி சேவையிலேயேரமித்துக் கொண்டிருக்கின்ற உனக்கு அந்த ஸுகத்திற்குத் தடையாக , வேறு கைங்கர்யம் காத்திருக்கிறது.

இனி மானிடவர்க்கத்திலே போகப் போக - கால வேகத்தினால் தர்மநெறி தவறி - காமமும் கோபமும்

மேலிட்டுத் தாறுமாறாக நடந்து கொள்கிற இயல்பு வளர்ந்து விடும். அதனால் பெருவாரியாக ஜனங்கள் பலவித கஷ்டங்களுக்கு உள்ளாவார்கள். அவர்களின் கர்மவினை அவர்களை மேலும் மேலும் தாங்க முடியாத கஷ்டங்களுக்கு பலியாக்கிவிடும். ஆனால் ஸாதுக்களான என் பக்தர்கள் அவர்களுக்காக வருந்தி - அவர்களைத் திருத்த முயன்று பார்ப்பார்கள். அதனால் சிலர் தான் உருப்படுவார்கள். மற்றவர்கள் அவர்களுடைய வாக்கில் நம்பிக்கையில்லாமல் - திருந்தாமல் - மேலும் துன்பத்திற்கே ஆளாவார்கள். அவர்கள் கரையேறுவதற்கு ஓரே வழி என் தாரக நாமம் தான் என்பது உனக்கு நன்கு தெரியும். ஆகவே நீ சிரஜீவியாக இருந்து - தாரக நாமத்தையே ஜபித்து - தப்பித்தவறியாவது தாரக நாமம் சொல்பவர்களுக்கு கூட - மேலும் ஊக்கமும் தைரியமும் ஊட்டி - அதனால் நல்வழியில் அவர்களைத் திருப்ப வேண்டும். இதுவே நான் விரும்பிய - நீ செய்ய வேண்டிய மஹத்தான காரியம்

உன்னால் அது செவ்வனே நடந்து கொண்டே இருக்கும் என்று எனக்கு நம்பிக்கை உண்டு'' என்று சொல்லி நிறுத்தினார் ராமன்.

''ப்ரஹலாதரே - என் கண்களில் தாரை தாரையாக நீர் வழிந்தது. என்னை ஸீதாதேவி கேட்டாள்.

''குழந்தாய், ஏன் கண்களில் நீர் வடிகிறது? - அணுக்க ஸேவையிலிருந்து பிரபு விலக்குகிறாரே - என்ற வருத்தமா!

''அம்மம்மா! ஒரு போதும் அப்படி நினையாதீர்கள். பிரபு நினைத்து எங்கே வைத்தாலும், எந்தப்பணி ஆணையிட்டாலும் அதை நிறைவேற்றுவதுதான் அடிமையின் பொறுப்பே தவிர - அதைத் தலையால் ஏற்று பணியில் இறங்குவேனே தவிர வேறு எனக்கென வேறு விருப்பம் ஒன்றுமே கிடையாது.

பிரபு எப்பேர்பட்ட நித்ய கைங்கர்யத்தை எனக்கு அருளியிருக்கிறார் ? என்று நினைத்தேன். ஆநந்தம்

*அடைந்தேன். ஸாதாரண கைங்கரியமா அது? பிரபுவின் கருணை உள்ளம் - தனது பக்தர்கள் பால் மட்டும் கனியும் - என்றில்லாமல் வழிதவறிச் சென்று கஷ்டப்படுகிறவர்கள் பாலும் கனிவுடன் பாய்கிறதே . அதற்கேற்ற - மிக அரிதான மிக மிக சுலபமான - கைங்கர்யத்தை அல்லவா எனக்கு அருள் பாலித்திருக்கிறார்? எனக்கு மிகவும் பிடித்தமான பணியை அல்லவா - எனக்கு ஒதுக்கி இருக்கிறார்? அதை - ஒரு கணம் ஓயாது அயராது முழுமனதுடன் கடைப்பிடித்து நடப்பதைக்காட்டிலும் - வேறென்ன பேறு எனக்கு வேண்டும்?*

*அத்தகைய மன உறுதியை தாயே! தாங்கள்தான் அருள வேண்டும். எனக்குத் தங்கள் அருள் தான் மேலும் ஊக்கத்தையும் புத்தி சக்தியையும் கொடுக்கும் - என்பதற்கு ஒரு முன் அநுபவம் உண்டு.*

*தங்களை அசோக வனத்தில் தரிசித்த போது தாங்கள் கடைசியாக ஒரு ஆணையிட்டீர்கள். அது தங்கள் முக கமலத்திலிருந்து வேண்டுகோளாகப் புறப்பட்டாலும் என்னிடம் சேர்ந்த போது ஆணையாகவே என் மனதில் பதிந்தது.*

*''ஹநுமந்தா! ஒரு வேண்டுகோள். அது உன்னால்தான் முடியும். அதனால் விடுக்கிறேன் - பருத்து நீண்ட புஜமுடைய என் பிரபு இந்தத் துயரக் கடலிலிருந்து என்னை எவ்விதம் கரையேற்றுவாரோ - இந்த முயற்சியை நீ செய்''*

***ய$_2$தா ச$_1$ ஸ மஹாப$_3$ாஹு: மாம் தாரயதி ராக$_4$வ:***
***அஸ்மாத்$_3$து:க$_2$ாம்பு$_3$ஸம்ரோத$_4$ாத்த்வம் ஸமாத$_4$ா துமர்ஹஸி ||***

*ஸர்வஜ்ஞரான - ஸர்வசக்தனான பிரபுவை - நான் தூண்ட வேண்டுமா? தூண்ட முடியுமா? ஆனால் தங்கள் ஆணை ஒவ்வொரு கணமும் - என்னை அணைத்துச் சென்று - பிரபுவுக்கு உறுதுணையாக நிறுத்தி - மாபெரும் வெற்றியைத் தந்தது. அது பராசக்தியான தங்கள் வாக்கின் மஹிமை''*

*என்று கூறி வணங்கி நின்றேன்.*

அப்போது வஸிஷ்ட பகவான் - ஸ்ரீராமன் - ஸீதாதேவி. லக்ஷ்மணன் அடியேன் என்ற நால்வரின் பஞ்சலோஹ அர்ச்சா மூர்த்திகளை மங்கள வாத்யங்களுடன் ஜயகோஷத்துடன் கொண்டு வந்தார். நான்கு சீடர்கள் தமது கைகளில் தாங்கி தமது மார்புகளில் அணைத்துக் கொண்டு நின்றார்கள்.

ஸ்ரீராமபிரான் ஊஞ்சலில் இருந்து முன்பே எழுந்து எதிர் கொண்டழைத்து. குருதேவரை ஆஸனத்தில் அமர்த்தி வணங்கி - ஆச்சரியத்துடன் நின்றார். குருதேவர் பேசினார்.

''அயோத்தியாதிபதே! இக்ஷ்வாகு வம்ச கீர்த்தியை உயர்த்திய பெருமானே! பல ஆண்டுகளுக்கு முன் தங்களுக்கு சக்ரவர்த்தியின் வேண்டு கோளுக்கு இணங்கி - பெருமாள் ஸந்நிதியில் மறு நாள் பட்டாபிஷேகத்திற்கு தங்களுக்கு கங்கணம் கட்டினேனே; அந்த விரதம் எப்போது பூர்த்தி ஆகும் என்று மனம் உருகியது தான் பதினான்கு வருஷங்களில் நான் செய்த தவம். அது உன்னுடைய ஸத்யஸங்கல்பமானதால் பதினான்கு ஆண்டுகளுக்கு பிறகு நிறைவேறியது. என் பெரும் துயரம் தீர்ந்தது. போதுமப்பா ராஜ சேவை! எனக்கு மிகவும் வயதாகிவிட்டது. உன்னுடைய கரகமலங்களால் இந்த ஸ்ரீவிக்ரஹங்களை தொட்டுத்தடவிக் கொடு. ஆசிரமத்திலேயே இந்த ஸ்ரீவிக்ரஹங்களை -பூஜித்துக் கொண்டு சாந்தியடைவேன்.

ராமன் பதறிப்போனார்.

''குருதேவ! என்ன இது? இப்படி கேட்கக் கூட நாக்கு கூசுகிறது. க்ருபை பண்ணி அதையெல்லாம் என்னிடம் கொடுத்து விடுங்கள். தாங்கள் எப்பொழுதும் போல ஸமாதியில் அமர்ந்து ப்ரஹ்மலயத்தில் திளையுங்கள்''

''ராம! நீ பரமாத்மா - நீ பத்து வயதில் குருகுல வாஸம் செய்ய என் ஆச்ரமத்திற்கு வந்தாயே - அப்போது உனக்கு சாந்தோக்ய உபநிஷத் பாடம் சொன்ன போது உன்னை நிமிர்ந்து பார்த்து - **தத்த்வமஸி** என்ற மஹாவாக்யத்தை - நான் உச்சரித்த போதே - உன் முகவிலாஸம் கண்டு ''அந்த பிரஹ்மம் -நீதான் என்று கண்டு கொண்டேனே!

நேரே பராமாத்மாவை தர்சிக்கும் போது எனக்கு ஸமாதி நிலைக்குப் போக வேண்டிய அவச்யமென்ன?''

''குருதேவா! தங்களுடைய ஞானவைபவத்தை என்னால் அறியமுடியுமா? நான் என்னைப்பற்றி தசரதராஜ குமாரன் - என்ற பெரும் பேற்றையே நினைத்து ஸந்தோஷப்படுகிறேன். **(ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த₃சரதா₂த்மஜம்)** தங்களிடன் ஒருயாசனை புரிய எனக்கு அநுமதியளிக்க வேண்டும்.

''யாசனையா? என்ன ராம! என்னிடம் நீயா கேட்பது ?''

''குருதேவா! அநுமதியளியுங்கள்''

குருதேவர் சிரித்துக் கொண்டே ''சொல்லேன்'' என்றார்.

''இந்த பிரதிமைகளை என்னிடம் கொடுத்து விடுங்கள்''

''உனக்கு ஏன் இவையெல்லாம்?''

''தங்களுடைய பவித்ரதமமான கரகமலங்கள் பட்டு - சைதந்யம் பெற்றிருக்கிற இந்த பிரதிமைகளை ஒரு ஸத்பாத்திரத்திடம் ஒப்புவித்து பூஜை செய்ய வைக்கலாம் என்று தோன்றுகிறது.

''அப்படியா? அது யார்?

''இதோ மண்டியிட்டு கைகூப்பி - என் திருவடிகளிலேயே கண்களை வைத்திருக்கறானே - வாயுகுமாரன் அவன் என்னை விட்டு அகன்று - ஒரு கடமையைச் செய்யப்போகிறான். அவனுக்கு என் பிரிவு தாளாது. அதற்காகத்தான் யாசிக்கிறேன். தங்கள்

---

*(தியாகராஜர் இந்தஸம்பவத்தை நினைத்துப்பாடுகிறார் — **தத்த்வமஸியநி வாக்யார்த்தமு நீவேயனி பரதத்தவமெறுக தரமா? தத்த்வமஸி** என்ற உபநிஷத் வாக்கியத்தின் பொருள் நீதான் என்று வஸிஷ்டரைத்தவிர தெரிந்து கொள்ள வேறு யாரால் முடியும்?)*

*திருக்கரங்களாலேயே - அவனிடம் ஒப்புவித்து ஆசியளித்தால் அவனுக்குப் பரமச்ரேயஸ் உண்டாகும். க்ருபை புரியுங்கள்''.*

*''ராம! உன்னுடைய உதாரகுணத்திற்கு இதைவிடச் சான்று வேறென்ன இருக்க முடியும் ? என்னை விட இவனே இந்த திவ்ய மூர்த்திகளைப் பூஜை செய்ய மிகவும் தகுதி பெற்றவன். இந்த ஆஞ்ஜநேய மூர்த்தி மட்டும் என்னிடம் இருக்கட்டும். இதை தர்சனம் செய்தாலே - எனக்கு உன்னுடைய ஸாக்ஷாத்காரம் உடனே கிடைக்கும்''*

*(துளஸி தாஸர் கூறுகிறார் தும்ஹரே பஜந ராமகோபாவை தங்களை (ஹநுமான்) பஜித்தால் ராமன் தர்சனம் அளிப்பான்)*

*குருதேவர் என்னை அழைத்து - அந்த ஸ்ரீவிக்ரஹங்கள் மூன்றையும் அளித்தார் எனது விசாலமான புஜங்களில் அவற்றை ஏந்தி மெய்சிலிர்த்தேன். வஸிஷ்டர் விடை பெற்றார்.*

*பிரபு என்னைப் பார்த்துச் சொன்னார்.*

*'' நீ பரம பாக்யம் பண்ணியிருக்கிறாய். குருநாதருடைய தவம் மிகுந்த ஹ்ருதயத்தில் உதித்த இந்த பிரதிமைகள் உன்னோடு பேசும், பாடும். நீ இவற்றை எடுத்துப்போய் ஹேம கூட சிகரத்தில் உள்ள கிம்புருஷ வர்ஷத்தில் பிரதிஷ்டை செய்து கந்தர்வர் புடைசூழ நாம கீர்த்தனம் செய்து பூஜை செய்துவா. அத்துடன் ஸாது ரக்ஷணம் செய். அவர்களுடைய துயர் தீர்த்து அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்று. தாரக நாமம் சொல்பவரின் நடத்தையில் பாவ புண்ணியங்களை கவனியாதே. அவர்களுக்கு தாரக நாமத்தில் மேலும் ஊக்க மளித்து அவர்களைத் திருத்தி நல்வாழ்வு கொடுப்பாயாக'' என்று எனக்கு என் பிரபு அருள் செய்தார். ப்ரஹலாதஸ்வாமி! இது தான் ரஹஸ்யம். இதை நான் வெளியிலே பிரகடனம் செய்யாமல் எனக்கு பிரபு இட்ட கடமைகளை ஆற்றி*

வருகிறேன். தங்கள் மனதில் ஏற்பட்ட ஐயம் தீர்ந்து இருக்கும் - என நம்புகிறேன்.

பிரஹ்லாதன் நாரதரைப் பார்த்துக் கூறுகிறார்.

குருதேவ! இந்த ஆஞ்ஜநேயர் எத்தனை பெரியவர்? எனக்காக ஸ்தம்பத்தில் அவதாரம் செய்த பகவானிடம் இதைத் தான் நான் சொன்னேன்,

''ப்ரபோ! உலகில் என் தகப்பனார் ராஜ்யத்தில் முனிவர்கள் ஞானிகள் - எல்லோரும் எங்கே போய் விட்டார்கள்? தன்னைத்தவிர வேறு தெய்வமில்லை என்று அதிகாரம் செய்த - என் தகப்பனாரை நல்வார்த்தை சொல்லி இவர்கள் திருத்தி இருக்க வேண்டாமா? என் தந்தை இருக்குமிடம் நமக்கு வேண்டாம் - என்று இவர்கள் காட்டுக்குச் சென்றுவிட்டார்களே! தம்மை மேன்மைப் படுத்திக் கொள்ள வேண்டும். உலகம் எப்படிப் போனால் என்ன? - என்று நினைத்து தவம் செய்யப் போய் விட்டார்களே. ஆனால் எனக்கோ என் பிதாவின் பிரஜைகளான அப்பாவி ஜனங்களை ஹரி நாமம் சொல்லித் திருத்தாமல் - நான் தங்கள் திருவடிகளை அடையவிரும்பவில்லை - என்று பகவானிடம் விண்ணப்பித்தேன்

**ப்ராயேண தே$_3$வ முநய: ஸ்வ விமுக்தி கா$_2$மா:**

**மௌநம் சரந்தி விபிநே - ந- ப$_3$ரார்த்த$_2$ நிஷ்ட$_2$ா: ।**
**நைதாந் விஹாய க்ருபணாந்-ந- விமுமுக்ஷேஏக:**

அப்படி பிராத்தித்த நான் பாதாளத்தில் வந்து பிரபு என்னை ரக்ஷிக்க தனிமையில் ஹரி நாமம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். குருதேவ! ஹநுமான் எவ்வளவு பெரிய பக்தர்! நினைத்துப் பாருங்கள்''

''ப்ரஹ்லாதா அப்படியா சேதி? என் கண்களைத் திறந்துவிட்டாய். இதோ போகிறேன்'' என்று ப்ரஹ்லாதனிடம் விடை பெற்றுக் கிளம்பி நேரே கிம்புருஷ

வர்ஷம் வந்தார். அங்கு ராமனைப் பூஜை செய்து கொண்டு கந்தர்வர்களோடு கூடி ஆனந்தமாக நாம கீர்த்தனமும் ராமாயண பாராயணமும் செய்து கொண்டு விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்து கொண்டும் அவ்வப்போது பாரதவர்ஷதத்தில் ஸஞ்சாரம் செய்து ராமநாமம் சொல்கின்ற ஸாதுக்களையும் பாமரர்களையும் கவனித்து அவர்கள் விரும்பியதெல்லாம் நிறைவேற்றிக் கொண்டும் திரும்ப ஹேமகூடம் வருகிறார் - என்பதை நாரதர் தெரிந்து கொண்டார். ஹநுமான் பூஜிக்கின்ற ராமனையும் வணங்கி நாம கீர்த்தனம் செய்தார். நாரதர் கூறினார்.

''ஹநுமானே - நீ ஒருவனே லோகத்திலே பரம பாகவதன். தன் மேன்மையை மட்டும் கருதாது ஜனங்கள் அனைவரும் வாழ்வதற்காகவே உன் ஜீவனத்தின் ஒவ்வொரு கணத்தையும் ஸபலமாக்குகிறாயே என்று கொண்டாடினார்.

ஹநுமான் சொன்னார்.

''ஆண்டவன் இட்ட பணியைச் செய்து கொண்டு அந்த பகவத்ஸ்வரூபத்தை நேரே தர்சித்துக் கொண்டு அவருடைய கல்யாண குணங்களை பாடிக் கேட்டுக் கொண்டு இங்கே வசிக்கிறேன்''.

***தத்ராபச்யத் ஹநூமந்தம் ராமச$_{1}$ந்த்ர ப$_{3}$தாப்$_{3}$ஜயோ: |***
***ஸாக்ஷா தே$_{3}$வார்ச்சந ரதம் ஸு$_{3}$கந்த$_{4}$ துளஸீத$_{3}$ளை: ||***
***க$_{3}$ந்த$_{4}$ர்வா$_{3}$திபி$_{4}$ ராநந்$_{3}$தீ காயமாநம் ரஸாலயம் |***
***ராமாயணம் ச$_{1}$ ச்$_{4}$ருண்வந்தம் கம்பாச்$_{+}$ரு புல காஞ்சிதம்***
***த$_{3}$தாத$_{3}$தா ஸஞ்சரந்தம் பா$_{4}$ரதே வர்ஷ ஆ$_{3}$தராத் ||***
***ஸாதூம்ச்$_{+}$ ச$_{1}$ பாமராம் ச்$_{+}$ சைவ ராமநாம பராயணாந் |***
***ஸம்பூர்ய ஸகலாபீ$_{4}$ஷ்டை: க்ருதிநம்புநராக$_{3}$தம் ||***

***(ப்ருஹத் பாகவதம் 1.ப)***

சிரஞ்ஜீவிகள் என்று புகழ் பெற்ற எழுவரில் ஹநுமான் ஒருவரே சிரஞ்ஜீவியாக லோகோபகார நிஷ்டையோடு இன்றும் விளங்குகிறார்.

## 2. ஹநுமான் ருத்ரனின் அவதாரம்

ஸ்ரீராமாவதார காலத்திலேயே - ஹநுமான் ஒரு தெய்வமாகக் கொண்டாடப்பட்டார். ராமதாஸன், கேஸரிமைந்தன், அஞ்ஜநா புத்ரன் ஸுக்ரீவமந்திரி, வாநரன், மஹாவீரன், ராமனுடைய சரணஸேவையே தனது ஜீவிதலட்ச்யமாகக் கொண்டவர். ராம நாம ஜபத்திலேயே பரஹ்மாநந்தம் அடைபவர், பரம பாகவதன் என்பது தான் பெருவாரியாக எல்லாருடைய உள்ளங்களிலும் ஊறி நிலைத்திருக்கின்ற விஷயம்

ஆனால் ஹநுமானையே இஷ்ட தெய்வமாகக் கொண்டு - இவரை உபாஸித்து தமது கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொண்டனர் பலர். அதனாலே ஹநுமானே பரம்பொருள் என்ற அளவுக்கு மஹரிஷிகளுக்கே ஈடுபாடும் பக்தியும் பரவியது அதற்குச் சான்றுகள் தேட ஆரம்பித்தனர்.

மந்த்ர ராமாயணத்திலே - ஒரு மந்த்ரம்

**ஸஹஸ்ர தா$_4$ரே விததே பவித்ர**
**ஆவாச$_1$ம் புநந்தி கவயோ மநீஷிண:**
**ருத்$_3$ராஸ ஏவாமி ஷிராஸோ அத்$_3$ருஹ:**
**ஸ்பச$_+$: ஸ்வஞ்ச$_1$: ஸுக்$_3$ருபோ ந்ருச க்ஷஸ :**

நீலகண்டர் தமது பாஷ்யத்தில் இந்த மந்த்ரத்தை இவ்வாறு விளக்குகிறார். எங்கும் நிறைந்திருக்கிறார். அவர் சந்த்ர கிரணங்கள் ஊடியிருக்கின்ற புலன்களால் அறியப்பட்டு ஞான வடிவமாக -ஓயாத ப்ரவாஹமாக நிறைந்திருக்கிறார் அந்த மஹாவிஷ்ணு பரிசுத்தமானவர். அவரை உணர்ந்த : புலனறிவுக்கு அப்பாற்பட்ட பேரறிவாளர்கள் கவிகளாகி தமது வாக்கை பரிசுத்தப்படுத்திக் கொள்கிறார்கள். பகவானுடைய அநந்த கல்யாண குணங்களைப் பாடி பேரின்பம் அடைகிறார்கள்.

சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்த ''தாரஸாரோபநிஷத்தில் ஓம் -என்ற ப்ரணவத்திற்குப் பொருள் இவ்வாறு கூறப்படுகிறது.

*ஓமிதி ப்$_3$ரஹ்ம ப$_4$வதி$_1$ நகாரோ விஷ்ணுர் ப$_4$வதி*
*மகா ரோ -ருத்ரோ ப$_4$வதி*
*மகாராக்ஷரஸம் பூ$_4$த: சிவஸ்து ஹநுமாந் ஸம்ருத:*

ஓம் நமோ நாராயணாய - என்ற எட்டெழுத்து மந்த்ரத்தில் -ஓம் என்றால் பரம்பொருள் பிரஹ்மம் - ந= என்றால் விஷ்ணு ம = என்றால் ருத்ரன் அந்த மகாரத்திலிருந்து ஹநுமான் பிறந்தான்.

இவர்களிடையே ருத்ரர்கள் (மரியாதையை குறிக்கின்றது பன்மை) ஹநுமான் அவர்கள் உட்கருத்தாகப் புகுந்து. (அவர் நாராயணன் நான் சிவன் என்பதில்) பகையுணர்ச்சி இன்றி துப்பு (ஸீதை எங்கே இருக்கிறாள் என்று) கண்டுபிடிப்பவராக எங்கும் புகுந்து புறப்படக் கூடிய திறனுடையவராக நுட்பமான பார்வையுடன் மாமனிதனான ராமன் தேடுகின்ற பார்வையாகிய ஸீதாதேவியை கண்டார்.

*க்ருச$_+$ாநு மஸ்த்ரூந திஷ்யம் ஸாத$_4$ஸ்த$_2$ஆ*
*ருத்$_3$ரம் ரு$_3$த்ரேஷு ருத்$_3$ரியம் ஹவாமஹே ||*

இதற்கு நீலகண்டரின் பாஷ்யம் இவ்வாறு- பிரஹ்மாண்டத்தையே ஆக்ரமிக்கக் கூடிய சக்தியுடையவர் ருத்ரன் ஹநுமான். அவருக்கு சத்ருக்களை அழிக்கும் உற்சாகம் ஊட்டுவதற்காக ஹோமம் செய்வோம்.

பரமாத்மாவான நாராயணன் சிவவடிவமே மகாரத்தின் பொருள். அவர் தான் ஹநுமான். இவ்விதம் வேதத்தில் ஹநுமான் ருத்ரனின் அவதாரம் என்பதற்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன.

பல புராணங்களில் ஹநுமான் ருத்ரனுடையவே அவதாரம் என்பதற்கு சரித்ரங்களே கிடைக்கின்றன. ஒவ்வொன்றிலும் சிற்சில மாறுதல்களும் உள்ளன.

*சிவமஹாபுராணம்*

*ச$_+$தருத்ரஸம் ஹிதை. அ21*

*ஏகஸ்மிந் ஸமயே சம்பு: அ$_3$த்புத: அதிகர: ப்ரபு: ।*

*த$_3$த$_4$ார மோஹிநீ ரூபம் விஷ்ணோ: ஸஹி லஸத்கு$_3$ண: ॥*

*ஸங்கீர்ய பாதயாமாஸ ராமகார்யார்த்த மாத$_3$ராத் ।*

*தத்வீர்யம் ஸ்தாபயமாஸு: பத்ரே ஸப்தர்ஷயச்$_+$சதே ।*

*கர்ணத்வாரா தத$_2$ாஞ்ஜந்யாம் ராமகார் யார்த் த$_2$மாஹிதம் ॥*

*ததர்ச$_+$ஸமயே தஸ்மாத் ஹநுமாநிதி நாமபா$_4$க் ।*

*ச$_+$ம்புர்ஜஜ்ஞே கபிதநு: மஹாப$_3$லபராக்ரம: ॥*

பரமேச்வரன் ஆச்சரியமானவர். எதையும் மிகைப்படுத்தியே செய்ய வல்லவர். அவர் ஒரு சமயம் விஷ்ணுவினுடைய மோஹிநீ வடிவத்தைக் கண்டார் '' அந்த வடிவம் அஸுரர்களையும் தேவர்களையும் மட்டும் உள்ளம் கிறக்கவில்லை. தன்னையே கிறங்கவைத்து தடுமாறச் செய்தது- என்றால் தான் மோஹிநி அவதாரத்தின் பெருமை கூடும் - என்று நினைத்தார். சிவன் அப்படி நடித்தார். அவருடைய என்றுமே தளராத வீர்யத்தை - தளர்த்திக் கொண்டார். மன்மத லீலைக்கு உட்பட்டது போல.

வீர்யம் நழுவியது. இதைக் கண்டு கொண்டிருந்த ஸப்தருஷிகள் எழுவரும் அந்த வீர்யத்தை ஒரு புரசஇலைத் தொன்னையில் ஏந்தினர். பரமேச்வரன் அவர்களுடைய உள்ளத்திலே புகுந்து ஏவினார். இது ராமனுடைய அவதாரத்திற்கு உபயோகப்படட்டுமே. அதோ கௌதம முனிவரின் புதல்வி அஞ்ஜனை மலைச்சிகரத்தில் உல்லாஸமாகக் காற்று வாங்குகிறாள். அவளுடைய காதிலே இந்த வீர்யத்தைப் பெய்து விடுங்கள்''.

அவர்களும் அவ்விதமே செய்தனர். ஆகவே அவளிடம் ஹநுமான் என்ற பெயருடன் ருத்ரன் அவதரித்தார். வானர வடிவத்தில் இவருக்கு மிகுந்த பராக்கிரமம் உண்டு.

**சிவபுராணம் 3வது கண்டம்.**

*பரம சிவன் எட்டுப்பெயர்களுடன் எட்டு மூர்த்திகளாக விளக்குகிறார்.*

| | |
|---|---|
| *1. ச$_{+}$ர்வ:* | *மண் ஆக* |
| *2. ப$_{4}$வ:* | *நீர்* |
| *3. ததா$_{2}$ருத்$_{3}$ர:* | *அக்நி* |
| *4. உக்$_{3}$ர:* | *ஆகாயம்* |
| *5. பீடிம:* | *வாயு* |
| *6. பசுபதி:* | *ஸூர்யன்* |
| *7. ஈச$_{+}$ாந:* | *சந்த்ரன்* |
| *8. மஹாதேவ:* | *யஜமானன் (யாகம் செய்பவர்) ஆக* |

*எட்டுப்பெயர் கொண்ட எட்டு மூர்த்திகள்*
*இவர்களில் மஹாதேவன் என்ற யஜமானன் - தான் ஹநுமான்*

***ஹநுமாநப$_{4}$வத் தேஷு மஹாதேவ: இதி ப்ரதா***

***இப்படி எட்டு வடிவங்களில் ப்ரத்யக்ஷமாக*** *விளங்குகின்ற பரமேச்வரன் நம்மைக் காப்பாற்றட்டும் - என்று வேண்டுகிறான் காளிதாஸன். தனது அபிஜ்ஞான சாகுந்தல நாடகத்தின் மங்கள ச்லோகத்தில் இதையே கூறுகிறார்.*

*ருக்ஸம்ஹிதை ஆறாவது மண்டலத்தில்*
*66வது ஸூக்கம் மந்த்ரம்3*

***ருத்$_{3}$ரஸ்ய யே மீடுஷ: புத்ர:***
*புகழ் பெற்ற ருத்ரருடைய புத்ரர்.*

---

*(தியாகராஜ ஸ்வாமியும் தமது ஆடமோடி கலதா — என்ற சாருகேசி க்ருதியில் சரணத்தில் ச$_{+}$ங்கராம்சு$_{+}$டைஸதயுடு ஆசு+க3ஸம்பவுண்டு சங்கரரின் அம்சமான — கிருபையுடைய வாயுகுமாரன் என்று அப்பட்டமாக ஹநுமானைக் குறிப்பிடுகிறார்.)*

**தே$_3$த் மாஹி ருத்$_3$ரியாணாம் ச$_+$ஷ்மமுக்ரம் மருதாம்**

ருத்ரர்களின் புத்ரர்களான மருத்துக்களின் சக்தி உக்ரமானது. ருத்ரருடையவும் வாயுவினுடையவும் புத்ரன் ஹநுமான் என்பது பொருந்துகிறது.

ஸ்ரீவித்யார்ணவம் என்ற மந்த்ர சாஸ்திரத்தில் (28/அ)

**த$_4$ாரணாசல ச$_+$ஸ்தராய த்$_3$ரும ச$_+$ஸ்த்ராய தேநம:**
**பா$_3$லைகப்$_1$ரஹ்மச$_1$ர்யாய ரு$_3$த்ர மூர்த்தி த$_3$ராய ச$_1$**

கரடுமுரடான பர்வதத்தையும் பெரிய மரத்தையும் ஆயுதமாகக் கொண்டவர். இளமையிலேயே பிரம்மசாரியாக உறுதியாக இருக்கின்றவர். ருத்ரனே இந்த வடிவத்தில் தோன்றியவர் ஹநுமான். அவருக்கு நமஸ்காரம் - என்ற மந்த்ரம் உள்ளது.

மந்த்ரம ஹார்ணவம் - என்ற நூலின் முன் பகுதியில் ''
**ஓம் ருத்ர மூர்த்தயே சி$_+$ரஸே ஸ்வாஹா -**

ஐந்து வகை பூஜா மந்த்ரமாக ஹநுமான் மந்த்ரத்தில் வருகிறது.

**ஹம்ஹநு மதே ருத்ராத்மகாய ஹூம்பட்**

என்று வெளிப்படையாகவே - ருத்ர ரூபியான ஹநுமான் என்றும் சொல்லப்படுகிறது.

**ஓம்நமோ ப$_4$க$_3$வதே ருத்$_3$ராய**
**ஸர்வ பூ$_4$தாத்மநே ஹநுமதே ஸர்வாத்ம ஸம்யோக$_3$**
**ப$_3$த்ம பீடா$_2$த்மநே நம:**

எல்லா வஸ்துக்களிலும் நிறைந்திருப்பவர் எல்லா ஜீவன்களையும் ஸமஷ்டியாகத் தனக்கு ஆஸநமாகக் கொண்டவர் ஹநுமான் என்கிறது.

புராணங்கள் பலவற்றில் ஹநுமான் ருத்ராம்சம் பெற்றவர் என்ற குறிப்பு கிடைக்கிறது. ப்ருஹத்தர்ம புராணம் என்ற நூலில் பின் வரும் விஷயம் சொல்லப்படுகிறது.

சிவபக்தனான ராவணனுடைய திருப்திக்காக பார்வதீ பரமேச்வரர்கள் - கைலையிலிருந்து வந்து ஸ்ரீலங்காவில் த்ரிகூட சிகரத்தில் கோவில் கொண்டனர். ராவணன் ஸீதா தேவியிடம் அபசாரப்பட்டது பொறுக்காமல் பார்வதீ தேவி இங்கிருந்து போய்விடுவோம்'' - என்று சிவபெருமானை வேண்டினாள். சிவபெருமானும் அதற்கு இணங்கினார். - தேவி - பாரத பூமியின் குமரிமுனையில் கன்னிகையாகக் கோவில் கொண்டாள் - பரமேச்வரன் ஹநுமானின் ஸ்வரூபத்தில் ஆவேசித்து விட்டார்.

வாயு புராணமும் ஹநுமான் ருத்ரரின் அம்சம் என்று கூறுகிறது. இந்த விஷயத்தை ஹநுமானுடைய சரிதத்தில் விஸ்தாரமாகச் சொல்வோம்.

ஹநுமானே ஸ்ரீராம சரிதத்தை ஒரு நாடகமாக எழுதியிருக்கிறார். அதற்கு ''ஹநுமன் நாடகம்'' என்று பெயர். அதில் ஒரு காட்சி.

ராவணன் தனது மந்த்ரி சபையில் ஆலோசனை நடத்துகிறான். அப்போது விபீஷணன் சொன்னார். ஹநுமான் ருத்ரனுடைய அவதாரம். ராமனாவது பொறுமைசாலி. நியாயப்படி தூது அனுப்பியிருக்கிறார். ஆனால் தூது வந்த ஹநுமானோ ருத்ரனே. அவர் தங்களுடைய அக்கிரமச் செயலைப் பொறுத்துக் கொள்ளமாட்டார் அழித்தேவிடுவார்'' அப்போது ராவணன் கூறினான்.

**யத்யயம் ருத்ரோ மாருதி : -தர்ஹி கிமிதி ருத்$_3$ர**
**ப$_4$க்தஸ்ய மே நக$_3$ரீம் த$_3$ஹதி**

இந்த ஹநுமான் ருத்ரன் ஆனால் -ருத்ரபக்தனான என்னுடைய நகரத்தை ஏன் அழிப்பார்?

யாரும் பதில் சொல்லவில்லை. மஹாபுத்திசாலியான ராவணனே கூறுகிறான்.

''எனக்கு பத்து தலைகள் தான். ருத்ரர்களோ பதினொன்று பேர்கள். பத்து தலைகளின் வாய்களால் - பத்து

ருத்ரர்களை துதிக்கிறேன் பதினொன்றாவது ருத்ரனான மஹாதேவனுக்கு நான் அவரை துதிக்காததால் என்மேல் கோபமோ? அவர் தான் ஹநுமானாக அவதாரம் செய்திருக்கிறாரோ! அவர் அழித்துவிடுவாரோ?

அது தகாதுதான். ஒரு வரிசையில் உள்ளவர்களை - மரியாதை செய்யும் போது -ஒருவரை ஒதுக்கிவிடுவது உசிதமில்லை தான்.

***துஷ்ட: பிநாகீ த$_3$சபி: சி$_+$ரோபி:***
***ஸ்துதோ-ந சை$_1$ கா$_3$த஽சகோ ஹிருத்$_3$ர: ।***
***அதோ ஹநுமான் த$_3$ஹதீதி கோபாத்***
***பங்க்தேர் ஹி பே$_4$த$_3$: நபுந: சி$_4$வாய ॥***

ராமன் கும்பகர்ணனுடன் போரிட்ட போது அதனிடையே ஹநுமான் எங்கிருந்தோ பாய்ந்தார். ராமனும் லட்சுமணனும் அதிர்ச்சி அடைந்தனர். வந்து குதித்தவர் - ஸாக்ஷாத் பரமசிவனோ அல்லது நரஸிம்ஹரோ?

***ஆலக்ஷிதோ ரகு$_4$ வரேண ஸலக்ஷ்மணேந***
***காலாந்தகாதி$_3$வ ரிபோ : பரிச$_+$ங்கிதேந ।***
***ஸ்தா$_2$நம் ஜக$_3$ாம ஹநுமான் ஸமரே஽$_+$வதீர்ய***
***மாஹே ச$_+$ உக்$_3$ரநரஸிம்ஹ இவாருணாக்ஷ: ॥***

ராமனே -ஹநுமானை ருத்ராம்சமாகவே கருதினார் - என்பதற்கு இதோ சான்று.

விஷ்ணு தர்மோத்தரம் என்ற புராணத்தில் ஒரு வியக்கத்தக்க விருத்தாந்தம் கிடைக்கிறது.

ஸ்ரீராமன் தம்பி லட்சுமணனுடன் ஸீதையை மீட்பதற்காக - பெரிய வாநரஸைன்யத்துடன் கடற்கரை வந்து சேர்ந்தார்.

***ஸமுத்ர தீரமாஸந்ந : ராம: ஸௌமித்ரிணா ஸஹ ।***
***தாலோச்ச நீர கல்லோலை: ஸ்பர்த$_4$ மாநாஸ்து வாநரா: ॥***
***உத்பேதுர் யுக$_4$பத் ஸர்வே ராம ராமேதி க$_4$ர்ஜநை: ॥***

பனைமர உயரம் கிளம்பிய கடல் அலைகளுடன் போட்டி போட்டுக்கொண்டு வாநரர்கள் அனைவரும் ஒருங்கே ராம ராம என்று கர்ஜனம் செய்து கொண்டு ஆகாயத்தில் எம்பினார்கள். இந்த கோஷத்தைக் கேட்டு கடல் கூட அடங்கி அலை வீசியது. மஹேந்த்ர மலையிலும் - மற்றும் காடுகளில் மரங்களின் கிளைகளிலும் பாய்ந்து குதித்துக் கொண்டிருந்த வாநரர்களை ஹநுமான் ''ஜயஸ்ரீராம'' - என்று ஒரு கர்ஜனையினால் அமைதியாக அமர்த்தினார். ராமன் லட்சுமணனுக்கு காட்டுகிறார். இதோ ஆஞ்ஜநேயன்''.

லட்சுமணன் - இதோ பாருங்கள் ஆஞ்ஜநேயன். ராமன் - மலைமேலே பார் ஆஞ்ஜநேயர்.

லட்சுமணன் - அந்த தேவதாரு மரத்தின் உச்சியில் பாருங்கள் ஆஞ்ஜநேயன்''

கோடிக்கணக்கான வாநரர்களை ஒரு கணத்தில் அடக்கி - அமைதிப்படுத்திய ஆஞ்ஜநேயர் ராம பிரான் அருகில் வந்து கைகட்டி வாய் புதைத்து நின்றார்.

''ஹநுமந்தா - இத்தனை கோடி வாநரர்களை ஒரு கர்ஜனையில் அடக்கிவிட்டாயே!

''ப்ரபோ! அது தங்கள் திருநாமத்தின் மஹிமை. ஒவ்வொரு வாநர வீரனும் தங்கள் திருநாமம் கற்று தமது பராக்ரமத்தை இழக்காமல் அடக்கத்தைக் கற்றுக்கொண்டு விட்டார்கள். இரண்டும் அவர்களுக்குக் கைவந்த கலை. பிரபுவின் அடுத்த ஆணைக்குக் காத்திருக்கிறேன்.''

''ஹநுமந்தா! இவர்களுக்கு எல்லாம உணவுக்கு என்ன வகை செய்திருக்கிறார் ஸுக்ரீவமஹாராஜா?

''ப்ரபோ! தண்டகவனத்து தவசீலர்களான மஹரிஷிகள் எல்லோரும் அணிமா யோக மஹிமையினால் தம்மை மறைத்துக் கொண்டு அனைத்து வாநரர்களுக்கும்

தேவையான அவரவர் ப்ரியப்பட்ட உணவுகளை அவர்களுடைய வாய்களில் ஊட்டிவிடுவார்கள்.

''யார் செய்த ஏற்பாடு இது?

''தங்கள் திருநாம மஹிமை தான்.

''ஹநுமந்தா! உன்னைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

''வாநரன் தானே ! இதனுடைய சேஷ்டையை யாராவது கணிசிப்பார்ப்பார்களா!''

ராமன் சிரித்தார்

லட்சுமணன் ''ஸந்த்யாகாலம் வந்து விட்டதே''

ஹநுமான் விலகினார்.

ராமனும் லட்சுமணனும் சற்றுத்தள்ளி - கடலில் வந்து கலக்கின்ற சிற்றோடையில் இறங்கி மாலைக் கடன்களை முடித்துக் கொண்டு திரும்பினார்கள். அதற்குள் ஹநுமான் ஒரு சிறு மணல் குன்றின் மேல் தளத்தை மிதித்து - சமதரை ஆக்கி அங்கு மிருதுவான இலைகளைப் பரப்பினார். மெதுவாக சந்த்ரோதயம் ஆயிற்று - ஹநுமான் கொண்டு கொடுத்த கனிகளை உண்டு ராம லட்சுமணர்கள் அமர்ந்தனர். ஹநுமான் அகன்றார்.

''லட்சுமணா! இந்த ஹநுமானைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

''ப்ரபோ! எனக்கு ஒரு நிச்சய புத்தி உண்டு. மாருதி பரமேச்வரனுடையவே அவதாரம் தான். நம் தகப்பனார் பண்ணின புண்ணியம் - நமக்கு இந்த ஹநுமானின் உதவி கிடைத்திருக்கிறது.

''மைதிலியை எங்கே தேடுவோம்? புலன் தெரியுமா?'' என்று கதிகலங்கிக் கொண்டிருந்த நம்மை - தானே வந்து அணுகுகிறானே? பரமேச்வரன் - நம்மிடம் எவ்வளவு க்ருபை செய்திருக்கிறார்?

''லட்சுமணா! அப்படியானால் நாம் மாருதியை யாரோ ஏவலாளி போல நடத்துக்கிறோமே- அது உசிதமா?''

''அண்ணா! தங்களுக்குத் தெரியாததை நான் சொல்லவில்லை நமக்குக்காரியம் ஆக வேண்டும். அதற்கு மாருதியின் உதவி நமக்கு வேண்டும். அவர் பரமேச்வரன் தான்- என்பதை நாம் புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொண்டால் அதை அவர் ஏற்க மாட்டார். பரமேச்வரனுக்கு என்ன காரணமோ! நம்மிடம் அலாதி ப்ரீதி இருக்கிறது. அதை ஸேவா தர்மத்தின் மூலம் அணுகி த்ருப்தி அடைகிறார். ஸந்தோஷப்படுகிறார். அது அவருடைய லீலை. அந்த லீலையில் தலையிடுவதற்கு நமக்கு உரிமையில்லை. அவருடைய கைங்கர்ய ஆநந்தத்திற்கு நாம் ஈடு கொடுப்பதுதான் முறை.

''ஆனால் லட்சுமண! எனக்கு அவரை பூஜிக்க வேண்டு மென்று தோன்றுகிறது.''

''அவரை நீங்கள் பூஜிப்பதா? அவர் கண்ணிலே அகப்படாமல் ஓடியே போய்விடுவார்.''

''லட்சுமண! நீயோ ஹநுமானை பரமேச்வர அவதாரம் என்கிறாய் - அந்தப் பரமேச்வரன் நித்ய வாஸம் பண்ணுகிற ஒரு பாண லிங்கத்தை ப்ரதிஷ்டை பண்ணி அதில் ஹநுமானை த்யானம் செய்து பூஜிக்கலாம் என்று நினைக்கிறேன். இப்படி ஏதாவது செய்தால் தான் ஏற்கனவே தேவியைப் பிரிந்து கஷ்டப்படுகிற மனதிற்கு சாந்தி ஏற்படும். - நான் செய் நன்றி உடையவனாக ஆவேன்.

லட்சுமணன் கூறினான் ''ப்ரபோ- தங்கள் இஷ்டம்''

ஹநுமான் ஸேனைகளைப் பங்கீடு செய்து - ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி விட்டு ராமனிடம் வந்தார். அவருக்கு கடைசியில் ராமன் சொன்னது காதில் விழுந்தது.

ப்ரபோ! இப்படி ஏதாவது செய்தால் தான் என் மனது சாந்தியடையும் - என்று சொன்னீர்களே அப்படி தங்களுக்கு

சாந்தியை அளிக்கக் கூடிய காரியம் என்ன ? தாஸனுக்குத் தெரிவித்தால் உடன் அதை நிவேற்றிவைக்கிறேன்.

''ஹநுமந்தா! உன்னிடம் சொல்லாவிட்டால் அது எப்படி நிறைவேறும்? சொல்கிறேன்.''

நான் கடலைத் தாண்டுவதற்கு முன் இவ்விடத்தில் பரமேச்வரனைப் பூஜிக்க விரும்புகிறேன். அதற்கு - ஒரு பாணலிங்கம் வேண்டும்.''

''என்ன ஹநுமந்தா! யோஜிக்கிறாய். உன்னால் கொண்டுவரமுடியாதா?''

''ப்ரபோ! தங்கள் ஆணையே எனக்கு பலம். தாங்கள் கோதண்டத்திலிருந்து விடுகின்ற அம்பு தான் இவன். இந்த அம்புக்கு முடியாதது உண்டா?

''பின் என்ன தயக்கம்?''

''என் குருநாதன் ஸூர்ய பகவான் சொல்லிக் கொடுத்த பாடம் நினைவுக்கு வந்தது. பிரஹ்மா சிவன் முதலிய தேவர்களின் பிரார்த்தனைக்கு இணங்க ஸ்ரீமந் நாராயணனான தாங்கள் இக்ஷ்வாகு குலத்தில் அவதரிக்கப் போகிறீர்கள். மஹாபிரளயத்தில் கூட அழியாத படி - தன் சூலத்தின் முனையிலே தூக்கி காக்கப்பட்ட க்ஷேத்ரம் காசி. அந்தக் காசி க்ஷேத்ரத்தில் ஸாக்ஷாத் விச்வநாதன் - கங்கைக்கரையில் அமர்ந்து இருக்கிறார். ஒருவன் எவ்வளவு பாபம் புரிந்திருந்தாலும் - ஞானமோ பக்தியோ வைராக்கியமோ இல்லாதவனாக இருந்தாலும் -கங்கையில் மூழ்கி எழுந்தவன் காதில் - எந்தத்தாரக நாமத்தை உபதேசித்து நேரே மோக்ஷத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறாரோ, தானும் அதையே விசாலாக்ஷி தேவியுடன் அமர்ந்து ஜபித்துக் கொண்டிக்கிறாரோ அந்தத்தாரக நாமமான- ராம என்ற பெயரை இக்ஷ்வாகு குலத்தில் உதித்த தங்களுக்கு வஸிஷ்ட பகவான் வைத்துவிட்டார். தான்ஜபித்து வந்த ராம என்ற பெயரை உடைய தங்களையே என்றும் தியானம் செய்து

*கொண்டிருக்கிறார்- இவ்வாறு என் குருநாதர் உபதேசித்தார். அந்தப் பரமேச்வரனையா தாங்கள் பூஜிக்கப் போகிறீர்கள்? - என்று சற்றுத் தயங்கினேன். வேறொன்றுமில்லை.''*

*''ஹநுமந்த! பரமேச்வரன் விச்வநாதன். விச்வம் என்றால் அகில பிரபஞ்சம். அதற்கு நாதன் அவர். அவர் தன் பரமக்ருபையில் ஏதோ ஒன்று செய்கிறார் என்றால் அவருடைய இஷ்டம் அது. விச்வ நாதன் உலகில் அடங்கிய எனக்கும் நாதன் தான்! ஒரு பெரிய காரியத்தில் இறங்கும் போது நான் அவரைப் பூஜிக்க வேண்டாமா?''*

*''ப்ரபோ! தாங்கள் புருஷோத்தமன். தங்கள் உள்ளத்தின் ஆழத்தை - விஸ்தாரத்தை - நான் கணிக்க முடியுமா?''*

*ஹநுமந்தா - நாளை ரவிவாரம் உச்சிவேளை அபிஜித் முஹுூர்த்தம். அந்த வேளையில் லிங்கத்தை பிரதிஷ்டை செய்ய வேணும்.*

*''இதோ கிளம்பிவிட்டேன் நேரே கைலாஸம் போய் கைலாஸ பதியிடமிருந்தே லிங்கம் வாங்கி வருகிறேன்.*

*''கைலாஸமா?*

*''ப்ரபோ! கலங்க வேண்டாம் தங்கள் பெயர் சொல்கின்ற எனக்கு மநோஜவன் - என்ற பெயரை மஹரிஷிகள் வைத்திருக்கிறார்கள். மனது ராம - என்று ஒருமுறை சொல்கிற நேரத்தில் நான் கைலை சேர்வேன். பரமேச்வரனுடைய தரிசனம் கிடைப்பதில் தாமதமாகலாம். ஆசு$_+$தோஷர் உடன் சந்தோஷப்படுபவர் அவர். என் கோரிக்கை நிறைவேறிவிடும். உடன் திரும்பிவிடுவேன். தங்கள் நாம பலம் இதைச் சாதிக்கும்,*

***மனோஜவோ யம் கதி$_2$தோமுநீந்த்$_3$ரை:***
***அவாப் நுயாம் ராஜதபர்வதம் க்ஷணாத்।***
***விலம்ப ஈஷத் ப$_4$வத$_4$ர்ச$_+$நே ஸ்யாத்***
***அபீ$_4$ஷ்டமாஸாத்$_3$ய நிவர்த்த ஏவம்॥***

*ஹநுமான் கிளம்பிவிட்டார்.*

*‘‘லட்சுமண! பார்த்தாயா ஹநுமானை? எவ்வளவு இங்கிதம்? கவனித்தாயா? நம்மை பரமேச்வரனாக பாவித்து பிரபு பூஜை செய்வதாவது? என்று நினைக்கிறான். அதே சமயம் தான் கிங்கரன் எஜமான் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசுவதாவது! என்று தயங்குகிறான். எவ்வளவு ஜாக்கிரதையாகத்தான் ருத்ரன் தான் என்பதை மறைத்துக் கொள்கிறார் பார்த்தாயா?*

*மறுநாள் காலை - கடற்கரையில் ஒரு விஸ்தாரமான சதுர நிலத்தை. சமப்படுத்தி - மத்தியில் ஒரு சிறு மேடை அமைத்தார் லட்சுமணன்.*

*ராமன் ஸந்த்யா ஜபங்களை முடித்துக் கொண்டு காத்திருந்தார்.*

*ஆஞ்ஜநேயர் பொழுது விடியுமுன்பே மாநஸஸரஸ்ஸில் ஸ்நாநம் செய்து விட்டு - கைலாய பர்வதத்தின் உச்சியில் அமைந்த பார்வதீ பரமேச்வரர்களின் ஆஸ்தான மண்டபவாசலில் மார்க்கண்டேயர் வாம தேவர் முதலிய ருஷிகளும் இந்திரன் முதலான தேவர்களும் - விச்வ ரூபதர்சனத்திற்காக காத்திருக்கின்றபோது அவர்களுடன் சேர்ந்து கொண்டார்.*

*அதிகார நந்திகேச்வரர் வந்து மணிக்கதவம் தாள் திறந்தார். வசிநீ முதலான வாக் தேவதைகள் மங்கள ஹாரதி எடுத்தனர். பார்வதீ பரமேச்வரர்கள் தர்சனம் மளித்தார்கள்.*

*மஹர்ஷிகள் எல்லாரும்* ***நம: ஸோமாய ச ருத்$_3$ராயச*** *என்று வேத கோஷம் முழங்கினர்.*

*கூட்டத்தின் கடைசியில் நின்று கொண்டிருந்த ஹநுமான் மீது பகவானின் கடாட்சம் வீழ்ந்தது. அதை கவனித்த நந்திகேச்வரர் ஹநுமானை அழைத்து கைலாக்கு கொடுத்து பரமேச்வரன் முன்னே நிறுத்தினார்.*

பகவான் மற்றவர்களுக்கு தலையசைத்து அனுமதி அளித்துவிட்டு - ஹநுமானுடனும் தேவியுடனும் உள்ளே சென்றார்.

''வாயுகுமார! ஶ்ரீராமன் ஸந்நிதிவிட்டு என்னை வந்து பார்க்கவும் உனக்கு நேரம் கிடைத்ததா?

''பிரபுவின் ஆஜ்ஞை எனக்குத் தங்களுடைய இந்த தரிசன பாக்யத்தை அளித்தது.''

''பிரபுவின் ஆஜ்ஞையா? என்ன அது?

''பிரபு பாரத பூண்ய பூமியில் வடக்கு எல்லையில் வீற்றிருக்கின்ற தங்களுக்கும் பிராட்டிக்கும் தக்ஷிண எல்லையில் கோயில் அமைத்துப் பூஜை செய்ய விரும்புகிறார். அதற்கென ''தாங்கள் கரகமலங்களால் தொட்டு சைதன்யம் அளித்த லிங்கஸ்வரூபம் ஒன்றை வேண்டிப் பெற்று வர'' என்னை அனுப்பியிருக்கிறார்:

பரமேச்வரன் தேவியைத் திரும்பிப் பார்த்தார். ஹநுமான் இங்கிதமாக பின் வாங்கினார்.

''தேவி! ஶ்ரீராமனுடைய திருவுள்ளத்தில் நம்மிடம் எவ்வளவு ப்ரேமை! தேவியைப் பறி கொடுத்து துயரம் தாளாமல் தவிக்கின்ற நேரத்திலும் நம்மைப்பற்றிய சிந்தனை அவருக்கு''

தேவீ சொன்னாள் ''தாங்கள் இங்கும் தக்ஷிணாமூர்த்தியாக உட்கார்ந்து அவருடைய அடிச்சுவட்டையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். தாங்களோ ஞான மூர்த்தி. தங்களை நினைத்தால் தான் மன உளைச்சல் தீர்ந்து மனது அமைதியாக ப்ரஹ்மஸ்வருபத்தில் லயமடையும் என்பது அவருக்குத் தெரியாதா?

''அவர் நம்மைப் பூஜிக்க விரும்புகிறாராமே!''

''அவரோ துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறார். நீங்களோ ப்ரணதார்த்திஹரர் (வணங்குபவனுடைய துயரத்தை

போக்குபவர்)அவர் தங்களைப் பூஜை செய்ய விரும்புவதில் என்ன தவறு?

''பாலா லீலாவிநோதினியான தேவி நீ இப்படித்தான் பேசுவாய்? என் மனது படுகிறபாடு உனக்கென்ன தெரியுமா?''

''ப்ரபோ! நான் விளையாட்டாகப் பேசவில்லை. ஸத்யத்தைத்தான் பேசுகிறேன். உலகமாந்தருக்கு தமது அநுஷ்டானத்தினால் வழிகாட்டுகிறீர்கள் நீங்களும் நாராயணனும்! நீங்கள் அவருடைய திருநாமஜபம் செய்கிறீர்கள். பரமேச்வரனே தாரக நாமம் ஜபிக்கிறார். நாமும் ஜபிப்போம் என்று ஜனங்கள் செய்கிறார்கள். பிரபு ராமச்சந்ரன் பாரத பூமியின் தக்ஷிண எல்லையில் உங்களுக்கு வடநாட்டு மக்கள் கங்கா தீர்த்தம் எடுத்துக்கொண்டு தென்எல்லை சென்று உங்களுக்கு அபிஷேகம் செய்ய வேண்டும் என்று வழிகாட்டுகிறார். இவையெல்லாம் லோக க்ஷேமார்த்தமாக நீங்கள் செய்கின்ற லீலைகள். அர்த்தமில்லாத பயனற்ற விளையாட்டு அல்ல. அர்த்தமுள்ள வைதிக தர்மம்''

அந்தப்புர வாசலில் காத்திருக்கின்ற ஹநுமான் மென் குரலில் ராம நாமம் சொல்ல ஆரம்பித்தவர் - நேரம் ஆக ஆக அவரறியாமல் உரத்த குரலில் சொல்லிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்.

அது உள்ளே தேவியின் காதில் விழுந்தது.

''ப்ரபோ -ஹநுமான் வெளியே நேரம் ஆகிறதே என்று துடித்துக் கொண்டிக்கிறான். அவன் வேண்டியதை அருளுங்கள்''

''தேவி! நீ என்ன சொல்கிறாய்? ராமன் இஷ்டம் என்னை பூஜிக்க வேண்டும் என்று. அதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. அதை நானே அநுமதித்து அதற்காக என் கையிலேயே லிங்கமூர்த்தியை அனுப்புவது உசிதமா?''

''ப்ரபோ! நீங்கள் ஒரு நாள் நான் பொய்க் கோபம் காட்டிய போது லீலையாக - என் கால்களைப்பிடித்து தலை வணங்கினீர்கள். அது தங்கள் லீலை என்று புரிந்து கொண்டு. இதைக்கண்டு சிரித்தேன். நீங்களும் சிரித்தீர்கள். நினைவு இருக்கிறதா? அது போலத்தான் இதுவும். இனித்தாமதம் இல்லாமல் -லிங்கமூர்த்தியை அனுப்புங்கள்.

**அபிஜிந் முஹூர்த்தம் சிலநொடிகள் மீதமிருக்கும் நேரத்தில் - ஹனுமான் லிங்க மூர்த்தியைப் பெற்றுக் கொண்டு பறந்தார்.**

கடற்கரையில் ஸ்ரீராமன் ஹநுமான் வரவுக்காகக் காத்திருந்த முஹூர்த்தத்தின் கடைசி நொடிகளில் - மணலைத் தண்ணீரில் பிசைந்து - தன் இரு கரங்களாலும் கெட்டியாகப் பிடித்தார். ஸ்ரீராமன் திருவுள்ளமோ- பரமேச்வரன் திருவுள்ளமோ மணல் லிங்கம் கெட்டிப்பட்டுவிட்டது.

ராம நாதரை ஸ்ரீராமன் கடற்கரையில் பிரதிஷ்டை செய்து பூஜை பண்ணிக் கொண்டிருந்தார்.

ஹநுமான் லிங்கத்துடன் வந்து சேர்ந்தார். பூஜையின் இடையே கையை நீட்டி ஸ்ரீராமன் ஹநுமான் கொண்டு வந்த லிங்க மூர்த்தியை ஏந்தி மார்போடு அணைத்துக் கொண்டார். ஹநுமான் மெய் சிலிர்த்து நின்றார். சுயநினைவுக்கு வருவதற்கு அவருக்கு வெகு நேரம் ஆயிற்று. நினைவு வந்ததும் ஸ்ரீராமன் முன்னிலையில் நிற்கவே கூசிக் குனிந்து - பின்நடையாகவே நகர்ந்தார்

''ஹநுமந்தா நில். லிங்கம் கொண்டு வருவதற்குத் தாமதம் ஆகிவிட்டதே - என்று வருத்தமா? வருந்தாதே! அதுவும் நல்லதுக்குத்தான். லக்நத்திற்குள்ளேயே மணலால் லிங்கம் பிடித்து - அதில் இஷ்டதெய்வத்தை பாவனை பண்ணிக் கொண்டு பூஜை செய்தேன்.

தங்களுக்கு இஷ்டதெய்வம் வேறு தனியா உண்டா? அடியேன் தெரிந்து கொள்ளலாமா?

''ஹநுமந்தா! பூஜையில் வேத கோஷத்தோடு கலந்து கொண்ட போதே அகஸ்த்யர் முதலிய மஹரிஷிகள் ''ராமநாதன் என்ற அந்த மணல் லிங்கத்திற்குப் பெயரிட்டார்கள் அந்தப் பெயரும் எனக்கு உகப்பானது தான்.

**ஹநுமன் மாவிஷீ த$_3$ாத்ர லிங்க$_3$ாக$_3$ம விலம்ப$_3$த: ।**
**ஸைகதே லிங்க ஏதஸ்மிந் மமேஷ்டம் தைவமர்ச்சிதம் ॥**

**கீர்த்திதம் ராமநா தே$_2$ தி அகஸ்த்யா$_3$திமஹர்ஷிபி$_4$: ।**

இப்பொழுது நீ கொண்டு வந்திருக்கும் லிங்கம் - என் பூஜையில் இருக்கட்டும் என்று அருளினார்.

அனைத்தையும் ஊன்றி கவனித்து வந்த லட்சுமணஸ்வாமி ஒவ்வொரு கணமும் அண்ணாவினுடைய ஸமயோசித புத்தி பிரபாவத்தைக் கண்டு ப்ரமித்தார். ஹநுமான் தன் கைங்கர்யம் குறிப்பிட்ட நேரத்திற்குள்ளேயே நடைபெறாமல் போனதை நினைத்து வருந்துவதற்கு ஆறுதலாக ''அதுவும் நல்லதாகப் போயிற்று'' என்றாரே! பரமேச்வரன் அநுக்ரஹித்துக் கொடுத்து அனுப்பிய லிங்கத்தில் தன் இஷ்டப்படி பாவனை செய்வது உசிதமாகாது - என்று தானே மணல் லிங்கத்தில் தன் விருப்பப்படி ஹநுமானை பாவித்து பூஜை செய்ததை எவ்வளவு அழகாக மறைத்துவிட்டார். இஷ்ட தெய்வம் யார்? என்று கேட்ட ஹநுமானுக்கு பதிலாக முனிவர்கள் நாமநாதன் என்று பெயர் வைத்ததைக் குறிப்பிட்டு ராமநாதனை பூஜித்தேன் என்றார்.

ராமநாதன் என் இஷ்ட தெய்வம். எனக்கு நாதன் ஸகலவிதத்திலும் கார்யதஸித்தி தருபவன் ஆஞ்ஜநேயன் என்ற அந்த லிங்கத்தை வெளியிட்டார் என்று சொல்வதா? மறைந்து விட்டார் என்று சொல்வதா? ராம நாதலிங்கம் இவ்வாறு ராமேச்வரத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

பிறகு ராவணனோடு கடைசியாகப் போரிட்ட அன்று அகஸ்த்ய மஹரிஷி வந்து ஆதித்யஹ்ருதயம் உபதேசம் செய்தார். ராவண வதம் நிறைவேறியது. அதைக் கொண்டாடி

விடை பெற வந்த அகஸ்த்யரிடம் ராமன் - ஹநுமான் பரமேச்வரனுடைய அநுக்ரஹத்தோடு கொண்டு வந்த லிங்கத்தை தன் நித்ய பூஜையில் இருந்ததை - அகஸ்தியரிடம் ஒப்புவித்தார். ''இதை உசிதமான இடத்தில் இந்தப் பகுதியிலேயே பிரதிஷ்டை செய்யுங்கள்'' - என்று விண்ணப்பித்தார் அதற்கு இணங்க ராமஸேது மண்டலமாக விரிந்த அந்தப்பகுதியில் இருந்த நகரத்தில் அந்த ராமலிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து - அந்த நகரத்திற்கு ராமநாதபுரம் என்று பெயரிட்டார் - என்பது புராண வரலாறு.

இங்கு ஸ்ரீராமனே ஹநுமானை பரமேச்வர அவதாரமாக பாவித்து பூஜை செய்தார் என்ற விஷயம் - ஹநுமான் ருத்ர அவதாரம் என்ற ஊர்ஜிதமான செய்திக்கு ஏற்றம் தருகிறது.



## நாதஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

*யோகிகளான மத்ஸ்யேந்த்ர நாதர் முதலியவர் ஹடயோக மார்க்கத்தை ஆச்ரயித்தவர்கள் பற்றி - நாரத புராணம் பின் பகுதி 69 வது அத்தியாயம், ஸ்காந்த புராணம் நாகரகண்டம் 262 வது அத்யாயம் பவிஷ்ய புராணம் இவற்றில்* ***மத்ஸ்யேந்த்ரநாதர் ஸ்ரீகோரக்ஷநாதர் மௌநீ நாதர்*** *முதலிய யோகேச்வரர்களுடைய சரிதமெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லப்படுகின்றது. இந்த மார்க்கத்திற்கு -* ***நாதஸம்ப்ரதாயம்*** *என்று பெயர்.*

*இந்த நவ (ஒன்பது) நாதர்களிடையே ஹநுமானும் ஒருவராகக் கொண்டாடப்படுகிறார்.*

*அவர்களுடைய நூல் ஒன்றில் ஹநுமானுடைய பிறப்பு பற்றி ஒரு சரிதம் உள்ளது.*

*கேஸரீ என்ற வாநரத் தலைவனின் மனைவியான அஞ்ஜநீ தேவி அஞ்ஜனகிரியில் அமர்ந்து ஸந்தான வரம் வேண்டித் தவமிருந்தாள். பரமேச்வரனை உபாஸித்தாள்.*

*பல்லாண்டுகள் தவம் செய்த பிறகு சிவபெருமான் ப்ரஸந்நராகி அவளுக்கு தர்சனமளித்தார்.*

*''அஞ்ஜநியே! நாளை விடியற்காலையில் நதியில் ஸ்நாநம் செய்து - ஸூர்ய பகவானுக்கு அர்ப்பணம் செய்வதற்காக. இரண்டு கரங்களையும் சேர்த்த -அஞ்ஜலியில் நீ தீர்த்தம் எடுக்கும் போது - அதில் ஒரு பிந்து விழும். அதை விழுங்குவாயாக. உனக்கு என் தேஜஸுடனும் பராக்ரமத்துடனும் ஒரு குமரன் பிறப்பான்'' என்று அருளினார்.*

*மறுநாள் அதே விதம் நடந்தது. அஞ்ஜனி கையில் நீர் எடுத்து நின்றாள்.*

*அதே கணத்தில் அயோத்தியில் தசரதருடைய புத்ரகாமேஷ்டியில் அக்நியிலிருந்து ஒரு மஹாபுருஷன்*

கையில் பாயஸக்கலசத்துடன் தோன்றி - தசரதரிடம் கொடுத்து மனைவிகளுக்குப் பகிர்ந்து அளிக்குமாறு அநுக்ரஹித்தார். அதேவிதம் தசரதர் தமது மூன்று மனைவிகளின் சேர்ந்த கைகளில் பாயஸத்தை அளித்த போது எங்கிருந்தோ ஒரு கொக்கு ஆகாயத்தில் பறந்து வந்து கைகேயி தேவியின் கையிலிருந்த பாயஸத்தைத் தன் நீண்ட அலகுகளால் - எடுத்துப் பறந்தது. நேரே அஞ்ஜநகிரி வந்து - அஞ்ஜனியில் தீர்த்த அஞ்ஜலியில் கொப்பளித்தது. அதை உடன்பருகினாள் அஞ்ஜநி. அதன் பயனாக -ருத்ரனின் அம்சமாக அவளுடைய வயிற்றில் ஹநுமான் பிறந்தார்.

ஸ்காந்தபுராணம் அவந்தீ கண்டத்தில் ஒரு சரிதம். விபீஷணபட்டாபிஷேகத்திற்குப் பிறகு -ஹநுமான் லங்கைக்குச் சென்றார். அப்போது விபீஷணன் ராவணனுடைய பூஜையில் இருந்த ஆறு லிங்கங்களை ஹனுமானிடம் ஒப்புவித்தார். ராமனுக்குப்பட்டாபிஷேகம் ஆனபிறகு ஸ்ரீராமபிரான் அந்த லிங்கங்களை ஹநுமந்தேச்வரன் என்ற பெயரிலே உஜ்ஜயினியில் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்காந்தம் பிரஹ்ம கண்டத்தில் -ஸ்ரீராமன் ராமேச்வரலிங்கப் பிரதிஷ்டை சரிதம் காணப்படுகிறது.

இவ்விதம் புராணங்கள் எல்லாம் ஹநுமான் ருத்ராம்சம் என்றோ ருத்ரனே என்றோ ருத்ரவீர்யத்தில் பிறந்தவன் என்றோ பலவிதம் கூறுவதை ப்ரமாணமாக ஏற்று -நாயன்மார்களும் ஆழ்வார்களும்............பிருந்தாவன பக்தர்களும் மஹாராஷ்ட்ர பக்தர்களும் ஆந்த்ர மஹாகவிகளும் கன்னட தாஸர்களும் ஹநுமானை ருத்ராம்சம் என்ற கூறத் தவறவில்லை.

ஸமர்த்த ராமதாஸர் -ஹநுமானை ருத்ரன் என்றும் ருத்ராம்சமென்றும் தாஸபோதத்தில் குறிப்பிடுகிறார்.

ஹநுமந்தா ராமதூதா என்று ஸ்தோத்திரத்தில்

***தா$_3$நவாரீ காமாந்தகா***
***சோ$_4$கஹாரீ த$_3$யாநிதே!***
***மஹாருத்$_3$ரா முக்$_2$யப்ராணா***
***குலமூர்த்தி புராதநா***
***ஸ்திதிரூபி துசி$_4$விஷ்ணு***
***ஸம்ஹாரகா பசு$_+$பதே***

*இதில் காமாந்தகா - மஹாருத்ரா ஸம்ஹாரகா -பசுபதே முதலிய பதங்கள். ருத்ரனாகவே ஹநுமானைக் குறிப்பிடுகின்றன.*

*தனது ராமயாணத்தில்*

*கம்பரும் திரு.அவதாரப் படலத்தில்*

*தேவர்கள் அனைவரும் ராமாவதாரத்தில் அவருக்கு அரக்கர்கோனை அழிக்கின்ற கடமையில் உறுதுணையாகத் தாமும் உதவி செய்வதற்காகப் பிறப்போம் என்ற போது பரமசிவனே முன் வந்ததாகக் கூறுகிறார்.*

***‘‘வாயு மற்றெனது கூறு மாருதி –யெனும் மற்றோர்***
***காயு மர்க்கடங்காகிக் காசினி யதனின் மீது***
***போயிடத்துணிந்தோம் என்றார்***
***புராரி மற்றியானே வாத சேயென ப் புகன்றான்.***
***மற்றைத்திசையுளோர்க்க வதியுண்டோ***

*முப்புரங்களை எரித்த பரமேச்வரன் தானே மாருதியாக அவதரிப்பேன் என்று சொன்னார்.*

*பட்டிணத்தாரும் இறந்த தாயின் உடலுக்குத் தீயிட்டபோது முன்னையிட்ட தீ முப்புரத்திலே **பின்னரிட்டதீ தென்னிலங்கையில்** என்கிறார். முப்புரத்தையும் தீயிட்ட பரமேச்வரன் தான் - பின்னர் இலங்கையிலும் தீயிட்டான் என்று ருத்ரனே ஹநுமான் என்று சுட்டிக்காட்டுகிறார்.*

*இவ்விதம் வேதங்கள் முதல் புராணங்கள் பக்தர்களின்*

*பாடல்கள் பன்மொழி இலக்கியங்கள் எல்லாவற்றிலும் - ஹநுமான் ருத்ரனுடைய அம்சம் வாயுவின் குமாரன் என்ற மரபே நிலைத்துவிட்டது. ஆனால் வால்மீகிராமாயணத்திலோ துளஸீ ராமாயணத்திலோ கம்பராமாயணத்திலா - ராம சரிதம் பற்றிய ஸம்ஸ்க்ருத இலக்கியங்களிலோ - கதைப் போக்கில் ஹநுமான் தன்னை ருத்ராம்சம் என்று வெளிப்படுத்திக் கொண்டு ருத்ரனாகவே சரித்திரப்போக்கில் கலந்து கொண்டார் - என்பது ஒரு இடத்திலும்காணக் கிடைக்கவில்லை.*

*ஹநுமான் தன்னை வாயு குமாரன் - என்று ஸீதாதேவியிடம் அறிமுகப்படுத்திக் கொள்கிறார். ஆனால் தான் ருத்ரரின் அம்சம் என்று சொல்லவில்லை.*

*மானிட அவதாரம் எடுத்த நாராயணன் தனது ஜீவிதம் முழுவதும் மானுடனாகவே - மானுட இயல்புக்கு அப்பாற்பட்ட தெய்வத் தன்மையை எங்கும் ப்ரயோகிக்காமல் - நடந்து கொண்டார். அவருடைய தாஸனான ஹநுமானும் - சரிதத்தில் எங்கும் தனது தெய்வாம்சத்தைக் காட்டிக் கொள்ளவில்லை என்பது ஒருஸ்வாரஸ்யமான விஷயம்.*



# 3. ஹநுமானின் ஸ்வரூபம்

ஹநுமானுடைய முக அமைப்பை நாம் சித்திரங்களில் பார்க்கிறோம். நேர்முகமாக தரிசனம் கொடுக்கின்ற கோவில் மூர்த்திகளிலும் பார்க்கிறோம். சதுரமான முகம். பிதுங்கின மேல் உதடு அளவு குறைந்து மேல் நிமிர்ந்த மூக்கு ஒட்டைகள். இப்படி அந்த பிம்பங்களில் நமக்கு காட்சியளிக்கிறார்.

ஸாதாரணமாகவே நாம் பார்க்கின்ற குரங்குகளின் முகங்கள் மூக்கு சப்பையாகவும் கன்னம் ஒட்டியும் புருவங்கள் துறுத்திக் கொண்டும் சில குரங்குகளுக்கு - தாடை பின் புறம் கனமாக முன்புறம் சூம்பியே காண்கிறோம்.

ஆனால் ஹநுமானின் முகம் அவருடைய பெயருக்கு ஏற்ப - சற்று வித்யாஸமாகவே அமைந்தது - என்று ஆநந்த ராமாயணம் கூறுகிறது.

***ஹ்ரஸ்வகர்ணோ தீ$_3$ர்க்க$_4$ ஹநு: ஸூக்ஷ்மாக்ஷ: ஸ்பு$_2$ட நாஸிக:*** ।

***பி$_3$ம்ப$_3$ா $_3$த$_4$ர: ஸ்மிதாஸ்யச்$_+$ச ம்ருது$_3$ குஞ்சித குந்தல:*** ॥

***ஹநுமான் வ்யக்தலாவண்ய: வாநரேதரபே$_4$த$_3$வான்*** ।

ஹநுமானின் முகம் மற்றவானரங்களுடைய முகங்களைக் காட்டிலும் வித்யாஸமாகவே இருந்தது. காதுகள் குட்டையாக இருக்கும், தாடை அடிப்பக்கம் குறுகி - நீண்டு இருக்கும். இவ்வாறு இந்திரன் வஜ்ராயுதத்தினால் அடித்து ஏற்படுத்திய மாறுதல் அது. அந்த அடையாளமே அவருக்கு ஹநுமான் என்ற பெயரைக் கொடுத்தது. கண்கள் சிறிதாக ஆனால் கூரிய பார்வையுடையவை. மூக்குப் புடைத்து விண்ணென்று இருக்கும். புன் சிரிப்புள்ள வாய். மிருதுவான சுருள் சுருளான முடிகள். இப்படி ஹநுமானுடைய முகலாவண்யம் தனிப்பட்ட அமைப்பு உடையது.

சுசீந்த்ரம் கோயிலில் ஸீதாதேவிக்கு விச்வரூபம் காட்டுகின்ற இருபத்தைந்து அடி உயரமுள்ள மூர்த்தியில் இந்த அழகைப் பார்க்கலாம். அது போல வாராணஸியில் ஸங்கட மோசந ஹநுமானின் பக்கவாட்டுத் தோற்றம். தஞ்சாவூர் மேலவீதி மூலை ஹநுமான் கோயிலிலும் ஹநுமானின் பக்க வாட்டுத் தோற்றம் தாடை நீண்டு காணப்படும்.

மற்ற இடங்களில் காணப்படுகின்ற எந்த மூர்த்தியிலும் - ஹநுமான் என்ற பெயருக்கு காரணமான நீண்ட தாடைகள் காணப்படவில்லை.

ஹநுமானின் உடல் வாகு - ஹநுமானுக்கு வஜ்ராங்கி என்று பெயர் சூட்டுகிறார் கோஸ்வாமி துளஸீதாஸர். இவருடைய உடலில் எலும்புகள் வஜ்ர ஆயுதத்தின் உலோகத்தினால் ஆனவை. உடையவே உடையாது. அவருடைய ப்ராணாயாம பலத்தால்-வளைத்தால் தவிர வளையாது. அவருடைய நிறம் தங்க வர்ணம் கஞ்சநவரந. தலைமுடி சுருள் சுருளாக இருக்கும். குஞ்சித கேஸா. கைகள்நீண்டு- தோள் முதல் முழங்கை வரை உருண்டு திரண்டு மடிக்கும் போது பருத்து விண்ணென்று இருக்கும். முன்னம் கைகள் பட்டாக்கத்தி போல மேல்புறம் கனத்தும் கீழ்புறம் சரிவாகவும் - லகுவாகப் புரண்டு திமிர் காட்டும். ஹநுமானின் கை முஷ்டி. விரல்களை உள்ளங்கை மடக்கி குத்து விடுவது சரித்திர பிரசித்தி பெற்றது.

கோஸ்வாமி துளஸிதாஸர் ஹநுமானின் முஷ்டி பலத்தை நான்கு இடங்களில் எடுத்துக்காட்டுகிறார்.

1. ஹநுமான் லங்கையில் இறங்கின உடன் லங்கையின் காவல் தெய்வமான லங்கிணி'' ''எங்கேடா! குரங்கே திருட்டுப்பயல் போல நுழையப் பார்க்கிறாய்?'' என்று அதட்டினாள்.

ஹநுமான் லேசாக இடது கையை மடக்கி விரல்களை மூடி லேசாகத் தலையில் குட்டினார். தலையில் ரத்தம் வழிய - தலையைப் பிடித்துக் கொண்டு கீழே உட்கார்ந்துவிட்டாள் லங்கிணி.

‘‘போதுமையா! போதும். என்னை விட்டுவிடுங்கள். உங்கள் இஷ்டம் போல லங்கையில் நுழையுங்கள்’’ என்று கை கூப்பி வணங்கி ஓடிவிட்டாள்.

2. அசோக வனத்தில் - இந்திரஜித் - மற்ற அரக்கர்களை துவம்ஸம் செய்து நிமிர்ந்த மார்புடன் நின்ற ஹநுமானை- அலட்சியமாக எதிரே நின்று - ‘‘என்னடா’’ - என்று அதட்டினான். ஹநுமான் ‘‘இது தாண்டா’’ -என்று கூறி இவனுடைய மார்பில் ஒரு குத்துவிட்டார். இந்திரஜித் மயங்கிக் கீழே விழுந்தான்- மரத்தின் மீது ஏறி ஹநுமான் கைகளைத் தாடையில் கொடுத்து உட்கார்ந்து வேடிக்கை பார்த்தார். மூர்ச்சை தெளிந்து முக்கி எழுந்து - மறுபடி தடுமாறி இந்திரஜித் கீழே வீழ்ந்தான்.

**முடி$_2$கா மாரி சடா$_4$ தருஜாஈ**
**தாஹி ஏக ச$_2$ந முருசா$_2$ ஆஈ!**

பின்பு யுத்தகளத்தில் இந்திரஜித் லட்சுமணனைப் போருக்கு அழைத்தான். பலத்த போர் நடந்தது. அவர்களிடையே ஹநுமான் பாய்ந்து குதித்தார். இந்திரஜித்தை தன்னோடு போரிடுமாறு அறைகூவல் விட்டார். இந்திரஜித் திரும்பியே பார்க்கவில்லை. ஹநுமானின் குத்து நினைவுக்கு வந்தது.

3. கும்பகர்ணன் போருக்கு வந்தான் .அவன் மீது பெரிய பெரிய மலைகளைப் புரட்டி வீசினர் வாநர வீரர்கள். அவற்றை எருக்கம் பழங்களைப் போலத் தட்டி எறிந்தான் கும்பகர்ணன்.

**கோடி கோடி கி$_3$ரி ஸிக$_2$ர பரஹாரா**
**காஹிம் ப$_4$ாலு கபி ஏக ஏக பா$_4$ரா**

ஹநுமான் திடீரெனப் பாய்ந்து கும்பகர்ணன் மார்பில் ஒரு குத்துவிட்டார். கும்பகர்ணன் அதை வாங்கிக் கொண்டு சமாளிப்பதற்காகத் திரும்பினான். இரண்டு சுற்று தன்னையே சுற்றிக் கொண்டு பிறகு குப்புற வீழ்ந்தான்.

**தப$_3$ மாருதி முடி$_2$கா ஹந்யோ**
**பயௌ த$_4$ரநி வ்யாகுலஸிர து$_4$ந்யோ**
**புனி உடி$_2$தேஹி மாரேஹு ஹநுமந்தா**
**கூ$_4$ர்மித பூ$_4$தல பரேச து$_3$ ரந்தா**

4. ராவணனுடன் ஹநுமான் நேரிடையாக மோதுகிறார். (இந்த ஸந்தர்ப்பத்தை வால்மீகி பகவான் ரஸமாக வர்ணிக்கிறார்.)

ராவணன் வேகமாக ஹநுமானின் பரந்த மார்பில் ஓங்கி ஒரு குத்து விடுகிறான். ஹநுமானின் மார்புப் பாறையில் தாக்கிய ராவணன் கை விரல்கள் ஒடிந்து - துவண்டு தொங்கின. மற்ற பத்தொன்பது கைகளால் அந்த ஒரு கையை - மடக்க முடியாமல் முழங்கையில் முன்னம் கை நொடித்து நிற்கும் நிலையில் தடுமாறினான் ராவணன். அவன் பலே பலே என்று ஹநுமானைக் முனகிக் கொண்டே கொண்டாடினான்.

ஹநுமான் கேட்டார் - நான் ஒரு எதிர்குத்து விடலாமா?

ராவணன் சொன்னான் - ''உன் கை ஜாக்கிரதை. இந்திரனின் யானை ஐராவதம் என் மார்பில் தனது தந்தத்தைச் செலுத்தினபோது ஒடிந்துவிட்டது. மார்பிலேயே ஒடிந்த தந்தத்துண்டு சிக்கி இருக்கிறது. அதில் உன்னுடைய குத்து வீழ்ந்தால் -உன் முஷ்டி தூள் தூளாகி விடும். ஜாக்கிரதை.

''அப்படியா? பார்ப்போம்'' என்று கூறி ஹநுமான் ஒரு குத்துவிட்டார். அதே இடத்தில் பாய்ந்த ஹநுமானின் குத்து பட்டு ராவணன் மல்லாக்கச் சாய்ந்தான். பத்தொன்பது கைகளும் அவனுடைய பின் பக்கம் தரையில் ஊன்றி அவனைக் கீழே விழாமல் தாங்கின. சில நிமிடங்களில்

*ராவணன் ஸமாளித்து எழுந்தான்.*

*''பலே பேஷ்! சரியான குத்து அடேயப்பா! உன் கைவலிமையை நான் கொண்டாடுகிறேன்'' என்றான் ராவணன்.*

*'' அரக்கர் அரசரே! இன்னும் பிழைத்திருக்கிறீரா! இவ்வளவுதானா -என் குத்தின் பலம்?*

*''வாநர வீரனே! அப்படிச் சொல்லாதே. உன்னுடைய குத்தை யாராலும் தாங்க முடியாது. மிக வலிவான குத்து. நிஜமாகவே உன்னைப் பாராட்டுகிறேன்."*

*''அரக்கர் அரசே - இரைந்து பேசாதீர். என் தாயின் காதில் உம்ம பாராட்டு விழுந்தால் சீ என்று காரித் துப்புவாள்''.*

*''நீ என்ன சொல்கிறாய் வாநரனே''*

*''என் குத்தை வாங்கிக் கொண்டு ஒருவன் உயிரோடு மிஞ்சியிருக்கிறான் என்றால் அவளுக்கு அது பிடிக்காது.*

*என் தாய் - நான் ஒரு வயதுக் குழந்தையாக இருந்த போது எனக்கு முலைப்பால் ஊட்டினாள். நான் குடித்து விட்டு வாயை எடுத்தேன். மேலும் அவளுடைய முலையில் பால் பெருகியது. முலையை இடது கையால் பிடித்து எதிரே பீய்ச்சினாள்.*

*பீச்சிய பால் - எதிரே இருந்த மலை முகட்டில் பட்டு - மலைச்சிகரம் தூள் தூளாக உடைந்து விழுந்தது. அவளுடைய பாலைக் குடித்த நான் விட்ட குத்து - பட்டும் கூட ஒருவன் உயிரோடு இருக்கிறான் என்பதை அவள் கேள்விப்பட்டால்'' ''சீ! சீ! இவ்வளவு தானா என் பிள்ளையின் பலம்?'' என்று காரித் துப்புவாள்'' என்றார் ஹநுமான். (அஞ்ஜநை பால் பீச்சிய விருத்தாந்தம் ஹநுமத் ராமாயணத்தில் உள்ளது)*

*ஹநுமான் பாலப்ரஹ்மசாரீ. அவர் பூணூல் ரக்ஷை அணிந்திருந்தார் என்கிறார் கோஸ்வாமி துளஸிதாஸர்.*

*காந்தே மூம்ஜ ஜநேஉ ஸாஜை!*

*முஞ்சை (ஒரு வகைப் புல்) புரியினால் ஆன பூணூல் அது. சிறுவயதிலேயே ஸூர்யனிடம் ஸகல வித்தைகளையும் கற்றார் என்றால் காயத்ரீ மந்த்ர உபதேசம் பெறாமலா அவை கிடைக்கும்?*

*ஸூர்ய பகவானிடம் உபதேசம் பெற்றவர் ப்ராணாயாமத்தில் தீவிரப்பயிற்சி மேற் கொண்டார். கும்பகப் பயிற்சியினால் உடலில் ஒவ்வொரு நாடியிலும் ப்ராண பலத்தைப் பாய்ச்சி வலிவூட்டினார். மார்பு நன்றாக விரிந்து தசைகள் எல்லாம் உறுதி பெற்று விண்ணென்று விளங்கினார் - என்கிறார் கோஸ்வாமி.*

*இரு துடைகளும் நன்கு பருத்து தேக்கு மரத்தின் நடுப்பகுதியிலிருந்து கிளம்பிய கிளைகள் போல் உறுதியோடு வில் போல் நினைத்தபடி வளைகின்ற லாகவத்தோடும் மிளிர்ந்தன. இடுப்பில் கட்டியிருந்த கச்சு பச்சை நிறத்தில் முறுக்குடன் உடலைப் பற்றிக் கொண்டிருந்தது. முழங்காலிலிருந்து கணுக்கால் வரை நன்கு முறுக்கேறிய தசைகளுடன் துடிப்போடு விளங்கின. பாதங்கள் பயிற்சியினால் சற்று அதிகமாகவே நீண்டு விரல்கள் எல்லாம் கணுக்களில் சதை பற்றுடன் நன்கு பிடிப்புத்திறன் (*Grip*) உள்ளவை. பாதங்களில் முன்புறம் விசை சக்தி (*Spring action*) உடையவை. அவற்றை அழுத்தி - விந்திக் கிளம்பினால் பனை மர உயரம் எம்ப முடியும். அந்த உந்தும் சக்தி ஹநுமானிடம் அபாரமானது. துளஸீதாஸரின் ஹநுமான் ஸமர்த்த ராமதாஸரின் ஹநுமத் ஸ்தோத்திரம் இவற்றில் இப்படி யெல்லாம் ஹநுமானுடைய அங்கலாவண்யம் வர்ணிக்கப்படுகிறது.*

*ஹநுமானின் ஸ்வரூபத்தில் முக்கியப் பகுதியான ''வால்'' பற்றி ஒரு ஸம்ஸ்க்ருத காவியமே தோன்றியிருக்கிறது 265 ச்லோகங்கள் கொண்ட அந்தக்காவியம் ஹநுமத்*

*ராமாயணத்திலிருந்து தொகுக்கப்பட்டதென்று கூறுகிறார். விநாயக புணேகர் ஆசிரியர். **லாங்கூல லீலையில்:***

***ஹநுமத்$_3$ராம ச$_1$ரிதாத் உத்$_3$த்$_4$ருதா அஞ்ஜநாஜநே:।***
***லாங்கூல லீலா லலிதா: தீயந்தே வி$_3$து$_3$ஷாம்முதே$_3$''*** ॥

*பாலப்பருவத்தில் குழந்தை ஹநுமான் ஆச்ரமங்களில் எல்லாம் புகுந்து முனிவர்களுக்கும் முனிபத்னீக்களுக்கும் கொடுத்த தொல்லை இன்பங்கள் பல. கண்களை மூடிக்கொண்டு ஜபம் செய்கின்ற முனிவர்களின் தீர்த்த பாத்திரங்களை அவர்களுடைய தலையில் கொட்டி விடுவான். பூஜையில் இருந்த ஸாலக்ராம மூர்த்திகளை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு கூத்தாடுவான். அவர்கள் கொடுத்து விடு - என்று கெஞ்சும் போது - அந்த ஸாலக்ராம மூர்த்தியை - தனது வாலின் நுனியில் வளையம் போட்டு அதன் மீது வைத்து- அவர்களுக்கு எட்டாத உயரத்தில் தூக்கி ஆட்டுவான். ருஷி பத்னீக்களின் சமையல் அறையில் புகுந்து கூடைகளில் வைத்திருந்த கிழங்குகளை உயரத் தூக்கி எறிந்து பிடிப்பான்.*

*முறங்களில் தனித்தனியாக காய வைத்திருந்த தானியங்களை எடுத்துக் கீழே கொட்டிக் கலந்து விடுவான். பால் பாத்திரத்திலிருந்த பாலை குடித்து விட்டு அதில் மோரை நிரப்பி எரிகிற அடுப்பின் மீது வைத்துவிடுவான் - பாட்டி பேத்தியைக் கூப்பிட்டு ஏனடி மோரைக் காய்ச்சுகிறாய்? என்று கேட்பாள். பேத்தி விழிப்பாள். மூலையில் ஒளிந்து கொண்டிருந்த ஹநுமான் அவளுடைய பின்னலைப் பின் நின்று இழுப்பான். திரும்பிப்பார்த்தால் ஓடிவிடுவான்.*

*ஐந்து வயது ஹநுமான் வயதான - கண் தெரியாத - முனிவர்களுக்கு உதவியே செய்வான். குளத்தில் ஸ்நானம் செய்து விட்டு ப்படிகளில் - கம்பை ஊன்றித் தடுமாறிக் கொண்டே ஏறுகின்ற முனிவர்களின் இடுப்பில் வாலைச் சுற்றி அப்படியே ஒரு தூக்காகத் தூக்கி கரையில் இறக்கி*

நிறுத்திவிடுவான். மரக்கிளைகளில் உலர்ந்தியிருந்த மரவுரிகளைக் காய்ந்ததும் வாலினால் எடுத்து மடித்து ஆச்ரமத்திற்குள்ளே மேலே கூரைவிட்டத்தில் தொங்கவிடுவான். மாலை முனிவர்கள் மரக்கிளைகளில் மரவுரிகளைக் காணாமல் தவிக்கும் போது, எதிரே சிரித்துக்கொண்டு நிற்கின்ற ஹநுமானைப் பார்த்ததுமே, அவர் தடியை தூக்கி அடிக்க வருவார்கள். அந்தத் தடியின் நுனியை எம்பிப் பிடித்து அவரை கரகர வென்று இழுத்துக்கொண்டு போய் - ஆச்ரமத்துள் அழைத்துச் சென்று - தடியைத் தூக்கி விட்டத்தில் தொங்கும் மரவுரிகளைக் காட்டுவான்.

ராமதாஸன் ஆகி -ஸீதையைத் தேடுவதற்காக லங்கை சென்று அன்னையை தரிசித்து விட்டுச் - சுற்றிலும் குந்திக்கொண்டு ஸீதையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு காவல் காக்கின்ற அவலட்சண அரக்கிகளை - மேலே மரக்கிளையில் உட்கார்ந்த படியே - வாலை நீட்டி ஒர் அரக்கி முதுகில் சாட்டை அடி கொடுப்பார். அவள் வலிதாங்காமல் துடித்து - அடுத்தவளைப் பார்த்து -ஏண்டி என்னை அடித்தாய் - என்று அவள் முதுகில் குத்துவாள். அப்படிக் குத்து விடுகின்றவளுடைய முதுகில் வாலின் சாட்டையடிவிழும். அவள் அதற்கு அடுத்தவளிடம் மோதுவாள். ஒரே கூச்சல் .காதுகளில் வீழ்ந்து ஸீதாதேவி காதுகளைப் பொத்திக் கொள்வாள். ஆகாசத்தில் வாலின் ஒரு சொடுக்கு சத்தம் கேட்கும். அந்த அதிர்ச்சியில் கூச்சல் ஓய்ந்து விடும்.

அசோகவனத்தில் த்வம்ஸம் செய்து விட்டு நிற்கிறார். அரக்கர்கள் அவரைத் தாக்கிப் பிடிப்பதற்காக ஓடி வருகிறார்கள். அவர்கள் வருகின்ற வழியிலே - தன் வாலை பாம்பு வளைந்து செல்வது போல தரையின் ஊறவிட்டார். ஓடி வருகின்ற அரக்கர்களின் கால்களில் வாலின் வளைவுகளில் மாட்டிக் கொண்டு அவர்கள் தடுமாறிக்குப்புறவிழுகிறார்கள். அரக்கர் கூட்டத்தின் கோடி வரை சென்ற வாலின் வளைவுகள் அரக்கர்களை நெருக்கின.

கால்களை விடுவித்துக் கொள்ள முடியாமல் சுருண்டு வீழ்ந்தார்கள். வீழ்ந்தவர்களின் மீது வாலை இழுத்து ஒரு சாட்டை அடி கொடுத்தார். திரும்பிப் பார்க்காமலே ஓடினர்.

ராவணன் மேடையிலே சிங்காதனத்தில் அமர்ந்திருக்கிறார். மந்திரிமார்கள் சபையில் பெரிய பெரிய ஆஸனங்களில் அமர்ந்திருக்கிறார்கள். ராமதூதனைக் கட்டி இழுத்துப்போய் நிறுத்தி இருக்கிறார்கள். ஹநுமான் வாலை ஒரு சொடுக்கு சொடுக்கினார். சுற்றி நின்று கயிற்றை இழுத்துப் பிடித்துச் கொண்டிருந்த அரக்கர்கள் ஓடிவிட்டார்கள். ராமதூதன் சபையின் மத்தியில் வாலைச் சுழற்றி ஒரு வட்டம் அமைத்தார். அதன் மீது வால் வட்டச்சுவர் மளமளவென்று உயர்ந்து கொண்டே சென்றது- ஆஸ்தான மண்டபத்தின் உச்சிக்குச் சற்று கீழே அந்த வால் கோட்டையின் மீது குபீரென்று கிளம்பி ஹநுமான் அமர்ந்திருந்தார். ராவணன் முதலானோர் தலைகளை தூக்கி அண்ணாந்து பார்க்கின்ற நிலை ஏற்பட்டது.

யுத்த களத்தில் ஹநுமானுடைய லாங்கூல லீலைகள் அனந்தம் என்கிறார் அந்தக்கவிஞர். மேலே சரிதத்தில் மேலும் லீலைகளை எடுத்துச் கூறுவோம்.

கேஸரி என்ற வாநர வீரனுக்கு பிறந்த ஹநுமான் வாநர உடல் வடிவத்தில் மிகுந்த பராக்ரமசாலியாக விளங்குகிறார். இது ஒருபுறம். மறுபுறம் இவருடைய மனப்பாங்கு - என்ன? ஆத்மகுணங்கள் யாவை என்பதையும் விளக்கிக்கொள்வோம்.

வாநரன் ஆனாலும் மனிதப்பண்பு மிக்கவர் ஹநுமான். தாழ்ந்த பிறவியாயினும் உயர்ந்த குணநலன்கள் உடையவர்.

உலகில் மாந்தர்கள் பல விதம். மனிதப்பிறவி பெற்றது -ஜநந மரணச் சுழலிலிருந்து விடுபட்டு பரப்ரமஹ்மத்துடன் ஒன்றிவிடுவதற்குத்தான். இதுவே மோக்ஷம். இந்த லட்சியமுடையவர்கள் ஞானிகள்.

இவர்களுடைய குணநலன்கள் என்ன? அஹிம்ஸை, பொய் பேசாமை, திருடாமை, நேர்மை அவசியம். தவிர்க்க முடியாத தேவைகளுக்காக மட்டுமே உலகியல் பொருள்களை ஏற்பது. ஈ எறும்பு முதல் ஸகல ஜீவன்களிடமும் கருணை காட்டுவது அந்தப் பண்புடன் இருந்தால் தான் அவர் ஞானி. அந்த ஞானி தான் மோக்ஷத்திற்குத் தகுதி பெறுகிறார்.

**அஹிம்ஸா ஸத்யமஸ் தேயம்**
**ஆர்ஜவம் சா$_1$பரிக்ரஹ:।**
**ஸர்வபூத த$_3$யேத் யாத்$_3$யா:**
**ஆத்மஸ ம்பத் குணா: ஸதாம்॥**

இவை ஸாதாரண மனிதர்களிடமும் முழுமையாக இருக்க வேண்டும் என்பதில்லை. அவை முமுக்ஷுக்களுக்கு மட்டும் தேவையானது. ஸாதாரண மனிதர்களுக்கு ஸாத்யம் இல்லை.

ப்ரபஞ்சம் பிறந்தது முதலே நல்லதும் கெட்டதும் கலந்து தான் வளர்ந்திருக்கிறது.இவற்றில் தீயதை விலக்கி நற்பண்புகளைவேண்டி விரும்பி கடைபிடித்து ஈச்வர பக்தியுடன் வாழ்ந்து ஈசனடி சேர்வதே ஸாதாரண மனிதனின் லட்சியமாக இருக்கமுடியும் -அதுவே ஸாத்யம்.

இப்படிப்பட்ட ஸாதுக்களைக் காப்பாற்றி அவர்களைக் கொடியோர்களுடைய அக்கிரமங்களிருந்து காப்பாற்ற உதவுவதற்காகவே -சில மஹா புருஷர்களை பகவான் படைத்து அவர்கள் மூலம் பிரபஞ்சத்தை சீராக நடத்தி வருகிறார்.

இத்தகைய தீரர்களுக்கு லோகோபகாரிகளுக்கு இருக்கவேண்டிய பண்புகள் வேறு. உலகியலில் பல தரப்பட்ட மக்களை வழி நடத்தி செல்பவன் அஹிம்ஸை, நேர்மை,ஸத்யம் என்று சொல்லிக் கொண்டு உபதேசம் மட்டும் செய்பவனாக இருந்தால் பயனில்லை.

கொடியோர்களை நினைத்த மாத்திரத்தில் அழித்துவிட முடியாது.அவனை அண்டி பிழைத்துக் கொண்டு அவன் சொற்படி கேட்டுக் கொண்டு அவனுக்காக பிராணத் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்ற அடிமைகள் அப்பாவிகள் உலகில் அநந்தம்.அந்தக் கொடியோன் ஒருவனுக்காக அவனைச் சார்ந்த கூட்டத்தையே அழிக்கலாமா? முடியுமா?முடியாது.

அந்தக் கொடியோனை அவனைச் சார்ந்த மனிதர்களை ஸமாளிக்கினற திறன் உள்ளவன் தான் தீரன். அவனால்தான் கொடுமையை ஒழித்து -கொடுமையாளர்களைத் திருத்தி வசப்படுத்த முடியும்.அப்படி வசப்படுத்த முடியாவிட்டாலும் அவனுடைய தீய எண்ணங்களை அம்பலப்படுத்தி அதனால் மக்களுக்கு ஏற்படும் தொல்லைகளை எடுத்துச் காட்டி அவனுடைய தலைமையிலிருந்த அவனுடன் சார்பு உடையவர்களைப் பிரித்துவிட்டால் அந்த தனி கொடியவன் தானே ஒழிந்துவிடுவான்.இது தான் ராஜதந்திரம்.மனித ஸமூக நலத்தந்திரம். அவனே மக்கள் தலைவன் ஆக முடியும். அத்தகைய தீர புருஷனுக்கு இருக்க வேண்டிய திடமான நற்பண்புகள் பின் வருமாறு.

1) நல்ல முக விலாஸம்- உள்ளத்தால் கபடமில்லாத வனிடம் மட்டுமே இந்த முக விலாஸம் பளீர் என்று துலங்கும்.

2) மன உறுதி. எடுத்துக் கொண்ட காரியம் உலகுக்கு நன்மை தரும் என்பதில் உறுதியாக நம்பிக்கையோடு பிறந்த தைரியம்.

3) இத்தகைய நல்லெண்ணம் கொண்டவன் இவன்-என்ற புகழ் பெற்றிருக்க வேண்டும்.

4) செயல் திறன்-ஒரு கருவியைக் கையாளுவதில் கூட ஒரு ஒழுங்கு, ஒரு லாகவம் வேண்டும். கோயில் தேங்காய்

உடைக்கும் பூஜகர் தேங்காயை கணுப்பார்த்து வைத்துக் கொண்டு ஒரே வெட்டுப் போட்டால்.அது இரண்டாக சமபாகமாக உடையவேண்டும் .இரண்டாவது வெட்டுப் போட வேண்டியிருந்தாலோ தேங்காய் கோணலாக உடைந்தாலோ -அந்த பூஜகருக்கு அரிவாள் பிடிக்க தெரியவில்லை.தேங்காய் உடைக்கத் தெரியவில்லை. தேங்காய் உடைக்கத் தெரியவில்லை என்பது தெரிந்தால் செயல் திறன் போதாது என்பார்கள். ஊசியில் நூல் கோப்பது முதல், உளி எடுத்து கல்லில் சிற்பம் செதுக்குவது வரை செயல்திறன்.

5) இந்த செயல்திறன் பயிற்சியினால் பழகிப்போய் செய்யும்போது லகுவாகத் தெரியும். இதுதான் ஸாமர்த்தியம் எனப்படுவது.

6) இத்தனை இருந்தாலும் அவற்றை படாடோபமாகக் காட்டிக் கொள்ளக்கூடாது. இயல்பாக இருப்பது போல நடந்து கொள்ள வேண்டும்.

7) செய்வதில் நியாயம் இருக்க வேண்டும்.யாரும் தவறு கண்டு பிடிக்கக்கூடாது.

8) ஆளுமை வேண்டும்.பணியாளர்களை வேலை வாங்கும்போது அதட்டி உருட்டாமல் குறிப்பாக செய்ய வேண்டியதை மட்டும் தாழ்ந்த குரலில் ஆணையிட வேண்டும்.பணியாளர்களின் ஐயங்களை அலட்சியப்படுத்தாமல்-கவனமாக -உரிய பதில் தரவேண்டும். இது பணியாளர்களுக்கு எஜமான் காட்டும் மரியாதை.

9) பணிகளில் பணியாளர்கள் அலட்சியம் காட்டினால்-எதிர்ப்பு காட்டினால் அவர்களை உறுதியாக அடக்க அதிகார தோரணை வேண்டும்.

10) இந்த ஒன்பது திறன்களையும் வரிசையாக முறைப்படி வெளிப்படுத்துவதற்கு முன்கூட்டியே திட்டம்

போடுவதற்குரிய புத்திக் கூர்மை வேண்டும்.

இவ்வனைத்தும் ஹனுமானிடம் இருந்தது என்கிறார் ராமன்.

**1. தேஜோ 2.த்$_4$ருதி: 3.யசே$_+$ா$_4$ 4.த$_3$ாக்ஷ்யம் 5. ஸாமர்த்த்$_2$யம் 6. விநயோ 7.நய: 8.பௌருஷம: 9.விக்ரம்: 10. பு$_3$த்தி$_4$: யஸ்மிந்நேதாநி நித்யதா||**

ஒரு நிகழ்ச்சியை ஊன்றி கவனித்தால் மேலே ராமன் சொன்ன கருத்து மிகையல்ல. ஆராய்ந்து கண்டுபிடித்த உண்மையென்பது தெரிய வரும்.கண்டேன் ஸீதையை என்று நற்செய்தி சொன்ன ஹனுமானிடம் ராமன் கேட்ட கேள்விகள்-இரண்டு.

1 ஸீதை எப்படியிருக்கிறாள் ? 2 என்னைப் பற்றி என்ன நினைக்கிறாள் ?

ஹனுமான் இரண்டாவது கேள்விக்கு முதலில் பதில் - செய்கையினால் -குறிப்பிட்டார்.

எழுந்து ராமன்பால் கால் நீட்டி ஸீதை இருக்கும் திசையை நோக்கி தரையில் வீழ்ந்து வணங்கினான்.என்ன குறிப்பு?ஸீதாதேவி போற்றுதலுக்குரியவள்.தங்களைப் பிரிந்து சொல்லொணாத் துயரத்தை அனுபவிக்கின்ற தேவி - தங்களைப் பெரிதும் மதிக்கின்றாள்.உங்களிடம் உயிரை ஒப்புவித்துவிட்டு மனம் என்ற ரதத்திலேறித் தினமும் புறப்பட்டுக் கொண்டிருக்கிறாள். எவ்வளவு சுகப்படவேண்டியவள் ,துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாள்!!

**த்வயி ஸந்ந்யஸ்ய ஜீவந்தீ**
**ராமா ராம மனோ ரத$_2$ம்!**
**து:க$_2$ மாபத்$_3$யதே தே$_3$வீ**
**த்வயா தே$_3$வ ஸுகோ$_2$ சிதா||**

இங்கு ஒருஅத்புத ரஸத்தை வால்மீகி பகவானுடைய கவிதாதேவி பிழிகின்றாள். ஸீதையை ராமா என்றார்.

ராமனை ராம என்றாள். மா என்ற நெடில் அட்சரம். ம-என்ற குறில் அட்சரம். ஸீதையை ராமனைக் காட்டிலும் ஒரு படி மேலே வைத்துக் காட்டுகிறது.

ஹனுமான் பிறகு தேவி சொன்ன சேதியைச் சொன்னார். சூடாமணியைக் கொடுத்தார். ராமன் அதைக் கண்களில் ஒற்றிக் கொண்டு அழுதார். ஸீதாதேவியை- தான் சமாதானப்படுத்தி தைரியமளித்ததைக் கூறினார்.

இத்தனையும் சொன்னாரே தவிர தான் கடலைத் தாண்டியது முதல் ஸகல நிகழ்ச்சிகளையும் சொல்லியிருக்க வேண்டாமோ! ஜாம்பவானிடம் ஸுந்தர காண்டம் முழுவதையும் சுருக்கமாக ஒப்புவித்த ஹனுமான் ராமனிடம் சொல்லவில்லையே ஏன்?ஜாம்பவான் கேட்டார் .அவர்களிடம் சொன்னார் .ஶ்ரீ ராமன் கேட்கவில்லை. ஹநுமான் தற்பெருமை பீற்றிக் கொள்ளவில்லை.

ஆனால் அன்றிரவே ஜாம்பவான் ராமனிடம் சென்று ஆதியோடு அந்தமாக ஹனுமானின் லங்கை விஜயத்தின் வ்ருந்தாந்தம் அனைத்தையும் கூறி விட்டார். கேட்கக் கேட்க ராமனுக்கு ஒவ்வொரு சிறு செய்தியிலும் அளவு கடந்த வியப்பு!ஆநந்தம்!தனி ஒருவனாக -கடலை ஆகாய மார்க்கமாகத் தாண்டி -இடையில் ஏற்பட்ட இன்னல்களை சமாளித்து லங்கையில் புகுந்து எப்பேறப்பட்ட சாதனைகளைப் புரிந்திருக்கிறான்! .லங்கையை நான்கு அங்குலம் கூட விடாமல் சுற்றி தேடினான் ஹனுமான்.ராவண ராஜ்யத்தினுடைய கட்டுக் கோப்பையும் பாதுகாப்பு அரண்களையும் காவலர்களின் விழிப்புணர்ச்சியையும் கண்டு ஹநுமானே ஆச்சரியப்படுகிறார். ராவணனுக்குத் தெரியாமல் லங்கைக்குள் காற்றுக்கூடப் புக முடியாது போலிருக்கிறதே.

**வாயுரப்யத்ர நாஜ்ஞாத:**

**ச$_1$ரேதி$_3$ தி மதிர்மம**

*அங்கே புகுந்து ஹநுமான் ஆற்றிய ஸாஹஸச் செயல்களையும் ஜாம்பவான் வாயிலாகத் கேள்விப்பட்ட ராமன் ஹநுமானுடைய ஆற்றலைக்கண்டு. தேஜோத்ருதி: என்ற பத்து திறமைகளைச் சொல்கிறார். சிறிது கூடத் தன்னுடைய தைவத் தன்மையை உபயோகப்படுத்தாது - ஸாதாரண மானுட இயல்புகளின் மிகச்சிறந்த ஸாதனைகளை ஆராய்ந்து எடை போட்டு மதிப்பீடு செய்திருக்கிறார் ராமன். பிறகு ஹநுமானிடமே சொல்கிறார் மனோ தைரியம், கூரிய பார்வை, மதிநுட்பம், செயவாற்றலில் லாகவம், இவையெல்லாம் உன்னிடம் உள்ளது போல வேறு எவரிடமிருந்தாலும் அவருடைய முயற்சிகள் ஒரு நாளும் வீண்போகாது.*

***யஸ்யத்வேதாநி ச$_1$ த்வாரி வாநரேந்த்ரயத$_2$ாதவ।***
***த்$_4$ருதிர் த்$_3$ருஷ்டிர் மதிர்தா$_3$க்ஷ்யம்ஸ கர்மஸூ ந ஸீத$_3$தி ।।***

*ராமன்- தானே ராவணனை வதைத்து -ஸீதா தேவியை மீட்ட வெற்றியைக் காட்டிலும் -ஹநுமான் தனி ஒருவனாக லங்கையில் புரிந்த ஸாதனைகள் மிகமிகச் சிறந்தவை என்கிறார்.*

*ராமன் நினைத்தார் ''ராவணனுக்கு ஹநுமானின் பராக்ரமம் பெரிய எச்சரிக்கையாக அமைந்தது. இன்றேல் அவன் தேவியை கொன்றிருப்பான். அடங்காப் பிடாரியான ராவணன் மேலும் கொடுமைகள் செய்ய தயங்கினான் என்றால் - அதற்குக் காரணம் ஹநுமானின் ஆத்மபலம்''*

*இதை க்ஷேமேந்த்ரன் என்ற மஹாகவி சுட்டிக்காட்டுகிறார்.*

***ஸீதாம் ஹந்யாம் இதி க்ருத்$_3$ே$_4$தா ராவணோ யாவ தா$_3$பதத்।***

***தாவத்$_3$ பீ$_4$தோ நிவவ்ருதே ஹநுமந் சி$_1$ந்தயா க$_1$ல: ।।***

*இத்தகைய உண்மையான குணநலன்கள் பெற்ற ஹநுமான் தன்னைப்பற்றி என்ன சொல்லிக் கொள்கிறார்? இதை தெரிந்து கொள்ள வேண்டாமா?*

*லங்கையில் ராமன் பெருமையைப் பறை சாற்றிவிட்டு - ஸீதா தேவியிடம் திரும்பிப் போவதற்கு விடைபெற வருகிறார். ஸீதாதேவி கேட்கிறாள்.*

*''குழந்தாய்! ஹநுமந்தா! என் பிரபு வாநரஸேனையை அழைத்து வந்து ராவணனை வென்று என்னை மீட்கப் போகிறார் - என்கிறாயே? இங்கே பார்த்தாயா? அரக்கர் பலத்தை! இந்த மஹா கொடூர அரக்கர் படையை வெல்ல வாநரப்படையினால் முடியுமா?*

*''என் தாயே! என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? எங்கள் சுக்ரீவ மஹாராஜாவின் படை ஸாமான்யமா? மஹாராஜாதான் வெறும் வாநரரா? இந்த பூமண்டலத்தையே முழுவதும் ஓடியே சுற்றியிருக்கிறார். அவர் ஓடாத திசையில்லை. மலை இல்லை. காடு இல்லை. தங்களைத் தேடுவதற்காக நான்கு திசைகளிலும் வாநர வீரர்களை அனுப்பினாரே! அவர்களுக்கு ஒவ்வொரு திசையிலும் - எங்கெல்லாம் ஒளியக் கூடிய இடம் இருக்கிறது? எங்கெல்லாம் தேவியைப் பதுக்கி வைத்திருப்பான் ராவணன் - என்று இடுக்கு முடுக்கெல்லாம் அடையாளம் சொல்லியிருக்கிறார். அவரைத் துரத்திக்கொண்டு ஓடியவாலி யினாலேயே அவரைப் பிடிக்கமுடியவில்லை. நானே அவருடன் ஓடமுடியாமல் ருச்யமூக பர்வதத்திலேயே தங்கிவிட்டேன். அந்த மஹாராஜாவின் படைபலத்தில் கடைக்குட்டி நான். என்னைக் காட்டிலும் எங்க மஹாராஜாவின் முன்னிலையில் தாழ்ந்தவர் ஒருவருமே கிடையாது.*

***மத்த: ப்ரத்யவர: கச்$_+$சித் நாஸ்தி ஸுக்$_3$ரீவ ஸந்நிதௌ$_4$ள।***

*நானே இங்குவந்து உங்களைக் கண்டுபிடித்துவிட்டேன். என்றால் மற்றவர்கள் எவ்வளவு பலிஷ்டர்கள்களாக இருப்பார்கள்? நினைத்துப்பாருங்கள்.*

*அஹம் தாவ$_3$திஹ ப்ராப்த : கிம்புநஸ்தே மஹாப$_3$லா:?*

''என்னப்பா! இப்படிச் சொல்கிறாய்? உன்னைக் காட்டிலும் பலிஷ்டன் உண்டா உலகிலே?

''அம்மா! சொன்னால் நம்பமாட்டேன் என்கீறிர்களே! ஒரு பெரிய ராஜ்யத்தில் - சேதி சொல்லி அனுப்ப பெரிய தலைவர்களையா அனுப்புவார்கள். கடைநிலை ஊழியரைத்தானே அனுப்புவார்கள். அதுபோல கடைநிலை ஊழியன் என்னை அனுப்பியிருக்கிறார்கள் - இதிலிருந்தே தெரியவில்லையா - நான் அதமாதமன் என்று?

*நஹி ப்ரக் ருஷ்டா: ப்ரேஷ்யந்தே*

*ப்ரேஷ்யந்தே ஹீதரே ஜநா:* ।

ஸீதாதேவி ஹநுமானுடைய விநயத்தைப் பார்த்துச் சிரித்துவிட்டாள், இவ்வளவு துயரத்தினிடைய ஸீதாதேவியின் முகத்தில் சிரிப்பைக்கண்டு ஹநுமான் பெருமகிழ்ச்சி அடைந்தார்.

''ஹநுமந்தா! நீ என்ன சொல்வாயோ! என்ன செய்வாயோ? தெரியாது. என்பிரபு நீண்ட புஜமுடையவர். அவர் தமது கரம் நீட்டி என்னை இந்த துயரப்படுகுழியிலிருந்து மீட்கவேண்டும் அப்படி நீ தான் செய்யமுடியும் என்கிறாள்.

*யத$_2$ா ச$_1$ ஸமஹாபா$_3$ஹு: மாம் தாரயதி ராக$_4$வ:*
*அஸ்தமாத்$_3$து$_3$: க$_2$ா$_2$ம்புஸம் ரோதா$_4$த் த்வம் ஸமாதா$_4$து மர்ஹஸி*

தன் பிரபுவான ராமனுக்கே தைரியமூட்டும் படி - ஹநுமானை வேண்டுகிறாள்-பராசக்தியான ஸீதாதேவி என்றால் ஹநுமானிடம் ஸீதாதேவிக்கு எவ்வளவு நம்பிக்கை? இத்தனைக்கும் காரணம் நாம் முன்னே எடுத்துக் காட்டிய ஹநுமானின் உயர்ந்த மனிதப்பண்புகள் தான்.

அவற்றின் சிகரம் விநயம் என்பதை உணர்த்துவதே இவ்வளவு விளக்கங்களின் நோக்கம்.

அரக்கர்களின் மிரட்டலைக் கேட்டுத் தத்தளித்த ஸீதாதேவி தன்னுடைய நீண்ட கூந்தலில் சுருக்குப்போட்டுக் கொண்டு பிராணத்யாகம் செய்யத் துணிந்துவிட்டாள். அப்போது சுபசகுனங்கள் தோன்றின. சிறிது மனது தைரியமடைந்து இந்த முயற்சியிலிருந்து பின் வாங்கினாள்.

இத்தருணத்தில் தான் ஹநுமான் அசோக மரக்கிளையில் இருந்தபடியே ராமாயண உபந்யாஸம் செய்தார். தேவிமனம் முழுதும் கலக்கம் நீங்கி தெளிந்தது.

உபந்யாஸத்தின் குரல் வந்த இடம் நோக்கித் தலைநிமிர்ந்தாள். அங்கே ஒரு குரங்கு. ஆனால் மனிதனைப் போல இடுப்பிலே சிகப்புலங்கோடு - மின்னல்கற்றைகள் சேர்த்துக் கட்டினது போன்ற வெண்சிவப்பு ஒளி, அசோக மரத்தின் மலர்ந்த புத்தம்புதிய மலர்களிடையே உருக்கப்பட்ட தங்க உருக்குப் போல் பளபளாவென்று கண்கள். ஆச்சரியத்தை மீறின பயம் ஸீதாதேவியைப் பற்றிக் கொண்டது, கண்களை மூடிக்கொண்டு விட்டாள்.

''இதென்ன கெட்ட கனவு? கனவில் குரங்கு வந்தால் அபசகுனம் என்பார்களே! இப்போது தானே நல்ல சகுனங்கள் ஏற்பட்டன. அதற்குள் இப்படி ஒரு கெட்ட கனவா?

**ஸ்வப்நே மயாயம் விக்ருதோSத்$_3$ய த்$_3$ருஷ்ட:**

**ச$_+$ா$_2$கா ம்ருக$_3$: ச$_+$ாஸ்த்ர கணை: நிஷித்த$_4$:**

உடன் கைகூப்பிப் பிரார்த்தித்தாள். "என் பிரபு நல்லபடியாக இருக்க வேண்டுமே! என் மைத்துனர் நல்லபடியாக இருக்கவேண்டுமே''.

அடுத்த கணம் நினைத்தாள் ''நான் தூங்கவே இல்லையே! இது கனவல்ல. நிஜம்தான். இது நிஜ வானரன் தான் நல்ல சேதி சொல்கிறானே!

**ஸுவ்யக்த ரூபச்₊ ச வதத்யயம் மாம்**

என்று தெளிவு பெறுகிறாள்.

இங்கு கவனிக்க வேண்டிய விஷயம் - ஹநுமானுடைய தர்சனம் அபசகுனம் என்று நினைத்தாளே தேவீ - அது சரிதானா?

உண்மை அது அல்ல - என்பதை அடுத்த கணமே தேவி புரிந்து கொண்டுவிட்டாள். கனவில் வாநரத்தைப் பார்த்தது சாஸ்திரங்களில் ''தவிர்க்கப்படவேண்டியது'' என்று கூறப்பட்டிருக்கிறதே - என்கிறாள் அன்னை.

துளஸீ ராமாயணத்தில் ஹநுமானே விபீஷணனிடம் கூறுகிறார். பொழுது விடிந்தவுடன் குரங்கை நினைத்தாலோ அதன் பெயர் சொன்னாலோ அவனுக்குப் பகல் சோறு கிடைக்காது.

**ப்ராத லேஇ ஜோ நாம ஹமாரா!**

**தேஹி தி₃ந தாஹிந மிலே அஹாரா!**

இத்தகைய தாழ்ந்த பிறவியான என்னிடம் "ராமன் கருணை காட்டுகிறார் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன். ராமனுக்குத் தாழ்ந்த வகுப்பினரிடம் எவ்வளவு பரிவு''

இவையெல்லாம் பாட்டிமார்களின் ஆதாரமற்ற பழமொழிகளே தவிர இவற்றிற்கு சாஸ்த்ர ப்ரமாணம் கிடையாது - என்கிறார் கோஸ்வாமி துளஸீதாசர்.

தயிர், பால், அட்சதை, மஞ்சள், அருகம்புல், கோரோசனம், சந்தனம்,தாம்பூலம், புஷ்பம், துளஸி, பிராமணன் இந்த வரிசையில்

**கே₃ாப் ருஷ்டம் கபிலாங்கூலம் ஜலபூர்ணக₄ட: ஸுமம்**

**மாங்கல்யா: ஸ்யுர்த₃ர் ச₊நாய ப்ராதர் மங்கள ஹேதவ:**

மங்கள வஸ்துக்கள் என்று மேதிநீகோசம் கூறுகிறது

பசுவின் பின்புறம் ,வானரத்தின் வால், நீர் நிரம்பிய குடம், புஷ்பம் இவை காலையில் தர்சனம் செய்யத்தக்க மங்கள வஸ்துக்கள்.

மங்களவஸ்துக்களுடைய தர்சனம் அமங்களத்தை தவிர்க்கும். மேன்மையை - நினைத்த மாத்திரத்திலேயே அளிக்கும். அதுவே பிரஹ்மம் பரம் பொருள். உயர்ந்த மங்கள வஸ்து.

**அசு$_+$ப$_4$ாநிநிராச$_1$ஷ்டே தநோதி சு$_+$ப$_4$ஸந்ததிம் |**
**ஸ்ம்ருதி மாத்ரேண யத்பும்ஸாம் ப்ரஹ்ம தந்மங்களம் பரம்! |**

என்று ஸ்ம்ருதி கூறுகிறது. ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது.

பகவந்நாமம், பகவத் சரிதம், பகவத் சரணம், சரணத்தில் அடிபணிபவர், அவர்கள் கால் வைத்த இடம், கைபட்ட பிராணி, இவையெல்லாம் உண்மையானவை, மங்களமானவை, புண்ணியமானவை, பகவானுடைய திவ்யமங்கள குணங்களை நினைவூட்டுபவை. அவை அழகானவை. மனத்திற்குப்பிடித்தவை - அவ்வவ்போது புதிது புதிதாக மனதிற்கு உற்சாகமளிப்பவை.

**ததேவஸத்யம் த$_3$து ஹைவ மங்களம்**
**ததே$_3$வ புண்யம் ப$_4$கவத் கு$_3$ணோ$_3$தயம்**
**ததே$_3$வ ரம்யம் ருசி$_1$ரம் நவம் நவம்**
**ததே$_3$வ ச$_+$ச்$_+$ வத் மநஸோ மஹோத்ஸவம்**

இத்தனையும் ஹநுமானை நினைத்தாலே நினைத்து ராம நாமம் சொன்னாலே கிடைக்கின்றதே.

விநயபத்ரிகாவில் கோஸ்வாமி கூறுகிறார்.

**மங்கள மூரதி மாருதநந்த$_3$ந**

**ஸகல அமங்க$_3$ள மூல நிகந்த$_3$ந**

**பவந தநய ஸந்தந ஹிதகாரீ**

**ஹ்ருத$_3$ய விராஜத அவத$_4$விஹாரீ**

ஹநுமான் இதயத்தில் அயோத்தியாதிபதி ராமனல்லவா விளக்குகிறார். அத்தகைய மாருத நந்தனன் மங்களமே வடிவானவன். ஸகலவிதமான அமங்களங்களையும் போக்குபவன் வாயுகுமாரன் - ஸாதுக்களுக்கு ஹிதம் செய்பவன்.

**ஸகல காஜ ஸூப$_4$ ஸமஇப$_2$லஸூகுநஸூமங்கள ஜாநு।**
**கீரதவிஜய விபூ$_4$தி ப$_4$லி ஹியப் ஹநுமாநஹி ஆநு.॥**

என்று துளஸீ தாஸர் ராமாஜ்ஞா ப்ரச்நத்தில் கூறுகிறார். ஆகவே ஸூமங்கள மூர்த்தியாக ஹநுமானை பார்த்தாலே -ஸகலகாரியங்களும் கைகூடும். வெற்றி புகழ் செல்வம் எல்லாம் தேடிவரும். ஹநுமான் உள்ளத்தில் இருந்தால் - என்கிறார்.

(1) ஹநுமானின் வடிவழகும் உடற்திண்மையும் அவருடைய பிரம்மசரியத்தினாலும் யோகாப்யாஸத்தினாலும் ஸாதிக்கப் பட்டவை. அதனால் வட நாட்டில் மற்போர் பயில்வான்கள் தமது வ்யாயாம (உடற்பயிற்சி) சாலைகளில் ஹநுமானுடைய படத்தையோ மூர்த்தியையோ வைத்து வணங்கி அவருடைய ஸாதனைகளை எண்ணி எண்ணி - அவற்றையே லட்சியமாகக் கொண்டு அதற்காகவே பயிற்சிகளை மேற்கொள்கிறார்கள்.

(2) அவருடைய ஆத்மபலம் -அதுவும் குருஸேவையினால் தாம் கற்ற புலனடக்கம் மன அடக்கம் இவற்றை அக்கரையோடு சாதித்து முன் சொன்ன 10 உள்ளத் திறமைகளை விடாமல் கடைபிடித்து -பலஸாதனைகள் புரிந்தார்.

இவ்விரண்டு ரீதியிலும் அவர் பெற்ற வெற்றிகளுக்குக் காரணம் தைவ பலம் அல்ல. ஸாதாரண மனிதனாலும் கூட ஹநுமானை லட்சியமாகக் கொண்டு அவற்றைக்கடைப்பிடித்தால் நிச்சயம் பல ஸாதனைகள் புரியலாம்.

ஹநுமானின் ஆத்மபலம் ராம நாம ஜபத்தினால் பெற்ற பயன் - சரிதவிஸ்தாரத்தில் தெரிந்து கொள்வோம்.

ஹநுமானின் ஸ்வரூபத்தைச் சிந்திப்பது அவரை தியானம் செய்வதற்கு ஸுலபமான வழி. அவருடைய ஸ்வரூபத்தை பலகவிகள் விஸ்தாரமாக வர்ணிக்கிறார்கள்.

மஹாபாரதத்தில் ஒரு வர்ணனை மின்னலைப் போல அவருடைய ஸ்வரூபதர்சனம் கண்களைக் கூசவைக்கும். மின்னல் அடிப்பது அவருடைய திருமேனி ஒளி. லேசான சிவப்பு மேலிட்ட முழுவெள்ளை ஒளியை வீசும். மின்னலுக்குப் பின் வருகின்ற கர்ஜனை போல இவருடைய குரல் ஒலிக்கும். ஒரு கணம் கிழக்கே தோன்றும் மின்னல் திடீரென வடக்கே பாய்வது போல் ஆகாயத்தில் இங்கும் அங்கும் எங்கும் தெரியும்

**வித்$_3$யுத் ஸம் பாத துஷ்ப்ரேக்ஷம்**

**வித்யுத்ஸம்பாத பிங்களம்**

**வித்$_3$யுத் ஸம் பாத நிநதம்**

**வித்$_3$யுத் ஸம்பாத சஞ்சலம்** (மஹாபாரதம் வனபர்வ)

நள்ளிரவில் ஸீதாதேவி - நிலவொளியில் தன்முன்னே நிற்கின்ற சிறு உருவத்தைப் பார்த்து சிரித்தாள். ''நீ என்னை முதுகில் தூக்கிக் கொண்டு போகப் போகிறாயா''? ஹநுமானுக்கு ரோஷம் வந்து விட்டது மரத்தடியில் நின்ற ஹநுமான் சற்றுப் பின்னே சென்றார். மரங்களற்ற வெட்ட வெளியில் போய் நின்ற ஹநுமானைப் பார்த்தாள். உடனே பூரணஒளியுடன் ஆகாயத்தில் சூரியன் உதயமானது போல வெளிச்சம். கிழக்கே மேற்கே தெற்கே வடக்கே - எங்கும் ஒரே வெளிச்சம். ஆகாயத்தில் பேரொளி. ஹநுமானின் திருமுகம் எங்கேயோ வெகு உயரத்தில். கீழே பார்த்தால் பாதாளம் தெரிகிறது. அங்கே ஹநுமானின் திருப்பாதங்கள்.

*ஸா திர்யக் ஊர்த்வம் ச தத$_2$ாப்யத$_4$ஸ்தாத்*
*நிரீக்ஷமாணா*
*ததர்ச வாதாத்மஜம்*
*ஸூர்யமிவோத$_3$யஸ்த$_2$ம்*।। வால்மீகி ஸுந்தரகாண்டம்

ஹநுமான் கடல்மீது பறக்கிறார். கன்னங்கரேலென்று நடுக்கடலில் தண்ணீர் அலைகளின்றி உருக்கு இரும்புத்தகடாகத் தெரிகிறது. அதன்மீது வெள்ளை வெளேரென்று ஒளியுடன் ஹநுமானின் நிழல் வீழ்கிறது

*ச்$_+$வேதாப்$_4$ர க$_4$நராஜீவ  வாயு புத்ராநு காமிநீ*।
*தஸ்ய  ஸா சு$_4$சு$_4$பே ச்ச$_2$ாயா  பதிதா லவணாம்ப$_4$ஸி* ।।

மஹாபாரதத்தில் பீமஸேநன் த்ரௌபதிக்காக ஸௌகந்திக மலர் தேடி - ஹிமவத் பர்வதத்தில் அலைகிறார். அங்கே ஒரு கிழ வாநரன் பாறையில் சாய்ந்து கொண்டு (ராம நாமத்தை) முணுமுணுத்துக் கொண்டிருக்கிறது. கண்கள் திறந்திருக்கின்றன. ஆனால் எதையும் பார்க்கவில்லை. மோவாய் குறுகியிருக்கிறது. தாமிரத்தகடு போல நாக்கு புரளுகிறது. சிவந்து சிறுகாதுகள். புருவம் பரபரவென்று சுருங்கி விரிகிறது. வரிசையான பற்களின் வேர் சிவந்திருக்கிறது. பற்கள் ஒவ்வொன்றும் கூராக வெள்ளை வெளேரென்று புடைத்திருக்கின்றன. முகத்தில் இளம் சிவப்பான ரோமங்கள் சந்திரனில் சூரியகிரண ஒளி பாய்ந்தது போல - சுடர் தணிந்த தீ போல கண்களுக்கு குளிர்ச்சியாக நீண்டு கிடக்கிறது-கண்கள் சிவப்பும் கருப்பும் கலந்து தேன் நிறத்தில் ஜொலிக்கின்றன

*ஹ்ரஸ்வோஷ்ட$_2$ம் தாம்ரஜிஹ்வாக்ரம் ரக்தகர்ணம் சல$_3$த்*
*ப்$_4$ருவம்* ।
*ஆரக்த மூல த$_3$ச$_+$நம் சு$_+$க்ல  தீக்ஷ்ணாக்$_3$ரசே$_+$ாபி$_4$தம்* ।।
*அப$_4$வத் வத$_3$நம் தஸ்ய*
*ரச்மிமந்தம் இவ உடுபம்* ।

*தீப்யமாநேந வபுஷா*

*ஸ்வர்ச்சிஷ்மந்தம் இவாநலம் ।।*

*அநுத்$_3$தி$_3$ஷ்டேக்ஷணம் க்வாபி*

*லோசநை: மதுபிங்களை: ।।* (மஹாபா - வநபர்வ)

லங்கை நோக்கி ஆகாயத்தில் பறக்கிறான் ஹநுமான். அந்தி மாலை சூரிய ஒளி அவருடைய முகத்தில் பரவுகிறது தடித்துப்புடைத்த மூக்கிலிருந்து பரவுகின்ற தாமிர ஒளி முகம் முழுவதும் பரவுகிறது. வெள்ளை வெளேரென்று கண்களைக் கூசவைக்கின்ற சூரியஒளி மீது வெளிவட்டத்தில் ஸந்த்யா காலத்தின் சிவப்பு நிறம் பரவுவது போலிருந்தது

*முகம் நாஸிகயா தஸ்ய தாம்ரயா தாம்ரம் ஆப$_3$பெ$_4$ள*

*ஸந்த்$_4$யயா ஸமபி$_4$ஸ்ப்ருஷ்டம் யதாஸ்யாத் ஸூர்யமண்டலம்।।*

காற்று மண்டலத்து ஆகாயத்தில் பாய்கின்ற ஹநுமானின் திருமேனியை மேகங்கள் மறைக்கின்றன. கண்கள் மட்டும் அந்த மறைப்பை மீறி - மலை உச்சியில் காணப்படுகின்ற - தீத்தழும்பு போல ப்ரகாசிக்கின்றன.

*தஸ்ய வித்$_3$யுத் ப்ர பா$_4$காரே*

*வாயு மார்கா$_4$நு ஸாரிண:*

*நயநே விப்ரகா சே$_+$தே*

*பர்வதஸ்தா விவாநலௌ ।।*

ஆகாயத்தில் பறக்கின்ற - ஹநுமானின் பச்சை லங்கோடிக்குள் மறைந்த புட்டம் செக்கச் செவேரென்று தெரிந்தது. மலைச்சிகரத்தின் வெடிப்பிலே காணப்படுகின்ற சிவப்பு சிந்தூரப் பிசின் பரவினாற்போல.

*ஸ்பி$_2$க்தேசே$_+$ நாதி தாம்ரேண*

*ரராஜ ஸமஹாகபி: ।*

*மஹதா தா$_3$ரிதேநேவ*

*கி$_3$ரி: கை$_3$ரிக த$_4$ா$_4$துநா ।।*

ஹநுமான் மஹேந்த்ர மலையிலிருந்து ப்ராணனை உள்ளடக்கி- குபீரென்று ஆகாயத்தில் பாய்ந்தார். அவருடைய துடைகள் இரண்டும் வேகமாக முண்டி - காற்றைப் பின் தள்ளின. அந்தத் துடைகளின் வேகத்தில் மலை உச்சியிலிருந்து மாமரங்கள் வேரோடு பிடுங்கிக்கொண்டு ஹநுமானோடு பின் தொடர்ந்தன. வெளியூருக்குக் கிளம்புகின்ற உறவினர்களைத் தொடர்ந்து சிறிது தூரம் உறவினர் போவதுபோல.

**ஊருவேகோ$_3$த்தி$_2$தா வ்ருக்ஷா**
**முஹூர்த்தம் கபி மந்வயு:** ।
**ப்ரஸ்தி$_2$தம் தீ$_3$ர்க்க$_4$ மத்$_4$வாநம்**
**ஸ்வப$_3$ந்து மிவ பா$_3$ந்த$_4$வா :** ॥

ஹநுமானுடைய மார்பின் மீது ராவணன் தனது இருபது கைகளாலும் முக்கித் தூக்கப்பட்ட பெரிய இரும்பு குண்டை எடுத்து வீசினான். அந்த குண்டு - ஹநுமானுடைய மார்பில் மோதி சுக்கு நூறாக உடைந்து தீபாவளி கம்பி மத்தாப்பு போல ஒளிப்பொறிகளாக் கீழே வீழ்ந்தது

**ஸ்தி$_2$ரே தஸ்ய உரஸி வ்யூடே$_4$ பரிக$_4$: சததா$_4$க்ருத:**
**விகீர்யமாண : ஸஹஸா உல்காசதம் இவாம்ப$_3$ரே** ॥

ராவணனுடைய கொடுமையான வசனங்களைக் கேட்ட ஸீதாதேவியின் காதுகளில் - அசோக மரக்கிளையில் அமர்ந்திருந்த ஹநுமான் ராமகதையென்ற அமுதத்தைப் பெய்து புத்துயிர் ஊட்டினார். குரல் வருகின்ற திசை நோக்கி ஸீதாதேவி அண்ணாந்து பார்க்கிறாள்.

ஒரு கணம் அவளுடைய மனது திடுக்கிடுகிறது. இடுப்பில் குறுக்கிக்கட்டப்பட்ட சிவப்பு லங்கோடு, மின்னல் ஒளி போல திருமேனி, அசோகமரத்து இலைகளின் சிவப்பை ஏற்று பளீரென்று தெரிகிறது உருக்கின தங்கம் போன்ற கண்களின் நிறம் பார்வையில் குளுமையை கொட்டுகிறது. ராம ராம என்ற குரல் இனிக்கிறது.

மனது அடங்கி நிம்மதியாகப் பார்க்கிறாள் அந்த ஹநுமானின் ஸ்வரூபத்தை

*தத: சா$_{+}$க$_{2}$ாந்தரே லீநம்*
*த்ருஷ்ட்வா சலித மாநஸா।*
*வேஷ்டிதார்ஜுந வஸ்த்ரம் தம்*
*வித்$_{3}$யுத்ஸங்க$_{4}$ாத பிங்க$_{3}$ளம்॥*
*ஸாததர்ச$_{+}$ கபிம் தத்ர*
*ப்ரச்$_{+}$ரிதம் ப்ரிய வாதி$_{3}$நம்।*
*புல்லாசோ$_{+}$ கோத்கரா ப$_{4}$ாஸம்*
*தப்த சாமீகரேக்ஷணம்॥*

இப்படியெல்லாம் ஹநுமத் ஸ்வருபத்தில் மனதை ஈடுபடுத்திவிட்டால் - ஹநுமானின் சாந்தமான - ராம நாமம் கூறுகின்ற முகம் நமது உள்ளத்தில் நிலைத்து நிற்கும்

*ஸ்ப$_{2}$டிகாப$_{4}$ம் ஸ்வர்ணகாந்திம்*
*த்$_{3}$வி$_{4}$புஜம் ச க்ருதாஞ்ஜலிம்*
*குண்ட$_{3}$ல த்$_{3}$வய ஸம்சோ$_{+}$பி$_{4}$*
*முக$_{2}$ாம்பு$_{3}$ஜ மஹம் ப$_{4}$ஜே*

ஸ்படிகத்தில் தங்கம் பாய்ந்தது போன்ற முகவர்ணம் கூப்பிய இருகரங்கள் காதுகளில் குண்டலங்கள் தாமரை போன்ற மலர்ந்த புன்னகை இந்த ஸ்வரூபத்தை நினைத்து ராம நாமம் சொல்வோம்.

*ராம மாத$_{2}$, முகுர ராம, ராமஸி$_{2}$ ரநயநராம*
*ராமக$_{3}$ாந, நாஸா ராம, டோ டீ$_{4}$ ராம நாம ஹை ।*
*ராம கண்ட$_{2}$, கந்$_{3}$தராம, ராமபு$_{4}$ஜா பாஜூ ப$_{3}$ந்த4*
*ராம ஹ்ருதய, அலங்கார, ஹார ராம நாமஹை ।।*
*ராமஉத$_{3}$ர, நாபி$_{4}$ ராம, ராம கடீ கடீஸூத*
*ராமப$_{3}$ஸந, ஜம்க$_{4}$ ராம, ஜாநுபைர ராம நாமஹை ।*

***ராம மந, வசந ராம, ராம க₃தா கடக ராம***

***மாருதிகே ரோம ரோம வ்யாபக ராமநாமஹை ।।***

*ஹநுமானுடைய ஒவ்வொரு ரோம வேரிலும் ராம நாமம் வ்யாபித்திருக்கிறது என்ற இந்தப் பாடல் இதுவரை சொன்ன ஹநுமத்ஸ்வருபத்தை ராம மயமாகக் காட்டுகிறது*

*துளஸிதாஸர் கூறுவார்.*

***தும்ஹரோ ப₄ஜந ராமகோ பாவை।***

*ஹநுமானே! உன்னைப்பார்த்தால் உன் சரிதத்தை நினைத்தால் ராமன் கிடைத்து விடுவான் - பல பிறவிகளில் செய்த பாவங்களின் பயனாக துயரங்கள் எல்லாம் தூள்தூளாகிவிடும்*

***மனைவியை முதல் பிரஸவத்திற்காகப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விட்டு இரவில் தன் கல்யாண போடோ ஆல்பத்தை எடுத்து வைத்துக் கொண்டு என்னென்ன காட்சிகள் மனத்தில் காண்பானோ, அதுபோல் இந்தவர்ணனை ஒவ்வொன்றையும் அசை பட்டால் வர்ணனையில் கூறப்பட்ட அந்த ஸ்வரூபங்கள் பளிச்சென்று மனத்தில் உதயமாகும்.***



## ஹநுமான் ஒரு ஸங்கீத மேதை

*சார்ங்கதேவர் என்ற - ஸங்கீத சாஸ்த்ரப்ராமாணிகர் ஸங்கீத ரந்நாகரம் என்று விஸ்தாரமான நூல் எழுதியிருக்கிறார். அதில் முன்னோர்களான ஸங்கீதாசாரியர்களின் பட்டியல் பின் வருமாறு காணப்படுகிறது*

***ஸதா$_3$சி$_4$வ: சி$_4$வோ ப்$_3$ரஹ்மா ப$_4$ரத: காச்யபோ முநி:!***
***மதங்கே$_3$ா யாஷ்டிகோ து$_3$ர்கா ச$_+$க்தி: சா$_+$ர்தூல***
***கோஹலௌ॥***

***விசா$_+$கிலோ த$_3$ந்திலச்$_+$ச சம்ப$_3$லோ அச்$_+$வதரஸ்த$_2$தா***
***வாயு: விச்$_+$வாவஸூ ரம்ப$_+$ா அர்ஜுநோ நாரத தும்பு$_3$ரு।***
***ஆஞ்ஜநேயோ மாத்ருகு$_3$ப்த: ராவணோ நந்தி$_3$கேச்$_+$வர:।***
***ஸ்வாதி: கண: தேவராஜ: க்ஷேத்ரராஜச்$_+$ச ராஹுல:॥***

*சாரதா தநயர் என்ற ஸங்கீத நிபுணர் தன்னுடைய பாவப்ரகாசம் என்ற நூலின் ஆரம்பத்தில் - திவாகரர் என்ற நாட்யா சார்யர் தமக்கு முன்னால் தோன்றிய ஸங்கீதாசார்யர்களிடமிருந்து கற்ற ஸங்கீத மரபுகளைப் பற்றிக் கூறுகிறார் - என்கிறார். ஸதா சிவன், கௌரீ, வாஸுகி வாக் தேவீ, நாரதர், அகஸ்தியர், வியாஸர் பரதமுனியின் சீடர்கள்*

***‘‘அஞ்ஜநா ஸூநோரப்பயத$_2$***
***நாட்ய வேத$_3$ மகி$_2$லம் ஸம்யக்***
***தமத்$_4$யாபயத்।***

*ஆஞ்ஜநேயருடையவும் நாட்யவேதத்தை தமது குருகுலத்தில் கற்பித்தார். அவர் சீடர்களுக்கு கற்பித்த ஆஞ்ஜநேய வந்தனத்தின் பகுதி*

***காயந்தம் ராம ராமேத்யதிரதி மதுரை:***
***ராக$_4$வம் ஸம்ஸ்மரந்தம்***

***ஸங்கீதாசார்யவர்யம் கபிகுல திலகம்***
***மாருதிம் நௌமி நாத$_2$ம்.*** ॥

*ஹநுமான் எழுதிய நூலின் பெயர் ஆஞ்ஜநேய ஸம்ஹிதா. மற்றும் சில நூலாளர்கள் ஹநுமத்ஸம்ஹிதா என்றும் குறிப்பிடுகின்றனர்.*

*தஞ்சை அரசன் ரகுநாத நாயகர் - தான் எழுதிய **ஸங்கீத ஸுதா** என்ற நூலில் சொல்கிறார் மற்றமுன்னோர்களைக் குறிப்பிடும் போது*

***ஜ்ஞாத்வாஞ்ஜநா நந்த$_3$ந ஸம்ஹிதாம் ச***
***விசார்யதாம் யாஷ்டிகஸம்ஹிதா ச*** ।

*என்று கூறுகிறார். அதில் ஆஞ்ஜநேய பாரதம் (என்ற பரத நாட்ய) நூலையும் குறிப்பிட்டு ஆஞ்ஜநேயர் யாஷ்டிக முனிவருக்கு ஸங்கீதவித்யையை கற்பித்தார் என்கிறார்.*

*சாரதா தநயர் தனது பாவப்ரகாசத்தில் ஸ்த்ரீகளின் காதல் குறிகளை விவரிக்கும் போது ''பொதுவாகவே எல்லாப் பெண்களுக்கும் இந்த ஸொகுஸு உண்டு என்பது மாருதியின் அபிப்ராயம் என்கிறார்.*

***யே பா$_4$வா ராக$_3$சிந்ஹாநாம்***
***ஸ்த்ரீணாம் உக்தா: ப்ருத$_2$க் ப்ருத$_2$க்*** ॥
***ஸாதாரணாஸ் தே ஸர்வாஸாம்***
***ஸ்த்ரீணாம் – இத்யாஹ மாருதி:***

*ஸம்ஸ்க்ருத நாடகவகைகளில் **''உத்ஸ்ருஷ்டிகாங்கம்''** என்று ஒரு வகை உண்டு. அதை ஆசார்யபரதர் ''ஒரே காட்சி உடையது என்கிறார். கோஹலர் இரண்டு என்கிறார். வியாஸர் ஹநுமான் முதலானோர் மூன்று காட்சிகள் உண்டு என்கிறார்கள்.*

***தஸ்யாங்கம் ஏகம் ப$_4$ரத:***
***த்$_3$வாவங்காவிதி கோஹல:*** ।
***வ்யாஸா ஞ்ஜநேய ப்ரமுக$_2$ா:***
***ப்ராஹுரங்கத்ரயம் யதா*** ॥

அந்தந்த பிரதேசங்களில் கிராமத்து நாட்டுப்பாடல்கள் என்ற வகை உண்டு. அவை ஸங்கீதஸ்வரங்களுக்குக் கட்டுப்படாதவை. ஆனால் கேட்க இனிமையாக இருக்கும்.

பத்ராசல ராம தாஸர் - தன்னுடைய ஸீதாகல்யாண ஸம்பிரதாய பஜனையில் ஸீதா கல்யாண வைபவத்தைக் காண வருகின்ற கிராமத்து மக்கள் - ஸீதையினுடையவும் ராமனுடையவும் அங்கலாவண்யங்களையும் அலங்கார விமரிசைகளையும் கற்பித்துப் பாடுகின்ற வகையில் சில கீதங்கள் பாடியிருக்கிறார். அவை ஒரு ராகத்திலும் அகப்படாதவை. ஆனால் கேட்டால் பரவசமளிக்கும். இவற்றை தேசீராகங்கள் - என ஆஞ்ஜநேயர் வகுத்திருப்பதாக ஸங்கீத ரத்நாகரத்தின் உரையாசிரியர் மல்லிநாதர் கூறுகிறார்

***தத$_2$ா ச ஆஹ ஆஞ்ஜநேய:***
***யேஷாம் ச்ருதிஸ்வர க்$_3$ராம***
***ஜாத்யாதி$_3$ நியமோ நஹி*** ।
***நாநா தே$_3$ச$_+$ ரதிச் ச$_2$ாயா:***
***தே$_3$சீ$_+$ராக$_3$ாஸ்து தே ஸ்ம்ருதா:*** ॥

பரதாசார்யர் ஸங்கீத ச்ருதி வகைகள் இருபத்திரண்டு என்கிறார். ஆனால் ஆஞ்ஜநேயரோ பதினெட்டுச் ச்ருதிகள் என்கிறார்.

***தத்ரவா த்வா விம்ச$_+$திச்$_+$ருதய: (பரதர்) :***
***அஷ்டாத$_3$சை$_+$வ$_S$ச்$_+$ருதய:***
***த்$_4$வநயோ$_S$ ந்யாஸ்து மூர்ச்ச$_2$நா;*** ॥

மற்றத்வனிகள் கார்வைகள் என்கிறார். இது பற்றி ரகுநாத நாயக் மன்னரும் ஸங்கீத ஸுதாவில் சர்ச்சை பண்ணுகிறார். முடிவில் கூறுகிறார் தேசீராகங்களை ஒதுக்கினால் பாடலின் பாவஸ்வாரஸ்யம் கெட்டுவிடும்.

நாரதர் ஒரு சமயம் கிம்புருஷ வருஷம் போய் ஹநுமான் நித்ய வாஸம் செய்கின்ற ஸ்தலத்திற்குப் போனார்.

வழக்கம் போல - மஹதீ என்ற வீணையை மீட்டிக் கொண்டு பகவன் நாமகீர்த்தனம் செய்து கொண்டு சென்றார். ராமத்யானத்தில் திளைத்திருந்த ஹநுமான் த்யானம் கலைய - ஆஸநத்திலிருந்து எழுந்து - நாரதரை வரவேற்றார். பரஸ்பர உபசாரங்களுக்குப் பிறகு இருவரும் அமர்ந்தனர்.

''ஆஞ்ஜநேயரே! இப்போது தான் கேள்விப்பட்டேன். தாங்கள் ஸங்கீத வித்யையிலும் வல்லவராமே! லக்ஷண நூல் கூட எழுதியிருக்கிறீராமே! யாரிடம் கற்றீர்? விபரமாகச் சொல்ல வேண்டும்.''

ஹநுமான் கூறினார் ''ஸகல வித்யைகளையும் குருநாதரான தக்ஷிணா மூர்த்தி தான் அநுக்கிரஹம் பண்ணினார். ஏகாந்தமாக இந்த பூமியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது ராம நாம கீர்த்தனம் பல ராகங்களில் நடக்கும். விருக்ஷங்களும் பட்சிகளும் கேட்டு தலை அசைத்து ரஸிப்பார்கள். தங்களைப் போன்ற பிறவிக்கலைஞர்களுக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ''

''வாயு குமாரர் அப்படிச் சொல்லக் கூடாது நான் முதலில் ராம ரஸிகன். அதற்குப் பின் ராக ரஸிகன். கானம் கேட்பதில் தான் எனக்கு ருசி. தயவு செய்து ஏதாவது நாம கீர்த்தனம் பாட வேணும்.

''தேவரிஷியான தங்களுடைய ராமஸங்கீர்த்தனம் கேட்டுத்தான் நான் த்யானம் கலைந்து எழுந்து வந்தேன். ஆனந்தமாக இருந்தது. அதைத் தொடர்ந்து கேட்க வேண்டும் தயவு செய்ய வேணும்.

நாரதர் ஆரம்பித்தார்

நாராயண ஹரி நாராயண ஹரி

நாராயண ஹரி நாராயண - என்று கம்பீர நாட்டையில் மஹதீவீணையை மீட்டிக் கொண்டே பாடினார். ஹநுமான் சுருதி சுத்தமான நாதமுடைய வெண்கலஜாலர்களை குரல் ஒலிக்கு மேல் போகாமல் தட்டிக் கொண்டு வாங்கிப்

பாடினார். வீணா நாதத்தில் மிதந்த நாரதரின் குரல் காதுகள் வழியாக ஹநுமானின் இதயத்தில் பாய்ந்தது. மெய்சிலிர்த்தது. நர்த்தனமாடினார் ஆகாசவீதியில் லட்சுமீஸமேதனாக நாராயணன் காட்சி அளித்தார். நாரத கானத்திற்கு அப்படி ஈடு கொடுப்பது பகவானுடைய வழக்கம்

**ஆஹூத இவ சீ₊க்ரம்மே த₃ர்ச₊நம் யாதி சேதஸி।**

என்று கூறுகிறார்.

வெகுநேரம் நீண்டது நாராயண நாம கோஷம் - மெல்லிய குரலில் தணிந்து - மஹதீ நாதம் மட்டும் இருவருக்கும் கேட்டது.

நாரதர் தோள் மீது சாய்ந்திருந்த மஹதீ வீணையை எடுத்து எதிரிலே இருந்த வழவழப்பான பாறை மீது - முதலில் தன் உத்திரீயமான பீதாம்பரத்தை விரித்து - அதன்மீது வைத்து -ஹநுமானுக்குக் கை கூப்பினார்.

ஹநுமான் மலர்ந்த முகத்துடன் இதுவரை காதில் நிறைந்திருந்த மஹதீயின் சுருதியைத் தாங்கி -ஆழ்ந்த கம்பீரமான குரலில் ''ஓம்'' என்று இரண்டு நிமிடம் மெல்லிய ஓசையில் ஆரம்பித்து மெதுவாக கனத்து ஆகாயம் நிரம்பி ஓசையாக ப்ரணவ நாதத்தை எழுப்பினார். பின் அமரிக்கையான இழையில்

**ஸாரிகாரி ஸரிகாரி கரிகரிநி ஸாரிகா**

**ஸ்ரீராம ஜயராம ஜயஜய ராம!**

ஆரம்பித்தார்.

''ஆஹா! ஹநுமத்தோடியல்லவா? தங்களுக்கு உரிமைப்பட்டதல்லவா!'' என்று பரவசப்பட்டார் நாரதர். இதை ஆரம்பத்தில் ஒவ்வொரு ஸ்வர ஸ்தானத்திலும் ஏற்றிப்பாடி மேல் ஷட்ஜம் மேல் காந்தாரம் பஞ்சமம் வரை உயர்த்தி - அங்கு பல தடவை நிறுத்திப்பாடி பிறகு மெதுவாக அதே வரிசையில் ஒவ்வொரு ஸ்வரமாக இறக்கி கீழ் ஷட்ஜம்

- கீழ்ப்பஞ்சமம் வரை பாடி ஆதார ஷட்ஜத்திற்கு ஏற்றிப்பாடி நிறுத்தி - ப்ரணவத்தில் சுருதியோடு சேர்ந்தார்.

இது வரை இருவரும் தன் நிலை மறந்திருந்தனர். நிறுத்திய பிறகும் அவர்கள் கண்திறக்கவில்லை. மௌனமாக நாதத்தில் திளைத்திருந்தனர்

ஹநுமான் கண் திறந்தார். எதிரே பாறையில் வைத்திருந்த நாரதரின் வீணையைக் காணோம்.

''உங்கள் வீணை......................................

நாரதர் ''எங்கே என் வீணை?''

நெருங்கிப் பார்த்தார். எதிரே இருந்த கற்பாறை உருகி - வீணை அதிலே மூழ்கிவிட்டது. கானம் நின்றதும் பாறை கெட்டிப்பட்டு விட்டது. பாறையின் மேல் மட்டம் ஈரமாக மிகவும் கெட்டியாகிவிட்டது.

நாரதர் தவித்துப் போனார்.

''மாருதே! உம்முடைய ப்ரஹ்மகானத்தில் - மலைப்பாறையே உருகிவிட்டதே! அதில் மூழ்கிவிட்டதே என் வீணை! என் செய்வேன்!'' என்று புலம்பினார்.

ஹநுமான் கூறினார் ''கவலைப்படாதீர்! இதோ கிடக்கிறதே மற்றொரு பாறை. அதைத்தூக்கி இதன் மேல் போட்டால் பாறை உடைந்து விடும். உள்ளே இறங்கி தங்கள் வீணையை எடுத்துத் தருகிறேன்.

நாரதருக்கு கோபம் வந்து விட்டது ''ஏனையா! உம்மைப் பாடத்தானே சொன்னேன். பாறையை உருக்கவா சொன்னேன்?

''நான் எங்கே உருக்கினேன்? நான் பாடினேன். அதுவாக உருகி விட்டது - நாம் இரண்டு பேருமே கவனிக்கவில்லை.

''நாராயண வாஸுதேவ பரம்தாம பரம புருஷா - என் வீணை போய் விட்டதே!''

ஸ்ரீராம ஜயராம ஜயஜய ராம ... என்று ஹநுமானும் நாமாவளி ஆரம்பித்தார். நாமாவளி கேட்டு நாரதர் வீணையை மறந்தார். சற்று நேரம் ஆயிற்று. பாறை உருக ஆரம்பித்தது ஹநுமான் மகிழ்ச்சியுடன் நாமாவளியைத் தொடர்ந்தார்.

நாமாவளியை யிடையே ஹநுமான் கூறினார்.

''அதோ பாரும்! பாறை உறுகி ஓடுகிறது. உமது வீணை வெளிப்படுகிறது.''

நாரதர் ஆச்சர்யத்தில் குதித்தார். ''ஹநுமானே இன்னும் கொஞ்சம் ராம கீர்த்தனம் பாடுமையா! வீணையின் குடம் வெளிப்பட்டதும் அதை எடுத்துக் கொள்கிறேனய்யா!'' என்று கெஞ்சினார்.

ஹநுமான் மேலும் பாடினார். மஹதீவீணை கொஞ்சம் கூட நனைந்த ஈரம் தெரியாமல் நாரதர் கையில் அகப்பட்டது. எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டார்.

''ஜயஸ்ரீராம்'' என்று கோஷம் போட்டார். நாமாவளி நின்றது பாறை. கெட்டிப்பட்டுவிட்டது.

நாரதர் வீணையை முதுகில் சாய்த்துக் கொண்டு ஹநுமான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்; எழுந்திருந்தார்.

''ஹநுமானே! ஒரு வேண்டுகோள்! இனி நீர்பாடக் கூடாது. இன்று நீர் இன்னும் சற்று நேரம் பாடியிருந்தால் ஹிமவத் பர்வதம் உருகிப் போயிருக்கும். பாரத புண்ய பூமியே உருகிப் போயிருக்கும். உங்களுடைய கான நாதத்திற்கு - ப்ரளயத்தையே கொண்டு வர சக்தி இருக்கிறது. எல்லோரும் உரக்க ராம ராம சொல்லட்டும். நீர் மட்டும் மௌனமாக ராம ராம சொல்லும்'' என்றார்.

இன்று கூட உலக வழக்கில் ஒரு ஸங்கீத வித்வான் - நன்றாகப் பாடிவிட்டால்'' வித்வான் ப்ரளயமாடிவிட்டார்'' என்று வழக்குச் சொல் இந்த நிகழ்ச்சியில் பிறந்தது தான்.

## 4.ஹநுமானின் திருவருள்

*தும உபகார ஸுக்$_3$ரீவ ஹி கீந்ஹா।*

*ராம மிலாய ராஜப$_3$த தீ$_3$ந்ஹா ॥*

ஜய ஜய ஹநுமானே நீங்கள் சுக்ரீவனுக்கு உபகாரம் செய்தீர்கள். ராமனுடன் சேர்த்து வைத்து - அரசுப்பதமளித்தீர்கள்.

*தும ஹரோ மந்த்ர விபீ$_4$ஷண மாநா।*

*லங்கேச்$_+$ வர ப$_4$யே ஸப$_3$ஜக$_3$ ஜாநா ॥*

உம்முடைய ஆலோசனையை விபீஷணன் மதித்தார். லங்காபதி ஆனார். இதை உலகம் முழுவதும் அறியுமே. கோஸ்வாமி துளஸி தாசர் ஹநுமான் சாலீஸா - என்ற ஸ்தோத்திரத்தில் ஹநுமானுடைய அருட்திறனை இவ்விதம் சொல்கிறார். சுக்ரீவனுடைய மனைவி செல்வங்களத்தனையும் பிடுங்கிக் கொண்டு வெளியே விரட்டினான் வாலி. நல்ல வேளையாக ருச்ய மூகபர்வதத்தில் - வாலி நுழைய முடியாது - என்ற ரஹஸ்யத்தை ஹநுமான் எடுத்துச் சொன்னார்.

அங்கு போய் ஒளிந்து கொண்டான். வெளியே தலை நீட்ட முடியாமல் பதுங்கிக் கிடந்தான். இந்தத் துன்பத்திலிருந்து மீள்வதற்கு வழி தெரியாமல் பரதேசியாக நாட்களைப் போக்கினான். அரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய். அந்த மலைக்குக் கீழே மரத்தைச் சுற்றி வந்து கிளைகளைப் பார்த்துக் கொண்டிருந்த ராமலட்சுமணர்களை வாலியுடைய உளவாளிகளே என்று பயந்தான். நிம்மதியாக வாழமுடியுமா? அடுத்த நேரம் எப்படித்தாக்குவானோ தமையன்? என்கிற கிலியில் வாழ்ந்தான்.

நிர்கதியாக கிடந்த அவனுக்கு உபகாரமாக ராமனுடைய நட்பைத் தேடிக் கொடுத்தீரே. அந்த பிரபுவின்

மூலம் வாநரஸாம் ராஜ்யத்தையே பெற்றுக் கொடுத்தீரே!. ஹநுமானே

மனைவி மக்களைப் பறி கொடுத்து விட்டு தமையனாரால் இடது காலால் சீ என்று உதைபட்டு நிர்கதியாக உங்களைச் சரணடைகின்றேன் என்று வந்தான் விபீஷணன். ராமன் திருவடிசேவை கிடைத்தால் போதுமென்று தானே வந்தான்! அவனைப்பற்றி ஹநுமான் ஆலோசனை சபையில் பேசுகிறார். ''துஷ்டனான தமையனை வதைத்து ஸாதுவான தம்பி சுக்ரீவனுக்கு வாநர ஸாம்ராஜ்யம் அளித்தீர்களல்லவா? அதைத் தெரிந்து கொண்டு தாங்கள் தனக்கும் துஷ்டத் தமையனை வதைத்து லங்கா ராஜ்யத்தை அளிப்பீர்கள்'' - என்ற எண்ணத்தோடு வந்திருக்கிறான் விபீஷணன். அவனை நம்பலாம். சேர்த்துக் கொள்ளலாம்'' - என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த விபீஷணன் - பிழைத்தால் போதும் என்று வந்தவன் ராமனிடம் கூறுகிறான்.

**ப$_4$வத் க$_3$தம் மே ராஜ்யம்ச$_1$ தா$_3$ராணி ச ஸுகா$_2$நி ச**

''எனக்கு லங்கா ராஜ்யமும் மனைவி மற்ற சுகங்களும் கிடைப்பது உங்கள் கையில் உள்ளது''.

ஏன் இப்படிச் சொன்னான்?

ஹநுமான் ராமனிடத்தில் சொன்ன வார்த்தைகளிலிருந்து ஸூசனை பெற்று இப்படிச் சொன்னான். இதையே கூறுகிறார். கோஸ்வாமி.

**தும்ஹரோ மந்த்ர விபீஷண மாநா।**

உங்கள் ஆலோசனையை விபீஷணன் மதித்தான் என்கிறார்.

ஹநுமானை ப்ரத்யட்சமாக தர்சித்தார் துளஸி தாஸர். அவருடைய ஸஹாயத்தினால் - அவர் காட்டிய வழியில் முயற்சி செய்து காரியத்தில் வெற்றி பெற்றவர். அவர் இந்த

ஸ்தோத்ரத்தில் - தான் பெற்ற வெற்றிக்குரிய வழியைக் காட்டுகிறார்.

மற்ற தெய்வங்களின் ஸ்தோத்ரங்களில் - கடைசியில் ''இதைப்பாராயணம் செய்தால் - வேண்டிய விருப்பங்கள் நிறைவேறும். செல்வம் கொழிக்கும். தொல்லைகள் எல்லாம் தீரும்'' இவற்றைப் பாராயணம் பண்ணிப் பண்ணி - ப்பயனுக்காக காத்திருப்போம் - என்று தான் பலர் நினைக்கிறார்கள். ஆனால் கோஸ்வாமியின் அநுபவம் வேறுவிதம்.

ஹநுமானைப் பற்றிக் கொண்டு ராம நாமம் சொல்லிக் கொண்டு ஹநுமானைப் பிரார்த்தித்தால் அவர் எவ்விதம் அருள்வார் - என்றால் இவ்விதம் என்கிறார்.

ஹநுமானை நினைத்தால் புத்தி கூர்மையாகும். எடுத்த காரியத்தைச் செய்து முடிக்க நல்ல உடல் பலம் கிடைக்கும். அப்படி முயற்சி செய்தால் அந்த நேர்மையான முயற்சியைப் பாராட்டுவார்கள். காரியம் நிறைவேறத் தாமதமானாலும் விடாமல் முயற்சி செய்வோம் ?- என்ற தைரியம் வரும். இடையே இடையூறுகள் வந்து பயமுறுத்தும். அதற்கு அஞ்சமாட்டேன் என்று உறுதிவரும். விடாமுயற்சியால் உடலும் மனமும் சோர்வு அடையும். அப்போது ராம நாமம் சொல்லித் தேற்றிக் கொள்வோம். சோம்பலே வராது. தகுந்தவர்களிடம் தக்கபடிப் பேசுவதற்கு வாக்கு வன்மை வரும். இப்படி ஹநுமான் நமது காரியத்திற்கு வேண்டிய தகுதியை, திறமையை, ஊக்கத்தை, நமக்குத் தருவார்.

காரியவெற்றியை ஹல்வாத்துண்டு போல பிளந்த வாயில்போடமாட்டார். ஒரு நன்மை பெற விரும்பினால். அந்தநன்மை அடைவதற்குரிய தகுதியை வளர்த்துக் கொள்ள வேண்டும். இது தான் நமது வைதிகமதம் காட்டுகின்ற வழி.

எல்லோரும் தைவத்தினிடம் அது வேண்டும் இது வேண்டும் - என்று என்னவெல்லாமோ வேண்டுவார்கள்.

நம்முடைய முயற்சியின்றி எப்படி நமக்கு கிடைக்கும் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

வேதம் - நாம் தெய்வத்திடம் எதைப் பிராத்திக்க வேண்டும் என்று சொல்லிக் கொடுக்கிறது. நாம் தினம் தோறும் ஜபம் செய்கின்ற காயத்ரீ மந்த்ரத்தின் பொருள் இதுதான்.

''தெய்வமே! உன்னைத் தியானம் செய்து இதைத்தான் வேண்டுகிறேன். நான் எடுத்த காரியத்தைச் செவ்வனே செய்து முடிக்கும் வழியில் - என்புத்தியை செலுத்துவாயாக''

புத்தியில் நேர்மையும் நல்லெண்ணமும்- செய்கின்ற காரியம் உலக நன்மைக்காகப் பயன்பட வேண்டும் அப்படி கிடைக்கின்ற உலக நன்மையினால் - நான் மகிழ்கிறேன். என்ற நோக்கமும் இருந்தால் அது கண்டிப்பாக நிறைவேறும். கபடமும் சுயநலமும் மட்டுமே பிரார்த்தனையின் குறியானால் -தெய்வம் துணை வராது.

இன்று கூட பலபல பெரியகாரியங்களை - ஸாதாரண மனிதர்கள் செல்வ பலமோ -ஆள் பலமோ - இல்லாதவர்கள் இடைவிடா முயற்சியினால் ஸாதித்துக் கொண்டிருப்பதை பார்க்கிறோம்.

எத்தனை வேத பாட சாலைகள்! எத்தனை கிராம தேவதைக் கோயில்கள் - எத்தனே பசுஸம்ரக்ஷண சாலைகள் எத்தனை இலவச முதியோர் இல்லங்கள்? இவற்றை ஆடம்பரமில்லாமல் தம்பட்டமில்லாமல் -மௌனமாக சாதித்துச் கொண்டிருக்கிறார்கள். அதனால் எழை ஜனங்கள் பலர் மன நிம்மதி கவலை நீக்கம் அடைகிறார்கள்.

இவர்கள் அனேகமாக ராம நாமத்தையே அநவரதம் சொல்பவர்களாக பிரசாரம் செய்பவர்களாக, ஹநுமானின் பக்தர்களாக விளங்குகிறார்கள். அவர்களுக்கு ஹநுமான் ஒவ்வொரு செயலிலும் கைக்கொடுக்கிறார் - என்பது கண்கூடு.

ஹநுமானை வழிபடுபவர்களுக்கு முக்கியமான தேவை வாயில் ராம நாமம், செயலில் நேர்மை, விடாமுயற்சி, இவ்வளவு தான்.

சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள். ஆனால் உண்மை அது.

பெரிய க்ஷேத்ரங்களில் பெரிய பெரிய கோவில்கள் அங்கெல்லாம் மஹத்தான விழாக்கள் கூட்டம் எல்லாம் உண்டு. ஆனால் ஹநுமானை வழிபடுபவர்களுக்கு இதெல்லாம் லட்சியமல்ல. தெருமுனையில் சின்னக் கோயில். அதில் ஒரு ஹநுமான். பெரிய பெரிய கோவில்களில் - ஏதோ ஒரு மூலைத் தூணில் ஹநுமான். அந்த மூர்த்தியை நெருங்கி - ஹநுமானின் கால்களைப் பிடித்துக் கொண்டு.

''ஸஞ்ஜீவராயா! மாருதிராயா! இதோ பார் பேபரில் ராம நாமம் எழுதி - அதை மடித்து நூலில் கோத்து ஒரு ஹாரம் கொண்டு வந்திருக்கிறேன். இவ்வளவு தான் என்னால் முடிந்தது. நான் படுகின்ற கஷ்டம் தாங்கமுடியவில்லை. குடும்பத்தை விட்டுவிட்டு ஒடிப்போய் விட முடியுமா? கொஞ்சம் கருணை காட்டு அப்பா! என்று மனமுருகி வேண்டுவர். பின்னால் ஒருவர் ராம ராம ராம என்பார். இவரும் கூடச் சொல்வார் - தூணை வலம் வந்து விட்டு ராம ராம என்று முணு முணுத்துக் கொண்டே போய்விடுவார். அவருக்கு நிச்சயமாக ஏதாவது மன நிம்மதி கிடைத்திருக்கும். எப்படி என்றால் மறுநாளும் மாலை தொடுத்துக் கொண்டு வருகிறாரே!

இப்படி இவர் தினம் கோஷம் விடுவதைப் பார்த்து மற்றவரும் அந்த ஹநுமானைச் சுற்ற ஆரம்பிக்கிறார். அவருக்கு அவ்வளவு தான் நேரம் கிடைக்கிறது. உள்ளே போய் கோயிலின் பிரதான தெய்வத்தை வழிபட வேண்டும் என்றே தோன்றாது.

ஆகம முறைப்படி கோவில் கட்டி - சாஸ்த்ர முறைப்படி ஸகல லக்ஷணங்களுடன் கூடிய ஒரு

சிலாவிக்ரஹத்தை -பிரதிஷ்டை செய்து (கண் திறந்து விட்டு) -குடமுழுக்கு நடத்தி, பூஜைக்குத் தகுதி பெற்ற அர்ச்சகர்களை நியமித்து, அன்றாட பூஜைகள் நடந்து வரும் கோவில்களில் தான் தெய்வம் பிரஸந்நமாக இருக்கும் - என்பது தான் எல்லாருடைய நம்பிக்கை.

ஆனால் ஹநுமான் விஷயம் வேறு. காஞ்சி மஹாஸ்வாமிகள் (முன்னொரு அத்யாயத்தில் எழுதியிருப்பது போல்) சொல்வார். ஹநுமான் ராம நாமம் யார் சொன்னாலும் எப்படிச் சொன்னாலும் எங்கே சொன்னாலும் அங்கெல்லாம் ப்ரஸந்நமாக இருப்பார் என்ற பக்தர்களின் அசைக்கமுடியாத நம்பிக்கையின் அடிப்படையில் ஹநுமான் ஸர்வஸுலபராக ப்ரஸன்னமாக இருக்கிறார். ஒன்றுமறியாத பரமஏழை பக்தி - என்ற எண்ணமே இல்லாமல் பொறுக்க முடியாத தொல்லையில் அகப்பட்டவன் - எங்காவது ஹநுமானின் படத்தையோ பிம்பத்தையோ பார்த்து - ராம ராம ராம என்று கூவி அழுது - தன் தொல்லையை விண்ணப்பித்தால் அங்கு அவருடைய தொல்லையை தீர்க்க ஹநுமான் கருணையோடு விழைகிறார் - என்பது அநுபவ உண்மை இது தான் ஹநுமானுடைய தனிப்பட்ட அருட்பரவசம்.

அதனால் தான் - முறைப்படி அமைந்த கோவில்களில் கோவில்முறைப்படி அர்ச்சகர் மூலம் வழிபாடு நடத்தி - ஹநுமான் அருளைப்பெற நமக்கு வக்கில்லையே - என்று வருந்தாமல், தூணிலும் சுவற்றிலும் காலண்டரிலும் தர்சனம் அளித்த ஹநுமானை-அங்கே ப்ரஸந்நமாக இருக்கிறார் - என்று நம்பி. தன் இஷ்டப்படித் தொட்டுவணங்கி - கையில் கிடைத்ததை அர்ப்பணம் செய்து - ராம ராம - என்று சொல்லி நம்பிக்கையோடு நிம்மதியாக இருக்கிறார்கள். இவர்களுக்கு ஹநுமான் பிரதான தெய்வமாக வீற்றிருக்கின்ற கோவில்களில் தர்சனம் செய்ய வாய்ப்பு கிடைத்தால் விடுவார்களா? அங்கும் போய் அர்ப்பணம் செய்வதற்கு

வேண்டிய பொருளோ - தட்சிணையோ இல்லாவிட்டாலும் - ஸந்நிதியில் நின்று - வழிபாடு செய்து திரும்புகின்ற பக்தர்களை வணங்கி - ராம ராம ராம - என்று பாடி மனம் மகிழ்கிறார்கள். இப்படி வழிபடலாம் - என்பதற்கு ஏதாவது சாஸ்த்ரம் இருக்கிறதா - என்று அவர்கள் தேடவில்லை. இந்தக் கபடமற்ற அப்பாவி உள்ளங்களில் ராம நாமம் குடி இருப்பதால், இதை அறிந்த ஹநுமான் இவர்களைத் தானே ஈர்க்கின்றார். இதற்கு சாட்சிகள் பல இடங்களில் கிடைக்கின்றன. அவற்றில் இவ்வளவு தத்துவம் உண்டு என்று சிந்தித்துப் பார்த்தவர்கள் தான் ஹநுமானின் பரமக்ருபையின் ரஸத்தை அநுபவிக்க முடியும் என்கிறார்கள் காஞ்சீ மஹாஸ்வாமிகள்.

கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழி - தானும் அது வாக பாவித்து என்ற பாடலின் கருத்துக்கு ஏற்ப இந்த அப்பாவிகளின் மன நிம்மதியைக் கண்டு நம்பமுடியாத - விவேகிகள் அவர்களைப் பைத்யக்காரன்கள் என்று அலட்சியம் செய்வார்கள். அவர்களைக் கண்டு ஹநுமான் சிரிப்பார். உங்களுக்கு பக்தியும் இல்லை. நம்பிக்கையும் இல்லை. சிரத்தையும் இல்லை. நீங்கள் கோவிலுக்குப் போய் படாடோபமாக வழிபாடு செய்து விட்டு- பார்த்தீர்களா! ஹநுமானின் அலங்காரத்தை! புஷ்பம் மாத்திரம் ஆயிர ரூபாய்க்கு மேல் ஆகிவிட்டது. பிரஸாத சர்க்கரைப் பொங்கலுக்கு - நானே என்கையால் அரைகிலோ நெய் ஊற்றினேன். எப்படி இருக்கிறது? பார்த்தீர்களா- என்று பெருமைப்படுகிறவனை ஹநுமான் திரும்பியே பார்க்கமாட்டார்.

யுத்த களத்தில் -தன் எதிரே கதாயுதத்துடன் போர் புரிவதற்காகக் காத்திருக்கின்ற ஹநுமானைப் பார்த்து - ‘‘எங்கே ஐயா உங்க ராமன்? என்று அலட்சியமாகக் கேட்டான் - அகம்பனன் என்ற அரக்கன்.

''எதற்கு கேட்கிறாய்''

''அவனோடு போர் புரிய விரும்புகின்றேன்''

''அதற்கு உனக்கு யோக்யதை இருக்கிறதா!''

''என்னைக் காட்டிலும் மஹாவீரனோ அவன்?''

''எனக்கு பதில்சொல்லி விட்டு உன் கேள்வியைக் கேள்.'' என்று கூறிக்கொண்டே ஹநுமான் வாலை சுழற்றினார். அது அவனுடைய ரதம் குதிரைகள் தேரோட்டிகளோடு அவனையும் சேர்த்து - இழுத்தது. இந்த வால் உயரத்தூக்கியது. உதறியது. அவையெல்லாமே அக்கக்காக உடைந்து பிரிந்து வீழ்ந்தன. அகம்பனன் ஒரு கால் உடைந்து, நொண்டிக்கொண்டே வெகு தூரத்தில் நின்று சவால்விட்டான். ஹநுமான் சிரித்தார்.

ஹநுமானை அகங்காரத்தோடு அணுகக் கூடாது - பக்தி பண்ணிப் பணிய வேண்டுமென்பதில்லை. ராம நாமம் கூறி அணுகினால் போதும், அணுகுகிறவனுடைய அவலங்களை கணிக்க மாட்டார் ஹநுமான். ராம நாம ரஸத்தை உறுஞ்சுவார். அவனுடைய கார்யமெல்லாம் கைகூடும். ஆனால் அந்த கார்யம் - நல்ல எண்ணத்தோடு - பிறருக்குத் துன்பம் இழைக்காதவாறு இருக்க வேண்டும் சில சமயம் நல்லஎண்ணத்தோடு கபடமல்லாத மனதுடன் சிலர் வேண்டுவர். அது நிறைவேறாது போய்விடும். அது ஏன்?

ஒரு உண்மை நிகழ்ச்சி சமீபத்தில் கண்ணெதிரே நடந்தது. பெயர்களை மாற்றி நடந்ததைச் சொல்வோம்.

ராமசாமி - ஒரு மேல்நிலைப்பள்ளி ஆசிரியர். சில ஆண்டுகளுக்கு முன் குறைந்த சம்பளம். அவருக்கு ஒரு சகோதரி. பெரிய இடமாகப் பார்த்து - கல்யாணம் செய்து வைக்கத் தக்க பொருளாதாரம் இல்லை.

ஒரு சோப்பு கம்பெனியில் விற்பனையாளராக வேனில் எடுத்துப்போய் நகரங்களில் கிராமங்களில்

கடைகளுக்கு விநியோகம் செய்து, விற்பனைக்குரிய துகையை அடுத்த ஸப்ளையின் போது வசூல் செய்து, கம்பெனிக்குச் செலுத்துகின்ற வேலை. விற்பனைத் திறனுக்கும் வசூல் திறனுக்கும் ஏற்ப - மாத வருமானம் கமிஷன் -கூடும், குறையும், அந்த கோவிந்தனுக்கு சகோதரி ரேவதியை மணம் முடித்து வைத்தார்.

ராமசாமிக்கு குழந்தை இல்லை. ரேவதிக்கு மறு வருஷம் ஓர் ஆண் குழந்தை பிறந்தது கோவிந்தன் வாடகை அதிகம் கொடுக்க முடியாத நிலையில் நகரத்தின் ஒதுக்குப் புறமான இடத்தில் சொற்ப வாடகையில் குடி இருந்தான். ரமேஷ்க்கு ஐந்து வயதாயிற்று.

ராமசாமி மருமகனைத் தன் பள்ளிக்கூடத்தில் சேர்த்துப் படிக்க வைத்தார். ராமசாமிக்கு இரண்டு வருஷம் கழித்து ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவர் அப்போதே திட்டம் போட்டுவிட்டார். மருமானைத் தானே படிக்க வைத்து வேலைக்கு அனுப்பி - தன் பெண்ணை அவனுக்குக் கொடுத்துவிடலாம் - என்று. ரேவதிக்கும் அதே எண்ணம் தான். பையன் நன்றாகப் படித்தான். மேன்மேலும் படிப்புக்கு அவனுக்கு வாய்ப்புகள் தானாகவே வந்தன.

ராமசாமியின் பெண் வைதேஹியும் -சூடிகையாக இருந்தாள். அத்தை ரேவதி ''ஏழையான நம்பிள்ளைக்கு நல்ல இடத்தில் எங்கே பெண் கிடைக்கப்போகிறது? வைதேஹி சமத்தாக இருக்கிறாள் - என்று மனக் கோட்டை கட்டினாள்.

வாத்யார் வசிக்கும் தெரு முனையில் ஒரு மாமரத்தடியில் ஒரு மேடை மீது கைகூப்பிய ஒரு ஹநுமான் வீற்றிருந்தார். போவோர் வருவார்களை ராம நாம - சொல்லுங்கள் - என்று வேண்டிக் கொண்டிருந்தார்.

வைதேஹி பள்ளிக்கூடம் போகும் போது ஹநுமானிடம் சற்று நின்று பத்து ராம நாமம் சொல்லிவிட்டுப் போவாள். லீவு நாட்களில் காலையில் குளித்து விட்டு

வீட்டிலிருந்து ஒரு சொம்பு - ஒரு கிண்ணம் பால் - நன்றாகத் துவைத்து மடியான ஒரு வஸ்திரம் - ஒரு கோபி சந்தனக்கட்டி இரண்டு வாழைப்பழம் எடுத்துப் போவாள். அவளுக்கு ஹநுமான் சாலீஸா நெட்டுரு. அதைப் பாடிக் கொண்டே முனிஸிபல் பைப்பிலிருந்து ஜலம் பிடித்து சொம்பினால் அபிஷேகம் செய்வாள். பாலையும் தலையில் ஊற்றுவாள். - வஸ்திரத்தினால் ஹநுமானை நன்றாகத் துடைத்து விடுவாள். கோபீ சந்தனத்தை கையில் குழைத்து - ஹநுமான் நெற்றியிலும் மார்பிலும் தோள்களிலும் அழகாக நாமம் போடுவாள். வீட்டு வாசலில் உதிருகின்ற பவழமல்லிப் பூக்களை ஹநுமான் சரணத்தில் போடுவாள். வாழைப்பழம் இரண்டையும் ஹநுமான் முகத்தில் சற்று நேரம் நீட்டுவாள். திரும்பினால் ஐந்தாறு குழந்தைகள் நிற்கும். அவர்களுக்கு வாழைப்பழங்களைப் பங்கிடுவாள் அதற்குள் இரு தடவை ஹநுமான் சாலீஸா ஓதியாகிவிடும். ''ஹநுமந்தப்பா நான் போய்ட்டு வரட்டுமா?'' என்று சொல்லி விட்டு வீடு திரும்புவாள்.

அவளுடைய தந்தைக்கு வயதான ஒரு ஸங்கீத வித்வான் ஊாம்பவான் . பழக்கம். அவர் வைதேஹியை வலுவிலே அழைத்துக் கொண்டு போய் பஜநஸம்பிரதாய கீர்த்தனங்களை சொல்லிக் கொடுப்பார்.

இனிமையான குரலில் அவற்றை வீட்டில் பூஜையில் இருக்கும் ஸ்ரீராமபட்டாபிஷேகப் படத்தின் முன் உட்கார்ந்து பாடுவாள். பாவ புஷ்டியான அந்தக் கீர்த்தனங்களைக் கேட்டு அவளுடைய தகப்பனார் ஆனந்தக் கண்ணீர் விடுவார். காலையில் தவறாமல் அவர் தினமும் ராமாயண பாராயணம் செய்வார்.

ரமேஷ்க்கு கல்லுரிகளில் இலவச நுழைவுகள் கிடைத்தன. கம்பியூட்டர் கல்வியில் உச்ச நிலை அடைந்து - தானே ஒரு புதிய ப்ராஜெக்டில் ஒரு நுட்பத்தைக் கண்டு

பிடித்தான். அவனுடைய காலேஜில், காம்பஸ் இண்டர்வ்யூ நடந்தது. அதில் அகில உலகப் புகழ் பெற்ற ஒரு கம்பெனியார். இவனுடைய புதிய நுட்பத்தின் கண்டுபிடிப்பைக் கண்டு மகிழ்ந்தது. அவன் கனவில் கூட காணாத சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி, அவனைத் தன் கம்பெனிக்கு அழைத்தது. படிப்பு முடிந்ததும் நேரே வந்து அந்தக் கம்பெனியில் சேரலாம். இந்தச் சேதியைக் கேட்ட குடும்பத்தினர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. வைதேஹி ஹநுமானிடம் ஓடினாள்.

''ஹநுமந்தப்பா! இது வரையில் இது வேணும் அது வேணும் என்று உன்னைக் கேட்டிருக்கிறேனா? என் அத்தைபிள்ளைக்கு - என்னைக் கல்யாணம் பண்ணி வைக்க - எல்லாரும் ஆசைப்படறா. எனக்கு பயமாக இருக்கு - அத்தை தன் பிள்ளைக்கு பெரிய இடமாக பெண் கிடைக்கும் - என்று திட்டம் போடுகிறாள். அவள் புத்தியை திருத்தி விடு அப்பா!'' என்று மன முருகி வேண்டினாள். ஹநுமான் முகத்தைப் பார்த்தாள். அவர் எப்போதும் போல மௌனம் சாதித்தார். ஆனால் அவளுக்கு மிகவும் நம்பிக்கை, ஹநுமான் கைவிடமாட்டான் என்று.

படிப்பு முடிந்து ரமேஷ் மும்பைக்கு சென்று அந்தக் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்து விட்டான், அவனுக்கு அந்தக் கம்பெனியில் பங்களா கார் எல்லாம் கொடுத்திருந்தார்கள். அவன் தனது தாய் தந்தையரை தன்னிடம் அழைத்துக் கொண்டான்.

வைதேஹி நினைத்தபடியே - ரேவதிக்கு மனது மாறி விட்டது. கம்பெனி டைரக்டர் ஒருவருக்கு அவன்மீது கண் வீழ்ந்தது. அவனைக் கம்பெனியில் பங்கு தாரராகச் சேர்த்துக் கொள்வதாகச் சொல்லி, தன் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேணுமென்று விருப்பத்தை தெரிவித்தார்.

ரமேஷ் தயங்கினான். மாமாவின் கபடமற்ற முகம் வைதேஹியின் அன்பு ததும்பும் கிண்டல்கள் - எல்லாம்

நினைவுக்கு வந்தன. வீட்டில் பையனின் தாயாருக்கு ரேவதிக்கு தலை கால் தெரியவில்லை. கோவிந்தன் சுணங்கினான். ரேவதி ஒற்றைக்காலில் நின்றாள்.

''அண்ணாவுக்கு வேணுமானால் ஒரு லட்ச ரூபாய் கொடுத்துவிடுவோம். ஆனால் நமக்கு வந்த லட்சுமியைக் காலால் உதறலாமா!'' என்று பிடிவாதம் பிடித்தாள்.

கோவிந்தனும் தலை ஆட்டினான். பத்திரிகை கொண்டு போய் மாப்பிள்ளையையும் அக்காவையும் அழைத்து விட்டு வருகிறோம் - என்று கிளம்பினான்.

''அதெல்லாம் வேண்டாம் தபாலில் பத்திரிகை அனுப்பினால் போதும்'' என்றாள் ரேவதி.

ராமசாமிக்கு பத்திரிகை வந்தது. அவர் திடுக்கிடவில்லை. அவருக்கு உலகப் போக்கு நன்றாக தெரியும்.

''அதனால் என்ன? நமக்கு ராமன் இருக்கிறான்''என்றார்.

வைதேஹி குன்றிப்போய் விட்டாள். நேரே ஹநுமானிடம் ஓடினாள் ''ஹநுமந்தப்பா! உன்னிடம் வந்து எச்சரிக்கை செய்தேனே! நீ கண்டிப்பாக உதவுவாய் என்று நம்பினேனே! நான் முழுமையாக உன்னையே நம்பியிருக்கிறேன் - என்று உனக்குத் தெரியாதா? நான் என்ன உன்னால் முடியாததையா வேண்டினேன்? அத்தை வெகுநாளாக என்னைத் தானே மறுமகள் என்று சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் புத்தியை மாற்றிவிடாதே - என்று தானே உன்னை வேண்டினேன். இது கூட நீ செய்யக்கூடாதா! இவ்வளவு தானே உன் க்ருபை! இனி உன்னைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டேன்'' என்று சொல்லி விட்டு வீட்டுக்கு வந்து விட்டாள். தகப்பனார் அவளை அழைத்து ஸமாதானம் செய்தார். ''வைதேஹி! ராமன் இருக்கும் போது - நீ ஏன் கவலைப்படுகிறாய்? எல்லாம் நல்லதற்குத்தான். பேசாமல்

அழாமல் இரண்டு கீர்த்தனம் பாடு, காது குளிரக் கேட்கிறேன் என்றார்.

வைதேஹி - ராம நின்னே நம்மிநாநு நிஜமுக'' என்ற தியாகராஜரின் உசேனி கீர்த்தனத்தைப் பாடினாள். அநு பல்லவியில் நனுகாவவே - என்று பாடும் போது அவள் குரல் தழுதழுத்தது. மூச்சு முட்டியது''.

''வைதேஹி! அழாதே. அருமையான ராம குணங்களை என்ன அழகாகக் கோத்திருக்கிறார் தியாகராஜர்! ஒவ்வொன்றாக ரஸித்துப் பாடு என்றார்.

அவளும் பாடினாள். இந்த விஷயம் வெளியில் எவருக்கும் தெரியாது.

ரமேஷ்க்கு கல்யாணம் நடந்தது. கம்பெனி டைரக்டர் ஜயித்துவிட்டோம் என்று குதூஹலித்தார். கல்யாணத்திற்கு வந்திருந்த மாற்றுக் கம்பெனியின் பெரிய டைரக்டர் மாப்பிள்ளையின் கையில் ஒரு ஒட்டின உறையைக் கொடுத்தார்.

''உங்கள் திருமணத்தைக் கொண்டாடுவதற்காக - தம்பதிகள் இருவருக்கும் ஒரு விருந்து ஐந்து நட்சத்திர ஹோட்டலில் வைக்கப் போகிறேன். தயவு செய்து ஏற்றுக் கொள்ள வேண்டும்,'' என்று உறையில் உள்ள கடிதம் சொல்லிற்று. மாமனாரிடம் அதைக் காண்பித்தான்.

மாமனார் எச்சரித்தார்

''ஏற்றுக் கொள்ளாதே''

மாப்பிள்ளைக்கு ரோஷம் வந்துவிட்டது.

''மாமனார் தன்னை விலைக்கு வாங்கிவிட்டதாக நினைக்கிறார்'' மனைவியை அழைத்துக்கொண்டு விருந்துக்குச் சென்றான். வேறு எவருக்கும் அழைப்புஇல்லை. குதூஹலமாக விருந்து அருந்தினர். சற்று

நேரம் கழித்து - அந்த டைரக்டர் மாப்பிள்ளையை தனியே பால்கனிக்கு அழைத்துச் சென்றார்.

''ரமேஷ் . நீங்கள் கண்டுபிடித்திருக்கின்ற புதிய நுட்பத்தை எனக்கு விற்றுவிடுங்கள். இதோ கையெழுத்திட்ட செக்'' இதில் எவ்வளவு தொகையை வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளலாம். அந்த நுட்பம் அடங்கிய கோப்பு என்னிடம் நான்கு நாட்களில் வரவேண்டும்'' என்று உறையை ரமேஷ் கையில் திணித்தார்.

ரமேஷ் மனைவியுடன் வீட்டுக்கு வந்தான். வெல வெலத்துப் போய்விட்டான் - பெண்ணின் தந்தை முன்னமேயே தன் பெண்ணிடம் ''விருந்துக்கு அழைத்தவர் ஏதாவது பரிசு உறையில் கொடுத்தால். அதை பத்திரமாக என்னிடம் கொண்டு வந்து கொடுத்து விடு.'' என்று எச்சரித்திருக்கிறார்.

ரமேஷ்டமிருந்து புதுமனைவி அந்த உறையை வாங்கி - காட்ரஜில் வைத்து விட்டு - கணவனுடன் வந்து உட்கார்ந்தாள்.

உற்சாகமில்லாமல் ஏதோ பேசிவிட்டு ரமேஷ் தூங்கிவிட்டான். அவன் மனைவி நள்ளிரவில் அந்த உறையைக் கொண்டு போய் தந்தையிடம் கொடுத்து விட்டாள்.

ஒரு வாரம் ஆயிற்று. ஞாயிற்றுக்கிழமை காலை ரேடியோ - டிவி, பத்திரிக்கைகள் அலறின. ''அந்தக் கம்பெனியின் டைரக்டரின் புது மாப்பிள்ளை காரில் சென்ற போது லாரி மோதி இறந்துவிட்டார்.''

தடபுடலாக நடந்த கல்யாணத்தின் விளம்பரத்தினால் - பலருக்கு மாப்பிள்ளைப் பையனின் அபாரத்திறமை வெகுவாகச் செய்திகளால் பரவியிருந்ததால் இந்தத் திடீர் விபத்து பற்றி பலவாறு அக்கப் போர்ச் செய்திகள் வெளி வந்தன.

சம்பந்தி - டைரக்டர் - மிகவும் ஸாமர்த்தியமாக - ரேவதி கோவிந்தன் தம்பதிகளின் அளவற்ற துயரத்தையும் இழப்பையும் தாராளப் பொருள் உதவி செய்து, சமாதானம் செய்து, தமிழ நாட்டிற்கு அனுப்பிவிட்டார். கணவனை இழந்த பெண்ணுக்குக் கூட விபரம் ஒன்றும் தெரியாது. அக்கப்போரினால் அமளி பெரிதாகிவிடுமோ - என்ற பயம் குடும்பத்தில் நிலவியது.

ரேவதியும் கோவிந்தனும் மறுபடியும் ராமசாமி குடும்பத்தினரிடம் தலைகாட்ட வக்கில்லாமல் - காசியில் குடியேறிவிட்டனர்.

ராமசாமி இந்த விபத்துக்கும் தன் குடும்பத்துக்கும் உள்ள தொடர்பைச் சிறிதும் வெளிக் காட்டவில்லை. அநுதாபத்தைக் காட்டிலும் அவமானம் தான் பெரிதாகும் - என்பதை விவேகத்துடன் உணர்ந்து அடங்கி இருந்து விட்டார்.

வைதேஹி தான் மனத் தேறுதல் பெறுவதற்கு இரண்டு மாதங்கள் ஆயின. ஒரு நாள் ஸங்கீத வாத்யார் வந்து தமது வீட்டில் நடக்கின்ற ராதா கல்யாணத்திற்கு ராமசாமி குடும்பத்தினரை வற்புறுத்தி அழைத்தார்.

அந்தக் கிழவருக்கும் பல சிஷ்யைகள். அனைவரும் கூடியிருந்தனர்- கிழவருடைய பேரன் ராமச்சந்திரன் அந்த ஆண்டு தான் எம்காம் பரீட்சையில் முதன்மையாகத் தேறி. ஸ்டேட் பாங்கின் அழைப்பின் பேரில் நல்ல சம்பளத்தில் ஆபீஸராகப் பணி ஏற்றான். ஆகவே ராதா கல்யாணம் விரிவாகவே நடந்தது.

அந்த வைபவத்தில் வைதேஹி கலந்துகொண்டு, எல்லா நிகழ்ச்சிகளிலும் பிரதான முனைவராக இருந்து மதுரமதுரமாகப்பாடி அனைவரது பாராட்டையும் பெற்றாள். ராமச்சந்திரன் அவள் யாரென்று விசாரித்துத் தெரிந்து கொண்டான். தாத்தாவிடம் அணுகி அவளைத் தனக்கு

*திருமணம் செய்து வைக்குமாறு வேண்டினான். மறு நாள் கிழவர் - ராமசாமி வாத்யாரை அணுகினார்.*

*‘‘என்னஸ்வாமி! ஒரு நல்ல உத்தேசத்தோடு உங்களைப் பார்க்க வந்தேன்’’. உங்கள் ராமன் அதை நிறைவேற்றி வைப்பான் என்று நினைக்கிறேன்-’’ என்றார்.*

*கிழவருக்கு விசிறி கைங்கர்யம் செய்து கொண்டிருந்த வைதேஹியை முன்னே அழைத்தார்.*

*ராமசாமி ...... என்ன? பெரியவாள் நீங்கள் என்ன சொன்னாலும் நல்லபடியாக நடக்கும். சொல்லுங்கள்.’’*

*கிழவர் சொன்னார் ‘‘ராதா கல்யாணத்தில் குழந்தை வைதேஹியின் அற்புதமான நாம கீர்த்தனத்தில் ராதாகிருஷ்ணன் சொக்கிப் போய்விட்டான். அவள் எங்கள் கிருஹத்திற்கு மாற்றுப்பெண்ணாக வேண்டுமென்பது அவன் விருப்பம். பேரன் ராம சந்திரனைப் பார்த்து இருக்கிறீர்களோ!*

*‘‘ஸ்கூலின் பாங்க் வரவு செலவு அவன் வேலை பார்க்கும் பாங்கின் கிளையில் நடக்கிறது. என்னிடம் படித்த பையன். மிகவும் மரியாதையுடன் என்னை வரவேற்று பாங்கில் ஆவன செய்து கொடுப்பான். தங்கள் பேரன் என்பது இப்போது தான் தெரிகிறது. எல்லாம் ராமன் இஷ்டம் எங்கள் பாக்யம்’’.*

*வைதேஹி பாட்டு வாத்யாரை நமஸ்காரம் செய்து விட்டு ஓடினாள் ஹநுமானிடம்- இரண்டு மாதங்களாகத் திரும்பிப்பார்க்காத ஹநுமானிடம்.*

*‘‘என்னப்பனே! ஹநுமந்தப்பா! என்னை மன்னித்துவிட்டாயா? இந்த அசட்டுப் பெண்ணிடம் இவ்வளவு க்ருபையா? நான் கோடித்தபடி நடந்திருந்தால் என் கதி - என்ன ஆகியிருக்கும்? தலைதூக்கி எவரையாவது பார்க்கமுடியுமா? என்ன க்ருபை! என்னக்ருபை! உன்னைத்*

திரும்பிப்பார்க்காமல் இந்த வழியாக எத்தனை தடவை போயிருக்கேன்? அதை யெல்லாம்பார்த்து நீ சிரித்துக் கொண்டு தானே இருந்தாய்!! இந்தப் பைத்யக்காரச் சிறுமியிடம் உனக்கு இத்தனை வாத்ஸல்யமா? உன்னைப் பார்க்காமல் போனாலும் ராம நாம சொல்லிக் கொண்டிருந்தேனே. அது தானே இவற்றிற்கெல்லாம் காரணம்? உன்னுடைய அபார ஸேவைக்காக தன்னையே உனக்கு அர்ப்பணம் செய்துவிட்ட ராமச்சந்திரனை அல்லவா எனக்குப் பதியாக அளித்து விட்டாய் ...'' இப்படியெல்லாம் சொல்லிக் கொண்டே இருக்கிறாள். பின்னால் வந்து தகப்பனார் முதுகைத் தட்டினார். திரும்பிப் பார்த்தாள். ''நீ இங்குதான் வந்திருப்பாய் என்று தெரியும். வா போவோம்''

இதற்குள் வீட்டுக்குப் போய் கிழவர் தன் பிள்ளை மறுமகன் பேரன் இவர்களை அழைத்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார். இவள் வீட்டுக்கு ஓடியே போய்விட்டாள்.

இந்தக்கதையில் ஒவ்வொரு அட்சரமும் விஸ்தாரமான நிகழ்ச்சிகளின் சுருக்கம். ஹநுமான் வேண்டுதல்களைக் கேட்டுக்கொண்டு -ஹிதமானதை மட்டும் சாதித்துச் கொடுப்பார்.



# மூன்றாம் பகுதி

## *பாரத நாட்டு க்ஷேத்ரங்களில் ஹநுமான். தமிழ் நாட்டில் ஹநுமான் ஆலயங்கள்*

''இந்த நூலின் ஆரம்பத்தில் தோற்றுவாயில் காஞ்சீ மஹாஸ்வாமிகளின் பரந்த சிந்தனையில் - ஹநுமான் இந்தப் பாரத புண்ய பூமியை தனது காப்புக்குரியதாகத் தானே ஏற்றுக் கொண்டு வியாபித்துக் கொண்டிருக்கிறார். என்ற கருத்தை வெளியிட்டார்கள்'' என்று குறிப்பிட்டிருக்கிறோம்,

இதை விஸ்தாரமாக எழுதலாம் என்று முனைந்த போது முதலில் ஆசிரியரின் தாயகமாக தஞ்சாவூர் முதலில் நினைவுக்கு வந்தது - தற்பெருமை என்பதை விலக்கி - தானாக ஏற்பட்ட அநுபவங்கள் முன்னுக்கு வந்தன.

பிறகு தமிழ்நாட்டில் எங்கும் பரவலாக உள்ள- ஹநுமானுடைய வீற்றிருக்கைகள் பற்றி சொல்லி மாளாது. தமிழில் இந்த நூலைப்படிப்பவர்கள் - பிறந்தகத்துக் கதையை உடன் பிறந்தானிடம் ஒருத்தி சொன்னாளாம் - என்றபழ மொழியை நினைத்து அலுத்துக் கொள்வார்கள் என்று நினைத்தோம். ஆகவே முக்கியமாக தமிழ் நாட்டில் - பல பேர்களுக்கு காதிலே விழுந்திரா செய்திகளைப் மட்டும் கூறுவோம் என்ற படி முதலில் தமிழ்நாட்டில் ஹநுமான் ஆலயங்கள் என்ற தலைப்பு ஏற்படுகிறது.

### காளிமுத்து

தஞ்சாவூர் மத்தியில் ப்ரஸன்ன வெங்கேடசப் பெருமாள். அவருடைய தேர்மூட்டி மண்டபச் சுவர்ப் பிறையில் ஒரு ஹநுமான். அவரோடு இவனுக்கு எண்பத்தைந்து வருஷப் பழக்கம். கந்தசாமி அய்யர் பள்ளிகூடத்தில் நான்காவது படிக்கும் போது என்னுடன்

படித்த காளிமுத்து என்ற கோனார் பையன் அனுமாரை அறிமுகப்படுத்தி வைத்தான்.

பள்ளிகூடத்திற்கு எதிரில் உள்ள லாலா கடையில் காலை 10 மணிக்கு பக்கோடா போட ஆரம்பிப்பார். அதில் முதல் ஈடு பகோடாவை காத்திருந்து காலணாவுக்கு வாங்குவான். பொட்டளத்தை சூட்டோடு எடுத்துக்கொண்டு என்னையும் ஜானகிராமனையும் (பிரபல எழுத்தாளர் தி.ஜானகிராமன்) இழுத்துக் கொண்டு அனுமான் கோவிலுக்கு ஓடுவான்.

''என்னடா அவசரம்'' என்று கேட்டால்.

''அனுமாருக்கு பகோடா ஆறுவதற்குள் வாசனையாவது கிடைக்கட்டுமே'' என்பான்.

அவனுக்கு ஒண்ணரைக்கண். என்னைப் பார்ப்பது போல இருக்கும். ஜானகி ராமனோடு பேசுவான். ஒரு நாள் அவன் கண்ணெதிரிலேயே அனுமார் மேடையிலிருந்து ஜானகிராமன் இரண்டு பக்கோடா துண்டுகளை எடுத்துக் கொண்டு விட்டான். காளிமுத்துவுக்கு தெரியாது. அவனுக்கு பரம சந்தோஷம் ''ஹநுமார் இன்னிக்கு பக்கோடாவும் எடுத்துக்கினார்டா'' என்றான்.

ஒரு நாள் பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்குப் போய் விட்டோம். இரவு ஏழுமணிக்கு என் வீட்டிற்கு ஓடிவந்தான் காளிமுத்து.

'என்னோடு வாடா!' என்று என்னை இழுத்துக் கொண்டு ஓடினான். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அனுமார் கோவிலுக்குப் போய்ச் சேர்ந்தோம். அனுமார் மேடையில் நெருக்கி பல அகல் விளக்குகள் ஏற்றப்பட்டு ஜகத்ஜோதியாக இருந்தது.

''பாருடா அனுமாரை'' என்று சொல்லிவிட்டு ஹோ என்று அழுதான். அப்பொழுதெல்லாம், எல்லாரும் ஸிந்தூரத்தை வெண்ணையில் குழைத்து தன் கையாலேயேஅனுமாருக்குச் சாத்துவார்கள். கம்மென்று வெண்ணை வாசனை தெரு முழுவதும் வீசும். அன்று ஹநுமார் மேல் பூசப்பட்ட, வெண்ணெயெல்லாம் தீபச் சூட்டில் உருகி வழிந்து கொண்டிருந்தது. தீய்ந்த நெய் வாசனை பரவியது

''பாருடா! எல்லாருமாச் சேந்து உருக்குறாங்கடா! அப்படி ராப்பூரா உருகினா காத்தாலே நாம் அனுமாரைப் பார்க்கமுடியுமா?'' என்று அலறினான்.

''ஒன்னை ஒக்காத்திவைச்சு இப்படிச்சுத்தீவர விளக்கை எரிய விட்டா ஒனக்கு என்னமாடா இருக்கும்?''

எண்பத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு இன்னும் காளிமுத்து சொன்னதை நினைத்துப் பார்த்தால் எனக்கு தூக்கிவாரிப் போடுகிறது.

அன்று கூட்டம் கலைந்த பிறகு மாடத்தில் ஒரு விளக்கை ஏற்றிவிட்டு மற்ற எல்லா விளக்குகளையும் எடுத்து எறிந்தான். தன்னுடைய டிராயரைக் கழற்றி அனுமாரைத் துடைத்து விட்டான். அனுமாரை உயிருக்கு உயிராய் நேசித்து, தன் டிராயரால் துடைத்துவிட்டு, அந்தப் பிசுக்குத் துணியை கூசாமல் உடுத்திக்கொண்டு, ஹநுமாரைத் தொட்டுப் தொட்டுப் பார்த்து, மெய் சிலிர்த்தானே காளிமுத்து! அவன் இன்று எங்கேயோ?

ஆனால் அந்த ஹநுமாரை இன்று நான் தர்சனம் செய்யும் போது கூட காளிமுத்து என்னோடு நிற்கிறான். ''டேய், அதிகப்படி விளக்கையெல்லாம் எடுடா'' என்று அதட்டுகிறான்.

ஹநுமானிடம் இந்த நூலாசிரியருக்கு ஏற்பட்ட அருள்மாரி சின்னச்சின்ன நிகழ்ச்சிகள் பொருள் பொதிந்தவை.

கோவிந்த புரத்தில் அமர்ந்து ஹநுமானைப்பற்றி எழுத ஆரம்பித்து ஒரு வாரம் ஆயிற்று - மாலையில் குருநாதர் ஸந்நிதியில் இவன் பிரதட்சிணம் செய்து கொண்டிருந்தான். ஹநுமான் ஸந்நிதியிலிருந்து ஐந்தாறுபேர் கூட்டமாக வந்தனர். ஒருவன் கன்னம் கரேலென்று - ஆஜாநு பாஹுவாக நல்ல உயரமாக - நெற்றியில் ஸிந்தூரத்தால் கீற்று நாமமும், பிடி வெள்ளை மீசையுமாக, மனைவி மக்களுடன் வந்தான். வயதினால் தளர்ந்த தேஹத்தில் கொஞ்சம்மிடுக்கும் இருந்தது.

இவனை உற்றுப்பார்த்தான் - இவன் மேலே பிரதட்சணத்திற்கு அடுத்த அடி வைத்து நகர்ந்தான். அந்தச் சுற்று முடிந்தது. அவனருகில் வந்த போது - உற்றுப்பார்த்து விட்டுக் கேட்டான்.

''நீ சாமிநாதன் தானே!''

ஒரு புஸ்தி மீசைக்காரன் இவனை ஒருமையில் பேசுகிறானே - என்று சற்றுத் தயங்கினான்.

''என்ன விழிக்கிறாய் - என்னைத் தெரியவில்லையா-!'' ''தெரியலையே! அதான் யோஜிக்கிறேன்''

''நான் காளிமுத்துடா நினைவிருக்கிறதா? கந்தசாமி அய்யா பள்ளிகூடத்தில் நான்காம் வகுப்பு படித்தோமே''

''அட - நீயா? பயில்வான் மாதிரிப் பெருத்துப் போய்ட்டாயே! பூச்சாண்டி மாதிரி! பயந்து விட்டேன்''.

அவனுடைய மனைவி மக்கள் உரக்க சிரித்தார்கள்.

இப்போ என்ன பண்ணுகிறாய்''?

அதெல்லாம் பெரியகதை. எண்பது எண்பத்தைந்து வருஷங்களுக்கு பிறகு உன்னைப் பார்க்கிறேன். நீ அப்படியே இருக்கிறாய். சுருக்கமாகச் சொல்றேன் நான் S.S.L.C. முடித்து ராணுவத்தில் சேர்ந்தேன். அப்போ பிரிடிஷ் ராஜாங்கமில்லையா? என்னை சாலை அமைப்புப் படையில்

ஸாப்பரா சேர்த்துக் கொண்டார்கள். என்னோடு உங்கஜாதிப் பையன் வயதிலே மூத்தவன் B.A., படித்து விட்டு வேலை கிடைக்காமல், திண்டாடி ராணுவத்தில் சேர வந்தான். பரம ஏழை. வயதான தாய்தகப்பனார் - ஒரு இளைய சகோதரி. அவனும் ஸாப்பராகவே சேர்ந்தான். நாங்க இரண்டு பேரும் ஜோடி ஆனோம். எப்படித் தெரியுமா? இரண்டு பேரும் அநுமார் பைத்தியம். ராம நாமப் பைத்தியம். அவனால் அந்த வேலையை சமாளிக்க முடியவில்லை. நானும் அவன் பங்கு வேலையில் உதவி செய்வேன். அப்போதெல்லாம் - ராணுவத்தில் மேல் பதவிக்கு - படிப்பு சொல்லிக் கொடுப்பார்கள். அவன் நல்ல இங்கீலிஷ் படிப்பாளி- ''ஆபீஸ் மாநுவல் - ஆபீஸ் நிர்வாஹம் பற்றிய துறை அந்தப் பரீட்சை எழுத இருவரும் முயற்சி பண்ணுவோம். அவன் இரவு வெகுநேரம் வரை எனக்குச் சொல்லிக் கொடுப்பான். அதையெல்லாம் ''கடம்'' போடச் சொல்வான். எப்படியோ ராம நாமம் சொல்லி இரண்டு பேருமே பாஸ் பண்ணிவிட்டோம் - எங்களை மத்ரா - என்றப்ருந்தா வனப்பக்கத்திலுள்ள நகரில் - கண்டோன்மெண்டில் அலுவலகப் பணியாளர்களாக நியமித்தார்கள். அங்கும் கடுமையான வேலை தான். ஸாகேதன் (அது தான் அவன் பெயர்) வயதான தனது தாய்தந்தையரை வர வழைத்து - மத்ராவில் ஒரு சந்தில் ஒரு சிறு வீட்டின் பகுதியில் குடிவைத்தான். அவனுக்கு அலுவலகத்தில் நல்ல பெயர். மேலதிகாரிகள் அதிகார வரம்பு அவர்களுடைய சுதந்திரம், கடமைகள் பற்றியெல்லாம் அவர்களுடைய மாநுவலைப் படித்து கரைத்துக் குடித்துவிட்டான். மேலதிகாரிகள் எந்த ரூல் எப்படி உபயோகிக்கப்படும் என்பதைப் பற்றியெல்லாம் இவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். தாய் தந்தையர்களை கவனிக்க வேண்டுமே - என்ற ஒரே குறியோடு அவனுக்குத் தானாக வந்த ப்ரமோஷன்களை வேண்டாமென்று சொல்லிவிட்டான், அவனுடைய கற்றுத்தரும் திறமையினால் நான் தேர்ச்சி பெற்றுப் பதவி

உயர்வு பெற்று பூனாவுக்கு அடுத்த கர்க்கியில் பெரிய ராணுவக் கோட்டத்திற்குள் போய் சேர்ந்துவிட்டேன். இரண்டு ஆண்டுகளுக்கு பிறகு, அவனைச் சந்தித்த போது, ஸாகேதன் தன் சகோதரிக்கு கல்யாணம் செய்து வைக்க வகை இல்லாமல், தாய்தந்தையரின் கவலையை நீக்க முடியாமல், கஷ்டப்படுவதாக சொன்னாள்.

நான் சொன்னேன். ''ஸாகேத் தப்பாக நினைக்காதே - எனக்கு எங்க ஜாதியிலே பெண் தருவதற்குப் பலபேர் காத்திருக்காங்க. உனக்கு ஆட்சேபனை இல்லையானால் நான் உன் சகோதரியை மணந்து கொள்கிறேன்''.

முதலில் திடுக்கிட்டாலும், சிந்தனை செய்து பார்த்து - ''தாய் தந்தையர் அநுமதித்தால் நான் உன் பிரபோஸலை காரியமாக்குகிறேன்'' என்றான். தாய் தந்தையரிடம் பக்குவமாக எடுத்துச் சொல்லி - இது தான் நமக்கு சாத்யம். ஆனால் கல்யாணி சௌக்யமாக இருப்பாள் '' என்று குறிப்பிட்டு சொன்னான்.

எனக்கும் கல்யாணிக்கும் திருமணம் நடந்தது. அவள் எப்பொழுது பார்த்தாலும் மீராபஜன் கபீரின்பதங்கள் பிருந்தாவன ஸாதுக்களின் கீதங்கள் இவற்றை மனம் உருகப்பாடுபவள். இடையே என் வற்புறுத்தலால் ராம நாமம் சொல்வாள். மாலையில் தவறாமல் கர்க்கீ கண்டோன்மென்டில் உள்ள ஜய வீர ஹநுமான் ஆலயத்திற்கு போய் தீபம் போட்டுவிட்டு - ஸ்ரீராம ஜய ராம ஜயஜய ராம - என்று பாடி விட்டு வருவாள்.

நான் பிரிகடேர் ஆகி ஓய்வு பெற்றேன்.

**இவள் தான் கல்யாணி என்று மனைவியை அறிமுகப்படுத்தினான். நன்கு வளர்ந்த இரண்டு பிள்ளைகளையும் அவர்களுடைய குடும்பங்களையும் அறிமகப் படுத்தினான். எல்லோரும் ஹரிகீர்த்தனம் பாடினார்கள்.**

''சாமிநாதா! உன்னைப் பார்த்ததும் - என் மனதெல்லாம் பூரித்துப் போய் விட்டது. நீயும் நானும் தஞ்சாவூர் நாலுகால் மண்டபம் - தேர் முட்டிப் பிறையில் உள்ள அநுமானைச் சுற்றுவோமே. அப்போ நமக்கு என்ன தெரியும்? நீயும் வயதான காலத்தில், தள்ளாமையோடு இந்த குருநாதரை பிரதட்சிணம் செய்து வருகிறாய்? வேறு யாருக்கு கிடைக்கும் இந்த பாக்யம்? எனக்கும் போரில் இடது கால் ஒடிந்து செயற்கைக்கால் பொருத்தியிருக்கிறது. ஆனாலும் என்ன? ஹநுமான் ஒரு நாளும் எந்த ஆபத்திலும் என்னைக் கைவிடுவதில்லை.

வேறு நமக்கு என்ன வேணும்?

கபடமில்லாத அவனுடைய மனஅமைதியில் - இவனும் மனதும் ஓட்டிக் கொண்டு விட்டது.

★ஆடிமாசம் அய்யங்கடைத்தெரு அருகில் அனுமார் கோயிலில் உற்சவம் பத்து நாள் சிறப்பாக நடக்கும். வெங்கடேசப் பெருமாள் கோயிலின் எதிரில் ஆஞ்சநேயர் சன்னிதிக்குமுன் சின்ன பந்தலில் மேடை. வெங்கடேசப் பெருமாள் நாலுகால் மண்டபம் தேரடிப்பிறையில் ஆஞ்சநேயர்.

அந்த உற்சவத்தில் பாடவேண்டும் என்று பஞ்சுவுக்கு நீண்ட நாளாக ஒரு ஆசை - அதைப்பற்றி எண்ணமிட்டவாறே பஞ்சுவீட்டில் நுழைந்தார். உள்ளே ரகோத்தமராவின் குரல் கேட்டது. ராவுஜி மிருதங்க வித்வான். பஞ்சுவின் குடும்ப நண்பர்.

---

*(ஸித்தார்த்தன் – என்ற நாவலாசிரியர் எழுதிய ஜீவன்முக்தன் – என்ற நாவலில் இந்த நூலாசிரியர் கொடுத்த தகவலை ஏற்றுக்கொண்டார். தான் எழுதிக் கொண்டிருக்கின்ற ஜீவன் முக்தன் – என்ற நாவலில் அந்தத்தகவலை அழகாக எடுத்துக்கோத்திருக்கிறார். தஞ்சாவூர் நாலுகால் மண்டப ஹநுமான் இவனுக்கு இளமையிலேயே அருள்புரிந்தவர். அந்த நூலில் உள்ள அப்பகுதி அப்படியே இங்கே கோக்கப்படுகிறது.)

அதே தெருவில் நான்கு வீடுகள் தள்ளி இருந்தார். அவருடன் இன்னொரு இளைஞரும் இருந்தார். கட்டுக் குடுமி, நெற்றியில் சாந்துப்பொட்டு, பளிச்சென்று வெள்ளை வேஷ்டி, மேலே ஒரு நாலுமுழம் துண்டு, இரண்டடுக்கு ஓலைப் பெட்டி, அதற்குக் கவசமாக பாக்குப்பட்டை. பாக்குப்பட்டையில் வெற்றிலைகள். ஓலைப்பெட்டியில் நல்ல கொட்டைப்பாக்கு. ஆலங்குடிப் பாக்கு வெட்டி. ஒரு வெள்ளிக்குழாய் டப்பா. அதற்கு இரண்டு புறமும் மூடி. ஒரு புறத்தில் இளநீர் விட்டு வடிகட்டின சுண்ணாம்பு மறுபுறத்தில் பன்னீர்ப் புகையிலை.

ராவுஜி ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தார். அந்த இளைஞர் தரையில் உட்கார்ந்திருந்தார். வெற்றிலைக் காம்பு நரம்புகளை எடுத்துவிட்டு அதற்கென வைத்துள்ள துண்டில் வெற்றிலையைத் துடைத்து, சாவதானமாகச் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்தார்.

பஞ்சநதீசன் கொல்லைப்புறம் போய் ஜலத்தினால் கால் கழுவிக் கொண்டு, முகத்தை அலம்பிக் கொண்டு, மேல்துண்டினால் துடைத்துக்கொண்டு, பிறையில் இருந்த விபூதி மடலிலிருந்து விபூதியைச் சன்னப் பட்டையாக இட்டுக்கொண்டு, வந்து உட்கார்ந்தார்.

''ஐயர்வாள்' உங்களுக்காகத் தான் காத்திருக்கிறோம்' என்றார் ராவுஜி.

''உபசாரம் பலமாருக்கே! என்ன விசேஷம் சொல்லுங்கோ'' என்ற பஞ்சு அந்த இளைஞரை ஏறஇறங்கப் பார்த்தார்.

''இவரைத் தெரியுமோன்னோ? இவர் தான் ஹநுமார் வாஸு!'' என்று அறிமுகம் செய்தார் ராவுஜி.

''அப்படியா? நிறையக் கேள்விப்பட்டிருக்கேன். இன்னிக்குத் தான் ஸந்திக்கிற பாக்யம்'' என்றார் பஞ்சு.

இதற்குள் முறி வெங்கலக் கூஜாவில் தீர்த்தமும் செம்பில் காபியும் கொண்டு வைத்தாள் பஞ்சுவின் தாயார்.

''பஞ்சு! கேள்விப் பட்டிருக்கேன்னு சொன்னே. அது போறாது. தஞ்சாவூர் அய்யங்கடைத்தெரு வெங்கடேசப்பெருமாள் சன்னிதியில் நாலுகால் மண்டபத்துக்குப் பக்கத்திலே தேர்முட்டி. அதன் பிறையிலே அனுமார் இருக்காரே அவருக்கு பேரே வாஸு ஹநுமான். அந்த ஆஞ்ஜநேயருக்கு வரப் போற ஆடி அமாவாசையில் உற்சவம் ஆரம்பம்.

''தெரியுமே. என் குரு நாதரோட நானே அங்கே பாடி இருக்கேனே!'' என்றார் பஞ்சு.

''ஐஞ்சாறு வருஷமாவே உங்க கச்சேரி போடணும்னு ஆசை'' என்று வந்த விஷயத்தைத் தொடங்கினார் வாஸு.

''நான் வயசிலே ஒங்க தம்பி மாதிரி. நீங்க உங்கன்னு பேசாதீங்கோ. வந்து பாடுடா பஞ்சுன்னு சொல்லுங்க. உங்களுக்கு உரிமையுண்டு''. என்றார் பஞ்சு.

''அப்படியில்லை! வயசு கொஞ்சமா இருக்கலாம். வித்வத்துக்கு மதிப்புக் குடுக்க வேண்டாமா?'' இப்பப் பாருங்கோ! அனுமார் உத்ஸவத்திலே பத்திரிக்கை போடறதுக்கு முன்னாலேயே நான் வந்துடறேன். நான் வந்துடறேன்னு வித்வான்கள்ளாம் கடுதாசு போட்டுடறா. பத்து நாள் உற்சவம். ஒரு நாளைக்கு ஒரு கச்சேரிதான், எத்தனை பேருக்கு இடம் கொடுக்க முடியும்? ஏதோ சமாளிச்சிண்டிருக்கேன்.

இரண்டு நாள் முன்னே, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளைவாள் ரயிலடியிலே நம்ம உப்புமா ராயர்கிட்டே சொன்னாராம் ''நான்இந்த வருஷம் உத்சவத்துக்கு வந்துடறேன். திருவையாறு பஞ்சநதீசனைப் பாடச் சொல்லுன்னு வாஸுகிட்டே சொல்லுன்னாராம். பல வருஷங்களா நான் நெனச்சதைப் பிள்ளைவாள் சொல்லி விட்டார்.''

''ஆஞ்ஜநேயர் சன்னதியிலே பாட எனக்கும் ஆசை. வீட்டுக்குள்ளே நுழையும் போதே நெனைச்சிண்டு வந்தேன் ஆஞ்ஜநேயர் முந்திக்கொண்டு உங்களை அனுப்பிச்சுட்டார். என்னிக்கு பாடணும் சொல்லுங்கோ!''

நாளைக்கு ராயர்வாள் கிட்டே சொல்லி அனுப்பறேன்.

''வாஸு! பஞ்சுவோட நானும் வந்திடுறேன். வாசிக்கறதுக்கு இல்லே! பரமேஸ்வரன் கிளப் அல்வா உண்டோன்னோ?'' என்று குறுக்கிட்டார் ராவுஜி.

''நன்னாருக்கு அதில்லாமலா? கண்டிப்பா உண்டு. வாரும்! ஒரு தட்டு அல்வா. நெய் காராபூந்தி. அதில் போட்டுச் சாப்பிட புளிக்காத கெட்டித்தயிரு. அதிலே தேங்காய்ப்பூ துருவலை தூவி அதற்குமேல் பச்சைக் கொத்தமல்லி துளிரைக் கிள்ளி போட்டு...''

''ஏதேது வர்ணனையிலேயே நாக்குல ஜலம் ஊற்றதே!''

வாஸு ''பஞ்சநதீசய்யர் வாள்! வித்வான்கள் ஸங்கீதத்தை நாங்க ரஸிக்கற மாதிரி, எங்க கைப் பாகத்தையும் அவா ரசிச்சு நல்ல திருப்தியா சாப்பிடணும். அதான் என் ஆசை, என்னாலே வேறென்ன முடியும் சொல்லுங்கோ! நூறு இருநூறுன்னு பணமா குடுக்க முடியும்?'' என்ற வாஸு விடைபெற்றுச் சென்றார்.

ராவுஜியை உள்ளே அழைத்த பஞ்சு. இவரைப் பத்திச் சொல்றேன்னேளே சொல்லுங்கோ' என்றார் ஆவலுடன் இருவரும் ஊஞ்சலில் வந்து அமர்ந்தனர்.

''இந்த வாஸு இருக்காரே, தெலுங்கர். வம்ச பரம்பரையாகப் புரோகிதம். ஆனால் பால்யத்திலிருந்தே ஸங்கீதப் பித்து. நல்ல ஞானம். ஆனால் பாடவராது.

மலைக்கோட்டை கோவிந்தசாமிபிள்ளை இருந்தாரே?''

''ஆமாம் பிடில் வித்வான்!''

''அவர் 'போ' போடற அழகே தனி. தந்திமேலே படறதா இல்லையான்னு தெரியாது. அவ்வளவு ஸுக பாவம். அவர் தஞ்சாவூருக்கு வந்துட்டார். வாஸு தவசிப்பிள்ளை மாதிரி அவரோடே ஒட்டிண்டுட்டான். அவருக்குக் கைங்கரியம் பண்ணினபோது போகத்தான் மற்ற காரியம். ஒரு நாள் பிள்ளை வாள்கிட்டே வாஸு சொன்னான்.''

''நாயனா! ஒரு பிரார்த்தனை. நம்ம ஹநுமார் இருக்காரே!'

''நம்ம அனுமாரா? அது யாரது?''

''அதான் நாலுகால் மண்டபம் அனுமார். அவர் இன்னிக்கு வெடியற்காலை சொப்பனத்திலே வந்து ''நீயே எல்லா சங்கீதத்தையும் கேட்டிண்டிருக்கியே! நான் கேட்கப் படாதா?'' அப்படின்னார்.

''பாவம் அனுமார்! உன்னை வந்து கேட்டாரா!''

''நாயனா! கோவிச்சுக்காதீங்க. அந்த மண்டபத்தை ஒட்டி ஒரு பந்தல் போட்டுடறேன். வைத்தா அண்ணா ஊரிலேதான் இருக்கார். அவரண்டையும் கேட்டுக்கறேன். நீங்க அந்த சன்னதியிலே ஒரு நாள் ராத்திரி வந்து வாசிக்கணும்!''

''வாசு! உனக்குப் பைத்தியம் பிடிச்சிருக்கு. கோவில் வாசல். எப்பப் பாத்தாலும் ஜனநடமாட்டம். ஒத்தை மாட்டுவண்டி சலங்கைச் சத்தம். அதுக்கு நடுவே உக்காந்து கச்சேரி பண்ணணும்கறியே! சரிப்படுமா? ஒண்ணு செய். வெங்கடேசப் பெருமாள் சன்னிதியிலே வைச்சிடு''!

''நாயனா! அதெல்லாம் சரிப்பட்டு வராது. அனுமார் கேக்கணும். கச்சேரி அவர் சன்னிதிலே நடக்கணும். நீங்க பெரிய மனசு பண்ணணும்.

''வாஸு! இது நடக்கிற காரியமில்லை. கல்யாணத்துக்கு வரவங்க கச்சேரி சமயத்திலே பேசக்கூடாதுன்னு ''கண்டிஷன்'' போட்டுண்டு நான் கச்சேரிக்கு 'அட்வான்ஸ்' வாங்குவேன். என்னை சந்தை சந்தடியிலே கச்சேரி பண்ணுங்கறயே!''

''நாயினா! அப்புறம் உங்க இஷ்டம். நான் அனுமார்கிட்டே போயி என்னால முடியலைன்னு அழுதிட்டு வந்துடுறேன்.!''

மறுநாள் பிள்ளைவாள் வாசு வந்தாச்சா? என்று கேட்டுக் கொண்டே இருந்தார். வாசு வந்தார்.

''வாசு! நீ ரொம்பப் பெரியவண்டா?'' என்றார் பிள்ளை.

''என்னநாயனா?

''நான் ஸத்யத்தைச் சொல்றேன். நேற்று நீ அந்தப்பக்கம் போனவுடனே வாத்யத்தை எடுத்து வெச்சிண்டு உக்காந்தேன். பிருடையில் கை வைக்கிறேன். விரல்கள் விரைத்துவிட்டன. வலது கை விரல்களால் மடக்க முயற்சி பண்ணினேன். ஊஹூம்! சொடுக்கிப் பாத்தேன். வெண்ணை தடவிப் பார்த்தேன். சாயங்காலம் அஞ்சிலேருந்து எட்டுமணி வரை என்னல்லாமோ பண்ணிப் பாத்தேன். பிடிலை வைத்துவிட்டு சாப்பிட உக்காந்தேன். நகர்த்தி முழங்கையை மடக்கினால்த்தானே வாய்க்குக் கொண்டுபோக முடியும்? அதுவும் முடியல்லை! சொக்கலிங்கம் டாக்டர் கிட்டே போனேன். அவர் அங்கே இங்கே தட்டிப்பாத்துட்டு ஒண்ணுமில்லைங்கன்னு ஒரு ஆயிண்ட் மெண்டைக் கொடுத்தார். வீட்டுக்கு வந்தேன். மனதில் திகில் பிடித்து விட்டது.

அப்புறம் சகோதரி சொன்னா ''இது ஏதோ தெய்வக் குத்தமாய் படறது. வெங்கடாசலபதிக்கு வேண்டிண்டு பணத்தை முடிஞ்சு வெச்சா.''

எனக்கு மனதில் கொஞ்சம் தெளிவு பிறந்தது.

ஓஹோ ஆஞ்நநேயரிடம் அபசாரப் பட்டுவிட்டோம். அதனால் வந்தவினை என்று பளிச்சென்று தோன்றியது.

''ஆஞ்ஜநேயா! என்னை மன்னிச்சுடு. நாளைக்கு உன் சந்நிதியிலே உக்காந்து வாசிக்கிறேன். நீ என் வித்வத்தை ஏத்துக்கோ' என்று கண்ணீர் மல்கினேன். பசியுடன் படுக்கையில் சாய்ந்தேன். புரண்டு புரண்டு படுத்தேன். தூக்கம் வரலில்லை. அசந்து எப்போத்தூங்கினேனோ? தெரியாது. காலைலே அஞ்சு மணிக்கு விழிப்பு வந்தது. முழங்கையை ஊனி எந்திருத்தேன். முழங்கை மடங்கியது. கைவிரல்களை மடக்கினேன். சுகமாக மடங்கித்து, திறந்தபடி கிடந்த பிடிலை எடுத்த மார்பில் சாத்திக் கொண்டேன் 'போ போட்டேன். இடது கைவிரல்கள் லாகவமாக விளையாடின. வாசு! இத்தனையும் சத்தியம், நீ பொல்லாதவன். உங்க அனுமார் பொல்லாதவர். நீ சொன்னபடியெல்லாம் கேக்கறேன்!''

வாஸு ஒரு நாள் இந்தக் கதையை என்னிடம் சொன்னபோது விசும்பி விசும்பி அழுதான்'' என்று நிறுத்தித் தொடர்ந்தார் ராவுஜி.

வாஸு சொன்னார் ''ராயர்வாள்: நான் ஏதோ கிழக்கே மேற்கே போகும் போது இந்த அனுமாரிடம் ராம ராமன்னு சொல்லி பத்துத்தடவை கன்னத்திலே போட்டுப்பேன். இந்த அசடனிடம் அனுமாருக்கு எவ்வளவு கருணை! கையிலே காலணாக்காசு இல்லாத என்னிடம் எத்தனை வித்வான்கள் கட்டுப்பட்டு உள்ளனர்'' ன்னு கண்ணைத்துடைத்துக் கொண்டான் வாசு.

இது நடந்தது 1929லேன்னு நினைக்கிறேன். அந்த வருஷம் கோவிந்தசாமிபிள்ளை பிடில் கச்சேரி. வைத்துண்ணா மிருதங்கம் (பாலகாட்டு மணி அய்யர் டி.கே.மூர்த்தி ஆகியோரின்குரு) அன்று ஆடி அமாவாசை. கச்சேரி முடிந்த

பிறகு பிள்ளைவாள் சொன்னாராம்?'' ''வாசு இனிமேல் வருஷா வருஷம் ஆடி அம்மாவாசையிலிருந்து பத்து நாள் உற்சவம். அதிலே ஒரு சௌகரியம் பாரு. ஆடியிலே கல்யாணங்கள் நடக்காது. கோவில்கள்ளேயும் உத்ஸவம் இருக்காது. வித்வான்களுக்கும் கிராக்கி இருக்காது. அனுமத் ஜயந்தி மார்கழி அம்மாவாசையில் வரும். நம்ம அனுமாருக்கு ஆடிமாதத்திலே வரட்டுமே''!

''நாயனா! அனுமார் உங்களுக்கு நம்ம அனுமார் ஆயிட்டார். இனிமே என்ன கவலை? ஜாம்ஜம்னு உத்ஸவம் நடக்கும்'' அப்படின்னு வாசு புளகாகிங்கிதமாச் சொன்னார்.

இப்படி ஆரம்பிச்சு உத்சவம் இதிலே இன்னொரு கதையும் இருக்கு என்று பீடிகை போட்ட ராவுஜி தொடர்ந்தார்.

அப்போதெல்லாம் நவாப் ராஜமணிக்கம்னு ஒத்தர் ''பாய்ஸ் கம்பெனி'' நடத்தி நாடகம் போட்டிண்டிருந்தார். 'பக்த ராமதாஸ்' நாடகத்திலே அவர் ஹைதராபாத் தானீஷா நவாப் வேஷம் போட்டுப்பார். தத்ரூபமாக நடிப்பார். அதனாலேதான் நவாப் ராஜமணிக்கம்னு பேர் நிலைச்சுப்போச்சு. அவர் மிகவும் தெய்வ பக்தி உள்ளவர். ஒரு வருஷ காலம் தஞ்சாவூர் கொடிமரத்து மூலையிலே நாடகம் நடத்தினார். கிருஷ்ணலீலா, ராமாயணம், இப்படிப் பல நாடகங்கள். ராமாயணத்திலே அவர் அனுமார் வேஷம். அவர் இந்த அனுமாரை அடிக்கடி தரிசனம் பண்ணவருவார். ஒரு நாள் வாசு அங்கே இருந்தார் 'நவாப்' தரிசனத்தை முடிக்கின்ற வரை காத்திண்டிருந்து அவரைக் கும்பிட்டார்.

''நவாப் வாள்! உங்களைத் தான் பாக்கணும்னு கிளம்பினேன். நீங்க இங்கே வந்துட்டேள். இன்னும் பதினைந்து நாளிலே அனுமாருக்கு உத்ஸவம் வருகிறது. நீங்க கலந்துக்கணும்'' என்றார் வினயமாக.

''நான் என்ன செய்யணும் சொல்லுங்க''

''உத்ஸவத்தில் நிறையச் செலவாறது. உங்களாலே முடிஞ்ச உதவி பண்ணணும்.''

''பேஷாப் பண்ணறேன். இப்பத்தான் அனுமாரை வேண்டிக் கிட்டேன். அனுமாரே! நிறையப் பேர்கள் என் ராமாயணத்தைப் பார்க்கணும். அதற்குக்கருணை பண்ணுங்கன்னு வேண்டிக்கிட்டேன்.

ஒண்ணு சொல்லட்டுங்களா? இன்னிக்கு ராத்திரி நீங்க நாடகத்துக்கு வந்திடுங்க. இன்னிக்கு வசூல் பூரா அனுமாருக்கே காணிக்கையாகக் கொடுத்திடுறேன்.''

வாசு அப்படியே ஸ்தம்பித்துப் போயிட்டார்.

அன்று ராத்திரி நாடகத்துக்கு எல்லா நாட்களையும் காட்டிலும் இரண்டு பங்கு வசூல். கொட்டகை நிரம்பி வழிந்தது.

வாசுவிடம் அத்தனை வசூலையும் துணியில் கட்டிக்கொடுத்து விட்டு ''அனுமார் கருணை காட்டி விட்டார். உனக்கு நான் எப்பொழுதும் துணையாக இருப்பேன்னு காட்டிட்டார் பாத்தீங்களா'' என்று நவாப் கண்ணீர் விட்டாராம்.

அப்புறம் வருஷா வருஷம் உற்சவத்திற்கு முன்னாடி நவாப் நாடகம் எந்த ஊரிலே நடந்தாலும் வாசு போய் விடுவாராம். அன்றைய வசூலை நவாப் வாசுவிடம் கொடுத்து விடுவாராம்!.

தஞ்சை நாலுகால் மண்டபத் தேர்முட்டி ஹநுமானைப்பற்றி எழுதி மாளாது. அத்தனை அநுபவங்கள்.

அவரை -ஸதாசிவப்ரஹ்மேந்தர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் பிரதிஷ்டை பண்ணினார் -என்ற பெரியோர்கள் கூறுவார்கள். 2.9.81 அன்றிரவு யாரோ ஒருவன் அவருடைய கூப்பிய கரங்களை சுத்தியல் கொண்டு உடைத்துவிட்டான். மறுநாள் காலை கூட்டம் கூடிவிட்டது. பாலர்களும்,

முதியவர்களும், பாட்டிகளும், பேத்திகளும், -கூடி அநுமானின் உடைந்த மூளியான -கையைத் தடவித் தடவி விசும்பி விசும்பி அழுதனர்.

தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தான அறங்காவலர் மஹராஷ்டிர இளவரசர் வந்து கூடிய சீக்கிரம் ஹநுமான் மூர்த்தி பிரதிஷ்டை செய்து வைக்கப்படும் என்ற உறுதி மொழி கேட்டு அமளி ஒருவாறு அடங்கியது.

அந்தக் கண்ணராவியை இந்த நூலாசிரியரும் பார்த்துக் கண்ணீர் விட்டார். ஏழுவயது முதல் காளிமுத்துவுடன் சேர்ந்து வணங்கப்பட்ட தெய்வமல்லவா? இவன் அன்று முழுவதும் பட்டினி. அந்த ஹநுமானையே நினைத்து சிலச்லோகங்கள் புனைந்தான்.

வாயுகுமாரனே ''ஐயோ யார் செய்த வினை இது? உன் ஸந்நிதியில் நின்று ராம நாமம் சொல்பவர்களுக்கு க்ருபை செய்ய வேண்டுமென்று தன் பிரபு - ரகுவரனை நினைத்து எப்பொழுதும் கைகூப்பி நிற்கின்ற - உனது கரங்களை புத்தி கெட்டவன் வெட்டிப் போட்டானே! அவனுக்கு இதனால் என்ன லாபம்?

**கஸ்யேத$_3$ மாகலிதம் ஆ: மருதா$_3$த்$_3$மஜாத்ய**
**க்ருத்தெள கரெள தவ புர: க்ருத ராம நாம்நே।**
**ப$_3$த்$_3$த$_4$ாஞ்ஜலீ-ரகு$_4$வரஸ்ய க்ருபா ப்ரஸாத**
**ஸந்த$_4$ாயகெள - ஹததிய: கிமபீ$_4$ப்ஸிதம் ஸ்யாத்॥**

எல்லோருக்கும் உன்னைத் தீண்டும் இன்பம் அளிப்பவனே! பொறுமைக்கு விளை நிலமே! உன்னிடம் பக்தியுள்ளவர்கள்- அவர்களுக்குத் தோன்றியபடியெல்லாம் உனக்கு உபசாரம் செய்கிறார்கள். அவையெல்லாம் உனக்கு ஹிதமாக இருக்குமோ? உகப்பாக இருக்குமோ! அவர்களுக்கு தெரியாது. அத்தனையையும் பொறுத்துக்கொள்வாயே! உன்னுடைய வீர்யம் வீண்போகாததாயிற்றே! நினைத்து. உபசாரம் என்று துன்புறுத்துபவர்களை ஒரு நொடியில்

தண்டிக்கமாட்டாயோ! பரிவோடு அத்தனையையும் பொறுத்துக் கொள்கிறாயே! ஒருவர் திடீரென்று உன் தலையில் ஒரு சொம்பு பாலை ஊற்றுவார். அதன் மேல் தீர்த்தம் ஊற்றி -சுத்தம் செய்வதற்கு முன்பே - மற்றொருவர் கைநிறைய வெண்ணெயை வைத்துக்கொண்டு உன் உடல் முழுவதும் அப்புவார். அடுத்தவர் உடனே வந்து உன்னைச்சுற்றி அகல் விளக்குகளை ஏற்றுவார். அவை திகுதிகு வென்று எரியும். உன்மேல் தடவியுள்ள வெண்ணெய் எல்லாம் உருகும். அதெல்லாம் உனக்கு உபத்திரவம் தானே! அத்தனையும் க்ருபையோடு சகித்துக் கொள்வாயே!

***க்ஷாந்தீச$_+$! ஸர்வஸுலப$_4$! த்வயி ப$_4$க்தி நம்ரை:***
***யத்யத் க்ருதம் ததி$_3$ஹஸோட$_4$ம் அமோக$_4$வீர்ய|***
***க்ஷீராபி$_4$ஷேக நவநீத மஷீவிலேபை:***
***தீ$_3$பைரகால கலிதை: ப்$_4$ருச$_+$ம் அர்தி$_3$தோ$_S$ஸி||***

எல்லோருக்கும் உனது அருட்பார்வை உண்டு. மிகவும் துயரப்பட்டவர்கள் உன் கால்களைப் பிடித்துக்கொண்டு தத்துப்பித்தென்று உளரிக் கொண்டு - ஹிம்சை - அபசாரம் - செய்கின்றார்களே அந்த அபசாரங்களை மன்னித்து விடுவாயே! பூமியைக் காட்டிலும் பொறுமை சாலி என்று உன் பிரபு ராமனுக்குப்புகழ். அவரைக்காட்டிலும் உனக்குப் பொறுமை அதிகம் போல் இருக்கிறதே! சுத்தியல் கொண்டு உன் கையை வெட்டின கொடுமையை எப்படி சகித்தாய்? ஏன் சகித்தாய்?

***ஸர்வேஷ்வநுக்$_3$ரஹத்$_3$ருசி$_+$: ப்$_4$ருச$_+$ து$_3$:கி$_2$ தேஷு***
***ஸர்வாப ச$_1$ார க$_3$ண விஸ்ம்ருதி ஸுஸ்வபா$_4$வ:!***
***ராமாத் க்ஷமா$_S$பி ப்ருதி$_2$ வீஸத்$_3$ருசீ$_+$ கிமாத்தா?***
***வாதாத்மஜா$_{SS}$ஹிதமித$_3$ம் க்ஷமஸே கத$_2$ம் த்வம்? ||***

ப்ரபோ! ஆஞ்ஜநேயா! இந்த பொறுக்க முடியாத கொடுமை -பக்தியே செல்வமாக அஞ்சலியில் சேர்த்து

வைத்துக் கொண்டிருக்கின்ற உந்தன் கைஜோடிக்கு வந்த விபத்து! அது உனக்கு அல்ல. பக்திக்கும் அதுவே கதி என்று கிடக்கின்ற ஸாதுக்களுக்கும் விழுந்த அடி. அவர்கள் துடிக்கிறார்கள். ஆகவே இந்தக் கொடுமையை பொறுத்துக் கொள்ளாதே!

*நே$_3$தம் ப்ரபே$_4$ா தவக்ருதம்– யத$_3$ஸஹ்யமாக$_3$:*
*ப$_4$க்த்யேகமுத்$_3$ரித கராம்$_3$புஜ யுக்$_3$ம ப$_4$ங்க$_3$:*
*ப$_4$க்த்யா: த்வதே$_3$தக$_3$ ச+ரணஸ்ய ச$_1$ ஸா$_4$து ப்ருந்த–*
*ஸ்யாத்யாஹிதம் க்ருதம் – அதோ –நநு –மாக்ஷமேத$_2$ா: ||*

நாங்கள் எல்லோரும் ராம நாமம் சொல்வோம் அதன் பலம் கொண்டு எழுவாய்! ராமதாஸனே உன் பராக்ரமத்தின் ஒரு துளியை உசுப்பிவிடு! எழுந்திராய்! பிஞ்சு ஹநுமானே! உன் கால் கட்டை விரலால் நசுக்கித் தூக்கி எறிவாய் அந்தத் திமிர் பிடித்தவனை.

*ராமஸ்ய நாமபி$_4$ ரமோக$_4$ ப$_3$லை ருதேஹி!*
*வீர்யஸ்யதே கணமிஹோத்$_4$தர – ராமதாஸ |*
*உத்திஷ்ட$_2$ பா$_3$லஹநுமந் – தவ பாத$_3$ பத்$_3$மாங்–*
*கு$_3$ஷ்டே$_2$ந பேஷய! தமுத்க்ஷிப து$_3$ர்மத$_3$ாந்$_4$தம்*

இந்தச் ச்லோகங்கள் 3.9.81 அன்று எழுதபப்ட்டு அடுத்த மாத ஸம்ஸ்க்ருதஸ்ரீயில் வெளி வந்தன.

இவனுடைய அல்பபுத்தி இப்படி பிரார்த்திக்கச் செய்தது. ஆனால் நடந்தது வேறு. அந்த ஆண்டு விஜயதசமியன்று ஹநுமான் அதே இடத்தில் பிரதிஷ்டை ஆனார். அதிசுந்தரமான மூர்த்தி. ஒரு ஆச்சர்யம். முந்தைய ஹநுமன் மூர்த்திக்குச் செய்யப்பட்ட வெள்ளிக்கவசம் கச்சிதமாகப் புது மூர்த்திக்குப் பொருந்தியது.

புரட்டாசி கடைசி சனிக்கிழமையன்று - வெங்கடேச பெருமாளை தர்சிக்க இவன் சென்றான்.

அக்கோவிலின் கடைசிப்படிக்கு மேல் படியில் ஒரு கிழவர் கம்பை ஊன்றிக் கொண்டு நெற்றியில் திருமண்ணுடன் உட்கார்ந்திருந்தார். அவர் இவனுடைய பால்யத்தில் காளிமுத்து வோடு படித்த போது கோவிலின் பின்புறம் வடமேற்கு மூலையில் உள்ள வெங்கோபராவ் சந்தில் இவனுடைய குடும்பம் குடியிருந்த போது பால் கொடுத்து வந்த கோனார்.

இவன் படியேறும் போது இவர் எழுந்திருந்து கேட்டார்.

''சிமிழி சாஸ்த்ரி ஐயா மகன் தானே நீங்க?''

''ஆமாம் கோனாரே! ஏன் இங்கே உக்காந்திருக்கீங்க''

''ஒடம்பு முடியல்லை. பொழுத சாயுற வேளையிலே இங்கே உக்காந்து ராம நாமம் சொல்வேன். எல்லாம் உங்க தோப்பனார் செய்து வைத்த பழக்கம்.

''அப்படியா! ரொம்ப சந்தோஷம் என்று நகர்ந்தேன்.

''உங்ககிட்ட ஒரு சேதி சொல்லலாம்னு தான் எந்திரிச்சேன்''

''சொல்லுங்கோ''

''முந்தா நாள் எப்பொழுதும் போல காத்து வாங்கிகிட்டு இங்கே உட்கார்ந்திருந்தேன்- ஒரு பயல் ஸைகிளில் வேகமாக வந்தான். பேசும் போதே திமிரோடு பேசினான்.

''உங்க ஹநுமார் கையை நான் தான் உடைச்சேன். ஹநுமாராலே என்ன பண்ண முடிஞ்சுது ? ஹெஹ ஹே'' என்று சிரித்தான்.

''அப்படிங்களா! வணக்கத்தோடு கூப்பின கைகளை - நீங்க தான் உடைச்சீங்களா? உங்க திமிரைக்காட்டரதற்கு வேறே ஆம்பிளை கிடைக்கலீங்களா?

''என்ன தாத்தா பேசுறீங்க! ஹநுமான் பெரிய கில்லாடின்று சொல்றீங்க. என்னை ஒண்ணும் செய்ய முடியல்லையே!''

''போடா! நீ ஒரு பேடி. கல்லுன்னு நெனச்சு சுத்தியலாலே கையை உடைச்சே!

''கல்லுத் தானே அது?''

''அதைத்தான் சொல்றேன் கல்லுன்னு நெனைச்சு உடைச்சே. அது கருணையுள்ள தெய்வம். அறிவில்லாத பதர் - நீ என்று தெரிந்து கொண்டு உன்னை தண்டிக்கவில்லை. ஆனால் உன்வினை உன்னைச் சும்மா விடாது.''

இப்படின்னு சொன்னேன். சைக்கிள்ளே ஏறி வேகமாய் போனான் - நாலு கால் மண்டபச் சுவரில் மோதி கையும் காலும் ஒடிந்து ஆஸ்பத்திரியிலே கிடக்கிறான்.''

''கோனாரே! இதை எதுக்கு என்னிடம் சொல்றீங்க!

''அவன் போறானுங்க. அதற்காக சொல்லவில்லை. அவன் கேட்ட கேள்விக்கு நான் பதில் சொன்னேனே! அது எப்படி? என்னவோ வாயிலே வந்தது. சொல்லிப்புட்டேன். அது சரி தானுங்களா!

உண்மையில் அவர் கெட்டிக்காரத்தனமாக - இவனிடம் பேசவில்லை. கபடமற்ற இயல்போடு தான் பேசினார். அவனுக்கு பதில் சொன்னதில் எத்தகைய நீர்மை ஸத்யம் இருக்கிறது! அதை அவர் ஆலோசித்து இப்படிச் சொல்ல வேண்டும் என்று நினைத்துச் சொல்லவில்லை. அவர் சொல்கின்ற ராம நாமத்திற்குப் பயனாக ஹநுமான் அவருக்கு இயல்பாக இந்த விவேகத்தை அருளியிருக்கிறார். இது தான் ஸத்யம்.

# சுசீந்திரம்

*தமிழ் நாட்டில் சுசீந்திரத்தில் ஆரம்பிப்போம்.*

*ஹநுமான் லங்கையில் ஸீதாதேவிக்கு தன் விச்வரூப தர்சனம் செய்து வைத்தார். அதை நினைவூட்டும் முறையில் தாணுமாலயர் ஆலயத்தின் வடக்கு ப்ராகாரத்தில் வடமேற்கு மூலையில் - ஸீதாதேவிக்கு ஒரு சிறு ஸந்நிதி. வடகிழக்கு முடிவில் -ஹநுமானின் விச்வரூபம் அந்த நீண்ட பிராகாரத்தில் ஸீதாதேவிக்கு மட்டும் - ராம லட்சுமணர்கள் அல்லாமல் . தனிக் கோவில் எழுந்த தென்றால் அதற்கு விச்வரூப ஹநுமான் காரணம்.*

## நாமக்கல்

*எதிரே உக்ர கலையோடு மேற்கே பார்த்த ஸந்நிதியில் -விளங்குகின்ற நரசிம்மப் பெருமாளிடம் ஹநுமான் கைகூப்பி நின்று வேண்டுகிறார்.*

*''பெருமானே! ஒரு காலத்தில் இந்தப்பகுதியில் மக்களைக் கொடுமைப்படுத்திக் கொண்டிருந்த அரசனுடைய அட்டஹாசம் தாங்காமல் - தங்கள் அடியார் ஒருவர் இங்கே தவமிருந்து தங்களை வழிபட்டார். அவருடைய தவத்திற்கு இணங்கி தாங்கள் தர்சனம் அளித்தீர்கள்.*

*''ப்ரபோ! இந்த அரக்க அரசனின் கொடுமை தாங்காமல் அப்பாவி மக்கள் துடிக்கிறார்களே. இவர்களுக்குத் தொல்லை நீங்க அருள் புரிய வேண்டுமென வேண்டினார்.'' இங்கே உக்கிர கலையோடு எழுந்தருளி ஹுூம்காரம் செய்த நொடியில். அந்த அரக்கன் ஒழிந்துவிட்டான். நாமகிரித்தாயாரும் தங்களை சாந்தி அடைய வேண்டும் என்று கெஞ்சினாள்.*

*''நான் கோபித்துக் கொண்டிருக்கின்றேன் - என்று நினைக்காதே. என்ஸ்வருபம் இந்த அவதாரத்தில்*

அப்படித்தான் இருக்கும். ஆனால் என் அடியார் என்னிடம் பயப்பட மாட்டார்கள். எட்டுவயது பிரஹ்லாதன் பயந்தானா? என் சிரிப்பே பயங்கரமாக இருக்கிறதே என நினைக்காதே. அதற்கும் பொருள் உண்டு. மக்களிடம் உனக்கு உள்ள கருணை அந்தச் சிரிப்பில் பிரதிபலிக்கும்'' என்று அருள் பாலித்தீர்கள். அந்தக்ருபையை நினைத்து தங்கள் எதிரில் கைகூப்பி நிற்கிறேன். பெருமாளே! பக்தர்களின் ஹரி நாம கோஷமே மலையாக வளர்ந்து தங்களுக்கு ஆஸனமாகிவிட்ட நாமகிரியின் முன்னே தங்கள் ஸந்நிதியில் நின்று - என்றும் ஹரே ராம என்று ஜபித்துக் கொண்டிருக்க எனக்கு அநுமதி அளியுங்கள். என்று வேண்டி இன்னும் வெயில் மழை எல்லாவற்றையும் தலையில் தாங்கி நின்று அருள் பாலிக்கிறார்.

## மன்னார்குடி

மன்னார்குடி ராஜகோபால ஸ்வாமியின் பிரஹ்மோத்ஸவத்தில் ஒவ்வொரு நாளும் காலை கோவிலிலிருந்து புறப்பாடு ஆகி ஊரில் அந்தந்த இடங்களில் அதற்காகவே கட்டப்பட்டுள்ள - கருங்கல் மண்டபங்களில் இறங்கி - மாலை வரை தர்சனம் கொடுத்து ராஜகோபாலன் வாஹனங்களில் ஏறி இரவு ஆலயம் போய்ச் சேர்வார்.

வெண்ணைத்தாழியன்று காலையில் ராஜகோபாலன் வெண்ணைத்தாழியை கையால் அணைத்துக் கொண்டு தவழும் கோலத்தில் பல்லக்கில் ஏறி வருவார். பக்தர்கள் முன்னழகு பின் அழகு ஸேவித்துப் பரவசமடைவார்கள். 11மணி சுமாருக்கு நகரத்தின் மத்தியில் உள்ள பந்தலடிக்கு வந்து - தெற்கே திரும்பி வெண்ணைத் தாழி மண்டபம் வந்து சேர்வார். முகமெல்லாம் பக்தர்கள் வீசி எறிந்த வெண்ணை உண்டைகள் அப்பியிருக்கும். அத்தோடு குதூஹலமாக அந்தக் கண்ணன் கொடுக்கின்ற காட்சி கண்டு மக்கள் பரவசப்படுகிறார்கள்.

அன்று ஒருநாள் வெண்ணைத்தாழி மண்டபம் அமர்க்களப்படும். மற்ற நாட்களில் அது பூட்டிக்கிடக்கும்.

1940 ஒருநாள் பகல் அது திறக்கப்பட்டது அந்த மண்டபத்திற்கு எதிர்த்தாற் போல இந்த நூலின் ஆசிரியர் ஜவுளிக்கடை வைத்திருந்தான். மண்டபம் திறக்கப்படுவதை விநோதமாகப் பார்த்தான்.

ஒரு மாத்வராயர் - முப்பது வயதிருக்கும் - தோளில் - ஜலம் நிரம்பிய குடத்துடன் உள்ளே சென்று மண்டபத்தை அலம்பினார். அந்த மண்டபத்தில் மேல்புறச்சுவற்றில் ஒரு பிறை. அதில் ஆறுஅங்குல உயரத்தில் ஒரு ஹநுமான். அந்தப்பிறையை ஈரத்துணியினால் அழுக்குப்போகத் துடைத்தார். மற்றொரு துணியால் ஹநுமானைத் துடைத்தார். தான் கொண்டு வந்த வஸ்திரத்தைச் சாத்தினார். கோபி சந்தனத்தினால் நெற்றியில் அழகாக நாமம் போட்டார். துளஸித்தளிர் மாலை சாத்தினார். மணி அடித்தார். தூபம் காட்டினார் - கொண்டுவந்திருந்த பிரம்புக் கூடையிலிருந்து இரண்டு பாத்திரங்களை எடுத்தார். ஒன்றில் வடைகள் - மற்றொன்றில் தயிர் சாதம் -நிவேதனம் செய்தார். மணி ஓசை கேட்டு ஐந்தாறு பக்தர்கள் உள்ளே நுழைந்தனர். ப்ரஸாதம் வழங்கினார்.

வெளியே வந்து வாசற்கதவைப் பூட்டினார். அந்தப்பூட்டு நாதாங்கியில் -மூன்று அடி சதுரமான ஒரு அட்டையைத் தொங்கவிட்டார். அதில் எழுதியிருந்தது.

''தினம் தோறும் - காலை பத்து மணிக்கு வெண்ணைத்தாழி மண்டபம் ஹநுமான் ஸந்நிதியில் பூஜை நடந்து ஹநுமாருக்கு நிவேதனம் செய்த பிரஸாதங்கள் விற்கப்படும்.''

மறுநாள் காலையில் ஒரு கிழவர் வந்தார். மண்டபத்தை திறந்து - மண்டபத்தை பெருக்கி - ஜலம் தெளித்துத் -துடைத்து ஹநுமான் பிறையில் அகல்விளக்கு

ஏற்றி ஹநுமானை முன்னால் ஈரத்துணியால் நன்றாகத் துடைத்துவிட்டு - மறுபடியும் காய்ந்த துணியால் துடைத்தார். வஸ்த்திரம் சாத்தினார். கோபிசந்தன நாமம் போட்டார். துளசித்தளிர் மாலையை சாத்தினார். தூபம் போட்டார். அவருடைய பையன் நேற்று வந்தவன் வந்தான். பெரம்புக் கூடையிலிருந்து பிரஸாதம் எடுத்தான். நிவேதனம் செய்தான். தீபஹாரத்தி செய்தான். பிரஸாதப் பாத்திரங்களேச் சுவரோரமாக இருந்த பெஞ்சின் மீது வைத்தான். சுத்தமான பெரிய சரகு தொன்னையில் இரண்டு பெரிய கரண்டி தயிர் சாதம் இரண்டு வடைகள் வைத்து - காய்ந்த ஆலம் இலையினால் மூடினான். - ஒரு தொன்னை ஒரு ரூபா. வந்தவர்கள் வாங்கினார்கள் பிரஸாதத்துடன் வெளியே வருபவர்களைப் பார்த்து மற்றும் சிலர் மண்டபத்தில் ஏறினர் - ஜவுளிக்கடையில் இவன் கடைப்பையனை அனுப்பி - இரண்டு தொன்னைகள் வாங்கிவரச் சொன்னான். மெது வடை பொரித்த குறுமிளகு போட்டு முளைக்கீரையைச் சிறிது சிறிதாக நறுக்கி எண்ணெயில் வதக்கிப்போட்டு -வடைகள் மொறு மொறு என்றிருந்தன. தயிர்சாதம் மாங்காயையும் வெள்ளரி பிஞ்சையும் சிறிது சிறிதாக நறுக்கிப் போட்டு தயிரில் வெண்ணை கலந்து பிசைந்து சீரகம் தாளித்துக் கொட்டி தளிகை கமகம வென்று வாசனை கமழ்ந்தது. ஒரு தொன்னை பிரஸாதம் வயிறு நிறைந்து விட்டது. அரை மணியில் பிரஸாதங்கள் விற்றுப் போய்விட்டன. மண்டபத்தைப் பூட்டிக் கொண்டு கிளம்பிய ராயர் இளைஞனை இவன் அழைத்தான்.

''பிரஸாதம் பிரமாதமாக இருக்கிறதே''

''பிரஸாதம் ஹநுமானுக்கு அல்லவா செய்யப்பட்டது? என் பாட்டி சொன்னாள் ''சும்மா உட்கார்ந்திருக்கிறாயே! வெண்ணைத்தாழி மண்டப ஹநுமாருக்கு தினமும் நிவேதனம் செய்து பிரஸாதத்தை விற்று பிழைப்பு நடக்குமே''

அவள் வாய் ஓயாமல் ராம ராம சொல்லுவாள். சரியென்று தேவஸ்தானத்தாரிடம் சென்று கேட்டேன். மண்டபம் பூட்டிக் கிடக்கிறதே! தினமும் நான் அதைப் பெருக்கி சுத்தமாக வைத்துக் கொண்டு - அந்த ஹநுமாருக்கு பூஜை பண்ணி பிரஸாதம் போட்டுவிற்கிறேன். இடம் கொடுங்களேன்.''

தேவஸ்தான அதிகாரி - ஹநுமத் பக்தர். ஹநுமாருக்கு தினமும் நைவேத்தியம் செய்கிறேனே என்று சொன்னவுடன் மண்டபச்சாவியை எடுத்துக் கொடுத்துவிட்டார். அதுவும் அந்த ஹநுமானின் செயல் தான்.

''அது சரி தினமும் இவ்வளவு ருசியா பிரஸாதம் போட முடியுமா! கட்டுபிடி ஆகுமா?

''இன்னிக்கு பிரஸாதத்திற்கு 85 ரூபாய் செலவு. 100 ரூபாய்க்கு விற்றாயிற்று. பத்து ரூபாய் கிடைத்தால் போதும் நாளைக்கு இன்னும் நன்றாகப் பண்ணலாம்''

''நிறையப் பண்ணுமே! நன்றாக விற்பனை ஆகுமே''

''வீட்டில் தாயாரும் அப்பாவும் நானும் தான். எங்களால் இதற்கு அதிக அளவாக பிரஸாதம் போட முடியாது.

''இரண்டு ஆட்களைச் சேர்த்துக் கொண்டால் போயிற்று''

என் அப்பா அம்மா ரொம்ப ஆசாரம். வெளி ஆட்களைச் சேர்த்தால் ஆசாரம் கெட்டுவிடும். அதெல்லாம் வேண்டாம் ஸார். ஹநுமார் க்ருபையிலே இது நடந்தால் போதும். நான் வர்றேன்.''

ஹநுமாருக்கு தினம் தோறும் பக்தர்கூட்டம் அதிகமாகிவிட்டது - என்று இவன் சொன்னால் வாசகர்கள் நம்பமாட்டார்கள். அவர்களுக்குத் தெரியும். கூட்டம்

பிரஸாதத்திற்காக தான். நூறு பிரஸாதம் தான் வரிசையாக வாங்கிக் கொள்ளுங்கள் என்பார் ராயர். பத்து நிமிஷங்களில் பிரஸாத தொன்னைகள் விற்றாகிவிடும்.

ராயர் ஒரு விஷயத்தில் மிகவும் கவனமாக இருந்தார். ஹநுமானுக்கு நிவேதனம். அது பரிசுத்தமாகவும் ருசியாகவும் இருக்க வேண்டும். தாய் தந்தை தனயன் மூவருக்குமே இந்த லட்சியத்தை அலட்சியம் செய்யத் துணிவே ஏற்படவில்லை. ஹநுமான் அப்படி அவர்களைக் கட்டிக் காத்தார். ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. தாயும் தந்தையும் ஹநுமான் திருவடி சேர்ந்தனர் - பையனுக்குத் தனி ஒருவனாக இந்த சேவையை தொடர்வதற்கு முடியவில்லை. மறுநாளே ஹநுமானை நமஸ்காரம் செய்து விட்டு ஊரைவிட்டே போய் விட்டான்.

முப்பது ஆண்டுகளுக்குப் பின் இவன் ஒருநாள்ஸெகந்தராபாத்தில் பெரியவாளை தர்சனம் செய்துவிட்டு அவசரமாகப் பறந்து டெல்லி செல்ல வேண்டியிருந்ததால் -விமானத்தில் ஏறி அமர்ந்தான். பக்கத்தில் ஒருவர் வந்து உட்கார்ந்தார். ஆஜானுபாஹுவாகத் கதர் ஜுப்பாவும் பஞ்சகச்சமுமாக நெற்றியில் கரிப்பொட்டும் கீற்று நாமமுமாக - நல்லகளையோடு இருந்தார். அவரைப்பார்த்துப் புன்னகை புரிந்து விட்டு இவன் தன் இருக்கையில் சாய்ந்து தூங்க முனைந்தான். தூக்கம் வரவில்லை. பக்கத்தில் இருந்தவர் - இவனைப் பார்த்து - இவன் பெயரைச் சொல்லி ''மன்னிக்கணும் நீங்கள் இன்னார் தானே'' என்று கேட்டார்.

இவன் அதிர்ந்து போனான்.

''மன்னார்குடியிலே ஜவுளிக்கடை வைத்திருக்கிறீர்கள் இல்லையா?''

''அது போய் எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டது - என்று இவன் சொல்லவில்லை.

''தாங்கள் மன்னிக்க வேண்டும் தாங்கள் இவ்வளவு குறிப்பாக - என்னை அடையாளம் காட்டுகிறீர்கள் -நான் உங்களை அறவே மறந்து விட்டேனே!''

''அதனால் என்ன? - என்னைக் காட்டிலும் வயது அதிகமில்லையா! மன்னார்குடியிலே வெண்ணைத்தாழி மண்டபத்திலே பிரஸாதம் போட்டு விற்றுக்கொண்டிருந்தானே ஒரு ராயன்''

''ஆம், ஆம்''

''அவனேதான் இவன்''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம் உங்களை இப்படிப் பார்க்கிறதுதிலே எனக்கு ரொம்ப சந்தோஷம்''

''எல்லாம் ஹநுமான் போட்ட பிச்சை. மன்னார்குடியை விட்டுக் கிளம்புகிற போது - என் கையில் கொஞ்சம் பணம் சேர்ந்திருந்தது - என்னுடைய தாய் மாமன் - ஹைதராபாபத்திலே ஸர்க்கார் உத்யோகத்தில் இருக்கிறார். அவரைப் போய்ப் பார்த்து -ஏதாவது பிழைக்க வழி செய்து கொள்ளலாம் - என்று நினைத்து இந்த ஊருக்கு வந்தேன். அவர் எனக்கு ஒரு சிறிய பலசரக்குக் கடை வைத்துக் கொடுத்தார் - ஹநுமான் கற்றுக்கொடுத்த பாடத்தை நான் மறக்கவே இல்லை. - எதைச் செய்தாலும் அது சுத்தமாகவும் நேர்மையாகவும் நாணயமாகவும் இருக்க வேண்டும் - என்ற பாடம் தான் - சிறிய வியாபாரம் தான். ஆனால் நான் விற்கும் பண்டம் ஒவ்வொன்றும் சுத்தமாக இருக்க வேண்டும். கலப்படம் உதவாது. அளவு குறையாமல் இருக்க வேண்டும். இப்படிப்பார்க்கும் போது போட்டி மார்க்கெட்டின் விலையோடு என்னால் போட்டி போட முடியவில்லை. ஆயினும் மனம் தளராது - லட்சியத்தைக் கைவிடாமல் கவனமாக இருந்தேன். வாடிக்கையாளர் பெருகினர். வியாபாரம் பெருகியது.

நான் மாமன் மகளையே திருமணம் செய்து கொண்டேன்.

சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்.

எனக்கு நான்கு பெரிய குமாரர்கள் பெரிய டிபார்ட்மெண்ட் ஸ்டோர்ஸ்கள் நடக்கின்றன. எல்லாவற்றிற்குமே ஒரே பெயர். ஹநுமான் ஸ்டோர். ஆண்டு வியாபாரம் நூறு கோடிக்கு மேல். எல்லாம் ஹநுமான் கிருபை. ஆண்டு தோறும் எப்படியாவது ஒரு நாள் கிளம்பி நேரே மன்னார்குடி போவேன். காரை கருட ஸ்தம்பத்திற்குப் பக்கத்திலே நிறுத்திவிட்டு நானும் மனைவியும் கடைத்தெரு நெடுக நடந்து - வெண்ணைத்தாழி மண்டபம் போய் - கதவுக்கு இடுக்கு வழியாக ஹநுமானை தர்சனம் செய்வேன். ஏதோ சில தர்ம கார்யங்களை யாருக்குமே தெரியாமல் செய்து வருகிறேன். ஆண்டுக்கு மூன்றுகோடி ரூபாய் வரை செலவாகிறது. மன்னார்குடியிலும் ஹநுமானுக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று ஆசை. பிரஸாத ராயனுக்கு இவ்வளவு பவுஷா? என்று யாராவது சொல்லாம் அந்த விளம்பரம் வேண்டாம் என்று சும்மா இருக்கிறேன்?'

டெல்லி வந்தது இருவரும் பிரிந்தார்கள்.

## சென்னையில் மைலாப்பூர்

கி.பி.1900ல் ஸம்ஸ்க்ருதக் கல்லூரி வளாகத்திற்கு முன்னால் - சந்துக்கு முன்புறம் ஒரு சின்ன ஹநுமான் கோயில் இருந்தது. அந்தக் காலத்து அர்ச்சகர் ஒருவர் ஸேவார்த்திகளிடம் கூறுவாராம்.

ஹநுமானைப் பிராத்தித்துக் கொள்ளுங்கோ- எல்லாம் நல்லபடியாக நடக்கும்'' என்பாராம். ஸாதாரணமாக தர்சனத்திற்கு வந்தவர்களிடம் ஏதாவது சொல்ல வேண்டும் என்பதற்காக அர்ச்கர் சொன்ன வாக்கு பல பேருக்கு உள்ளத்தில் பதிந்து விட்டது. வேண்டிக்கொண்டால்

காரியங்கள் பலித்தன. ஹநுமான் உருவத்தில் வளரவில்லை. ஆனால் அவருடைய வளாகம் விரிந்துவிட்டது. பெரிய பிராகாரம் - பிறகு ஸீதாராம லட்சுமணர் ஸந்நிதி - ஹநுமான் ஸந்நிதிக்கு நேரே ராஜகோபுரம். பக்தர்கள் பெருகிவிட்டனர். வடைமாலை பிரார்த்தனைக் காரர் பெருகிவிட்டனர். ஒரு நாளில் பல வடை மாலைகள் சாத்தி மாளவில்லை.

நிர்வாகத்தினர் ஒரு நாளைக்கு ஒரு குறிப்பிட்ட எண் தான் வடை மாலை சாத்தமுடியும். வரிசையாக ரசீது போட ஆரம்பித்தனர். இப்போது ஆறுமாதங்களுக்கு அப்புறம் வடை மாலை சார்த்த தேதி கிடைக்கிறது. அதற்கும் பக்தர்கள் தயாராக உள்ளனர்.

## காஞ்சீபுரம்

காமகோடிபீடத்தின் மடத்தின் எதிரில் - வரதராஜஸ்வாமியின் கருடவாஹந மண்டபம் உள்ளது. அந்த மண்டபத்தில் ஒரு ஹநுமான். அவருக்கு முறைப்படி நித்ய பூஜை நடந்து வருகிறது. காம கோடி பீடத்தின் ஸ்ரீகார்யம் முதல் மானேஜர், அலுவலர்கள், வித்வான்கள், -பூஜைக்கட்டு உதவியாளர்கள், என்று பலவிதம் சேவை செய்கிறவர்கள் எல்லாருக்குமே இந்த ஹநுமானிடம் அபார பக்தி. தினம் தோறும் யாராவது ஸேவைக் காரர் வேண்டிக்கொண்டு ஹநுமானுக்கு வடைமாலை சார்த்துவார். மடத்து சிப்பந்திகள் அனைவருக்கும் வடை பிரஸாதம் கிடைக்கும்.

கருடஸேவை அன்று - மாலை கருட ஸேவைக்காக காலையிலே ஸ்ரீவரதராஜப்பெருமாள் அந்த மண்டபத்திற்கு எழுந்தருள்வார். காஞ்சீ மஹாஸ்வாமிகள் காஞ்சீபுரத்தில் இருந்தால் - பெருமாள் தேரடி தாண்டிவிட்டார் - என்று தெரிந்ததுமே - வாசலில் வந்து நின்று விடுவார்கள். கூட்டம் - பெருமாள் கந்தர் கோட்டம் தாண்டின உடனேயே மஹாஸ்வாமிகள் மண்டபத்தின் வாசலில் போய்க் காத்திருப்பார்கள். பெருமாள் மண்டப வாசல் வந்ததுமே

ஆகமமுறைப்படி பெருமாளுக்கு வரவேற்பு நடைபெறும். அந்த முறைகள் முழுதும் நடந்தேறிய பிறகு, மஹாஸ்வாமிகள் முன்னே வருவார். அர்ச்சகர் பரிவட்டம் பிரஸாதம் எதிரே நீட்டுவார்கள் -ஸ்வாமிகள் கையில் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு - பரிவட்டத்துடன் வலம் வருவார்கள். விலகிநின்று பெருமாளின் மண்டபப்ரவேசம் தர்சனம் செய்வார்கள். பரிவட்டத்துடன் ஸ்ரீமடத்திற்கு வருவார்கள். பெருமாள் பின்னோடு ஸ்வஸ்தி வாசனம் சொல்லிக் கொண்டு வந்த ஸ்ரீ வைஷ்ணவர்களை ஸ்ரீமடத்திற்கு அழைத்து வந்து பசும் பால் விநியோகம் செய்வார்கள்.

இரவு கருடஸேவை புறப்பாட்டின் போதும் மஹாஸ்வாமிகள் மண்டப வாசலில் நின்று பெருமாள் கருட ஸேவை படி இறங்குவதை தர்சனம் செய்துவிட்டு தான் ஸ்ரீமடம் திரும்புவார்கள்.

மறுநாள் காலை தவறாமல் ஸ்வாமிகள் ஹநுமானை அணுகி தர்சனம் செய்வார்கள். ஸந்நிதியிலேயே சற்று நேரம் நின்று கொண்டிருப்பார்கள். ஹநுமானும் பெரியவாளும் என்ன பேசிக் கொண்டார்களோ?

ஸ்ரீபீடத்தின் முன்னாள் மானேஜர் விச்வநாதய்யர் கூறுவார். இந்த ஹநுமான் ஸ்ரீபீடத்தையே பார்த்துக் கொண்டு ரக்ஷை செய்கிறார்.''

## தாராபுரம்

கோவை மாவட்டத்தில் உள்ள தாராபுரம் சிறிய நகரம். அமராவதி நதி ஓடுகிறது. ஊரின் ஒரு பகுதிக்கு ஹநுமந்தபுரம் என்ற பெயர். அது பெரும்பாலும் மாத்வர்கள் வசிக்கின்ற அக்கிரகாரம். அங்கு தான் காடு **ஹநுமந்த ராயஸ்வாமி ஆலயம்.** அதைச் சுற்றி நான்கு ரத வீதிகள். பெரிய ஆலமரம், அதன்கீழே நான்கு ஏகர் பரப்பில் ஆலயம். ஒரு

காலத்தில் இது மிகச் சிறப்பாக விளங்கியது. முகலாய ஆதிக்கத்திலே சிக்கி ஊர் மக்கள் சிதறி ஓடிவிட்டனர். கோவிலைச் சுற்றிக் காடு மண்டிவிட்டது. ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு காட்டை திருத்தி -ஒருவாறு கிராமத்தை உருவாக்கி ஹநுமார் கோவிலைப் புதுப்பித்தனர். ஆயினும் அவர் காடு ஹநுமான் என்றே அழைக்கப்பட்டார். காடு அநுமந்த் ராயஸ்வாமி தேவஸ்தானம் தான் அது.

தென்நாட்டு மாத்வசமூஹத்திற்கு மிகவும் முக்கியமான க்ஷேத்ரம். மத்வஸம் பிரதாயத்தை நிறுவிய ஸ்ரீமத்வாசாரியருக்கு நான்கு சிஷ்யர்கள். ஸ்ரீபத்மநாபதீர்த்தர். ஸ்ரீநரஹரி தீர்த்தர் ஸ்ரீமத்வதீர்த்தர், ஸ்ரீஅக்ஷோப்யதீர்த்தர். இவர்களுக்கு பிறகு ஸ்ரீஜய தீர்த்தர் என்று புகழ்பெற்ற பீடாதிபதி கி.பி.1388ல் ஸித்தி ஆனார். அவருக்குப்பின் பீடாதிபதியாக இருந்தவர் ஸ்ரீவியாசராயதீர்த்தர். இவருடைய காலத்தில் மைசூர் ராஜாங்கத்தின் பேராதரவு பெற்று மாத்வ மடங்கள் மஹோந்நதமாக விளங்கின. ஸ்ரீவியாசராயர் முல்பாகல் என்ற ஊரில் இருந்த ஸ்ரீ பாதராயர் என்ற மஹா பண்டிதரிடம் ஸகல வித்யைகளையும் கற்றார்.

ஸ்ரீபாதராயருடைய பூஜையிலிருந்த ஸ்ரீ வேணுகோபால மூர்த்தியை தர்சித்து சில நாமாவளிகள் பாடினார் வியாஸராயர். அதற்கேற்ப நர்த்தனமாடினார் வேணுகோபால மூர்த்தி. அந்த மூர்த்தியை ஆராதிக்க ஆரம்பித்த பிறகு வியாஸராயருடைய பெருமை திசைகள் எல்லாம் பரவியது.

சந்த்ர கிரியை ஆண்ட சாளுவநரசிம்மன் அவரை திருப்பதிக்கு அழைத்துச் சென்று - ஸ்ரீவேங்கடசேரின் ஆலயத்தில் பூஜைமுறைகளைச் செம்மைப் படுத்தச் செய்தார். விஜயநகரத்தை ஆண்டு வந்த க்ருஷ்ண தேவராயர் தமக்கு ஏற்பட்ட ஜாதகக் கோளாறை நிவ்ருத்தி செய்து

கொள்வதற்காக அரசையே ஸ்ரீவியாச ராயரிடம் அர்ப்பணம் செய்தார். சில காலம் மாமன்னராக இருந்தார் வியாசராயர் - கிருஷ்ணதேவராயருடைய ஜாதகக்கோளாறு தீர்ந்ததும் - மறுபடியும் அரசை அவரிடமே ஒப்புவித்து விட்டு மறுபடியும் ஸந்ந்யாஸியாகவே இருந்து பலகாரியங்களை சாதித்தார். நாடுமுழுவதும் 732 ஊர்களில்- ஹநுமானுக்கு ஆலயம் எழுப்பி மக்களை வழிபடச் செய்து முஸ்லீம் ஆக்ரமிப்புகளை எதிர்த்து நிற்க தைரியத்தை மூட்டினார். அவர் பிரதிஷ்டை செய்த ஹநுமார் ஆலயங்களில் எண்பத்தொன்பதாவது ஆலயம் தாராபுரம் காடு ஹநுமானுடையது.

ஹநுமான் 7அடி உயரம். வலதுகை அபயமளிக்கிறது. இடதுகை இடுப்பில ஊன்றி இருக்கிறது. வால் வலது பக்கமாக நீண்டு உயர்ந்து தலைக்கு மேலே வளைந்து இருக்கிறது. அதன் நுனியிலே வரிசையாக மூன்று மணிகள் தொங்குகின்றன. விசாலமான மார்பு. இடுப்பிலே ஒரு வெள்ளிப்பட்டை. அதில் சலங்கைகள். இடுப்பு பட்டையின் வலது புறத்தில் ஒரு பிச்சுவா கத்தி சொருகிஇருக்கிறது. தலையிலே சிறந்த நகாசு வேலை செய்த அழகான கிரீடம் . அதன் பின்புறம் பிம்பத்தின் சிற்பத்தில் அகப்படாத சிலை மிகுதியில் - ஒருஉடைவாள். தலைப்பக்கம் வலது புறம் ஒரு சக்கரம். இடப்புறம் ஒரு சங்கு. கழுத்திலே ஸாலகிராம மாலை. ஒரு இரட்டைவட தங்கச்சங்கிலி. காதுகளில் அழகிய குண்டலங்கள். கால்களில் கிங்கிணிக்கொலுசு. கக்கத்தின் இடுக்கு வழியாக சிற்பத்தில் ஸௌகந்திக மலர்க் கொடி. முகத்தில் பௌருஷமும் கருணையும் ததும்புகின்றன. உடல் கிழக்கே பார்க்க இருந்தாலும் - முகம் மட்டும் சற்றே வடகிழக்காகத் திரும்பியிருக்கிறது.

கருவறைக்கு கூரை இல்லை. விமானம் இல்லை. நேரே மேலே ஆகாயம் தான். உச்சி வேளையில் ஹநுமான்

*திருமேனி முழுதும் தேஜோ மயமாகப் பிரகாசிக்கும் (தற்போது திருட்டுபயம் காரணமாக தலைக்கு மேலே இரும்பு கிராதி போடப்பட்டிருக்கிறது) மழை வெயில் பனியெல்லாம் ஹநுமான் தலையில். எல்லாமே அந்தந்தக் காலங்களில் அற்புதமாக தர்சனம் அளிக்கும். பற்கள் பளிச்சென்று தெரியும். பின்புறம் திருவாசி - பிற்காலத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.*

*அர்ச்சகர் காலை ஒரு வேளை மிகுந்த ஆசாரத்துடன் அபிஷேகம் அலங்காரம் அர்ச்சனைகள் செய்கிறார்.*

*பிறகு - ஸ்வாமியின் முன்னே மரத்தினாலான பீடத்தில் - பஞ்சலோஹங்களால் ஆன ஸ்ரீராமன் ஸீதை லட்சுமணண் மூவரும் தர்சனம் அளிக்கிறார்கள். மற்ற வேளைகளில் அர்ச்சனை பூஜைஎல்லாம் அவர்களுக்குத்தான். ஸ்ரீவிஜயேந்திர தீர்த்தர் ஆராதித்து வந்த மூர்த்திகள் என்று பரம பக்தியுடன் அர்ச்சகர் பூஜை செய்கிறார்.*

*தற்போது கோயில் விஸ்தாரிக்கப்பட்டது. முன் மண்டபம்- விசாலமான பிராகாரம் எல்லாம் விரிந்திருக்கின்றன.*

*இந்த ஆலயத்தில் ஒரு விசேஷம் சுற்றுப்புறம் உள்ள கிராமங்களிலும் -மற்றும் இந்த ஊரிலே பிறந்து வளர்ந்து வெளியூரிலும் வெளிநாடுகளிலும் வஸிப்பவர்களுக்கும் ஒரு நம்பிக்கை. சாதாரண வியாதியஸ்தர் டாக்டரிடம் போவார்கள். உள்ளூர் டாக்டர் - ''என் திறனுக்கு மிஞ்சிய வியாதி இது - பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போங்கள்'' - என்று சொல்லிவிட்டால், ஏழைகள் என்ன செய்வார்கள்? நேரே ஹநுமானிடம் ஓடிவருவார்கள்.*

*''அப்பனே ஹநுமந்தராயா! தீராத வியாதி வந்து விட்டதே - என் செய்வேன்? அடுத்த ஆண்டு உற்சவத்தில் உன் ஸந்நிதி வந்து மடல் புரள்வேன். என்னைக் காப்பாற்று. என் கணவனைக் காப்பாற்று. மனைவியைக் காப்பாற்று, குழந்தையைக் காப்பாற்று என்று வேண்டிக் கொள்வார்கள்.*

அவர்களுக்கு தோன்றின சில விரதங்களை மேற் கொள்வார்கள். வியாதிதீர்ந்து விடும். ஒரு கேஸ் பலிக்கவில்லை - என்ற பேச்சே கிடையாது.

மடல் புரள்வதென்றால்....?

ஹநுமத் ஜயந்தி உற்சவம் மிகவிமரிசையாக நடக்கும் பத்துநாட்கள். அதிலே முக்கியமான நிகழ்ச்சி அன்னதானம் - முன் மண்டபம் பிராகாரம் நாற்புறமும் சரியாக 12 மணிக்கு இலைகள் போடப்படும். பந்தியில் சாப்பிட இலை போடுமுன்பே சாப்பாட்டு ரஸிகர்கள் - துண்டுகளை நீட்டிப் போட்டு இடம் ரிசர்வ் செய்து விடுவார்கள் - மாத்வர்களின் தனிப்பட்ட ஸம்பிரதாயப்படி சமையல் வெகுருசியாக இருக்கும். கூடை கூடையாக குஞ்சாலாடுகள் - ஒன்று இரண்டு நான்கு என்று போதுமென்று சொல்கிற வரை பரிமாறிக் கொண்டே இருப்பார்கள் . பந்திகள் எழுந்ததும் காத்திருப்பவர்கள் ஸ்நாநம் செய்துவிட்டு கோபி இட்டுக்கொண்டு ஈரத்துணியுடன் பலபேர் சிலசமயங்கள் இருநூறுபேர்கள் வரை கியூ வரிசையில் நிற்பார்கள்.

சாப்பிட்டவர்கள் எழுந்திருந்தவுடன் ஈரத்துணியுடன் காத்திருக்கின்றவர்கள் வரிசையாக அந்த எச்சில் இலைகள் மேல் கோவிந்தா கோவிந்தா என்று கூவிக் கொண்டே புரளுவார்கள். முன் மண்டபம் கடந்து பிராகாரங்களில் இறங்கி நான்கு ப்ராகாரங்களிலும் உருண்டு கொண்டே போவார்கள் அவர்களுக்கு முன்னே சாப்பிட்டவர்கள் அத்தனை பேரும் ஹநுமார்கள் என்ற பாவனை.‘‘கோவிந்தகோஷம் போடுகின்ற பாகவதர்களின் பவித்திரமான எச்சில் இலைகளில் புரண்டு ஹநுமான் தன்னைப் பாவனமாக்கிக் கொள்கிறார்’’ என்று பெரியோர் சொல்வார்கள். முதல் பந்தியில் சாப்பிட உட்கார்ந்தவர்களில் ஏழைப் பரதேசிகள், ஆண்கள், பெண்கள், வயதான கிழவர்கள், உண்டு. அத்தனை பேரும் சுனையில் மூழ்கிக் குளித்து துணிஉலர்த்திக் கட்டிக்கொண்டு - நெற்றியில் நாமம் போட்டுக்கொண்டு கோவிந்தா கோவிந்தா நாமம்

சொல்லிக்கொண்டு தான் வந்து உட்கார்வார்கள் இப்படி மடல் புரள்கின்றவர்களில் கோடீச்வரர்களும் வெளியூர்காரர்களும் வெகுதூரத்திலிருந்து வந்தவர்கள் இருப்பார்கள். அவர்களுடைய வேண்டுதல்கள் நிறைவேறி இருக்கின்றனவே. அப்படிப் புரண்டுவிட்டு - அத்தனை பேரும் சுனையில் ஸ்நாநம் செய்து விட்டு - மடிகட்டிக் கொண்டு நாமம் போட்டுக்கொண்டு இரண்டாவது பந்தியில் முன்மண்டபத்தில் உட்கார்ந்து சாப்பிடுவார்கள். பிராகாரத்திலும் அதே விதம் சாப்பிடுவார்கள். ஹநுமானுடைய கிருபையைப்பற்றி - வியாஸ ராயர் எடுத்துச்சொல்லி இந்த அன்னதான கைங்கர்யத்தில் பங்கு கொள்வதின் மூலம் பக்தர்கள் மனப்பக்குவம் பெறுவார்கள் என்று உபதேசித்திருக்கிறார்.

## திருத்தருப்பூண்டி

திருவாரூர் மாவட்டம் திருத்தருப்பூண்டியில் (திருத்தருப்பூண்டி - பில்வவனம்) ஒரு காலத்தில் வில்வமரங்கள் காடாக வளர்ந்திருந்தது.

வீரசோழன் என்ற அரசன் அங்கு ஆண்டு வந்தான். அங்குள்ள பெருமாள் சோழனுக்கு வெற்றி தேடித்தந்தார். அவருக்குப் பெரிதாகக் கோயில் எழுப்பினான். பெருமாள் பெயர் அபீஷ்ட வரதராஜப் பெருமாள் ஸ்ரீதேவி நீலா பூதேவீயுடன் சேவை சாதிக்கிறார். அந்த ஆலயத்தின் முன் மண்டபத்தில் 16 அடி உயரத்தில் வைராக்ய ஆஞ்ஜநேயர் தர்சனம் அளிக்கிறார். அவருக்கு அமாவாசை தோறும் விசேஷமான ஆராதனைகள் நடைபெறும். பக்தர்கள் திறளாகவே வருகிறார்கள்.

---

(இருபது ஆண்டுகளுக்கு முன் இந்த ஆசிரியர் நேரில் சென்று — இந்த வைபவத்தைக் கண்ணாரக்கண்டு — அந்த நாள் அறங்காவலர் திரு.பத்மநாபன் அவர்களை சந்தித்துப் பேசி சேகரித்து விபரங்களின் சிலதுளிகள் இங்கே கொடுக்கப் பட்டுள்ளன.)

இரண்டுமுழம் நீளமுள்ள சிகப்புதுணியில் மட்டைத் தேங்காய் தாம்பூலம் பழங்கள் இவற்றைக் கட்டி அதற்குள் தமது வேண்டுதலையும் எழுதி அர்ச்சகரிடம் கொடுத்தால் - அவர் ஹநுமானுக்கு நிவேதனம் செய்து விட்டு, பழத்தை பிரஸாதமாகக் கொடுத்து மட்டைத் தேங்காயுடன் சிகப்புத் துணியை மண்டபத்தின் உத்திரத்தில் தொங்கவிடுகிறார். நினைத்த காரியங்கள் நிறை வேறுகின்றன.



# உத்தரப்ரதேசத்தில் ஹநுமான்.

## அயோத்தி

*அயோத்தியில்* ***ஹநுமான் கத்தி பீடம்*** (GADDI) *ராமன் பிறந்த க்ஷேத்திரத்தில் - இன்று முக்கிய ஆலயமாக விளங்குவது - ஹநுமான் பீடம் . அயோத்தி நகரத்தில் பிரவேச மஹாத்வாரத்தில் அமைந்துள்ள, தரைமட்டத்திற்கு மேலே 15 அடி உயரமுள்ள, சிறு குன்றின் மீது விளங்குகிறது. இங்கு ஓயாத பக்தர்களின் கூட்டம். ஜயஸ்ரீ ராம எனற கோஷம்.*

*ஆலயத்தைச் சுற்றி ஸேவார்த்திகள் தங்குவதற்குரிய விடுதிகளும் உள்ளன. அந்த ஆலயத்தின் வலது புறத்தில் சற்று அடக்கமாக* ***சுக்ரீவடீலா அங்கதடீலா*** *என்ற ஸந்நிதிகளும் உள்ளன.*

*இந்த ஆலயத்தைச்சுற்றி சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ அபய ராமதாஸ் ஸ்ரீ மஹந்த் என்ற பெரியவர் சுவர் எழுப்பினார் அவருடைய மடாலயம் இன்றும் ஸ்ரீநிர்வாணீ அகாடா என்ற பெயரில் இருக்கிறது.*

*ஆலயத்தில் பூஜாமூர்த்தியாக சிலாவிக்ரஹம் மற்றொரு விக்ரஹம் ஆறு அங்குல உயரமானது. இந்த மூர்த்திக்கு சற்று நேரத்திற்கு ஒருமுறை புஷ்ப அலங்காரமும் மாறிக் கொண்டே இருக்கும். கூடை கூடையாக புஷ்பங்கள் வந்து கொண்டே இருக்கும்.*

*எல்லாம் ஸ்ரீநிர்வாணி அகாடாவின் ஆளுகையில் முறையோடு நடைபெறும்.*

*ஒரு சமயம் அயோத்திக்கு அருகில் உள்ள பைஸாபர்த் நவாப் மன்சூர் அலியின் மைந்தனுக்கு ஒரு பொறுக்க முடியாத நோய் வந்துவிட்டது. சிறந்த வைத்யர்களும் ஹகீம் (முஸ்லீம் வைத்தியர்)களும் சிகித்ஸை அளித்தனர். ஒன்றும் பயன் அளிக்கவில்லை.*

---

*(கோரக்புர் கீதாபிரஸ் கல்யாண பத்திரிக்கையின் ஹநுமான் அங்கத்திலிருந்து தொகுக்கப்பட்டது.)*

அரண்மனையில் வாயிற்காப்பாளராக இருந்த ராம்பிரஸாத், யாரும் அறியாமல் அந்தப் பையனின் கட்டில் அருகில் சென்று ஹநுமானின் பிரஸாதமான துளஸி தளத்தை அந்த நோயாளியின் வாயில் திணித்தார். அதை மென்று தின்ற நோயாளியான பையன் அடுத்த கணம் படுக்கையை விட்டு எழுந்து பாயி! பாயி! என்று கத்தினான். தாயாரும் நவாப்பும் ஓடி வந்தனர்.

''உநகோ பகடோ (அவரைப்பிடியுங்கள்'') என்று கூக்குரலிட்டான். ஒரு பணியாள் ராமப்ரஸாத்தைப் பிடித்துக் கொண்டு வந்து நிறுத்தினான். ராம பிரஸாத் உதறல் எடுத்து நிற்க முடியாமல் தடுமாறினான். பையன் படுக்கைவிட்டு எழுந்த அவனைப் பிடித்தான்.

''என்ன ஐயா! நீங்கள் யார்!'' என்று வினவினான்.

''நான் ...நான் மாருதி....மாருதி ...என்று குமுறினான் ராமப்ரஸாத்.

பயப்படாதீர்கள்! நீங்கள் எனக்கு உயிரும் கொடுத்தீர்! வியாதியும் தீர்ந்தது'' என்று பணிந்தான் இளவரசன்.

நவாப் ராமப்ரஸாத்தை - அருகில் அமரவைத்துக் கொண்டு விசாரித்தான்.

''சோடே நவாபு ஏதோ வியாதியில் துன்பப்படுகிறார் என்று கேள்விப்பட்டேன். நான் என் தெய்வம் ஹநுமானிடம் முறையிட்டேன். அவருடைய பிரஸாதம் கிடைத்தது. அதை நீங்கள் ஏற்பீர்களோ மாட்டீர்களோ - என்று பயந்தேன்.

நீங்கள் ஒருக்கால் அந்த பிரஸாதத்தை அலட்சியப்படுத்தினால் - என் தெய்வம் அதைப் பொருட்படுத்தாது. ஆனால் சோடே நவாப்பின் வியாதி முற்றிவிடுமே என்று நினைத்தேன். அதனால் தான் நானே அந்த பிரஸாதத்தை வாயில் திணித்தேன். மாருதி அருள்புரிந்து விட்டார்.

''எங்கே அப்பா - நீ சொல்கின்ற மாருதி?'' ராணிஸாஹிபா கேட்டாள்.

''அயோத்தியில் கத்தியில் ஜோதியாக காட்சி கொடுக்கிறாரே! அவர் தான்.'' என்றார் ராமபிரஸாத்

நவாப் ஹநுமான் கத்தியின் அருகில் உள்ள 52 ஏக்கர் பூமியைக் கொடுத்து தர்மசாலா கட்டிக் கொடுத்தார். அங்கு ஸாதுக்கள் எப்போது வந்தாலும் அன்னதானம் அளிக்க ஏற்பாடு செய்தார். அதன் பொறுப்பை அபயராமதாஸஜி அகாடாவினிடம் ஒப்புவித்தார். இன்றும் கூட முஸ்லீம் பக்தர்கள் ஹநுமானுக்குக் காணிக்கை சமர்ப்பித்து வேண்டுதல்களை நிறைவேற்றிக் கொள்கிறார்கள்.

செவ்வாய்கிழமை சனிக்கிழமைகளில் இங்கு பக்தர் கூட்டம் நிரம்பி வழியும். அயோத்தியில் ஹநுமான் கத்தியில் நடக்கின்ற வழிபாடுகள் போல் நாட்டில் எங்குமே கிடையாது. அவ்வளவு விஸ்தாரமான வழிபாடுகள். ப்ருந்தா வனத்தில் ராதாகிருஷ்ண ஸந்நிதியில் கூட கிடையாது என்கிறார்கள் அயோத்திவாசிகள்.

## ஹநுமந்த் நிவாஸ்

அயோத்தியிலே புகழ்பெற்ற **ஸ்ரீகோமதீதாஸ்ஜி** என்ற ஸாது - எப்பொழுதும் யாகங்கள் செய்து கொண்டும் ஸாதுக்களை ஆதரித்துக் கொண்டும் ஹநுமானை உபாஸித்து வந்தார். அவரிடம் உபதேசம் பெற்ற பல மஹான்கள் உண்டு. அவரிடம் மக்கள் தமது துன்பங்களை முறையிட்டுக்கொண்டு ஆசிபெற்றால் உடன் துயர் தீர்ந்து நிம்மதி பெறுவார்கள் என்ற பெரும் புகழ் உண்டு அவருக்கு.

அதே ஹநுமந்த் நிவாஸில் மஹாத்மா ஸ்ரீரூபகலால்ஜீ - என்ற புண்ணிய புருஷரும் இருந்தார்.

## பஹராட்பூர்

பைஸாபாத்துக்கு அருகில் உள்ள சிறுகுன்றில் உள்ள ஹநுமான் கத்தி (பீடம்).

ஹநுமான் ஸஞ்ஜீவி மலையை ஹிமாசலத்திலிருந்து எடுத்து வரும் போது ஸஞ்ஜீவி மலையை தூக்கிக்

கொண்டிருந்த கையில் ஓர் அம்பு பாய்ந்தது.

''அரக்கன் மலையைத் தூக்கிக் கொண்டு தெற்கே போகிறான். அங்கே தான் என்பிரபு ஸ்ரீராமன் இருக்கிறார். அவருடைய தலையில் இந்த மலை விழுந்து விடுமோ'' - என்று பயந்து, நந்திகிராமத்தில் இருந்த, பரதன் அந்த அம்பை எய்துவிட்டார்.

ஹரே ராம! என்று கூச்சலிட்டுக்கொண்டு ஹநுமான் கீழே விழுந்துவிட்டார். அவருடைய கையில் இருந்த மலையின் துண்டு ஒன்று உடைந்து கீழே விழுந்து விட்டது. ஹரே ராம - என்று குரல் கேட்டதும் பரதன் ஓடோடி வந்தார். உண்மையறிந்தார். ஹநுமானுக்கு சிகித்லை செய்து வைத்து ஸஞ்சீவி மலையை தூக்குவதற்கு ராம நாமபலம் கொடுத்து வழி அனுப்பிவைத்தார் அந்த மலைத்துண்டு தான் பஹாட்பூரில் உள்ள ஹநுமான் க3த்தி.

அயோத்தியிலேயே - ஹநுமான் பாக் - என்ற நந்தவனத்தில் ஓர் அற்புதமான ஹநுமான் மூர்த்தி கம்பள ஆஸனத்தில் அமர்ந்து வலது காலைத் தரையில் ஊன்றி, இடது காலை மடித்து அதன் மீது உட்கார்ந்திருக்கிறார். மஞ்சள் பீதாம்பரம் உடுத்தியிருக்கிறார். தோளில் மாலையாக அங்கவஸ்திரம். அதில் உள்ளடக்கமாக பலவண்ண மலர்கள் தொடுத்த கதம்ப ஹாரம் . மார்பில் மார்புவரையிலான ஸ்ரீராம பிம்பம், வலது கை அபயமுத்திரை. இடது கை வரமளிக்கிறது. காதுகளில் குண்டலங்கள். கருணை சிந்துகின்ற கண்மலர்கள் - நெற்றியில் திருமண். தலையில் ரத்னகிரீடம். அதற்குப்பின்னே ப்ரபாவளி சுருள் சுருளான குழற்கத்தை பின்னால் இருபுறமும். இப்படி ஒரு மூர்த்தி வேறு எங்கும் ஆலயங்களில் இருப்பதாகத் தெரியவில்லை

---

(கோரக்பூர் கீதாபிரஸ்காரர்கள் இதன்சித்திரத்தை பல அளவுகளில் கோடிக்கணக்காக அச்சிட்டு வழங்கி இருக்கிறார்கள்.)

*சித்திரத்தில் பின்னணியாக ஹநுமான் பாக் - என்ற நந்தவனமும் காட்டப்பட்டுள்ளது.*

*மற்றொரு அற்புதமான ஹநுமானின் மூர்த்தி அயோத்தியில் ஸரயூநதியின் ஜாநகீ காட் என்ற படித்துறையில். ஸ்வாமி ஸ்ரீ ஸார்வபௌம வாஸுதேவாசார்ய மஹாராஜ் நிறுவியது. ஸூர்ய பகவானிடம் நேரே ஸகலவித்யைகளையும் மிக வினயத்தோடு கற்றுக்கொண்டிருக்கின்ற பாவனையில் பாலஹநுமான். பலர் இந்த மூர்த்தியை வழிபட்டு ஆத்ம ஸாதனைகள் புரிந்து ஸித்த புருஷர்கள் ஆகியிருக்கிறார்கள். ஒரு குஷ்டரோகியான ஸாது உடல் முழுவதும் அழுகிச் சொட்டுகின்ற நிலையில் இந்த ஸந்நிதியிலேயே ராம நாமங்கள் சொல்லிக்கொண்டே இருந்தவர் ஒரு நாள் ஸரயூவில் இறங்கி ஸ்நாநம் செய்து எழுந்ததும் பரம தேஜோமயமான உடலுடன் ராம ராமஎன்று குதித்துக் கொண்டே படி ஏறினார் - என்பது உண்மை வரலாறு.*

*அயோத்தியில் ராயகஞ்ஜ் என்ற முஹல்லாவில் (மலைப்பகுதியில்) பர்வதம் என்ற இடத்தில் ஒரு கருணா மூர்த்தியான ஹநுமான் தர்சனம் அளிக்கிறார்.*

*அந்த இடத்தில் தான்- ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆனபிறகு - ஒரு நாள் மாலை பரதனும் சத்ருக்னனும் ஹநுமானை அணுகி வநவாஸத்தில் ராமனுக்கு ஏற்பட்ட அநுபவங்களையெல்லாம் கேட்டுக் கண்ணீர் விட்டனர் என்று பெரியோர்கள் சொல்வார்கள். இவருக்கு வ்யாஸஹநுமான் என்று பெயர். துளஸீதாசர் இதை வர்ணிக்கிறார்.*

***பர$_4$தஸத்ருஹந தோ$_3$ந பா$_4$யீ***
***ஸஹித பவந ஸுத உபவந ஜாஈ!।***
***பூச ஹி(ம்) பை$_3$ ட ராம கு$_3$ந காஹா***
***ஹ நுமாந ஸுமதிதி அவ க$_3$ாஹா॥***

***(1) ஸ்ரீஸங்கட மோசநர்*** *- இந்தக் காடு காசி ஹிந்து பல்கலைக் கழகத்திற்கு அப்பால். தெற்கே தனித்து இருக்கிறது. ஆலயத்தைச் சுற்றி நிறைய வயதான மரங்கள் இன்றும் பூத்துக் குலுங்குகின்றன. இது ஏகாந்தமான, அமைதியான இடம். இந்தப் பெரிய விஸ்தாரமான தோட்டத்தின் வெளிப்புற மதில் சுவர்களின் உட்புறம் ஓட்டினாற் போல உயர்ந்த தொடர்ந்த கருங்கல் மண்டபம். ஆங்காங்கே படிகள் அவற்றிலே ஸாதுக்கள் அமர்ந்து ஓயாமல் ராம நாமம் சொல்வார்கள். - ஹநுமான் சாலீஸா பாராயணம் சொல்வார்கள் ஆங்காங்கே கம்பிகளில் ஹநுமான் சாலீஸா புஸ்தகங்கள் நூறு நூறாக கோர்க்கப்பட்டுத் தொங்கும். பக்தர்கள் அவற்றில் ஒன்றை எடுத்துப் படித்து விட்டு. இந்தக் கம்பியிலேயே சொருகிவிட்டுப் போவார்கள்.*

*ஸந்நிதி மேடை இருபதடி சதுரமுள்ளது. உள்ளே சுவற்றில் ஹநுமான் வலது கையைத் தூக்கி நீட்டி இடது கையை மார்பைத் தொட்டுக்கொண்டு காட்சியளிக்கிறார். உடல் முழுவதும் ஸிந்தூரம் கலந்த வெண்ணெய் பூசப்பட்டிருக்கும். இந்த அங்கணத்தில் முன் பகுதியில், ஹநுமானே தர்சித்துக் கொண்டிருக்கின்ற வகையில் ஒரு பக்கம் ஸ்ரீராகவேந்திர ஸர்க்கர் (ராமன்) ஸ்ரீகிசோரீ (ஸீதை) ஸ்ரீலகந்லால் ஜீ (லட்சுமணன்) நின்று ஹநுமானுக்கு ஸேவை ஸாதித்துக் கொண்டிருப்பார்கள். ஹநுமானுக்குப் பக்கத்தில் ஒரு நரஸிம்ஹ மூர்த்தியும் உண்டு. அந்த மண்டபத்துக்கு வெளியே இடது புறத்தில் ஒரு சிறு கோயிலில் காசிவிஸ்வநாதலிங்கமும் பிரதிஷ்டை ஆகியிருக்கிறது.*

*இங்கு தான் துளஸீதாசர் ஸ்ரீராமதர்சனம் பெறுவதற்காக ஸ்ரீராமாயணப்ரவசனம் ஓயாமல் சொல்லிக்கொண்டிருந்தார். அதை கூட்டத்திற்கு அப்பால் ஒரு குஷ்டரோகி வடிவத்தில் ஹநுமான் தலையில் முட்டாக்குப்போட்டுக் கொண்டு கேட்பா ராம். அவரைக்*

*கண்டு பிடித்து கோஸ்வாமி அவருடைய சரணங்களைப் பிடித்துக் கொண்டாராம். அந்த இடம் இன்னும் புனிதமாகக் காக்கப்பட்டு வருகிறது வலது கையைத் தூக்கி ஹநுமான் ''சித்ர கூடத்திற்குப்போ ஸ்ரீராமன் தர்சனம் கிடைக்கும்'' என்று ஆணையிட்டாராம். இடது கரத்தால் தன் தமது இதயத்தைத் தொட்டுக் காட்டி ''ராம தர்சனம் செய்து வைப்போம்'' என்று அருள் பாலித்தாராம். ''கோஸ்வாமி, இதே வடிவத்தில் தாங்கள் இங்கே எப்போதும் பக்தர்களுக்கு தர்சனம் அளிக்க வேண்டுமென வேண்டினாராம் அந்த மூர்த்தி தான் உள்ளே மண்டபத்தில் உள்ளது.*

*அது ஸ்வயம்பூ (தானே உண்டான) மூர்த்தி சிற்பியினால் செதுக்கப்பட்டதல்ல. ஸந்நிதியில் காலை ஐந்து மணிக்கு உதயஹாரதி. இரவு எட்டரை மணிக்கு சய்யா (படுக்கை) ஹாரதி. இரண்டு நேரமும் மக்கள் திரளாகக் கூடுவார்கள். பகல் முழுவதும் ஓயாத தர்சனம். துளஸி ராமாயணம் வால்மீகி ராமாயணம் கோஸ்வாமியின் மற்ற நூல்கள் எல்லாம் பக்தர்கள் மேடைகளில் அமர்ந்து படிப்பார்கள். தர்சனம் செய்ய வந்த பக்தர்கள் சற்று நேரம் அமர்ந்து கேட்டு விட்டு வணங்கி எழுந்து போவார்கள். கூச்சலே கிடையாது. ராம நாமம் தான் கேட்கும். எவரும் வேறு பேச்சுப் பேச மாட்டார்கள்*

*செவ்வாய் சனிக்கிழமைகளில் இரவு பன்னிரெண்டு மணிவரை கூட்டம் இருக்கும். அப்போது தான் சய்யாஹாரதி. ஒவ்வொரு ஆண்டும் கார்த்திகை கிருஷ்ண சதுர்தசி அன்று காலை ஸூர்ய உதய காலத்தில் ஹநுமான் தர்சனம் பெரிய விழாவாக நடக்கும். அதற்கெனவே கடுங்குளிரில் வெளியில் க்யூவரிசை ஹிந்து பல்கலைக்கழகம் வரை நீண்டிருக்கும். ராம ராம ராம கோஷம் கேட்கும்.*

*ஒவ்வொரு ஆண்டும் சைத்ர சுக்ல பூர்ணிமாவில் ஹநுமஜ்ஜயந்தி கொண்டாடப்படும். ஸம்பூர்ண வால்மீகி ராமாயணம் ஸம்பூர்ணமாநஸபாராயணம் இரவு நேரங்களில்*

*பெரிய வித்வான்களின் ஸங்கீத விநிகைகள் விஸ்தாரமாகக் கோலாஹலமாக நடக்கும். (ஒரு சமயம் ஸ்ரீகாஞ்சி புது பெரியவர்களுடன் தீபாவளி அமாவாஸ்யை முதல் சிவராத்திரி அமாவாஸ்யை வரை நான்கு மாதங்கள் தொடர்ந்து காசி வாஸம் - இந்த நூலாசிரியருக்கு கிடைத்தது. பெரியவர்கள் காலை 10 மணிமுதல் பிற்பகல் இரண்டு மணி வரை ஸ்ரீசந்த்ர மௌளீச்வர பூஜையில் ஈடுபட்டிருப்பார்கள். அந்த நேரம் இவனுக்கு ஓய்வுண்டு. அப்பொழுதெல்லாம் பிர்லாவின் மாநஸமந்திரிலும் ஸங்கடமோசநரிடமும் மாற்றி மாற்றி அமர்ந்து படிப்பான். பாராயணம் செய்வான். அப்பொழுது தான் இவன் துளஸீ தாசர் ஸ்ரீராம சரித மாநஸத்தினை தமிழ் மொழி பெயர்த்துக் கொண்டிருந்தான். அதற்கு அநுகூலமாக மாநஸமந்திரில் உள்ள க்ரந்த கோசாலயத்தில் பல நூல்களைப் படிக்க இவனுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தப் பொன்னான நாட்களை மறக்கவே முடியாது. உலகில் யார்தான் ஸங்கடமோசன தர்சனம் பெற்றவர் அந்தப் பெயர் சொல்லாமல் இருப்பார்? என்கிறார் துளஸிதாசர்.*

***''கோ நஹிஜாநதஹைம் கபி ஸங்கட மோசந நாம திஹாரோ!''***

*துளஸீ மந்திரம்.*

*ஹநுமான் காட்டிலிருந்து தெற்கே வெகு தூரம் தள்ளி - சிவாலா காட்டுக்கு முன்னால் துளஸிகாட் உள்ளது. அக்பரின் மந்திரியாக இருந்த தோடர்மல் என்ற பிரபு - துளஸீதாஸருக்கு கங்கையில் படித்துறை ஓட்டினாற் போல ஒரு மாளிகை கட்டிக் கொடுத்தார். அங்கு அமர்ந்து தான் கோஸ்வாமி மாநஸம் எழுதின பிறகு பலநூல்கள் எழுதினார். அங்கு இன்று துளஸீதாஸரின் பாதுகைகள், அவர் பல நாட்களில் ஸ்நானம் செய்யச் சென்ற ஓடத்தின் ஒரு பகுதி, இவை தர்சனத்திற்கு கிடைக்கின்றன.*

இந்த துளஸீகாட் துளஸீதாசர் மாளிகையில் ஒரு குழந்நை ஹநுமான் படிவம் உள்ளது - தெற்கு நோக்கி நிற்கின்ற இந்தக் குழந்தை ஹநுமான் பல பக்தர்களோடு பல லீலைகள் புரிந்திருக்கிறார். இந்த மாளிகையின் மேல் மண்டபத்தில் ஸ்ரீராமன் லட்சுமணன் ஸீதை இவர்கள் ஸந்நிதி உள்ளது. அதைச் சுற்றி கிழக்கு நோக்கி - வடக்கு நோக்கி மேற்கு நோக்கிதெற்கு நோக்கி ஹநுமான்கள் ராமனுக்கு திக்பாலகர்களாக இருக்கிறார்கள். இங்கு துளஸீதாஸ ஜயந்தியும் மோக்ஷதினமும் விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன. பால ஹநுமான் ஸந்நிதியில் ஓயாமல் ராமாயண பாராயணம் நடந்து கொண்டே இருக்கிறது. அதை நிறுத்தினால் ஹநுமான் இங்கே விட்டு ஓடிவிடுவார் என்று ஒரு பக்தர் கவலைபட்டாராம். ராமாயண கிஷ்கிந்தா ஸுந்தர காண்டபாராயணங்கள் மட்டும் செய்பவர்களும் உண்டு.

## ஹநுமான்காட்

இங்கு ஸ்ரீஸமர்த்த ராமதாஸர் பிரதிஷ்டை செய்த ஹநுமான் விளங்குகிறார். இந்த ப்ரதிஷ்டைக்கு முன் இந்தஸ்தலத்திற்கு ஹரிச்சந்திர காட் என்று பெயர் இருந்தது. ப்ரதிஷ்டைக்குப் பின் இது ஹநுமான் காட் ஆகிவிட்டது - ஆனால் இங்கே நதியின் படித்துறைக்கு ஹரிச்சந்தர காட் என்ற பெயர் தொடர்கிறது.

''காசியின் தெற்கு முனையில் ஹநுமான் இருக்கிறார்.

-அது போல வடமுனையிலும் இருந்தால் வாராணஸி பூர்ணத்வம் பெறும்'' - என்று நினைத்தார் துளஸீ தாசர். வரணாஸங்கமத்திற்கு அப்பால் காசி கங்கைக்கு மஹத்துவம் அவ்வளவு இல்லை. அங்கே உட்கார்ந்து கோஸ்வாமி மாநஸம் படித்தார். அவருக்கு முன்னே வலது கையினால் வாய் புதைத்து ஒரு பால ஹநுமான் காட்சி அளித்தார். அங்கு பால ஹநுமானை பிரதிஷ்டை செய்தார்.

## ப்ரயாகை (அலஹாபாத்)

ப்ரயாகையில் த்ரிவேணீ ஸங்கமம் முக்கியமானது. மூன்று புண்ய நதிகள் கூடுமிடம் தான் பிரயாகை எனப்படும். ஹிமய மலையில் தேவப்ரயாகை ருத்ரப்ரயாகை முதலிய புண்ய ஸங்கமங்கள் உண்டு. கங்கையும் யமுனையும் கூடுமிடத்தில் பெரிய கோட்டை உள்ளது. அதன் அருகே ஒரு பெரிய ஹநுமான் சயனித்துக் கொண்டிருக்கிறார். கங்கையிலும் யமுனையிலும் வெள்ளம் பெருகினாலும் அவரை பாதிப்பதில்லை கங்கைக்கும் யமுனைக்கும் அவ்வளவு ஹநுமானிடம் பரிவு என்று பக்தர்கள் கொண்டாடுவார்கள்.

## சித்ர கூடம்

ஸ்ரீராமனுடைய வனவாசத்தில் முதன் முதலில் தங்கின இடம் சித்ரகூடம். வால்மீகி பகவான் அதனுடைய அழகையும் பவித்ரத்தன்மையையும் வெகுவாகப் புகழ்கிறார். இந்த மலையில் ஒரு மத்தியத் தாழ்வரையில் ஸ்ரீராமன் தங்கியிருந்தார். - பரதன் ''ஸ்ரீராமனுக்கு வனத்திலே பட்டாபிஷேகம் செய்வித்து அழைத்துப் போக வேண்டும் என்ற நோக்கத்தோடு ஸகலபுண்ய நதிகளுடையவும் தடாகங்களுடையவும் புண்யதீர்த்தங்களையும் தனித்தனியாகக் கலசங்களில் நிரப்பிக் கொண்டு வந்திருந்தார். பட்டாபிஷேகம் நடைபெறாததால் - ஸ்ரீராமன் விருப்பப்படி - அத்ரிமுனிவர் காட்டிய ஒரு கிணற்றில் அத்தனை தீர்த்தங்களும் கொட்டப்பட்டன. அதற்கு பரத கூபம் என்றும் கோடி தீர்த்தம் என்றும் பெயர்.

அந்த இடத்தில் இருந்து 350 படிகள் மேலே ஏறினால் அந்த சிகரத்தில் - ஒரு ஹநுமான் நின்று கொண்டிருக்கிறார். அவருடைய தலையில் மலை உச்சியிலிருந்து இரண்டு நீர்தாரைகள் ஓயாமல் வீழ்ந்து கொண்டே இருக்கின்றன.

*ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆன பிறகு ஒரு நாள் மாலை ஹநுமான் ஸ்ரீராம சரணங்களைத் தீண்டினார். அந்தக்கைகள் ராம சரணங்களைச் சுட்டன.*

*''என்ன ஹநுமந்தா! உன் கையில் இவ்வளவு சூடு!''*

*''ப்ரபோ! மன்னிக்க வேண்டும் ஏதோ ஒரு நினைவு. இன்றுகாலையிலிருந்து. லங்கைக்குப் போய் தேவியை தர்சனம் செய்து விட்டு ராவணனுடைய தர்பாருக்குப் போனபோது. அவனுடைய அஹங்காரத்தை அந்தக்கணமே கைகளால் நசுக்கிப் பிழிந்திருக்கலாமே விட்டுவிட்டோமே - என்று நினைத்துக் கைகளைப் பிசைந்து கொண்டே இருந்தேன். அந்த சூட்டோடு தங்கள் சரணங்களைத் தீண்டிவிட்டேன். க்ஷமிக்க வேண்டும்.*

*''அது இருக்கட்டும் உன் உடம்புக்கு இவ்வளவு சூடு தகாது. நீ உடனே கிளம்பிச் சித்ர கூடம் போ. அதன் உச்சியில் ஆகாச தாரா உள்ளது. அதன் வீழ்ச்சியில் சில நாட்கள் ஸ்நானம் செய்துவிட்டு வா - என்று ராமன் அனுப்பினார் அந்த தாராவுக்கு இன்று ஹநுமான் தாரா என்று பெயர். ராமனுக்குத் தன்னிடம் உள்ள பரிவை நினைத்துப் புன்னகை புரிந்து கொண்டே ஹநுமான் இன்றும் நிற்கிறார். நாற்புறமும் அடர்ந்த மரங்களும் கொடிகளும் அசைந்தாடி ஹநுமானுக்கு விசிறி போடுகின்றன. சில தர்மாத்மாக்கள் - அத்தனை உயரம் ஏறி வருகின்ற ஸாதுக்கள் சற்று இளைப்பாறுவதற்காக பளிங்கு மேடைகள் கட்டிவிட்டிருக்கிறார்கள் மிகவும் ரமணீயமான இடம்.*

## லக்னௌ (லட்சுமணபுரி)

*லக்னௌ ஹநுமானின் தனிப் பெருமை என்ன வென்றால் - இனறு நேற்றல்ல நான்கு நூற்றாண்டுகளாக - இங்கு ஹிந்துக்கள் மட்டுமல்ல - க்ருஸ்துவர்களும் முஸ்லீம்களும் ஹநுமானைக் கொண்டாடி பெரிய பெரிய மேளாக்கள் நடத்துகிறார்கள் என்பது தான்.*

ராமாயணகாலத்துக்குப் போவோம். ஸ்ரீராமன் பட்டாபிஷேகம் நடந்தபிறகு கர்ப்பிணியான ஸீதாதேவியைத் துறந்து காட்டுக்கு அனுப்ப வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. ராமசரிதத்தில் ஆறாத புண்ணாக இன்னமும் வேதனை தந்து கொண்டிருக்கின்ற ஸம்பவம். ஹநுமானும் லட்சுமணனும் சேர்ந்து ஸீதையை ரதத்தில் ஏற்றிக் காட்டில் கொண்டுவிட்டனர்.

அயோத்தியிலிருந்து காலையில் கிளம்பிய மூவரும். இரவில் இங்கு வந்து சேர்ந்தார்கள் கோமதி நதீ தீரம் அது. அதைக் கடந்தால் - மஹாநகரம். அங்கு அயோத்தியா ராஜ்யத்தின் எல்லைச் சாவடி உள்ளது. அங்கு போய்த் தங்கலாம் என ஹநுமானும் லட்சுமணனும் திட்டம் போட்டார்கள். ஸீதாதேவிக்கு அடுத்த நகரத்திற்கு போவதற்கோ, அங்கே எங்காவது அரண்மனையிலே தங்குவதற்கோ, இஷ்டம் இல்லை. அடிவைப்பதற்கே இஷ்டம் இல்லை. கோமதியின் இக்கரையிலேயே அடர்ந்த மரத்தோப்பில் தங்கிவிட்டனர். ஹநுமானும் லட்சுமணனும் இரவு முழுவதும் கண்விழித்து - தேவியை - கர்ப்பிணியான தேவியை சிரமபரிஹாரம் செய்து கொள்ள வைத்தனர்.

லட்சுமணபுரி என்று லட்சுமணன் பெயரால் புகழ்பெற்ற இந்த லக்னௌ நகரத்திற்கு லட்சுமணனே போகவில்லை.

மூவரும் அன்றிரவு முழுவதும் ஸ்ரீராமனுடைய மனவேதனையைக் கற்பனை செய்து கொண்டு கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தனர்

---

(இந்த ஸமபவம் நடந்த போது ஹநுமான் அயோத்தியில் இல்லை. பிரம்ம லோகம் போய் பிரம்ம தேவனுக்கு ராமாயணப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார் — என்பது தான் பரம்பரைக்கதை. ஆயினும் லக்னௌவில் இப்படி ஒரு மாறுதலான செய்தி பழக்கத்தில் இருக்கிறது)

கோமதி நதிக்கரையில் உள்ள ஹநுமான் கோவிலில் இந்தக்கோலத்தில் ஹநுமானை தர்சனம் செய்யலாம். மறுநாள் - விடூர் சென்று, அங்கிருந்து கான்பூர் (கர்ணபூர -மஹா பாரதக் கர்ணனின் தலை நகர்) சென்று கங்கைக்கரையில் வால்மீகி ஆச்ரமத்தில் ஸீதையைக் கொண்டு விட்டனர். இன்னும் கங்கைக்கரையில் அந்த வால்மீகி ஆச்ரமம் ஸாதுக்களின் புகலிடமாக விளங்குகிறது.

இந்த ஹநுமானிடம் தான் மும்மதத்தினரும் இன்னும் ஈடுபாடு கொண்டுள்ளனர்.

லக்னௌவில் இன்றைய அலிகஞ்ஜ் கோமதிக்கரையில் உள்ளது. அங்கு தான் பக்தர்கள் இடுப்பில் மட்டும் ஒரு சிகப்பு லங்கோடுவை அணிந்து வீதியில் அங்கப்பிரதக்ஷிணம் செய்து கொண்டே ஹநுமான் ஸந்நிதியில் வழிபடுவார்கள். லக்னௌவிற்கு பக்கத்தில் வெகு தூரம் வரை கிராமங்கள் எங்கும் புது ஹநுமான் மந்திர் கட்டினால் அந்த ஹநுமானுக்கு இந்த ஹநுமானிடமிருந்து வஸ்திரங்கள் ஸிந்தூரம் கௌபீனம் கண்டாமணி குடை இவையெல்லாம் ப்ரஸாதமாக அளிக்கப்படும். இந்த ப்ரஸாதம் பெற்றால் தான் அந்தந்த ஹநுமானுக்கு அருள் பெருகும் என்பது நம்பிக்கை.

இப்படியெல்லாம் கிராமங்களில் ஹநுமான் கோவில் கட்டுவதற்கும் பழைய கோவில்களை புதிப்பிப்பதற்கும் அன்றாட வழிபாடுகளுக்கும் உதவி செய்ய அயோத்தி அருகில் உள்ள முஸல்மான் பிரபுக்கள் இன்று இருக்கிறார்கள்.

இங்கு பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில்

சுஜாவுத்தௌலா என்ற நவாபின் மனையாள் மற்றும் நவாப் வாஜித் அலிசாவின் தாயார் டில்லியில் உள்ள முகலியா கான் தானின் பெண் ஆலியா பேகம் இந்த மூவரும் சேர்ந்து இந்த ஹநுமான் கோவிலைக் கட்டினார்கள்.

இங்கு ஜ்யேஷ்ட மாதம் (வைகாசி ஆனி மாதம்) முழுவதும் ஒவ்வொரு செவ்வாய் கிழமையிலும் ஹிந்துக்களும் முஸல்மான்களும் கிருஸ்துவர்களும் நோன்பு நூற்பார்கள். அன்னதானம் செய்வார்கள் லக்னௌவில் முஹர்ரம் பண்டிகையும் அலிகஞ்ஜில் மஹாவீர (ஹநுமான்) மேளாவும் இரண்டும் சேர்ந்தே நடக்கும். ஒரு வாரம் நாட்டின் பல பாகங்களிலிருந்து பக்தர்கள் கூடுவார்கள். அவர்களுக்கு - தங்க உணவளிக்க பல முஸ்லிம் பிரமுகர்கள் பொறுப்பு ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இதில் ஒரு வேடிக்கை என்ன வென்றால் - அலிகஞ்ஜ் நகர எல்லையில் - ஒரு பழமையான ஹநுமான் கோயில் உள்ளது. அதை எட்டிப் பார்ப்பவர்கள் கிடையாது. ஸீதாதேவிக்கு காவலாக வந்த ஹநுமானுக்கு அவ்வளவு பெருமை. ஸீதாதேவி தங்கியிருந்த மாந்தோப்புக்கு அருகில் மற்றொரு ஹநுமான் கோவில் கட்டப்பட்டது அந்த இடத்திற்கு ஹநுமான் வாடி என்று பெயர். பின்னர் அங்கு வந்த பத்தியால் கில்ஜி என்ற நவாப் அந்தப் பெயரை இஸ்லாம் வாடி என்று மாற்றிவிட்டார்.

கி.பி.1792 -1802 ஆண்டுகள் அவத (அயோத்தியின் முஸ்லிம் பெயர்) பகுதியின் நவாப் முஹம்மத் அலி ஷாவின் மனைவி ரஸியாவுக்கு குழந்தையே பிறக்கவில்லை. ஹகீம்களும் வைத்யர்களும் பல மருந்துகள் கொடுத்தனர். பலனில்லை. சிலர் இஸ்லாம் வாடியில் உள்ள ஹநுமானை பிரார்த்தித்து விரதம் இருந்தால் பிள்ளை பிறக்கும் என்று கூறினர். அதன்படி அந்த பேகம் இஸ்லாம் வாடியியேயே தங்கி விரதம் இருந்தாள். கருவுற்றாள். அவளுக்கு ஒரு கனவு. கருவில் இருந்த குழந்தை சொல்லிற்று ''இந்த இஸ்லாம்வாடியில் ஒரு ஹநுமான் சிலை பூமியில் புதைந்து கிடக்கிறது. அதை வெளியே எடுத்து ஆலயம் கட்டி பிரதிஷ்டை செய்'' - என்று கனவு.

பிள்ளை பிறந்தவுடன் ரஸியா பேகம் அங்கு சென்று கூலியாட்களை விட்டு அங்கு தோண்டச் சொன்னாள். அங்கு ஒரு ஹநுமான் மூர்த்தி வெளிப்பட்டது. அந்த மூர்த்திக்கு தங்கத்தினால் ரத்னங்கள் இழைத்த கவசம் தயாரித்து வெள்ளியில் பீடம் அமைத்து - யானை மீது அம்பாரி கட்டி ஊர்வலம் விட்டாள்.

ஆஸபுத் தௌலாவின் பெரிய இஸ்லாம் வாடிக்கு அருகில் ஒரு கோவில் கட்டி பிரதிஷ்டை செய்தாள். மறுபடியும் அந்த மூர்த்தியை யானை மீது அம்பாரியில் வைத்து அலிகஞ்ஜ் சாலை வழியாகச் சென்ற போது அந்தத் தெருவின் முனை சென்றதும் யானை- மேலே செல்ல மறுத்தது. யானைப் பாகன் பலவாறு யானையைத் துரட்டியினால் குத்தினான். யானை அசையவில்லை.

பேகம் ஹநுமானின் மூர்த்தியை யானையின் அம்பாரியிலிருந்து இறக்கி பல்லக்கில் வைத்தாள். ஊர்வலம் நகர்ந்தது. மறுபடியும் அதை யானை அம்பாரியில் ஏற்றியபோது தடை ஏற்பட்டது. அங்கே வந்த ஒரு ஸாது கூறினார். ஹநுமானுக்கு கோமதி நதியைத் தாண்டிப்போக விருப்பமில்லை. அது லட்சுமணபுரி-லட்சுமணனின் ஸ்தானம்'' என்றார். கோமதிக்கரையிலேயே மறுபடியும் ஒரு கோயில் கட்டிப்பிரதிஷ்டை செய்தாள் பேகம். அந்த ஸாதுவுக்கும் ஸர்க்காரின் செலவில் ஒரு ஆச்ரமம் அமைத்துக் கொடுத்தாள். அவரையே ஹநுமானின் பூஜகராக நியமித்தாள். மற்ற வசதிகளையும் செய்து கொடுத்தாள். கோவிலுக்கு அருகே பல ஏகர் விளைநிலங்களை கோவிலுக்கு எழுதி வைத்தாள்.

ஆனால் கோவில் கட்டின பிறகு சில நாட்களுக்கெல்லாம். அங்கே காலரா வைசூரி போன்ற நோய்கள் பரவி. ஆயிரக்கணக்கான மக்கள் உயிரிழந்தனர். எல்லோரும் ஹநுமானைச் சரண் அடைந்தனர்.

பூஜகரான ஸாதுவின் கனவில் ஹநுமான் தோன்றினார். இந்தக் கோயில் எனக்கு வேண்டாம் முன்பு கட்டின கோவிலிலேயே நான் ப்ரஸன்னமாக இருப்பேன்''

இஸ்லாம் வாடா (முந்தைய ஹநுமான் வாடா) வில் கட்டின கோவிலிலே ஹநுமான் பிரதிஷ்டை ஆனார். காலரா வைசூரி நோய்கள் அறவே ஒழிந்தன.

நவாப் வாஜித் அலி ஷாவின் தாயார் அலியா பேகம் வியாதியில் வீழ்ந்தாள். ஹநுமானுக்கு பெருவிழா நடத்துவதாக வேண்டிக் கொண்டாள். வியாதி தீர்ந்தது. பெருவிழா நடத்தினாள். ஏழைகளுக்கு அன்னதானம் பல நாட்கள் நடந்தன. அந்த ஆலியா பேகம் பேரில் தான் அலியாகஞ்ஜ் புகழ் பெற்றது.

நவாப் வாஜித் அலி ஷாவின் ஆட்சியின் போது லக்நௌவிற்கு கஸ்தூரி குங்குமப்பூ ஜவ்வாது முதலிய உயர்ந்த வாசனைப் பொருள்களின் மார்வாடி வியாபாரி ஜட்மல் என்பவர் வந்து சேர்ந்தார். **ஸ்வாதத் கஞ்ஜ்** என்ற பெரிய கடைவிதியில் கடை விரித்தார். மக்களுக்கு எட்டாத உயர்ந்த விலைப் பொருள்களாக இருந்தபடியால் மார்வாடிக்கு வியாபாரம் வலுக்கவில்லை. மார்வாடி ஹநுமானைச் சுற்றிச் சுற்றி வந்தார். பரிமள அகரு தூபம் போட்டார். பிரார்த்தனை புரிந்தார்.

நவாப் வாஜித் அலிஷாவுக்கு மற்றொரு மனைவி பெயர் கேஸர் பேகம். அவள் இருந்த இடத்திற்குப் பெயர் கேஸர் பாக். அங்கு ஒரு மசூதி. ஒரு பிரபு - நவாப்புக்கு சூர் ஏற்றி விட்டார்.

''நவாப்ஜி! பேகமுக்கு கேஸர் என்று பெயர். அரண்மனைக்குப் பெயர் கேஸர்பாக். என்ன பயன்? மசூதிப் பக்கம் ஒரே துர்நாற்றம். இதை அகற்ற வேண்டாமா?''

''அதற்கு என்ன செய்ய வேண்டும்?''

''மசூதி எங்கும் கஸ்தூரி குங்குமப்பூ - மணம் கமழ வேண்டும். பெரிய மசூதியாக இருப்பதால் நிறைய கஸ்தூரி குங்குமப்பு வாங்கி தினம் தோறும் - மசூதி முழுவதும் தூவ வேண்டும்''

''அப்படியா? செய்தால் போயிற்று'' என்று நவாப் உற்சாகம் அடைந்தார். கடை வீதியில் தேடினார்கள். மார்வாரிக்கு அதிர்ஷ்டம் அடித்தது - பல லட்சம் வராகன்கள் கொடுத்து அரசாங்கம் வாங்கியது - மசூதி கமகமத்தது.

மார்வாரி ஹநுமானுக்கு ஸேவைபுரிந்து ராம நாமம் கோஷம் போடச் சொல்லி ஏழைகளுக்கு வாரி வாரி வழங்கினார். ஹநுமானுக்கு ஒரு பெரிய தங்கக்குடை ரத்னங்கள் இழைத்து ஸமர்ப்பித்தார். வாசலில் பளிங்கினால் தீபஸ்தம்பம் எழுப்பினார். இன்றும் அவை விளங்குகின்றன. ஆண்டு தோறும் பல விழாக்கள் நடக்கின்றன.

## கோரக்பூர்

ரப்தி நதிக்கரையில் **ஸ்ரீஹநுமான் ஆலயம்** கடீ மிகப் பெரிது. கோரக்பூரில் கோரக் நாதர் மஹா யோகீச்வரர் நாதஸம்ப்ரதாயத்தை ஏற்படுத்தினார். அங்கு கோரக் நாத் மந்திர் மிகப் பழையது. இப்போது அது புதுப்பிக்கப்பட்டு பிரகாசிக்கிறது. அங்கு இருக்கும் ஹநுமான் **விநய ஆஞ்ஜநேயர்.**

சில ஆண்டுகளுக்கு முன் அங்கேயே பேதியாஹாதாவில் ஒரு அழகான ஹநுமான் மந்திர் கட்டப்பட்டிருக்கிறது. அதற்கு கோரக் பூர் கீதா பிரஸ்ஸின் கல்யாண் பத்திரிக்கையின் ஆசிரியராகப் பல்லாண்டுகள் பணிபுரிந்த மஹாத்மா **ஹநுமான் ப்ரஸாத் போத்தார்** தமது திருக்கரங்களால் அடிக்கல் நாட்டினார். **பாயிஜீ** (போத்தாரின் மரியாதைப் பெயர்)யின் கைராசி அது மேன்மையுடன் விளங்குகிறது. கோரக்புரில் இன்னும் பல ஹநுமான் மந்திர்கள் உண்டு.

## ப்ருந்தாவனம்.

ப்ருந்தாவனத்தில் உள்ள பிரஸித்தி பெற்ற ஸ்ரீகோவிந்த தேவ்ஜியின் மந்திர் கலை அழகு மிளிர்ந்தது. இதை இடிக்கச் சொல்லி முஸ்லிம் படையை ஔரங்கசீப் அனுப்பினார். அப்போது அங்கு இருந்த பரம பாகவதர் ஸ்ரீவிஹாரிணீ தேவர் - ஹநுமானை வேண்டினார். மறுகணம் ஆயிரக்கணக்கான வாநரங்கள் கோவில் அருகே கூடிவிட்டன. முஸ்லிம் படை வந்தது. மற்ற மாடிக்கட்டிடங்களின் மேலிருந்து வாநரங்கள் பொத்து பொத் தென்று முஸ்லிம் வீரர்களின் தலைகளில் குதித்தன. இதைச் சற்றும் எதிர்பாராது தடுமாறின முஸ்லிம் வீரர்கள் ஆயுதங்களை அப்படியே போட்டுவிட்டு ஒடிவிட்டனர். அந்த ஆலயத்திற்கு பக்கத்தில் **ஸ்ரீஸிம்ஹபௌர் ஹநுமான் ஆலயம்**. அந்த ஸாதுவின் முயற்சியில் எழுந்தது.

பிருந்தாவனத்தில் அதற்கு முன்னால் பெரிய ஆசார்யராக இருந்த **ஸ்ரீபட்டதேவ ஜிமஹாராஜ்** அங்கு ஸ்ரீப்ருந்தா தேவிக்கு ஒரு ஆலயம் கட்டியிருந்தார். காலப் போக்கில் அது மறைந்து விட்டது அங்குதான் ஸ்ரீஸிம்ஹபௌர் ஹநுமான் விளங்குகிறார்.

## க்ரௌஞ்ச்

க்ரௌஞ்ச மஹரிஷி தவம் செய்த இந்த ஸ்தலத்தில் வைராகிகளான யோகிகள் பலர் ஸித்தி பெற்றுள்ளனர். இங்கு **ஸ்ரீ மந்திர் பஜ்ரங்க தோஹார்** - எனப்படும் ஹநுமான் ஆலயம் பழமையானது- பிரஸித்தமானது. அது சமீபத்தில் புதுப்பிக்கப்பட்டது. இங்கு புரட்டாசி சுக்ல சதுர்த்சி விழா சிறப்பாக நடக்கும்.

## பத்ரி நாத்

இங்குள்ள பத்ரிநாதர்ஆலயத்தில் பிரதட்சிண மார்க்கத்தில் மஹாகணபதியும் ஹநுமானும் ஸந்நிதி

பெற்றிருக்கிறார்கள். கோயிலின் பின்புறத்தில் ஒரு அழகான சலவைக்கல்லில் செதுக்கப்பட்ட பெரிய ஹநுமான் சிற்பம் உள்ளது - யாத்ரிகர்கள் இந்த ஆஞ்ஜநேயருக்கு நேரடியாக பூஜை புரஸ்காரங்கள் செய்வார்கள்.

## ஹநுமான் சட்டி

பத்ரிநாத் மலை ஏறுவதற்கு முன் பாண்டுகேச்வரம் உள்ளது. அதற்குப்பக்கத்தில் ஒரு ஹநுமான் தர்சனமளிக்கிறார். இந்த இடத்திற்கு ஹநுமான் சட்டி என்று பெயர். இங்கு அலகநந்தா ஓடி வருகின்ற சரிவில் அழகான தேவதாரு மரங்கள் வளந்திருப்பவை அழகான காட்சி.

## பாவலீ

ஹிமாலயத்தில் பனிரெண்டாயிரம் அடி உயரத்தில் டேஹரிகத்வால் என்ற பிரதேசத்தில் த்ரியுகீ நாராயணன் ஆலயத்திற்கு போகும் வழியில் யாத்ரிகர்கள் ஓய்வெடுத்துக் கொள்கின்ற சமவெளி உள்ளது. அதன் ஓரத்தில் ஒரு கோவிலில் வீரஹநுமான் இடது கையில் உருவின பட்டாக் கத்தியும் வலதுகையில் கதாயுதமும் தாங்கி முகத்தை வலது புறம் திருப்பிக் கருணை பொழிகிறார்.

## ஹரித்வார்

ஹரித்வாரில் சண்டீதேவியின் ஆலயத்தில் ஹநுமானின் தாயார் அஞ்ஜநா தேவியின் ஸந்நிதியுள்ளது. ப்ருந்தாவனத்தைச் சுற்றி விரஜபூமி எண்பத்து நான்கு சதுர மைல் விஸ்தாரமானது. வ்ரஜவாஸிகள் பலருக்கு ஹநுமானே இஷ்ட தைவம் (கண்ணன் விளையாடிய இடமாயிற்றே! இங்கு ஹநுமானா? என்று பலர் ஆச்சர்யப்படலாம்) ஆனால் உண்மை. இங்கு ஒவ்வொரு வீட்டிலும் ஹநுமானுக்குப் பூஜை உண்டு.

வ்ரஜபூமியில் உள்ள சின்னஞ் சிறு கிராமங்களில் கூட ஒவ்வொன்றிலும் ஹநுமானுக்கு ஆலயம் உண்டு.

வ்ரஜபூமியில் குழந்தைகளுக்குச் சிறு வயதிலேயே ஹநுமானிடம் பக்தியும் சிரத்தையும் உண்டாகும் படி பாடல்களும் பஜனைகளும் சொல்லிக்கொடுப்பார்கள். தாயார்கள் பிசாசுகளின் பிடிப்பு ஏற்படாதபடி ஹநுமான் கோவில்களின் பூஜகர்களிடம் வேர் வாங்கிக் கைகளில் கட்டுவார்கள். முற்றின துளஸியின் காய்ந்த வேருக்கு அத்தனை பெருமை. குழந்தைகளுக்கு முதல் ஆண்டு நிறைவின் போது சோறூட்டு விழாவில் ஹநுமானுக்கு நிவேதனம் செய்த வெண்பொங்கலை வானரங்களுக்கு முதலில் போட்டுவிட்டுப் பிறகு குழந்தைகளுக்கு ஊட்டுவார்கள். புதுமணப்பெண்ணின் கிருஹப்ரவேசத்தின் போது அடுத்து வருகின்ற செவ்வாய் கிழமையிலோ சனிக்கிழமையிலோ மங்களஸ்நானம் செய்து விரதமிருந்து மாலையில் ஹநுமானின் ஸந்நிதியில் ராமநாம கீர்த்தனம் செய்து கொண்டாடுவார்கள்.

இளம் ஆண்பிள்ளைகளுக்கு ஏழு எட்டு வயதிலேயே வ்யாயாம சாலையில் - (உடற்பயிற்சி நிலையத்தில்) உடற்பயிற்சி கொடுத்து, குஸ்தி - மல்யுத்தம் பயிற்சி - முண்டாப்புரட்டுதல் இவற்றை பயில்விப்பார்கள். - குழந்தைகள் எல்லாம் பயில்வானைப்போல வியாயாம சாலைகளில் உள்ள - ஹநுமான் குஸ்தி, தண்டால், குட்டி கரணம், போடுகின்ற- சித்திரங்களைப் பார்த்துப் பார்த்து குதூகலமாக அவற்றைக் கற்றுக்கொள்வார்கள்.

ஸாதுக்கள் யோகிகள் வஸிக்கின்ற அகாடாக்களில் கூட வீரஹநுமானின் ஸந்நிதியோ -யோகாஸனத்தில் அமர்ந்த ஹநுமானின் ஸந்நிதியோ உண்டு. ஹநுமானுக்குப் பக்கத்தில் வெண்கலத்திலோ வெள்ளியிலோ செய்யப்பட்ட கதாயுதம் இருக்கும், ஹநுமானுக்கு தூபதீபநைவைத்யங்கள் செய்யப்பட்டு நீண்ட நேரம் ஹநுமானின் கீர்த்திப் பாடல்கள் பாடி ஹாரதி எடுப்பார்கள்.

பெண்கள் எல்லோருமே கிருஷ்ணபக்தியிலும் - மீராபாய் கபீர் மற்றுமுள்ள மஹான்களான ஹரிதாஸர்களின் கீர்த்தனைகளிலும் லயித்துப்பாடி - பாலலீலைகளையும் ராஸக்ரீடையையும் அபிநயித்து கோலாட்டம் கும்மிகள் ஆடி வட்டமாகச் சுற்றி வந்து பஜனை செய்வார்கள். முஸ்லிம்கள் அந்தப் பெண்களிடம் வாலாட்ட முடியாதபடி ஆண்கள் பௌருஷத்தோடு விளங்குவார்கள். வயதான ஸாதுக்கள் நாமகீர்த்தனத்தில் ஈடுபடுவார்கள், ஹநுமான், போரில் அடிபட்டு வீழ்ந்த லட்சுமணனை உயிர்ப்பிப்பதற்காக ஸஞ்ஜீவிபர்வதத்தை எடுத்து வந்த போது - உயிர்ப்பித்தவுடன் ''அந்தஸஞ்ஜீவி பர்வதத்தின் மேல் சிகரத்தைப் புட்டு - வ்ரஜபூமியில் நட்டுவிட்டு கீழ்ப் பகுதியை ஹிமாலயத்திலேயே கொண்டு வை என்று'' ஹநுமானுக்கு ஸ்ரீராமன் உத்திரவிட்டார். அதன்படி இறங்கிய ஸஞ்ஜீவி பர்வத சிகரம் தான் கோவர்த்தன மலை என்று பெரியோர்களின் நம்பிக்கை.

தன்னைக் கீழே இறக்கிய ஹநுமானிடம் ஸஞ்ஜீவி பர்வதராஜன் முனகினாராம் ''ஹிமாலயத்தில் இருந்தபோது கைலாய பரமேச்வரனின் தர்சனம் கிடைக்கும். லங்கையிலேயே விட்டிருந்தால் ஸ்ரீராமனை தர்சனம் செய்து கொண்டிருப்பேன். இரண்டுமில்லாமல் - இந்த யமுனைக் கரையிலே இறக்கிவிட்டாயே''

ஹநுமான் சொன்னாராம் ''பர்வத ராஜனே - வருந்தாதீர். உம்மிடம் அடுத்த அவதாரத்தில் கண்ணன் விளையாடப் போகிறான். அங்கு இந்திரன், தூண்டுதலால் ஓயாதமழை பெய்கிற போது - ஏழுவயதுக் கண்ணன் உம்மை இடதுகைச் சுண்டு விரலால் ஏழு நாட்கள் தூக்கிக் கொண்டிருப்பான். குழந்தைக்கு உமது அபாரகனம் தெரியாத படி - நான் உமது சிகரத்தை இட்டிலிப்பானை மூடிபோலத் தூக்கிக் கொண்டிருப்பேன். உமது பெயரையும் சேர்த்து - கோவர்த்தனகிரிதாரி என்று பக்தர்கள் பாடப்போகிறார்கள்.''

*பர்வதத்திடம் ஹநுமான் பட்ட கடனை தீர்ப்பதற்காக - கிருஷ்ண அவதாரத்தில் பகவான் தன் குஞ்சுக்கரத்தால் கிரியைத் தூக்கினான் - என்று பாடுகிறார் கீதாவளியில் துளஸிதாஸர்.*

*இன்றும் கோவர்த்தனகிரி ராஜனின் ப்ரதட்சிணப் பாதையில் (பதினான்கு மைல்கள்) பத்து இடங்களில் ஹநுமான் கோயில்கள் உள்ளன. அங்கெல்லாம் ஹநுமானின் கண்கவர் மூர்த்தியிடம் சற்று நின்று களைப்பாறி பிரதட்சணத்தைத் தொடர்வார்கள்.*

*கண்ணனின் வெண்ணெய் திருடுகின்ற லீலையில் ஹநுமானும் கலந்து கொண்டார் என்பதற்கு ஸ்ரீமத்பாகவதத்திலேயே சான்று உள்ளது.*

*பத்தாவது ஸ்கந்தம் ஒன்பதாவது அத்யாயத்தில் கிருஷ்ணன் தயிர்ப்பானைகளை உடைத்து உரலில் மீது உட்கார்ந்து கொண்டு வெண்ணைப் பேலாவை கையில் வைத்துக் கொண்டு வாநரத்திற்கு ஊட்டிக் கொண்டிருந்தான் - என்று வருகிறது.*

***உலூக$_2$லாங்க்$_4$ரே ருஉபரி வ்யவஸ்தி$_4$தம்***
***மர்க்காய காமம் தததம் சி$_+$சி$_1$ ஸ்தி$_2$தம் ||***

*இந்த ''மர்க்காய'' என்று சொல் ஏகவசனத்தில் உள்ளது. மேலும் மர்க்கடாய - என்று சொல்ல வேண்டியிருக்க - மர்க்காய -ஹநுமானின் செல்லப் பெயராக சுகாசாரியரால் குறிப்பிடப்படுகிறது - என்று **ஸ்ரீக்ருஷ்ண ப்ரேமி ஸ்வாமிகள்** ஸ்வாரஸ்யம் கூறுவார்கள்.*

*விரஜபூமியில் தீபாவளி ஆண்டு தோறும் விசேஷமாக கொண்டாடப்படும். அன்று மாலை - கோமயத்தினால் கோவர்த்தன கிரியைப் படைத்து அதற்குப் பூஜை செய்வார்கள். அத்துடன் **லங்கூலியா** என்ற வால் உள்ள பிம்பமும் படைக்கப்படும். அதற்கும் பூஜை நடக்கும். இந்த*

லாங்கூலியா என்பவர் ஹநுமான் தான் - பூஜை முடிந்தவுடன் பூஜா பிரஸாதங்கள் வாநரங்களுக்கு வழங்கப்படும்.

கோகுலத்திற்குப் பக்கத்தில் காட்டுப்பாதையில் **''ஹநுமான் ஹடீலா** - என்று ஓர் இடம். அங்கு ஒரு பழைய ஹநுமான் கோவில் உண்டு. யசோதாமாயி - காலை வேளையில் கண்ணனை மடியில் வைத்துக்கொண்டு குங்குமப்பூ கோரோசனை கலந்து வெண்ணெயை ஊட்டுவாளாம் - கோரோசனையின் காரம் பிடிக்காமல் கண்ணன் உதட்டிலேயே வெண்ணெயை பிதுக்குவானாம். ஒரு குட்டிக் குரங்கு எங்கிருந்தோ ஓடிவந்து தன் பிஞ்சுக்கையினால் கண்ணனின் உதட்டை வழித்து எடுத்து தன் வாயில் போட்டுக் கொள்ளுமாம். எப்படி விரட்டினாலும் கண்ணன் வெண்ணெய் தின்று முடியும் வரை அங்கிருந்து அகலாதாம். யசோதா (அடம் பிடிக்கின்ற) ஹடீலா ஹநுமான் என்று அதைச் குறிப்பிடுவாளாம் . அந்த ஹநுமான் ஆலயம் தான் ஹநுமான் ஹடீலா

## மத்ரா

மதுராவிலிருந்து ப்ருந்தா வனம் போகின்ற வழியில் லுடேரியா ஹநுமான் தர்சனம் அளிக்கிறார். மதுரைக்கு வெண்ணெய் வியாபாரத்திற்காக கூடையை இடுப்பில் சுமந்து செல்கின்ற கோபிகள் பற்றி - தகவல் தெரிவிப்பதற்காக - ஹநுமானை அங்கே கண்ணன் நிறுத்தி வைத்திருக்கிறாராம். கோவர்த்தனத்தின் தாழ்வரையிலும் பூஞ்சரீகா லௌண்டா என்ற வாலின் விஷமீ இருக்கிறார்.



## பீஹார் மாநிலத்தில் ஹநுமான்

### ஆஞ்ஜன்

**ஆஞ்ஜன்** - ராஞ்ஜீ மாவட்டத்தில் குமலா என்ற சிறு நகரத்திற்குப் பக்கத்தில் ஆஞ்ஜன் கிராமம். இங்குதான் ஹநுமான் பிறந்தாராம். அஞ்ஜநா தேவி அந்த கிராமத்திற்கு மேற்கே மூன்று மைல்கள் தூரத்தில் உள்ள குகையில் தான் தவம் செய்தாளாம். அந்த குகையில் தாயாருக்கும் குழவிக்கும் பிம்பங்கள் உள்ளன. இந்த குகைக்கு நாட்டின் பல பாகங்களிலிருந்து பக்தர்கள் வந்து வேண்டுதல்களை நிறைவேற்றிப் பயன் பெறுவார்கள். இந்த கிராமத்தில் - **உராவ்(ம்)** ஜாதியைச் சேர்ந்த ஆதிவாஸிகள் வாழ்கிறார்கள். அவர்கள் தம்மை ஹநுமானுடைய குலத்தில் பிறந்தவர்கள் என்றும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் - ''ஓ ராம்'' என்பது மருவி உராவ்(ம்) ஆகிவிட்டதாம். ராமாவதாரத்தின் போது - லங்கைக்குப் போகும் போது ஹநுமான் பிறந்த ஸ்தலமான இந்த ஊருக்கு ராமன் விஜயம் செய்து ஹநுமானின் தாயாரை வணங்கினாராம்'' இன்றும் அந்த ஜாதியினர் கள்ளம் கபடமின்றி கிழங்கு வேர் கீரை பழங்கள் காய்கள் உண்டு வாழ்கிறார்கள். புருஷர்கள் லங்கோடு அணிந்திருப்பார்கள். அந்த லங்கோட்டில் பின்புறம் துணியினால் தைக்கப்பட்ட வால் தொங்கும்.

### ஸீதாமார்ஹீ

இந்த ஸ்தலத்தில் ஜநகரராஜன் யாகபூமியை உழும்போது - கலப்பை நுனியில் ''ஸீதாதேவி'' கிடைத்தாள். ஸீதை பிறந்த பூமி . ஸீதா மஹீ- ஸீதாமடீ என்று மருவியிருக்கிறது. இங்கு பல ஸித்தபருஷர்களும் ஸாதுக்களும் யோகஸாதனைகள் புரிந்து பயனடைந்திருக்கிறார்கள்.

இங்கு ப்ரதானமான் ஆலயம் **ஸ்ரீஜாநகீமந்திர்.** இங்கு ஜானகீ தேவியின் முன்னிலையில் ஹநுமான் வினயத்துடன்

வலது கையினால் வாயை மறைத்துக் கொண்டு நிற்கிறார். மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது. கருவறையின் வடபுறத்தில் வீரஆஞ்ஜ நேயர் பக்தர்களுக்கு வரமளித்துக் கொண்டு நிற்கிறார். கோவிலின் கிழக்கே சற்றுதூரத்தில் தெற்கு நோக்கி ஒரு ஹநுமான் கோவில் உள்ளது. அந்த ஹநுமான் தாடை நீண்டு மோவாய் கூம்பி மிக அழகாக இருக்கிறார். இந்த ஹநுமான் வாராணஸியில் இருந்த ஒரு பக்தருடைய கையில் கிடைத்தாராம். அவர் அதை அயோத்தியில் இருந்த ஒரு பெரியவரிடம் ஒப்புவித்தாராம். பெரியவர் வயதான காரணத்தினால் சரியாக பூஜை செய்ய முடியவில்லையே என்று அழுதாராம். அவருடைய கனவில் தோன்றினார் ஹநுமான்.

''ஸீதாமஹீயில் உள்ள ஜாநகீ மாதா அழைக்கிறாள். அங்கே கொண்டு விட்டு விடு'' என்று கூறினாராம். அதே சமயம் - பொருத்தமாக - ஸீதா மஹீயில் இருந்து ஸாத்விகரான ஒரு கௌட ப்ராஹ்மண வைதிகர் க்ஷேத்ராடனம் செய்து கொண்டு அங்கு வந்து சேர்ந்தார். அவரிடம் விஷயத்தைச் சொல்லி பெரியவர் ஹநுமான் மூர்த்தியை ஒப்புவித்தார். அந்த வைதிகர் - மஹாபாக்யம் என்று கருதி, தன் ஊருக்கு எடுத்துச் சென்று தன் செலவில் தாயார் ஸந்நிதிக்கு எதிரே கோவில் கட்டி பிரதிஷ்டை செய்தார். அவருடைய வம்சத்தினர் இன்னும் பக்தியோடு இந்த ஹநுமானைப் பூஜித்து வருகின்றனர்.

ஒரு பிராமணர் - ஸீதாதேவியிடம் சென்று - தன் பிள்ளைக்கு வந்த வியாதி தீர வேண்டுமென வேண்டினார். ஸீதா தேவி அவருடைய கனவில் தோன்றி ''அதோ கிழக்கே தெற்கு நோக்கிநிற்கிறாரே ஹநுமான் அவருக்குத் தைலாபிஷேகம் செய்து வை. அநுகூலமாகும்''- என்று அருளினாள். அதன்படி நடந்தது. செய்தி ஊரில் பரவியது. அன்று தேவி தன் அர்ச்சகர் கனவில் தோன்றி''இன்று ஹநுமானுக்குத் தைலாபிஷேகம் ஆகி அலங்காரம் ஆனவுடன்

- நீ இந்த ஸந்நிதியிலிருந்து சுக்குத் திப்பிலி லேகியம் செய்து கொண்டு போய் ஹநுமானுக்கு நிவேதனம் செய்து வை - என்று உத்தரவு பண்ணினாள். அர்ச்சகரும் அதன் படி - ஹநுமானுக்கு அபிஷேக அலங்காரம் முடிந்ததும் ஜானகீ மாதா ஆலயத்திலிருந்து சுக்குத் திப்பிலி லேகியம் செய்து எடுத்துக் கொண்டு போய் ஹநுமானுக்கு நிவேதனம் செய்து வைத்தார். இந்த பிரஸாதம் பக்தர்களுக்கு வழங்கப்பட்டது. அதை ஏற்றுக் கொண்டவர்கள் எல்லோர்க்கும் வியாதி தீர்ந்தது. அந்த வழிபாடு இன்னும் நடந்து வருகிறது.

அந்த தக்ஷிணாமூர்த்தி ஹநுமானுக்கு விமரிசையாகப் பல விழாக்கள் நடைபெறுகின்றன. அங்கு வால்மீகி ராமாயணம் கிஷ்கிந்தா காண்ட ஸுந்தரகாண்டங்கள் பாராயணம் செய்பவர்களுக்கெல்லாம் காரிய சித்தி ஏற்படுகிறது.

ஜானகீ மாதாவின் அருட்பார்வையில் ஹநுமானுக்கு இங்கே நடக்கும் ஆராதனைகள் மூலமாக ஸீதாதேவி ஹநுமானுக்கு இவ்விதம் உபகாரம் செய்து தனது நன்றிக் கடனைத் தீர்த்துக் கொள்கிறார் - என்று பெரியேர்கள் விம்மி விம்மி அழுவார்கள்.



# மேற்கு வங்காளத்தில் ஹநுமான்

*(1) கல்கத்தா கலீ (சந்து)- கல்கத்தாவில் இறங்கின உடனேயே ஹௌராபாலம். அதைக் கடந்து ஹாரிஸன் சாலை. அங்கு 200 மீடர் கடந்தால் சாலையின் இடது புறத்தில் ஒரு சந்து. அதுவே ஹநுமான்கலீ. அங்கு ஒரு ஹநுமான் ஆலயம். கல்கத்தாவில் மட்டுமல்ல வங்க நாடு முழுவதிலுமே மிகப்பழமையான ஹநுமானின் ஸித்த பீடம் இது. அவரை தர்சனம் செய்ய வெகுதூரத்தில் இருந்து விரதமிருந்து யாத்ரையாக பக்தர்கள் வருவார்கள். அவரை தர்சித்து வேண்டிக் கொண்டால் வினைதீரும்... நல்லது நடக்கும் என்று நம்பிக்கை . தென்னாட்டில் ஏழுமலையானிடம் எவ்வளவு ஈடுபாடு உண்டோ அதற்கும் அதிகமானது. எப்பொழுதும் கூட்டம் தான். இன்றைக்கு (2008) முன்னுற்றி ஐம்பது ஆண்டுகளுக்குமுன் கல்கத்தா ஒரு கிராமமாக இருந்த போது தென்னாட்டிலிருந்து ஒரு ஸந்நியாசி பாரத நாட்டு க்ஷேத்ரங்களில் எல்லாம் பகவானை தர்சனம் செய்து கொண்டு ஒரு ஹநுமான் மூர்த்தியைத் தோளில் தூக்கிக் கொண்டு இங்கு வந்தாராம். ஹநுமானைக் கரையில் வைத்து விட்டு கங்காஸாகரில் ஸ்நானம் செய்தாராம். அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு மேலே யாத்திரை செய்வதற்காக ஹநுமானைத் தூக்கின போது, அவர் எழுந்திருக்க மறுத்து விட்டாராம். மக்கள்கூடி தர்சித்தனராம். அவர்களுடைய வேண்டுதல்கள் நிறைவேறினவாம். பிறகு பல்லாண்டுகள் அந்த ஹநுமானுக்கு ஆலயம் எழுப்பி உபாஸனை செய்து வந்தாராம். பிறகு நூற்றைம்பது ஆண்டுகளுக்குப்பிறகு அங்கு சுற்றுப் புரத்தில் வாழ்ந்த பக்தர்கள் கூடி புதிதாக ஆலயம் கட்டி அன்றாட பூஜைகளுக்கெல்லாம் நிரந்தர ஏற்பாடு செய்தனராம்.*

*பிறகு கல்கத்தா வளர வளர - கல்கத்தாவில் உள்ள க்ஷத்ரிய வர்க்கத்தினர் ஆங்காங்கு - தர்ம நிதிகளை ஏற்படுத்திக்*

கொண்டு இந்த ஹநுமானுக்கு விமரிசையாக நாள் தோறும் வழிபாடுகள் நடத்த ஏற்பாடு செய்தனராம். கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்த பஞ்சாபிகள் மார்வாரிகள் எல்லாருமே பல அறக்கட்டளைகளை நிறுவினார்கள். மந்திரத்தில் மற்றொரு ஸங்கடமோசன ஹநுமானும் பிரதிஷ்டை ஆயிற்று. அவருக்கும் அமோகமான ஆராதனைகள் நடைபெற்றன. மணிக்கணக்காக நாட்களாக அங்கே ராம நாமம் சொல்லி தவம் கிடக்கின்ற ஸாதாரண மக்கள் எல்லாருக்குமே செல்வமும் பெருமையும் சேர்கின்றன. ஆலயத்தின் நிர்வாகம் பன்முகமாகப் பெருகியது. கி.பி.1928 ல் ஆலயத்தின் நடைமுறைகள் செவ்வனே நடக்க வேண்டுமென்பதற்காக நகரப் பெருமக்கள் **ஹநுமான் டெம்பிள் ட்ரஸ்ட் ஹநுமான் கலீ கல்கத்தா** - என்ற அறக்கட்டளையை நிறுவினர். அது நிறுவப்பட்டு ஏழுஎட்டு வருஷங்களுக்குள் அந்த அறக்கட்டளைகளின் அலுவல்கள் பலவாறு பெருகின.

(1) ஹநுமான் மந்திரில் இலக்கிய ஆராய்ச்சி மையம் ஏற்பட்டது. பாரத நாட்டுப்பண்டையப் பலமொழி இலக்கியங்கள் எல்லாம் சேகரிக்கப்பட்டு, விற்பன்னர்களுக்கு தாராளமாக ஊதியம் கொடுக்கப்பட்டு, ஆண்டு தோறும் - பெரிய பெரிய நூல்கள் வெளியிடப்படுகின்றன.

ஆராய்ச்சியில் நிபுணத்வம் பெற்றவர்களுக்கு பி.எச்.டி பட்டங்கள் வழங்கப்படுகின்றன.

(2) இலவசக் கல்வி நிலயங்களில் பி.ஏ.எம்.ஏ போன்ற உயர் கல்விப்பட்டங்கள் பெற உதவியளிக்கிறார்கள்.

(3) பெரியநூலகம். மக்கள் அமர்ந்து படிக்க விசாலமான மண்டபங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன.

(4) கலைச்சித்திரங்களைச் சேகரிப்பது அவற்றை பதிப்பிப்பது.

*(5)கவிஸம்மேளனங்கள் இன்றைய இலக்கிய வல்லவர்களின் -எழுத்துகளுக்கு ஊக்கமளிப்பது.*

*(6) இலக்கியச் சொற் பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்து. அவற்றை இதழ்களாக மாதம் தோறும் பதிப்பிப்பது.*

*(7) இலக்கியக்கலை மேதைகளின் ப்ரவசனங்கள் ஏற்பாடு செய்வது*

*(8) மாணவர்களுக்கு உயர் கல்விக்கு மாதாந்தர உதவித் தொகை அளிப்பது.*

*(9)மகளிர் மேளா அவர்களுடைய கலை ஈடுபாட்டுக்கு ஊக்கம் அளிப்பது.*

*(10)இவையெல்லாம் ஹநுமானின் அருளால் பெருகியவை என்பதை கணம் தோறும் உணரவைப்பது . இப்படி ஆக்கபூர்வமான மக்கள் ஸேவையை அந்த ஹநுமான் ரஸித்துக் கொண்டிருக்கிறார்.*

## (2) *ராஜா கட்ரா*

*ஹௌராபாலத்துக்கு எதிரே புகழ்பெற்ற ராஜா கட்ரா உள்ளது. சாலைஓரத்தில் ஒரு ஹநுமானின் வெகு அழகான ஆலயம். இங்குள்ள ஹநுமானுக்கு ஐந்து முகங்கள். நாற்புறமும் நான்கு முகங்கள். அவற்றிற்குள் மேலே பார்த்தவாறு ஒருமுகம். மேற்கே பார்த்தவாறு ஒருமுகம் . இவை தர்சனத்திற்கு கிடைப்பதில்லை. மற்ற மூன்று முகங்களையும் தர்சனம் செய்யலாம். பத்தடிக்கு மேல் உயரமுள்ள அந்த மூர்த்தியை தர்சனம் செய்த உடனேயே -நம் உடலில் வலிவும் உவகையும் பொங்கும். நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் பிரதிஷ்டையான இந்த மூர்த்தி அன்றாடம் புதிய கவர்ச்சியோடு தர்சனம் அளிக்கிறார். நேற்றுப் பார்த்த முகங்கள் - இன்று புதுப் பொலிவோடு விளங்குகின்றன. இந்தச் சலவைக்கல் மூர்த்தியை ஜெய்ப்பூர் சிற்பி ஒருவர் வடித்தார். அவரது வலது கையில் மூன்று*

விரல்கள் ஊனம். அவருடைய சிற்பக்கலைத்திறனை மதித்து அவரிடம் இந்த வேலையை ஒப்படைத்தனர். ''எப்படிச் செய்வேன்!'' என்று கலங்கினார் - தெருவில் போகின்றவர் இருவர் பேசிக் கொண்டு போனது காதில் விழுந்தது. ''நான் தான் சொல்கிறேனே எல்லாம் நல்லபடியாக நடக்கும் கவலைப்படாதே''

இதை ஹநுமானின் ஆணையாகவே ஏற்று இந்தச்சிற்பத்தை வடிக்க முனைந்தார். நுணுக்கமான வேலைப்பாடுகள் - வெண்ணையைப் பிசைந்து உருட்டுவது போல கலை விரல்களிலிருந்து விளைந்தது. அந்த பஞ்சமுக ஆஞ்ஜநேய ஆலயம் கட்டப்பட்ட போது அந்த பிரதேசம் சிறு கிராமமாகவே இருந்தது. ஆலயத்தின் ஓரமாக கங்கை அமைதியாக ஒடியது.

ஸேவார்த்திகள் பெருக ஆரம்பித்தவுடன் ஹநுமான் ஆலயத்தில் நெருக்கடி ஏற்பட்டது - சில சமயங்களில் நெருக்கடியின் போது - கங்கைப்படிகளில் ஜனங்கள் வழுக்கி விழுந்தனர். அர்ச்சகருக்கு கவலை.

''உன் அடியார்கள் இப்படி சிரமப்படுகிறார்களே '' என்று ஹநுமானை வேண்டினார்.

''கவலைப்படாதே. கங்கை இடம் கொடுப்பாள்''

ஹநுமான் ஆறுதல் கூறினார். கங்காபிரவாஹம் அந்தப்பக்கத்தில் வடிந்து கொஞ்சம் கொஞ்சமாக மேடிட்டுவிட்டது இன்று -கங்கை கோயிலிலிருந்து கால்கிலோ மீட்டர் தள்ளி ஒடுகிறாள். அங்கு ஒரு பெரிய சாலையும் வீடுகள் நிறைந்த வீதியாகப் பரிணமித்து விட்டன.

கோயிலையே அந்த இடத்திலிருந்து அகற்றி அப்பால் கட்ட வேண்டும் என்று சொன்னவர்கள் எல்லோரும் மூக்கில் விரல் வைத்தனர். பிறகு தான் ராஜா கட்ரா வந்தது.

## நவாப் லேன்

இந்தச்சந்தில் இந்த ஒரு ஸங்கட மோசந ஆலயம், ஒரு பஞ்சமுக ஹநுமான் ஆலயம், தனித்தனியாக உள்ளன. ராஜா கட்ராவுக்கு வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் சாலையின் வலது புறத்தில் ஸங்கடமோசந ஹநுமான் -நவாப் லேனில் நுழைவாயிலில் பஞ்சமுக ஹநுமான். ஸங்கடமோசநருக்கு வெண்ணையில் கலந்த ஸிந்தூரம் அடிக்கடி பூசப்படுகிறது. பக்தர்கள் அலைமோதுகின்ற இந்த கோவிலில் ஒரு மூலையில் ஸ்ரீகாளியின் ஸௌம்யமான பிரதிமையின் தர்சனம் கிடைக்கிறது.

இந்த ஆலயத்திற்கு அடுத்தாற் போல் பஞ்சமுக ஹநுமானின் ஆலயம். இது சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டது. அங்கு ஹநுமானின் ஐந்து முகங்களும் நேர்ப் பார்வையில் தர்சனத்திற்கு கிடைக்கின்றன. இந்த ஆலயத்தில் **ஹயக்ரீவர், நரசிம்மர், வராஹர், கருடன், வாநரர்** முகம் கொண்ட ஹநுமான் பத்து கைகளில் பட்டாக்கத்தி, திரிசூலம், சக்ரம், மலை, அபயமுத்ரை, ஜபமாலை, கமண்டலு, அம்பு, வில், தாமரை மலர், இவை அலங்கரிக்கின்றன.

அஹிராவணன் பாதாளத்தில் காளி தேவிக்குப்பலி கொடுப்பதற்காக ராமலட்சுமணர்களை யுத்தகளத்திலிருந்து கவர்ந்து சென்றதாகவும் அவர்களை மீட்பதற்காக ஹநுமான் இத்தகைய வடிவம் தாங்கினதாகவும் ஒரு வரலாறு. இந்தச் சிற்பத்தை ஜயபூரிலிருந்த -குருடரான சிற்பி ஒருவர் - படைத்தார். பக்தர்கள் ஹநுமானை வேண்டிக்கொண்டதன் பேரில் அந்தச் சிற்பிக்குக் கண் பார்வை கிடைத்து - சிற்பம் செய்து முடித்ததும் பழையபடி குருடாகி விட்டது - என்பார்கள்.

பிரதிஷ்டையான பிறகு ஹநுமான் ஒரு நாள் அரச்சகரின் கனவில் தோன்றி - எனக்கு உபவீதம் (பூணூல்) இல்லையே அதற்கு ஏற்பாடு செய் என்று ஆணையிட்டார்.

அர்ச்சகர் தர்சனத்திற்கு வந்த ஒரு பிரபுவிடம் இதை விண்ணப்பித்தார். அவருக்குப் பெரும் கவலை. ஹநுமானை மனமுருகிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். ஆதலால் அவர் காது கேளாதவர் போல அகன்று விட்டார். அர்ச்சகர் தவித்தார். ப்ரபுவுக்கு உள்ளம் குடைந்தது. முக்கியமான வேலை சிக்கல் ஆகிவிட்டதே! கலங்கினார். உடனே முடிவு செய்து தங்கத்தில் முப்புரி சரடு செய்து ரத்னமுகப்பு வைத்து மறுநாளே பூணூல் கொண்டு வந்து அர்ச்சகரிடம் கொடுத்து ஹநுமானுக்குச் சாற்றி தீபாராதனை செய்வித்தார்.

வீட்டிற்குத் திரும்பின பிரபுவிற்கு அவருடைய முக்கியமான காரியம் அவருடைய முயற்சியின்றியே நிறைவேறி இருந்தது. வெள்ளைச் சலவைக்கல் மூர்த்தியின் மீது - ஸ்வர்ணப்பூணூல் ரத்ன முகப்புடன் ஜொலிக்கின்றது.

கல்கத்தாவில் பெரிய பஜார் அருகே உள்ள ஸத்யநாராயண பார்க்கு எதிரே ஜைநகடராவுக்கு பக்கத்தில் ஒரு ஹநுமான் ஆலயம்.

எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டது. ஹநுமானின் பெரிய வடிவம் ஸர்வாலங்கார சிற்ப வேலைப்பாட்டுடன் கண்களைக் கவர்ந்து விடும். ஹநுமானின் வலது தோளில் ஸ்ரீராமனும் இடது தோளில் லட்சுமணனும் சுகமாக அமர்ந்து தர்சனம் அளிக்கிறார்கள். தங்கக்கவசம் பூண்டு ஜொலிக்கிறார். ஆண்டு தோறும் அது மாற்றப்படும். அதற்கான பக்தர்கள் ஆண்டு முழுவதும் காணிக்கை செலுத்திடுவார்கள். க்ருத்திவாஸர் செய்த ராமாயணத்தின் பாராயணம் நடந்து கொண்டே இருக்கும். அந்த ஆலயத்தில் இரண்டு சிவலிங்கங்கள் பிரதிஷ்டை. முன்னமேயே பிரதிஷ்டை ஆகியுள்ளன. அதனால் இந்த இடத்திற்கு ஜப்யேச்வர் என்று பெயர். இந்த ஹநுமானை வேண்டிக்கொண்டு பிலிசூன்யம் பிசாசுகளிலிருந்து விடுதலை பெறுகிறார்கள்.

## அஸ்ஸாமில் ஹநுமான்
## கமலா வாரீ சத்திரம்

ஜோரஹட்டிலிருந்து சுமார் 525 கிலோமீட்டர் தொலைவில் பிரம்மபுத்திரா நதியின் அக்கரையில் மஹாத்மா ஸ்ரீகமலா காந்த்ஸ்வாமிகளால் நிறுவப்பட்ட கமலா வாரீ சத்திரம் உள்ளது. அங்கு ஒரு விஷ்ணு ஆலயமும் விஸ்தாரமான பஜனை மண்டபமும் உண்டு. அங்கு ஒரு ஸிம்ஹாஸனத்தில் ஒரு ஸ்ரீமத் பாகவத கிரந்தமே பூஜையில் வைக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்னால் ஆறுஅடி உயரமுள்ள தேவதாரு மரத்தினாலான ஹநுமான் பகவன் நாம கீர்த்தனம் கேட்டுக்கொண்டு பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறார்.

## மணிப்பூர்

மஹாபலி (சக்ரவாத்தி) யின் ஆச்ரமம் மலர்க்கொடிகளும் பழங்கள் பழுத்துத் தொங்குகின்ற மா பலா முதலிய மரங்களும் நெருக்கமாக வளர்ந்திருக்கின்றன. ராஜரிஷி பூபதிராஜ் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஹநுமான். அங்கு ஸாதுக்களோடு ஸாதுக்களாக வாநரங்களும் அமர்ந்து த்யானம் தவம் செய்கின்றனர். செவ்வாய்க் கிழமை அமாவாஸை பூர்ணிமா தினங்களில் அவரையே ருத்ரனாக பாவித்து வழிபடுகிறார்கள். ராமநாம கோஷம் செய்கிறார்கள்.

## சூங்காஜான்

இது அஸ்ஸாம் மாநிலத்தில் டீமாபுர் மாவட்டத்தில் உள்ளது. இந்த ஊரில் வெகு ஆண்டுகளுக்கு முன் சங்கர் தாஸ்ஜீ த்யாநீ - என்ற மஹாத்மா - ஹநுமானையே த்யானம் செய்து கொண்டு ராம நாமம் ஜபித்துக் கொண்டிருந்தார். அவர் ஸித்தி அடைந்த இடத்தில் கையில் சிப்ளாவுடன் அமர்ந்து ராம நாம கீர்த்தனம் செய்து முகமலர்ச்சியோடு விளங்குகின்ற ஹநுமானின் மூர்த்தியை பிரதிஷ்டை செய்திருக்கிறார். அங்கு தவம் செய்கின்ற ஸாதுக்களுக்கு பலமுறை அந்த ஹநுமான் பிம்பத்தில் சங்கர்தாஸ்ஜி - தர்சனம் அளித்திருக்கிறார்.

## ஒரிஸ்ஸா மாநிலத்தில் ஹநுமான்

(1)ஜகந் நாத மந்திரில் வெருநாட்களாகவே ஹநுமானை உபாஸிப்பவர்கள் கூடுவார்கள். ஜகந் நாதப் பெருமானைப் பற்றிய இந்த்ர நீலமணி புராணம் கூறுகிறது - ஜகந்நாதன் ஹநுமானை அழைத்து இவ்வாறு அருள்புரிந்தாராம். ''ஸ்ரீராமன் இங்கே புருஷோத்தம க்ஷேத்திரமே வடிவாக இங்கே மறைந்து விளங்குகிறார். அவருக்கு அணுக்கத் தொண்டனாக நீ இங்கேயே இரு. உன்னை என் பக்தர்கள் பூஜிப்பதை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும் - என்னுடைய தேர்க்கொடியிலும் கோபுரக் கொடியிலும் நீ வீற்றிருப்பாயாக'' அதனால் தான் ஜகந்நாதமந்திரின் கிழக்கு மஹாத்வாரத்தில்'' **பக்த ஹநுமான்** மேற்கு மஹாத்வாரத்தில் **வீரஹநுமான்,** வடக்கு மஹாத்வாரத்தில் **தபஸ்வீஹநுமான்,** தெற்கு மஹாத்வாரத்தில் **பாரா பாஈ ஹநுமான்** விளங்குகிறார்கள். ஜகந் நாத புரியின் முக்ய வீதியில் ஒரு பெரிய ஆலயத்தில் **ஸ்ரீமகரத்வஜ ஹநுமான்** தர்சனம் அளிக்கிறார்.

இங்கே ஒரு சமயம் - மன்மதன் நுழைந்தானாம். இங்கு இருக்கின்ற ஸாதுக்களை அவன் கெடுத்துவிடுவான் என்று மன்மதனுடைய மாயாஜாலங்களைக் கிழித்து எறிவதிலேயே ஹநுமான் ஊக்கம் செலுத்தினாராம். மன்மதன் முண்ட முடியாமல் ஓடியே போய் விட்டானாம். அந்த வெற்றிக் கொடியை ஒரு கையிலும் பட்டாக் கத்தியை மற்றொரு கையிலும் தாங்கி நிற்கிறார். இந்த ஆலயத்தில் பகவந் நாம கீர்த்தனத்தில் ஸ்த்ரீபுருஷர்கள் கபடமில்லாமல் பங்கு கொள்வார்கள்.

(6)இந்நகரத்தில் உள்ள - ஜகந்நாதனுக்குப் பிடித்தமான -ஜகந்நாத வல்லப உத்யானத்தில் - ஹநுமானின் தாய் **அஞ்ஜநா** தேவிக்குத் தனி ஆலயம். இந்த அஞ்ஜநா தேவிக்கு ஒரு தியானத்தை பக்தர்கள் பாடுவார்கள்.

*தப்த காஞ்சந வர்ணாபா$_4$ம்*
*வாநராஸ்ய சு$_+$பா$_4$நநாம் ।*
*நாநா ப$_4$ரண பூ$_4$ஷாட்$_4$யாம்*
*வராப$_4$ய கராந் விதாம் ॥*
*ஸர்வஸௌ பா$_4$க்யதா$_3$ம் தே$_3$வீம்*
*பத்$_3$மாஸந க$_3$தாம் ஸதா$_3$ ॥*
*மாருதே: ஜநநீம் வந்தே*
*மஹாகாநந வாஸிநீம் ॥*

*(7) ஸ்ரீஸுரங்க ஹநுமான்*

*ஜகந்நாத மந்திரிலிருந்து அஞ்ஜநா தேவி ஆலயம் வரை ஒரு சுரங்கப்பாதை இருந்ததாம். அந்தச் சுரங்க முனையில் எட்டு அடி உயரமுள்ள ஹநுமான் நிற்கிறார். அவர் தான் அந்த உத்யானத்தின் காவலாளி. அக்ஷயத்ருதீயை அன்று ஜகந்நாதன் ஓடத்தில் பவனி வருவதற்காக அந்த உத்யானத்திற்கு வருவார். அப்பொழுது ஹநுமானிடம் அநுமதி பெற்றுத்தான் உள்ளே பிரவேசிப்பார். அப்படி ஒரு தர்சனம் பக்தர்களுக்குக் கிடைக்கும்.*

*(7) ஸ்ரீகாந் பாதா ஹநுமான்*

*ஒரு சமயம் கடலில் பேரலைகள் எழும்பின. அவற்றின் இரைச்சல் ஆலயத்தில் ராம நாமம் கீர்த்தனத்தை பாதித்தது. ஹநுமானுக்குப் பொறுக்கவில்லை. விச்வ ரூபம் எடுத்துக்கொண்டு கிளம்பினார். வாலின் வீச்சினால் பேரலைகளை அடக்கினார். இந்த இரைச்சல் நின்றது. இன்றும் கூட கடலின் அலை ஓசை நகரத்தின் மற்றப் பகுதிகளில் எல்லாம் கூடக் கேட்கும். ஜகந்நாதன் ஸந்நிதியில் ஓசை இராது. இவர் தான் ஆலயத்தின் தெற்கு மஹாத்வாரத்தில் உள்ள ஹநுமான்- பதினெட்டு அடி உயரம். காந் பாதா - என்றால் ஓசை காது வரை எட்டாதவர் என்று பொருள்.*

*(8) ஸ்ரீ பேடீ ஹநுமான்.*

*பிணைபட்ட ஹநுமான் தரியா ஹநுமான் - (ஏரிக்கரை ஹநுமான்).*

*முன்பெல்லாம் கடல் கொந்தளித்தது. அடிக்கடி பனை உயர அலைகள். கரை ஓரப்பகுதியில் வாழ்கின்ற மீனவர்களின் குடிசைகளும் அழிந்துவிடும். அந்தக் குடிசைப் புறத்தில் தான் அதர்வணவேதத்தின் முக்கிய ருஷி ஆங்கிரஸர் முனிவரின் ஆச்ரமம் இருந்தது. அவர் இந்தத் தொல்லை தாங்காமல் ஜகந்நாத புருஷோத்தமனை பிரார்த்தித்தார். ஜகந்நாதன் ஹநுமானுக்கு ஆணையிட்டார். ஹநுமான் சக்ரதீர்த்தம் என்ற கடற்கரையின் முக்கியப் பகுதியில் - காலை நீட்டிக்கொண்டு படுத்துவிட்டார். அலைகள் ஒதுங்கின.*

*ஒரு சமயம் ஹநுமான் ஜகந்நாதனை தர்சிக்க ஆலயத்துள்ளே சென்றார். அப்பொழுது மறுபடியும் கடல்பொங்கி ஆங்கிரஸரின் ஆச்ரமம் மூழ்கிவிட்டது. ஜகந் நாதனிடம் முறையிட்டார்.*

*ஜகந்நாதன் ஆங்கிரஸரிடம் தங்கத்திலான ஒரு முரட்டுச் சங்கிலியைக் கொடுத்து ''இதனால் ஹநுமானை கடற்கரையிலே கட்டிப்போட்டு விடுங்கள்'' - என்று அருள் பாலித்தார்.*

*ஆங்கிரஸருக்கு தெரியும் ஹநுமானை எதனாலும் கட்டிப்போட முடியாது... சிந்தித்தார். ஒரு வழி பிறந்தது. தங்கச் சங்கிலி எங்கும் ராம நாமத்தைப் பதிப்பிக்கச் சொன்னார். அதனால் அவரைக் கட்டினார். சங்கிலியின் ஒவ்வொரு வளையத்திலும் ராம நாமத்தைக் கண்டார். முத்தமிட்டு அதைத் தானே கட்டிக்கொண்டார். அந்தச் சக்கரதீர்த்த கரையில் தான் இந்த பேடீ ஹநுமான் தங்கச் சங்கிலியினால் கட்டுண்டு தர்சனம் அளிக்கிறார்.*

*(9) ஸ்ரீஸித்த ஹநுமான்.*

*இந்த ஹநுமானின் சரித்ரம் ஜகந்நாத புராணத்திலேயே இடம் பெற்றிருக்கிறது இந்த இந்த்ர நீலமணி - புராணத்தில் ஒரு கதை.*

*இந்த்ரத்யும்நன் என்ற அரசன் தன் துயர் தீர - தர்சனம் செய்வதற்காக ஜகந்நாத புரி வந்தார். மிகவும் பல ஹீனராகி நடக்கமுடியாமல் வழியில் உட்கார்ந்து விட்டார். ஜகந்நாத தர்சன ஆசையையே விட்டுவிட்டார். நமக்குக் கொடுத்து வைக்கவில்லை - என்று ஆயாஸப்பட்டார்.*

*அப்போது - அங்கே ஒரு குஷ்ட ரோகி - கைகால்கள் அழுகிச் சொட்டுகின்ற நிலையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவனைப் பார்த்தார் இந்த்ரத்யும்நன்.*

*இந்தக் குஷ்டரோகி பூமியிலிருந்து எதையோ பொறுக்கி - தன் சீழ் வடிகின்ற தன் கால் மீது போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார்.*

*''என்னப்பா அது?*

*''அது ஒரு புழு''*

*''அதை ஏன் எடுத்து - ஏற்கனவே நொந்து போன - உன் காலில் மீது போட்டுக் கொள்கிறாய்?''*

*''அது என் காலிலிருந்துதானுங்க வழுக்கிக் கீழே விழுந்து விட்டது.''*

*''விட்டது சனியன் - என்று அதை நீ விட்டு விட வேண்டியது தானே! அதை ஏன் மிகவும் பொறுமையோடு தேடி எடுக்கிறாய்!.*

*''அது வேறு ஒன்றையும் தின்னாது. இந்தக் காலில் வடியும் சீழ் தான் அதற்கு ஆகாரம். அது கிடைக்காவிட்டால் கஷ்டப்படும்.*

*''கஷ்டப்படட்டுமே உனக்கென்ன?''*

''அப்படி இல்லீங்க. அதைப்படைத்த ஆண்டவன் - என் காலில் அதற்கு ஆஹாரமான சீழையும் படைத்திருக்கிறான். அது தின்னாவிட்டால் இந்தச் சீழ் வீணாக கீழே சிந்தத்தானே போகிறது? எனக்கு உதவாத இந்தச் சீழ் அந்த பிராணிக்கு உணவானால் அந்த ஜீவன் பிழைக்குமே!''

முடியாமல் படுத்துக் கொண்டிருந்த இந்த்ரத்யும்னன் எழுந்திருந்தான்.

''ஐயா தாங்கள் எதற்காக இந்த ஊருக்கு வந்தீர்கள்?

''எல்லாரும் போல நானும் இந்த ஜகந்நாதனை தர்சனம் செய்யலாம் என்று ஆசையினால் தான்''

''வாருங்கள் - என் தோளின் மீது ஏறுங்கள். நான் உங்களுக்கு தர்சனம் செய்து வைக்கிறேன்.''

''நீங்கள் யார்?''

''நானும் ஜகந்நாதனை தர்சிக்கத் தான் இங்கு வந்தேன். உடலில் தெம்பு இல்லை படுத்துக்கிடக்கிறேன்.''

''என்னைத் தோளில் தூக்கிக் கொள்கிறேன் - என்கிறீர்களே!.

இந்தக் கொடிய வியாதியால் கஷ்டப்படுகின்ற நீங்கள் - ஒரு புழுவுக்கு உயிர் கொடுப்போம் - என்ற மனது படைத்திருக்கிறீர்களே! அந்த உதார மனமுள்ள உங்களுக்கு தர்சனம் செய்து வைக்கின்ற உபகாரம் செய்யலாம் என்ற எண்ணம் வந்ததே. அதுவே தாங்கள் கொடுத்த பலத்தினால் தான். தயவு செய்யுங்கள். உங்களைத் தூக்க - எனக்கு அனுமதி கொடுங்கள்''

''ஐயா! வேண்டாம் இந்தக் கொடிய வியாதியோடு ஆலயத்தில் நுழைந்து அதன் புனிதத்தைக் கெடுக்க விரும்பவில்லை.''

''அப்படியானால் எப்படித்தான் தர்சனம் செய்யப்போகிறீர்?

ஜகந்நாதன் ரத யாத்திரைக்காக இரண்டு நாட்களில் வெளியே வருவாரே! அப்போது அவர் என்னைக் கடாட்சிப்பார்.

''நீரும் தர்சனம் செய்வீர்!''

அந்த பாக்யமில்லை! கண் தெரியாது. அவன் கடாட்சம் என்மீது படும். அதுபோதும்.

இந்த்ரத்யும்நன்விக்கித்து நின்றான்.

என்னவோ உந்தியது. அந்த குஷ்ட ரோகியை நெருங்கி போர்வைக்குள் மூட்டைபோல முடங்கிக் கிடந்த இந்த ரோகியைத் தூக்கிவிட்டான். இரண்டடி எடுத்து வைத்தான். அவன் முயற்சி பயன்பட்டது. அடுத்த கணம் அந்தச் சுமையோடு விடுவிடுவென்று -ஓடினான்.

எதிரே ஒரு பெரிய உருவம் அவருடைய வழியை மறித்தது.

''போடு கீழே பிண மூட்டையை'' என்று அதட்டியது.

''பிணமா?''

''அதோ பார். அந்தப்புண்யாத்மா திவ்யத்திருமேனியுடன் ஜகந்நாதன் திருவடியைப் பற்றி நிற்கிறான்''பல ஹீனமான நிலையில் உன் உடலையே தூக்கிக் கொண்டு நடக்கமுடியாமல் கீழே விழுந்து கிடந்தாயே! உனக்கு அவனைத் தூக்கிக் கொண்டே ஓட எப்படி பலம் வந்தது?''

''எப்படி வந்தது? அது தான் தெரியவில்லை.''

தன்னுடைய அழுகிய காலில் புழுத்த புழுவின் உணவுக்காக அந்த புழு உண்டாக்கின சீழை அதற்கு எடுத்துக் கொடுத்தாரே

அந்தப் புண்யாத்மா கொடுத்த பலம்.

''ஸ்வாமி! தாங்கள் யார்?''

''நானே தான் - என்று சொல்லிக் கொண்டு தர்சனம் கொடுத்தார் ஹநுமான்.

இந்த்ரத்யும்ந! இந்த ஜகந்நாதனுக்குப் பெரிய ஆலயம் கட்ட வேண்டும் என்று தோன்றியது அது யாரால் முடியும்? என்று தேடினேன். உன்னைப் போல மனப்பக்குவம் பெற்றவனால் அது முடியும் . அந்த மனப்பக்குவத்தை அந்தப் புண்யாத்மா உனக்கு அளித்துவிட்டார். இனித் தாமதிக்காதே!

ஜகந்நாதா புருஷோத்தமா! என்று இருவரும் நாமகோஷம் செய்தனர். இருவரும் சேர்ந்து கட்டினது தான் இப்போது நாம் காணும் பூரிஜகந்நாதர் ஆலயம். ஹநுமான் மஹாஸித்த புருஷர். அவருக்கே ஒரு ஸித்த புருஷர் துணை தேவைப்பட்டது. அங்கேயே ஸித்தி பெற்ற அரசன் உதவி கிடைத்தது. அத்தகைய ஸித்திஸ்தலம் அது. அந்த ஹநுமானுக்கு **ஸித்த ஹநுமான்** என்று பெயர்.

பூரிஜகந்நாத பக்தர்களுக்கு இந்த ஸித்த ஹநுமானுனிடம் அளவற்ற பக்தி.

## ஸிருளீ

புவனேச்வர் -பூரி சாலையில் உள்ள சந்தன புரத்திலிருந்து பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கிராமம். இந்த கிராமத்தில் மேற் பகுதியில் மஹாவீர ஹநுமான் ஆலயம். ஒரிஸா மாநிலத்திலேயே மிகப் புகழ்பெற்ற ஆலயம். மாநிலத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் நோன்பு இருந்து இவரை தர்சிக்க வருகிறார்கள்.

பத்து அடி உயரமுள்ள இந்த ஹநுமான். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் உயிர்த்துடிப்புடன் - பூமியிலிருந்து தானே வெளிப்பட்டதாகப் பெரியோர்கள் கூறுகிறார்கள்.

இன்னும் கூட சில நேரங்களில் -மெய் சிலிர்த்து மூச்சு விடுவதை ஜனங்கள் வெளியில் நின்ற படியே தர்சித்திருக்கிறார்கள்.

இரண்டு கைகளுடன் விளங்குகின்ற ஹநுமானின் மார்பு அகலம் இரண்டு புஜங்களுக்கு இடையே எட்டுச் சாண். இடது தொடையில் ஹநுமான் ஸீதாதேவிக்கு எடுத்துச் சென்ற மோதிரத்தின் இலச்சினையும் வலது தொடையில் ஸீதாதேவி ஸ்ரீராமனுக்கென அனுப்பிய சூடாமணியின் இலச்சினையும் பதிந்திருப்பது நன்றாகத் தெரியும். இந்த மூர்த்தியின் கண்கள் நேரே ஸமத்ருஷ்டியாக இல்லாமல் வெவ்வேறு திசைகளை நோக்குவதாகத் தோன்றும். ஸீதையைத் தேடுவதில் அத்தனை அக்கரை. ஆலயத்தின் தெற்கு பிராகாரச் சுவற்றில் - ஒரு இடைவெளி. அதன் வழியாக மஹாவீர ஹநுமான் ஜகந்நாத மந்திரின் கோபுரத்தில் பிரகாசிக்கின்ற நீலரத்தினச் சக்கராயுதத்தையும் இடது கண்களினால் தர்சிக்கிறார். அந்த இடத்தில் நின்று பக்தர்களும் கூட காலை வேளையில் அந்த நீலச்சக்கரத்தை தரிசிப்பதற்கு இது தான் காரணம். மஹாவீரனின் கண்கள் எதிர் எதிர் திசை நோக்கி இருப்பதற்கு. மஹாவீரனின் வலது கண் தெற்கு திக்கை நோக்கி லங்கையைக் கண் காணிக்கின்றது.

கடக்

இந்த ஊரில் முக்கோண வடிவத்தில் உள்ள அலங்காரத் தோட்டத்தில் ஒரு ஹநுமான் ஆலயம். அங்கு ஸ்ரீ வைஷ்ணவஸம் ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள் பூஜகர்கள். ஆகமமுறைப்படி பூஜை நடக்கிறது. இதுவே அந்த நகரத்தின் பிரதாந ஆலயம். அதிலேயே ஒரு புறம் ஸீதா லட்சுமண ஸமேதராக ராமன். மறுபுறத்தில் லிங்கவடிவத்தில். **சிவபெருமான்; இவர்களின் ஸந்நிதி உண்டு**



## ருச்யமூகப் பர்வதம்

(1)ருச்யமூகப் பர்வதம் கர்நாடகாவில் ஹம்பி க்கு அருகே உள்ளது. பெல்லாரி மாவட்டத்தில் - ஹாஸ்பெட்டிலிருந்து பனிரெண்டு கிலோமீட்டர் தொலைவு. ஹம்பியில் தான் விரூபாட்ச பரமேச்வரன் ஆலயம். அதற்கு முன்னே ஸந்நிதி வீதியில் - நேரே சென்றால் ருச்யமூக அடிவாரத்தில் கொண்டுவிடும். இங்கு தானே வாலிக்கு பயந்து கொண்டு சுக்ரீவன் ஒளிந்து கொண்டிருந்தான்? அதன் அடிவாரத்தில் தானே ஹநுமான் ஸ்ரீராம லட்சுமணர்களை பேட்டி கண்டார்? இங்கு இந்த மலையை பிரதட்சிணமாக வில்வளைவாக துங்க பத்ராநதி ஓடுகிறது. அங்கே அதற்குச்சக்கர தீர்த்தம் என்று பெயர். அதன் கரையில் மலை அடிவாரத்தில் ஸ்ரீராம மந்திர் உள்ளது. அங்கே ஸீதாலட்சுமண ராமர்களை ஸேவித்துக் கொண்டு ஹநுமான் ஸேவார்த்திகளுக்கு வரம் அருளுகிறார்.

## கிஷ்கிந்தை

ஹம்பிப் பிரதேசத்திலேயே விட்டல நாத ஆலயத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் சென்றால் சாலை வடக்கே திரும்புகிறது. ஸ்படிக சிலா - என்ற இடத்திலிருந்து வருகின்ற சாலை இந்தச் சாலையில் சேருகிறது. அதே வழியில் சற்று தூரம் போனால் துங்கபத்ரா நதி. அதன் அக்கரையில் அரைமைல் தூரத்தில் அநாங்குடி என்ற கிராமம். இது தான் ராமாயண காலத்திய கிஷ்கிந்தை. இங்கு பக்கத்தில் தான் ஸ்ரீராமன் ஒரே அம்பினால் துளைத்த ஏழு மாமரங்கள் இருந்தன. சுக்ரீவன் ராமனுடைய அபார திறமையை மெச்சி வணங்கினான். அங்கு ஸ்ரீராமன் தன்னுடைய அம்புறாத்துணியை கழற்றி வைத்திருக்கிறார். அந்த அடையாளம் தெரிகிறது அங்கு தான் வாலி சுக்ரீவ போர்கள் நிகழ்ந்தன. துங்க பத்ரா நதிக்கரையில் வாலி

ராமபாணத்தில் அடிபட்டு வீழ்ந்தான். அங்கெல்லாம் பாறைகள் பளீரென்று கண்களைப் பறிக்கின்றன. அதன் பக்கத்தில் ஒரு குகை. அங்கு ராமன் மழை நாட்களில் தங்கி இருந்திருக்கிறார்.

## ஹநுமான் பஹாட

அந்த குகையின் பக்கத்தில் **ஹநுமான் பஹாட** என்ற ஸ்தலம். பக்கத்தில் குன்று -சுக்ரீவன் குன்று. ஹாஸ்பெட் அருகில் கமலாபுரத்தில் மதுவனம் என்ற கிராமம். லங்கையிலிருந்து ஸீதையைக் கண்டு திரும்பிய **அங்கதன்** தலைமையிலான வாநரப்படை அங்கு தான் வெற்றி கொண்டாடி தேன் குடித்தது. இனிய பலாப்பழங்களைச் சுவைத்தது. அங்கு ஒரு ஹநுமான் ஆலயம். பம்பாஸரஸ். நினைத்து நினைத்து மெய் சிலிர்த்து ஆஞ்ஜநேயரை தர்சித்து பிறவிப்பயன் பெறலாம்.

பக்கத்தில் அஞ்ஜநீமலை சற்று உயரமான இடத்தில் ஒரு குகை. அதில் அஞ்ஜனி - பால ஹநுமான் தர்சனம்.

## மால்யவான் மலை

மால்யவான் மலை - அதற்கு இன்று **ஸ்படிகசிலா** என்று பெயர். விரூபாக்ஷ ஆலயத்திலிருந்து ஆறு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பக்கத்தில் ப்ரவர்ஷண கிரி. மால்யவான் மலையில் ஸ்படிக சிலை மீது அமர்ந்து ஸ்ரீராமன் ஸீதையின் பிரிவு தாங்காமல் - ஓயாமல் கண்ணீர் விட்ட இடம். ப்ரவர்ஷணக் குன்றிலிருந்து ஒரு சிற்றருவி கலகல வென்று நீரைப் பெருக்குகின்றது. ஸ்ரீமத் ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 27,28 எண்ணுள்ள ஸர்க்கங்களின் ச்லோகங்களை வரிவரியாக நிறுத்திப் படித்தால் புலம்பிய ராமன் தோன்றுவான். அவருடைய கண்களைத் துடைத்து விடலாம். அந்தப் பெரும் பேறு கிடைக்கும். நான்கு மாதங்கள் அங்கே ராமலட்சுமணர்கள் தங்கி

இருந்திருக்கிறார்களே. ஹநுமான் லங்கையிலிருந்து திரும்பி வந்து இங்கு தான் ''ஸீதாதேவி உயிருடன் இருக்கிறாள்'' - என்று மங்களச்சேதி கூறியிருக்கிறார். அந்த ஹநுமானை அங்கு தர்சிப்பவர் பெரும் புண்ணியம் செய்தவர்கள்.

## வாஈ.

இது க்ருஷ்ணா நதிக்கரையில் உள்ள நகரம். நதிக்கு இங்கே பலபடித்துறைகள் உண்டு. பேஷ்வாகாட் - என்ற படித்துறை அருகே யஜ்ஞேச்வரர் என்ற சிவன் கோவிலும் ஹநுமான் கோயிலும் உள்ளன.

## பாணுகாட்

இந்த இடத்தில் ஸிம்மாஸன மண்டபம் உள்ளது. அங்கு க்ருஷ்ணா நதியின் தேவிக்கு பெருவிழா நடக்கும். அந்த ஸிம்மாஸனத்தில் அமர்ந்து தேவி தர்சனமளிப்பாள். அதற்குப்பின்புறம் ஹநுமானின் ஆலயம் - சற்றுதூரத்தில் தர்மபுரி முஹல்லாவில் நதிக்கரையில் ராமேச்வரம் - என்ற சிவன் கோயில். அதன் வலது புறத்தில் க்ருஷ்ணா நதியின் மாருதி காட். அங்கு ஒரு ஹநுமான் ஆலயம். அதற்கு அப்பால் வடக்கே ஹரிஹரேச்வரர் ஆலயம். அங்கு குருதேவர் தத்தாத்ரேயரின் ஆலயம் அதற்கு சற்று மேற்கே -பஞ்சமுக ஹநுமான் ஆலயம்.

## அவடா நாகநாத்

நாகேச் - பனிரெண்டு ஜ்யோதிர் லிங்கங்களில் ஒருவரான நாகேசரின் க்ஷேத்ரம். இது தாருகாவனம். சிவபெருமான் ரிஷி பத்நீகளின் கபடமற்ற பக்திக்கு அருள் புரிந்த இடம் . அந்த ஸ்தலத்தில் அறுபத்தெட்டு புண்ணிய தீர்த்தங்கள் இருந்தன. பல இன்று மறைந்து விட்டன. மறையாத சிலவற்றில் ஒன்று ஹநுமான் தீர்த்தம்.

இந்த தீர்த்தத்தில் ஹநுமானை நினைத்து ஸ்நாநம் செய்து ராம நாமம் ஜபித்து மட்டுமே மன அமைதி பெற்று கவலையில்லாது வாழ்ந்து முக்தி பெற்ற ஸாதுக்களைப் பற்றி பலகதைகள் இந்த ஊர்க்காரர்கள் சொல்வார்கள்.

## பத்ராசலம்

ஆந்திரப்பிரதேசத்தில் வாடி என்ற ரயில் ஸ்டேஷனிலிருந்து இருபத்தைந்து கிலோ மீட்டர் தூரம். கோதாவரிக்கரையில் உள்ளது. கோதாவரிக் கரையிலேயே ஒரு ராமன் கோவில் - **ஹநுமானை பிரதானமாக** வைத்து ஸ்ரீஸமர்த்தராம தாஸர் கட்டியிருக்கிறார். பத்ராசலம் என்ற சிறுமலைமீது ராமதாஸர் கட்டின அற்புதமான ஆலயம். அங்கு ஹநுமானுக்கும் ஆலயம். அதன் விஸ்தாரமான மண்டபத்தில் எப்பொழுதும் ஸாதுக்களின் ராம நாமம் ஒலிக்கும். இந்த ஹநுமானையும் ஸமர்த்தர் தான் பிரதிஷ்டை செய்ததாகவும் மக்கள் கூறுவர்.

## கூர்ம க்ஷேத்திரம்

கூர்ம க்ஷேத்திரம் ஆந்திரத்தில் ஸ்ரீகாகுல பட்டணத்திலிருந்து பதினான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு ஸாலக்கிராமம் என்ற கருப்புக் கூழாம் கல்லில் இயற்கையிலே தைவிக ரேகைகள் பதிந்துள்ள மூர்த்தியில் விளங்குகின்ற **கூர்மாவதாரப் பெருமாள்** கூர்ம விமானத்தின் கீழ் அமர்ந்து தர்சனம் அளிக்கிறார். ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் ஸ்ரீராமாநுஜாசார்யர் ஸ்ரீமத்வாசார்யர் என்ற மூன்று மதாசார்யர்களுமே இங்கு வந்து தர்சனம் செய்திருக்கிறார்கள் இந்த க்ஷேத்திரத்தின் நான்கு பக்கங்களிலும் எட்டு புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன. அவற்றில் மூன்றாவதில் ஸ்ரீகூர்ம பகவானின் அவதாரம் - ஸ்ரீசக்ரதீர்த்தக் கரையில் ஹநுமான் ஆலயம். இந்த ஹநுமானைப்பற்றி பத்ம புராணம் கூறுகிறது. ஒரு சமயம்

தேவரிஷி நாரதர் ஸ்ரீமந்நாராயணனிடம் அபசாரப்பட்டு உள்ளம் கலங்கியிருந்த போது, ப்ரஹ்ம தேவன் அவரை கூர்ம க்ஷேத்ரத்தில் உள்ள ஹநுமத்தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து, ராம நாமத் தவம் செய்து மன நிம்மதி பெறலாம் என்று அருள் புரிந்தார். ஸ்ரீ கூர்மப் பெருமான் ஸந்நிதி அர்ச்சகர் தான் இங்கும் பூஜை செய்கிறார்.

## குத்தேநதீவி

இந்த க்ஷேத்ரம் கீழ கோதாவரி மாவட்டத்தில் மும்முடிவரம் தாலுக்காவில் கோதாவரியின் கிளையான பரத்வாஜ் நதியின் கரையில் உள்ளது. இது சிறு கிராமம் தான். ஆனால் இங்கு மிகவும் அருளாளராக ஹநுமான் பிரஸந்நராக இருக்கிறார். இந்த ஹநுமான் ராம நாம கோஷத்துடன் தாண்டவமாடிக் கொண்டே இருந்தாராம், அதனால் கிராமமே அதிர்ந்ததாம். அங்கு ஒரு பெரியவர் அந்த ஹநுமான் மூர்த்தியின் தலைமீது பின்பக்கமாக மேடை எழுப்பி அதன் மீது ஸ்ரீஸீதா ராமலட்சுமண மூர்த்திகளை பிரதிஷ்டை செய்தாராம். அதற்குப் பிறகு தான் ஹநுமான் அமைதியாக - ஆனால் ஜீவகலையோடு விளங்குகிறாராம். ஸ்ரீராமனுக்குப் பூஜை செய்து - எடுத்த தீர்த்தங்கள் மலர்கள் நிவேதனங்களையே ஹநுமானுடைய பூஜைக்கு உபயோகப்படுத்துகிறார்கள். இந்த ஹநுமானை கௌதம மஹரிஷி பிரதிஷ்டை செய்ததாகப் புராண வரலாறு.

## ஔரங்காபாத்

இந்த நகரத்தின் மத்தியிலுள்ள வீதியில் ஸ்ரீஸுபாரீ ஹநுமான் ஆலயம் கொண்டிருக்கிறார். கிழக்கு நோக்கியுள்ள இந்த ஹநுமானுடைய வட்டமான கண்கள் ஒளிவீசுகின்றன. முகத்தில் மலர்ச்சியும் அமைதியும் குடிகொண்டிருக்கின்றன. வெகுநாட்கள் முன்பு இந்த ஹநுமான் பாக்கு வடிவத்தில் இருந்தாராம். சிறுகச்சிறுக வளர்ந்து இப்படிப் பூர்ண வடிவம்

பெற்றாராம். ஆதலால் அவருக்கு ஸுபாரி ஹநுமான் என்ற பெயர் வந்ததாம். இங்கு தாம்பூலம் தான் முக்கிய நிவேதனம். அதையே அர்ச்சகர்கள் பிரஸாதமாக வழங்குகிறார்கள். இவர் தன்னை வழிபடுகின்ற மாணவர்களின் பரீட்சை விடைத்தாள்களில நிறைய மார்க் போடுகிறார் என்ற நம்பிக்கை மாணவர்களிடையே அழுத்தமாக உள்ளது.

## குல்தாபாத்

ஔரங்காபாத்திலிருந்து பதினைந்து கிலோமீட்டர் தொலைவில் புராணப் பிரஸித்தி பெற்றது இந்த ஸ்தலம். நகரத்தின் தென் கோடியில் ஒரு திறந்த வெளியில் ப$_4$த்$_3$ரமாருதி விளங்குகிறார்.

இந்த ஹநுமான் கட்டான் தரையில் உளியினால் கீரப்பட்ட வடிவத்துடன் படுத்துக் கொண்டிருக்கிறார். எப்பொழுதும் ஸிந்தூரம் கனமாக வெண்ணையில் குழைத்துப் பூசப்பட்டிருக்கும். ஆகவே வடிவம் கை கால்கள் அப்பட்டமாகத் தெரியாது ஆயினும் பக்தர்கள் கூட்டம் குறைவதே இல்லை. இதற்குக் காரணம் அங்கு வந்து செய்த ப்ரார்த்தனைகள் எல்லாம் நிறைவேறி விடுகின்றன.

புராண வரலாறு - ஸ்ரீராமன் கிருபையால் அரசுபெற்ற ஸுக்ரீவன் போகங்களில் ஈடுபட்டு ராமனுக்கு - ஸீதையைத் தேடித்தருவதாகக் கொடுத்த வாக்குறுதியை மறந்து விட்டான் என்ற கோபத்தினால் சுக்ரீவன் கண்களுக்கு அகப்படாமல் ஹநுமான் இங்கு வந்து படுத்துக் கொண்டு விட்டார். அவரை எங்கெல்லாமோ தேடிக் கொண்டு வந்து இங்கே கண்டு பிடித்து - வணங்கி வேண்டி அழைத்துச் சென்றாராம். குற்றங்களை மன்னிக்கின்ற கருணையுடையவராம் இந்த ஹநுமான்.

## பலகூர்

கர்நாடகாவில் எங்குமில்லாத அளவுக்கு ஹநுமானிடம் பக்தி கொண்டவர்கள் அதிகம். அதற்குக்

காரணம் ஸ்ரீமத்வாசாரியர் - ஹநுமானின் அவதாரம் என்ற நம்பிக்கை. ஆசார்ய மூர்த்தியை வழிபடுவதற்கு - பல நியமங்கள் முறைகள் உண்டு. அவற்றில் தவறு நேர்ந்து விடலாம். ஆனால் ஹநுமானை வழிபடுவதில் சிக்கல்கள் கிடையாது. நமது இஷ்டம்போல அவரை வழிபடலாம். ஹநுமானை வழிபட்டாலே ஆசார்யரையும் வழிபட்டதாக ஆகிவிடும். பங்களூரில் தடுக்கி விழுந்தால். அங்கு ஒரு ஹநுமான் நம்மைத் தூக்கி விடுவார். அத்தனை கோயில்கள். பல இடங்களில் ஸ்ரீமத்வஸம்பிரதாயத்தின் புகழ் பெற்ற ஆசார்யராக விளங்கிய ஸ்ரீவ்யாஸராயரே ஹநுமான் பிரதிஷ்டை செய்திருக்கிறார். இவற்றில் ஒரு தனித் தன்மை என்ன வென்றால் அந்த ஹநுமான் மூர்த்திகளில் வால்பகுதி நகாசு வேலையால் இழைக்கப்பட்டிருக்கும்.

## விஜய நகரம்

விஜய நகரத்திலுள்ள கோயில்களில் அடியில் ஹநுமான் யந்த்ரம் முறைப்படி பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதன் மீது ஹநுமான் விளங்குகிறார். இந்த ஆலயத்தில் ஹநுமானுக்கு மிகவும் கவனமாக -ஆசாரமாகப் பூஜைகள் நடைபெறும். தார்வா மாவட்டத்தில் பண்டீவாட் பாகல் கோட் அருகில் துளஸிகிரி பெல்காம் மாவட்டத்தில் கல்லாலி - முதலிய இடங்களில் ஹநுமான் ஆலயங்கள் மிகவும் ஆதரவோடு விளங்குகின்றன.

பலகூர் கர்நாடகாவில் ஒரு சிறுகிராமம். ஆனால் இந்த கிராமத்து மக்களின் பகவத் பக்தி எல்லையற்றது. இது ஷோலாபூர் ஹஸ்ஸி ரயில் பாதையில் ஆலமட்டி ஸ்டேஷனிலிருந்து ஒன்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. எட்டடி உயரமுள்ள ஹநுமான் பக்தர்களின் பரிதாப பக்திக்கு உரியவர். அதில்ஷா என்ற முஸ்லீம் அரசாட்சியின் போது கொடுமையாளர்கள் இந்த மூர்த்தியின் மனோஹரமான திருமேனியில் ஏழு இடங்களில் காயப்படுத்தி விட்டார்கள்.

சந்தனம் கஸ்தூரி கோரோசனை அகரு முதலியன கலந்து அந்த அங்க பங்கங்களில் அப்பி -மூர்த்திக்கு மெல்லிய வஸ்த்ரம் சாத்துகிறார்கள். ஹநுமான் புன்னகையுடன் அவற்றை ஏற்கிறார். அருள் பாலிக்கிறார். அந்த ஆலயத்திற்கு அடுத்தாற்போல மஹாகணபதிக்கும் ஸ்ரீஸூர்யநாராயணனுக்கும் ஆலயங்கள் உள்ளன. இந்த ஆலயம் மிகவும் பழமையானது என்று பம்பாய் கெஜட்டியரில் பதிவாகியிருக்கிறது.

## இந்துர போதநம்

தெலுங்கானாவில் உள்ளது. ஸ்ரீஸமர்த்தராமதாஸரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட மடம் உள்ளது. மிகவும் உற்சாகமாகச் செயல்பட்டு வருகிறது. கி.பி.1653ல் அந்த ஊரில் தண்ணீர் வரட்சி ஏற்பட்டுவிட்டது. மூன்று ஆண்டுகளாக மழையில்லை. அங்கிருந்த அந்தணர்கள் வருணஜபம் செய்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த சமயம் ஸ்ரீஸமர்த்தர் அங்கு வந்து சேர்ந்தார். மக்களின் துயரத்தைக் கண்டறிந்தார். ஒரு பெரிய நிலக்கரித் துண்டம் அங்கு கிடந்தது. அதைத் தனது கொப்பரைக் கிண்ணத்தினால் செதுக்கி ஒரு ஹநுமான் மூர்த்தியை வடித்தார். அந்த மூர்த்தியின் கைகளில் தனது தாடி முடி இரண்டைப் பிய்த்துக் கங்கணம் கட்டினார். கோ மூத்திரத்தினால் ஸ்ரீராமஜய ராம கோஷம் செய்து அபிஷேகம் செய்தார். பக்கத்தில் கிடந்த கிழங்குகளை நிவேதனம் செய்வித்தார். தீபஹாரதி நடந்தது அந்த கிழங்குகளைக் கிள்ளி - அந்தணர்களுக்கு பிரஸாதம் அளித்தார். அவர்கள் அதை உண்டனர். மழை கொட்டோ கொட்டு என்று கொட்டியது. மூன்று நாட்கள் ஓயவில்லை. குளங்கள் மடுக்கள் வயல்கள் எல்லாம் மூழ்கி ஜலப்பிரலயமாகிவிட்டது. பெரிய மரங்கள் துளிர்விட்டன. பாறை ஓரங்களில் புல் முளைத்தது. நிலக்கரி ஹநுமான்

கரைந்துவிட்டார். அங்கு ஒரு மடம் நிறுவினார். ஹநுமானின் பெரிய சித்திரம் மடத்தை அலங்கரித்தது. தனது பிரதான சிஷ்யரைச் சில காலம் தங்க வைத்து அவருடைய சீடர் ஒருவரை மடாதிபதியாக நியமித்து ஸமர்த்த ஸம்பி ரதாயத்தை அங்கு பிரசாரம் செய்வித்தார்.

## உடுப்பி

இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீமத்வாசாரியரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட கிருஷ்ணனின் ஆலயம் புகழ் பெற்றது. அங்கு கண்ணன் தன் கையில் தயிர் கடையும் - மரத்தால் ஆன மத்து - என்பதை தாங்கி நிற்கிறார். இந்த ஆலயத்தின் ஒரு பகுதியில் ஹநுமானும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். அந்த ஆலயத்தில் இன்றும் காலையில் முதல் பூஜை ஹநுமானின் அவதாரம் என்று பெருமையோடு கொண்டாடப்படுகின்ற ஸ்ரீமத்வ ஆசாரியருக்குத்தான். பிறகு தான் ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பூஜை.

தென்னாட்டில் பல ஹநுமான் ஆலயங்களில் மாத்வர்கள் தான் அர்ச்சகர்களாகிறார்கள். அந்த ஸம்பிரதாய பூஜை தான் நடைபெறுகிறது.

## யல கூர்

கிராமத்தில் ஹநுமான் மத்வஸித்தாந்தத்தில் முக்கியக் கருத்தாக - முக்ய ப்ராணர் என்ற ஸ்வரூபத்தில் ஆராதிக்கப்படுகிறார். யல கூரேசர் என்று பெயர். இங்கு வேண்டுதல்கள் செய்து கொண்டு விரதம் இருப்பவர்கள் விரைவில் தமது விருப்பம் நிறைவேறி மகிழ்கிறார்கள். ஹநுமத் ஜயந்தி இந்த ஊரில் பெரியவிழாவாக பத்து நாட்கள் நடக்கின்றது. விஷேமாக அன்னதானங்கள் ஏழைகளுக்கு வழங்கப்படுகின்றன. ஸ்ரீராம நவமியும் நாம கீர்த்தன பஜனைகளுடன் நடைபெறுகின்றது.

## துளஸிகிரி

பீஜபூர் மாவட்டத்தில் துளஸிகிரி என்ற கஸ்பாவில் துளஸிகிரி முக்யப்ராணர் - என்ற பெயருடன் கொண்டாடப்படுகிறார். மார்கழி மாதம் முழுவதும் ஹநுமத் ஜயந்தியாக மக்கள் கொண்டாடுகிறார்கள்.

## ஹம்பி

பெல்லாரி மாவட்டத்தில் உள்ள ஹம்பி நகரத்தில் ஒரு ஹநுமான் ஆலயம். இங்கும் யந்த்ரோத்தாரக ஹநுமான் தர்சனம் அளிக்கிறார். பேரறிஞர்கள் இந்த இடம் தான் கிஷ்கிந்தை என்ற மதிக்கிறார்கள். இங்கு ஸ்ரீராம நவமீ உத்ஸவம் விமரிசையாக -முக்கியமாக - ஏழைகளுக்கு விஸ்தாரமான விருந்துடன் நடைபெறுகின்றது.

## கோர் பார்

இந்த க்ஷேத்திரத்தில் உள்ள ஹநுமானுக்கு ஒரு சிறிய கோவில். ஆனால் விழாக் கொண்டாட்டமோ மிகப்பெரியது. ஸ்ரீராம நவமியுடன் ஹநுமத்ஜயந்தியும் பகவந் நாம கீர்த்தனங்களுடன் நடைபெறும்.

## கோல்ஹார்

இதுவும் பீஜபூர் மாவட்டத்தில் உள்ளது. க்ருஷ்ணா நதிக்கரையில் உள்ள ஹநுமான் ஸ்வாநந்திநீ ஹநுமான் என்று அழைக்கப்படுகிறார். சுற்றிலும் காடு தான். ஆனால் மாத்வர்களுக்கு இது முக்கியமான வழிபாட்டுஸ்தலம். இந்தக் கோயிலில் அமர்ந்து தியானம் செய்து பல பெரியோர்கள் ஆத்மா நந்தத்தில் திளைத்திருக்கிறார்கள்.

## மணூர்

சந்த்ர பாகா எனப்படுகின்ற பீமா நதியில் - வேதவியாஸ பகவானே தன் கையால் இந்த ஆலய

ஹநுமானை பிரதிஷ்டை செய்தாராம். ஸந்நியாஸிகள் இங்கு கூடி பாஷ்ய விசாரம் செய்வார்கள்.

## மந்த்ராலயம் :

இந்த ஊரில் ஸ்ரீராகவேந்த்ரஸ்வாமிகளே தமது திருக்கரங்களால் பஞ்சமுக ஹநுமானை பிரதிஷ்டை செய்திருக்கிறார். பூஜைகள் முறைப்படி விமரிசையாக நடைபெறுகின்றன.

## அகர் கேட்

இந்த ஊரில் பீமா நதிக்கரையில் சிறு ஆலயத்தில் அமர்ந்திருக்கின்ற ஹநுமான் கர்நாடகாவில் பல குடும்பங்களுக்கு குலதெய்வமாக விளங்குகிறார்.

## தோடதாராபுரம்

தமிழ் நாட்டில் கோவை மாவட்டத்தில் உள்ள ஹநுமானைக்காட்டிலும் தாராபுர பெரியவர் மிகப் பழையவர். இவருக்கு பலபடிகளில் ஏறி அபிஷேக ஆராதனை செய்ய வேண்டியிருக்கிறது. மாத்வஸம்ப்ரதாயப்படி பூஜைகளுடன் நடக்கும் இந்த ஹநுமானுக்குத் தேர் விழாவும் உண்டு.

## பஸவங்குடி

கர்நாடகாவில் பஸவங்குடி தனிகிராமம். இங்கு ஸ்ரீவ்யாஸராயஸ்வாமிகள் ஒரு ஹநுமானைப் ப்ரதிஷ்டை செய்திருக்கிறார். தெற்கு நோக்கி இருக்கின்ற இந்த ஹநுமானின் வால் நுனியில் தங்கத்தின் வார்க்கப்பட்ட கண்டாமணி தொங்குகிறது.

## மஞ்ஜரத

ஔரங்காபாத்திலிருந்து மாஜல்காவ்(ம) என்ற இடத்திற்கு பஸ்வசதி உண்டு. அங்கிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில் இந்த அபூர்வ க்ஷேத்ரம். ஹநுமானின் தந்தையான கேஸரி என்ற வாநரராஜனுக்கு ஒரு பெண் பூனை மனைவி ஆனாள்!!! ஆச்சரியம் தான். அந்த ஊர் புராண வரலாறு கூறுகிறது. அவளுக்கு ஸ்ரீராமனிடம் சிபாரிசு செய்து ஹநுமான் மோக்ஷம் அளித்தாராம். அந்த ஊர் ஹநுமான் கோவிலில் மார்ஜாரிக்கும் ஸந்நிதி உள்ளது. பூனையைக் கொன்றால் - கொன்றால் என்ன? அதன் உடலிலிருந்து ஒரு ரோமம் உதிரும்படி யாராவது அடித்துவிட்டால் - அது பிரஹ்மஹத்தி பாபத்தை விட மிகப் கொடிய பாபம். பிரஹ்மஹத்திக்கு பிராயச் சித்தம் உண்டு. பூனை ஹத்தி பாபம் வேறு எங்கு போனாலும் என்ன தானம் செய்தாலும் தீராது. இந்த மார்ஜாரியை முறைப்படி வழிபட்டால் தான் போகும்.

*(இந்த ஆசிரியர் வாராணஸியில் இருந்த போது —ஸ்ரீகோவிந்த ராஜாராம்ஜீஜோஷீ என்ற பண்டிதர் இந்த விஷயத்தைச் சொன்னார். இப்படியும் உண்டா? என்று அவரை இவன் கேட்டார். இவர் ஒரு கதை சொன்னார்.)*

காசியில் ஒரு பிரபு. இசைகேடாக ஒரு பூனையை விரட்டினார். அது பாய்ந்த வேகத்தில் கிணற்றில் விழுந்து விட்டது. அவருடைய பாட்டி சொன்னாள். ‘‘ஐயோ இது பெரிய பாவமாயிற்றே’’ என்று கதறி அழ ஆரம்பித்து விட்டாள். பிரபுவிற்கு ஒன்றும் புரியவில்லை. காசிப் பண்டிதர்கள் பலரைக் அவர் கேட்டார். ‘‘இதற்கு பிராயச்சித்தமே கிடையாது என்று ஒரு குரலாக எல்லாரும் ஓதினார்கள். மஜ்ஜரத கிராமத்திலிருந்து வந்திருந்த பண்டிதர் - சற்று சிந்தனை செய்தார். ‘‘நம் ஊரில் மார்ஜாரி கோவில் உள்ளதே. அது கிராம தேவதைதானே! என்று சிந்தனை விரிந்தது. பிரபுவிடம் சொன்னார். ‘‘சுவடிகளை ஆராய்ந்து நாளைக்கு உங்களுக்குச் சொல்கிறேன்’’ என்றார்.

அவர் நல்ல கவிஞர் ஒரு பழைய சுவடிக்கட்டைப் பிரித்தார். அதில் ஒரு பக்கத்தில் கொஞ்சம் இடைவெளி இருந்தது. அதில் இரண்டுச் ச்லோகங்கள் எழுதினார்.

**மார்ஜார க்ஷேத்ரவாஸிந்யா:**
**மார்ஜார்யா: பஞ்சராத்ரகம்।**
**க்ஷீராபி$_4$ஷேகம் க்ருத்வாது**
**முச்யதே து$_3$ரிதாத் நர:॥**
**மார்ஜார வத$_4$ பாபஸ்ய**
**நிஷ்க்ருதி: ந அந்யத$_2$ா ப$_4$வேத்।**
**ஹநுமதோ விமாதா ஸா**
**மதா மார்ஜார தே$_3$வதா॥**

இதை எடுத்துக் கொண்டு காசியில் முக்ய பண்டிதரிடம் சென்றார். அவரிடம் உண்மையை சொன்னார்

**தவாப்யர்த$_4$ம் மமாப்யர்த$_4$ம்**
**மாவிக்$_4$நம் குரு பண்டி$_3$த**

வருமானத்தில் உமக்குப்பாதி. எனக்குப்பாதி. இடைஞ்சல் செய்யாதீர் என்றார். சுவடியை எடுத்துக்கொண்டு பிரபுவிடம் சென்றார். ப்ரபு ஆச்சரியப்பட்டார். ''உங்களுக்கு ஸந்தேஹமிருந்தால் காசியிலேயே முக்ய பண்டிதர் அவர்தான். அவரைப் போய்க் கேட்போம் வாருங்கள் என்று அழைத்துப் போனார்.

பண்டிதர் அந்த மஹாபண்டிதரிடம் அழைத்துப் போனார். விஷயத்தைச் சொன்னார் ''இப்படியா சங்கதி''நானே இதற்கு கழுவாயே சாஸ்திரங்களிலே சொல்லவில்லையே என்று நினைத்தேன். இதோ இந்தச் சுவடியிலே சொல்லியிருக்கிறதே.''

ப்ரபு கேட்டார் - ''அப்படியானால் இந்த பிராயச்சித்தம் செய்தால் போதுமா? மஹா பண்டிதர்

*சொன்னார் - சாஸ்திரம் சொல்கிறது. அப்புறம் என்ன ஸந்தேஹம்? இதைச் செய்தாலே போதும்''.*

*நிம்மதியாக அந்த பிரபு இருவருக்கும் ஸம்மானம் செய்துவிட்டு - ப்ராயச்சித்தம் செய்து கொண்டார்.*

***(2) ஸோந்யா மாருதி***

***லக்ஷ்மீ வீதியில் உள்ள இந்த ஆலயம். மூன்றடி அகலம் ஆறு அடி உயறமுள்ள மூர்த்தி. சிறு கோயில் வீதியிலிருந்து மூன்று அடி உயரத்தில் உள்ள மேடையில் அமைந்துள்ளது. மேற்கு பார்க்க நிற்கின்ற ஹநுமான்***

## மஹாராஷ்டிரத்தில் ஹநுமான்

## பூனா - குல்யா மாருதி

பொதுவாகவே மஹாராஷ்டிரத்தில் மோரேச்வர மஹாகணபதிக்குத் தான் பக்தர்கள் அதிகம். ஆனாலும் பண்டரி பக்தர்களும் தாஸபக்தர்களும் பெரும்பாலும் ஹநுமானையே கொண்டாடுவார்கள். அதற்குச் சான்றாக மஹாராஷ்டிரத்தில் கிராமங்களிலும் சிறு நகரங்களிலும் பொது மக்களிடையே ஹநுமான் வழிபாடும் மிகுந்து விட்டது.

பூனாவில் கணேச் பேட்டையில் உள்ள மாருதி புகழ் பெற்றவர். அவருக்கு குல்யா மாருதி என்று பெயர். செங்கற்களாலான ஆலயம் மிக அழகாக அமைந்திருக்கிறது. ஹநுமானுடைய மூர்த்தி ஸாலகிராம சிலையினால் ஆனது. ஐந்தடி உயரமும் இரண்டரை அடி அகலமும் உள்ளது. சிற்பியே ஹநுமானுக்கு பலவிதமான ஆபணங்களையும் பூட்டிவிட்டார். பாலபிஷேக காலங்களில் ஹநுமானின் அழகை தர்சித்து பக்தர்கள் பரவசமடைவார்கள்.

இந்த ஹனுமான் மேற்குமுகமாக நிற்கிறார். ஹநுமானின் கண்கள் பளபளவென்று உயிர்ப்புடன் கவருகின்றன. அதன் வலது புறத்தில் மஹாகணபதியும் சின்ன ஆக்ருதியுடன் கடாட்சிக்கிறார். ஸமர்த்த ராமதாஸரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இந்த ஹநுமானுக்கு முன்னால் உள்ள மஹாமண்டபத்தின் கூரையிலிருந்து நடுத்தரமான ஒரு வெண்கல கண்டாமணி இனிய நாதத்துடன் ஒலிக்கிறது. அந்த மணி கி.பி. 1778ல் நிறுவப்பட்டது.

### (2) ஸோந்யா மாருதி

லட்சுமி வீதியில் உள்ள இந்த ஆலயம். மூன்றடி அகலம் ஆறுஅடி உயரமுள்ள மூர்த்தி. சிறு கோயில் அமைந்துள்ளது. மேற்கு பார்க்க நிற்கின்ற ஹநுமான் ஏழைக் குசை மக்களின் ஸேவைக்காகவே மிக சுலபராக தர்சனம்

அளிக்கிறார். அதற்குப் பக்கத்தில் தெருவில் வாழ்கின்ற படுசுட்டிப் பையன்கள் பத்து அங்குல உயரத்தில் ஹநுமானை வைத்து ஸிந்தூரமிட்டு - பஜனை செய்கிறார்கள். அந்த மூர்த்தி தான் மூல மூர்த்தி என்பார்கள் வயதானவகள்.

## ஸஜ்ஜன்கட்

ஸதாராவிலிருந்து பத்து கிலோமீட்டர் தூரத்தில் அமைந்துள்ள ஸஜ்ஜன்கட் என்ற சிறு குன்றை - சிவாஜி ஆட்சிக்கு வந்தவுடன் ஸ்ரீஸமர்த்த ராமதாஸரின் விருப்பப்படி செயல்பட்டு வாஸஸ்தலமாகச் செய்து கொடுத்தார். ஸமர்த்தர் ஆயுள் முடிவில் அங்கு தான் தங்கியிருந்து -ஸமாதி அடைந்தார். இங்குள்ள ஸமர்த்தரின் மடம் விஸ்தாரமானது. இங்கு தான் ஸ்ரீஸமர்த்தர் தஞ்சாவூரில் தன் கருத்துப்படி தயாரிக்கப்பட்டு வந்த - ஸ்ரீராமலட்சுமண ஸீதாதேவி ஹநுமான் மூர்த்திகளை - கோலாஹலமாக பிரதிஷ்டை செய்து அடுத்த இரண்டு நாட்களிலேயே ஸித்தியிடைந்தார். ஸ்ரீராமன் ஆலயத்தில் அடித்தளத்திலேயே -ஸமர்த்தரின் ஸமாதியும் உள்ளது. பத்து பனிரெண்டு படிகள் இறங்கி ஸமாதி தர்சனம் செய்யலாம்.

## ஸ்ரீஜரண்டேச்வர

பூனா ஸதாராமார்க்கத்தில் ஸதாரா ரோட் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மூன்று கிலோமீட்டர் தூரத்தில் ஜரேண்டேச்வரர் மலை. அங்குள்ள ஹநுமான் ஆலயம் மிகப் பழமையானது. புகழ் பெற்றது.

மலையைச் சுற்றியுள்ள ஜாம்(வ்), மாஹு கோரேகாவ்(ம்) பாடலி, என்ற நான்கு ஊர்களிலிருந்து இந்த மலை மீது ஏறுவதற்கு வழிகள் உள்ளன. இங்குள்ள மாருதி ஸ்வயமே உண்டானவர். கோவில் சிறியது. அழகானது. ஆனால் முன் மண்டபம் தான் சிதிலமாகி இருந்தது. இப்போது செப்பனிடப்பட்டு விளங்குகிறது. இங்கு சிவாஜியின் ஏற்பாட்டினால் ஹநுமானுக்கு குடை சாமரம் முதலிய

உபசாரங்கள் தினம் தோறும் நடைபெறுகின்றன. அடுத்தாற் போல ஸ்ரீராமன் ஆலயம்.

இந்த க்ஷேத்திரம் பற்றி ஒரு புராணவரலாறு உண்டு. ராமாயண காலத்தில் யுத்த பூமியில் ராவணனால் சக்தி ஆயுதம் போட்டு வீழ்த்தப்பட்ட லட்சுமணனை பிழைக்க வைத்யர் சுஷேணர் சொன்னபடி மூலிகைகள் நிரம்பிய தவளகிரிக்குச் சென்று மூலிகைகளைப் பறித்து வருமாறு அனுப்பப்பட்ட ஹநுமான் - மலையையே பிடுங்கிக்கொண்டு வேகமாகப் பறந்த போது உடைந்து வீழ்ந்த அந்த ஓஷதிபர்வதத்தின் ஒரு பகுதி இங்கே வீழ்ந்தது. இன்றும் இங்கே பல மூலிகைகள் கிடைப்பதாக -ஆயுர்வேத நிபுணர்கள் கூறுகிறார்கள்.

கோவிலின் வெளி மைதானத்தில் ஒரு மேடைமீது அமர்ந்து ஸ்ரீநரசிம்ஹர் தர்சனம் அளிக்கிறார். இந்த மேடையின் பின்புறமாக கோரேகாம்(வ) போகும் வழி கீழே இறங்குகிறது. அந்த வழியில் உள்ள ஒருகுகையில் ஸ்ரீஸமர்த்தர் வெகு நாட்கள் தவம் இருந்தார். ஜரண்டேச்வர மாருதி ப்ரத்யட்சமானார். ஸ்ரீஸமர்த்தர் சோர்வு நீங்கி புத்துணர்ச்சி பெற்றார்.

## ஸுர்ஜி அஞ்ஜந கா(வ்)ம்

விதர்ப்பப் பகுதியில் அமராவதி நகரத்திற்கு மேற்கே இருபது கிலோ மீட்டர் தொலைவில் இந்த கிராமம். கிராம எல்லையில் சஹாநுார் நதி ஓடுகிறது. அதன் கரையில் தேவநாத மடம். கி.பி.1770 - 75 ஆண்டுகளில் **ஸ்ரீ தேவநாதமஹாராஜ்** - என்ற மஹா புருஷர் இங்கு ஸாதனை புரிந்து கொண்டிருந்தார். அவர் **மஹாபலி ஆஞ்ஜநேயரை** உபாஸித்து வந்தார். அவரே ஹநுமானுடைய அவதாரம் தான் என்று பெரியோர்கள் கொண்டாடுவார்கள்.

பக்கத்தில் உள்ள -**ஏகநாத் மஹாராஜ்** அவர்களின் பீடத்தில் அதிபதியாக இருந்த **ஸ்ரீகோவிந்த நாத மஹாராஜ்** ஸ்ரீதேவநாதமஹாராஜ் ஹநுமானின் ஆவேசம் பெற்றார். அந்த

மடத்தில் ஸ்ரீஆஞ்ஜநேயர் பிரஸந்தமாக இன்றும் அருள்பாலிக்கிறார்.

## ஸாங்கரீஜி

ஸாங்க்லீ ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 3 கிலோ மீட்டர் துரத்தில் க்ருஷ்ணா நதிக்கரையில் விஷ்ணு காட் - என்ற நதிக்கரையில் ஹநுமானின் தபோவனம் உள்ளது. கிழக்குப் பார்த்த ஹநுமான் ஸந்நிதி. எதிரே கிருஷ்ணா நதி. இந்த மூர்த்தியை ஸ்ரீஸமர்த்த பஞ்சாயதனத்தில் ஐவரில் ஒருவரான ஸ்ரீஆனந்த் மூர்த்தி பிரதிஷ்டை செய்தார். ஐவரில் மற்ற நால்வர் ''ஸ்ரீ ஸமர்த்தர், ஜயராமஸ்வாமி, - ரங்கநாதஸ்வாமி, கேசவஸ்வாமி, இவர்கள்.

## அஷ்டே

ஸாங்க்லியிலிருந்து பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவில் அஷ்டா ஸ்தலம் உள்ளது.

அங்கு ஆகாயத்தில் நிமிர்ந்து தெற்கு நோக்கிய ஹநுமான் ஐந்தரை அடி உயரம் மூன்றரை அடி அகல பீடத்தில் நிற்கின்றார். ஹநுமானின் வலது கை இடுப்பைத் தொட்டுக்கொண்டும் இடது கை அபயமளித்துக்கொண்டும் தீரமான பார்வையுடன் விளங்குகிறது. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னாலேயே எழுந்த ஆலயம் - பக்கத்து கிராமங்களில் உண்டான ஆலயங்களுக்கெல்லாம் மூத்தது என்று கூறுவார்கள். இருநூறு அடிச் சதுரமான இந்த ஆலயம் முழுவதும் கருங்கல் திருப்பணி. கோபுரமில்லாத மண்டபமாக உள்ளது. பதினான்கு வாரங்கள் விரதமிருந்து பிரதட்சிணம் செய்து - பஞ்சுத்திரி மாலை சாத்துவது இந்த ஊர் வழிபாட்டு முறை.

## பெல்காம்

இந்த ஊரிலிருந்து எட்டு கிலோமீட்டர் தொலைவில் ஸ்ரீமால மாருதி ஆலயம். தானே உண்டான இந்த ஹநுமானை

தர்சிக்க சிலகாலம் விரதம் எடுத்துக் கொண்டு பிறகு தர்சனம் செய்ய வேண்டிய முறையில் பக்தி செலுத்துகிறார்கள். ஆங்காங்கு மண்டலி அமைத்து ராம நாம கீர்த்தனம் செய்து விரதம் இருப்பார்கள்.

நகரத்தின் நடுவில் மாருதிகளியில் ஸ்ரீஹநுமானுடைய தேவஸ்தானம் மிகப்பெரிது. சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட கோயில். வலது புறமும் இடது புறமும் சிவலிங்கங்கள். தென்கிழக்குப் பகுதியில் பஞ்சமுக ஹநுமான் சிறு மூர்த்தி. ஸாலகிராம சிலையில் வடிக்கப்பட்டது. தெற்கு நோக்கி நிற்கிறார்.

பீஜபூர்ஸுல்தான் இந்த ஹநுமானை வேண்டிக் கொண்டு தம்சங்கடங்கள் தீர்ந்ததால் விளை நிலங்களை மான்யமாக அளித்திருக்கிறார்.

## சண்டகாபுரம்

குல்பர்காவிற்குச் சற்று தூரத்தில் வெட்ட வெளியில் சுமார் இருபது அடிஉயரமுள்ள வீரஹநுமான் - வெகுதூரத்திலிருந்தே தரிசிப்பவர்களுக்கு அருள் பாலிக்கிறார்.

பாராமதீ, மலத, குவைட, இந்த மூன்று கிராமங்களுக்குச் செல்லுகின்ற பாதை கூடுமிடத்தில் ஒரு மாருதி ஆலயம். குணவட மாருதி என்றும் மலத மாருதி என்றும் -ஊர் பேரால் உறவு கொண்டாடி வழிபடுகிறார்கள். பூனாவிலிருந்து எளிதாக வரலாம். இந்த ஆலயத்தில் கிழக்கு முகமாக இரண்டடி உயரத்தில் ஒரு கையில் கதாயுதத்தை ஊன்றிக் கொண்டு - மறுகையினால் அபயம் அளிக்கிறார். கோவிலுக்குப் பக்கத்தில் உள்ள அரசமரத்தடியில் உள்ள புற்றில் வெகுகாலமாக வாழும் நாகப்பாம்பு எப்பொழுதாவது வெளிவந்து ஹநுமானைச் சுற்றிவிட்டு புற்றுக்குள் புகுந்துவிடும். பக்தர்கள் புற்றுக்குப்பால் வார்ப்பார்கள் - பக்கத்தில் தெற்கு நோக்கி கன்ஹா நதி ஓடுகிறது.

அடுத்த சிவாநேபர் என்றும் சிவேதர் என்றும் அழைக்கப்படுகின்ற கிராமத்தில் ஸ்ரீஸமர்த்தராமதாஸரின் அணுக்கத் தொண்டர் கல்யாண்ஜீ ஹநுமானை பிரதிஷ்டை

செய்திருக்கிறார். அவருடைய சிஷ்யர் ஸ்ரீராமாநந்தஸ்வாமி -

சுற்றி பெரிய ஆலயம் எழுப்பினார். அங்கே ஸீதாலட்சுமண ஸமேத ஸ்ரீராமனுக்கு ஆலயம் எழுப்பினார். பக்கத்திலேயே அவருடைய ஸமாதி இருக்கிறது.

**மலத மாருதி** - கோவிலிலிருந்து ஒரு சுரங்கப்பாதை நேரே இந்த ஸ்ரீராம ஆலயத்தில் கொண்டு விடுகிறது. கெட்ட பழக்கமுடையவர்கள் இந்த ஆலயத்தை நெருங்கவே பயப்படுவார்கள். பல நாட்கள் விரதம் இருந்து தர்சனம் செய்பவர்கள் கூட இரண்டொரு நாட்களுக்கு மேல் தங்க மாட்டார்கள்.

நள்ளிரவு பனிரெண்டு மணிமுதல் காலை - நான்கு மணி வரை ஒவ்வொருநாளும் இங்கே மெல்லிய ஓசை கேட்கும் என கிராமத்தார் கூறுவர். இந்த மாருதி ஆலய மத்தியிலிருந்து ஒரு சுரங்கப்பாதை ஸ்ரீராமன் கோவிலில் கொண்டு விடும். வடக்கு முகமாக இந்த ராமன் வெள்ளைச் சலவைக் கற்களில் வடிக்கப்பட்டவர். பக்கத்தில் **தாஸமாருதி** ஸேவைக்குக் காத்திருக்கிறார். இரவு தேவர்கள் வந்து பனிரெண்டு மணிமுதல் மூன்று மணி வரை பூஜை செய்வதாக ஐதீகம். சாம்பிராணிப் புகை மணமும் மெல்லிய குரலில் ராம நாமமும் பரவும். ஸ்ரீராமா நந்த ஸ்வாமியே ஸமாதியிலிருந்து எழுந்து வந்து பூஜை செய்கிறார் - என்றும் கூறுவார்கள்.

## ஸாம்பகா(வ்)ம்

ரஹிமத்புரத்திலிருந்து இரண்டரை மைல் தொலைவில் ஸ்ரீமாருதி ஆலயம் உள்ளது. மிகப்பழமையானது. வரலாறு பெற்றது.

இந்தக் கோயில் உள்ள இடத்தில் வெகுகாலம் முன்பு இது பசுக்களின் மேய்ச்சல் பூமியாக இருந்தது. காட்டுக்குள் பாம்புப்புற்று இருந்தது. கிராமம் எட்டியிருந்தது. அங்கு ஒரு கோனாரின் பசு பால் சுரக்க மறுத்தது. கோனார் நினைத்தார். ''எவனோ நமக்குத் தெரியாமல் பசுவைக் கறந்து பால் கொண்டு போகிறான்!!'' பசுவைக் கண் காணித்தார். பசு -ஒரு பாம்புப் புற்றின்மீது பாலைச் சுரந்தது கோனார் பாம்பைக் கொன்றுவிடலாம் என நினைத்தார்.

அந்த நாகம் கோனார் கண்களில் படுவதே இல்லை. ஒரு நாள்கனவு கண்டார். ஹநுமான் தர்சனம் அளித்தார். இங்கு நான் இருக்கிறேன். இங்கு எனக்கு ஆலயம் எழுப்பு'' என்று ஆணை பிறந்தது. கோனார் கோவில் கட்டினார். மக்கள் பக்கத்திலே வீடுகட்டிக் கொண்டார்கள். இன்று ஸர்ப்ப ஹநுமானும் கிராமமும் பிரபலமாகி விட்டது.

## அம்பாசரீ

நாக்பூரியிலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிள் உள்ள மலையில் மிகப்பழமையான விசாலமான ஹநுமான் ஆலயம். மக்கள் வேண்டுவனவெல்லாம் அருளுகின்ற இந்த ஆலயம் - எப்பொழுதும் பக்தர்களின் ஆதரவு பெற்று வருகிறது.

## கந்ஹேரி

பூநா ஸதாரா மார்க்கத்தில் சிரவல்லிலிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில் ஹநுமான் ஆலயம். இது பாண்டவர்களால் கட்டப்பட்ட கருங்கல் திருப்பணி. இங்கே வாஸுதேவ் ஸ்வாமி எனப் புகழ்பெற்றஸாதுவின் ஸ்ரீராம மடம் உள்ளது. அங்கு ஸ்ரீராமனுக்கு கோவில். ஸமர்த்தரின் சிஷ்யரான இந்த வாஸுதேவஸ்வாமி மிகச் சிறந்த புலவர்.தன் கர்வமெல்லாம் அடங்கி ஸமர்த்தரின் அடிபணிந்தவர். பூர்வாச்ரமத்தில் இவர் பெயர் ஸதாசிவசாஸ்த்ரீ மேவ்லேகார்.

இந்த வாஸுதேவஸ்வாமி ஸமர்த்தரின் ஆணைப்படி இந்த ஹநுமான் ஆலயத்தில் ஸ்ரீராம நாமகீர்த்தனம் செய்து ஸித்தியடைந்தார்.

## கேட

ஆலந்திக்கு அருகே உள்ள கிராமம். கிராமத்து எல்லையில் ஹநுமான் மந்திர். ஐந்தடிஉயரமுள்ள ஹநுமானின் சிரஸில் ஒரு முளை அடிக்கப்பட்டிருக்கிறது. முன்பு இந்த ஹநுமான் ஒன்றரை அடி உயரத்தில் ஒரு மேடையில் இருந்தார். இவருக்கு ஒரு கோயில் கட்டலாம் என்று கிராமத்தார் ஆரம்பித்தனர். கோவிலின் சுவர் எழும்பி - மேலே தளவரிசை போட ஆரம்பித்தால் அந்த உயரத்தில் ஹநுமானின் தலை முட்டியது மேலும் சுவர்களை உயர்த்தினர். ஹநுமான் மேலும் உயர்ந்தார். செய்வதறியாமல் மக்கள் ஹநுமானை வேண்டினார்கள். ஒரு கல்தச்சர் யாரும் அறியாமல் ஹநுமானின் சிரம் மீது ஒரு முளையை இறுக்கி விட்டார். பிறகு ஹநுமானின் பாதங்களில் வீழ்ந்தவர் எழுந்திருக்கவே இல்லை. ஹநுமான் மேலும் உயரவில்லை. பக்தர்கள் மகிழ்ந்து கோவில் கட்டி முடித்தனர். விழா எடுத்தனர்.

## புலஸா

அமராவதி மாவட்டத்தில் மோசீதாலுக்காவில் - பேல் நதிக்கரையில் உள்ள இந்தக் கிராமத்தில் அந்த நதிக்கரையிலேயே ஹநுமான் மந்திர். ஹநுமான் ஐந்தடி உயரத்தில் இடது கையில் கதாயுதத்தை ஊன்றிக்கொண்டு மறுகையால் வரமளிக்கிறார். கி.பி.1908ல் இந்த மூர்த்தி அந்த நதியிலேயே உருண்டுவந்து கிடைத்தது. அதை கிராமத்தில் நடுவில் பிரதிஷ்டை செய்யலாமென விரும்பினர் மக்கள். ஹநுமான் நகரவில்லை. பிறகு நதிக்கரையிலே பத்தடி உயரத்தில் மேடை கட்டினர். இரவு கிராமம் திரும்பிய மக்கள் மறுநாள் காலை வந்து பார்த்தால் அந்த மேடை மீது ஹநுமான்

ஏறி நிற்கிறார். முதல் நாள் நூற்றுக்கணக்கான மக்கள் கூடி ஹநுமானை நதிக்கரையிலிருந்து புரட்ட முடியாமல் கஷ்டப்பட்டனர். மறுநாள் காலை ஒரு க்ரேன் கொண்டு வந்து ஹநுமானை எழுந்தருளப் பண்ண வேண்டும் - என்று திட்டம் போட்டனர். ஆனால் ஆச்சரியம் ஹநுமான் க்ருபையோடு தானே மேடைமீது நிற்கிறார். கோவில் கட்டப்பட்டது.

பிறகு சில நாட்கள்- ஹநுமான் மெய்சிலிர்ப்பது போல காட்சியளித்தார். அந்த ஹநுமானிடம் பரமவாத்ஸல்யத்தோடு ராமநாம கீர்த்தனம் செய்து பாடுகிறார்கள்.

## பாணகா(வ்)ம்

புவேஸ்வாமிகளின் இந்த கிராமம் **வாஸு தேவா நந்தஸரஸ்வதீ ஸ்வாமிகள் ஸ்ரீ டேம்பே ஸ்வாமிகள்** - இவர்களின் பிறப்பிடம் என்ற பெருமை பெற்றது. இங்கு டேம்பேஸ்வாமிகளால் எழுப்பப்பட்ட **தத்தாத்ரேய மந்திரம்** இதற்குள்ளேயே கோவிலுக்கு முன்னால் அரசமரத்தடியில் ஸ்ரீஆஞ்ஜநேயர் புவா அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஹநுமான் விளங்குகிறார். சின்ன மூர்த்தியாக இருந்தபடியால் விஷமிகள் பெயர்த்துப் போட்டு விட்டனர். ஸ்ரீடேம்பே ஸ்வாமிகள் அதற்கு சுற்றிவர கிராதி கட்டினார். **ஸ்ரீஆஞ்ரேகா புவா** ஆவேசம் வந்தால் ஒரு மரத்தின் மீதிருந்து மற்றொரு மரத்தின் மீது தாவுவார். ஹநுமானுக்குப் பூசிய ஸிந்தூர வெண்ணையை பிரஸாதமாக அருந்துவார். ஸ்ரீடேம்பே ஸ்வாமிகளின் மீது அபார கருணை. ஆலயப் பொறுப்பையும் அவரிடமே ஒப்புவித்தார்.

## ராமபயாவலீ

பண்டாரா மாவட்டத்தில் துமஸரிலிருந்து வாராசிவாநீ போகும் வழியில் **சநயீ** நதிக்கரையில் பழமையான ஸ்ரீராமன் ஆலயம் -அதற்கடுத்தாற் போல அதைக்காட்டிலும் பழமையான ஹநுமான் அலயம். இங்கு

தான் ஸ்ரீராமன் சபரீக்கு மோக்ஷம் அளித்தார். ஸ்ரீராமன் திருவடிகள் அந்தக் கிராமத்தைத் தொட்டதால் தான் ராம பயாவலி - என்று அதற்குப் பெயர். இங்குள்ள ஹநுமானுக்கு ஒரு கால் நொண்டி - மற்ற கால் பூமியில் புதைந்திருக்கிறது. ஏன் இப்படி? என்று தோண்டிப் பார்த்தார்கள். ஒரு புலனும் கிடைக்கவில்லை. அதனால் இவர் பெயர் **லங்கடா ஹநுமான்** என்கிற பழக்கத்திற்கு வந்துவிட்டது. ஆனால் வேண்டுதல் செய்பவர்களுக்கு எல்லோருக்குமே காரியங்கள் ஸித்தி ஆகும்.

## மாலசிரஸ்

இது ஷோலாப்பூர் மாவட்டத்தில் உள்ளது. இங்குள்ள மாருதி மந்திர் மிகவும் செல்வாக்கு உடையது. நாலரை அடி உயரமுள்ள ஹநுமான் மிகவும் வரப்பிரஸாதி.இந்த ஊரின் கிராமாதிகாரி ஹநுமானிடம் ஆழ்ந்த பக்தி உடையவர்.

ஒருசமயம் மேலதிகாரி இவரிடம் வந்து நள்ளிரவில் ''பால் வேணுமே'' என்று கேட்டார். வீட்டில் பாலில்லை. கிணற்றிலிருந்து ஒரு சொம்பு தண்ணீர் எடுத்து வந்து மேலதிகாரியின் லோடாவில் ஊற்றினார். அவருக்கே ஆச்சரியம் அது பாலாகி வீழ்ந்ததும். கிராமாதிகாரி கண்ணீர் விட்டார். ''ஏன்'', என்று கேட்டார் மேலதிகாரி.

''நள்ளிரவில் நான் பாலுக்கு எங்கே போவேன்? தாங்களோ பால் கேட்டீர்கள்'' தாகத்திற்கு தண்ணீராவது கொடுப்போம் என்று வழக்கம் போல ராம நாமம் சொல்லிக் கொண்டு கேணியிலிருந்து புதிதாகத் தண்ணீர் எடுத்துக் கொடுத்தேன். அது பாலாகி - தாங்கள் அருந்தினீர்கள். ஹநுமானின் கிருபை'' என்றார். அந்த மேலதிகாரி. அந்த கோவிலுக்கு தங்கக்கலசம் வைத்து கும்பாபிஷேகம் செய்தார். நித்யபூஜைக்காக - ஒரு நிதியும் ஏற்படுத்தினார். இங்கு ஹநுமத்ஜயந்தி விமரிசையாக நடக்கும்.

## நிம்பர்கீ

பண்டரிபுரம் ரயில் நிலையத்திலிருந்து அறுபது மைல் தூரத்தில் உள்ளது. இந்த க்ஷேத்திரம் கிராமத்திற்குப் பக்கத்தில் நதிக்கரையில் ஒரு அழகான கோட்டை. அதற்குள் ஸ்ரீராம ஆலயம், பக்கத்தில் ஒரு ஸ்வயம்பூ லிங்கம் - பக்கத்தில் தர்ம சத்திரங்களும் உண்டு.

நகரத்தின் நடுவில் மாருதிகளியில் ஸ்ரீஹநுமானுடைய தேவஸ்தானம் மிகப் பெரியது. சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட கோவில். வலது புறமும், இட புறமும், சிவலிங்கங்கள், தென் கிழக்குப் பகுதியில், பஞ்சமுக ஹநுமான். சிறு மூர்த்தியாக விளங்குகிறார். ஸாலக்ராம சிலையில் வடித்த இந்த மூர்த்தி தெற்கு நோக்கி நிற்கிறார். பீஜபூர் ஸுல்தான் கூட இந்த ஹநுமானை வேண்டிக்கொண்டு தம் சங்கடம் தீர்ந்ததால் விளைநிலங்களை மான்யமாக அளித்திருக்கிறார்.

## நாஸிக் பஞ்சவடி

இங்கு கோதாவரிக்கரையில் **அஹல்யா குண்டம்** என்றும் **சார்ங்கபாணி குண்டம்** என்றும் உள்ளவற்றின் இடையே - ஒரு ஆலயத்தில் **இரண்டு முக ஹநுமான்** தர்சனம் அளிக்கிறார். எட்டடி உயரமுடைய இந்த மூர்த்தியின் ஒரு முகம் கிழக்கு நோக்கி மற்றது மேற்கு நோக்கி. வாசற்படி கிழக்கு நோக்கித்தான். ஒரு கையில் கதாயுதம் மறுகை தலைக்குமேலே தூக்கி அருள்கிறது - காலில் அபஸ்மார புருஷன் மிதிபடுகிறார். எதிரே **ஹநுமான் குண்டம்.**

## த்ர்யம்பகேச்வரம்

நாஸிக்கிலிருந்து இருபத்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள க்ஷேத்ரம் பனிரெண்டு ஜ்யோதிர் லிங்க க்ஷேத்ரங்களில் ஒன்று. ரத்ன கிரியில் உற்பத்தியான கோதாவரி நதி இங்கே தரையை எட்டுகிறது. இறங்கும் படிகளின் வலது

*புறத்தில் ஒரு சிறிய ஹநுமான் மந்திர். இந்த ஹநுமானுக்கு பத்து ஆயுதங்கள் தாங்கிய பத்துகைகள் (பொதுவாக பஞ்சமுக ஹநுமானுக்கு பத்துக்கைகள் உண்டு. இங்கே ஒரே முகமான ஹநுமானுக்குப் பத்துக்கைகள்.)*

## மும்பை

*கணக்கற்ற ஹநுமான் ஆலயங்கள் அவற்றிலே குறிப்பிடத் தக்கவை நான்கு.*

***(1) கேல்கர் மார்க்கமும் போலேமார்க்கமும் கூடுமிடத்தில் ஒரு அழகான ஹநுமான் மந்திர். இந்த இடத்தில் முன்பு மிகப்பெரிய ஆலமரம் இருந்தது. அதன் நிழலில் ஹநுமான் பிரஸந்நமாக இருந்தார். ஆலமரம் பட்டுப்போய் விட்டது. ஹநுமான் ஆலயம் எழுந்து விட்டது.***

*கி.பி.1935ல் இந்த ஆலயத்திற்கு ஒரு அறக்கட்டளை ஏற்பட்டது. முன்பிருந்த சிலா விக்ரஹம் பழுது பட்டிருந்ததால் அதற்கு பதிலாக அதே உயரத்தில் வெள்ளிபிரதிமை பிரதிஷ்டை ஆயிற்று. சுற்றுப்புறத்தில் மற்ற தெய்வங்களுக்கும் மூர்த்திகள் பிரதிஷ்டை ஆயின.*

## (2) பிகெட் ரோட்டில்

*இங்கு ஒரு ஹநுமான் கர்ப்பக்ருஹத்தில் மூர்த்தி வெள்ளி கவசம் பூண்டது. ஒவ்வொரு சனிக்கிழமையிலும் பக்தர்கள் கூட்டம் அதிகம் -பம்பாய் நகர தேவதையான மும்பாதேவியின் ஆலயத்திலும் ஒரு ஹநுமான் ஸந்நிதி உள்ளது.*

## (3)மாதுங்கா

*தாதர் படாலாசாலையில் மும்பை பஸ்டிப்போ அருகில் ஸ்ரீஅலபோ ஹநுமான் என்ற புகழுடன் விளங்குகிறார். முன்னூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் எழும்பிய இந்த ஆலயத்தில் உள்ள ஹநுமானை -ஹிந்துக்கள்*

மட்டுமல்ல முஸ்லிம்கள் சீக்கியர்கள் க்ருஸ்துவர்களும் கூட வழிபடுகிறார்கள். வேண்டியவுடன் கைமேல் பலன் தருகிற கருணாமூர்த்தி - என்று எல்லோரும் கொண்டாடுகிறார்கள்.

## (4)ஹநுமான் டேகரீ

சாந்தாராம் தடாகத்தின் முன்னர் -உள்ள இடத்தில் ஸங்கட மோசந விஜய ஹநுமான் டேகரீ என்ற ஆலயம் விஸ்தாரமானது. இது கி.பி.1942ல் எழுந்தது. இங்கு பிரார்த்தனை செய்து கொண்டு பக்தர்கள் அன்னதானம் செய்கிறார்கள்.

இன்னும் பல ஆலயங்கள் ஹநுமானுக்கு மும்பையில் உள்ளன. ஆங்காங்கு சேரிகளாக ஏழைகள் வாழ்கின்ற தகரக் கொட்டைகள் நெருக்கமான இடங்களில் கூட ஹநுமானுக்கு இடமளித்து வழிபடுகிறார்கள். ஸமர்த்தரின் காலத்திலிருந்தே வெகு வேகமாகப் பல ஆலயங்கள் திடீர் திடீரென்று தோன்றும். கோலாஹலமாக விழாக்கள் நாம கீர்த்தனங்கள் - பெரிய டோல் முழுக்கத்துடன் நடைபெறும். அவற்றில் ஹநுமானின் எங்கும் நிறை பரம் பொருட் தன்மை - எளியவர்க்கும் அநுபவ சாத்யமாயிற்று என்பது தான் விசேஷம்.

ஸமர்த்தராம தாஸர் எழுப்பிய ஹநுமான் மந்திர்கள்.

முஸ்லிம்களின் ஆக்கிரமணத்தினால் அரசுகள் எல்லாம் ஒற்றுமைகுலைந்து எதிர்த்துப் போரிடாமல் பணிந்து ஒடுங்கிவிட்டநிலையில் மக்கள் கொடுமைக்கு ஆட்பட்டு - என்ன செய்வதென்று அறியாமல் திகில் பட்டுக் கொண்டிருந்த வேளையில் -ஸமர்த்த ராம தாஸர் கிராமங்களிலும் நகரங்களிலும் ஆயிரத்து நூறு ஹநுமான் ஆலயங்களை எழுப்பினார். ஹநுமானை ராம நாம கோஷம் செய்து மகிழ்வித்து அவருடையக்ருபையால் முஸ்லிம்களை எதிர்த்துப் போராட மன வலிமை பெற்று தைரியமாக எழுந்து

*மேலும் முஸ்லிம்களை ஆக்ரமணம் செய்ய முடியாதவாறு தடுத்து நிறுத்தினார். முக்கியமாக 11 க்ஷேத்ரங்களில் பிரதிஷ்டை செய்தார்.1.சஹாபூர், 2.மஸூர் 3.சாபலில் இரண்டு மூர்த்திகள் வீர ஹநுமான் விநய ஹநுமான் 5.உம்வ்ராஜ் 6.சிராளே, 7.மநபாடலே, 8.பாரகாவ்(ம்) 9.மாசகாவ்(ம்)10.சிங்கனவாடி, 11.போரகாவ்(ம்) இவைபற்றிய விஸ்தாரம் இவ்வாசிரியர் எழுதியுள்ள ஸமர்த்த ராம சரிதத்தில் காணலாம்.*



## மத்ய பிரதேசத்தில் ஹநுமான்

**உஜ்ஜயிநி** (அவந்தீ) பனிரெண்டு ஜோதிர் லிங்கங்களில் ஒன்றான **மஹாகாளேச்வரரின்** க்ஷேத்திரம். சிப்ரா நதி அதன் கீழ்கரையில் **ரணஜித்,** மேல் கரையில் **கிர்நாரீ** - மாசி மாதம் கிருஷ்ணபட்சம் அஷ்டமியில் இந்த இரண்டு ஹநுமான் ஆலயங்களிலும் பெரும் விழா நடைபெறும். ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் நடைபெறும். இங்கு ஸமர்த்தராம தாஸர் **கார்த்திக சௌக்** என்ற இடத்தில் **ஜயவீர ஹநுமானைப்** பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

**படே கணேச்** - என்ற மஹாகணபதி ஆலயத்தின் அருகில் பஞ்சமுக ஹநுமான் ஆலயம் உள்ளது. ஹநுமத்கவசம் என்ற நூலில் குறிப்பிட்டபடி தெற்குப் பார்க்க வாநரமுகமும் வடக்குப் பார்க்க நரஸிம்ம முகமும் மேற்குப் பார்க்க கருடமுகமும் கிழக்குப் பார்க்க வராஹமுகமும் மேலே பார்க்க குதிரை முகமும் உள்ளன. இங்கு லிங்கம் பூரம் முதலிய இயற்கைதாதுக்களைப் பிசைந்து தயாரிக்கப்பட்ட ஓஷதி ஹநுமானும் இருக்கிறார். இவருடைய அபிஷேக தீர்த்தம் அருந்தினால் தீராத வியாதி கிடையாது.

**நீலகங்கா ஹநுமான்**- உஜ்ஜயினி ரயில் நிலையத்தின் தென்புறத்தில் ஒரு நீர்க்குட்டை. அதன் கரையில் ஹநுமான், ஸ்காந்த புராணம் அவந்தீ கண்டம், அஞ்ஜநி தேவியும் ஆஞ்ஜநேயனும் இங்கு தவமிருந்தார்கள் என்று கூறுகிறது. பகீரதன் அழைத்து வந்த கங்கை - பக்தர்களின் பாபங்கள் தன்னிடம் கரைந்ததால் - நீலவர்ணமாகி விட்டது. பிரஹ்மதேவன் - அந்த நீலகங்கையை இங்கு போய் சிப்ரா நதியில் ஸ்நானம் செய்து தூய்மை பெறுமாறு ஆணையிட்டார். அந்த தீர்த்தத்தின் அதிபதி ஹநுமான்.

### தார் (தாரா நகரம்)

போஜமஹாராஜன் ஆண்டுவந்த நகரம். இதிலிருந்து இருபது கி.மீட்டர் மஹூரயில் நிலையம். இங்கிருந்து

நாற்பத்தைந்து கி.மீட்டர் தொலைவில் **தாராநகரம்**. இங்கு கும்ஹார்பாவடியில் **ஸித்தேச்வர ஹநுமான்** வடக்குப் பார்த்து நிற்கிறார். ஸ்ரீராமனின் ஸேவையில் ஈடுபட்ட ஹநுமான் அடிக்கடி இங்கு வந்து ராம நாமம் ஜபித்து தமது ஸித்தியை (திறமையை) வளர்த்துச் கொண்டார். **ஸித்த பீடம்** என்று பெயர். ஆவணி மாதத்தில் இந்த ஹநுமான் சிறு பாலகனாக தர்சனம் கொடுப்பார். அப்போது தொட்டிலிட்டு ஹநுமானுக்கு டோலோத்ஸவம் செய்வார்கள்.

## கண்ட்வா ஓங்காரேச்வர்

இங்கு நர்மதைக் கரையில் **ஒங்காரேச்வர்** பனிரெண்டு ஜ்யோதிர் லிங்கங்களில் ஒருவர். இதன் கரையில் ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரியர். ஒரு குகையில் தமது குருவான கோவிந்த பகவத் பாதரை முதன்முதலில் தரிசித்தார். அந்த குகை இன்றும் உள்ளது. இந்த நர்மதைக்கரையில் ஹநுமான் நிம்மதியாகப் படுத்துக்கொண்டு தர்சனமளிக்கிறார் **சயநஹநுமான்** ஆலயம் உள்ளது.

## டீகம்கட்

இங்குள்ள மாவட்ட கலெக்டர் ஆபீஸுக்கு அருகே - ஹநுமான் சாலீஸா உயர்ந்த ஸ்தம்பத்தில் செதுக்கப்பட்டுள்ளது. நாற்பது அடி உயரமுள்ள அந்த ஸ்தம்பத்தை சுற்றிச்சுற்றி இருநூற்று ஐம்பது படிகள் கொண்ட பாதை மேலே ஏறுகிறது. ஏறிச்சென்றால் உச்சியில் அழகான ஹநுமான் தர்சனம் அளிக்கிறார். அதன் பக்கத்தில் அந்த ஊர் அரசர் **வீரஸிம்ஹ மஹாராஜா** ஹநுமான் ஆலயம் எழுப்பினார். இந்த விசித்திரம் வேறெங்கும் காணக் கிடைக்காது.

## பாகாவ்(ம்)

டீகம் காட்டிலிருந்து இருபது கி.மீட்டர் தொலைவில் உள்ள இந்தப்பெரிய கிராமத்தில் ஒரு பெரிய அரசமரத்தடியில் ஸ்வயம்பு (தானே உண்டான)ஹநுமான்.

ஒரு சரணம் தலைக்கு மேலே உடலை ஒட்டி முன்புறம் எழும்பி நிற்கிறது. மற்ற சரணம் பூமியிலே ஆழத்தில் பாதம் படிந்துள்ளது. சிலர் அங்கு பூமியைத் தோண்டிப் பார்த்தார்கள். நாற்பத்து ஐந்து அடி தோண்டியும் பாதத்தைக் காணமுடியவில்லை. அர்ஜுநனுக்கு விச்வருபம் காட்டிய பகவானை த்யானம் செய்து கொண்டிருந்த ஹநுமான் - இப்படி வளர்ந்துவிட்டார் - என்று கூறுவார்கள்.

## ததியா

ஜாந்ஸியிலிருந்து 20 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இதன் அருகில் உடநூ டோரியா என்ற மேடு உள்ளது. அந்த மேட்டில் ஹநுமான் ஆலயம். சுற்றிக் கோட்டையும் உள்ளது. சுமார் முன்னூற்றைம்பது படிகள் ஏறினால் ஹநுமான் ஆலயம் தெரிகிறது. ஆவணி மாதம் சுக்லத்ருதீயை இங்கு தர்சனம் விசேஷம். பெரும் கூட்டம் சேரும்.

கிராமத்தில் மற்றொரு ஹநுமான் ஆலயம் உண்டு.

## காடகோடரா

ஜாந்ஸீ மாவட்டத்தில் உள்ள கிராமத்தில் **பாஹுவீர**

**பஜ்ராங்க ஹநுமான்** ஆலயம் ஐந்தடி உயரமுள்ள இந்த ஹநுமானின் ஒரு லீலை. ஹநுமானின் ஒரு கை தலையைக் தொட்டுக் கொண்டிருந்தது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நீண்டுதொங்க ஆரம்பித்து கி.பி.1953ல் அப்படியே தொங்கிவிட்டது. இதன் நினைவாக சித்ராபூர்ணிமை அன்று ஒரு பெரிய விழா கொண்டாடப்படுகிறது.

## கதா

ஜான்ஸியிலிருந்து 2 கி.மீட்டர் தொலைவில் தஸான் நதிக்கரையில் உள்ள கிராமம். இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இங்கே ராமாயண ப்ரவசனம் செய்து கொண்டிருந்த பாதவ வம்சத்தைச் சேர்ந்த ஒரு பெரியவருடைய கனவில் ஹநுமான் தோன்றி. ''பிரவசன

*மேடையின் கீழே நான் இருக்கிறேன். எனக்கு ஒரு ஆலயம் கட்டுவாயா?'' என்று கேட்டார். கிராமத்தினர் சேர்ந்து அந்த இடத்தைத் தோண்டினார்கள். 20 அடி தோண்டியபோது ரத்தம் பீறிட்டு அடித்தது. மண் வெட்டிகளைப் போட்டுவிட்டுக் கைகளாலே தோண்டினார்கள்.*

*அங்கு ஒரு ஹநுமான் வெளிப்பட்டார். மண் வெட்டி தாக்கின இடத்தில் இடது புறத்தில் ரத்தம் வழிந்தது - பச்சிலைகளை நெய்யில் காய்ச்சி புண்ணின் மீது தடவினார்கள். ஹநுமானுக்கு ஆலயம் எழும்பியது - அடிக்கடி நெய் அபிஷேகம் செய்கிறார்கள். ஐந்தாறு கி.மீட்டர் சுற்றளவில் அந்த ஊரில் எவரும் ஜீவஹிம்ஸை செய்வதில்லை. வேட்டையாடுவதும் இல்லை.*

## க்வாலியர்

*இந்தக் கிளை ரயில் பாதை சிவபுரியில் முடிகிறது. இங்கு பல ஆலயங்கள். நகரத்திலிருந்து 10.கி.மீட்டர் தொலைவில் **பாங்கடே ஹநுமான்** மிகவும் வரப்ரஸாதீ.*

## பிலாஸ்பூர்

*இந்த மாவட்டத்தின் இந்த முக்கிய நகரத்தில் சபரீ நாராயணன் - என்ற கோயிலுக்கு அப்பால் ஹநுமான் ஆலயம் இந்த இடத்திற்கு **ஜநகபூர்** என்றும் பெயர் உண்டு.*

*(2) இதே மாவட்டத்தில் **ரதன்புர்**. இதைச்சின்ன காசி என்பார்கள். இங்குள்ள பாடா மலை மீது அழகான ஹநுமான் ஆலயம். இங்கு மாசீ பூர்ணிமையில் நாட்டில் பல மூலைகளிலிருந்து பக்தர்கள் கூடுவார்கள். பெரிய விழா நடைபெறும்.*



# குஜராத்தில் ஹநுமான்

## ஸாரங்கபூர்

அஹமதாபாத் பவநகர் ரயில் பாதையில் போடா ஜங்க்ஷன். இங்கிருந்து பதினெட்டு கி.மீட்டர் தள்ளி ஸாரங்கபூர். இங்கு **மஹாயோகிராஜ் கோபாலாநந்தஸ்வாமிகள்** ஹநுமானை பிரதிஷ்டை பண்ணினார். தமது மந்த்ரஸித்திகளையெல்லாம் ஹநுமானுக்கே அர்ப்பணம் செய்தார். பிரதிஷ்டையின் போது மூர்த்தி சிலிர்த்து எழுந்தது. ஜயஸ்ரீராம என்று கோஷம் செய்தார். பல கி.மீட்டர் தொலைவில் உள்ள கிராமங்களில் எல்லாம் அந்த த்வனி கேட்டது. இந்த - **கஷ்ட பஞ்ஜந ஹநுமான்** பின் பல தடவை ஜயஸ்ரீராம கோஷம் எழுப்பியிருக்கிறார். ஹிந்துக்கள்மட்டும் அல்ல. முஸ்லிம்கள் கூட இந்த அதிசய ஹநுமானிடம் பக்தி பூண்டிருக்கிறார்கள்.

## அஹமதாபாத்

நகரத்தின் எல்லையில் ஸபர்மதீ நதீ ஓடுகிறது. அதன் கரையில் ஒரு பெரிய ஹநுமான் ஆலயம். இது கட்டி இருநூற்றம்பைது ஆண்டுகள் ஆகியிருக்கும். சனிக்கிழமை செவ்வாய்க்கிழமைகள் இங்கு கூட்டம் அதிகம். சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் இந்த ஆலயத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. கோவிலைச் சுற்றியுள்ள வீதிகளில் ஜனங்கள் தூங்குகிறார்கள். புரட்டாசி மாதக்ருஷ்ண சதுர்தசீ செவ்வாய்க் கிழமை இரவு பனிரெண்டு மணிக்கு ஒரு பீரங்கி குண்டு வெடித்தாற் போல பயங்கர ஓசை கேட்டது. மக்கள் கூடினர். கோயில் கதவுகள் கருவறைக் கதவுகள் எல்லாம் பூட்டப்பட்டிருந்தன. எங்கும் ஒரு மாற்றம் இல்லை. காலை ஆறுமணிக்கு பூஜகர் வந்து கருவறைக் கதவைத் திறந்தார். ஹநுமானுக்குச் சாத்தியிருந்த வெல்வெட் அலங்கார அங்கி மார்பு வரை கிழிந்து கீழே விழுந்து கிடந்தது. அங்கியைக்

கழற்றிப் பார்த்தால் மூர்த்தியில் ஒரு காயம் ஒரு கீறல் இல்லை. உள்ளாடையோடு வெகு நாட்களின் ஸிந்தூரம் படிந்து பிசுக்கென்று இருந்தது.

ஹநுமானின் சக்தியைக் கண்டு பயந்து போன ஒரு மந்திரவாதி அவருடைய சக்தியைக் குறைக்க வேண்டுமென்பதற்காக துர்தேவதையின் மந்திரம் ஜபித்து கடுமையான ஆபிசாரப்ரயோகம் ஏவியிருக்கிறார். அந்த பிரயோகத்தின் இலக்கு வேறாக இருந்தால் - ஸர்வ நாசம் ஏற்பட்டிருக்கும். ஹநுமான் அதைத் தடுக்காமல் தன் மீது பாயட்டும் என்றுகாத்திருந்திருக்கிறார். அந்த ஏவல் ஹநுமானைத் தாக்க முடியாமல் அங்கியில் பட்டு வெடித்திருக்கிறது. என்று ஒரு பெரியவர் விளக்கம் அளித்தார். அவர் கூறியபடி - ஹநுமானுடைய ப்ரீதிக்காக பல பக்தர்கள் துளஸீதாஸரின் ஸ்ரீராம சரித மானஸம் படித்து ஆராதனை செய்கின்றனர்.

## ஸூரத்

இந்த நகரத்தின் ஸ்ரீகண்டநீயா ஹநுமான் பிரசித்தி பெற்றவர். கி.பி.1854 ல் தாபீநதியில் பயங்கரமான பெரு வெள்ளம் பெருக்கெடுத்தது. ஸூரத் நகரம் வெள்ளத்தில் மிதந்தது. வெளியே போக முடியாமல் மக்கள் வீட்டுக்கூரை மீதும் மரங்கள் மீதும் ஏறிவிட்டனர். சிலர் மலைகளில் ஏறிவிட்டனர். நகரின் நடுவில் உள்ள குன்றின் மீது பலர் தொத்திக் கொண்டிருந்தனர்.

மூன்றாம் நாள் காலை -கூரை மீது ஒரு ஹநுமான் உட்கார்ந்திருந்தார். சாலை வெள்ளத்தின் மீது ஒரு ஹநுமான் பிரதிமை மிதந்து வருவதைப் பார்த்தனர். ஹநுமான் காலில் ஒரு கல் உரல் கட்டப்பட்டிருந்தது. அவ்வளவு கனம் உள்ள அந்த மூர்த்தி எப்படி மிதந்து வந்தது? அனைவரும் வியந்தனர். ஹநுமானை மெதுவாக ஒரு மொட்டை மாடியில் ஏற்றினர். வெள்ளம் வடிந்தது. பக்கத்து ஊர் ஜனங்கள் தமது

ஊர் ஹநுமான் கருங்கல் பிரதிமை வெள்ளத்தில் மிதப்பதைப் பார்த்து. அதன் போக்கைத் தடுப்பதற்காக கல் உரலைக் கட்டினார்களாம். ''அதையும் தூக்கிக் கொண்டு ஹநுமான் உங்கள் ஊருக்கு வந்திருக்கிறார். ஹநுமான் இஷ்டம். உங்கள் அதிர்ஷ்டம்'' என்றனர். உடனே குடிசை ஒன்றில் பிரதிஷ்டை செய்து விட்டனர். நகர மக்கள் எத்தனை வேண்டியும் குடிசை வாழ்மக்கள் அதனை இடம் மாற்ற இணங்கவில்லை.

கி.பி.1872ல் ஸூரத்தில் மறுபடியும் பெரிய தீ விபத்து நிகழ்ந்தது. பல குடிசைகள் தீக்கு இரையாகின. ஆனால் ஹநுமான் வீற்றிருந்த குடிசையின் வாசல் குப்பை கூட பற்றிக் கொள்ளவில்லை. மூங்கில்கள் அப்படியே பளபள வென இருந்தன. அப்போது இங்கு உத்யோகத்தில் இருந்த மாவட்டக் கலெக்டர் ஆங்கிலேயர் - ஹநுமானுக்குத் தலை வணங்கி அதே இடத்தில் குடிசை வாழ்மக்கள் விருப்பப்படி ஒரு அழகான கோயில் கட்டிக் கொடுத்தார். கோயிலில் ஹநுமானை எழுந்தருளப் பண்ணுவதற்காக மக்கள் முனைந்தனர்- பிரதிமை நகரவில்லை. நாமம் போட்ட ஒரு ஏழைப் பரதேசி -ஜயஸ்ரீராம் என்று கோஷம் போட்டு - பிரதிமையைத் தூக்கிக் கொண்டு - கோயில் கருவறையில் இறக்கினார். மறுகணம் அவரைக் காணோம். ஹநுமானே தான் தன்னையே தானே தூக்கிக் கொண்டுவந்து கருவறையில் நிறுத்திக் கொண்டிருக்கிறார் என கோவில் பூஜகர் ஸ்ரீநரோத்தம்ஜீ கூறினார். வரபிரஸாதியான அந்த ஹநுமானுக்கு நடக்கின்ற விழாக்கள் அந்தப்பக்கத்தில் வேறு எந்தக் கோயிலுக்கும் நடக்கவில்லை.

## ஹநுமான் தாரா

ஸௌராஷ்ராவில் ஜூநாகட் பக்கத்தில் கிர்நார் பர்வதத்திற்கு மேலே வடமேற்கு மூலையில் மலை மீது 1500 படிகள் ஏறினால் - சரித்திரப் பிரஸித்தி பெற்ற இந்த ஸ்தலம். (கிர்நார் மலைதான் இந்தியாவிலேயே அதிகமாகச் சிங்கங்கள் வாழுமிடம்) நெருக்கமான காடு - கவர்ச்சியுடையது.அதன்

*அடி வாரத்தில் மேற்கே போகும் நதி நேரே கிழக்கே திரும்பி சற்று தூரத்துக்கப்பால் மறுபடியும் மேற்கே திரும்புகிறது. இந்த இடத்திற்கு **ப்ராசீ** - என்று பெயர். இது சிறந்த தபோவனம். ஸ்ரீமத் பாகவதத்தில் இதன் பெருமை கூறப்படுகிறது இப்பொழுது சாலை அமைத்துவிட்டபடியால் யாத்திரிகர்கள் அதிகமாக வருகிறார்கள். இங்கே ஒரு குண்டம் (குழி) உள்ளது. இந்தக் குண்டத்திலிருந்து பெருகுகின்ற ஊற்று நீர் அனைத்தும் ஹநுமானின் வாயிலிருந்து கீழே விழுகிறது. அந்த நீர்வீழ்ச்சிக்கு **ஹநுமான் தாரா** என்று பெயர். சுமார் 475 ஆண்டுகளுக்கு முன் **கோவர்த்தன் தாஸ்ஜி** - என்ற மஹான் இருந்தார். இவர் எப்பொழுதும் 30 கிலோ எடையுள்ள இரும்பு ஆபரணங்களை அணிந்திருப்பார். ஏழு அடி நீளமுள்ள இரும்புக் கம்பியை நாக்கில் ஏற்றிக்கொண்டு ஹநுமானுக்கு தீபஹாரதி எடுப்பார். இடுப்பில் பத்து கிலோ எடையுள்ள சங்கலியை சுற்றிக்கொண்டிருப்பார்.*

*இன்றும் ஹநுமான் தர்சனம் அளிக்கிறார்.*

## போர்பந்தர்

***ஸுதாமாபுரி*** *- இங்கு தான் பக்த குசேலர் வாழ்ந்தார். ஸுதாமாவின் ஆலயத்திலிருந்து மேற்கே - மிகப் பழமையான கோயிலில் **பதினொன்று முகமுடைய ஹநுமான்** தர்சனமளிக்கிறார். நூறு தலைகளுடைய அஹி மஹி ராவண சகோதரர்களை பாதாளத்திற்குச் சென்று வதைத்து விட்டு அங்கிருந்து தன் புத்திரனான மகரவத்வஜனை அழைத்து வந்து இந்த ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து வைத்தார். ஹநுமான் பிரம்மசாரி ஆயிற்றே! -அவருக்குப் பிள்ளை ஏது? என்று புருவங்களைத் நெரிக்க வேண்டாம். அந்த விஷயத்தை -பின்னால் ஹநுமானுடைய திவ்ய சரிதத்தில் தெரிந்து கொள்ளலாம். இன்றும் அங்கு அரசர்களாகவே விளங்கிய ராணாக்கள் தம்மை மகரத்வஜவம்சத்தினராக கூறிக்கொள்கிறார்கள். வேறு எங்கும் காணமுடியாத - இந்த*

ஹநுமான் மூர்த்தியைத் தேடி பக்தர்கள் வந்து கொண்டே இருக்கிறார்கள்.

## ஜாம்நகர்

ஹநுமான் தாராவிலுள்ள ஹநுமானுடைய க்ருபையினால் ஜாம்நகர ஸாம்ராஜ்யத்தை **ஸ்ரீஜாமரா போல் மஹாராஜா** அரசாண்டார். ராஜ்யத்தை ஸ்தாபித்த பிறகு ஹநுமான் தாராவிலிருந்து ஹநுமானை அழைத்து வந்து அவருக்கு நான்கு திசைகளிலும் ஆலயங்களை எழுப்பினார். அது மட்டுமல்ல, எங்கெல்லாமோ ஹநுமானுக்கு ஆலயங்களை நிறுவினார். ஒவ்வொரு இடத்திலும் **தாண்டியா ஹநுமான் ; புலியா ஹநுமான், பீடபஞ்சன ஹநுமான்,** என்றெல்லாம் பெயர்கள். தாண்டியா ஹநுமானின் ஆலயம் மிக அழகானது.

## பேட்த்வாரகா

அஹிராவணன் ஸ்ரீராமனை இங்கு தான் ஒளித்து வைத்திருந்தானாம். ஹநுமான் வால்கோட்டையின் வழியாக பாதாளத்தில் இறங்கி ஸ்ரீராமலட்சுமணர்களைத் தேடி வந்தாராம். அப்போது அஹிராவணப்படையில் இருந்த மகரத்வஜனோடு (தன்குமாரன் என்று தெரிந்து கொள்ளாமல்) போரிட்டாராம். மகரத்வஜனும் ( தன் தந்தை என்று தெரிந்து கொள்ளாமல்) ஹநுமானுடன் போரிட்டானாம். மகன் தந்தையைக் கட்டிய போது - தந்தை மகனைக்கண்டு பிடித்துக் கொண்டு விட்டாராம் பிறகு தந்தையென அறிந்து மகரத்வஜன் தந்தையின் க்ருபையால் பாதாளராஜ்யத்தைக் கைப்பற்றி - இங்கு வந்து தந்தைக்கு ஆலயம் எழுப்பினாராம் -மற்றும் ஹநுமான் டேகரீ என்ற இடத்திலும் ஆலயங்கள் உள்ளன.

## பூரகியா

ஸாடீநகரத்திலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவில் **பூரகியா ஹநுமான்** ஆலயம். ஆலயத்தின்

பெயரால் ஊர் விளங்குகிறது. ராமேச்வரம் என்பது போல. இங்கு ராமாநந்த ஸம்பிரதாயத்தில் புகழ்பெற்ற **ஸ்ரீரகுவீரதாஸ்ஜியின் சீடரான தாமோதர தாஸ்ஜியின்** கனவில் ஹநுமான் தோன்றி ஆணையிட்டார். ''சித்ரா பௌர்ணமியன்று நள்ளிரவில் -ஸபாட் லாடீநகரங்களிடயே நடுக்காட்டில் நாம் வெளிப்படுவோம்.''

தாமோதரதாஸ்ஜி தமது குருதேவரிடம் இதைத் தெரிவித்தார். அவருடைய ஆணைப்படி - பூஜைக்கு வேண்டிய ஸகல மங்களப் பொருள்களையும் நிறைய எடுத்துக் கொண்டு பக்தஜனங்களுடன் நடந்தே அங்கு வந்து சேர்ந்தார். கி.பி.1642 சைத்ர சுக்ல பூர்ணிமாவில் செவ்வாய்க்கிழமை - பெரிய கர்ஜனையுடன் குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பள்ளத்திலிருந்து பெரும் புழுதி மேலே கிளம்பியது. சில நொடிகளில் ஹநுமான் எழுந்தார்.

ஜே ஜே ஹநுமான் ஜயஸ்ரீராம் என்ற கோஷமிட்டனர் மக்கள். **பூரகியா** என்றால் பூமியைக்காப்பவர் என்று பொருள். அந்தப் பெயருடன் ஹநுமான் ப்ரதிஷ்டை ஆனார்.

## லம்பே

கிர்நார் மலையின் அடிவாரத்தில் **லம்பே ஹநுமான்** ஆலயம். பக்கத்தில் யாத்ரீ நிவாஸ். யோகிகள் இங்கே ஸாதனை புரிகிறார்கள். மஹாதேவர் ஆலயத்தின் பிராகாரத்தில் பஞ்சமுக ஹநுமான் -ஸாத்புடா குண்டத்தருகிலும் ஹநுமான்.

குஜராத்தில் இன்னும் எத்தனையோ ஹநுமான் ஆலயங்கள் உள்ளன.

## ராஜஸ்தானில் ஹநுமான்
## ஸவாஈ மாதேபூர்

கலை அழகு மிளிர்கின்ற -நுணுக்கமான வேலைப்பாடுகள் நிரம்பிய - கட்டிடக் கலையின்

மஹோந்நதமான படைப்புகள் வீடுகளில் கூட ஜன்னல்களில் கூரை முகப்புகளில் - நிறையக் காணலாம்.

இந்த ஊரில் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் தெரு நடுவில் ஒரு கிணறு தோண்டினார்கள். ஐம்பதடி ஆழம் தோண்டியதும் - ஒரு நாதம் ராம ராம என்று கேட்டது - தோண்டிய கூலிகள் பயந்து கரை ஏறிவிட்டனர். வாலிபர்களான சில பிரம்ம சாரி ஸாதுக்கள் பித்தளை ஊற்றுத்தோணிகளின் உதவியோடு ஈரமண்ணை எடுத்து வெளியேற்றினார்கள். ஆறு அடிகள் தோண்டியதும் ஹநுமான் முகம் வெளிப்பட்டது. மேலும் இவ்விதம் இருபத்தைந்து அடிகள் தோண்டி இரண்டடி பாதபீடத்துடன் முப்பது அடி உயரத்தில் ஹநுமானின் வெண்கலப் பிரதிமை கிடைத்தது. பக்கத்திலேயே ஒரு மேடைகட்டி அதன் மீது ஹநுமானைத் தூக்கி நிறுத்தினார்கள். மற்றவர்கள் அங்கிருந்து அகற்ற வேண்டுமென்று படாத பாடுபட்டனர். பலிக்கவில்லை. கி.பி.1950ல் ஒரு உயரமான கோவில் கலை அழகு மிளிர எழுந்தது.

## பாவீ

ஜோத்பூரிலிருந்து ஜயபூர் செல்லும் பாதையில் பிலாடா தாலுக்காவில் உள்ளது இந்த கிராமம். ஊருக்கு கிழக்கே -கும்வா நாடா நதி ஓடுகிறது. அதன் கரையில் எழும்பியுள்ள ஹநுமான் பல குடும்பங்களுக்கு குல தேவதை.

இந்த ஊரைச் சேர்ந்த ஸ்ரீஸீரவீடுவாஜி ஸகலேசா என்ற பிரபுவிற்கு குழந்தை பிறக்கவில்லை. ஒரு மஹானின் அருள் வாக்கை நம்பி அந்த பிரபு நூறு நாட்கள் தவறாது மூன்று வேளைகளிலும் பூஜா காலங்களில் வந்து தர்சித்து - காணிக்கைகள் ஸமர்ப்பித்தார். நான்காவது மாதத்தில் மனைவி கருத்தரித்தாள் -மறு ஆண்டில் புத்திரன் பிறந்தான். விஸ்தாரமாக கோவில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம்

செய்தார் -சிறு குளம் வெட்டினார் அதற்கு கும்வாநாடா என்று பெயர்.

## மேஹந்தீபூர்

ஜயபூர் -பாந்தீகுஈ சாலையில் அறுபத்தைந்து கி.மீட்டர் தொலைவில் சிறு மலைகளுக்கு இடையே **மேஹந்தீபூர்** உள்ளது. அங்குள்ள **ஸ்ரீபாலாஜி மந்திர்** முக்கியமாக மநநோய் பெண்களின் மலட்டுத்தன்மை பக்க வாதம் முதலிய நோய்கள் ஹநுமானுக்கு இந்த பாலாஜி விரதமிருப்பதால் தீர்கின்றன. ஆண்டு முழுவதும் இங்கு நோயாளிகள் வந்து விரதமிருப்பார்கள். இந்த ஹநுமான் தான் இந்த ஊரிலேயே முக்ய தேவதை. ஸ்ரீபைரவருக்கும் இங்கே ஆலயம் உண்டு. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் பழமையான இந்த ஆலயத்தை இடிக்க பல தடவைகள் முயன்றார்கள் பலிக்கவில்லை. இந்த ஆலயத்தின் மஹந்துகளுக்கு மிகவும் மரியாதை உண்டு. ஆலய பரிபாலனம் மிகச்சிறந்த முறையில் நடந்து வருகிறது.

## கோடா

இங்கு **கோதாவரீ தாம, அமர நிவாஸ்,** என்ற இடத்தில் உள்ள ஹநுமான் ஆலயம் மிகப்பழமையானது **சம்பல்** நதியின் அணைக்கட்டில் உள்ளது. இந்த அணைகட்டிய பிறகு பிரபலமாகிவிட்டது ஹநுமான் ஆலயமும் புதுப்பிக்கப்பட்டது. செவ்வாய் சனிக்கிழமைகளில் இங்கு வழிபாடு அதிகம்.

மனநோய் தீர்க்கின்ற இந்த ஹநுமானிடம் விரதமிருப்பவர்களின் கூட்டம் எப்பொழுதும் உண்டு. மன நோய் தீர்ந்தவர் பலர் தமது அநுபவங்களைச் சொல்லும் போது ஹநுமானின் க்ருபையை நினைத்து உள்ளம் உருகுவார்கள். ஹநுமானுக்கு தீபஹாரதியின் போது இந்த மன நோய்ப்பட்டவர்களின் ஆட்டமும் பாட்டமும் கட்டுக்கு அடங்காது. உறவினர்கள் அவர்களைக் கட்டிப்பிடித்து அடக்க

முடியாமல் தவிப்பார்கள். அவர்கள் செய்கின்ற ஜயஸ்ரீராம் - ஜே ஜே ஹநுமான் என்ற கோஷம் பரிதாபமாக இருக்கும். ஆனால்பலஸாதனைகள் புரிந்து கொண்டிருக்கின்ற ஸாது மஹான்கள் ஆசி அளித்து ஸமாதானம் செய்வார்கள்.

## நாதத்வாரா

வல்லபாசாரியரின் பிரதானமான பீடம் இங்கு உள்ளது. பாலகிருஷ்ணனின் லீலைகளை நினைத்து நினைத்தே மன நிறைவு பெறுகின்ற இந்தப் புஷ்டி மார்க்கத்தில் திளைக்கின்ற வைஷ்ணவர்கள் ஹநுமானிடமும் ஈடுபாடு கொண்டிருப்பது ஒரு விநோதமான ஆச்சரியம்.

இங்கே அரசோச்சிய திலகாயத மன்னர்கள் நகரத்தின் நாலா புறங்களிலும் ஹநுமானுக்ுப் பல ஆலயங்கள் எழுப்பியிருக்கிறார்கள். ஸ்ரீநாதனே நகரநாதன் ஆயினும் நகரத்திற்கு கிழக்கே ஸிம்ஹாட் ஹநுமான் மேற்கே படீபாகர் ஹநுமான் வடக்கே சாவநீ தர்வாஜா ஹநுமான் தெற்கே சௌபேஜீ கோட்டது வெங்கட ஹநுமான் ஆலயத்தில் கொண்டுள்ளார். இங்கு சீதளா (மஹாமாரி) அம்மனுக்கும் அடியார்கள் உண்டு. ஆண்டு தோறும் சீதளா ஸப்தமியின் போதும் வீட்டில் திருமணங்கள் தீர்மானித்தாலும் உடனும் பெரிய அளவில் சீதளா தேவியையும் ஹநுமானையும் சேர்த்தே கொண்டாடுவார்கள்.

## புராபங்கீ

ஸீகரியிலிருந்து 10 கி.மீட்டர் தொலைவில் இந்த கிராமம். பக்கத்தில் ஒரு சிறு குன்று. அதன் வடபுறத்தில் ஹநுமான்ஆலயம். அந்தக் குன்றின் சிகரத்தையே செதுக்கி ஸ்வருபம் கொடுக்கப்பட்ட ஹநுமான் மலையின் பகுதியாகவே விளங்குகிறார். ஒவ்வொரு பூர்ணிமையிலும் இரவு முழுவதும் பக்தர்கள் கூடி நாம ஸங்கீர்த்தனம் செய்வார்கள். ஆலயத்திற்கு வெளியே ஒரு விசாலமான மேடை. கிராமங்களின் இருந்து வருபவர்கள் அதன் மீது தமது வேண்டுதல்களை செலுத்துவார்கள்.

## விராட நகரம்

*ஜயப்பூர் அலவர் நெடும் சாலையில் உள்ள இந்த நகரத்தில் பாண்டவர்கள் நாடு கடத்தலின் 13வது ஆண்டு (அஞ்ஞாதவாஸம்) மறைந்து திருந்தார்கள். துரௌபதியை கெடுக்க முயன்ற கீசகனை பீமஸேனன் இங்குதான் வதைத்தான். பீமஸேனன் பக்கத்தில் உள்ள குகையில் இருந்தான். அது பீமஸேன் குஹை என்று அழைக்கப்படுகிறது. அதன் பக்கத்தில் மலைப்பகுதியில் - **ஸ்ரீராம சுந்தர்ஜி வீரமஹாராஜ்** -என்ற அரசன் -**ஸ்ரீ வஜ்ராங்க ஹநுமானுக்கு** விஸ்தாரமான ஆலயம் எழுப்பினார். அடிவாரத்திலிருந்து ஆயிரம் அடிகள் உயர்ந்த மலைத்தாழ் வரையில் இந்த ஆலயம். ஹநுமான் ஏழரை அடி உயரமாக சலவைக்கல்லினால் நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் செதுக்கப்பட்ட மூர்த்தி. ஹநுமானின் பாதங்களில் - விரல்களில் நகங்கள் பளிச்சென்று தெரியும். வீரமஹாராஜன் - கூட நின்று பார்த்துப் பார்த்து சிற்பிகளுக்கு ஆலோசனை கூறி பிம்பத்தை அழகுபடுத்தினானாம்.*

## ஸ்ரீபாலாஜி படா காவ்(ம்)

*நாகௌர் பிகாநீர் நெடுஞ்சாலையில் - ரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீட்டர் தொலைவில் உள்ள ஒரு குன்றின் மீது ஹநுமான் ஆலயம் 400 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது. இங்கு **ஸ்ரீசுகதேவபுரி மஹாராஜ்** பலஸாதனைகள் புரிந்து ஸித்தி பெற்றவர். இளமையில் சுருமாவட்டத்தில் உள்ள கோபால்பூர் - என்ற கிராமத்தில் ஓருசிறு குன்றின் குஹையில் இருந்து தவம் செய்தார். அங்கு முதலில் ஹநுமானை பிரதிஷ்டை பண்ணினார். அங்கு தான் ஹநுமானின் தர்சனம் பெற்றார். அங்கிருந்து ஸ்ரீபாலாஜிக்கு வந்தார்.*

*அந்தப்ராந்தத்தில் பாலாஜி என்று ஹநுமானைத்தான் குறிப்பிடுகிறார்கள். தென்னாட்டில் பாலாஜி என்றால் திருப்பதி வெங்கடேசரையே குறிக்கும்.*

*பாலாஜிக்கு வந்த பிறகு ஹநுமானை வேண்டினார்.*

*என் தெய்வமே! தாங்கள் கோபாலபுரத்தில் இருந்து இங்கு வந்து விடவேண்டும்.*

*''ஏன்? இங்கேயே நீ ஒரு மூர்த்தியை பிரதிஷ்டை செய்யலாமே, என்றார் ஹநுமான்.*

*''அங்கும் இங்கும் அலையமுடியாதே''*

*''நான் எங்கும் இருப்பவன்தானே! இங்கும் அங்கும் இருப்பேனே!''*

*''ஆனாலும் இந்த அடிமைக்கு அருள் பாலித்த மூர்த்தியை அங்குவிட்டு விட்டு, வேறு மூர்த்தியிடம் என் மனது செல்லாது. தயவு செய்து இங்கே வந்துவிடுங்கள்''*

*''உன்னை ஞானீ என்று நினைத்தேன். இவ்வளவு அஞ்ஞானியாக இருக்கிறாயே!''*

*''அதுவும் தங்கள் க்ருபைதான். தயவு செய்யுங்கள்'' - என்று பணிந்து வேண்டினார்.*

*ஹநுமான் ஏற்றுக்கொண்டார். ஸ்வாமிஜி ஊராரைத் சேர்த்துக் கொண்டு அந்தக்குன்றில் ஆலயம் கட்டினார். ஹநுமான் ஆணைபெற்று ''கோபாலபுரத்தில் உள்ள ஹநுமான் சைத்ர சுக்ல பௌர்ணமி நடுப்பகலில் இந்த ஆலயத்திலே பிரவேசிப்பார்'' என்று தெரிவித்தார்.*

*ஊர்மக்கள் - எல்லோரும் அன்று விடியற்காலை எழுந்திருந்து அவசர அவசரமாக வீட்டுக் காரியங்களை முடித்துக் கொண்டு குன்றின்மீது கூடிவிட்டனர்.*

*முதல்நாள் இரவு கோபாலபுரத்தில் ஹநுமான் ஆலய அர்ச்சகருக்கு கனவில் தோன்றினார் - ஹநுமான்.*

*நாளை மதியத்தில் படாகாவ்மில் என் மூர்த்தி பிரதிஷ்டை ஆகப் போகிறது. அதற்காக அங்கு என்னுடைய வெள்ளிக் கவசத்தைப் பெட்டியோடு நீர் எடுத்துச் சென்று*

அந்த மூர்த்திக்குச் சாத்தி, விழா முடிந்ததும் எடுத்து வரலாம்.

உடனே அர்ச்சகர் எழுந்து, கோவில் அதிகாரியை அழைத்து, விஷயத்தைச் சொல்லி, அவரையும் அழைத்துக் கொண்டு, கவசப்பெட்டியைத் தலை மேல் தாங்கி மஹாகாவ்க்கு ஓடி வந்தார். நடுப்பகல் நெருங்கிக் கொண்டிருந்தது. ஸ்வாமிஜி - கோபுர வாசலில் மக்களுக்கு ராம நாம கோஷத்தைத் துவக்கி வைத்து தானும் அதில் கலந்து கொண்டார்.

நடுப்பகலுக்கு இன்னும் பத்து நிமிஷங்கள் உள்ள நிலையில் மலை மீது பெட்டியோடு இருவர் ஏறி வந்தனர். மக்கள் ஆவலுடன் கோலாஹலம் செய்தனர். ஸ்வாமிஜி அவர்களை அடக்கி, வருபவர்களுக்கு வழி விடச் செய்தார்.

இருவரும் கோபுரவாசலில் பெட்டியை இறக்கினார்கள்.

அர்ச்சகரின் கனவு விபரத்தை ஸ்வாமியிடம் தெரிவித்தனர்.

''மூர்த்தியை அங்கே விட்டுவிட்டு கவசத்தை மட்டும் எடுத்து வந்தால் எப்படி...............?

''கனவில் பெற்ற ஆணையை நாங்கள் நிறைவேற்றி விட்டோம். அவ்வளவு தான் தெரியும்''

ஸ்வாமிஜி - பெட்டியை வலம் வந்து விழுந்து வணங்கி மெதுவாகப் பெட்டியைத் திறந்தார்.

உள்ளே கவசத்தை தரித்துக் கொண்டு ஹநுமான் சயனித்திருந்தார்.

''ஜய ஜய ஸ்ரீராம எனறு பெரிய கோஷம் எழுப்பினார்.

லக்னத்தில் கவசத்தோடு ஹநுமானைக் கருவறையில் பிரதிஷ்டை செய்தார். ஆராதனைகள் விமரிசையாக நடந்தன.

மாலையில் கோபாலபூர் அர்ச்சகரும் அதிகாரியும் ஸ்வாமிஜியிடம் வந்து ''நாங்கள் ஸ்வாமியை கவசத்தோடு கோபாலபுரத்திற்கு எடுத்துப் போக வேணும்.''

எடுத்துப் போக வேணுமா? ஏன்?

''கனவில் ஹநுமான் அப்படித்தான் ஆணையிட்டார்.''

''என்ன ஆணை?''

''நாளை மதியத்தில் படாகாவ்மில் என் மூர்த்தி பிரதிஷ்டை ஆகப்போகிறது. அதற்காக இங்கு என்னுடைய வெள்ளிக்கவசத்தைப் பெட்டியோடு நீர் எடுத்துச் சென்று அந்த மூர்த்திக்கு சாத்தி விழா முடிந்ததும் எடுத்து வரலாம்''

''ஸ்வாமி உங்களை கவசத்தைத் தானே எடுத்துப் போகச்சொல்லி ஆணையிட்டார். நீங்கள் ஏன் பெருமாளையே எழுந்தருளப்பண்ணி எடுத்து வந்தீர்கள்?''

''நாங்கள் எடுத்து வரவில்லை''

''பின் ஏது இந்த மூர்த்தி? கவசம் பொருத்தமாக இருக்கிறதே. அந்த மூர்த்தி தானே வந்திருக்கிறார்?''

''அந்த மூர்த்தி தான் வந்திருக்கிறார். அதனால் தான் அவரையும் சேர்த்து எடுத்துக் கொண்டு போகிறோம் - என்று கேட்கிறோம்.''

''பெருமாள் கவசத்தைத் தானே திரும்பிக் கொண்டு வரச் சொல்லி ஆணையிட்டார். அதை நீங்கள் தாராளமாக எடுத்துப் போகலாம்''

''மூர்த்தி?''

''நீங்கள் எடுத்து வரவில்லையே! தானாகவே வந்திருக்கிறார். அவர் திருவுள்ளம் என்னவோ?''

அர்ச்சகரும் அதிகாரியும் கையைப் பிசைந்தனர்.

''ஐயா! மூர்த்தி இல்லாமல் ஊருக்குப் போனால் ஊர்க்காரர்கள் எங்களைச் சும்மா விடமாட்டார்கள். கொன்றுவிடுவார்கள்.''

''நீங்களாக இஷ்டப்பட்டு மூர்த்தியை எடுத்து வரவில்லையே. உங்கள் மேல் தவறில்லை. கவலைப்படாதீர்கள்- ஹநுமான் உங்களை ரட்சிப்பார். கவசங்களை நீங்களே கழற்றி எடுத்துச் செல்லுங்கள்''

''ஐயா -எங்களைக் கைவிடாதீர்கள். தயவு செய்து ஸ்வாமியையும் எடுத்துப்போக அநுமதியளியுங்கள்''

''நான் அநுமதி கொடுக்க முடியுமா? - பெருமாள் அடியேனுக்கு தானே வருவதாக அருள்புரிந்தார். அவர் வந்துவிட்டார். இனி அவர் இஷ்டம்.''

அர்ச்சகர் கருவறை சென்று ஹநுமானைத் தூக்க முயன்றார், மயங்கிக் கீழே விழுந்துவிட்டார். ஸ்வாமிகள் கவசங்களைக் கழற்றி பெட்டியில் அடுக்கி வைத்தார்.

''எடுத்துச் செல்லலாமே''

அர்ச்சகரும் அதிகாரியும் ஸ்வாமிஜியின் திருவடிகளைப் பற்றிக் கொண்டனர்.

ஸ்வாமிகள் அவர்களை தூக்கிவிட்டுக் கூறினார்.

''உங்கள் உள்ளம் ஹநுமானுக்குத் தெரியும் அவர் உங்களைக் கைவிட மாட்டார். தைரியமாகச் செல்லுங்கள் ஜய ஸ்ரீராம''

இருவரும் பதறிக்கொண்டு நள்ளிரவில் ஊர்திரும்பி. ஹநுமான் ஸந்நிதிக்கு நேரே சென்றனர். அர்ச்சகர் இடுப்பிலிருந்து சாவியை எடுத்து கருவறை கதவைத் திறந்தார். தீபம் எரிந்து கொண்டிருந்தது. ஹநுமான் திறந்த மார்புடன் அவர்களுக்கு சேவை அளித்தார்.

இந்த ஆச்சரியத்தை உடனே திருப்பிப்போய் படாகாவ்ம்ல் ஸ்வாமிஜியிடம் தெரிவித்தனர். ஸ்வாமிஜி

ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

## கேட் க்ஷீரபுரம்

பாடமேர் பாலோத்தரா மாவட்டத்தில் உள்ளது லூாணி நதிக்கரையில் ஹநுமான் ஆலயம். பூர்ணிமை தோறும் இங்கே மேளா நடக்கும். மாக மாதத்தில் தேவாஸ ஜாதிக்காரர்கள் இங்கே குழந்தைகளுக்கு முடி இறக்குவார்கள். அந்த ஊர்க்காரர்கள் ஹநுமானை **லோடியா பாபா** என்று அழைப்பார்கள்.

## பூநராஸர்

டில்லி பிகாநிர் ரயில் மார்க்கத்தில் உள்ள ஸூடஸர் என்ற ரயில் நிலையத்திலிருந்து 15 கி.மீட்டர் தொலைவில் உள்ள இந்த கிராமத்தில் ஹநுமான் ஆலயம். இந்த ஹநுமானை ஜைநர்களும் வழிபடுகிறார்கள்.

## படூ

நாகௌர மாவட்டத்தில் டேகாநா தாலுக்காவில் உள்ள இந்த கிராமத்தில் -ஹநுமானுக்குப் பெரிய ஆலயம் **தாஸ ஹநுமான் வீரஹநுமான் – பக்த ஹநுமான்** என மூன்று மூர்த்திகள். இங்கு வேண்டுதல்கள் செய்து கொண்டால் எல்லாமே தவறாமல் நிறைவேறும் - என்று மக்களுக்கு அபார நம்பிக்கை.

## பீகானேர்

இந்த நகரத்தில் **ஸ்ரீரதன்பிஹாரீஜியின்** புகழ் பெற்ற ஆலயத்திற்கு பக்கத்தில் - ஹநுமானின் பெரிய மூர்த்தி. மக்கள் நேரே அவரை அணுகிப் பாதங்களைத் தொட்டுவணங்கி வேண்டுதல்களை நிறைவேற்றிக் கொள்கிறார்கள். பல அரிய அற்புதங்கள் பற்றி மக்கள் கதை கதையாகச் சொல்வார்கள். செவ்வாய்க்கிழமை அன்று கூட்டம் அதிகம்.

# ஸாலாஸர்

*ராஜஸ்தானின் சூரூ மாவட்டத்தில் -ஸாலாஸர் என்ற கிராமத்தில் **ஸாலாஸர் பாலாஜி** - என்று புகழ் பெற்ற ஹநுமான் விளங்குகிறார். ஆலயம் பெரிது. நாற்புறமும் யாத்ரிகர் வந்து தங்கி விரதமிருந்து வழிபாடுகள் நடத்துவதற்கு அநுகூலமாகப் பல தர்மசாலைகள் உள்ளன. ஒரே சமயத்தில் ஆயிரம் பேர் தங்கலாம்.*

*அந்த ஊர்க்காரர்களான தாயமா அந்தணர் சமூஹத்தினரால் கோவில் நிர்வாகம் நல்லபடியாக நடக்கிறது. **ஸ்ரீமோஹந்தாஸ் பான்ஜே** - என்பவர் **உதயராமஜீயின்** வம்சத்தில் பிறந்தவர். ஸ்ரீமோஹன் தாஸ்ஜி 20 கி.மீட்டர் தொலைவில் உள்ள கல்யாணீ கிராமத்தைச் சேர்ந்தவர். இவருடைய தகப்பனார் பெயர் **லச்சீராமஜீ.** அவருக்கு ஆறு புத்திரர்கள். ஒரே பெண் பெயர் **காநீபாய்.** அவளுக்கு ஸாலாஸர் கிராமத்தினரான ஸிகராமஜீயுடன் திருமணம் நடந்தது. **உதயராம்** - என்ற குமாரன் பிறந்தான் திடீரென அவளுடைய கணவன் காலகதி அடைந்தார்.*

*இளம் வயதினளான அவள் தனது சொத்துக்களுடன் பிறந்தகம் வந்து சேர்ந்தாள். குடும்பத்தில் ஒத்துவரவில்லை. சில நாட்களுக்கு பிறகு ஸாலாஸருக்கே வந்து விட்டாள். அவளுடைய கடைசி ஸஹோதரன் **மோஹன் தாஸ்ஜி** அவளைத் தனியே விடுவது பொறுப்பில்லாத செயல் என்று நினைத்து ஸாலாஸருக்கே வந்து அவளுக்கு உதவியாகத் தனிவீட்டில் வாழ்ந்தார்.*

*ஸ்ரீமோஹனதாஸ்ஜி இயல்பாகவே உலகியலில் பற்றற்றவர். எப்பொழுதும் ராம நாமம் சொல்லிக்கொண்டு தியானத்தில் இருப்பார். சில நேரம் தமது நிலங்களில் இறங்கி உழைப்பார். அவருடைய நிலத்திற்கு பக்கத்திலேயே சகோதரி குமாரன் உதயராமஜிக்கும் நிலம் உண்டு.*

மோஹன்தாஸ் ஒரு நாள் நிலத்தில்உழுது கொண்டிருந்த போது திடீரென்று உதயராம் உதயராம் - என்று பெரும் குரலில் அழைத்தார் பக்கத்தில் உழுது கொண்டிருந்த உதய ராம் ஓடி வந்தான்.

''உதயராம! என் தோளிலிருந்து மண்வெட்டியை யாரோ பிடுங்கிக் தூர எறிகிறார். யாரென்று பார்'' உதயராமஜி நன்றாகப் பார்த்து விட்டு ''பின்னால் ஒருவரும் இல்லையே'' என்றான். உனக்கு தெரியவில்லையா? அதோ பார் என் தோளில் இருந்து மண்வெட்டி எங்கோ போய் விழுந்திருக்கிறது!!''

அவன் வீட்டுக்குப் போய் தாயாரிடம் சேதி சொன்னான்.

''அம்மா - மாமாவுக்கு நிலத்தில் கவனம் போதாது. விளைச்சல் தேறாது.

''ஆமாம் அப்பா - அவருக்கு எதிலுமே பிடிப்பு இல்லை. ஸந்நியாஸியாகப் போய் விடுவாரோ - என்னவோ?

அவள் நினைத்தாள். அண்ணாவுக்கு ஒரு நல்ல பெண்ணாகப் பார்த்து திருமணம் செய்து வைத்தால் - பொறுப்பு வந்துவிடும். ஒரு நல்ல குடும்பத்தில் பெண்ணைத் தேர்ந்து எடுத்து நிச்சியதார்த்தம் செய்வதற்காக - பெண்ணுக்கு ஆடை ஆபரணங்கள் சேர்த்துக் கொண்டு பொறுப்பான தம்பதிகள் மூலம் பெண்வீட்டாருக்கு அனுப்பி வைத்தாள்.

ஹநுமான் ஆலயத்தில் இருந்து வெகுநேரம் கழித்து வந்த தமையனிடம் தான் செய்திருக்கிற ஏற்பாட்டைக் கூறினாள்.

மோஹன் தாஸ் சிரித்துக் கொண்டே, அந்தப் பெண் இருக்கிறாளா? என்று கேட்டார்.

ஸஹோதரி திடுக்கிட்டாள் சீர் கொண்டு சென்ற தம்பதிகள் பெண்ணின் மரணச் செய்தியைக் கூறினர்.

மோஹன் தாஸ் திருமணமே செய்து கொள்ளவில்லே.

ஒரு நாள் அவர், ஸகோதரி, மருமகன், மூவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது வாசற்படியில் ஒரு ஸாது நின்று ஜயஸ்ரீராம் என்று குரல் கொடுத்தார்.

கானீபாஈ இவருக்கு அளிப்பதற்காக ரொட்டியை எடுத்து கொண்டு வாசலுக்கு வந்து பார்த்தால் யாருமில்லை!!

தமையனாரிடம் வந்து சொன்னாள்.

தமையனார் சொன்னார் ''நம்ம பாலாஜி வந்திருப்பார். நீ உள்ளே இருந்து கொண்டுவரத் தாமதித்ததால் போயிருப்பார்.''

''அண்ணா! எனக்கு ஹநுமானின் தரிசனம் செய்து வைக்கமாட்டாயா?

''அது பாலாஜி இஷ்டம் ஸ்ரீராம நாமம் சொல்லிக்கொண்டே இரு. பார்ப்போம்.''

இரண்டு மாதங்கள் கடந்தன. வாசலில் ''ஜய ஸ்ரீராம்'' என்ற ஒலி கேட்டது. இந்தத் தடவை மோஹன்தாஸ் ஜீயே எழுந்து வாசலுக்கு ஓடினார். அதற்குள் பாலாஜி கிளம்பி விட்டதைப் பார்த்தார். அவரைப்பின் தொடர்ந்தார். முன்னே சென்று வீதியில் விழுந்து வணங்கினார்.

''க்ருபை புரியவேணும் க்ருஹத்தில் திருவடி பதிக்க வேண்டும். என்று கண்ணீர் விட்டு வேண்டினார்.

''ஒரு நிபந்தனை. பாலும் வெண்ணையும் உண்பதற்கு வேண்டும். படுப்பதற்குப் புதிதாகப் படுக்கை வேண்டும். தருவாயானால் வருகிறேன்?

மோஹன்தாஸ்ஜி ஏற்றுக்கொண்டார். பாலாஜி மஹாராஜ் கிருஹத்தில் திருவடி பதித்தார். வெண்ணையும் பாலும் சுவைத்தார். சில நாட்களுக்கு முன்பு தான் டாகூர் மாநவஸிம்ஹஜி என்ற பிரபுவின் குமாரனுக்கு திருமணம்

நடந்தது. அதற்கு சீர் வரிசையாக வந்த ஒரு உயர்ந்த படுக்கையை மோஹன்தாஸ் மஹாராஜாவுக்கென அந்த பிரபு அனுப்பிவைத்தார் ''நமக்கேன் இதெல்லாம் என்று அதைச் சேந்தியில் ஏற்றி வைத்திருந்தார். அதை எடுத்து பாலாஜிக்கு விரித்தார். பாலாஜி படுத்துக்கொண்டார். தமையனும் தங்கையும் விசிறி போட்டார்கள். ஓய்ந்து போய் அயர்ந்தார்கள். பாலாஜி எழுந்து போய் விட்டார்.

மோஹன்தாஸ் ஜி - வைராக்யத்தைக் கடைபிடித்தாலும் பாலாஜிக்கு பெரிய ஆலயம் எழுப்ப வேண்டும் - என்று ஆசை தொடர்ந்து கொண்டே இருந்தது. ஒருநாள் பிரபு ஸாலாமஸிம்ஹஜி . வீடு தேடி வந்தார்.

''தங்கள் அநுக்ரஹம் இருந்தால் பாலாஜிக்கு ஒரு பெரிய ஆலயம் நிர்மாணிக்கலாம் என்று நினைக்கிறேன்.''

இப்படிப் பேசிக் கொண்டிருந்த போதே -வீதியில் பெரும் கூச்சல். ஜனங்கள் தாறுமாறாக ஓடினர். யாரோ கொடியவன் படை எடுத்து வருகிறான் -என்று தெரிந்தது. மோஹன் தாஸ் வீதியில் போய்க்கொண்டிருந்த ஒருவனை அழைத்தார்.

''இந்தா - என் தோளில் உள்ள நீலவஸ்திரம். அதை ஒரு ஈட்டியில் கோத்து மோதுகின்ற படையின் மீது வீசி எறிவாய்'' என்றார்.

அவன் வீசினான் அந்த நீலவஸ்திர ஈட்டி எதிரிப்படை மீது கொள்ளிவாய்ப் தீப்பொறி பறக்க வைத்தது. படை பதைத்து ஓடிவிட்டது. இது கேட்டு மோஹன் தாஸின் புகழ் நாடெங்கும் பரவியது ஸாலமஸிம்ஹஜியின் தலைமையில் - ஜனங்கள் பாலாஜிக்கு கோயில் எழுப்ப முடிவு செய்தார்கள்.

கோயிலுக்கு பாலாஜியின் மூர்த்தி வேண்டுமே. ஸாலமஸிம்ஹஜியின் புத்திரனுக்குப் பெண் கொடுத்திருந்த அஸோடர் ஸர்தாருக்கு இந்தச் செய்தி காதில் விழுந்தது.

அன்று ஓர் உழவன் ஆஸோடாவில் நிலத்தை உழுது கொண்டிருந்தான். கலப்பை நுனியில் ஏதோ சிக்கியது பார்த்தால் வால் போல ஏதோ நீண்டிருந்தது உழுது கொண்டே போனால் - சற்று ஆழத்தில் அந்தவாலுக்குரிய பாலாஜியின் விக்ரகம் கிடைத்தது. ஸர்தாருக்கு சேதி எட்டியது. அவர் ஓடி வந்தார். அதை வாங்கிக் கொண்டு தன் ராஜ்மஹாலில் வைத்துக் கொண்டார். அது ஸாலக்ராமசிலையில் செதுக்கப்பட்டது என்பது தெரிந்தது. கி.பி.1733 ஆவணி மாதம் சுக்ல நவமீ சனிக்கிழமையன்று ஸர்தாருக்கு ஆகாயத்தில் குரல் கேட்டது. ''என்னை ஸாலாஸரில் கொண்டு சேர்த்து விடலாம்'' முதலில் ஸர்தார் அந்தக் குரலைப் பொருட்படுத்தவில்லை. யாரோ பக்கத்து விட்டில் பேசுகிறார்கள் என்று நினைத்தார். மறுபடியும் உரத்த கர்ஜனை கேட்டது. உடனே பெரியமாட்டு வண்டியில் அந்த விக்கிரஹத்தை ஏற்றி ஸாலாஸருக்கு அனுப்பினார்.

செய்தி கிடைத்ததும் ஸாலாஸரில் மோஹன்தாஸ்ஜி கிராமத்து மக்களுடன் ராம நாம கீர்த்தனம் செய்து கொண்டு காத்திருந்தனர்.

விக்கிரஹத்தைத் தாங்கி வந்த வண்டி கிராமத்து மூலையில் ஒரு முக்கோண மேட்டுக்கு வந்து நின்றதுவிட்டது.

மாடுகளை எவ்வளவு உசுப்பினாலும் நகரச் செய்யமுடியவில்லை.

''பாலாஜிக்கு இங்கே கோயில் அமைவதில் தான் இஷ்டம். இந்த முக்கோண மேடையில் மேற்குப்பக்கம் கூறான இடத்தில் கருவறை அமைத்து கிழக்கே விஸ்தாரமான மண்டபமும் வாசற்படியும் தீபஸதம்பமும் வைத்து விடலாம் என மோஹன்தாஸ்ஜி கூறிய ஆலோசனையின் படி கோவில் நிர்மாணிக்கப்பட்டது கி.பி.1734 ச்ராவண சுக்ல தசமி ஞாயிற்றுக்கிழமையன்று கும்பாபிஷேகம் சிறப்புடன்

நடைபெற்றது. கோவிலைச்சுற்றி கிராமம் முன்பு தடாகத்தின் மேல் புறத்தில் இருந்தது. இப்போது கீழ்புறம் விரிந்து விட்டது. பிறகு கோயில் வளாகமும் வளர்ந்து விட்டது. தர்ம சாலைகள் யாத்ரிகர்களுக்கு உபயோகத்திற்காக எழுந்தன.

முன் மைதானத்தில் தீபஸதம்பம் எழுப்ப வேண்டுமே -என்றார் மோஹனதாஸ்ஜி. ஒரு சமயம் - பக்கத்து கிராமத்தில் இருக்கினற ஜூலியாஸர் டாகூர் ஜோராவஸிம்ஹஜி குதிரைஸாரட்டில் அந்தச்சாலை வழியாகப் போய்க் கொண்டிருந்தார். அவருக்கு ப்ருஷ்டபாகத்தில் -ஆறாத ஒரு புண் - எந்த வைத்தியத்தினாலும் தீராததாகத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தது. இப்படி இங்கே ஒரு புதிய பாலாஜி வளாகம் தோன்றியிருப்பதை பார்த்து ஆச்சரியப்பட்டார்.

ஸாரட்டில் இருந்து இறங்கி கூட்டத்தின் இடையே நின்று கொண்டிருந்த மோஹன்தாஸ் ஜியை வணங்கினார். ஸ்வாமிஜீ அவரை இன்முகத்துடன் வரவேற்றார். அவருடைய முகத்தில் நிலவிய துன்பங்களைக் கண்டு கூறினார்.

''பாலாஜி உங்கள் துன்பம் தீர அருள்வார். இங்கே ஒரு தீபஸ்தம்பம் அமைக்க உங்களுக்கு ஆணை பிறந்திருக்கிறது'' என்றார். பாவலியா ஸ்வாமிக்கு (மோஹன் தாஸ்ஜியின் புதுப்பெயர்) தலை வணங்கி ஜோராவஸிம்ஹஜி ஏற்றுக்கொண்டார். அவருடன் ஒரு கட்டிடக்கலை நிபுணரும் வந்திருந்தார். அவர் சொன்னார்.

இந்த இடத்திற்குப் பொருத்தமாக ஒரு தீபஸ்தம்பம். இருபது அடி உயரம். அதன் சிகரத்தில் ஐந்து ஆடம் (சுமார் 2கிலோ) எண்ணெய் பிடிக்கக் கூடிய வெண்கல உருளி. அதன் மத்தியில் வாழைத்தண்டு கனத்தில் - திரிபோடக்கூடிய தீபத்தண்டு. தீபஸ்தம்பத்தின் கழுத்திலிருந்து ஐந்து கனத்த பித்தளைக் கம்பிகள் மூன்று அடிதூரம் நீண்டு அதன் முனையில் - தீபத்திரி மட்டத்தில் தீபத்தைப் பார்க்க ஐந்து

*கண்ணாடிகள் பொருத்தலாம் தீபத்தின் ஒளி அந்தக் கண்ணாடிகளில் பிரதிபலித்து - மைதானம் முழுவதும் ஒளிவீசும். இரவுகளில் மக்கள் கூடி மைதானத்தில் ராம கீர்த்தனம் செய்யலாம் என்று ஒரு திட்டத்தை விளக்கினார். செலவு அதிகம் ஆகலாம். ஆலயத்திற்குப் பெருமை கூடும்.'' என்றார்.*

*டாகூர் ஜோராவஸிம்ஹஜீ தீபஸ்தம்பம் நிறவுவதின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.*

*அந்தவளாகத்துக்கே பேரழகு கூடியது. பக்தர்கள் கூட்டம் பெருகியது. இதனிடையே ஜோராவ்ஜியின் ப்ருஷ்ட பாகத்திலிருந்து புண் போன இடம் தெரியவில்லை. தீபஸம்பத்தின் நிறுவனத்தில் மனது முழுவதும் ஈடுபட்டிருந்தார் புண்ணின் நினைவே அவருக்கு வரவில்லை.*

*மோஹன்தாஸ்ஜி இரவு வெகு நேரம் தீபஸ்தம்பத்தின் அஸ்திவார மேடைமீது பாலாஜியை நோக்கி அமர்ந்து விடுவார். நிஷ்டை கூடிவிடும்,*

*ஒரு நாள் நள்ளிரவில் பெரும் காற்று வீசியது - எண்ணெய்க் கொப்பரையில் எரிந்து கொண்டிருந்த தீபத்தின் திரி முனை ஒடிந்து கீழே த்யானத்தில் அமர்ந்திருந்த மோஹன்தாஸஜியின் தலையில் வீழ்ந்தது - கொப்பரையிலிருந்து எண்ணெயும் கொதித்து வழிந்தது - மோஹன்தாஸ்ஜி தலையில் வீழ்ந்த திரித்துண்டு பகீரென்று பற்றி எரிந்தது. எங்கும் ஓரே ஜோதி. சுற்றுப்புற வீடுகளில் தூங்கிக்கொண்டிருந்த ஜனங்கள் ஒளி வீச்சினால் தூக்கம் கலைந்து ஓடி வந்தார்கள். மோஹன்தாஸ் - தனது உடலினால் பாலாஜிக்கு தீபஹாரதி செய்துவிட்டு அங்கேயே அடங்கினார்.*

*மோஹன்தாஸ்ஜீக்கு அங்கேயே ஸமாதி எழுப்பி யிருக்கிறார்கள்.*

முன்பு கோவில் வாசலிலேயே மோஹன்தாஸ் இரண்டு சின்னக் கொட்டகை கட்டிக்கொண்டார். எப்போதாவது அங்கு உள்ளே தங்குவார். அவற்றில் தான்ய மூட்டைகள் அடுக்கி இருக்கும். அவருக்குப் பின் எவரும் அதைத்திறந்து பார்ப்பதில்லை - ஒரு பையன் துணிச்சலாக ஒரு நாள் திறந்தான். அங்கிருந்து ஒரு கருநாகம் - சீறி வெளிப்பட்டு கணநேரத்தில் மைதானத்தைத் தாண்டி புதரில் மறைந்துவிட்டது.

ராஜஸ்தானில் ஒவ்வொருஊரில் உள்ள பாலாஜி - என்ற ஹநுமான் ஜனங்களிடையே பலலீலைகள் புரிந்திருக்கிறார்.

ராஜஸ்தானில் மார்வாரிகள் அதிகம். அவர்கள் வல்லபஸம்பிரதாயத்தைச் சார்ந்தவர்கள். பாலகிருஷ்ணன் கோகுலக்ருஷ்ணனிடம் பக்தி உள்ளவர்கள். ஒவ்வொரு வீட்டிலும் தவழும் கண்ணன் இடது கையைத் தரையில் ஊன்றி வலது கையில் வெண்ணெய் வைத்துக் கொண்டிருப்பான். சிறு பெண்கள் முதல் வயதான கிழவிகள் வரை அந்தக் கண்ணனுக்கு அலங்காரம் செய்து அமுது ஊட்டுவதிலேயே ஈடுபட்டிருப்பார்கள். அங்கே ஜைனர்களும் அதிகம். ஜைனர்களுக்கு திருப்பதி வெங்கடாசலபதியிடம் அபாரபக்தி. தமது வியாபாரத்தில் வெங்கடேசனைப் பங்கு தாரராக வைத்துக் கொள்வார்கள்.

ஆனால் காரியசித்திக்கு ஹநுமானையே துணை கொள்வார்கள். அதனால் ஹநுமானுக்கு பாலாஜி என்ற பெயர் தொத்திக் கொண்டு விட்டது.

## ஹரியானா பஞ்சாப் மாநிலங்களில் ஹநுமான்

### கைதல்

கரநால் என்ற இடத்திற்கு அருகே கபிஸ்தலம் - அந்தச் சொல் மருவி கைதல் ஆகியிருக்கிறது. இந்த ஊரில் பல

ஹநுமான் ஆலயங்கள். மஹாபாரதத்தில் தர்மபுத்திரர் துர்யோதனனுடன்ய ஸமாதானப் பேச்சுவார்த்தைகங்ள புரிந்த போது ''ஐந்து கிராமங்களையாவது விட்டுக்கொடு'' என்று வேண்டினார். அவர் வேண்டிய குறிப்பிட்ட ஐந்து கிராமங்களில் இது ஒன்று.

## ஸிரஸா

இது டில்லி படிண்டா ரயில் பாதையில் உள்ள ரயில் நிலையத்திற்கு அருகே உள்ளது. இங்கு ஆலயத்தில் விளங்குகின்ற ஹநுமானுக்கு **ஆசீர்முகீ ஹநுமான்** என்று பெயர். இந்த ஊரில் இருந்த **ஶ்ரீசாந்திஸ்வரூபஜீ** என்ற பிரபுவுக்கு ஓரே சமயத்தில் பல கஷ்டங்கள் ஏற்பட்டன. அவரிடம் ஒரு ஸாது வந்தார். உங்கள் தெருவிலேயே ஒரு ஹநுமானுக்கு ஆலயம் எழுப்பி வழிபடுங்கள் என்று அருள் பாலித்தார். சாந்தி ஸ்வரூபஜி -ஜயபூரிலிருந்து வெள்ளை சலவைக்கல்லில் வடித்த மூர்த்தியை வரவழைத்து -ஆலயம் நிர்மாணித்து முறைப்படி பிரதிஷ்டை செய்வித்தார். ஹநுமான் சாலீஸா பாராயணம் செய்தார். அவருடைய கஷ்டங்கள் விலகின. கிராமமும் ஸுபிக்ஷமாக வளர்ந்தது. **ஸாலாஸர் மோஹநதாஸ் வாணீ** என்ற நூலில் இந்த ஹநுமானைப் போற்றி பாடல் எழுதியிருக்கிறார்.

## பாடியாலா

இந்த நகரத்தில் ஸர்ஹிந்தீ மஹாத்வாரத்தின் அருகில் -ஶ்ரீமஹாவீர ஶ்ரீ ஹநுமானுக்கு பழய ஆலயம் உள்ளது. பஞ்ஜரால் ஶ்ரீமஹாவீரதளம் என்ற பெயரில் பெரிய சங்கமும் உண்டு. தீபாவளிக்கு முதல்நாள் இந்த ஹநுமானுக்கு எல்லோரும் பெரிய விழா கொண்டாடுவார்கள்.

## பிரோஜ்பூர்

இங்கு ரயில் நிலயத்தில் அருகில் - **ஶ்ரீதேவிஸஹாய ஹநுமான்** மந்திர் என்று புகழ்பெற்ற ஆலயம். இங்கு செவ்வாய்கிழமை தோறும் ஶ்ரீதுளஸிதாஸரின் மாநஸத்தின்

ஸ்ரீசுந்தர காண்டபாராயணம் நடைபெறும். யாத்திரிகர் தங்குவதற்கு ஒரு சத்திரமும் இருக்கிறது. அடிக்கடி இங்கே மேளாக்கள் நடைபெறும்.



# ஆந்திரபிரதேசத்தில் ஹநுமான்

## திருப்பதி

வெங்கடேச்வரர் ஸந்நிதிக்கு எதிரே ஸந்நிதித் தெரு முடிவில் **நிகட பத்த ஹநுமான்.**

ராமாயணகாலத்தில் ஹநுமான் ஸஞ்சீவி பர்வதம் கொண்டு வருவதற்காக ஆகாயமார்க்கமாக பறந்தபோது அஞ்ஜநா பர்வதத்தில் இருந்த அஞ்ஜநாதேவி ''ஹநுமந்தா இங்கே வா'' என்று கூவினாள். ஹநுமான் இறங்கி ஆகாயத்தில் மிதந்தபடியே,''தாயே! அவசரமாகப் போகிறேன். பிறகு வந்து உன்னை வணங்குகிறேன்.''

''புத்ர! என்னை வணங்குவது அப்புறமாகட்டும். இங்கே கோயில் கொண்டிருக்கின்ற ஸ்ரீவெங்கடேச பெருமாளிடம் ''ஸ்ரீராம ஸேவையில் ஈடுபட்டிருக்கின்ற உனக்கு எந்தவிதமான இடையூறும் வரக்கூடாது. புத்திரனை அங்கபிரதட்சிணம் செய்ய வைக்கிறேன்.'' என்று வேண்டிக் கொண்டிருக்கிறேன். இந்த வழியே போகின்ற நீ அந்த விரதத்தை நிறைவேற்றி விட்டுப்போ'' என்று மன்றாடினாள்.

''தாயே! மன்னித்துவிடு. கண்டிப்பாக நான் வருவேன். எடுத்துக் கொண்ட காரியம் நிறைவேறுகின்ற வரை பொறுத்துக் கொண்டிரு என்று சொல்லிப் பறந்து விட்டார்.''

ராமனுக்குப் பட்டாபிஷேகமும் ஆகிப்பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ராமஸேவையிலேயே ஈடுபட்டிருந்த ஹநுமானுக்கு தாயின் வேண்டுதல் மறந்து விட்டது.

அஞ்ஜநாதேவி ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். ஒரு சமயம் -ஸ்ரீராமப்ரபு ''ஹநுமந்தா - நீ லங்கைக்குப் போய் விபீஷணனைப் பார்த்து - நலம் விசாரித்து விட்டுவா'' என்று அனுப்பினார்.

அந்த வழியே பறந்துபோன ஹநுமானை தூரத்திலேயே பார்த்து விட்டாள் தாயார். வெங்கடேசரின் மஹாத்வாரத்தில் கட்டுப்பாட்டுக்குப் போட்டிருந்த பித்தளைச் சங்கிலியை எடுத்து ஆகாயத்தில் வீசினாள். அது ஹநுமானின் குரல் வளையைச் சுற்றிக் கொண்டது.

ஹநுமான் கீழே பார்த்தார். தாயார் அந்தச் சங்கிலியை முக்கி முக்கி இழுப்பதைப் பார்த்தார். கட்டுப்பட்டு ஹநுமான் தானாகவே கீழே இறங்கினார். தாயை வணங்கினார்.

பிள்ளாய்! முதலில் வெங்கடேசர் ஸந்நிதிக்குப் போய் - வெங்கடேசருக்கு - நூறுமுறை அங்கப்பிரதக்ஷிணம் செய்து விட்டுவா!'' என்றாள்.

''சங்கிலிக்கட்டு ரொம்ப வலிக்கிறது அம்மா!'' என்று கெஞ்சினார். அந்தச்சங்கிலிப்பிடியைத் தளர்த்தி நுனியைப் பிடித்துக் கொண்டு ஸந்நிதிக்கு அழைத்துப்போனாள். சங்கிலியைக் கீழே போட்டாள். சங்கலியும் சற்றுப் பிரிந்து கீழே வீழ்ந்தது. ஹநுமான் அங்கபிரதக்ஷிணம் செய்தார். கோவிந்தா கோவிந்தா என்று உரக்க நாமம் சொல்லிக்கொண்டு பிள்ளையின் தலையைப் புரட்டிவிட்டாள்.

பதினெட்டு பிரதக்ஷிணம் முடிந்தது. பெருமாள் அருகே வந்தார்.

''போதுமப்பா! எழுந்திரு'' அஞ்ஜநாதேவி கூறினாள். ''அவன் விரதத்தைத் மறந்து விட்டானே.''

பெருமாள் கூறினான். ''அவன் விரதத்தைக்கணம் கூட மறக்கவில்லை. ராவணனுடைய கடைசிப் போரில் ராமன் ராவணனுடைய பராக்ரமத்திற்கு ஈடு கொடுப்பதற்காக காந்தர்வாஸ்திரம் போட்டு ராவணனைத் திக்கு முக்காட வைத்துக் கொண்டிருந்தார். ஹநுமான் ராமனுடைய முகத்தைப் பார்த்தார். முகம் எல்லாம் சிவந்து வியர்வை வெள்ளமாகப் பெருகியது. அப்போது உன் பிள்ளை என்னை நினைத்து யுத்தகளத்தில் - விழுந்து கிடந்த அரக்க உடல்களின் மீது விழுந்து புரண்டான். ''கோவிந்தா - கோவிந்தா'' என்

பிரபுவைக் கடாட்சியுங்கள்.''என்று வேண்டினான். அவன் யுத்தகளத்தில் புரண்டதை - எனக்கு அங்கபிரதட்சிணமாக ஏற்றுக்கொண்டு விட்டேன்'' என்றார்.

ஹநுமானை எழுப்பி இறுக அணைத்துக் கொண்டார். அஞ்ஜநாதேவி ஆனந்தக் கண்ணீர் விட்டாள்.

ஹநுமான் கூறினார்.

''ப்ரபோ! அன்று யுத்தத்தில் என் பிரபுவுக்கு வெற்றித் தேடித்தந்த தங்களுடைய ஸந்நிதியிலேயே என் தாய் கட்டிய சங்கிலியில் பிணைபட்டு நின்று கொண்டிருப்பேன்.''

''ஹநுமந்தா! வேண்டாம். உன் பிரபுவுக்கு நீ அருகில் இல்லாவிடில் அவருடைய பக்தர்களுக்கு அவர் அருளுகின்ற பேருதவிகளை வேறு எவராலும் சாதிக்கமுடியாது. நீ உன் பிரபு ஸேவையிலேயே இரு.''

அஞ்ஜநாதேவியும் கூறினாள். ஆமாமப்பா! பெருமாள் ஆணையை நிறைவேற்று - நீ போய் வா!

அம்மா! உன்னுடைய சங்கிலிப்பிணையில் பிடிபட்ட படியே - என் பிரபுவின் ஆணைகளையும் நிறைவேற்றுவேன்'' என்றார்''. ஹநுமானின் அந்த கருணை குறையாமல் இன்றும் பிரவஹித்து வருகிறது.

ஆந்திரர்கள் வெங்கடேவரரிடம் அளவற்ற பக்தி கொண்டவர்கள். அவரிடம் பிணைப்பட்ட ஆஞ்நேயரிடமும் அளவற்ற பக்தி. ஆந்த்ரபிரதேசத்தில் எங்கு பார்த்தாலும் ஹநுமான் தர்சனமளிப்பார். ஸஞ்ஜீவிராய ஸஞ்ஜீவய்யா ஹநுமந்தையா - என்று பெருவாரியாகக் குழந்தைகளுக்குப் பெயரிடுவார்கள்.

## ஹைதராபாத்

**ஹைதராபாத்**, ஸெகந்தராபாத் என்ற இரட்டை நகரின் நடுநாயகனாக ஹநுமான் தான் விளங்குகிறார். இந்த

இரு நகரங்களிலும் உள்ள பல சிவாலயங்கள் பெருமாள் ஆலயங்கள் தேவி ஆலயங்களில் சேர்த்துக் கூட்டினால் - ஹநுமான் ஆலயங்கள் தான் மிகுதியாக இருக்கும். பிரஸித்தமான சிவாலயங்களில் கூட ஹநுமானுக்கு ஆலயம் உண்டு. விஜயவாடாவில் ஹநுமான் ஆலயத்தில் பக்தர்கள் கூட்டம் குறையவே குறையாது.



# நான்காவது பகுதி

## 1.ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

ஸ்ரீமந்நாராயணனுடைய அந்தரங்க கைங்கர்ய ஸ்ரீமான்களில் முதல்வர் கருடாழ்வார் பெரியதிருவடி. அவருக்கு அடுத்தஸ்தானம் ஹநுமானுக்கு. சிறியதிருவடி என்று புகழ்.

ஸ்ரீமந்நாராயணனை விட்டுப்பிரிந்த ஜீவனை ஆசார்யர் தன் உபதேசத்தாலே செம்மைப்படுத்தி சரணாகதி செய்யத் தகுதியுள்ளவனாகத் தயாரித்து. - அப்படித் தன்னைப்ப்ரபத்தி பண்ணின சீடனை பகவானுடைய சரணங்களில் ஸமர்ப்பித்துச் சேர்த்து வைக்கிறார். ஆசார்யனுடைய புருஷகாரம் இல்லாமல் பகவானைச் சரணாகதி - நேரடியாக அடைவது சாஸ்த்ரஸம்மதமல்ல.

புருஷ காரம் என்றால் இவன் ஏற்கத்தக்கவன் என்று பெருமாளிடம் ஆசார்யன் விண்ணப்பிக்கின்ற சிபாரிசு. அப்படி அசோகவனத்தில் உயிரைவிடத் துணிந்த ஸீதாதேவிக்கு அபயமளித்து ரக்ஷிஷ்யதி - உன்னைக் காப்பாற்றத் தான் போகிறான் ராமன் - என்று திட விச்வாஸத்தை ஏற்படுத்தினார். ராமனிடம் ஸீதையை மீட்பதில் தாமதம் கூடாது என்று உணர்த்திய ஆசார்யபுருஷன் ஹநுமான் - என்ற சிறப்பு

## வைகாநஸஸம்பிரதாயத்தில் ஹநுமான்

பிரம்ம தேவனின் புத்திரரான மரீசி பகவான் - எழுதிய விமாந அர்ச்சனா கல்பம் என்ற நூலில் ஹநுமத்த்யானஸ்வரூபம் இவ்வாறு கூறப்படுகிறது.

ராமஸ்ய புரத: ஆஞ்ஜநேய:

ச்₊வேதவஸ்த்ரத₄ர: கபிரூப:

ஸர்வாபூ₄ரண பூ₄ஷித:

த்₃வி பு₄ஜ: த₄க்ஷிண ஹஸ்தேந

**ஆஸ்யம் பிதாய – வாமஹஸ்தேந**
**வஸ்த்$_4$ரம் பித$_4$ாய அவநதக$_3$ாத்ர:**
**ஸ்தி$_4$த : வார்த்தா விஜ்ஞாபநபர:**
**ம்ருக$_3$ வாஹந: த$_4$ண்ட த்$_4$வஜ:**
**மஹா நாத$_3$: ச்ராவணேமாஸி**
**ச்ரவணஜாத: கலாதி$_3$ அக்ஷரபீ$_3$ஜ:**
**ஹநுமாந்**

ராமனுடைய **முன்னால்** வலதுகை விரல்கள் வாயின் அருகே ஆஞ்ஜநேயர் வெண்ணிறஆடை உடுத்தி, வாநர உருவத்தில், ஸர்வாலங்காரபூஷிதனாக, இரண்டு கைகளுடன், - வலது கையினால் வாயைப்பொத்திக் கொண்டு, இடதுகையை வஸ்த்திரத்தில் மூடிக் கொண்டு, செய்தி சொல்பவராக மான்வாஹநம் உடையவராக, கொடிக்கம்பத்தை தோளில் சாத்திக்கொண்டு, உயர்ந்த குரலில் ராம நாமம் கோஷித்துக் கொண்டு காட்சிதருவார்.

புரட்டாசி மாதம் திருவோண நட்சத்திரத்தில் உதித்தவர் - கலைகளுக்கு முதல் அட்சரமான ''ஹ'' வை பீஜாட்சரமாக உடையவர்.

## மத்வஸம்பரதாயத்தில் ஹநுமான்

அநந்த கோடி ப்ரஹம்ாண்ட நாயகனான பகவான் விஷ்ணுவின் பக்தர் வாயுதேவன் முக்யப்ராணன் என்று பெயர். அவருடைய குமாரன் ஹநுமான், அவருடைய முதல் அவதாரம் ஹநுமான். இரண்டாவது அவதாரம் பீமஸேனன், மூன்றாவது அவதாரம் பூர்ணப்ரஜ்ஞர் என்ற மத்வாசாரியார் என்ற கொள்கை.

வால்மீகிராமாயணத்தில் ஸுந்தர காண்டத்தில் ஸீதாதேவி ஹநுமானை

**விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்த$_2$ஸ்த்வம் ப்ராஜ்ஞஸ்த்வம் வாநரோத்தம** என்று கொண்டாடுகிறாள்.

அந்த வாக்கியத்தில் விக்ராந்தன் என்று பீமஸேனனையும் ஸமர்த்த - என்று ஹநுமானையும் -ப்ராஜ்ஞ என்று மத்வாசார்யரையும் ஸூசனையாக தெரிவிக்கிறது என்பர் பெரியோர்.

மத்வஸம்பிரதாயத்தில் வாயு பகவான் விஷ்ணு பகவானுக்கு கைங்கர்யம் செய்வதற்காக - ராமாவதாரத்தில் ஹநுமானாகவும் க்ருஷ்ணாவதாரத்தில் பீமஸேனராகவும் கலிகாலத்தில் வ்யாஸ பகவானுமான விஷ்ணு மத்வாசாரியராகவும் அவதாரம் செய்தார் - என்று மரபு கூறுவார்கள்.

ஸ்ரீநாராயண பண்டிதாசார்யர் தனது **ஸுமத்வவிஜயம்** என்ற நூலில் ஒரு குறிப்புத் தருகிறார்.

உலகியலில் எவையெல்லாம் நற்பண்புகள் - என்று பெரியோர்களால் ஏற்கப்பட்டுள்ளனவோ. அவற்றிற்கு ஹநு என்று பெயர். அவற்றை உடையவன் ஹநுமான் என்று விளக்கம் தருகிறார்.

**யேயே கு$_3$ணா நாம ஜக$_4$த்ப்ரஸித்த$_4$ா:**
**யம் தேஷு தேஷுச விநிர்தி$_3$ச$_+$ந்தி**
**ஸாக்ஷாத் மஹாப$_4$ாக$_3$வத ப்ரவாஹம்**
**ஸ்ரீமந்தம் ஏநம் ஹநுமந்தம் ஆஹு:!**

ஸ்ரீராமனுக்கு ஹநுமானை விட அதிகம் பிரியமானவன் கிடையாது. ராமனைவிடச் சிறந்த - ராம ராஜ்யத்தில் கிடைக்காத - ஸுகவஸ்துவோ ஸுகஸ்தானமோ வேறெங்கும் கிடையாதே. ஸ்ரீராம சரண ஸேவையிலேயே பேரின்பம் அடைந்த ஹநுமானுக்கு ஸ்ரீராம சரணஸேவை தவிர வேறு எதிலும் மனம் செல்லவில்லை. அவர்பிற ஸுகபோகங்களில் வைராக்யம் உள்ளவர் - என்று சொல்வது ஆச்சர்யமல்ல - என்கிறார் அந்தக்கவி.

*ப்ரேஷ்டோ ந ராமஸ்ய ப$_3$பூ4வ$_4$ தஸ்மாத்*

*ந ராம ராஜ்யே அஸூலப$_4$ம்ச கிஞ்சித் ।*

*தத்பாத$_3$ஸேவாரதி ரேஷ நைச்ச$_2$த்*

*க$_3$தா$_2$பி போ$_4$காந்$_3$நநுஸா விரக்தி: ॥*

கேட்போருக்கெல்லாம் பிரஹ்மாநந்தத்தை அளிக்கின்ற ராமகதையில் திளைக்கின்ற ஹநுமான் இன்றும் கிம்புருஷ பிரதேசத்தில் ராமனை வழிபட்டுக் கொண்டிருக்கிறார் - என்கிறார் அந்தக்கவி.

*ஸ்வாநந்த$_3$ ஹேதௌ ப$_4$ஜதாம் ஜநாநாம்*

*மக்ந: ஸதா ராமகத$_2$ாஸூத$_4$ாயாம் ।*

*அஸாவித$_3$ாநீம் ச நிஷேவமாண:*

*ராமம் பதிம் கிம்புருஷே கிலாஸ்தே. ॥*

## வல்லபஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

வல்லபாசார்யரால் துவக்கி வைக்கப்பட்ட ஸம்ப்ராதாயத்திற்கு முக்கிய ப்ரமாண நூல்கள் நான்கு.

1. வேதங்கள்

2. ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமொழியான ஸ்ரீமத்பகவத்கீதை.

3. வியாஸரின் ப்ரஹ்மஸூத்ரங்கள்

4. அவற்றை விளக்குகின்ற வியாஸரின் ஸ்ரீமத்பாகவதம்

*வேதா : ஸ்ரீக்ருஷ்ணவாக்யாநி*

*வ்யாஸஸூத்ராணி சைவஹி ।*

*ஸமாதி$_4$ப$_4$ாஷா வ்யாஸஸ்ய*

*ப்ரமாணம் தச்சதுஷ்டயம் ॥*

*அந்த ஸ்ரீமத் பாகவத்தில் ஐந்தாவது ஸ்கந்தத்தில் பத்தொன்பதாவது அத்யாயத்தில் இவ்விதம் காணப்படுகிறது.*

*கிம்புருஷவர்ஷத்தில் ஆதிபுருஷனான பகவான் லக்ஷ்மணனின் தமையன் ஸீதாபதி ராமனை அவருடைய திருவடிகளின் ஸேவைகளில் ஈடுபட்டுக் கொண்டு பரம பாகவதரான ஹநுமான் கிம்புருஷர்கள் என்ற கந்தர்வர்களுடன் -ஓயாமல் பக்தி பண்ணிக் கொண்டிருக்கிறார் இன்றும் -*

*வல்லபாசாரியார் - தனது திவ்யக்ஷேத்ரயாத்திரைகளின் போது கோவர்த்தனம் சென்றார். அங்கு கிரிதரனான ஸ்ரீநாதனை ஸேவித்தார். அங்கிருந்து சித்ரகூடம் சென்றார். இங்கு ஹநுமான் ஸ்ரீவால்மீகி இராமாயணத்தை பாராயணம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்தார். அவ்வப்போது குரல் தழுதழுத்து விம்மி விம்மி அவர் ஹரே ஸ்ரீராம என்று கோஷம் செய்வதைப் பார்த்துப் பரவசப்பட்டார். இந்த விஷயத்தை கோவர்த்தன கிரியில் நடந்த ப்ரவசனத்தில் வல்லபர் எடுத்துச் சொன்னார்.*

***அஞ்ஜநீ கர்ப்ப$_4$ஸம்பூத***
***கபீந்த்ர ஸசிவோத்தம ।***
***ராமப்ரிய நமஸ்துப்யம்***
***ஹநுமன் ரக்ஷ ஸர்வ$_3$தா ॥***

*என்று துதித்தார்.*

*வல்லபாசார்யார் தனது பிறந்த நாட்களில் வல்லடுபஸம் பிரதாயத்தில் சிரஞ்சீவியான மார்க்கண்டேய பூஜை செய்வதுண்டு. அப்போது ஏழு சிரஞ்சீவிகளுக்கும் பூஜை உண்டு. அப்போது ஹநுமானுக்கு விஸ்தாரமாகப் பூஜை செய்வார்கள். வீடுகளில் குழந்தைகளின் ஆண்டு நிறைவுக்கு இந்த பூஜை தவறாமல் நடக்கும்,*

வல்லபாசாரியரின் கடைசி நாட்களில் காசியில் ஹநுமான் காட் என்ற இடத்தில் ஹநுமானுடைய ஸந்நிதியில் தான்- ஸந்நியாஸம் ஏற்றார். தனது இருகுமாரர்களுக்கும் பாலக்ருஷ்ண உபாஸனைபற்றி விளக்கம் அளித்தார். ஸ்ரீநாதர் நேரே தர்சனம் அளிக்க - கங்கையில் ஜலஸமாதி அடைந்தார்.

வல்லபஸம்ப்ரதாயத்தில் ஹநுமானுக்குத் தனி மஹத்துவம் உண்டு. வல்லபரின் குமாரர் கோஸ்வாமி **விட்டலநாதர்** - ஹநுமானைப் பற்றிய பலகீர்த்தனங்கள் பாடியிருக்கிறார்.

இந்த**ஸம்ப்ரதாயத்தில்** யசோதை இளம்சிங்கம் நந்தகோபன் குமரன் கோவர்த்தன கிரிதாரி தான் முக்கியமாகக் கொண்டாடப்படுகிறார். ஆனால் விட்டலநாதர் ஏற்படுத்திய எட்டுயாமங்களில் பூஜை என்ற முறையில் பகவானுடைய ஸந்நிதியில் சாரதநவராத்ரியின் போது ஹநுமானைப் பற்றிய பல பாடல்கள் பாடுவது உண்டு. அந்தப் பாடல்களுக்கு **''கரரவா''** என்று பெயர். அவை **மாரூ** ராகத்தில் பாடப்படுகின்றன.

**அஷ்ட சா₂ப மஹாகவிகள்** என்று எட்டு பேர்கள் க்ருஷ்ண லீலைகளை விரிவாகப் பாடியவர்கள். அவர்களுள் **ச்₊யாம₃தாஸ்** என்பவரும் ஸ்ரீஸுூர்தாஸரும் ஹநுமானைப்பற்றி அருமையான பதங்கள் பாடியுள்ளனர்.

அதுபோல **ஸ்ரீக்ருஷ்ணதாஸர் அநந்த தாஸர்** இருவரும் ஹநுமானின் பக்தி பரவசத்தை மிக அழகாகப் பாடியிருக்கிறார்கள். இவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனைத் தவிர வேறு எந்தவிஷயத்தையும் கவனிக்காதவர்கள். ஆயினும் ஹநுமானிடம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்கள். புஷ்டி மார்க்கத்தில் ஈடுபட்ட பக்தர்களிடையே இவற்றிற்கு மிகவும் ஆதரவு உண்டு. இவர்கள் தமது ஊர்களில் ஹநுமானுக்கு ஆலயங்கள் கட்டி மஹோற்சவங்கள் கொண்டாடியவர்கள்.

இந்த ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீக்ருஷ்ணனே பரப்ரஹ்மம் என்பதை வேதாந்த சாஸ்த்ர ரீதியாக ஸித்தாந்தம் செய்த

பெரியோர்களிடையே குரு திலகாயித ஸ்ரீமுகுடமணி அவர்கள் முக்யமானவர்.

ஔரங்கசீப்புக்கு பிற்காலத்தில் மேவாரில் ஸ்ரீநாதருக்கு ஸ்ரீநாதத்வாரா - என்ற ஆலயம் எழுப்பப்பட்டது. அப்போது ஹநுமானுக்கும் பக்கத்தில் உள்ள ஸிம்ஹாட் என்ற கிராமத்தில் ஆலயம் எழுப்பினர். அந்த ஆலயத்தில் உள்ள ஹநுமான் மிகவும் வரப்ரஸாதியாக விளங்குகிறார். அங்கு ஹநுமத் ஜயந்தி மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. மற்ற வைஷ்ணவாசாரியர்களும் அந்த ஆலயத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டவர்கள்.

நந்தலால் யசோதா நந்தன் பாலக்ருஷ்ணனைத் தவிர வேறு எந்த தெய்வத்தையும் தொழுவதில்லை என்ற பிடிவாதமான கட்டுப்பாடுள்ள வல்லபஸம்ப்ரதாயத்தில் ஹநுமான் எப்படியோ உட்புகுந்து அவர்களை ஆட்கொண்டுவிட்டார்.

**நந்த யசோதாகேலால்** என்று ஜயகோஷம் முழுங்குவதோடு கூட **பஞ்ச$_2$ட$_3$கே லௌம்டேகீஹூப் – வாஹ ப்யாரே!** வாலோடு லூடி பண்ணுகிறவனுக்கு ஹோ - என்று கோஷம் போடுவார்கள். ஒரே குரலில் ஆயிரம் பேர் சேர்ந்து கோஷம் போடும் போது -அது உச்ச நிலையை எய்தி விடும். கோவர்த்தன கிரியின் ஒரு பக்கத்தின் **வால்கரலூடியின்** கோவில் -எல்லோருடைய வேண்டுதல்களையும் நிறைவேற்றிக் கொண்டு -ஹூப் என்ற கோஷத்தைக்கிளப்பிக் கொண்டு ஆநந்தமாக இருக்கிறார். இதைப் பெரியோர்களான ஞானிகள் ஆச்சரியத்துடன் கேள்விக்குறி போடுகிறார்கள். அதே நேரம் கொண்டாடவும் செய்கிறார்கள்.

## கௌடீய ஸம்பிரதாயத்தில் ஹநுமான்

சைதன்யமஹாப்ரபுவை ஆச்ரயித்தவர்கள் கௌடீயர்கள். வங்க நாட்டில் இந்த கௌடீயஸம்ப்ரதாயம் நன்கு பரவி இருக்கிறது. சைதன்யமஹாபிரபுவின் பிரதான

சீடரான ஸ்ரீமுராரி குப்தரை ஹநுமானின் அவதாரம் என்றே கூறுவார்கள். கௌரகணோத்கர்ஷதீபிகா என்ற நூலில் இப்படி ஒருச்லோகம்

**முராரிகு$_3$ப்தோ ஹநுமாந்**

**அங்க$_3$த: ஸ்ரீ புரந்த$_3$ர: ।**

**ய: ஸ்ரீஸுக்$_3$ரீவ நாமா SSஸீத்**

**கோ$_3$விந்தா$_3$ நந்த$_3$ ஏவ ஸ: ॥**

முராரி குப்தர் தான் ஹநுமான். புரந்தரர் தான் அங்கதன்.

கோவிந்தாநந்தர் ஸுக்ரீவன்.

முராரிகுப்தருக்கு சிலசமயம் அவர் உடலில் அடங்காத வீர்யம் எழும்பும். நவத்வீபத்தில் ஒரு சமயம் ஜகாயீ மதாயீ என்ற இரு முரடர்கள் ஸாதுக்களுக்கு தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தனர். மஹாப்ரபுவுக்கு அவர்களிடம் கருணை வந்துவிட்டது. அவர்கள் நாக்கில் ஹரி நாமத்தை ஏற்றிவிட்டால் திருந்தி விடுவார்கள் என்று நம்பினார்.

முராரி குப்தரை அனுப்பி அவர்களை அழைத்துவரச் சொன்னார். முராரி குப்தர் போய் அவர்களை அழைத்தார்.

''எங்களை எவன் கூப்பிடுகிறான்?'' கூப்பிட்டால் போய் விடுவோமோ''. என்று சீண்டினார்கள், முராரி குப்தா, கால் மேல் கால் போட்டுக்கொண்டு அமுத்தலாக உட்கார்ந்திருந்த அவர்களை நெருங்கிக் கைகளை விரித்தார். விரித்த கைகளை அவர்கள் இருவரும் தட்டலாமென தம் கைகளை நீட்டினர். அந்த கைகளை முறுக்கி ஒடித்து இடுப்பில் இடுக்கிக் கொண்டு வந்து மஹாப்பிரபுவின் முன்னே பொத் - என்று போட்டார் முராரிகுப்தர். மஹாப்ரபு அவர்களிடம் சென்று தமது திருக்கரங்களால் அவர்களைத் தடவினார். உணர்வு பெற்று வலி நீங்கி, இருவரும் எழுந்தனர்.

ஹரே க்ருஷ்ணா என்று சொல்லுங்கள் - என்றார்.

''இனி வேறு பேச்சு பேசக்கூடாது அவர்கள் சொன்னார்கள். சரிதானா?''

அவர்கள் ''ஹரேக்ருஷ்ண ஹரே ராம் என்று கோஷிக்க ஆரம்பித்து விட்டனர்.

முராரி குப்தர் வெறும் முரட்டு வீரர் அல்ல. உள்ளம் கனிந்தவர். அவர் தான் **ஸ்ரீக்ருஷ்ண சைதந்யசரிதாம்ருதம்** எழுதியவர் .

அதில் எழுதுகிறார்

''ஒரு நாள் ஸ்ரீகௌராங்கர் முராரியிடம் கூறினார். நீ ஸ்ரீரகுநாதாஷ்டகம் பாடியிருக்கிறாயாமே! அதைப் பாடேன்''

நாத் தழுதழுக்க அதைப் பாடினார் முராரி. அதைக் கேட்டு ப்ரபு மனம் உருகிவிட்டது.

தனது திருக்கரங்களால் அவனுடைய தலையில் ''ராமதாஸன்'' என்று எழுதினார். அவனை மார்போடு தழுவினார்.

கௌடீயஸம்ப்ரதாயத்தில் மிகச் சிறந்த திலகமாக விளங்கிய **ஸ்ரீரூபகோஸ்வாமி** தனது **பத்யாவளி** என்ற நூலில் இவ்வாறு எழுதுகிறார்.

ஸ்ரீவிஷ்ணுவின் கதை கேட்பதில் **பரீக்ஷித்!** கதை ப்ரவசனத்தில் **சுகாசார்யர்!** த்யானம் செய்வதில் **ப்ரஹ்லாதர்!** பெருமான் திருவடிகளைப் பற்றுவதில் **லக்ஷ்மீ தேவி!** பூஜை செய்வதில் **ப்ருது மஹாராஜன்!** தரையில் விழுந்து புரண்டு வணங்குவதில் **அக்ரூரர்!** தாஸனாகக் கைங்கர்யம் செய்வதில் **ஹநுமான்!** - நட்புரிமை கொண்டாடுவதில் **அர்ஜுநன்.!** தன்னையே பகவானிடம் அர்ப்பணம் செய்வதில் **மஹாபலி!** இவர்கள் அனைவரும் கண்ணனை அடைந்தனர்.

***ஸ்ரீவிஷ்ணோ: ;ஸ்மரணே பரீக்ஷித் அப$_4$வத்***

***வையாஸகி: கீர்த்தநே;***

***ப்ரஹலாத$_3$ : ஸ்மரணே***

***தத$_3$ங்க்$_4$ரிப$_4$ஜநே லக்ஷ்மீ;***

***ப்ருது$_2$: பூஜநே!।***

***அக்ரூரஸ்த்வபி வந்த$_3$நே***

***கபிபதிர்தாஸ்யே த$_2$***

***ஸக்$_2$யே அர்ஜுந:***

***ஸர்வஸ்வாத்ம நிவேத$_3$நே ப$_3$லி ரபூத்***

***க்ருஷ்ணாப்தி: ஏஷாம் பரம்***

*ஹநுமானை இந்த கோஷ்டியில் சேர்த்திருக்கிறார்.*

*சாண்டில்ய பக்திஸூத்ரத்தில் பக்தனுக்கு அடையாளம் கூறுகிறார்.*

1. *இஷ்ட தெய்வத்திடம் பெருமை காண்பது*
2. *அதைக் கொண்டாடுவது*
3. *பேரன்பு*
4. *விட்டுப்பிரிந்தால் வேதனைப்படுவது*
5. *மற்றொன்றைக் கருதாமை*
6. *பெருமையைப் புகழ்வது*
7. *அந்த தைவத்திற்காகவே உயிரைத் தாங்குவது*
8. *அவனின்றி தானில்லை என்று நினைப்பது*
9. *எங்கும் அவனைக் காண்பது*
10. *அவனுக்கு எதிராகச் செயல்படாமை*

*இந்த ஸூத்ரத்திற்கு பாஷ்யம் எழுதிய **ஸ்ரீஸ்வப்நேச்வரர்** - ஏழாவது லட்சணத்திற்கு உதாஹரணமாக ஹநுமானைக் குறிப்பிடுகிறார்.*

ஸ்ரீமத் பாகவதத்தில் ஐந்தாவது ஸ்கந்தத்தில் கிம்புருஷவர்ஷத்தில் -ஏகாந்த மாக குரலினிமையுள்ள கந்தர்வர்களைச் சேர்த்துக் கொண்டு பாடுகிறார்.

''ராமன் மானிட அவதாரம் எடுத்தது ராவணனை வதம் செய்வதற்காக மட்டும் அல்ல. அது லட்சியமே அல்ல. மனிதனாகப் பிறந்தவன் மனிதனாக வாழ வேண்டும். தன்னை அண்டியவர்களின் க்ஷேமத்தில் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும் இப்படி - தானே வாழ்ந்து காட்ட வேண்டும் என்பதற்காகவே அவதாரம் எடுத்தார். -ஸீதையைப் பிரிந்து அவர் பட்டதுயரமெல்லாம், புலம்பல் எல்லாம், காதல் மனைவியின் சுகங்களை இழந்து விட்டோமே - என்பதற்காக அல்ல - தன் வாழ்வைக் கணவனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு கணவனையே நம்பி ராஜ சுகபோகங்களை எல்லாம் துறந்து காட்டில் - எவ்வித சௌகர்யமும் இன்றி நிமிடங்கள் தோறும் இன்னல்களை அநுபவித்துக் கொண்டு - ஆனால் மலர்ந்த முகத்துடன் கணவன் பணிவிடையில் சற்றும் அலுக்காமல் - தன்னைப் பேணி வந்த மனையாளை அரக்கனிடம் பறிகொடுத்தோமே! அவள் எத்தனை துன்பங்களை அநுபவிக்கிறாளோ? என்று அவள் பால் பரிவு கொண்டு புலம்பினார். - என்பது தான் உண்மை. மனைவியை இழந்தவன் அவளை மீட்கத் துணியாமல் தன் சுகத்தையே நாடி மறுமணம் செய்து கொள்பவன் மனிதப் பதர் என்பதை நிருபிக்கவே ராமன் மஹாஞானியாக இருந்த போதிலும் தேவியின் பிரிவினால் வருந்தினார். அதுவே மனிதப்பண்பு.

அதைவிட்டு - ஞானி என்ற மனோபாவத்துடன் - மனைவியைப் பறி கொடுத்துவிட்டு -வேதாந்தம் பேசிக்கொண்டு மூக்கைப்பிடித்துக் கொண்டு உட்கார்ந்தவன் ஞானியுமல்ல. மனிதனுமல்ல. அவன் உலகியலில் ஸம்ஸாரத்தில் ஈடுபாடு அற்றவன்தான் ஆயினும் அவன் மனிதப்பண்புஅற்றவன். இது ஒருபுறம் இருக்கட்டும்.

ராமன் அடியாரை மதிப்பிடும் போது நல்லகுலத்தில் பிறந்தவன் என்றோ, நல்ல செல்வம், உடையவன், என்றோ, நல்ல பேச்சாளன் என்றோ, ஆள் ஆழகாக வாட்டசாட்டமாக இருக்கிறான் - என்றோ, கணித்து அவனிடம் ஸந்தோஷப்படுவதில்லை. இத்தகையை தகுதிகள் ஒன்றுமில்லாத இந்த வாநரஜன்மங்களுடன் -அவர்களின் பரோபகார சிந்தை ஒன்றை மட்டும் மதித்து நட்புரிமை கொடுத்தாரே! தேவன் ஆகட்டும்; அஸுரன் ஆகட்டும்; வாநரனோ; நரனோ; செய் நன்றியுடையவனே சிறந்தவன் என்றல்லவா மனிதப்பிறவி எடுத்து நிரூபித்தார். தான் வைகுண்டம் சென்ற போது - அயோத்தி மண்ணில் பிறந்த மனிதர் மிருகங்கள் பறவைகள் புழுபூச்சிகள் தாவரங்கள் புல்பூண்டுகள் அனைத்தையும் அல்லவா வைகுண்டம் அழைத்துச் சென்றார். அவரல்லவா நமது இஷ்டதைவம்.''

என்று ஹநுமான் கொண்டாடிப் பாடினார் - என்று அந்தப் பாகவதப்பகுதி கூறுகிறது. இந்தப் பகுதிக்கு விளக்கமளித்த ஸ்ரீஜீவகோஸ்வாமிகள் தன்னுடைய **க்ரமஸந்தர்ப்பம்** என்ற ஸ்ரீமத்பாகவத விளக்கவுரையில்

''ஸ்ரீராமனுடைய லோகலீலாவின் மாதுர்யம் இனிமை (சிறிதும் திகட்டாத இனிமை) இந்தஸ்தோத்ரப்பாடலில் துலங்குகிறது. இனிமை என்றால் இது தான். மனிதப் பண்பின் சிகரமான ராம வாழ்க்கையின் இந்த விசேஷம் இந்த ஹநுமானின் ராமனைப்பற்றி பாடலில் மாதுர்யரஸத்தின் எல்லையைத் தொட்டுவிட்டது என்று எழுதினார்.

## ஸ்ரீராமாநந்தஸம்ப்ரதயத்தில் ஹநுமான்

வடநாட்டில் - வ்ரஜபூமி எனப்படும் ப்ருந்தாவனத்திலும் அயோத்திப் பகுதியிலும் ராமாநந்த ஸம்ப்ரதாயம் மக்களிடையே மேவி நிற்கின்றது.

அந்த ராமாநந்தஸம்ப்ரதாயத்தில் ஹநுமானையே முதல் ஆசார்யராகக் கொண்டாடுகிறார்கள். கபீர் முதலிய ஸாதுக்கள் ராமாநந்த ஸம்ப்ரதாயத்தைச் சார்ந்தவர்கள்.

ஆசார்யனான ஹநுமானை விட்டுவிட்டு மற்றவரை ஆசார்யராக ஏற்பவர்கள் மரத்தின் வேரைவெட்டி விட்டு - இலையைப் பிடித்துக் கொண்டு தொங்குபவர்கள் முட்டாள்கள்.

ஹநுமான் என்ற பரமாசார்யரைத் தவிர வேறு ஆசார்யர் கிடையாது இப்படித்தான் முன்னோர்களின் கொள்கையை நானும் உபதேசிக்கிறேன் என்கிறார் ராமாநந்தர்.

***ஆசார்யம் து ஹநுமந்தம் த்யக்த்வா அந்யம் ய –உபாஸதே***
***க்லிச்யந்த்யேவ ஸத$_3$ா முக்$_3$த$_4$ா: மூலஹா:***
***பல்ல வாச்$_+$ரிதா: ||***
***இமாம் ஸ்ருஷ்டிம் ஸமுத்$_3$பாத்ய ஜீவாநாம் ஹிதகாம்யயா |***
***ஆத்$_3$யாம் சக்திம் மஹாதே$_3$வீம் ஸ்ரீஸீதாம் ஜநகாத்மஜாம் ||***
***தாரகம் மந்த்ர ராஜம் தம் ச்$_+$ராவயாமாஸ ஈச்வர:|***
***ஜாநகீது ஜகன் மாதா ஹநுமந்தம் கு$_3$ணாகரம் ||***
***ச்ராவயாமாஸ நூநம்ஹி ப்$_3$ரஹ்மாணம் ஸுதியாம் வரம்***
***வாமதே$_3$வோ வஸிஷ்டே$_2$ாபி க்ரமாத் அஸ்மாத் அவாதரத்***
***வஸிஷ்டஸ் தாரகம் நாம வ்யதா$_4$த்த$_3$ாசரதே$_2$: ஸுதீ$_4$:|***
***தந்நாமக்ரஹணாத் ராம: பரமாத்மா ऽ பவத் ஸ்வயம் ||***

***(வால்மீகிஸம்ஹிதா)***

இந்த குருபரம்பரையை விஸ்தாரமாக எடுத்துச் சொல்லுகிறது. வால்மீகிஸம்ஹிதை. வேறு காப்பார் அற்ற தாஸர்கள் அவரையே சரணமடைவர். அவர் உள்ளத்தில் கிருபையே நிரம்பியுள்ளது. பரமாத்மா இவ்வுலகைப் படைத்து பிறந்த ஜீவர்களுக்கு ஹிதம் செய்வதற்காக பரப்ரம்மம் ஆதிசக்தியான மஹாதேவி ஜநகராஜ குமாரி ஸ்ரீஸீதா தேவிக்கு தாரக நாமமான ராம என்ற மந்திரத்தை உபதேசித்தார். அந்த ஜாநகீதேவி உலகின் தாய்.

நற்பண்புகளின் கருவூலமான ஹநுமானுக்கு அதை உபதேசித்தாள். அவர் வஸிஷ்டருக்கு உபதேசம் செய்தார். அவர் தசரத குமாரனுக்கு அந்த மந்த்ரத்தை பெயராக வைத்தார். அதனால் மஹிமை பெற்ற ராமன் - பரமாத்மா ஆனார்.

அந்தஸம்ப்ரதாயத்தின் ஆசார்யர் ஒருவர் **ஸ்ரீமத் அநந்தா சார்யஜீ தனது ஸித்தாந்த தீபகத்தில்** வணங்குகிறார்

**மாருதிம் தீ$_4$ரவஜ்ராங்க$_3$ம் ப$_4$க்தரக்ஷண தீ$_3$க்ஷிதம் ।**
**ஹநுமந்தம் ஸதா$_3$வந்தே$_3$ ராமமந்த்ராத்மகம் கு$_3$ரும் ॥**

ராமமந்த்ரமே உருவான குருஹநுமானை வணங்குகிறேன் - என்கிறார்.

ஹநுமான் ஓர் அந்தணர்

**கர்ணகுண்ட$_3$ல லக்ஷண்ய:**
**முஞ்ஜயஜ்ஞோபவீதக:**
**(தந்த்ரஸாரம்)**

**காந்தே$_4$ மூஞ்ஞ ஜநே உ ஸாஜை**

ஹநுமார் சாலீஸா தோளிலே முஞ்சை முப்புரி நூலோன். ஸ்ரீபரமேச்வரனுக்கு ருத்ரைகாதசிநீ. ஸ்ரீநாராயணனுக்கு ஸுதர்சநஹோமம். அதுபோல் இந்தஸம்ப்ரதாயத்தில் **ஸ்ரீமாருதி மஹாயஜ்ஞும்** உண்டு. ராமரஹஸ்ய உபநிஷத்தில் அந்த யஜ்ஞத்திற்கு உரிய மந்த்ரங்கள் விதிமுறை காணப்படுகின்றன. வாராணஸியில் ராமாநந்தஸம் ப்ரதாயம்சார்ந்த ஹநுமான் கோயில் புகழ் பெற்றது.

**பகவாந் ராம சந்த்ரோவை**
**பரம் ப்ரஹ்ம ச்ருதிச்ருத: ।**
**த$_3$யாளு: சரணம் நித்யம்**
**த$_3$ாஸாநாம் தீ$_3$ந சேதஸாம் ॥**

ஹநுமானின் அனுமதி பெற்று உள்ளே நுழைபவர்களை - ஸீதம்மா வரவேற்று ஸ்ரீராமன் ஸந்நிதியில் கொண்டு நிறுத்துகின்றாள்.

இந்தஸம்ப்ரதாயப்படி முதலில் ஸ்ரீஸீதாராம லட்சுமணர்களுக்கு பூஜை செய்துவிட்டு - பிறகுஅந்தப்பூஜா ப்ரஸாதமான பால் சந்தனங்களையே ஹநுமாருக்கு அபிஷேகம் செய்து -ஸ்ரீராமனுடைய நைவேத்யப்ரஸாதத்தையே ஹநுமானுக்கு நிவேதனம் செய்ய வேண்டும். அவருக்கு எனத் தயாரிக்கப்பட்ட வேறு எத்தனை நிவேத்யத்தையும் அவர் ஏற்கமாட்டார்.

**ஸ்ரீராமஸ்யைவ ப்ரஸாத$_3$ம்ஸ:**

**பு$_4$ங்க்தே ஸ்ரீமாருதாத்மஜ:।**

**அதோ ஹநுமத் பூஜாயாம்**

**ராமஸ்யார்ப்பிதம் அர்ப்பயேத்॥**

அவர்களுடைய முக்கியமான கொள்கை பின் வருமாறு வேதப்ரமாணமாக -ராமசந்திரனே பரப்ரஹ்மம்.

**ஹநுமத் பரமாசார்யம்விநாऽऽசார்யோ நகோऽபிஹி।**

**இதி பத்ததி நிர்ணீதம் பூர்வோக்தம் ஸமயோதிதம்**

நாரத பக்தி ஸூத்திரத்தை இதற்குச் சான்றாகக் காட்டுகிறார்கள்.

**இத்யேவம் வதந்தி ஜநஜல்ப**

**நிர்ப$_4$யா: ஏகமதா: குமாரவ்யாஸ**

**உத்த$_4$வ ஆருணி ப$_3$லி**

**ஹநுமத் விபீ$_4$ஷணாதய: ப$_4$க்த்யாசார்யா:**

**ஆஞ்ஜநேயாய வித்$_3$மஹே**

**மஹா ப$_3$லாய தீ$_4$மஹி।**

**தந்நோ ஹநுமாந் ப்ரசோத$_3$யாத்॥**

என்று காயத்ரீயையும் கூறுகிறார்கள். இந்த ஸம்ப்ரதாயப்படி - ராமனுடைய க்ருபையைக் கோருபவர்கள் ராம ஸந்நிதி வாசலில் காத்துநின்று பக்தர்களை வரவேற்கின்ற ஹநுமானுடைய அநுமதியில்லாமல் உள்ளே நுழைய முடியாது. இதையே துளஸீதாஸரும் ஏற்கின்றார்

## ராமஸ்நேஹீஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

அயோத்தியில் ராமஸ்நேஹிஸம்பரதாயம் என்று ஒன்று வளர்ந்தது. அதற்கு **ஸ்ரீகேடோபா ராமஸ்நேஹீஸம்பிரதாயம்** என்று பெயர். அதன் கோட்பாடுகள் பின்வருமாறு.

அண்டசராசரங்களுக்கெல்லாம் மூல காரணம் ராமநாமம் தான். இதுவே மனிதவாழ்வின் ஆதாரம் - பலம் - நம்பிக்கை - விருப்பம் - எல்லாமே. அதை ஏற்றுக் கொண்டு விட்டால் பிறவிப்பயனான மோக்ஷம் கைமேல் என்கிறார் அந்தஸம்பிரதாயத்தின் ஆசார்யர்களில் ஒருவரான **ஸ்ரீஹரிராமதாஸ்**

**ராமநாம நிஜமூல ஹை**
**ஔர ஸகல விஸ்தார।**
**ஜந ஹரியா ப$_2$ல முக்திகோ**
**லீஜை ஸார ஸம்பார॥**

மற்றொரு ஆசார்யர் **ஸ்ரீதயாளுதாஸ்** கூறுகிறார்.

**ராம இஷ்ட ஆத$_4$ார பல**
**ராம ஆஸ விச்$_+$வாஸ।**
**ராம ப$_4$ரோஸே ராம**
**ரஹ்யா நிரபை$_4$ ராமதாஸ॥**

ராமனிடம் பொறுப்பை ஒப்புவித்து விட்டு ராமதாஸனாக பயமற்று இரு.

*ஸீதாதேவி ஹநுமானுக்கு பட்டாபிஷேகத்தின் போது ஒரு உயர்ந்த முத்து மாலை அணிவித்தாள். அதைக் கழற்றி ஹநுமான் ஒவ்வொரு முத்தாக உடைத்து - அதற்குள் ராம நாமத்தைக் காணாமல் தூக்கி எறிந்தார். இதைப் பார்த்துக் கொண்டிருந்த லட்சுமணஸ்வாமி கேட்டார்.*

*''தம்பி ஹநுமந்தா ! இந்த விலையுயர்ந்த முத்துமாலை உனக்கே தகும் என்று தானே மதனியார் கொடுத்தார் . அதை ஏன் சின்னாப்பின்னப்படுத்துகிறாய்?*

*''ஸ்வாமி! மன்னிக்கவேணும். ராம நாமமில்லாத எந்த வஸ்துவும் எனக்கு அவசியமில்லை.*

*''அப்படியா? அப்படியானால் மண்ணும் நீரும் காற்றும் நெருப்பும் சேர்ந்து உருவான இந்த மண்ணாலான உடலை ஏன் வைத்துக் கொண்டிருக்கிறாய்? -அதையும் விட்டுவிடேன்''*

*''அப்படியல்லவே இந்த சரீரம் இதில் ராமனுடைய க்ருபை என்ற நறுமணமும், சாந்தி என்ற தித்திப்பும், தாஸ்யம் என்ற உப்பும், அவருடைய வாத்ஸல்யம் என்ற நாக்கில் ஊறுகின்ற புளிப்பும், - நட்புடன் கூடிய மிகவும் கண்ணுக்கு ரம்மியமான ஸ்வரூபமும், மாற்றி மாற்றி ரஸிப்பதற்கு கிடைக்கின்றனவே.*

*ஸாதுக்களாகிய சுற்றுப்புறமும் புஷ்பங்கள் போன்று கமகமவென்று செவியைத் துளைக்கின்ற ராம நாமங்களும் மாலையாக என் கழுத்தில் சுற்றிக் கொண்டிருக்கின்றனவே. இந்த ராம பக்தி மாலையை விட விலையுயர்ந்த முத்துமாலை எவ்விதம் சிறந்தது?*

*இந்த பக்தி மாலை ஸ்ரீராமனுடைய க்ருபையால் கிடைத்ததை அணிகிறேன். அதன் இடத்தில் முத்து மாலையை ஏன் சுமக்க வேண்டும்?*

***ஸ்ரீதயாளுதாஸ் இப்படிப்பாடுகிறார்.***

***ஜநலக்ஷண ப$_4$ஜமஸ புஸ்ப ராமஸுக$_3$ந்த$_4$அபாரா?।***

***ச$_+$ப்$_3$த$_3$ ப்$_3$ரஹ்ம ஸூத்ர அஜப$_3$ ஸத்குர போவன ஹார!!***

***ச்$_+$யாந்த த$_3$ாஸ பா$_3$ச்ச $_2$ஸக$_2$ா பஞ்சம ரஸ ச்ருங்கா$_3$ர।***

***பஞ்ச புஷ்பரஸ ரங்க மஹ த்$_4$யாந ஸிமரணா ஸார!!***

***தூடே கூ$_2$டே நாம கத$_3$ ரங்க$_3$ பி$_3$ரங்க$_3$ ந ஹோய।***

***ப$_4$க்த மால ப$_4$கதீ ஹ்ருத$_3$ ஜய ட$_3$ண்ட$_3$ லகே ந கோய॥***

***நித நவீந பகவத பிய(ம்) ஸோபா$_4$ அக$_3$ம அநூப***

***ப்$_3$ரஹ்ம பராயண ப்$_3$ரஹ்ம பத$_3$ த$_3$யாள பா$_3$ல ஜநஸ்ரூப!!***

ப்ரஹ்மத்தோடு ஐக்யப்படுத்துகின்றவர் குரு, ராம பஜனை செய்கின்றவர் உறவினர். ராம கதை கூறுபவர் துணைவர். இப்படிப்பட்ட ஸங்கத்தில் இருப்பவருக்கு ஸுகம் பரமஸுகம் தவிர வேறு என்ன கிடைக்கும்? என்கிறார் **ஸந்த ஸ்ரீஸுகராமதாஸ்.**

இந்த அருமையான ஸத்ஸங்கத்தையே சுற்றிச்சுற்றி வருபவர் சூரவீர ஹநுமான். எப்போதும் ராமன் ஒருவனுக்கே தாஸர். வாழ்வு மரணம் என்றெல்லாம் நினைத்தே பார்க்காத ஹநுமான் ப்ரஹ்மத்தில லயித்தவன் என்கிறார். ஸ்ரீதரியாவ்ஜீ மஹாராஜ்

***ஸூரவீர ஸம்முக$_2$ ஸக$_2$ா***

***ஏக ராமகா தாஸ!।***

***ஜீவந மரண திதி மேடகர***

***கியா ப்ரஹ்ம மே(ம்) வாஸ॥***

**ஸந்த ஸுகஸாரண ஜீ** என்பவர் ப்ருஹத் ராமஸ்நேஹீ பக்த மாலாவில் கூறுகிறார். ப்ருந்தாவனத்துக்குத் தென் கிழக்கே யமுனைக்கரை பீர்கஞ்ஜ என்று ஒரு கிராமம் அங்கு ராமஸ்நேஹீ ஸம்ப்ரதாயத்தினர் பெரும்பாலாக வாழ்ந்தனர்.

சுகதேவ் என்ற ஒரு ஸாது ப்ராஹ்மணர் ப்ருந்தாவனத்தில் வெகுநாட்களாக வாழ்ந்தவர். அவருடைய

மனைவி ரகுமா பாயிக்கு -பீர்கஞ்ஜ் கிராமத்தில் மஞ்சள் காணி சொத்தாக - சிறிது விளை நிலமும் கிராமத்தில் ஒரு வீடும் வந்து சேர்ந்தது. அந்த அம்மாள் ''மிகவும் நெருக்கடியான தெருவில் இத்தனை நாள் இருந்தாயிற்று. கிராமத்தில் சற்றுப்பெரிய வீடும் நிலமும் கிடைத்திருக்கிறது. அங்கு போய் இருப்போமே'' - என்று கணவனை வற்புறுத்தினாள். மீற முடியாமல் இணங்கினார்.

பீர்கஞ்ஜ் வந்து சில நாட்கள் ஆயின. சுகதேவுக்கு உபாஸநாமூர்த்தி தவழும் பாலகிருஷ்ணன் - ஒரு கையை ஊன்றி -மறுகையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு சுகதேவரை ''உனக்கு வேணுமா?! இந்தா எடுத்துக்கோ'' - என்று காட்டிக் கொண்டிருந்தார். சுகதேவர் இந்த யசோதை பாலனுக்கு கீதங்கள் பாடி - பூஜை செய்து ஸந்தோஷப்படுவார்.

பீர்கஞ்ஜ் வந்த பிறகு அந்த ஊரில் வாழ்ந்த ராமஸ்நேஹி ஒருவர் பௌநநந்தந் தாஸ - சுகதேவரைக் காணவந்தார். இவர் வெண்ணைகாட்டும் பிள்ளையை வைத்துக் கொண்டு பூஜை செய்வதைப் பார்த்தார். ஒவ்வொரு தீவிரஸம்ப்ரதாயத்தினருக்குமே - தம் கூட்டத்தைப் பெருக்கிக் கொள்வதில் ஆர்வம் அதிகம். அவர் சொன்னார்.

''உம் தெய்வம் கண்ணன் சிறுபிள்ளை. ஒன்றும் தெரியாத மழலை. அவனுக்கு உமது கஷ்ட நஷ்டங்கள் தெரியுமா? அவனைக் கொஞ்சிக் கொண்டிருந்தீரானால் அவன் ஸந்தோஷப்படுவான். அது இல்லை என்று நான் சொல்லவில்லை. உமக்கு ஒரு கஷ்டம் வந்துவிட்டால், அதை கண்ணனிடம் சொல்லி அழுதால், அவன் சிரிப்பான். கைகொட்டிச் சிரிப்பான், உமது கஷ்டம் தீராது.

ராமனைத் தெரியுமா? கருணாமூர்த்தி கஷ்டப்படுபவர்களை, காலில் விழுந்தவர்களைக், காப்பாற்றுவதே அவருடைய ஜீவிதலட்சியம். நீர் ராமாயணம்

படித்ததில்லையே! இந்தாரும் படித்துப்பாரும்.

அந்த ராமஸ்நேஹி துளஸீ ராமாயணம் - நூலை அவரிடம் கொடுத்தார் அந்த ஸாதுப்ராமணனும் அதைப்படித்தார். துளஸீ தாஸருடைய அழுத்தமான போதனைகள் சுகதேவரை ஆட்கொண்டுவிட்டன.

அந்த ராமஸ்நேஹி ஸாதுவைத் தேடிக் கொண்டு போனார். அவர் இவரை வரவேற்றார்.

''ஸ்வாமி - நான் ராமனையே பூஜை பண்ணலாம் என்று தீர்மானித்துவிட்டேன். எனக்கு ஒரு ராமமூர்த்தி அநுக்ரஹம் செய்யுங்கள்'' என்றார். அவர் ஸீதாலட்சுமண ஹநுமத்ஸமேத ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி -யின் விக்ரங்களை ஆசீர்வதித்துக் கொடுத்தார்.

சுகதேவர் - பூஜை அலமாரியில் இருந்த தவழும் க்ருஷ்ணவிக்ரஹத்தை பூஜை அலமாரிக்கு மேலே சுவற்றில் இருந்த பிறையில் எடுத்து வைத்து விட்டு - பூஜை அலமாரியில் ஸ்ரீராமவிக்ரஹங்களை அழகாக அலங்காரம் செய்து வைத்தார்.

மறுநாள் காலை பூஜை ஆரம்பித்தார். நறுமணம் உள்ள ஊதுவத்தி ஒன்றை ஏற்றி வைத்தார். பூஜைக்கு அமர்ந்தார்.

ஊதுவத்தியின் புகை இழைபோல மேலே எழுந்து தவழும் கிருஷ்ணனிடம் சென்றது. இந்த ஸாது இந்தப் புகையை வழி மறைத்து - கையினால் இந்தப் புகையை ராமன் பால் செலுத்தினார். அந்தப்புகை இழை கலைந்து - ராமனின் பூஜை அலமாரி மீது பரவியது.

சுகதேவர் பூஜை செய்ய ஆரம்பித்தார். மறுபடியும் ஊதுவத்திப்புகை -இழை-மேலே எகிரி கண்ணன் இருந்த பிறையிடம் சென்றது.

சுகதேவருக்கு கோபம் வந்துவிட்டது. எழுந்திருந்தார் பிறையில் இருந்த கண்ணனின் மூக்கைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்.

''கண்ணா! உனக்கே இது நன்றாக இருக்கிறதா? நான் ராமனுக்காகத் தானே தூபம் போடுகிறேன். அதை நீ இழுத்துக் கொள்ளலாமா? இத்தனை நாள் உன்னை பூஜை பண்ணினேனே! உனக்கு இரக்கம் இல்லையா? நீ சின்னக் குழந்தை - எனக்கு கஷ்டம் வந்தால் உன்னால் என்ன செய்யமுடியம்? ராமனோ அநாதரக்ஷகள் ஆபத்பாந்தவன் - என்று உலகமே கொண்டாடுகிறது. அதனால் நானும் பூஜை பண்ணுகிறேன். நீ ஏன் குறுக்கே நிற்கிறாய்?'' என்று என்னவெல்லாமே புலம்பினார்.

இவர் பூஜை ஆரம்பிக்கும் போதே அந்த ராமஸநேஹி வந்து விட்டார் இவருடைய புலம்பலைக் கேட்டார்.

அவருடைய கண்களில் நீர்வந்து விட்டது.

''சுகதேவரே!''

சுகதேவர் திரும்பிப்பார்த்தார்.

''இங்கே பாருமையா. கண்ணன் அடம் பிடிக்கிறான். நான் ஸ்ரீராமனுக்காக உயர்ந்த ஊதுவத்தி வாங்கிக்கொண்டு வந்து தூபம் போடுகிறேன். இந்தக்கண்ணன் பிறையில் உட்கார்ந்து கொண்டு தூபத்தை எல்லாம் மூக்காலே இழுக்கிறான்.

''அப்படியல்ல! சுகதேவரே -தூபத்தின் வாஸனை ராமனிடம் தான் போகிறது. புகை மட்டும் தான் மேலே போய் கண்ணனின் கண்களில் ஏறி அவனுடைய கண்களைக் கரிக்கின்றன. நீர் அவனுடைய மூக்கைப் பிடிக்கிறீரே தவிரக்கண்களைத் துடைத்து விடவில்லையே''

''அப்படியா சங்கதி? ஐயோ பாவம் - கண்ணனின் கண்களைத் துடைத்துவிடுகிறேன்''

''அது சரி. நான் சொல்வதைக் கேளும் ராமனும் கண்ணனும் ஒன்று தான்''

அது எப்படி - வேறே வேறே அவதாரம் அல்லவா?

''உமக்கே தெரியாதா? ஹநுமான் ராம பக்தன் தானே!''

''ஆமாம் , ராமனைத்தவிர வேறு யாரையும் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டார்''

''அது தான் தப்பு. க்ருஷ்ணாவதாரத்தில் கூட ஹநுமான் சேவை செய்திருக்கிறார். கருடனைவிட ஒரு படி மேலே போய் விட்டார் என்று சரித்திரமே இருக்கு - ஹநுமானை விட நீர் ரொம்பத் தெரிந்தவரோ?

''அபசாரம் அபசாரம் அப்படி நான் நினைக்கவில்லை''

''அதனாலே அந்தத் தவழும் கண்ணனையும் பூஜை அலமாரியிலே வைத்து அவனுக்கும் சேர்த்துப் பூஜை செய்யும் ஐயா!

கபடமில்லாத சுகதேவருடைய பக்தியை ரஸிக்க வேண்டும். அவர் விக்கிரகங்களை பொம்மையாகவே நினைக்கவில்லை. த்யானம் ஜபம் ஆவாஹனம் - என்றெல்லாம் வழிமுறைகள் ஒன்றும் அவருக்குத் தெரியாது. ஆனால் அவருடைய உள்ளத்தின் அந்த ஸ்ரீமூர்த்திகள் சைதன்யமுடையவர்களாகவே தெரிகின்றனர்.

ராமஸ்நேஹீ ஸம்ப்ரதாயத்தில் இந்த பாவனை ஒரு முக்கியமான தத்துவம்.

## ஸ்ரீஸ்வாமி நாராயண ஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

ராமஸ்நேஹி ஸம்பிரதாயத்தில் எவ்வளவு அழுத்தமாக ராம உபாஸனை வற்புறுத்தப்பட்டிருக்கிறதோ அதைவிட அழுத்தமாக இந்த ஸம்ப்ரதாயத்தில் க்ருஷ்ண உபாஸனை வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அந்த ஸம்ப்ரதாயத்தின் மூல ஆசார்யர் **ஸஹஜாநந்தஸ்வாமீ** - தன்னுடைய பிரதான க்ரந்தமான ''சிக்ஷாபத்ரீ'' என்ற நூலில் இவ்வாறு கூறுகிறார்.

***ஸ ஸ்ரீக்ருஷ்ண: பரம் ப்$_3$ரஹ்ம***
***ப$_4$க$_3$வாந் புருஷோத்தம:!***
***உபாஸ்ய: இஷ்ட தே$_3$வோ ந:***
***ஸர்வாவிர்பாவகாரணம் ||***

*மற்ற எல்லா அவதாரங்களுக்கும் மூலகாரணம் ஸ்ரீக்ருஷ்ணன் தான் இந்தஸம்ப்ரதாயத்தில். ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவைத் தவிர வேறு எந்ததெய்வத்தையும் அணுகக் கூடாது - என்று கோட்பாடே இருந்தாலும் கூட - மஹா ஆசார்யர் ஸ்வாமி நாராயண பகவானே தன்சிக்ஷாபத்ரீயில் (85) தன்திருமுகத்தாலே அருளியிருக்கிறார். ''பூதம் பிசாசுகள் - என்ற உபத்ரவத்தில் அகப்பட்டவர் ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ள நாராயண கவசத்தையோ, ஹநுமானுடைய மந்த்ரத்தையோ, ஜபிக்கலாமே தவிர சில்லரை தேவதைகளை உபாஸிக்கக்கூடாது என்று கூறுகின்றார்.*

***பூ$_4$தாத்$_3$யுப$_3$த்ரவே க்வாபி***
***வர்ம நாராயணாத்மகம் |***
***ஜப்யம் ச ஹநுமந் மந்த்ரோ***
***நஜப்யா : க்ஷுத்ர தே$_3$வதா:||***

*அந்த ஸம்ப்ரதாயத்தில் முக்ய ஆசாரியர்* ***யோகிராஜ் ஸ்ரீசதா நந்தர்*** *தன்னுடைய* ***ஸ்ரீஸத்ஸங்கீ ஜீவநம்*** *என்ற நூலில் ஒரு ஹநுமந்த் ஸ்தோத்ரம் எழுதியிருக்கிறார். அதை 1100 தடவை முறைப்படி பாராயணம் செய்தால் சத்ருநாசம் ஏற்படும். விருப்பங்கள் நிறைவேறும் - என்று பலர் அநுபவ பூர்வமாகச் சொல்லுகிறார்கள்.*

*ஸ்ரீஸ்வாமி நாராயணர் கோயில் எங்கிருந்தாலும் அங்கு காலை மாலை வேளைகளில் ஹநுமான் ஸந்நிதியில் ஸ்ரீப்ரேமாநந்தஸவாமி அருளிய ஹநுமான் ஆரதி பாடாமல் வழிபாடு முடிவதில்லை.*

***ஜயகபி ப$_3$லவந்தா ஜயகபி ப$_3$லவந்தா***
***ஸுரநர முநிஜந வந்தி$_3$த பத$_3$ரஜ ஹநுமந்தா ||***

*ப்ரௌட$_4$ப்ரதாப பவநஸுத த்ரிபு$_4$வநஜயகாரீ*
*அஸுரரிபு மதகஞ்ஜந ப$_4$யஸங்கட ஹாரீ ||*
*பூதபிஸாசவிகடக்$_3$ரஹ பீட$_3$தநஹீம்ஜபே!*
*ஹநுமந்த ஹாங்க ஸுணீரே த$_2$ரத$_2$ா கம்பே!!*
*ரகு$_4$வீர ஸாஹே போலக்$_3$ யோ ஸாக$_3$ரஅதி ப$_4$ாரீ!*
*ஸீதாசோ$_+$த$_4$லியாரா கபிலங்கா ஜாரீ ||*
*ராம சரண ரதிதாயக சரணாகதத்ராதா |*
*ப்ரேமாநந்த கஹே ஹநுமந்த் வாஞ்சிதபலதாதா ||*

*ஸ்ரீக்ருஷ்ண உபாஸனைனையிலேயே ஒரே கொள்கையாகக் கொண்ட ஸம்ப்ரதாயத்தில் ஹநுமானுக்கு தனிப்பட்ட பெருமை கூறப்படுகிறது என்பது தான் கவனிக் தக்கத்து.*

## ஸ்ரீஸமர்த்த ஸம்ப்ரதாயத்தில் ஹநுமான்

*பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்களிடையே - ஹநுமானின் ப்ரபாவம், ஹநுமான் ராமதாஸனாக, ராமநாமஜபமே உயிராகக் கொண்டவராக, அந்த நாமஜபத்தினால் பெற்ற உடல் வலிமை புத்தி - கூர்மை - செயல்திறன் இவற்றால் ராம கைங்கர்யத்தை மற்றவர்களால் ஸாதிக்கலாம் - என்ற நினைத்துக்கூடப் பார்க்கமுடியாத - கைங்கர்யத்தை ஸாதித்து - அதன்மூலம் பக்தர்களுக்கு வாழ்வில் நல்ல ஊக்கத்தையும் தைரியத்தையும் வளர்த்து - தமது இன்னல்களைத் தீர்த்துக் கொண்டு மேன்மையைப் பெற்ற வரலாறுகளையே காண்கிறோம்.*

---

*(பல ஸ**ம்**ப்ரதாயங்களில் ஹநுமான் வழிபாடு பற்றிய செய்திகள் கோரக்புர் கல்யாண் பத்திரிக்கையின் ஹநுமான் அங்கத்திலிருந்து தொடுக்கப்பட்டவை)*

இதுதான் ஹநுமான் வழிபாட்டில் தனிச்சிறப்பு. இந்த தத்துவத்தை ஆதாரமாகக் கொண்டு ஸமர்த்த ராமதாஸர் அவர் காலத்தில் நாடு முஸ்லீம்களின் ஆக்ரமணத்தால் - மக்கள் நலிந்து பயந்து நடுங்கிக் கொண்டிருந்த காலத்தில் மக்களை ராமநாமத்தின் பிரசாரத்தினால் தட்டியெழுப்பி ஹநுமானையே - ஆதர்சமாகக் காட்டி மக்களுக்கு ஆர்வத்தையும் ஊக்கத்தையும் உசுப்பிவிட்டு ஆக்ரமிப்பாளர்களின் அக்கிரமங்களைத் தேக்கி - எதிர்த்து நிற்கின்ற வலிமையை ஊட்டினார் ஸமர்த்தர். நாடு முழுவதும் கிராமங்கள் சேரிகள் நதீதீரங்கள் எங்கும் ஹநுமானை ப்ரதிஷ்டை செய்து அவர் முன்னே ராம நாமம் சொல்லச் சொல்லி மக்களை நிமிர்ந்து நிற்க வைத்தார். இது தான் ஸமர்த்த ஸம்ப்ரதாயத்தின் சாதனை. இதை இவ்வாசிரியர் எழுதிய ஸமர்த்த ராமதாஸ சரிதத்தில் விரிவாகக் காணலாம்.

## கோஸ்வாமி துளஸிதாஸருடன் ஹநுமான்

வடநாட்டிலே அக்பர் ஆண்டகாலம் கி.பி.பதினாறாம் நூற்றாண்டு. பிரயாக க்ஷேத்திரத்தின் அருகே யமுனையின் வலது கரையில் ராஜாப்பூர் என்ற கிராமம். அங்கு ஆத்மாராம் தூபே -ஹூலஸி என்ற தம்பதிகளுக்குகி.பி. 1497 ஆவணி ச்ராவணசுக்ல ஸப்தமி மூல நட்சத்திரத்தில் ஓர் ஆண்குழந்தை பிறந்தது. குழந்தைக்கு வாயில் பல் இருந்தது. அது பிறந்தவுடன் ராம ராம என்று சொன்னதே தவிர அழவில்லை. **ஆத்மாராம் குழந்தையை ஹநுமான் அவதாரமாகவே** நினைத்தார்.

ஆனால் கிராமத்தார் ''அந்தக் குழந்தை விகாரமாகப் பிறந்திருக்கின்றது. பிசாசு கிராமத்தை பீடிக்கப் போகிறது'' என்று பயந்தனர். குழந்தையின் தாயார் ஹூவஸி பிறந்த மூன்றாம் நாளே பெற்றெடுத்துக் கொடுத்த தாதி ஸூநியாவிடம் குழந்தையையும் ஆறு வராகன் பொற்காசுகளையும் கொடுத்து அனுப்பிவிட்டாள்.

குழந்தையை எடுத்துப்போன சுனியா அதற்கு ஒரு காராம் பசுவின் பாலை ஊட்டினாள். குழந்தை இரண்டு வயது ஆன போது ஓட ஆரம்பித்தது. சுநியா இறந்துவிட்டாள். சுனியாவின் குழந்தை ஊர்க்குழந்தை ஆகிவிட்டது. ராம ராம என்று அலறிக்கொண்டே இருந்தது. ஊரார் அவனை ராம் போலா என்றே அழைத்தனர். அநுமார் கோவில் மண்டபத்தில் இரவு தூங்குவான். காலையில் எழுந்து குளத்தில் குளிப்பான். கோவில் அர்ச்சகர் நாமம் போட்டுவிடுவார். அநுமானின் பழைய துணியை உடுக்கக் கொடுப்பார்.

அந்த ஊருக்கு அடுத்தாற்போல ராமகிரி என்ற கிராமத்தில் நரஹரி ஆனந்தா என்ற ராமாயணீ (ராமாயணத்தையே படித்து பிரவசம் செய்பவர் ராமாயணீ) அவர் அந்தப் பையனை அழைத்தார்.

‘‘எனக்குப் பூணூல் போட்டுவிடுவதாக இருந்தால் உங்களோடு வருவேன்’’ என்றான் பையன்.

அவனை அழைத்துப்போய் -உபனயனம் செய்து வைத்து - இத்தனை நாள் தான் ராமாயண பாராயணம் செய்து சேர்த்த புண்ணியத்தை யெல்லாம் அந்த பையனுக்கு தத்தம் செய்து கொடுத்தார் (ஒருவர் கையில் நீர் வார்த்து ஒன்றை அர்ப்பணம் செய்வதற்குப் பெயர் தத்தம்)

பையன் மூன்றே ஆண்டுகளில் ஒரு கோடிகாயத்ரீஜபம் செய்து முடித்தான். நரஹரி ஆனந்தரின் அருளால் கிடைத்த ராமாயண புத்தகத்தை தொடாமலேயே - நெட்டுரு ஆகிவிட்டது. விழித்திருக்கும் நேரமெல்லாம் நடந்து கொண்டும் உட்கார்ந்து கொண்டும் ராமாயணம் தொடர்ந்து பாடிக் கொண்டே இருந்தான்.

அவனை நரஹரி ஆனந்தர் அயோத்திக்கு அழைத்துச் சென்றார். காசிக்கு அழைத்துச் சென்றார். அங்கு சேஷஸநாதநர் - ராமபோலாவின் ராமாயண நிஷ்டையைப் பார்த்து அவனை தன்னிடமே வைத்துக் கொண்டார்.

ஒரு நாள் ராஜாப்பூரியிலிருந்து ஒரு கிழவர் வந்தார். அவர் ராம் போலாவிடம் கூறினார். ''எங்கள் ஊர் -ஸாதுக்கள் இருந்த இடம் பாழாகிவிட்டது. ஆத்மாராம் தூபே என்ற பரமபாகவதரிடம் அபசாரப்பட்ட கிராமம். அவர் ராம நாமம் சொல்லிக் கரை ஏறிவிட்டார். ஆனால் அவருடையமனைவி ஒரு நாள் குழந்தையைப் பெற்ற மூன்றாம் நாள் ஊராரின் அசூயை தாங்காமல் பிள்ளையை அநாதையாக விட்டுவிட்டு ஏகாதசி அன்று ராமசரணம் அடைந்தாள். அவளுடைய ஆவி - அந்த ஊரைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. நீங்கள் வந்து ராமாயணம் சொன்னால் ஊர் மறுபடியும் தழைத்து வளரும். வாருங்கள்'' என்றார். ராம் போலாவுக்கு உடன் இதயத்தில் உண்மை பளீர் என்று தெரிந்தது. ராஜாப்பூருக்கு வந்தார்.

இடிந்து கிடந்த தன் வீட்டு முற்றத்தில் இருந்த துளஸிமாடம் காய்ந்து கருகிப் போயிருந்தது. அதைச்சுற்றிச் சுற்றி வந்து ராயாயணம் பாடினார். துளஸிச் செடி துளிர்த்துவிட்டது. ஊரெல்லாம் பசுமை படர்ந்தது. மக்களிடம் தன்னைத் தெரிவித்துக் கொண்டார் ராம் போலா - துளஸிச்செடியைச் சுற்றி வந்ததால் அவரைத் துளஸிதாஸர் என்றே அழைத்தனர். ஊரார் அவரை வற்புறுத்தி அங்கேயே தினமும் ராமாயணபிரவசனம் செய்து வர வேண்டினர்.

அவருக்கு வித்யா -என்ற பெண்ணுடன் திருமணம் ஆயிற்று. பெயர் மட்டுல்ல அவள் இயல்பாகவே ஸகலகலா வல்லியாக இருந்தாள். அவளுடன் சாஸ்திரவிசாரம் எல்லாம் செய்தார். அவள் ஒரு சமயம் பிறந்தகம் சென்றிருந்தாள்.

அவளைக்கண நேரமும் பிரிந்திருக்கமுடியாத மன உளைச்சலினால் அன்றிரவே அவர் பூர்ணபிரவாஹமான - யமுனையை நீந்திக் கடந்து - மாமனார் வீடுபோய் மனைவியைக் கண்டு கொஞ்சினார். ராமாயணத்திலேயே மூழ்கியிருந்த தன் கணவர் - இப்படி காமுகர் ஆகி விட்டாரே என்று அவள்வருந்தினாள்.

''இந்த நாற்ற உடலில் உங்களுக்கு இருக்கும் மோஹத்தில் பாதியாவது ராமனிடம் இருந்தால் தங்களை ராமன் தன்னுடையவன் ஆக்கியிருப்பாரே! - என்னால் உங்களுக்கு இப்படி வீழ்ச்சி வந்து விட்டதே என்று குமுறினாள்.

துளஸிதாஸர் அக்கணமே விழித்துக்கொண்டார். மறுகணம் அங்கிருந்து புறப்பட்டுவிட்டார்.

## ராம தரிசனம்

துளஸிதாஸர் ராஜாப்பூரிலிருந்து கிளம்பிவிட்டார். பஞ்சகச்சத்தையெல்லாம் அவிழ்த்துவிட்டு கௌபீனம் முழங்கால் வரை ஒற்றைத் துணியுடன் சஞ்சாரம் செய்தார். பிரயாகை, அயோத்தி, காசி, பூரி, ஜகந்நாதம், ராமகிரி, துவாரகை, பத்ரிநாத், மாநஸஸரஸ் எல்லாம் சுற்றிவிட்டு மேலும் மலை ஏறினார். கால் போனபடி நடந்தார். பனிமலையில் பொல்லாக் குளிர். சுவாஸம் விடமுடியவில்லை. மூச்சு முட்டியது. ஏதோ ஒன்றுஅவரை இழுத்துச் சென்றது. மாநஸப் பொய்கையை அடைந்தார். எதிரே கைலயங்கிரி. அதனை வலம் வந்தார். கைலையங்கிரியின் தென்புறத்தில் மாநஸப் பொய்கையின் கீழ்ப்புறத்தில் ஓர் அற்புதக்காட்சி. எங்கும் படிகம் போல பாளம் பாளமாகப் பனி படர்ந்து, அதன்மீது சூடே அற்ற சூரிய ஒளி பாயக் கண்கள் கூசின. கண்களை கைகளால் மூடிக்கொண்டு விரல் இடுக்கு வழியாக அந்தப்புறம் பார்த்தவருக்கு ஒரு அரிய காட்சி. அடர்ந்த மரக்காடு. மாவும் பலாவும் ஆலும் அரசும் என பெரிய பெரிய மரங்கள். அவற்றின் மீது பல பட்சிகள். அவை பறக்கும் போது இறக்கை ஓசை தவிர வேறு ஓசை கிடையாது. எல்லாம் மௌனமாக உட்கார்ந்திருந்தன. அவற்றின் மத்தியில் ஒரு காகம் மனிதக் குரலில் ராமாயணம் சொல்லிக் கொண்டிருந்தது. ஆச்சரியமாகப் பார்த்தார். இவை வெறும் பறவைகள் அல்ல, முனிவர்கள். அவர்களை வலம் வந்து வணங்கினார்.

மறுபடியும் அவர் கண்களை திறந்த போது அவர் காசியில் இருந்தார். எப்படி வந்தார்? மாமனார் வீட்டை விட்டு கிளம்பி பதினான்கு வருஷங்கள் பத்து மாதங்கள் பதினேழு தினங்கள் ஆகிவிட்டன.

காசியில் கங்கையில் மூழ்கி விசுவநாதரை தரிசித்தார். விசுவநாதர் கருணை காட்டுவார் என்று காத்திருந்தார். ஓயாமல் ராம நாம ஜபம் செய்தார். இரவில் தசாச்வமேத கட்டத்தில் படிகட்டில் உட்கார்ந்து ராமாயணம் சொல்வார். ஸாதுக்களும் அறிஞர்களும் கூடிக் கேட்டனர். பிரவசன முடிவில் அத்தனை சாதுக்களையும் வணங்கித் தனக்கு ராம தரிசனம் கிடைக்க வேண்டுமென்று கண்ணீர் விட்டுவேண்டிக் கொள்வார். உள்ளத்தில்ஒரே ஏக்கம். ராமாயணத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவருக்கு விசுவரூபம் எடுத்துக் காட்சி தந்தது. அதை அவர் விவரிக்கும் போது அக்கணத்தில் அந்த நிகழ்ச்சியே நேரே நடந்தது போலே மக்கள் உணர்ந்தனர். பாகாய் உருகினர்.

ஒரு நாள் காலை ஒரு அனுபவம். அவர் ஒவ்வொரு நாளும் படகில் ஏறி அக்கரை சென்று சொம்பில் நீர் எடுத்துக் கொண்டு மலஜலம் கழிக்க வெகுதூரம் சென்று ஒரு காட்டில்மலஜலம் கழிப்பார். சரீர சுத்தி செய்து கொண்ட பிறகு மீதியுள்ள ஜலத்தை ஒரு ஆலமரத்தில் கொட்டிவிடுவார். அந்த மரத்தில் துர்மரணம் அடைந்த ஆவி வசித்தது. அது அந்த நீரைக் குடித்ததும் தாகம் அடங்கும். அதற்கு ஒருவாறு அமைதி கிடைத்தது. விவேகம் வந்தது. இவர் ஒரு பெரியவர் என்று தெரிந்து கொண்டது. அது ஒரு நாள் துளஸீதாஸர் திரும்பிப் போகும் வழியில் மறைந்து நின்றது. துளஸீதாஸர் நடை தடைப்பட்டது. உரக்க ராம ராம என்று கூவினார்.

''பெரியவரே பயப்பட வேண்டாம் நான் ஒரு பாவி தாங்கள் வார்த்த நீரைக் குடித்து புனிதமானேன். உங்களுக்கு ஏதாவது உதவி செய்ய விரும்புகிறேன், சொல்லுங்கள்.''

துளஸிதாஸருக்கு மனதில் ஒரே எண்ணம் தானே. ராமதரிசனம். அதற்கு இந்த ஆவியா உதவப் போகிறது என்றெல்லாம் ஆராயவில்லை. மனதில் உள்ளது வாயில் வந்துவிட்டது. ''எனக்குராம தரிசனம் கிடைக்க வேண்டும்.''

ஆவி கூறியது, 'இது உங்களுக்கு வெகு சுலபமாயிற்றே'

'எப்படி'?

'உங்களிடம் தான் ராமாயணம் கேட்க தினமும் அனுமான் வருகிறாரே.''

''எனக்கே தெரியாதே.''

'வருகிறார். ஒவ்வொரு நாளும் உங்களுக்கு நேரே உட்கார்ந்திருக்கும் ஜனங்களுக்கெல்லாம் அப்பால் ஒருவர் உட்கார்ந்திருப்பார். நீங்கள் வருவதற்கு முன்பே வந்துவிடுவார். பிரசங்கம் முடித்து ஜனங்கள் திரும்பும்போது ஒவ்வொருவரையும் வீழ்ந்து வணங்கி விட்டு கடைசியில் தான் போவார்.'

'அவர் எப்படி இருப்பார்?'

'உடம்பெல்லாம் வெண்குஷ்டம். அசிங்கமாக இருப்பார். எவரும் தன்னைத் தொந்தரவு செய்யக்கூடாது. ஒதுங்க வேண்டும் என்பதற்காகவே அப்படி வருவார். அவர் கால்களை கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்.'

அன்று இரவு சொற்பொழிவின் ஆரம்பத்திலேயே துளஸிதாஸர் கவனித்து விட்டார். தன் கண்ணெதிரே ஆனால் எட்டி தலையில் முட்டாக்குப் போட்டுக்கொண்டு இருப்பவரை பார்த்து விட்டார். அன்று பிரசங்கத்தில் சபரீயின் கதை. சபரி ராமன் எப்போது வருவாரோ? என்று வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கிறாள். வழியிலே போவார்- வருவோரையெல்லாம் வினவுகிறாள்? புலம்புகிறாள்.

*'ராம! குருநாதர் அருள் பாலித்தாரே. உனக்கு கட்டாயம் ராமதரிசனம் கிடைக்குமென்றாரே. இங்கே வருவார் என்று சொன்னாரே. எங்கே போய் தேடுவேன்? ஒருவேளை நான் இல்லாதபோது இங்கு வந்து விட்டுப்போய்விட்டால்?'*

*'ராம அப்படியெல்லாம் என்னை ஏமாற்றி விடாதே. எனக்கு நீதான் கதி. எனக்கு வேறெதிலும் நாட்டமில்லை. எங்கே சுற்றுகிறாயோ. உனக்கு யாராவது வழி காட்ட மாட்டர்களா? நீ இங்கு வரமாட்டாயா? உன்னைத் தேடி நான் அலைய இருக்க, நீ என்னைத் தேடி வரவேண்டுமென நினைக்கிறேனே! என்ன அபசாரம்? நீ எங்கு இருக்கிறாய்? குருநாதன் சொல்லை மீறமுடியாதே. நான் உன்னைத் தேடி வர முடியாதே. யாராவது அழைத்து வரமாட்டார்களா? ராமனை நான் தரிசிப்பேனா? எனக்கு அந்த பாக்யம் உண்டா என்று சபரீயின் வாயிலாக துளஸீதாசர் கதறிவிட்டு மூர்ச்சை அடைந்துவிட்டார். சபை முழுவதும் கண்ணீர் விட்டுக் கதறியது, ராம ராம என்று கோஷம்.*

*வெகு நேரம் ஆயிற்று. துளஸீதாஸர் மூர்ச்சை தெளியவில்லை. சிலர் நெருங்கி வந்து அவருக்கு உபசாரம் செய்தனர். சபை கலைந்தது.*

*துளஸீதாஸர் வெகுநேரம் கழித்துக் கண் திறந்தார். எதிரே குஷ்டரோகி நின்று கொண்டிருந்தார். ''ப்ரபோ அஞ்ஜனி புத்திர'' என்று கூறிக்கொண்டே அவருடைய கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.*

*அனுமான் கால்களை விடுவித்துக் கொண்டார். துளஸீதாசர் வாடி வதங்கி கிடந்தார். அநுமான் அவரை தோளில் தூக்கிக் கொண்டார். விடுவிடு வென்று நடந்தார். பொழுது விடிந்தது. அநுமான் துளஸீதாஸரை இறக்கிவிட்டார்.*

துளஸிதாஸர் கண் விழித்தார். ''நான் எங்கிருக்கிறேன்?''

''இது தான் சித்திர கூடம். இந்த இடம் ராமகிரி என்ற பெயர். ராமன் முதன் முதலில் வனவாசம் செய்த இடம். அதோ பாரும் மந்தாகிநீ. இங்கே உட்கார்ந்து ராம ஐபம் செய்யும். ராம தரிசனம் கிடைக்கும்.''

''ஸ்வாமி நீங்கள் கூட இருக்க வேண்டுமே.''

''நீர் ராம நாமம் சொன்னால் உம் கூடவே இருப்பேன். எனக்கு வேறென்ன வேலை?''

அநுமான் மறைந்து விட்டார். துளஸிதாஸர் ராம நாம ஐபம் செய்தார். ராமன் வருவாரா? எப்படி வருவார்? லட்சுமணன் கண்டிப்பாகக் கூட வருவாரா? வைரகிரீடம் தரித்து வருவாரா?மரவுரி அணிந்து வருவாரா? பீதாம்பரம் அணிந்து வருவாரா? ரதத்தில் வருவாரா? நடந்து வருவாரா? இங்கே எதற்காக வருவார்? எனக்கு தரிசனம் கொடுப்பதற்கு மட்டுமா? அனுமான் பொய் சொல்வாரா? ராமன் அவர் பேச்சைக் கேட்பாரா? எனக்குப் பாக்கியம் இருந்தால் தானே, ஹநுமான் பேச்சை ராமன் கேட்பார்? இல்லை. அநுமான் பேச்சை ராமன் தட்டமாட்டார். எனக்காக இல்லாவிட்டாலும் அநுமானுக்காக வருவார். என்னோடு இருக்கிறேன் என்று சொல்லிவிட்டு எங்கே போய் விட்டார்? அழைக்கத்தான் போயிருக்கிறாரோ? என்னை ராம சந்நிதானத்திற்கு அழைத்துச் சென்றிருக்கக் கூடாதா, பாவம். காசியிலிருந்து தொலை தூரம் என்னைத் தூக்கி இங்கே போட்டிருக்கிறார். இன்னும் தூக்க வேண்டுமா? ராமன் வருவாரா?

ஐயோ நான் என்ன தவம் செய்துவிட்டேன், ராமன் என்னை தேடி வருவதற்கு? ராமனைப் பற்றி வாய்வீச்சாக என்னவோ பிதற்றிக் கொண்டிருந்தேன். அதெல்லாம் ராமனுடைய சரிதத்திற்குப் பொருந்துமா? ராமனுக்குப் பெருமை சேர்க்குமா? ராமனுக்கு பெருமை சேர்க்கும்

விதத்தில் நான் பேசியிருக்கிறேனா? நான் பேசவாவது? எனக்கு என்ன தெரியும்? குருநாதன் அருள். அவர் எத்தனை தடவை ராமாயணம் படித்தார். அத்தனையும் என்னிடம் கொட்டிக் கொடுத்தாரே , அந்த புண்ணியத்தை நான் ஏற்றுக் காப்பாற்றினேனா? ஊர் ஊராய்ச் சுற்றினேனே, பெண்ணின்பால் மனதைப் பறி கொடுத்தேனே. ராமன் மன்னிப்பாரா? ராமனுக்கு மன்னிப்பைத் தவிர வேறு என்ன தெரியும்? அவியாஜ கருணா மூர்த்தியாயிற்றே. அவராக நினைத்து எனக்கு தரிசனம் கொடுத்தால்தானே உண்டு. அநுமான் சொல்லிவிட்டார். அவர் நிச்சயம் வருவார். ஏமாந்து விடக்கூடாது. தரிசித்தவுடன் திருவடித் தாமரைகளில் விழுந்து பிடித்துக் கொள்ள வேண்டும். சரண தூளியைச் சிரமேற் தாங்க வேண்டும். சங்கு சக்கரம், துவஜம், அங்குசம் முதலிய ரேகைகள் படிந்த அடிச்சுவடுகளை மனதில் பதிய வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு திருமுக மண்டலத்தைக் காணவேண்டும். பரந்த மார்பை பார்க்க வேண்டும். பக்கத்தில் ஸீதா ஒய்யாரமாக நிற்பாளே , லட்சுமணன் பின்னால்தான் நிற்பார். அவர்களையும் பார்க்கவேண்டும். தாமதிக்கக்கூடாது - என்றெல்லாம் கற்பனை பண்ணினார். இடுப்புத் துணியை வரிந்துக் கட்டிக் கொண்டார். கண்கொட்டாமல் இங்கும் அங்கும் பார்த்துக் கொண்டே இருந்தார்.

மலைப்பாதை .ஒற்றையடிப் பாதை. இருபுறமும் புதர். அப்பால் ஒரு பாறாங்கல். அதன் மேல் நின்று கொண்டு ராம ராம என்று நர்தனமாடினார். மலை உச்சியிலிருந்து வேகமாக இரண்டு குதிரைகள் ஓடி வந்தன. அவற்றின் மீது இரண்டு ராஜாக்கள். துளசீதாசர் எத்தனையோ ராஜாக்களைப் பார்த்திருக்கிறார். தலையில் தலைப்பாகை . அதைச் சுற்றி முத்துச் சரங்கள். கொண்டை மீது வெண்புறா இறகுகள். வேகமாக குதிரை மீது வந்தவர்கள் அவரைப் பார்த்து சிரித்துக் கொண்டே போய்விட்டனர்.

*'ஆமாம்! பெரிய வீரர்கள்? என் ராம லட்சுமணர்களுக்கு ஈடாவாரா ? தலையில் ரத்தின கிரீடமும் மார்பில் தங்க கவசமும் சந்திர ஹாரங்களும் கையில் வில்லும் இடுப்பில் அம்புறாத் துணியும் கையில் ஒரு அம்பைச் சுற்றிக் கொண்டே என்ன அழகாக இருப்பார்கள்?என்று ராமனை தியானித்தவாறே ராம நாமம் சொன்னார்.'*

*சற்று நேரம் கழித்து அநுமான் வந்தார். 'ராம லட்சுமணர்களைப் பார்த்தீரா ? '*

*'இல்லையே'*

*'என்ன இது?உம் பக்கமாகத் தானே குதிரை சவாரி செய்துகொண்டு வந்தார்கள்.'*

*'ஐயோ! அவர்கள் ராம லட்சுமணர்களா?ஏமாந்து போனேனே'*

*'ஏன் காணும்? ராமன் உம்மிஷ்டப்படி தான் வருவாரா?அவர் இஷ்டப்படி வரக்கூடாதா?'*

*'சுவாமி! மன்னிக்க வேண்டும்.பேதை நான் .நான் ஏதோ கற்பனை செய்து கொண்டு வந்தவர்களை அலட்சியம் செய்துவிட்டேன். வாயு குமாரா! இன்னும் ஒரு முறை தயவு செய்யும். அவர்கள் எந்த வடிவத்தில் வந்தாலும் பார்த்து விடுகிறேன்.'*

*'அதெல்லாம் சரி.நீர் போய் மந்தாகிநியில் இறங்கி ஸ்நானம் செய்துவிட்டு ஜபம் செய்யும். ராமாயண பாராயணம் செய்யும். ராமன் வருவாரா?பார்க்கலாம்.'*

*துளசீதாஸர் மந்தாகிநிக்கு ஓடினார். ஸ்நானம் செய்தார். ஜபம் செய்தார்.வால்மீகி ராமாயணத்தை ஒப்புவித்தார். இரண்டு நாட்கள் ஆகிவிட்டன.பரதன் சித்திர கூடத்திற்கு வருமுன் ராம லட்மணர்கள் சித்திரக் கூடத்தில் வசித்துக் கொண்டு காலையில் மந்தாகிநியில் ஸ்நானம் செய்கிறார்கள்என்ற கட்டத்தை படித்துக் கொண்டிருந்தார்.*

*எதிரே மந்தாகிநியில் ஸ்நானம் செய்துவிட்டு இரண்டு இளைஞர்கள் கரை ஏறி துளஸீதாஸரிடம் வந்தனர். ஒருவன் நல்ல கருப்பு. மற்றவன் தங்க நிறம். தலையில் புது சடை. முகத்தில் பத்து பதினைந்து நாள் தாடி மீசை.*

*'ஸ்வாமி! கோபி சந்தனம் இருக்கிறதா?'*

*'இருக்கிறதே. தருகிறேனே.'*

*'ஸ்வாமி! எங்களிடம் கண்ணாடி இல்லை. நீங்களே எங்கள் நெற்றியில் இட்டு விடுங்களேன்.'*

*(வடநாட்டில் கங்கை முதலிய தீர்தங்கரையில் பண்டாக்கள் உட்கார்ந்து கொண்டு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்துவிட்டு வருபவர்களுக்கு நெற்றியில் திலகம் இட்டு தட்சிணை வாங்கிக் கொள்ளும் பழக்கம் இன்று கூட உண்டு.)*

*அன்று கி.பி 1550 மாக மாதம் மௌநீ அமாவாசை.அதற்கென்ன?நாமம் போட்டு விடுகிறேனே' என்றார் துளசீதாஸர். இடது கையில் நீர் விட்டுக் கொண்டு கோபி சந்தனத்தை குழைக்கிறார். அந்த கருப்புப் பையன் தன் எதிரே உட்கார்ந்து முகத்தை நீட்டுகிறான். இவர் அவன் மோவாயைப் பிடித்துக் கொண்டு முகத்தைப் பார்க்கிறார். அவனது கண்கள் குறு குறுவென்று இவரைப் பார்க்கின்றன. பார்த்த வண்ணம் மெய் மறந்துவிட்டார்.அந்தப் பையன் இவருடைய கையில் இருந்த கோபி சந்தனத்தைத் தன் கட்டை விரலில் எடுத்து தன் நெற்றியில் தீட்டிக் கொண்டு அவருடைய நெற்றியிலும் தீட்டினான்.*

*அவர்கள் உட்கார்ந்திருந்த துறைக்கு அருகே ஒரு மாமரம்.அதன் மீது ஒரு கிளி.அது கூவியது.*

***சித்திர கூடகே க$_4$ாடபர ப$_4$இ ஸந்தந கீ பீ$_4$ர।***

***துளஸிதாஸகே சந்தந கிஸே திலக தேத ரகுபீர॥***

*சித்திரக் கூடத்துக் கரையில் சாதுக்கள் கூட்டம்.*

துளசீதாஸர் சந்தனம் இழைக்கிறார்.ராமன் திலகமிடுகிறார். துளசீதாஸர் திடுக்கிட்டு சுய நினைவுக்கு வந்தார்.

'ஸாதுஜீ என் நெற்றியில் நாமம் சரியாக இருக்கிறதா?' என்று கேட்டான் அந்த கருப்பு இளைஞன்.' இதைவிடப் பொருத்தமான நாமம் ஏது என்று கூறிக் கொண்டே அந்த இரண்டு இளைஞர்களையும் இழுத்து அணைத்துக் கொண்டார்.

மறுகணம் ராம லட்சுமணர்களைக் காணோம்.

கிளி வடிவத்தில் வந்து ராம தர்சனத்தை உணர்த்தியவர் ஹனுமான்.

துளசீதாஸர் தரையில் வீழ்ந்து புரண்டார். இரவு வந்தது.ஹனுமான் வந்தார். 'என்னையா ! ராமனைப் பார்த்தீரா? ' பார்த்தேனே!அவரை சேவிக்கவில்லையே'

'கவலைப்படாதேயும். இனி உம்மை ராமன் விடமாட்டார்.அவர் எப்படி இருந்தார் சொல்லு பார்ப்போம்.'

துளசீதாஸர் பாடினார்.

ஸ்ரீ ராமசந்த்ர க்ருபாளு ப$_4$ஜூமந
ஹரண ப$_4$வபய தாருணம் ।
நவகஞ்ஜ லோசந கஞ்ஜா முக$_2$
கர கஞ்ஜ பதகஞ்ஜாருணம் ॥

கந்தர்ப்ப அகணித அமித ச$_+$சி$_+$நவ
நீல நீரத$_3$ ஸூந்த$_3$ரம் ।
பட பீத மாநஹூ தடிதருசி சுகி
நௌமி ஜநகஸூதாவரம்
ப$_3$ஜீ தீநப$_3$ந்து$_4$ தி$_3$நேச தாநவ தைத்ய
வம்ச நிகந்த$_3$நம்

*ரகு$_4$நந்த$_3$ ஆநந்த$_3$ கந்த$_3$ கோஸலசந்த$_3$*
*த$_3$சரத$_2$நந்த$_3$நம்*

*ஸிரமகுட குண்ட$_3$ல திலக சாரு உத$_3$ாரு*
*அங்க$_3$ விபூஷணம்*
*ஆஜாநுபு$_4$ஜ ச$_+$ரசாபத$_4$ர ஸங்க்$_3$ராம*
*ஜிதக$_2$ரதூ$_3$ஷணம்*

*இதிவ திதுலஸீத$_3$ாஸ சங்கர*
*சேஷ முநிமந ரஞ்ஜநம்*
*மம ஹ்ருத$_3$ய கஞ்ஜ நிவாஸ*
*குரு காமாதி$_3$ க$_2$லத$_3$ல கஞ்ஜநம்*

என்று பாடினார்.

## ஸ்ரீராம சரிதமாநஸம்

துளஸீதாஸர் சித்திரக்கூடத்திலிருந்து கிளம்பினார். அப்போது பிரயாகையில் மாகமேளா நடந்து கொண்டிருந்தது. அங்கு சென்றார். திரிவேணியில் ஸ்நானம் செய்தார். அதன் கரையில் உள்ள அட்சயவடத்தை வலம் வந்தார். அந்த அட்சய வடத்தைச் சுற்றி அருகே முனிவர்களின் பிம்பங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொன்றாக வணங்கினார். இரவு வந்து விட்டது. இருட்டில் அந்த பிம்பங்கள் உயிர் பெற்று எழுந்தனர். அவர்களில் ஒருவர் சொற்பொழிவு ஆற்றினார். துளஸீதாஸர் கவனமாகக் கேட்டார். ஆனால் அவர்கள் வால்மீகி ராமாயணத்தை எடுத்து ஆளவில்லை. வேறு எந்த நூலிலிருந்தோ சுலோகங்களைக் கூறினர். இதே சுலோகங்களை முன்பு கேட்டிருக்கிறோமே என்று நினைத்துப் பார்த்தார். அவருக்கு நினைவு வந்து விட்டது. ஆம் நம் குருநாதர் நரஹரி ஆநந்தர் கூட இந்தச் சுலோகங்களைச் சொல்லியிருக்கிறாரே.

பிரசங்கம் முடிந்ததும் அந்த முனிவர்களைப் பணிந்து துளஸீதாஸர் இது என்ன நூல்? என்று கேட்டார். முனிவர் கூறினார்.

முதல் முதல் பகவான் சிவபெருமான் இதை பார்வதீக்குச் சொன்னார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த யாஜ்ஞுவல்கியர் என்ற முனிவர் இந்த பிரயாக க்ஷேத்திரத்திற்கு வந்து பரத்வாஜ முனிவருக்குச் சொன்னார். அதை நாங்கள் நேரே கேட்டிருக்கிறோம். அதைத் தான் நாங்கள் திருப்பிப் திருப்பிச் சொல்லிக் கேட்போம் என்றார்.

துளஸீதாஸருக்கு ஒரே ஆச்சரியம். சிவபெருமான் திருவாய் மலர்ந்த ஒரு நூல். அதை முழுவதும் கேட்க வேண்டுமே. மறுநாளும் அதே நேரத்துக்கு அங்கு வந்தார்.

முனிவர்கள் சிலையாகவே அமர்ந்திருந்தனர். பேச்சு மூச்சு இல்லை. பல நாட்கள் தங்கினார்.பயனில்லை.

என்ன செய்வோம்? மறுபடியும் நம் குருநாதனையே சரணடைவோம் என்று தம் ஊரான ராஜாப்பூரை நோக்கிக் கிளம்பினார். ராஜாப்பூரில் நரஹரி ஆநந்தர் ஸூகர க்ஷேத்திரத்தில் இருக்கிறார் என்று தெரிந்தது.

தற்காலத்தில் ஸோரோ என்று பெயர். உத்திரப்பிரதேசத்தில் எடா மாவட்டத்தில் உள்ளது. அங்கு தான் பகவான் ஹரி வராஹ அவதாரம் எடுத்து இரண்யாக்ஷனை வதம் செய்து பூமி தேவியை மீட்டு தீர்த்தத்திலிருந்து வெளியே வந்தார் என்று புராண வரலாறு. அங்கு ஒரு பெரிய குளம். சுமார் இருநூறு ஏக்கர் பரப்புள்ளது. அது ஒரு சுரைக்காய் வடிவத்தில் நீண்டு வளைந்து உள்ளது. அதன் கரையில் படிக்கட்டுகள் நெடுக உண்டு. அதற்கு வராக குண்டம் என்று பெயர். அதில் 36 காட்கள் உள்ளன. கீழ்கரையில் வராகப் பெருமாள் திருக்கோவில். இந்தத் தீர்த்தத்தின் பக்கத்தில் உள்ள கிராம மக்கள் இறந்த முன்னோர்களுடைய அஸ்திகளைக் கரைப்பார்கள். எலும்பு

ஒரு தூள்கூடப் பார்க்கக் கிடைக்காது. இது ஒரு தபோ பூமி. இங்கு தவம் செய்து ஸித்தி பெற்ற மஹா புருஷர்களைப் பற்றிப் பல கதைகள் இதே ஊரில் பிரசித்தம். இதற்கு வ்ருத்த கங்கா என்ற பெயரும் உண்டு. அந்த தீர்த்தத்தின் மேல் கரையில் துளஸீதாஸரின் நினைவுச் சின்னமான ஒரு மண்டபத்தில் துளஸீதாஸர் கையில் சுவடி எழுத்தாணியுடன் அமர்ந்திருப்பது போன்ற ஒரு பிம்பம் உள்ளது. இதற்குச் சற்று தூரத்தில் துளஸீதாஸர் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. **(யோகமார்க்க முஹல்லா)** ஒரு இடிந்த வீடு இருக்கிறது. இந்த இடிபாடு மண் - காதுக் கரப்பான் வியாதியைத் தீர்க்கிறது என்று கூறுகிறார்கள்.

அங்கு வந்து சேர்ந்தார் துளஸீதாஸர். நரஹரி ஆநந்தர் தொண்டு கிழவராகக் கண் தெரியாமல் காது கேளாமல் ஓயாமல் ராம நாமம் சொல்லிக்கொண்டிருந்தார். அவரைப் பணிந்து மிகவும் சிரமப்பட்டு தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார் துளஸீதாஸர்.

இது தெரிந்ததும் அந்தக் கிழவர் இவரை ஆர்வத்துடன் எழுந்து கட்டிக் கொண்டார். தடவிக் கொடுத்தார். கண்களில் தாரை தாரையாக நீர் பெருகியது.

துளஸீதாஸர் தனக்கு பகவான் சிவபெருமான் பார்வதீக்கு சொன்ன ராம கதையைக் கூற வேண்டுமென வேண்டினார்.

கிழவரால் பேச முடியவில்லை. தட்டுத் தடுமாறிப் பல சுலோகங்களைக் கூறினார். நீ காசிக்குப் போ. அஸி காட்டில் அநுமான் பிரத்யக்ஷமாக இருக்கிறார். அவர் உனக்குக் கூறுவார் என்று கூறினார்.

காசிக்கு ஓடோடி வந்து அஸி காட்டைச் சுற்றி சுற்றி வந்தார். முன்பெல்லாம் வழக்கமாக தரிசனம் கொடுக்கும் அநுமானைக் காணோம். குருநாதர் இளம் பருவத்தில் தனக்குச் சொன்னதை ஆழ்ந்து யோசித்து நினைவுக்கு கொண்டு வந்தார்.

*அவற்றை ஸம்ஸ்கிருதத்தில் சுலோகங்களாக ஓலைகளில் எழுதினார். ஒலைகளை இரவில் கட்டி வைத்துக் காலையில் அவசர அவசரமாக ஒலைச் சுவடிகளைப் பிரித்தார்.*

*முன் சுவடிகளில் எழுத்துக்களே இல்லை. மறுபடியும் அன்றும் எழுதினார். பல நாட்கள் எழுதினார். சுவடிகளில் பதியவே இல்லை. எட்டாவது நாளிரவு ஒரு கனவு. காசி விச்வநாதர் தோன்றினார்.*

*'பையா! ராமனைப் பற்றி ஸம்ஸ்க்ருதத்தில் பல பேர் எழுதி விட்டார்கள். அருமையான காவியங்கள் வந்து விட்டன. அவை எல்லாம் நாட்டு ஜனங்களுக்கு எட்டவில்லை. யாரெல்லாமோ சொல்லக்கேட்டு ஜனங்கள் தாகத்துடன் இருக்கிறார்கள். தம் வாயால் பாட மாட்டோமா? என்று ஏங்குகிறார்கள். அவர்களுக்கு ஸம்ஸ்கிருதம் வாயில் நுழையவில்லை. அவர்கள் பேசும் மொழியில் எழுது. அதை அவர்கள் பாடினால் அதை ஸாம கானம் போல நான் கேட்பேன். எவ்வளவு தான் கொச்சையாக இருந்தாலும் உன் வாயில் வரும் சொற்கள் ஜீவ கலையுடன் வெகு நாட்கள் விளங்கும். மக்களுக்கு ஜீவாதாரம் ஆகும். அதைப் பாடிப்பாடி மக்கள் இன்னல் தீர்ந்து இன்பமாக வாழ்ந்து ராமன் திருவடியில் பக்தி கொள்வார்கள். சந்தேகமில்லை.*

*எதிரே அநுமான் நின்றார். 'உம்மை அயோத்திக்குப் போகச் சொன்னேனே'.*

*'சொன்னீர்கள் ஆனால் நீங்கள் தான் இப்படியெல்லாம் சுற்ற வைத்தீர்கள். பிரயாகையில் ஒரு அருள்!. சூகரத்தில் ஒரு கருணை.! இங்கு காசியில் ஒரு தயவு!. எல்லாம் உங்கள் கிருபை.! நானாகவா வந்தேன்?*

*அநுமான் சிரித்தார். 'சரி சரி அயோத்திக்கு கிளம்பும்.*

*இரண்டே நாட்கள் நடந்து துளஸீதாஸர் அயோத்தி சேர்ந்தார். சரயூவில் ஸ்நானம் செய்தார். கரை ஏறி சூரியனை*

நோக்கி தியானம் செய்தார். சொம்பில் சரயூ நீரை எடுத்துக்கொண்டு கரை ஏறினார். ஒரு ஸாது வந்தார். 'என்னோடு வாருங்கள்'.

'எங்கே போக வேணும்? நீங்கள் யார்?

'வாருங்களேன் போகப் போகத் தெரியும்'.

அவரைப் பின் தொடர்ந்தார். ஓரிடத்தில் ஆலமரம். பரந்து விரிந்து இருந்தது. அதன் நிழலில் ஒரு பெரிய தாழ்வாரம். கல் மேடை. அங்கு ஒரு பெரியவர் மிகுந்த காந்தியுடன் அமர்ந்திருந்தார். அவரை அணுகி வணங்கினார் துளஸீதாஸர். அந்தப் பெரியவர் எழுந்திருந்தார்.

''உமக்காகத் தான் இந்த இடம். இந்த இடத்தை இப்படி தயார் செய்து நீர் வந்தவுடன் உம்மிடம் ஒப்புவிக்கும்படி என் குரு உத்தரவிட்டார். இது ஒரு ஸித்த தலம், இங்கே உட்கார்ந்து எது நினைத்தாலும் உடனே பலிக்கும். உமக்காக அதோ பர்ணசாலையும் போட்டு வைத்திருக்கிறேன். என் வேலை முடிந்தது'' என்றார் பெரியவர். அவர் நின்ற இடத்திலே ஒரு நெருப்பு பொறி தெரிந்தது. மறுகணம் அந்த அக்நியில் மறைந்தார் பெரியவர். துளஸீதாஸருக்கு ஒரே ஆச்சரியம்.

மறுநாள் (கி.பி.1574) சைத்ர சுக்ல நவமீ செவ்வாய் கிழமை. ராமன் பிறந்த நாள். ஸரயூவில் ஸ்நானம் செய்து விட்டு அமர்ந்தார்.

மஹாகணபதி, பார்வதி பரமேச்வரன், நாரதர், வால்மீகி ஆதிசேஷன், ஸரஸ்வதி இவர்களை த்யானம் செய்தார். ஹநுமான் வந்தார்.

மஞ்சள் மசேலென்று ஒருபுது சுவடிக்கட்டையும் எழுத்தாணியையும் கொடுத்துப் புன்னகை புரிந்தார். துளஸீதாஸர் எழுத ஆரம்பித்தார்

''வர்ணாநாம் - அர்த்த ஸங்காநாம்''

இப்படி இரண்டு ஆண்டுகள் ஏழு மாதம் இருபத்தாறு நாட்களில் ஸ்ரீராம சரிதமாநஸம் எழுதி முடிந்தது. கி.பி.1576 மார்கழி வைகுண்ட ஏகாதசி அன்று **சுபம் ஓம் தத்ஸத்** என்று எழுதி முடித்தார்.

அது பல எதிர்ப்புகள் இன்னல்களிடையே சாதாரண மக்களின் மஹத்தான ஆதரவினால் நாடெங்கிலும் ஆதரவு பெற்றது.

**கோஸ்வாமி துளஸீதாஸர் ஆனார் அவர்.** காசியிலிருந்து புறப்பட்ட துளஸீதாஸரை ராஜா தோடர்மல் என்ற அக்பரின் மந்திரி தடுத்து காசியின் தெற்கு முனையில் அஸிகாட்டில் அவருக்கு மாளிகை கட்டிக்கொடுத்தார். அது இன்றும் ''துளஸி காட்'' என வழங்குகிறது.

கங்கையின் பிரவாஹத்தின் மீது அந்த மாளிகையின் மாடம் துருத்திக் கொண்டு முப்புறமும் ஜன்னல்கள் வைத்தது. கங்கையை வடக்கே தசாச்வமேதகாட் முதல் - தெற்கே கங்கை கிழக்கே திரும்பும் வரை பார்க்கலாம்.

ஒரு நாள் அவரைத் தேடிக் கொண்டு அவருடைய பால்ய நண்பர் **நந்ததாஸ்** வந்துவிட்டார். அவருடன் அந்தரங்கமாக தமது ராம அநுபவத்தையும் மாருதி அநுபவத்தையும் கோஸ்வாமி கூறினார்.

நந்ததாஸ் கோஸ்வாமியின் பக்தி அதிசயத்தை ஆதரவோடு கேட்டு புளகாங்கிதம் அடைந்தார். அவர் உத்தரவு பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

கோஸ்வாமி மாடத்தில் உட்கார்ந்துகொண்டு கங்கா பிரவாஹத்தைப் பார்க்கிறார். இக்கரையும் அக்கரையும் இடித்துக்கொண்டு பூரண பிரவாஹமாக கங்கை ஓட்டமில்லாமல் மிதப்பாக நகருகிறது. பிற்பகல் நேரம் கங்கையின் மேல்கரைகயிலோ வானளாவிய ஆலயங்கள் - மாளிகைகள். ஆகவே பிரவாஹத்தின் மேல்பகுதி முழவதும் நிழல். கீழ்பாதி பிரவாஹம் முழுவதிலும் சூரிய கிரணங்கள்

விழுந்து ஜலம் ஜொலிக்கிறது. கங்கையே உமைபாதி சிவன் பாதியாக அர்த்த நாரீச்வரராகக் காட்சி அளிக்கிறாள். ஒரே ஒரு ஓடம் .ஓடக்காரன் கியால் பாடிக்கொண்டு பிரவாஹத்தை எதிர்த்து ஓடத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறான்.

அந்த அர்த்த நாரீச்வர வடிவான கங்கையின் மத்தியில் இதயங்கள் ஒன்றுபட்டு அதில் ஸீதா ராமர்கள் வீற்றிருப்பார்கள். எப்படி வீற்றிருப்பார்கள்? ரத்தினங்கள் பதித்த தங்க ஓடத்தில் முத்துச் சரங்களால் அமைந்த விதானத்தின் கீழ் ஜிலுஜிலு வென்று மந்தமாருதம் வீச அந்த ஓடம் மிதந்து மிதந்து நகராமல் நிற்க......

ஆஹா எப்படி இருக்கும் அந்தக்காட்சி? கண்கொட்டாமல் கோஸ்வாமி கங்கா பிரவாஹத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

முரசொலி பெரிதாகக் கேட்கிறது. ஷனாய் முழங்குகிறது. பெரிய ஜாலர்களில் ஸுநாதம் கேட்கிறது. கங்கையின் மத்தியிலே ஒரு பெரிய ஓடம். அதில் எத்தனை வாத்தியக்காரர்கள்.

ஆஹா! கங்கையில் ராமன் தங்க ஓடத்தில் பவனி வந்தால் மங்கள வாத்தியங்கள் முழங்க வேண்டாமா? இது எனக்குத் தெரியவில்லையே! அதோ பின்னால் ஒரு அலங்கார ஓடம்! அதற்கு வெள்ளியில் அன்னப்பட்சி முகப்பு! ஆஹா! வரிசையாக மாணிக்கமும் மரகதமும் பதித்த தங்கமயமான ஓடம்! தூக்கிக் கட்டிய முத்துவிதானம்! விதானத்தில் நாற்புறமும் ரத்னமயமான தொங்கட்டான்கள்.

மத்தியிலே அதோ ஸீதையும் ராமனும் வெள்ளை வெளேரென்று அன்னப் பட்சிகளின் இறகுகளால் தைத்த மஞ்சம். அதோ ராமன் தோளிலிருந்து முழங்கால் வரை ஜரிகை தங்கரேக்கு வேலைப்பாடுகள் செய்த அங்கரக்கா. அன்று ரதன்லால் குப்தா வந்து அழைத்துப் போனானே. அவன் வீட்டில் விற்பனைக்காக அந்தக் கண்ணாடி அலமாரியில்

அங்கரக்கா தொங்க விட்டிருந்தானே. அதைக்காட்டிலும் உயர்ந்த ராமனுடைய அங்கரக்கா. மேலே மெல்லிய சிவப்பு பட்டு. அதன் மேல் ரேக்குகளும் சரிகை இழை சரம் கோத்து அழகான பூ வேலை கண்களைப் பறிக்கின்றது. அதன் மேலே பெரிதும் சிறிதுமான நல்முத்து மாலைகள். விலை பதினாயிரம் வராகன்கள் என்று சொன்னானே ரதன்லால். எவ்வளவு அழகாக இருக்கிறது? அதோ ஆகாய நீல வர்ணத்தில் உடலை அழுத்தினாற் போல பட்டுப் பாவாடை உடுத்திக்கொண்டு ஸீதை முத்துச்சரத் தொங்கட்டான்களிடையே முகம் சரியாகத் தெரியவில்லை.

ராமன் தலையில் ரத்தின கிரீடத்தைக் காணோமே. ஓஹோ, அந்ததந்த ஊரில் அந்தந்த வேஷம் போட வேண்டாமா? ராமனும் ஜரிகைத் தலைப்பாகை வைத்துக் கொண்டிருக்கிறார். இருபுறமும் முத்துச்சரங்கள், இந்திர நீலம், கோமேதகம், வைரம் பதித்த தங்கக் கேயூரம், நடுவில் ஜொலிக்க மேலே அன்னப்பறவை இறகுகள் சொருகி, இந்த ஜரிகைத் தலைப்பாகையும் ராமனுக்குப் பொருத்தமாகத்தான் உள்ளது. பின்னால் நிற்பவர்தான் லட்சுமணனோ? சாதாரண அங்கரக்கா இடுப்பில் அங்கவஸ்திரத்தை இறுகக் கட்டிக் கொண்டு மரியாதையாக நிற்கிறாரே.

ஓடம் மெதுவாக நகருகிறது. கங்கையின் மேல்கரையில் படிக்கட்டுகளில் கூட்டமாக நின்று கொண்டு மஹாஜனங்கள் என்ன கோஷம் பாடுகிறார்கள்? ஜயஜய ஸியாராம் கோஷம் கேட்குமே. இந்த வாராணஸியில் எங்கும் ஹர ஹர மஹாதேவ கோஷம் தான். ராமனுக்கும் அது பிடிக்குமே. அதோ சந்தோஷமாகக் கைவீசி உற்சாகப்படுத்துகிறாரே. ஆஹா ராமனுக்குத்தான் விச்வேசரிடம் எவ்வளவு பக்தி!!.

கோஸ்வாமி அந்தப் பவனியை ஊன்றி கவனிக்கிறார். அவர் அறியாமல் அவர் உரக்க கூவுகிறார். எங்கே,

அனுமானைக் காணோமே, பின்னால் குரல் கேட்கிறது.

'நான் இங்கே தானே நிற்கிறேன்'. கோஸ்வாமி திரும்பிப் பார்க்கிறார். அனுமான் நிற்கிறார்.

பஜ்ராங்க! ராமன் தங்க ஓடத்தில் கங்கையில் பவனி போகிறார். நீர் இங்கே நிற்கிறீரே.

'ராமன் ஓடத்தில் பவனி போகிறாரா?'

'அதோ பாருமே, கங்கையிலே'

'ராமனா பவனி போகிறார்.'

'உமக்குத் தெரியவில்லையா?'

'தெரிகிறது. தெரிகிறது'.

'நீர் ராமனை விட்டுவிட்டு இங்கே வந்து நிற்கிறீரே'.

'பிரபு - தான் கங்கையில் ஓடப்பவனி போவதை உம்மைப் பார்க்கச் சொல்ல வேண்டும்' என்று என்னை இங்கே அனுப்பினார்!

ராமனுக்கு இந்த ஏழையிடம் இவ்வளவு கருணையா? நான் தான் சற்று நேரம் முன்பு ராமன் இந்த கங்கையின் பூரண பிரவாஹத்தில் தங்க ஓடத்தில் பவனிவர மாட்டாரா? என்று அசட்டுத்தனமாக ஆசைப்பட்டேன். உடனே தானும் பவனி வந்து அதைப் பார்க்கச் சொல்லி எனக்கும் சேதி அனுப்பிவிட்டாரே ''ராமா ராமா ராமா'' என்று இறைந்து கூவினார். மூர்ச்சித்து விழுந்துவிட்டார்.

அனுமான் அவரைக் கைக்தாங்கலாகப் படுக்க வைத்தார். கோஸ்வாமி சில நிமிஷங்கள் கழித்து மயக்கம் தெளிந்து எழுந்தார். அனுமானைக் காணோம். கீழே யாரோ வாசற்கதவைத் தட்டுகின்ற ஓசைக் கேட்டது. யாரோ கதவைத் திறந்துவிடுகின்ற ஓசையும் கேட்டது. கோஸ்வாமி ஈனக் குரலில் பாட ஆரம்பித்தார்.

கீழே கிழவர் (அனுமான்) கதவைத் திறந்துவிட்டதும் நந்ததாஸ் அவசரமாக உள்ளே நுழைந்தார். கிழவர் கேட்டார், 'என்ன அவசரம்'? எங்கே போகிறீர்?'

'வந்து... கங்கையில் காசிராஜா விச்வேச்வரரை பிரதோஷ தர்சனம் செய்வதற்காக ஓடத்தில் பவனி போகிறார். அதைப் பார்க்கச் சொல்லலாம் என்று வந்தேன்.'

'இங்கே பாருமையா. நான் சொல்வதைக் கேளும். கோஸ்வாமி பரவசமாகப் பாடிக் கொண்டிருக்கிறார். அவரிடம் போய் காசிராஜா பவனியெல்லாம் சொல்லி, அந்தப் பரவசத்தை கெடுத்து விடாதீர். மௌனமாகப் போய் உட்கார்ந்து அவர் என்ன பாடுகிறார் என்று கேளும்.'

நந்ததாஸ் ஓசைப்படுத்தாமல் மாடிப்படி ஏறினார். கங்கையைப் பார்த்த வண்ணம் கோஸ்வாமி பாடுவதை ஊன்றிக் கேட்டார். கோஸ்வாமி பன்னிரெண்டு தோஹாக்களில் ஸ்ரீராமன் ஸீதா தேவியோடும் லட்சுமணனோடும் கங்கையில் ரத்தின ஓடத்தில் பவனி போவதையும் கைலாஸபதி பரமேச்வரனும் கைலாஸவாஸிகளான நித்யமுக்தர்களும் தரிசித்து ஆனந்தப்படுவதையும் அனுமான் தன் பக்கத்தில் நின்று அந்தக் காட்சியை அணு அணுவாக விளக்குவதையும் வர்ணித்துப் பாடுகிறார்.

பதினைந்து நிமிஷங்கள் ஓடின. கோஸ்வாமி பரவசம் அடங்கித் திரும்பிப் பார்க்கிறார். நந்ததாஸ் தாரை தாரையாகக் கண்களில் கண்ணீர் வழியக் கை கூப்பி நிற்பதைக் காண்கிறார்.

'நந்ததாஸ் ஸ்ரீராமன் இப்போது கங்கையில் ஓடப்பவனி போனாரே பார்த்தாயா?

'இல்லையே நான் ஏதோ வேறு பராக்குப் பார்த்துக் கொண்டிருந்தேன்'.

'நானும் பார்த்திருக்க மாட்டேன். அனுமான் தான் கூடவே நின்று அந்தக் காட்சியை எனக்குக் காட்டினார்.

எவ்வளவு கருணை?

'ராம் போலா இப்போது நீ பாடிய தோஹாக்களைப் பாடினாலே போதுமே. எவருக்கும் எல்லோருக்குமே இந்தப் பிரத்யட்சம் கிடைக்குமே'.

'நந்ததாஸ் என்ன தான் சொல்லு, அந்தப் பேரானந்தத்தின் சிறு துளி -மிகவும் சிறிய துளிதான் இந்த தோஹாக்களில் வந்துள்ளன.

(வாராணஸி பிர்லா மாநஸமந்திரில் உள்ள கிரந்தாலயத்தில் நந்ததாஸ் தன் கைப்பட எழுதிய கோஸ்வாமி துளஸீதாஸரின் தோஹாவனி கையெழுத்துப் பிரதி உள்ளது. அதில் இந்த தோஹாக்களின் அடியில் ஒரு குறிப்பு எழுதியிருக்கிறார் அவர். மெய்யான பரம் பொருளை முற்றிலும் மறைத்து பொய்யையே நிரந்தர உண்மையாகக் காட்டுவது உலக மாயை. ஆனால் பொய்யான உலகியலில் பரம்பொருளைக் காட்டுவது பக்தியின் மாயை என்று இந்த நிகழ்ச்சியை மிகக் சுருக்கமாக சொல்லியிருக்கிறார்.)

காசியில் வடேச்வர மிச்ரா - என்ற ஒரு தாந்திரிகர் இருந்தார். அவர் பைரவ உபாஸகன். அவரைக் கொண்டு ஏவல் வைத்து துளஸீதாஸரை மதிமயங்க ஏற்பாடு செய்தனர் பண்டிதர்கள். வடேச்வர மிச்ரா ஒரு மந்திரம் எழுதி துளஸீதாஸரின் குடிசை முகப்பில் வைக்க ஏற்பாடு செய்தார். மறுநாள் அந்த மந்திர ஓலையை ஒரு குரங்கு கொண்டு வந்து வடேச்வர மிச்ரரின் தலையில் போட்டது. அக்கணமே அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

அக்காலத்தில் பலவந்தமாக முஸ்லிம் மத மாற்றங்கள் நடைபெற்றன. அப்பாவி ஜனங்களுக்கு துளஸீ ராமாயணம் வஜ்ர கவசமாக அமைந்தது. மனதில் தைரியத்தையும் தெம்பையும் ஊட்டியது. ஏழை மக்கள் மதமாற்றத்தை எதிர்த்தனர்.

டெல்லி பாதுஷாவுக்குச் செய்தி கிட்டியது. துளஸீதாஸரை கைது செய்து டெல்லி கொண்டு போனார்கள். டெல்லி முழுவதும் ஆயிரக்கணக்கான வாநரர்கள் கூடிவிட்டனர். வீட்டுக்கு வீடு வாநரர்கள் நுழைந்து அட்டஹாசம் செய்தனர். காவல் படைகள் ஆயுதங்கள் தாங்கி வந்தனர். அவற்றை வாநரர்கள் ஆகாயத்திலே தாவி - ஆயுதப் பின்மட்டைகளால் காவல் படைகளை அடித்து நொறுக்கினர். துளஸீதாஸர் விடுதலை பெற்றார்.

துளஸீதாஸர் பகல் முழுவதும் காட்டுக்கு எதிரே இருந்த வனத்தில் ஸங்கடமோசந ஹநுமானிடம் ஸ்ரீராமசரிதமாநஸம் படிப்பார். எதிரே அமர்ந்து ஹநுமான் கேட்டார். சில இடங்களில் ஹநுமானும் சேர்ந்து பாடுவார். இருவரும் சேர்ந்து ராம நாமாவை பாடிக்கொண்டே நர்த்தனம் ஆடுவர். ஒரு நாள் ஹநுமான் இவரை இறுக்கிக் தழுவின போது துளஸீதாஸர் விலா எலும்பிலும் கைகளிலும் அழுத்தம் தாங்காமல் வலி வந்து ராமா என்று கூச்சலிட்டார், துடித்தார். ஹநுமான் சிரித்தார். அப்போது அவருக்கு வயது நூற்றுக்கும் மேல் இருக்கும். எதிரே சுவடியைப் பார்க்கக் கூட முடியவில்லை. அப்போது ஹநுமான் பாஹுக - என்று கீதம் பாடினார். ஹநுமான் அவருடைய விலாவைத் தடவி விட்டுக்கொண்டே கேட்டார். வலி தீர்ந்தது.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்த பிறகு - ராமன் அச்வமேத யாகம் செய்தபோது அந்த மஹா மண்டபத்தில் குசலவர்கள் ராமாயண கானம் முழங்கிய போது தான் ஸ்ரீராமன் ஸுந்தர காண்டத்தையே முதன்முதலில் முழுமையாகக் கேட்டார். முன்னொரு அத்யாயத்தில் கூறினது போல ஹநுமானுடைய பெருமையை முற்றும் உணர்ந்து கூறினார். ''வால்மீகி பகவானின் காவியம் முழுதுமே அமோகமான புண்ணிய காவியம்.''

அதில் ஹநுமானின் பெருமையைக் கூறுகின்ற காண்டம் - மனத்திற்கு மிகவும் ப்ரீதிகரமானது .ஹநுமான் பிறந்தபோது - அவனுடைய தாயார் அஞ்ஜநா தேவி

குழந்தைக்கு ஸுந்தரன் என்று பெயர் வைத்தாளாம். அந்தப் பெயர் விளங்கும்படி இந்தக் காண்டத்திற்கு ஸுந்தர காண்டம் -என்று பெயர் வைக்கும்படி வால்மீகி பகவானை வேண்டிக் கொள்கிறேன்'' - என்றாராம் ராமன்.

துளஸீதாஸர் ஸுந்தர காண்டத்தில் ஹநுமானின் பெருமையைக் விவரிக்கும் அழகே தனி. சௌபாயிகளும் தோஹாக்களும் படிக்கப் படிக்க நாவிற்கு இனிமையூட்டி - காதுகளுக்கு ரஸ மூட்டுகின்றது,

அவர் எழுதியுள்ள ஹநுமந் சாலீஸாவும் ஸங்கட மோசநநஸ்தவமும் - உத்தரபிரதேசம், மத்ய பிரதேசம், ஹரியானா, ஹரித்வார் முதலிய இடங்களில் முழங்கிக் கொண்டே இன்றும் விளங்குகின்றன.

ரயிலிலும் பஸ்ஸிலும் பாராயணம் செய்பவர்கள் - ஒருவர் இதைப்பாட ஆரம்பித்தால் உடன் பலர் சேர்ந்து கொள்வார்கள். துளஸீதாஸரின் வாழ்நாளில் ஹநுமான் தெய்வமாக ஆலயங்களில் அமைந்திராமல் - பலர் பார்க்க துளஸீதாஸருடன் நடமாடியது பற்றி பல பக்தர்கள் பாடியிருக்கிறார்கள். ப்ருந்தாவன பக்தர்கள் பலர் - ஹநுமானிடம் அத்யந்த ப்ரேமை பூண்டு - ராதா க்ருஷ்ண தர்சனம் செய்து வைக்க வேண்டி பிரார்த்தித்து தர்சனம் பெற்றிருக்கிறார்கள்.

## ஸூரதாஸருடன் ஹநுமான்

பிறவிக் குருடரான ஸூர்தாஸர் ஸ்ரீக்ருஷ்ணனிடம் அளவற்ற பக்தியுடையவர். அவர் உத்தவருடையவே அவதாரம் என்று பெரியோர்கள் கூறுவார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் மதுரா வந்த பிறகு ஒரு நாள் தன் ஆத்ம நண்பரான உத்தவனை 'நீ போய் பிருந்தாவனத்தில் உள்ள என் தாயார் தகப்பனார் யசோதா மாயி, நந்தபாபா, கோபியர்களிடம் சென்று, என் பிரிவினால் துடித்துக் கொண்டிருக்கின்ற அவர்களுக்கு, நான் வருவேன் என்று

சேதியை சொல்லி ஆறுதலளித்துவிட்டு வா என்று அனுப்பினார். உத்தவர் ப்ருந்தாவனம் சென்று ஸ்ரீக்ருஷ்ணனின் அந்தரங்க பக்தர்களை தர்சித்துப் பேரானந்தம் அடைந்தார். உத்தவர் பெற்ற அனுபவங்களைத்தான் **ஸூரர்பதினாயிரம்** பதங்களாக பாடியிருக்கிறார். அவற்றிற்கு **ஸூரஸாகரம்** என்று பெயர்.

அவர் காதில் ஸ்ரீதுளஸீதாஸரின் கீதமான ஸ்ரீராமசந்த்ர **க்ருபாளு பஜுமந** என்ற கீதம் வீழ்ந்தது. சொக்கியே போய்விட்டார். ஒரு ஸாது மூலமாக ஸ்ரீராமசரித மாநஸத்தை பிருந்தாவனத்திற்கு வரவழைத்து அந்த ஸாதுவை மாநஸகானம் செய்யச் சொல்லிக் கேட்டார். அவருடைய ஹ்ருதயத்தில் ராமன் புகுந்துவிட்டான். அது ஆச்சரியமில்லை. ராம தூத ஹநுமான் ஸூரதாஸருடைய ஹ்ருதயத்தை ஆக்ரமித்துக் கொண்டுவிட்டார்.

க்ருஷ்ண பக்தரான - உத்தவரை ஸ்ரீக்ருஷ்ணன் நானே தான் அவன் - என்று கொண்டாடினார். அப்போது இருவரும் சமம் என்று ஆயிற்று. ராமபிரான் ஹநுமானுக்கு தன்னையே அர்ப்பணம் செய்துவிட்டார் - என்றால் அவர்களுடைய உறவை எப்படி நிர்ணயிப்பது? பகவான் பக்தனை நானே நீ நீயே நான் என்று சொல்வது வேறு - பக்தன் பெருமாளை நீயும் நானும் ஒன்று சொல்லிக் கொள்வது வேறு. அது பக்தனுக்கு எவ்விதத்திலும் ஆனந்தம் தராது. தியாகராஜஸ்வாமி சொன்னார் **‘‘ஏகோபிஞ்சக நேது நீவது ஞானிகி ஏலாகு ஸுகம் இச்சுநே?** நீ நான் தான் நான் நீ தான் என்று ஏகோபித்துச் சொல்கின்ற ஞானிக்கு கிடைக்கிற சுகம் சுகமா?.

ஒருவரை ஒருவர் பற்றிக்கொள்வது பற்றி - ஸம்ஸ்கிருதத்தில் **மார்ஜாரகிசோர ந்யாயம் மர்க்கடகிசோர ந்யாயம்** -என்று இரண்டு வகை கூறுவார்கள். பூனை -குட்டி போட்டவுடனே குட்டியை வாயில் கவ்விக் கொண்டு போகும். அந்தப் பொறுப்பு தாயினுடையது -வாநரக்குட்டி தன் கைகளால் தாயின் இடுப்பை கெட்டியாகப் பிடித்துக்

கொள்ளும். குட்டி பிடித்துக் கொண்டிருக்கிறதே - என்ற கவலையில்லாமல் தாய் மரத்திற்கு மரம் தாவும். தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகின்ற பொறுப்பு குட்டிக்குதான். ராமன் ஹநுமானை - பூனை நியாயத்தை அநுஸரித்துக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டார். ஆலிங்கனத்தினாலே ராமன் தான் ஹநுமானைத் தன் இரு கைகளாலும் இழுத்துக் கட்டிக்கொண்டார். ஹநுமான் கூப்பின கையுடன் அந்த ஆலிங்கனத்தில் அகப்பட்டுக்கொண்டாரே தவிர - தானும் ராமனை தன் கைகளால் அணைத்து ஆலிங்கனம் செய்து கொள்ளவில்லை.

ஆனால் ஸுரதாஸர் குரங்கு நியாயத்தைக் கடைபிடித்து ஹநுமானைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுவிட்டார் - தமது பதங்களில் ஸுந்தரகாண்டக் கதையைப் பாடுகிறாரே தவிர ராமசரிதத்தை முழுமையாகவோ மற்ற நிகழ்ச்சிகளையோ தொட்டுப் பாடவில்லை

**யா தள மத்$_4$ய ப்ரக$_4$ட கேஸரிஸுத ஜாஹி நாம ஹநுமந்த வளஹல்யா இஹை(ம்) ஸிய ஸுதி$_4$ சி$_2$நமேம்**

**அரு ஆயிஹை(ம்) துரந்த**

**உந ப்ரதாய த்ரிபுவந கௌ பாயெனம்**

**வாகே ப$_3$லஹி ந அந்த**

வாநர வீரர் மத்தியில் ஹநுமான் ஒருவன் போனான். ஸீதை பற்றிய தகவல் தெரிந்து வேகமாக வந்தான். அவனுடைய பலத்திற்கு ஈடுகிடையாது என்று மூவுலகிலும் பேச்சு வந்தது.

**ஜநநீ ஹௌ(ம) அநுசர ரகுபதீ**

தாயே நான் ரகுபதியின் தொண்டன்

**நஹி தாநவ டக மதிகீ**
**மதி மாதா கரிகோப ஸராவை**
**ஆக்$_3$யா ஹோஇ தேஉ கரமுத$_3$ரீ கஹௌ ஸந்தேஸோ பதிகீ**

தாயே கோவிக்காதீர்கள். அரக்கர்கள் கெடுமதி ஒன்றும் செய்ய முடியாது .இந்தாருங்கள் அடையாள மோதிரம். ஆணையிடுங்கள் நாதருக்கு சேதி சொல்லுங்கள்.

**மதிஹிய பி$_3$லக$_2$ காரனஸிய**
**ரகுவர ஹதி (ம)குலதையதகி**

மனதை தளரவிடாதீர்கள் ரகுவரன் அரக்கர் குலத்தை அழித்துவிடுவார்.

**கஹௌ தௌனம் லம்க உகா$_2$ரி டா$_3$ரி**
**தே$_3$உம் பிதாஸம்பதி கீ**

சொல்லுங்கள் -லங்கையை பெயர்த்து கடலுக்கு - உங்கள் தந்தைக்கு - சீர் வைக்கட்டுமா?

**கஹௌ தௌ மாரி ஸம்ஹாரி நிஸாசர**
**ராவண கரௌ(ம்) அகதிகீ**

சொல்லுங்கள் அரக்கர் அனைவரையும் அழித்து ராவணனை நிர்கதியாக நிறுத்தட்டுமா?

**ஸாகர தீர பீர பநசரகீ**
**தேகி கடக ரகுபதி கீ**

கடற்கரையைப் பாருங்கள் அதோ அத்தனையும் வாநரக் கூட்டம். அடுத்தாற் போல பாருங்கள். ரகுபதியின் பாசறை.

**அபைம் மிலாஊம் தும்ஹேம் “ஸூர” பிரபு**
**ராம ரோஷகௌடர அதி கீ**

இப்போதே உங்களை ராமனுடன் சேர்த்து விடுகிறேனே! ஸூரதாஸ ப்ரபு மிகுந்த ரோஷத்தோடு இருக்கிறார்.

ஹநுமானை ராமன் வினவுகிறார்.

**கைஸேம் புரீ ஜரீ கவிராட்**

குரங்குச் சிங்கமே! லங்கையை எப்படி எரித்தாய்?

**துமபல தேஜ முராரீ**

‘‘உங்களுடைய தேஜஸ்ஸின் பலத்தினால்தான்?

‘‘பெரிய அரக்கர்களை எப்படி ஒருவனாக எதிர்த்தாய் எப்படி அழித்தாய்? எப்படித் தப்பித்தாய்’’

‘‘ஒரு பெரிய மண்டபம் - நான்கு பக்கமும் காவல். கதவை உடைத்தேன் -‘‘உள்ளே முப்பத்து முக்கோடி தேவர்கள்’’

‘‘அத்தனை தேவர்களைக் கட்டிப் போட்டவனை எப்படி எதிர்த்தாய்?’’

‘‘ஜய ஸ்ரீராம - என்று சிம்ம கர்ஜனை போட்டேன். அத்தனை பேரும் பொத்து பொத்தென்று வீழ்ந்தார்கள். நான் போட்ட கர்ஜனையால் அல்ல. உங்கள் கோபமும் ஸீதா தேவியின் சாபமும் அவர்களைத் தீர்த்துவிட்டது.

ஹநுமான் ஸஞ்ஜீவி பர்வதம் கொண்டு வந்து மூலிகைகளின் வாஸனையினாலே லட்சுமணனை எழுப்பிய விந்தையை மிகவும் ரஸமாக வர்ணிக்கிறார்.

ஸூரதாஸர் கோபிகளின் க்ருஷ்ண பக்தியையும் ஹநுமானின் ராமபக்தியையும் எடை போட்டுப்பார்க்கிறார்.

தன் மனதை முழுமையாக ஆட்கொண்ட கோபிகளின் ஆர்வத்தை நினைத்துப் பார்க்கிறார்.

கண்ணனிடமே மனதை பறி கொடுத்தவர்கள் அவனைப் பற்றியே ஓயாமல் பேசிக் கொண்டிருப்பவர்கள். அவன் லீலைகளையே பாவித்து அபிநயம் பிடிப்பவர்கள். தனக்கென ஒரு ஆத்மா இல்லாமல் கண்ணனையே தன் ஆத்மாவாகக் கொள்பவர்கள். அவனுடைய க்ருபையையும்

குறும்பையும் பாடிக் கொண்டிருப்பவர்கள் - தன் ஆத்மா குடியிருக்கின்ற வீடான உடலையே மறந்தவர்கள்.

**தந்மநஸ்கா: தத$_3$ாலாபா: தத்$_3$விசேஷ்டா: தத$_3$ாத்மிகா:!**

**தத்$_3$குணாநேவ க$_3$ாயந்த்ய:**

**நாத்மாக$_3$ாராணி ஸஸ்மரு:!**

இவர்களுக்கு ஈடானவரா ஹநுமான்? அவருடைய வாயிலே ஸதா ராம நாமம். காதிலே ஸதா ராம நாமம். ஆனால் மனதெல்லாம் ராம கைங்கர்யத்திலே. அதுவும் எப்படி? ராம பாணம் போலே. ராம பாணத்தை ராமன் ஏவுவார். ஸாதாரணமாக அம்புகள் நேர்க் குறியாகத் தானே போகும்? அர்ஜுநன் குறி பார்ப்பதில் வல்லவன். வில்லாளி என்று தானே பெயர்.

ராம பாணத்திற்கு குறி தேவையில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக -மூலைக்கு மூலையில் இருந்த ஏழு மராமரங்களைத் துளைத்ததே அது போல - அந்த ராம சரம் போல கொடுத்த காரியத்திலே கண்ணும் கருத்துமாக இருந்து அதை நிறைவேற்றிவிட்டுத்தான் நின்று பெருமூச்சு விடுவார். அந்த கைங்கர்ய வீரனுக்கு ஈடாவார்களா கோபிகள்?

தராசின் முள் அப்புறமும் இப்புறமும் சற்று அசைந்து ஹநுமானின் கைங்கர்யம் வைத்திருந்த தட்டு தாழ்ந்தது. அதனால் மேன்மை பெற்றது - கோபீ ப்ரேமை வைத்திருந்த தட்டு மேலே சென்றது. அதனால் தாழ்ந்து ஜயஸ்ரீராம் - லேசாகிவிட்டது. இப்படிக் கருத்து வைத்து மூன்று பதங்கள் பாடுகிறார் ஸூரதாஸர்.

## ஐந்தாவது பகுதி
## இந்திய இலக்கியங்களிலே ஹநுமான்

*இந்திய நாடு முழுவதிலும் ஆங்காங்கே பிரதேச மொழிகளில் ஹநுமானைப்பற்றிய காவியங்களும், பாடல்களும், நாடகங்களும் நிறைய உண்டாகி இருக்கின்றன.*

*பொதுவாக வேதங்களிலும் ஸம்ஸ்க்ருத மொழியில் நாடு தழுவிய இலக்கியங்கள் - நாடெங்கிலும் மக்களின் ஆதரவுடன் அன்றாட வழிபாடுகளில் போற்றப்பட்டவை ஸ்தோத்திரங்கள் ஸம்ஸ்க்ருதத்தில் பல உண்டு. ஆனால் அந்தந்த பிரதேசங்களில் பிறந்த பெரியோர்கள் -தமது ஹநுமத் பக்தியையும், பரவசத்தையும் பாடல்களிலே வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றில் சிலவற்றில் ஆகாயத்தில் பறக்கும் பருந்து போல எட்டி இருந்து பார்த்து - சிலவற்றை இந்தப் பகுதியில் தொகுத்துக் கொடுக்கலாம்.*

## தமிழ் இலக்கியங்களில் ஹநுமான்

*தமிழ் மொழியில் ஹநுமானைப் பற்றிய பாடல்கள், காவியங்கள், பாசுரங்கள் பற்பல உள்ளன. முதலில் அவற்றில் சில மட்டும் குறிப்பிடப்படுகின்றன.*

*ஶ்ரீராம நாடகக் கீர்த்தனைகளைப் புனைய முனைந்த சீயாழி. **அருணாசலக்கவிராயர்.** முதன் முதலில் **ஹநுமானைத்தான்** - ஏற்புடைக் கடவுளாக வணங்குகிறார்.*

***கோதண்ட தீக்ஷா குரு ராம நாடகத்தை***
***தீது அண்டாவாறு அடியேன் செப்பவே – கோதண்டா***
***மாருதியே அஞ்ஜனையாள் மைந்தனே நற்கருணை***
***மாருதியே நீ துணையா வா!***

*(கோது அண்டா = தவறுகள் அண்டாத)*

***கல்யாணீ ராகம் ரூபக சாப்புத்தாளம்***

***ப. துணை வந்தருள்புரிவாய் – அநுமந்தா. நீ***

***துணை வந்தருள்புரிவாய்***

*அ. துணை வந்தருள்வாய் நல்ல சொற் பொருளது புல்ல*
*இணை ஒன்றில்லாத வல்ல ராம நாடகம் சொல்ல*
*(துணை)*

*ச.1. துஷ்டவாலி தோழமையை விண்டோனே- விண்டு*
*சுக்ரீவன் தோழமையைக் கொண்டோனே - வெகு*
*திட்டமா ராகவனைக் கொண்டோனே - அவன்*
*செப்பிய சொல்லமிருதத்தை உண்டோனே - சுக்ரீவன்*

*கஷ்டமும் அரசிழந்த*
*நஷ்டமும் அவனிருப்பும்*
*சட்டமாச் சொன்ன மாருதி*
*இட்ட கருணை மாருதி - (துணை)*

(திட்டமா = திஷ்டமா = தெய்வ அருளால்)

*2.அஷ்ட திக்கில் தென்திசை உகந்தோனே - சீதைக்கா*
*அரிய பிலத்தினுட் புகுந்தோனே அப்போது*
*பொட்டென பூமியைப் பிளந்தோனே உயிரைப்*
*போக்கவே மிக மனம் தளர்ந்தோனே - சம்பாதி*

*எட்டவே இருந்துமென்ன*
*கிட்டவே வர அவற்குப்*
*பட்டதைச் சொல்லும் தூயனே*
*முட்டிலா ஆஞ்ச நேயனே (துணை)*

(முட்டிலா =தடையில்லாத)

*3.உக்கிரமா விஸ்வசொரூபம் எடுத்தோனே - மயேந்திரத்*
*துளிதந்து கடலைத் தாண்டி விடுத்தோனே - பொல்லாத*
*அக்கிரம லங்கிணியைக்கீழ்ப் படுத்தோனே - நற்றிறு*
*ஆழியைத் தேவிகையினில் கொடுத்தோனே ஆறு போல்*

*மிக்கவே ரத்தங்கள் வாயால்*
*கக்கவே ராட்சத ரெல்லாம்*
*மக்கவே செய்யும் ருத்திரனே*
*முக்கியமாம் வாயு புத்திரனே – ( துணை)*

*மாருதி ருத்திரன் என்பது முக்கியம் - வாயு புத்திரன் அடுத்தபடி*

*4.சூடாமணி கையில் தரித்தோனே – சொன்ன*
*சேதிகள் எல்லாம் அங்கீகரித்தோனே – படு*
*பாவிராவணன் லங்கையை எரித்தோனே – ராமன்*
*பக்கல் வந்துற்று சேதிகள் விரித்தோனே – இந்த*

*பூவுலக்தோரும் தேவர்*
*கோவும் முனிக்கணமும் – ப*
*ராவிய சிரஞ்ஜீவியே*
*மேவிய என தாவியே – (துணை)*

*5. அருமையாம் சஞ்ஜீவ மலையை ஏற்றானே – பிரம்ம*
*அஸ்திர வேதைகள் எல்லாம் தீர்த்தோனே – சீதையை*
*உரிமையாம் ராகவன் பக்கல் சேர்த்தோனே – பரதன்*
*உயிரை விடுமுன்னே போய்க் காத்தோனே – தவத்தில்*

*பெருமையார் முனிவிருந்தினில்*
*தருமராம னோடருந்தின*
*ஒருமையாற் சஞ்ஜீவிராயனே*
*பிரமபட்டம் பெறும் உபாயனே (துணை)*

*(1). (ஹநுமானுடைய ராமகைங்கர்யத்தில் - மிகச் சிறந்தது. பதினான்கு ஆண்டு வனவாஸ முடிவில் சில நாழிகைகள் ராமன் வருகை தாமதித்தால் அக்நிப்ரவேசம் செய்யத் துணிந்த - பரதனை முன்னே போய்க் காத்தது தான் - என்கிறார் கவிராயர்.*

*(2) முனிவிருந்து பற்றிய ஸ்வாரஸ்யம் - கதைப்பகுதியில் இடம் பெறும்.*

கிட்கிந்தா காண்டத்தில் ஹநுமான் ப்ரவேசம்

**கவலை கொண்டு சுக்ரீவன் வாட**
**அநுமன் மறைந்து நின்று கருதிப்பார்த்தான்**
**தவவடிவர்!! வரிசிலையர்!!**
**புரிகடையர் இளங்குமரர் தருமசீலர்**
**இவர் எவரோ – என்று சொல்லக் கண்ணுவான்**

சங்கராபரணம் த்விபதை - ஆதிதாளம்
கண்ணிகள்.

**1. இன்னார் இனியார் என்று தெரியேனே – புண்ணியம்**
**என்ன செய்தேன் இவர்கள் வரத்தானே.**

**4.தேவர்க்குத் தேவர் இவர் என்று சொல்லவோ அவர்**
(மும்மூர்த்திகள்)
**மூவர் ! – இவர்! இரண்டு பேர்கள் அல்லவோ**

**9. வளைத்த வில்லும் அம்பும்கை – கொண்ட படையீர் இவர்**
**இளைத்தபேர்களைக் கைதூக்கும் எண்ணம் உடையீர்**

**10.கல்லும் முள்ளும் மல்லிகை மலர்போலே – இவர்**
**செல்லக் குளிருதையோ விழிமேலே**

(சுக்ரீவனுக்கு அநுமன் ராமலட்சுமணர்களைப் பற்றி கூறுகிறார்)

**புன்னாக வராளி ஆதிதாளம்**

**அடுக்களைக் கிணற்றிலே அமுதம் எழுந்தாற் போலே**
**கிடைத்தாரே ஒருவர்க்குக் கிடைக்குமோ? இதுபோல**

**9. அலைவாய்த்துரும்பெனவே நித்தநித்தம்**
**மலை போல விசாரம் தின்னவே மெத்த மெத்த**

*பல நாளில் பட்ட பாடெல்லாம் விண்டோமே*
*நலமாக வாலிக்கொரு நமனையும் கண்டோமே*
*சுகம் கண்டு மேவலாமே அவர் மலர்*
*முகம் கண்டாற் பாவம் போமே சுக்ரீவா.*

*கடற்கரையில் ஹநுமான் ஒதுங்கி நிற்கும் போது ஜாம்பவான் ஹநுமானை உசுப்புகிறார்.*

*கேதார கௌளம் த்ரிபுடதாளம்*

*1. ஏது காணும் சும்மா அறிந்தும் அறியீர்போல*
*இருக்கிறீர் ஆஞ்ச நேயரே*
*2. ஓதுமேன் வெண்ணெய் இருக்க நெய்தேடு*
*வோமோ – வாதராசன் சேயே (ஏது)*

*ஓதுமேன் = சொல்லுமையா.*

*3. துணியுமேன் உமக்கிலங்கை தான் என்ன*
*தூரமோ கடல் தூரமோ*

*அணுவும் மகமேரு ஆகும் மேருவும்*
*அணுவாம் உமக்கென்ன பாரமோ. (ஏது)*

*4.வருத்தம் ஏன்? இலங்கையும் உம்முட வாலால்*
*மாட்டி இழுத்தாலும் – செல்லுமே*

*திருத்தம் என்ன பேச்சு? விளக்கிருக்கத்தீ*
*தேடுவோமோ நாங்கள் சொல்லுமே (ஏது)*

*5.ஓதம் சுக்ரீவன் ஆக்கினை தெரியுமே*
*உயிரை வைப்பானோ நாளையே*

*காதுக்கிடுவது முகத்திற்கழகு எங்*
*களை ரட்சிப்பீர் இந்த வேளையே (ஏது)*

ஹநுமான் கடல் தாண்டப் பாய்தல்
நாத நாமக்ரியா ஆதி

ப. பாய்ந்தானே அநுமான் – மயேந்திரம் ஏறி
பாய்ந்தானே அநுமான்

அ. பாய்ந்து ஒரு மூவுல கேந்திய ராவணன்
மாய்ந்திடவே மேவுகுலாந்தகன் என்னே –
(பாய்)

ச. கேசவ ராகவ பூசிதனே எனும்
வாசக மானது நேரம் விடாமல்

மோச நிசாசர நாசம் அதாய்விட
வீசிய வால் எம பாசமதாக – (பாய்)

3.எடுத்தொரு ராகவன் கொடுத்தகை மோதிரம்
இடுக்கிய காதிலே மடற்குளே யடக்கி

மிடுக்குள ராட்சதர் நடுத்தலை மேல்விழும்
இடிக்கு இணையாகவே திடுக்கென ஓடிப் – (பாய்)

விண்டல ரவி சசி மண்டலம் இருசிறு
குண்டலம் என முக மண்டலம் அசைய – பாய்)

அடாணா ஆதி

ப. இந்த ராவணனைக் கண்டு சும்மாப் போனால்
என்ன அநுமான் நானே!!

அநு. அந்த ராமத்ரோகி இவன் பலம் குறியேனோ
ஆத்தி நாற்கிழித்தாற் போல கிழிக்க நான் அறியேனோ (இந்த)

*புவியடங்கலும்கிட்டவே – மண்டோதரி*
*புலம்பும் ஓசை முட்டவே – கண்டவர்கள்*

*எவரும் கெக்கெலி கொட்டவே – வாலினாலே*
*இழுத்துப்பிடித்துப் பொட்டவே – கட்டி*
*இறுக்கிறேன் – தோள் ஒடிய*
*முறுக்கிறேன் தலைபத்து*
*அறுக்கிறேன் தேங்காய் போல*
*நொறுக்கிறேன் அல்லான் (இந்த)*

*பன்னகசாலை விட்டு – த்திருட்டு வேஷம்*
*பண்ணி இலங்கை மட்டும் கொண்டு வந்தான்*

*அன்னையைச் சிறையிலே யிட்டு – வைத்த பாவி*
*அரக்கன் என எதிர்ப் பட்டும் – கன்னத்தில்*

*அடிக்காமலும் கைகளை*
*ஒடிக்காமலும் நெஞ்சிலே*
*இடிக்காமலும் என் கோபம்*
*முடிக்காமலும் போவேனோ – (இந்த)*

*3. காலனுக்குப காரம் – ஆகுமே தேவர்*
*களுக்கும் உண்டதி காரம் – விருதாவாய்*
*மேலினி ஏன்வி சாரம் – சாமி சொந்த*
*வேலை இதுவே நேரம் – இப்போது*

*வெல்லவேணும் இவனைக்*
*கொல்லவேணும் என்பேரைச்*
*சொல்லவேணும் பிறகு*
*செல்லவேணும் அல்லாமல் – (இந்த)*

காம்போதி த்விபதை ஆதி

*இந்த இலங்கை நகர் எழுநூறுயோசனை*
*எங்கெங்கும் போய்த் தேடி னேனே*

*கந்த மலர்க்குழலின் என் தாய் ஸீதையை*
*கண்ணி ற்காணாமல் வாடி னேனே*

*2. பாராத இடமில்லை தாயாம் ஸீதையை*
*பாதகன் செய்த தென்ன சூதோ*
*தீராத நெஞ்சுக்குத் தெய்வமே துணைதான்*
*செய்யும் வகை தான் அணி ஏதோ*

*7. உலகில் எந்தக் காரியமும் ஒரு தரம் ராமா என்றால்*
*உடன் கூடும் என்னுமல்லோ வேதம்*

*பலதரம் ராமா என்றும் எனக்கிந்தக் காரியம்*
*பலியாத தென்னவி நோதம்*

*8. ஆனைதன் பலம் தன்னை அறியாது போலே தேவி*
*ஆராரைக் கைகுவிக்கி றாளோ?*

*பூனை முன்கிளிபோலே எவர்கள் முன்னே என்தாய்*
*புலம்பிப் பரி தவிக்கின் றாளோ*

*ஹநுமான் தேவியிடம் ஸ்ரீராமனை வர்ணித்தல்*

கேதாரகௌளனம் ஆதி

*ப. அந்த ராம சவுந்தரியம் என்னால்*
*அறிந்து சொல்லப்போ மோ – அம்மா*

*அ. கந்தம் மேவும் அர விந்தமலரும் அவர்*
*காலுக்கு நிகராமோ கைக்குத் தான் சொல்லப்போமோ!*
*அந்த*

*1. உருண்ட மணி முழங்காலுக் குவமை யவர்*
*உடைய அட்சய தூணி ஏற்குமே*

திரண்ட பெரும் தொடை இரண்டுக்கும் எட்டுத்
திசையானை துதிக்கையும் தோற்குமே–

வரிந்த மாவுரி இடையும் நடையும் கண்டோர்
மனதையெல்லாம் உருக்கி வார்க்குமே
தரந்தரமாயுலகிருந்த வயிற்றுக்குச்
சரி சொல்லக் கூடுமோ யார்க்குமே

விரிந்த மார்புக்கிணை பூமியகலம் காணும்
விளங்கும் கழுத்துக்கு நேர் இளம்கமுதே பூணும்

பரந்த புசங்களுக்கு மேருமலையே
பார்க்கப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் நாணும்வேணும்
(அந்த)

2. அதிசயமுடன் பளபளன்றிலகு கண்
ணாடி நிகர்த்தக போலமும்

மதிகள் ஒரு சதகோடிக்கு மேலான
மங்கள மலர் முகக் கோலமும்

கதியென்றடுத்தவர்க்கு பதியும் நிதியும் தரும்
கருணா நயந வி சாலமும்

குதி கொளும் பவள வாயும் சிறு நகையும்
குருமந்த ஹாஸ வி லோலமும்

புதுமலையினில் விழும் பொன்னருவியை போலும்
பூமணி மார்பினிற் புரளுமுப் புரி நூலும்

எதிரில்லாத கோதண்டமும் ஒரு காலும்
எழுத வேண்டுமென்றால் ஆமோ மன்மத னாலும்
(அந்த)

3. பெருத்த தாமரை இதழ்போலே ஒளி
பெருகிய மேனிச்சிங் காரமும்

*வகுத்த சிந்துர ரேகையும் புருவமும்*
*வளர்ந்த நெற்றி விஸ் தாரமும்*

*பருத்த திருமுடி வேணியும் வேணியில்*
*பசுந்துள்ள மலர் ஆரமும்*

*தரித்த திருவாழி கொடுத்துன் சேதியை*
*தனியே என்னுடன் சொன்ன சாரமும்*

*திருத்திச் சொல்ல ஒரு வாயில்லை ஒருவாயே*
*தெரிந்தும் தெரியாமலும் சொன்னேன் நீ*
*பொறுப்பாயே*

*ஒருக்காலே உண்டவர் மஹிமை நீ*
*உனக்குத் தெரியும் வேதம் தனக்கும் தெரியும் தாயே (அந்த)*

*இந்தக் கீர்த்தனம் நாற்பது ஆண்டுகளுக்கு முன் திருமதி.D.K.பட்டம்மாள் வாயிலாக முதல் சரணம் வரை மட்டும் கேட்ட நினைவுண்டு. பிறகு ஒரு முறை பூஜ்ய எம்பார் விஜயராகவா சாரியார் சென்னை ஜகந்நாத பக்த ஸபாவில் தொடராக நடத்திய ஞீமத்ராமாயணச் சொற்பொழிவில் - இந்த கீர்த்தனத்தை விஸ்தாரமாகப்பாடி - இடையே சிறு விளக்கத்துடன் காதுகள் நிறையக் கேட்டதும் நினைவுண்டு. அவருடைய தம்பி ரகுநாதாசார்யாரும் சேர்ந்து அந்தக் கேதார கௌளத்தின் பலவிந்யாஸங்களைப் பொருத்தமாக அமைத்து கவிராயரின் மாண்பை எடுத்துக் காட்டினார். கவனம் சற்றுத் தளர்ந்தாலும் தாளம் தடுக்கிவிட்டு விடும். அத்தகைய கட்டுக்கோப்பு. இவற்றில் சிறந்தது ராமஸௌந்தர்யமா ராகஸௌந்தர்யமா தாளஸௌந்தர்யமா கவிதாஸௌந்தர்யமா? அறிந்து சொல்லப் போமோ அம்மா!*

*இன்றைய இளம் ஸங்கீத மேதைகளுக்கு இது ஒன்றும் பெரிய விஷயமல்ல. மனம் வைத்து இதைப்பாடம் பண்ணி கச்சேரிகளில் பாடினால் - ரஸிகர்களுக்கு இந்த நான்குவித ஸௌந்தர்யங்களையும் எடுத்துக்காட்ட ஹநுமான்*

*நிச்சயமாக அருள்புரிவார். பாதம் முதல் திருமுடிவரை வரிசையாக ஒவ்வொரு அங்கலாவண்யத்தையும் அதன் விந்நியாஸத் தாமரை மொட்டை ஸௌர்யகிரணம் இதழ் விரித்துக் காட்டுகிற அழகு வெளிப்படும்.*

*கடைசியில் ஹநுமான் கூறுகிறார் ''ப்ரபுவின் இத்தனை அழகு சொன்னேனே அம்மா இவற்றையெல்லாம் விஞ்சுகின்ற ஓர் அழகைச் சொல்கிறேன் கேளுங்கள் அம்மா! - என்னைத் தங்கள் பால் தூது அனுப்புகின்ற கடைசி நிமிஷத்தில் என்னை அருகே அழைத்து - தன் வலது கை விரல்களைச் சங்கு போல் மடித்து - என் காதருகே செலுத்திக் கூறினார். ''ஹநுமந்தா! தேவியினுடைய பிரிவு தாங்காமல் நான் துடித்துக் கொண்டிருக்கிறேன் - என்று அவளிடம் சொல்லி விடாதே'' இதைக் கவிராயர் கடைசிச் சரணத்தில் எடுத்துக்காட்டுகிறார். **''தரித்த திருவாழி கொடுத்து உன் சேதியைத் தனியே என்னிடம் சொல்லிய சாரமும்''** - இந்த ஸாரம் கேட்டு தேவி மூர்ச்சித்து விழுந்திருப்பாளோ - என்னவோ எந்தக் கவிராயரும் சொல்லவில்லை.*

*சங்கராபரணம்                    அடதாளம்*

***ப.   கொண்டாளே – சாமி மோதிரம் – கண்டாளே***
***அ.   எண்டிசை போற்றிய இலங்கா புரத்திலே***
***என் அநுமானின் பொன்னிருகரத்தாலே – கொண்***

*இங்கு எண்டிசை போற்றிய - என்ற சொல்லை இலங்கா புரத்திற்கு அடைமொழியாக ஏற்பதைக் காட்டிலும் ஹநுமானுக்கு அடைமொழியாகக் கொள்வது சாலப் பொருந்தும். கவிராயர் இங்கே ஹநுமானிடம் ஓர் உரிமை கொண்டாடுகிறார்.*

*ஹநுமானை எட்டு திசைகள் போற்றினாலும் அவர் **என் ஹநுமான்** என்கிறார்.*

*மற்றொரு பொருள் ஸ்வாரஸ்யம். மோதிரத்தை ஹநுமான் கைதூக்கிக் கொடுக்கவும் இல்லை. தேவி கைதாழ்த்திப் பெற்றுக் கொள்ளவுமில்லை -*

பொன்னிருகரத்தாலே ஹநுமான் இட = விரித்த இருகைகளின் சேர்க்கையில் ஹநுமான் மோதிரத்தை வைத்துக்கொண்டு காட்டுகிறார் - மேல் எழுந்த பொன்னிருகரத்தாலே தேவி அதை (எடுத்து ) க் கொண்டாளே - என்கிறார் கவிராயர். ஒரு ரத்னஹாரத்தில் நடுமுகப்புத் தொங்கட்டான். இருபுறத்திற்கும் பெருமை சேர்ப்பது போல இந்த அடைமொழி நடுவிலே இருந்து ஹநுமானுக்கும் தேவிக்கும் பெருமை சேர்க்கிறது.

இந்தஸ்வாரஸ்யம் வால்மீகி ராமாயணத்திற்கும் பொருத்தமாகும். ''ஹநுமான் மோதிரத்தை விரித்த கையில் வைத்துக் கொண்டு ''பாருங்கள் அம்மா மோதிரத்தை'' என்கிறார் **"பச்ய'' தே₃வ்யங் கு₃ளீயகம்.** தேவி அதை எடுத்துக் கொள்கிறாள். **க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணாஸா.** கவிராயரும் கூறுகிறார்.

''அந்த ராம மந்திரம் எழுதிய அடையாள மோதிரம் **தொட்டு - அணைத்து முலைமேலே - இணைத்துடம்பிலே- அடங்கா மகிழ்ச்சி கொண்டு அடிக்கடி முத்தமிட்டு - கொண்டாளே''**

**3. சிந்தாகுலம் விண்டேன் உன்**
**திருவாக்கால் என் குறையாற்றி**

**தீயராவணப் பாவி ஊரினைத்**
**தேடி வந்தாயே - என் மனம் தேற்றி**

**தந்தாயே என் சீவனை - உனக்குஇனித்**
**தருவதென்ன - இதற் கெதிர் மாற்றி**
**தாயும் தந்தையும் குருவும் தெய்வமும்**
**சகலமும் நீயே - என்ற ஹநுமானை வாழ்த்தி (கௌபரி)**

தேவி முதலில் சொன்னாள் தேடி வந்தோயே? என் மனம் தேற்றித் தந்தாயே! என் சீவனை உனக்கு இனித் தருவதென்ன? உனக்கு நான் என்ன கொடுப்பேன்? ஒன்று சொல்கிறேன். நான் கொடுத்து நீ வாங்கிக் கொள்வது எந்த நிலையில்?

உன்னைக் காட்டிலும் நான் பெரியவளாக இருந்தால் தானே! உண்மை அப்படி அல்லவே! அதை எதிர்ப்புறமாக மாற்றிவிடுகிறேன் - நீ என் தாய் - தந்தை -குரு- தெய்வம் - நான் உன் சேய். சிஷ்யை பக்தை - நான் உன்னை வணங்குவது தான் உனக்கு வாழ்த்து. தேவியின் உள்ளத்திலே செய்நன்றி இப்படி ஒளியுடன் பிரகாசிக்கிறது.

ஆனந்த பைரவி ஜம்பதாளம்

**அநுமானே சாமிக்கிந்த**
**அடையாளம் சொல் ஐயா – அநு**

**3. கனமான கங்கைக்கரை**
**வனவேடன் முன் எங்களை**
**காட்டி யவர் ''ஆரென்று நீ**
**கேட்டாயே – குகனே**

**உனது தம்பி என் தம்பி. உன்**
**கொழுத்தி இவள் நானும்**
**உன் ஆசைத் தோழன் என்று**
**சொன்னாரே மகனே. அநு**

(திருமங்கையாழ்வார் இதே கருத்தை உம்பி எம்பி'' என்ற தொடரால் கூறுகிறார். ஸ்வாரஸ்யம் என்ன? எனக்கு அடுத்த தம்பி நீ - அடுத்து லட்சுமணன் உன் தம்பி. எனக்கும் அவன் தம்பி. குகனுக்கு தனக்கு அடுத்த ஸ்தானம் கொடுத்த சலுகை)

**5. ஒரு நாள் என் மேல் பாய்ந்த**
**காக்கைதனை நோக்கிப் புல்லால்**
**ஒரு கணைவிட்டார். இதென்ன**
**தெரியாது போச்சே**

**சரணம் என்று அது வீழ –**
**இருவிழிக்கும் ஒரு மணியாய்**

தாமே கொடுத்தாரே! அந்த
மானமும் தான் எங்கே போச்சோ (அநு)
பியாகடை ஆதிதாளம்

ப. அடித்தானே அசோகவனம் தன்னை
முடித்தானே அனுமான்

அ. அடித்தானே அருங்காய் கனிகளை
ஒடித்தானே அரை நொடிக்குள் விச்வரூபம்

பிடித்தானே அந்த ராவணன் கீர்த்தியை
முடித்தானே கையைக் கொட்டிக்
தொடை தட்டிக் கொண்டு -அ

அடாணா ஆதி
மடிந்தானே சம்புமாலி அநுமான் கையால்
முடிந்தானே சம்புமாலி

ச. நறுக்குவேன் இதுவொரு
குரங்கென எதிர்ப்பட்டு
செறுக்கனத்தினி லேறி
பெருக்கவே கண்ணதொட்டு

அரக்கர் படைக்கடலை
நெருக்கி நெருக்கியிட்டு
இருப்புலக்கையினாலே
அரைக்கக் கொடுத்துவிட்டு மடிந்தானே

தோடி ஆதி

ப. காலால் உதைபட்டபேர் சிலர்
கடிக்குள்ளே சிலர் பிடிக்குள்ளே சிலர்

தோளால் அறைபட்ட பேர் சிலர்
தொடைக்குள்ளே சிலர்

அடுத்தானே அட்சதன்
இறங்கிமுன் எதிர்க்கவே

அவனை இவன் அறைய
இவனை அவன் அறைய

அவனிடு கவசமும் வில்லும் வாளியும்
முடித்தானே - பல்லொரு குண்டலம் உதிர்த்திட

செவி கலங்க ஓரடி அடித்தாளே
நிலத்தோடே தேய அரைத்து அட்சதன் மாயவே

வண்டாகி மறைந்த பேர் சிலர்
மான்களென வெளிப்பாய்ந்த பேர் சிலர்

மண்டோதரி முன்பினிலே
அடிசாய்ந்த மரமென வீழ்ந்தனர் சிலர்

மத்யமாவதி அடதாளம்

ப. அநுமந்தன் அடித்தானே - இந்திரசித்தன்
மனம் நொந்து துடித்தானே

ச. காலால் அநேகம் பேரை வாலால் அனேகம் பேரை
கையால் சிலபேரை மெய்யால் சில பேரை
கசக்கி முனைகள் பொழிந்தான் கரும்பு போல
நசுக்கிச் சாறுகள் பிழிந்தான்

கணவனை க்குமரனைத் துணைவனைத் தெரியாமல்
கதையால் அடித்து டலைச் சிதைத்து

மொத்தியும் குத்தியும் வாலால்
விளையாட்டா சுற்றியும் ஏற்றினான்

பைரவி ஆதி

அநுமான் பின்னையும் இந்திர சித்தனை
அடித்து வில்லை ஒடித்துச் சாரதியை மாட்டி

மனமாம் தேரையும் வீசி மரத்தால் மோதி
மண்டை கலங்கிட அடித்தான்

அரக்கன் அப்பால் கனமான
பிரம்ம பாசத்தை வீசிக் கட்டினான்

ஐம்பதினாயிரம் பிசாசர்
இனமாக இழுக்க இலங்கையில்

உள்ளோர் மாருதியை ப்பேசுவோரே
இந்த ஊருக் கெமனாய் கோலம் கொண்

டிருந்த குரங்கிது என்பார் சில பேர்
அந்தச் சிவனே சீதைக்காக இலங்கைதன்னை

அழிக்க வந்தான் என்பார் சிலபேர்
தங்கை மூக்குப் போன தகப்பனுக்கு மூக்கு
தந்தானே மகன் என்பார் சிலபேர்

மோகனம் அடதாளம்

ப. ராமசாமி தூதன் நானடா அடட ராவணா
நானடா என்பேர் அநுமானடா (ராம)

அ. மாமலர் தலை வாசலுன்னும்
கயிலாசனும் ரிஷிகேசனும்
மறைந்து நின்று கந்த நான் அல்லடா
புறம்பே நின்று வந்த நான் அல்லடா (ராம)

(மும்மூர்த்தி தேவர் என்னை அனுப்பவில்லை
மாமனிதன் ராமனின் தூதன்)

*கொடுத்த வரமும் தனமும் கனகமும்*
*வீணில் ஏன் போக்கிறாய்?*
*குடிக்கும் பாலை ஐயையோ*
*கமர் வெடிக்கு ஏன் வார்க் கிறாய்* *(ராம)*

*துடுக்குடன் பரஸ்த்ரீ செனங்களைத்*
*தொடர்ந்து ஏன்பழி சுமக்கிறாய்*
*தூக்கிவிட்ட ஏணியை வாங்கும்*
*தூர்த்தர் வார்த்தை ஏன் கேட்கிறாய்?* *(ராம)*

*தடைபடாமல் என் ஐயன் மீதே*
*சரண் என்றால் பிழைப்பாயே இப்போதே*
*அடக்க உன் தரம் அல்லடா சீதை*
*அவன் இவள் விட வந்தான் என்னாதே –* *(ராம)*

*(ராமன் அவன் இவன் என - நினைத்து*
*ஸீதையை விட்டுக் கொடுப்பான் என நினையாதே)*

*2. காலமும் பலமும் தெரியாமல்*
*குதிக்கிறாய் என்ன மாயமோ*
*காமத்தால் தர்மபுத்தியை*
*கடக்கிறாய் இது உபாயமோ* *(ராம)*

*சாலமோ? கேடு காலமோ?*
*தங்கை மூக்கறுப் புண்டதல்லவா*
*அடா உனக்கும் தெய்வ சகாயமோ*
*சண்டாளா இது ஞாயமோ* *(ராம)*

*வாலியும் போனான் உன்னைச் சிறை வைத்த*
*வாலும் போய்விட்டது அஞ்சாதே மெத்த*

*சீலராகவன் அம்பாலே அவன் செத்த*
*சேதியை நீ அறிவாயோடா அந்த* *(ராம)*

*3. கீதம் தெரிந்தும் வேதம் தெரிந்தும்*
*பாதங்களைச் சூழ்கிறாய்*

*கெடுமதி கண்ணுக்குத் தோன்றாமல்*
*படுநரகத்தில் மூழ்கிறாய் (ராம)*

*மாதர் மோகத்திலே துவண்டு*
*தாழாத வரை தாழ்கிறாய்*

*மயக்கமோ கைக்குள் விளக்கைப்*
*பிடித்துக் கிணற்றிலே வீழ்கிறாய்*

*ஆதிமூர்த்தி தானே உத்தண்ட*
*மாகவந்தான் அரக்கரை மண்ட*

*சீதையை விட்டுப்பிழை - அடா கண்ட*
*சேதியைச் சொன்னேன் - வீர கோதண்ட (ராம)*

*பைரவி ஆதி*

*பிழைக்க என்றால் வாடா - நான் சொன்ன*
*பேச்சைக் கேளடா மூடா (பிழை)*

*அ. பழிக்கெல்லாம் நீதானே ஆளா*
*படைத்துக் கொண்டாயோ சண்டாளா - (பிழை)*

*1. வேதன் முதல் விண்ணோர்கள் குறைநீங்க -ஆதி*
*விஷ்ணுவே புவனமெல் லாம்தாங்க - ஒரு*

*கோதண்ட ராமன் எனும் பேர் ஓங்க -வந்து*
*குதித்தானே சாத்தான் உன் உயிர் வாங்க*
*ஆதவன் முன் இருள் நிற்குமோ -முட*
*வனுக்குக் கொம்புத்தேன் எட்டுமோ - அந்த*
*சீதையாம் தெய்வம் உனக்கு ஒட்டுமோ - இந்த*
*திருட்டுப்புத்தி தலைச் கட்டுமோ-தப்பி- (பிழை)*

*3. புவிமேல் உன்னை வென்ற கார்த்த வீரன்- விழப்*
*புடைத்தானே பரசுராமன் எனும் சூரன் -எதிர்த்து*
*அவனையும் வென்ற ரகுகுல தீரன் - தேவி*
*அவளைவிட்டால் நீ லங்கைக் கதி காரன் (பிழை)*

*தவறில்லா வரத்தோட கஸ்த்ய முனி முன்னம்*
*தந்தவில்லுக்குன் சேனை வெய்யிற் பனி - அங்கே*
*எவர்களுக்கும் ஏழை ஆன தனி - நான்*
*எனக்கு மிஞ்சும் வானரர் அனேகர் இனி-தப்பி (பிழை)*

கோடி ஆதி

*ப. பற்றிக்கொண்டது அநுமான் - இட்ட அனல்*
*சுற்றிக்கொண்டது லங்கையை*

*அ. வெற்றிப்பெண் சானகி உறைமரம் ஒன்றும்*
*விட்டு நீங்கித்திசை எட்டும் ஓங்கி முட்டி*

பாகேஶ்ரீ அடதாளம்

*ப. கண்டேன் கண்டேன் கண்டேன் ஸீதையை*
*கண்டேன் ராகவா (கண்)*
*அ. அண்டரும் காணாத இலங்காபுரத்திலே*
*அரவிந்த வேதாவை த்தகரவந்த மாதாவை (கண்)*

*ச.1. காவிவிழிகளில் உன் உருவொளி மின்னக்*
*கனிவாய் தனிலே உன் திருநாமமே பன்ன*

*ஆவித்துணையைப் பிரிந்த மட அன்னம்*
*ஆனாள் நான் சொல்லுவ தென்ன*

*பூவைத்திரிசடை நித்தநித்தம் சொன்ன*
*புத்திவழியே தன் புத்திநிலை மன்னப்*
*பாவி அரக்கியர் காவல் சிறை துன்னப்*
*பஞ்சு படிந்தப் பழம் சித்திர மன்ன -(கண்)*

*2. பனிக்கால வாரிசும் போல நிறம் கூசிப்*
*பகல் ஒரு யுகமாகக் கழித்தானே - பிரயாசி*

*நினைத்தங்கே ராவணன் அன்னான் வர ச்சீசீ*
*நில்லடா சண் டாளா என ஏசி (கண்)*

*தனித்துத் தன் உயிர்தன்னைத் - தான்விட மக ராசி*
*சாரும்போது காணும் சமயமிதுவே வாசி*
*இனித்தாமதம் செய்ய லாகா தென்றிடர் வீசி*
*ராமா ராமா ராமா ராமா என்றெதிர் பேசி*
*(கண்)*

*3. அடல் சேரும் வாலியை வானுலகிலே கூட்டி*
*வேனியைஅச்சுக்ரீவன் ஆனமுடி சூட்டி*
*உடனே ''நீ தூதுபோ'' என்ற சொல் அமு தூட்டி*
*உன் எழில் விக்கிரமம் பா ராட்டி*

*திடமா லட்சுமணன் செய்த பர்ணசாலை வீட்டில்*
*தேவாதிதேவா உன் திருவாழி தனைக் காட்டி*
*விட வந்த அநுமந்தன் நான் என்று சீராட்டி*
*விவரம் சொல்லி - உயிர் கொண்டி ருக்கிறேன் சீமாட்டி (கண்)*

*உசேனி ஆதி*

*ப. இந்த விபீஷணன் மீது -நமக்கு*
*இத்தனை யோசனை ஏது? - இந்த*

*அ. அந்த இலங்கையில் அறிந்தேன்*
*இவனை முன்னே*
*சந்தேகம் இல்லை சாமி*
*தாஸன் ஹநுமான் சொன்னேன் - (இந்த)*
*ச. சொல்லும் புராண வேதசாத் திரம் - இவன்*
*சொல்வது தேவதா தோத்திரம் பல*
*கல்விக்கெல்லாம் பாத்திரம் கள்ளம்*
*கபடமறியான் அணு மாத்திரம் -இது*

அல்லாமல் அவன் வீட்டில் அடுத்த
போதில் அனேகம் நல்ல
நல்ல சகுனம் நான் கண்டேன்
அது போதும் (இந்த)

2. ஊத்தையான அள்ளும் கள்ளும் - இவன்
உண்கிறான் என்பதைத் தள்ளும் - கண்டால்
ஏற்றவன் என்று நீர் கொள்ளும் - நல்ல
இங்கிதவான் எவர்க் குள்ளும் - இவன்

நேற்று ராவணன் என் மேல்
நீட்டிய கத்தி வெட்டை
தீர்த்து விட்டே எனக்குச்
செய்தான் ப்ராணபிரதிஷ்டை (இந்த)

3. மூவர்க்கும் கூடாத வெற்றி -கூட
முடிப்பதல்லோ உன் தன் சக்தி - சிறு
கூளத்தைக் கண்டு கடல் ஒற்றிப் - போன
கொள்கை போலாச்சே இந்த பெற்றி - சாமி

தேவிக்கும் பெண்ணைக் கொண்டு
தேற்றச் சொல்லி அகன்றான்
இவனாலே வந்த பயம்
அபயம் என்றான் - (இந்த)

ஹநுமான் ராவணனைக் குத்துச் சண்டைக்கு அழைக்கிறார்.

மத்யமாவதி அடதாளம்

குத்துக்கு வாடா ராவணா -கைச்
குத்துக்கு நீ வாடா

அ. பத்து தலையும் இரு பது கையும் ராட்சத
பலமும் குரங்கினிட பலமும் தெரிய வேணும் -குத்

*ச.* *எட்டானைக் கொம்பும் மொட்டைக்கிடா போல்*
*ஒட்டஓடித்தேன் என்றும் அந்த*

*ஈசன் கயிலையை ஊசி வேரோடே நான்*
*எடுத்துப்பிடித்தேன் என்றும்*

*சட்டம் சட்டமாய் பேசிக் கொள்ளுவதும்*
*சமர்த்தன் சமர்த்தன் நான் என்று துள்ளுவதும்*

*விட்டுக்கட்டடா -ஏதுக்கு வீணும் சாணும்*
*வீரம் எல்லாம் இன்று வெளிச்சம் ஆக வேணும் - (குத்)*

*2. நான் உன்னைக் குத்துவேன் -*
*அந்தக்குத்துனக்குத்*
*தானே பெரும் தத்தடா*
*பிழைத்தால் என்மேல் நீ குத்தடா*
*ஏன் என்னைக் குத்தினாய்*
*என்று கோபிக்கவில்லை*
*இதுவே நம்பிக்கை*
*தேறிக்கொள் என் சொல்லில்*

*ஆன மட்டுக்கும் பார்*
*வஞ்சனை பண்ணாதே*
*ஆள் பகட்டால் மிரட்ட*
*லாம் என்றெண்ணாதே - (குத்து)*

*3. ஒதி பருத்தால் என்ன*
*தூணாகுமோ? - சற்றும்*
*ஒதுங்காதே நில்லடா*
*கையைக் கையை*

*ஓங்கினேன் குத்து*
*வருகுது வருகுது*
*தாங்க*
*உன் வசம் அல்லடா*

*சதியினாலே எங்கள்*
*சீதாக்கனி தன்னைக்*
*தம்பி பிரிந்த போன*
*பின்னர் திருடும் உன்னை*

*எதிரிலே கண்டு சினமிகப் பெருகுதடா*
*எனது வலக்கைக்குத்தித் தினவு தின்குதடா – (குத்து)*

**போருக்கு வந்த இந்திரசித்தன் ஹநுமானை ஏசினான். போரெதிலே மாருதியைக் ''கல்லெடுக்க அறிவாய் நேரே வில்லெடுக்க அறியாய் போடா போ'' என்று நீக்கினான் அநுமான் வந்து தாக்கினாளே.**

தோடி ஆதி

*ப.* *இந்திர சித்தே – சேவகம் – ஏதடா – சற்றே*

*அ.* *உன்துணை அதிகாயனைக் கொன்ற விலட்சணன்*
*உன்னையும் கொல்ல வந்திருக்கிறான் லட்சுமணன்*
*இந்திர*
*ச.* *வில்லெடுக்க அறிவேன் என்றால்*
*வில்லாளி நீ அல்ல நானடா*

*கல்லெடுக்க அறிவாய் என்றென்னை நீ*
*கடக்கப் போகச் சொன்னதென்னடா*

*வில்லெடுக்க உங்கள் அப்பனைக் கொல்லும் ரகு*
*வீரனே எசமானடா*
*எல்லார்க்கும் கல்லெடுக்க விபீஷணன்*
*எப்போ தென்று காத்திருக்கிறா னடா – (இந்திர)★*

---

★ *பல ஆண்டுகளுக்கு முன் கம்ப சேர்வையின் போது களத்து மேட்டில் நடந்த ராம நாடகத்தில் ஹநுமானாக நடித்த நடேச ஆசாரி – ராவணன் எதிரே உரல் மேல் உட்கார்ந்திருக்க– பலகை மேடையிலே அதிரும் படியாக நடந்துபாடின இந்த பாட்டைக் கேட்டு கிராமத்து விவசாயிகள், இளைஞர்களும், கிழவர்களும் ஒருங்கே கைதட்டி தட்டி ஆர்ப்பரித்த காட்சியை மறக்க முடியாது.*

*(இறந்தவர்க்கு சடங்கு செய்ய கல் ஊன்றுவது என்றமரபை நினைவுறுத்தி - உங்கள் குலத்தில் மிஞ்சப் போகின்ற ஒருவன் சாகின்ற உங்கள் அனைவர்க்கும் ஈமக்கடனுக்குக் விபீஷணன் கல் எடுப்பான் என்று சாடுகிறார் ஹநுமான்)*

*சுருட்டி* *ரூபகம்*

*ப.* **பாய் ந்தானே ஹநுமான் பாய்ந்தானே – சஞ்ஜீவ**
**பர்வதத்தைக் கொண்டு வந்தானே**

*அ.* **சேர்ந்த சாம்புவந்தன் உரைக்கையாலே**
**திரிவிக்கிரம சாமி போலே**

**தேவர் மகிழ மூவர் புகழ**
**திசைஉள நீளம் கண்டு – விஸ்வரூபம் கொண்டு – பா**

**2. இலங்கை விட்டொன்பதாயிரம்**
**யோசனை இமயகிரியில் தாண்டி**

**தங்கப் பெருமலை தாண்டி அங்கே**
**துலங்கும் வெள்ளியில் கைலாசன்**

**உமைக்குக் கையாலே – ‘‘வாயுவின்**
**சுதன் இவன் ‘‘என்று காட்ட**

**அருக்கனைத் துதித்து அப்பாலே**
**அலங்கலின் மாயவனைப் பணிந்து தாவ விண்மேலே (பாய)**

*அருக்கனை சூரியனை*

**‘‘விடிந்து போச்சென’’ த்திகைத்தானே – பின்னும்**
**நிலம் தனிலே பகலென்றறிந்து – நீலமலைகண்டு**
**அப்பாற் கலங்கித் திசையும் கிழிய – (பாய)**

*3. அரிய மருந்தைக் காக்கும் தெய்வங்கள்*
*அடங்கலும் வந்து தடுக்கி – ‘‘நீ*
*ஆரடா’’ என்று கேட்க ராமதூதன் நான் என்று*
*கடுக்கி –ஒரு*

*பெரிய சக்ரம் சுழன்று வந்தது போல நெஞ்சை*
*பெலத்தால் இயன்று ஒடுக்கி–கிட்டி*
*காவற்பேரையும் பின்னிட்டு ஓடவே*
*முடுக்கி – அங்கே*

*தரையிலே ஆயிரம் யோசனை*
*தாழ்ந்து வேரோடி – மேலே*
*தெரியவே நிறை தீர்க்க*
*மலையை ஒருகையாலே*
*தூக்கிப் பந்தாடி திரும்பி வருகையில்*
*அந்த வாடை சுழன்று வஞ்சகன் பிரம்மாஸ்திரம் சுழன்று*

*ஒரு லட்சுமணன் தேற – பெருகிப்புவனம் தேற*
*தருமப்பயிரும் தேற – திரு லெட்சுமியும் தேற – பாய*

*சாவேரி - அநுமானை ராமன் புகழ்தல் அடதாளம்*

*ப. அநுமானே நீயே கனவானே*

*அ. தனதாக எங்கட்குப் பிராணதாரை நீ வார்த்தாயே (அநு)*

*ச. ஒன்றும் அசைவில்லாமல்*
*உடம்பையும் மறந்தேன்*
*கொன்ற உயிர்களைநீ*
*கொடுக்கவே உயர்ந்தோம்*

*அன்று தசரதன் பெற்ற*
*ஆருயிர் இழந்தோம்*
*இன்றுனது வயிற்றில்*
*இருவரும் பிறந்தோம் – (அநு)*

ச.3. விழி போலும் என் தம்பி
மெய்யுயிர் போலே
முழுகாத படி காத்தாய்
முழுதும் காப்பாயே

பழிகாரன் முன் இந்தப்
பயம் தீர்த்தாயே
அழியாத சிரஞ்ஜீவி
யாய் இருப்பாயே – (அநு)

இந்திரசித் மாயா ஸீதையை வெட்ட அநுமான் புலம்பல்

எதுகுலகாம்போதி ஆதி

ப. இதுக்கோ நான் பட்டது சும்மா – பாவி அநுமான்
இனிமேல் நான் என்ன செய்வேன்? அம்மா

அ. விதிக்கும் என் எண்ணம் போச்சே
விழலுக்கிழைத்த நீர் ஆச்சே – இதுக்கோ

ச. ஓம் என்று முன் தூதுவந்தேன்
உன்உயிர்க்கு கேடு தந்தேன்
ஆம் என்றெப்படிக் சொல்வேன்
ஐயிறுக்காக எப்படிச்சொல்வேன்

சாமி என்னென்று கேட்பான் தாய் நீ இருந்தால்
அல்லவோமீட்பான்
தீமை தானே மேலொட்டாத தெய்வமும்
தான் கண் கெட்டதோ

2.அன்னமே தாயே என்தன்னை
அறிந்தும் இந்திரசித்து
பின்னமே செய்திட பிரேதம்
போலிருந்தேனே துணை

*சொன்ன சஞ்ஜீவிக்கா தாண்டிய*
*சுருக்கான நான் உன்னை வேண்டி*
*என்னென்ன செய்தாலும் அங்கே*
*இப்படி ஆச்சுதே இங்கே (இதுவோ)*

*3. அருந்ததி தொழும் பெண்ணே*
*அனைவருக்கும் இரு கண்ணே*
*விரும்பும் உயிர்க்குயிர் ஆயே*
*விளங்குகின்ற என் தாயே*

*கரைந்து நான் உன்னைத் தேடி*
*கண்டேன் என்று முன் ஓடி*
*இருந்தாள் என்ற வாயாலே*
*இறந்தாள் என்றவோ மேலே*

*சீதை இருக்கிறாள் என்றறிந்து அநுமான் இந்திரசித்தை ஏசுகிறார்*

*சங்கராபரணம் ஆதி*

*ப. இந்திரசித்தே உன் தந்திரவித்தைகள்*
*எல்லாம் ஏண்டா புரட்டா?*

*7. உன்தன் நிகும் பிலையில்*
*ஒளித்துச் செய்கிறாய் பூசை*
*ஒளிக்கும் சேவகனுக்கு*
*முகத்தில் ஏண்டா மீசை*
*ச. வந்து மாட்டிக் கொள்ளப்*
*பஞ்சமோ கயிறு*
*வாணாள் வைக்க வேணுமோ*
*சாணல்லவோ வயிறு*

*அடுக்களை பூனை போல*
*இடுக்கிலே கழிக்கிறாய்*
*ஆடெடுத்த கள்ளன் போல முழிக்கிறாய் (இந்த)*

*சீதா தேவிக்கு அநுமானின் வெற்றிச்செய்தி*

*மத்யமாவதி* *ஆதிதாளம்*

***சோபனம் சொல்ல வந்தேன் – உன்தன்***
***தொண்டன் அநுமந்தன்***

***1. சோபனம் சானகித்தாயே முந்த முந்த***
***சாமி ராமகாரியமே செயம் செயம் அந்த (சோ)***

***ச. ராமசாமி விடும் ஒரு கணைபட்டு***
***ராவணன் உயிர்விட்டு – ஒரு***
***மாமலை போல் தரையின் மேல்***
***விழுந்தானே வைகுந்தம் சேர்ந்தானே (சோ)***

***3. இங்கே முன் மோதிரம் தந்து தானே***
***''இரு'' என்று சொன்னேனே – இப்போது***
***அங்கே நீ எழுந்தருளி எம்மானே***
***அநுக்கிரகம் செய்வாயே இந்த (சோ)***

*சீதா அநுமானை வாழ்த்துதல்*

மோகனம் ஆதி

***ப. எந்நாளும் வாழி நீ தானே – என் தெய்வம்***
***உன்னைப் போல் உண்டோ அநுமானே – (எந் )***
***அ. தென்னிலங்கை அரக்கன் தன்னைப் பட்சித்தாயே***
***பின்னை மங்களம் சொல்லி என்னை ரட்சித்தாயே***

***ச. இருக்கும் சிறை மீட்பேன் என்று வாக்கியம் – என்முன்***
***உரைத்தபடி செய்தாயே என் பாக்கியம் – அப்பா உன்***

***கருத்தில் நீ பிடித்த வைராக்கியம் உனக்குப்***
***பெருத்த மூவுலகும் கொடுத்தென்ன சிலாக்கியம்***
***சிரத்தினால் வணக்கம் செய்வதே யோக்கியம் – (எந்)***

2\. மனத்தில் அடங்கா விசாரம் - நீக்கி
எனக்கு நீ தந்த சரீரம் - அய்யா

இனிச் சொல்வதென்ன உப சாரம் - அங்கே
தவித்த சாமிக்குச் செய்தாயே ஆதாரம்
உனக்கு நான்என்ன செய்வேன் உபசாரம் (எந்)

3\. இதமாம் சொல்லொன்றும் தேடாதே - கோபம்
இவ்வரக்கியர் மேல் எடாதே - இன்மை

உதவி செய்யும் செய்கை விடாதே - வரங்கள்
எதுவும் தந்தேன் இனிபயப் படாதே
முதல்வர் மூவருக்கும் முதுகு கொடாதே (எந்)

மங்கள தேவதையான சீதாலட்சுமி உள்ளத்திலே செய் நன்றி வெள்ளமாய்ப் பெருக தன்பதி சரணம் மனத்திலே தொட்டு நிறைந்த அமைதியோடு அநுமானுக்கு ஆசி அளிக்கிறாள். மனித பண்புக்கு முதல் எதிரிகளான மூவர் காமம் குரோதம் உலோபம் இவர் உன் முதுகில் ஏறாதவாறு பார்த்துக் கொள்

கோபம் அரக்கியர் மேல் எடாதே
இனிதாய் உதவி செய்யும் செய்கை விடாதே''
இந்த மங்கள ஆசியை நினைத்து நினைத்து மாதா சீதையையும் மகன் அநுமனையும் வணங்குவதே நம் உள்ளம் குளிரச் செய்யும்

சீதாதேவி தலை மேற் கைகுவித்தாள் அக்கினியை
முக்கால் வலம் வந்தாள் கொழுந்த வளர்த்த

செழும் தணலில் குதித்தாள் அப்போதெழுந்த
மருக்கொழுந்தாய் சீதை எழுந்தாளே

பிலஹரி ஹநுமான் பாடுகிறார்

ப. எழுந்தாளே பூங்கோதை
எழுந்தாளே சீதை

அ. கொழுந்து போல் ஒளி ஓங்கி
–குதித்த செந்தணல் நீங்கி (எ)

ச. புரந்தரன் இந்திராணி –பூமேல் ஆரணன் வாணி
பூதேசன் சர்வாணி
அருந்தவன் உடன் கூட அருந்ததியும் கொண்டாட
அமரர் சோபனம் பாட பூமலர் போட (எ)

2. திருமேனி தனில் வண்ண செழும் மஞ்சள் ஒளிமின்ன
திசை எங்கும் பளபளன்ன

தருமம் புகழ்ந்து துள்ள தழைக்கும் எழுபது வெள்ளச்
சகல சேனையும் கவலை தள்ள (எ)

3. மலரடி நுணங்காமல் மணிக்கூரை மங்காமல்
மாலை வண்ட சங்காமல்

கலவைஈரம் வாங்காமல்
கனிவாய் நகை நீங்காமல் (எ)
4. குங்குமம் புலராமல் குழல் நேர்மை அலராமல்
கூந்தற் பூ உலராமல்

அங்கே ராமன் முன்னாலே அக்கினி தேவன் கைமேலே
அலர்ந்த தாமரை போல மின்னலை போல (எழு)

பிரபுவின் ஆணைப்படி விபீஷணன் செய்து வைத்த மங்கள ஸ்நாநமும் பெற்று திவ்யாலங்கார பூஷிதையாக அநஸூயை கொடுத்த மஞ்சள் பூசி மல்லி மலர் மாலை பூண்டு - வந்த சீதை - அனலில் குதித்த ஸீதை - சிறு மாசு மருவின்றி குதித்த மேனிக்குச் சிறிதும் பழுதில்லாமல் எழுந்தாள் என்று கூற வந்த கவிராயன் வாக்கிலே கவிதை பொங்கி எழுகிறாள். ஒரு சின்னத் தொடர் கவனத்திற்கு உரியது ''மாலை வண்டசங்காமல்'' எவ்வளவு பொருட் செரிவு!! பூண்ட மலர் மாலையோடு இறங்கினாளே. அந்த மலர் மாலையில்

வண்டுகள் தேன் குடிக்க - தீ பட்டதும் அவை பொசுங்கி இருக்க வேண்டும் அல்லது பறந்திருக்க வேண்டும். இரண்டுமல்லாமல் கவலையற்று அசங்காமல் தேன் உரிஞ்சினவாம். நெருப்பில் குதித்த தேவியின் கற்பு மஹிமை அவள் உயிரை மட்டும் காப்பாற்றவில்லை. அந்த வண்டுகள் உயிரையும் காப்பாற்றியது - என்பது வரை மாலை வண்டசங்காமல் - என்ற வரியின் ஸ்வாரஸ்யம் மிளிர்கிறது.

## பரதனுக்கு ராமன் வரவு கூறல்

*மத்யாவவதி* *அடதாளம்*

*ப.* *வந்தான் வந்தான் பரதா –ரகுராமன்*
*வந்தான் வந்தான் பரதா*

*அ.* *வந்தான் வந்தான் மோதிரம் தந்தான் தந்தான் கைமேலே*
*இந்தா இந்தா தீயினில் முந்தாதே முந்தாதே –* *(வந்)*

*ச.* *நாயகன் சொல் மறந்தாய் அண்ணா*
*என்று பேயனைப் போல் பறந்தாய்*
*தாயரையும் துறந்தாய் பழி போட*
*தீ இதற்கோ? பிறந்தாய்*

*சேயின் முகம் பார்க்கும் தாயின் முகம் போல*
*காயும் புழுவுக்கு ச்சாயும் நிழல் போல*

*தீயும் பயிருக்கும் பேயும் மழை போல*
*மாயன் கஜேந்திரனுக் காய் வந்தது போல –* *(வந்)*

*2. பொருந்தாத புத்தியுந்த அலைவாயின்*
*கரும்பு போல மெத்த நைந்தாய்*

*துரும்பு போல வற்றி நொந்தாய் வீழ்வேன்*
*என்று பெரும் தீயைச் சுற்றி வந்தாய்*
*அரும்பதினாலாண்டு ஆச்*

சென்ற தினாலே
வருந்தும் தம்பி மடிவான்
என்றொரு க்காலே

பரிந்திதோ சித்திர கூடத்திற் பாலே
பிரிந்த கன்றைத் தேடி வரும் பசுவைப் போல் (வந்)

3. தீமை வினைகள் மண்டு
ராவணப்பாமரன் ஆவி உண்டு

சேம வெஞ்சேனை கொண்டு

பரத்துவாஜமுனி பூசை கண்டு

சாமி ரகுகுல சோமன் இதோ வந்தான்
பூமகள் சானகி வாமன் இதோ வந்தான்

ஓமென்னும் ஆயிர நாமன் இதோ வந்தான்
நீ மகிழ ரகு ராமன் இதோ வந்தான் (வந்)
மேலும் சொன்னார் ஹநுமான்

கல்யாணி அடதாளம்

பரதமகா ராஜனே - கேளாய் -ராமன் செய்தி
பரதமகாராஜனே கேளாய்

1. தீரமுலாவிய சித்திர கூடத்திலே முன்னே
திருவடிகள் நீ கொண்டு போகியதின் பின்னே

இரகுபதி தண்டகவனத்தே திருவடிநீட்டினான்
ராட்சத விராதனை உபேட்சை அறமாட்டினான் பரத

ச. அந்த முனிவர்க்கபயம் தந்தான் - பிறகு
அகஸ்திய முனி ஆசிரமம் சேர்ந்தான் - அவர்

*தந்த படை முழுதும் கொண்டான் - வந்து*
*சானகியோடு பஞ்சவடி கண்டான் பரத*

*2.பின்னாகமானை வர விடவே அதன்*
*பிறகு கணை ஒன்றில் அது படவே -ஒரு பரத*

*சந்நி யாசி ராவணன் அடுத்தான் - சீதை*
*தன்னை நிலமங்கையோ டெடுத்தான்*

*(கம்பரின் கருத்தை அடியொற்றி இப்படிச் சொன்னது)*

*3. அவனியை சுக்ரீவனுக்கு தவி மீளவும்*
*அடியேன் அறிந்து அம்மை நிலைகண்டு மீளவும்*

*தவமுள்ள விபீஷணர்க்கபயம் கொடுத்தனன்*
*சாமிதிரு அணை ஒன்று கடல்மேல் எடுத்தனன் பரத*

*கும்பகர்ணனையும் ராவணனையும் ஒடுக்கினன்*
*மதிநுதல்சீதை தனைஉற்றான் - புஷ்*
*பகமீதில் சேவடி பதித்தான் பரத*
*அதிமுன் பரத்து வாசன் ஆச்ரமம் மேவினான்*
*அதற்கு முன் உன்னைக் காண ஏவினான்*

*நீதமுடன் அனுமானது சொன்னான்*
*''இந்த நிமிஷம் வந்து சாமி*
*உனக்கருள்வான்'' என்றான்*

*பேராதரவாய் பரத்து வாசன் மடத்திற் பரத*
*பூர்வ போசன வேளையில் ராகவனைக் கண்டான்*
*(காலை விருந்து)*
*பாதமலர் வணங்கினான் பரதன் தன்னை*
*பார்த்ததும் காத்ததும் சொன்னான் அப்போதையன்*
*''காதலனே அநுமானே நீயே என்தன்*
*''கண்'' என்றான். என்னுடன் வா! உண்'' ணென்றான்*

இதன் விளக்கம் பின்வரும் சரிதத்தில் காணலாம்.

மோஹநம் ஆதி

ப. வா வா அநுமானே - என்னுடன் உண்ண
வா வா வா சீமானே
(எசமான் கூட நான் உண்ணுவதா? தயங்குகிறான் அநுமான்
வா வா சீமானே நீ சேவகன் அல்ல சீமான் என்கிறான் ராமன்.

அ. ஜீவபயமில்லாமல் பரதனையும் தேறத்
தேற்றி எனக்கு வந்து சொன்னவுடன் இளைப்பாற - வா

ச. அங்கே பிரம்மாஸ்திரத்தில் விழுந்த தம்பி பிழைக்க
அமிர்த மருந்து தேடிக் கொடுத்தாயே

இங்கே அக்கினியில் விழும் தம்பி பிழைக்க
என்வரவைச் சொல்லித் தூக்கி எடுத்தாயே

சங்கட வேதனைகள் ஏதேது வந்தாலும்
தலையிட்டுக் கொண்டு தீர்த்துக் கொடுத்தாயே

பொங்கும் இருப்புக் கோட்டையும் கற்கதவுமே
போல எங்களைக் காக்க வாலாயம் எடுத்தாயே (வா)

2. பூட்டிய தூது நீ போய் அரக்கரைக் கொன்ற ரத்தம்
போச்சிலையே இன்னும் - லங்கையில் ஈரம்
வாட்டமில்லாமல் சீதை தனையும் தந்தாய் நலம்
வாழ்வும் தந்தாய் எனக்குப காரம்
கூட்டத்தினால் என்ன படையிலும் ஒருத்தன்
கொடையிலும் ஒருத்தன்உன்ன தே வீரம்

தாட்டிகத் தம்பிமார்க்கும் தாய்மார்க்கும் எனை
ப்பெற்றோன் தனக்கும் சொல்வதேன் உப சாரம் (வா)

*தம்பிமார்க்கும் தாய்மார்க்கும், பெற்றோருக்கும் வாயால் செய் நன்றியை உபசாரமாகத் தெரிவிக்க முடியுமா? அதுபோல உனக்கு செய்நன்றி உபசார வார்த்தை போதுமா?*

***3. சுக்ரீவனுக்கும் விபீஷணனுக்கும் தங்கள்***
***துரைத்தனம் மேலாசை***
***எந்தாயே***

***எக்காலமும் உன் தன் ஆசை என் காரியத்தில்***
***எங்கெங்கும் போய்ச்சுற்றி***
***நெடுந்தாயே***

***விக்கிரமம் நீ செய்து வருகையாலே நாங்கள்***
***விருந்தமுது இருந்து உண்ணது***
***தந்தாயே***

***சர்க்கரைப்பந்தலிலே தேன் மாரி பொழிந்தாற் போல***
***சந்தோஷ வார்த்தை கொண்டு சமயத்தில் வந்தாயே (வா)***

*முன்னொரு பாடலில் ஸீதாதேவி செய் நன்றி உணர்வு இப்பாடலிலே ராமனின் செய் நன்றிஉணர்வு - ஒரு சொல் மிகை இல்லாமல் உள்ளம் நிறைந்து கனிந்து கவிராயர் வாக்கிலே நெகிழ்ந்து வருகிறது? இதை நின்று ரஸித்தால் நம் உள்ளம் தூய்மை பெறும்.*

*சீயாழிக்கருகில் உள்ள - தில்லையாடியில் பிறந்த - அருணாச்சலக்கவிராயர் (1711 -1778) தரும்புர ஆதீனத்தில் கல்வி கற்றுச் சிறந்த கல்விமானாகி - புதுச்சேரி ஆனந்த ரங்கம்பிள்ளை மணலி முத்துக்கிருஷ்ண முதலியார் தஞ்சைதுரை ராஜா முதலியவர்களின் பேராதரவு பெற்றவர். சட்ட நாதபுரம் வெங்கட ராமையர் கோதண்டராமையர் என்ற சங்கீத வித்வான்களின் தூண்டுதலினால் ராம நாடகக் கீர்த்தனங்களைப் பாடினார்.*

இலக்கியங்களை முறைப்படி இலக்கணத் துணையோடு படித்தார். யாப்பிலக்கியங்களிலும் பரிபூரணத் திறன் பெற்றார். ஆயினும் தமது பாடல்களினால் மேல் மட்டத்தில் உள்ள பேரறிஞர்களையும் சமுதாயப் பெரியோர்களையும் கவர்ந்து பெருமைப்பட வேண்டும் என்று நினையாமல் - நாட்டுப்புற மக்கள் கல்வியறிவு அதிகமில்லாமல் மனிதப் பண்புகளிலும் தெய்வபக்தியிலும் நாட்டம் உள்ளவர்களுக்கு மனிதநல நற்பண்புகளை எடுத்துக்காட்ட வேண்டும். சொற்பொழிவுகளைக் கேட்பதிலும் நாடகங்களைப் பார்ப்பதிலும் அவர்களுக்கு உள்ள ஆர்வத்திற்கு - ஈடு கொடுக்கிறாப் போல் புராண பிரசங்கிகளுக்கும் நாடக நடிகர்களுக்கும் உதவியாக - இலக்கண மொழியைத் தவிர்த்து நாட்டு நடப்பு மொழியில் பகவத் குணங்களை நிரப்பிப் பாடல்களை எழுத வேண்டும் - என்று உந்துதல் பெற்றார். இதேவிதம் தான் வடநாட்டில் கோஸ்வாமி துளஸிதாஸரும் முனைந்தார். இருவருக்கும் கிடைத்த - மக்களின் ஆதரவும் போற்றுதலும் அபாரமானவை.

பன்னீராயிரம் பாடல்களாக விரிந்த இந்த ராம நாடகக் கீர்த்தனங்கள் - கர்நாடக இசை முறையில் பழக்கத்தில் உள்ள பல ராகங்களில் கருத்துக்கும் உணர்ச்சிக்கும் ஏற்றவாறு வர்ணமெட்டுகளில் அமைந்தவை. பழகு தமிழில் - நெருடல் இல்லாமல் கதாபாத்திரங்களின் தரத்திற்கேற்ப கண்ணியமாகவும் எளிமையாகவும் பாடல்களின் நடை விளங்குகிறது. பல்லவி எடுத்த எடுப்பிலேயே பாத்திரங்களின் மகிழ்ச்சி, துன்பம், கோபம், தாபம், இரக்கம், வெகுளி முதலிய அந்தந்த நேரத்திற்குரிய மனோவிருத்தியைப் பளீரென்று எளியோரும் புரிந்து கொள்கின்ற முறையில் அமைந்து வருகிறது. ராகமும் மிடுக்காகவும், குழைவாகவும், பதற்றமாகவும், பணிவாகவும், அதிகார தோரணையிலும் குரல் கொடுக்கிறது.

கதைப் போக்கிலே ஹநுமானின் பிரவேசம் முதல் - ராம பட்டாபிஷேகம் வரை ஹநுமானைப் பற்றியோ

ஹநுமானேயோ பாடுகின்ற பாடல்களைத் தொகுத்து - பல பாடல்களை முழுமையாகவும் சில பாடல்களை பகுதிகளாகவும் இங்கே வழங்கப்பட்டிருக்கின்றது. விளக்கங்களே தேவையில்லை. அவையே ஸ்வயம் பிரகாசமாகப் பொலிகின்றன. ஹநுமானுடைய வீரம் சாஹஸம், பேச்சு சாதுர்யம், பணிவு, பக்தி, எல்லாம் - படிக்கும் போதே மிளிர்கின்றன. பாடிப் பார்த்தால் அவற்றின் ரஸமும் பரிமளமும் இதயத்தில் ஊன்றிவிடும். இந்தக் கவிராயர் - அநுமார் பிள்ளைத் தமிழும் பாடியிருக்கிறார். அது கதைப்பகுதியில் இடம் பெறும். பாடல் எழுதப் புகுந்த அருணாசலக் கவிராயரை ஹநுமான் பூரணமாக ஆட்கொண்டு பாடவைத்திருக்கிறார்.

இதை உணர்ந்து படித்தாலும் பாடினாலும் ஹநுமான் நம்மையும் ஆட் கொள்வார். கம்பநாட்டாழ்வார் கவிச் சக்ரவர்த்தி கம்பனின் ராமாயணத்தையே கரைத்துக் குடித்து, அந்த மஹாகாவியத்தில் முத்து முத்தாகக் கிடைக்கின்ற சிறந்த கருத்துகளை முற்றிலும் விரவி ராமநாடகத்தை எழுதிய அருணாச்சலக்கவிராயர் - கம்பநாடர் குறிப்பாக சொன்ன கருத்துகளை விந்யாஸப்படுத்தி தமது பாடல்களில் புனைந்திருக்கிறார். அவற்றையே மறுபடியும் கம்பராமாயணத்திலிருந்து பாடல்களை எடுத்துக் காட்டுவது சப்பென இருக்கும்.

அதை விடுத்து ஆழ்வார்களின் பாசுரங்களை எடுத்துக்கொள்வோம்.

குலசேகரப்பெருமாள் தனது **அங்கணெடும் மதில் புடைசூழ்** என்று துவங்குகின்ற பத்தாம் திருமொழியில் ராமாயணத்தைக் குறுக்கிச் சொல்கிறார். பல பெரியோர்கள் இதை நித்ய பாராயணத்திலே வைத்துக் கொண்டு ராமாயணம் முழுவதையும் அநுஸந்தானம் செய்த நிம்மதியை பெறுகிறார்கள். அதன் கடைசிப் பாசுரத்தில் **தில்லை நகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள் திறல் விளங்கு மாருதியோ டமர்ந்து தான்** என்கிறார். இன்றும் அந்தப் பெருமாள் ஸந்நிதியில் ஹநுமான் கைகூப்பி சேவை சாதிப்பதைக் காணலாம்.

திருமங்கை யாழ்வார் பத்தாம் பத்து மூன்றாம் திருமொழியில் ஒரு அவலகாட்சியை நம் கண்முன்னே நிற்க வைக்கிறார். யுத்த காண்டத்தில் ராம ராவணப்போர். தோல்வி மேல் தோல்வி ராவணனுக்கு. யுத்தத்தில் பலியாகும் அரக்கர் வீட்டு ஜனங்கள் கணவனை மகனை இழந்து தவிக்கின்றனர்.

அவர்கள் சுக்ரீவனையும் அங்கதனையும் அணுகி கொல்ல வேண்டாம் என்று குழமனிதூரம் ஆடுகிறார்கள். எவரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அப்போது வயதில் மூத்த அரக்கி - கணவன், மகன், பேரன்களை, இழந்தவள். அடுத்த வீட்டுக்கிழவியிடம் கூறுகிறாள்.

இப்படியே இழந்து கொண்டே இருந்தால் என்ன பயன்? நமக்கு நல்ல புத்தி வரவேண்டும். பத்தினியைப் பறி கொடுத்த மஹாராஜன் நம்மை பூண்டோடு ஒழித்தே தீருவான். அவன் உள்ளம் மாற வேண்டுமானால் ஒரே ஒரு வழிதான் உண்டு. மற்ற எவரையும் அண்டிப் பயனில்லை.

நாம் எல்லாம் ஹநுமானைச் சரணடைய வேண்டும். ''ஹநுமானையா - நம் ஊருக்கே தீ வைத்தவனையா'' என்று கேட்காதீர்கள். நாம் தீ வைத்தோம். அவன் ஓடினான். தீ பரவியது. யாராவது அவனுடைய வால்தீயை அணைத்தோமா? அவனாகப் போய் - வாலைக்கடலில் நனைத்து தீயை அணையச் செய்து கொண்டான். ராமனுடைய கோபம் தீர வேண்டுமானால் இந்த மாதிரிக் கோணல் கட்சி பேசாமல் அநுமானைச் சரணடைவோம்.

''அவன் ராமன் கோபத்தைத் தணிப்பானா?''

அவனால் அதுவும் முடியும்? விபீஷணனை சத்ருவின் சோதரனை ராமனோடு சேர்த்து வைக்கவில்லையா? நாம் போய் காலில் வீழ்ந்தால் நமக்கும் அபயம் கிடைக்கச் செய்வான் அவனைப் போய் வாழ்த்துவோம்''

**''மாற்றமாவது இத்தனையே!**

**வம்மின் அரக்கர் உள்ளீர்!**

**சீற்றம் நும்மேல் நும்மேல் தீர வேண்டில்**

சேவகம் பேசாதே

ஆற்றல் சான்ற தொல் பிறப்பில்

(ஸகல நல் ஆற்றல்களையும் தனக்கே உரிமையாக்கிக் கொண்ட) அநுமானை ''வாழ்க'' என்று கூற்ற மன்னார் காண் குமுமணிதூரமே அநுமானிடம் சொல்வோம்.

எங்கள் இராவணனார் ஓடிப்போனார். நாங்கள் எய்த்தோம் உய்வதோர் காரணத்தால் சூடிப்போந்தோம் - உங்கள் கோமான் ஆணை தொடரேன்மின்.

ஏழுபிராகாரங்கள் கொண்டு மாமதில் சூழ்ந்த திருவரங்கத்தில் ஞானிகளும் யோகிகளும் ஆழ்வார்களும் தவம் கிடந்து பெரிய பெருமாளை சேவிக்கக் காத்திருக்கும் போது - திருமங்கை ஆழ்வாருக்கு -தானும் அத்தகைய திவ்யஸேவையை தர்சிக்கக் கொடுத்து வைத்திருக்கிறோமா - என்ற ஐயமும் அச்சமும் உண்டு. இ ப் ப டி ப் பெருமாளின் வைபவம் நினைத்து ஏக்கம் உற்றிருந்த திருமங்கையாழ்வாருக்கு பெருமாளுக்கு அடியார் பாலுள்ள பரிவும் எளிமையும் நினைவுக்கு வருகின்றன.

பெருமாளே! உன்முன் கைகட்டி வாய் புதைத்து நிற்கின்றான் வாதமாமகன் வாயுகுமாரன். அவன் ஒருமர்க்கடம் - நாலு கால் விலங்கு - மனிதஜாதியே அல்ல மற்றோர் ஜாதி யென்றொழிந்தில் அவனைத் தவிர்க்கவில்லையே! அவனிடம் உனக்கு எவ்வளவு ப்ரேமை? உகந்து எவ்வளவு ஆசை! எவ்வளவு பரிவு? கடலைப் போல விரிந்து ஆழ்ந்து இருக்கிறதே! காதல் ஆதரம் கடலினும் பெருக ஏன் இவை? அவன் செய்திருக்கின்ற அளவற்ற சேவைகளுக்கு எவ்விதம் தான் கைம்மாறு செய்து தீர்க்க முடியும்? முடியவே முடியாது - செய்த கவினுக்கு இல்லை கைம்மாறென்று இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தாய் அல்லவா? பெருமாளே! எப்போது?

*ராவணனை வென்று சீதா தேவியுடன் புஷ்பகவிமானத்தில் ஏறி - மறுநாள் பொழுதுவிடியும் முன் -பரதனை அணுக வேண்டுமென்று பரமவேகத்தோடு வந்து கொண்டிருந்த உங்களை பரத்வாஜர் வழி மறித்துக் கீழே இறக்கிவிட்டார்.*

*''ஐயனே! சற்று இங்கே தாமதிக்க வேண்டும்''*

*முனிவரே! மன்னிக்க வேண்டும். உதய காலத்தில் நான் பரதனைச் சந்தித்து ஆக வேண்டும். இன்றேல் பரதன் அக்நிப்ரவேசம் செய்து விடுவான். தந்தை பிரதிக்கினையைக் காப்பாற்ற இத்தனை பாடுபட்டேன். இன்று பரதனுக்கு நான் அளித்த பிரதிக்கினையைக் காப்பாற்றா விட்டால் அவன் உயிர்துறப்பான். இதைக் காட்டிலும் பெரிய தவறு நான் செய்வது உண்டா? இதைக் காட்டிலும் எனக்குப் பேரிழப்பு உண்டா? வழி விடுங்கள்.*

*முனிவர் கூறினார்''ராம! ஒரு கணம் ஒரு சொல் கேள். நேற்று வரை போர்க்களத்தில் நின்று ராவணனுடைய கொடிய பாணப்ரயோகத்தினால் - உன் திருமேனியெல்லாம் புண் பட்டது. ஸுஷேணவைத்யன் பச்சிலைப் பற்றுப் போட்ட நிலையில் உன் தாயார் கௌஸல்யா தேவி உன்னைப் பார்த்தாளேயானால். அவள் தண்டகாரண்ய முனிவர்களைச் சபித்துவிடுவாள். ''படுபாவி முனிவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக என் பிள்ளையை இத்தனை கொடுமைக்கு ஆளாகிவிட்டார்களே''. - என்று கதறுவாள்.*

*நான் காலமெல்லாம் தவம் செய்து. அன்னதேவதையை உபாசித்தேன். வாஜம் என்றால் அன்னம் என்று பெயர். **பரத்வாஜன் அன்னம் தாங்கி.** அந்த அன்னத்தில் ஒரு துளி விடியற் காலையில் உனக்கும் உன் பரிவாரத்திற்கும் கலத்தில் இட்டுவிட்டேனானால் உங்கள் எல்லோருடைய திருமேனிகளும் தங்க வண்ணமாகிவிடும். நானும் மற்ற முனிவர்களும் உன் தாயின் வயிற்றெரிச்சலிலிருந்து தப்பிக்கலாம்''.*

*ராமன் திகைத்தார். அநுமானைப் பார்த்தார். ''ப்ரபோ இக்கணமே நான் முன்னே சென்று பரதனுக்குத் தங்கள்*

வரவைத் தெரிவித்து விடுகிறேன். பொழுது விடிய இன்னும் இருபத்து நான்கு விநாடிகள் நீள்கின்றன. இரு வினாடிகளில் நான் பரதனை அடைவேன் என்றார். பறந்தார். தீக்குழியை வலம் வந்து கொண்டிருந்த பரதன் காதுகளில் அமுதம் பெய்தார். பரதன் தீக்குளிப்பதைத் தவிர்த்து அண்ணல் வரவு நோக்கிக் காத்திருந்தான்.

ஹநுமான் ராமனிடம் திரும்பிவிட்டார்.

''பரதன் காத்திருப்பார்'' என்று சொன்னார். ராமன் இதையெல்லாம் நினைத்துப் பார்த்தார்'' **கோதில் வாய்மை யோடும்''** இந்தச் சொல்லுக்குத் தான் இத்தனை விளக்கமும் பரதனுக்கு கொடுத்தவாக்கு கோதிலாது நிறைவேறிவிட்டதே. இந்த மாருதிக்கு என்ன கைம்மாறு? என்ற மாளாத சிந்தனைக்கு ஒரு கணத்தில் தீர்வு கண்டார்.''

''ஹநுமந்தா! வா! உனக்காகத்தான் காத்திருக்கிறேன். என் எதிரே, என் இலை, முன் உட்கார். நீயும் நானும் சேர்ந்து உண்போம்''

பிரபுவின் ஆக்கினை! எதிரே அமர்ந்தான் ஹநுமான். ராமன் தான் ஒரு கவளம் உண்டான். ஹநுமானின் வாயில் மறுகபளம் ஊட்டினான்.

இந்தக் காட்சியை திருமங்கைஆழ்வார் தன் மனக் கண்ணில் கண்டார்.

உடனே உண்பன் = உன்னோடு தான் உண்பேன்

- **என்ற** ஒண்பொருள்

இந்த தங்கள் எளிமை தான் எனக்கும் தங்கள் தரிசனத்திற்குத் தகுதி அளிக்க வேண்டும் **எனக்கும் ஆதல் வேண்டும் என்று அடியினை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்தம்மானே!** என்கிறார் திருமங்கை ஆழ்வார். இப்படி எத்தனையோ பாசுரங்கள் ஆழ்வார்கள் திருவாக்கிலே பிறந்திருக்கின்றன.

# தெலுங்கு மொழி இலக்கியங்களில் ஹநுமான்

தெலுங்கு மொழி - என்று ஆரம்பித்தவுடன் நினைவுக்கு வருகிறார் - தியாகராஜஸ்வாமிகள் அவருடைய கீர்த்தனங்கள் எல்லாம் ஸ்வாநுபவம் நிறைந்தவை. ஒவ்வொன்றும் ஒரு காவியம் துதி - என்ற வகையில் பகவன் நாமங்களையே நிரப்பி பல உத்ஸவஸம்ப்ரதாய கீர்த்தனங்கள் பாடியிருக்கிறார். அவற்றில் ராக பாவமும் பொதுவான பக்தி பாவமும் மிளிர்கின்றன. மற்றக்ருதிகளை கவனிக்கும் போது - ஒவ்வொருக்ருதிக்கும் ஒரு பின்னணி உண்டு. ஸந்தர்ப்பம் உண்டு. கீர்த்தனம் பாடலாம் - என்று ஸங்கல்பத்துடன் உட்கார்ந்து - ஸங்கீத தாதுவை முதலில் இயற்றிக் கொண்டு பின் அவற்றில் ஸாஹித்யச் சொற்களைச் சேர்த்தார் என்ற முறை அவருடைய ரீதிக்குப் பொருந்தாது. அன்றாட வாழ்க்கையில் ஏற்பட்ட சிறு அநுபவங்கள் எல்லாம் கீர்த்தனங்களாக வடிவம் பெற்றுள்ளன என்பது ஸத்தியம்.

ஒருக்ருதியின் பின்னணியை நினைவு கூர்வோம் - மார்கழி மாதம் இரண்டு நாட்களில் ஹநுமத்ஜயந்தி வருகிறது. த்வாதசி பாரணை முற்பகலிலேயே முடிந்து விட்டபடியால் முதல் இரவு ஏகாதசி பஜனையோடு நேரம் நீண்ட களைப்பு தீர சற்று அயர்ந்து விட்டு - ரேழித்திண்ணையில் குளிரடக்கமாக உத்தரீயத்தைப் போர்த்துக் கொண்டு - நாம ஸூத்திரத்துடன் அமர்ந்து ராம நாமஜபத்தில் ஆழ்ந்தார்.

கூடத்தில் அவருடைய மனைவி - புதிய உளுந்து வந்திருப்பதைப் பலகையில் உருட்டிக் கல்லுப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். - ராம ராயன் பூஜைப் பாத்திரங்கள் வஸ்திரங்கள் முதலியவற்றை சீர் செய்து அடுக்கி கொண்டிருந்தான்.

''மதனி! நான் ஒரு கதை சொல்கிறேன் கேட்கிறீர்களா?

''என்ன கதை? ராம கதையா? கண்ணன் கதையா?''

''இரண்டுமல்ல ஹநுமான் கதை''

'சொல்லு சொல்லு! ஹநுமத்ஜயந்தி வடை மாலைக் காகத்தான் உளுந்து திரட்டிக் கொண்டிருகிறேன்''

''மதினி! நான் சொல்லப்போவது யாருக்கும் தெரியாது -புதுசு''

''அப்படியென்ன? மஹாவித்வான் இல்லையா நீ- சொல்லு சொல்லு.

''இல்லை மதினி இது மஹாராஷ்ட்ரக்கதை. இந்த ஊரிலே யாருக்கும் தெரியாதுன்று சொன்னேன்.

ராம பிரானுக்கு அயோத்தியிலே பட்டாபிஷேகம் ஆச்சு. பத்துப் பதினைந்து நாட்கள் ஒரே கோலா ஹலமாக நடந்து இன்னிக்குத்தான். அவா அவா அவா கார்யத்தைப் பார்க்கின்றனர் - காலைலே பிரபு தர்பாருக்குப் போய் விட்டார். யாரெல்லாமோ மஹரிஷிகள் எல்லோரும் வந்திருக்காளாம். ஹநுமானும் கூடப் போய்விட்டார்.

ராமனுடைய அந்தப்புரத்திலே பரதன் லட்சுமணன் சத்ருக்னன் அவர்களுடைய பார்யைகள் -எல்லோரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

லட்சுமணன் ஸஹோதரர்களுக்கு வனவாஸ அநுபவங்களையெல்லாம் சொன்னார். பரத சத்ருக்னர்கள் அத்தனை கஷ்டங்களையும் அநுபவிக்கும் போது - நாங்கள் உங்கள் கூட இருந்து உதவி செய்யாமல் போனோமே - என்று கண் கலங்கினார்கள்.

''லட்சுமணா! உன் பாக்கியமே பாக்கியம். அண்ணாவுக்கு நீ கூட இருந்தது - எவ்வளவு உபகாரமாக இருந்திருக்கும்? நீ செய்த சேவைகள் எங்களுக்குக் கொடுத்து வைக்க வில்லையே''

''பரதா. சத்ருக்நா - நான் அண்ணாவுக்கு ஸேவை செய்தேன் என்கிறீர்கள் அது ஓரளவு தான் பொருந்தும்.

''ஏன்?''

''நான் ஏதோ எனக்குத் தெரிந்த படி சேவை செய்தேன். ஆனால் இந்த ஹநுமான் வந்து சேர்ந்த பிறகுதான் - எனக்கு - எத்தனை சேவைகளைச் செய்யத் தவறிவிட்டோம் - என்பதே தெரிந்தது. அப்பப்பா! ஹநுமானுடைய சேவை அளப்பரியது.

''அது போகட்டும் லட்சுமணா! நான் ஒன்று சொல்கிறேன் கேள்.'' - என்று பரதன் ஆரம்பித்தான். மற்றவர் எல்லோரும் பரதன் முகத்தைப் பார்த்தனர்.

''இத்தனை நாட்கள் நீ சேவை செய்து விட்டாய்! அண்ணா! ராஜ்யத்துக்கு வந்துவிட்டார். இனி நாம் மூவரும் சேர்ந்து ஸேவை செய்வோம்.''

ஸீதா தேவி கேட்டாள் - ''என்னை ஒதுக்கிவிட்டீர்களா!

''ஒதுக்கி விடவாவது! நீங்கள் செய்கின்ற சேவையை வேறு யார் தான் செய்ய முடியும்?''

ஊர்மிளா மாண்டவி சுருதகீர்த்தி மூவர் கேட்டனர்.

எங்கள் பங்கு என்ன?

பரதன் சொன்னான் ''நம் எல்லோருக்கும் சேவையில் பங்கு உண்டு. யார் யாருக்கு என்ன என்ன சேவை - என்பதை முதலில் பட்டியல் போடுவோம்.

ஒவ்வொருவரும் காகிதம் பேனாக்களை எடுத்து வைத்துக்கொண்டு பட்டியல் போட ஆரம்பித்தார்கள்.

''அந்தப்புரத்தில் அண்ணா சயனத்தில் இருந்து எழுந்திருப்பார். மதனியார் பிரபுவின் உத்தரீயத்தை சரியாகப் போர்த்துவிட்டு பாதுகைகளைக் கால்களில் சேர்ப்பார். பிரபு சயனகிருஹத்திலிருந்து வெளியே வருவார். லட்சுமணன் அண்ணா பல்துலக்க உதவி செய்வார். பரதன் முகம் துடைத்து விடுவார். சத்ருக்னன் அண்ணாவை முன் அறைக்கு அழைத்துச் சென்று நாற்காலியில் அமரச் செய்வார். இப்படிப் பட்டியல் கணம் தோறும் ஆக வேண்டியவற்றைக் குறிப்பிட்டு நீண்டு

*கொண்டே போயிற்று. ஒவ்வொரு வரும் நினைத்து நினைத்து சேவைகளை நினைவு படுத்தினார்கள். வெகு நேரம் ஆகிவிட்டது. நேரம் போனதே தெரியவில்லை. மாலையில் ராமன் ஹநுமானுடன் தர்பாரிலிருந்து திரும்பி வந்தார். ஹநுமான் பிரபுவின் கழற்றின பாதுகைகளை கண்களில் ஒற்றிக் கொண்டு அதற்குரிய பெட்டியில் வைத்தார்.*

*எல்லோரும் எழுந்திருந்தனர்.*

*''என்ன எல்லோரும் சேர்ந்து கொண்டு பெரிய சபையே நடத்துகிறார்ப்போல இருக்கிறதே.*

*ஸீதாதேவி கூறினாள். ''அப்படி ஒன்றுமில்லை.இனி நம் கடமையென்ன? என்பது பற்றி ஆலோசித்தோம்''*

*''முடிவுக்கு வந்து விட்டீர்களா?''*

*பரதன் கூறினான்.*

*''அண்ணாவின் அங்கீகாரதிற்காகக் காத்திருக்கிறோம்'' லட்சுமணன்: -ஏகாந்தமான விஷயம்.*

*ராமன் : - நாம் தானே இருக்கிறோம். வெளியார் யாரும் இங்கு இல்லையே!''*

*எல்லோரும் மென்று விழுங்கினார்கள். ஹநுமான் குறிப்பறிந்து கொண்டார். ''ப்ரபோ! எனக்கு உத்தரவா?''*

*''ஹநுமந்தா! ஓயாமல் நீ ஏதாவது வேலை வைத்துக் கொண்டிருப்பாய்! நீ போகலாம்''*

*ஹநுமான் வணங்கி விடை பெற்றார்.*

*ராமன் புன்னகை புரிந்து கொண்டே ''என்ன விஷயம்?''*

*சத்ருக்னன் : - அண்ணா ! நாங்கள் எல்லோரும் ஒரு முடிவுக்கு வந்து விட்டோம். பல வருஷங்கள் ஓடிவிட்டன. உங்களுக்கு ஸேவை செய்யாமல். தங்களுக்கு வேண்டிய ஸகல ஸேவைகளையும் ஹநுமானே செய்து வருகிறார். எங்களுக்கு*

இப்போது தான் ஸந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. தங்களுக்கு இனி நாங்கள் தான் ஸேவை செய்யப் போகிறோம். தாங்கள் ஹநுமானுக்கு ஓய்வு கொடுத்துவிடலாம். ராமன் அப்படியா! நல்ல யோஜனைதான் எனக்கு காரியம் நடக்க வேண்டும். யார் செய்தால் என்ன? உங்களுக்கு விருப்பமானால் செய்யுங்களேன்.'' பரதன் - அண்ணா - பொழுது விடிந்ததும் இரவு ஓய்வு எடுத்துக்கொள்ளும் வரை தங்களுக்குச் செய்ய வேண்டிய சேவைகளை யார் யார் செய்வது! என்று நாங்களே முடிவு செய்து அவரவர் செய்ய வேண்டிய பட்டியல்கள் தயாரித்துவிட்டோம். அவற்றை இப்போது அவரவர்கள் தங்களிடம் வாசிப்பார்கள். ஏதாவது விட்டுப்போயிருந்தால் அதைக் குறிப்பிடுங்கள் - நாங்கள் பட்டியலில் சேர்த்துக் கொள்கிறோம்.

''பரதா! எனக்கு என்ன தேவை என்பது எனக்கே தெரியாது. இப்படி என்னை நீங்கள் எல்லோரும் ஹநுமானும் சேர்ந்து வளர்த்து விட்டீர்கள். நீங்கள் சேவை செய்கிறீர்கள் அது எனக்கு ஹிதமாக இருக்கிறது - நான் ஏற்றுக் கொள்கிறேன்.''

''சரி அண்ணா! கூடியவரைவிடாமல் நாங்கள் தங்களுக்குச் சேவை செய்வோம். தாங்கள் தயவு செய்து ஹநுமானுக்கு ஓய்வு கொடுத்து விட வேண்டும்.''

''அவனுக்கு ஓய்வு கொடுப்பதா? அவனுக்கு ஆயிரம் வேலை நான் வைத்திருக்கிறேன். நீங்கள் அது பற்றிக் கவலைப்பட வேண்டாம். சத்ருக்நா வாசலில் ஹநுமான் இருப்பான். அவனைக் கூப்பிடு.

சத்ருக்னன் சென்றான். ஹநுமான் அவன் பின்னே ஓடோடி வந்தான்.

''ஹநுமந்தா! என் தம்பிகள் அவர்கன் மனைவிகள் எல்லோரும் எனக்கு ஸேவை செய்ய வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். அவர்கள் உன்னிடம் அநுமதி கேட்கிறார்கள்.''

*ஹநுமான்: அநுமதியா? அபசாரம் அபசாரம் ! அவர்கள் போட்ட பிச்சை எனக்குத் தங்கள் ஸேவை. அவர்களுடைய உரிமை அது. அவர்களே செய்யட்டும். நான் எட்ட நின்று அவர்களுடைய ஸேவையை தர்சிக்கிறேன்.*

*லட்சுமணனும் பரதனும் போய் ஹநுமானை ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்.*

*''ஹநுமந்தா எவ்வளவு பெரிய மனது?*

*உடனே விட்டுக் கொடுத்துவிட்டாயே! உன்னைத் தவிர யார் தான் பிரபுவின் ஸேவையை விட்டுக் கொடுப்பார்கள்? நீ ரொம்பப் பெரியவன்.''*

*ஹநுமான்: - ப்ரபோ! ஒரு சின்ன வேண்டுகோள்.*

*ராமன்:- என்ன அப்பா அது?*

*எல்லோரும் திகைத்தனர். ஏதாவது சாக்குப் போக்கு சொல்லி ஸேவைக்கு உள்ளே வந்து விடுவானோ ஹநுமான்?*

*ராமன்: - தயங்காதே! சொல்லு*

*ஹநுமான்:- பெரிய விஷயமில்லை. இவர்களே தங்களுக்கு எல்லா ஸேவைகளையும் செய்யட்டும் - ஏதாவது ஒன்று இரண்டு விட்டுப் போய் இருந்தால் அதை நான் செய்யலாமா? தங்களுக்கு ஒரு ஸேவையும் குறைந்துவிடக் கூடாது - என்பதற்காகத் தான் கேட்கிறேன்.*

*பரதாதிகள் திடுக்கிட்டார்கள்.*

*பரதன்: - ஹநுமந்தா! சேவைகளை நாங்கள் பட்டியல் போட்டு வைத்திருக்கிறோம். அவற்றைக் காது கொடுத்துக் கேள். அவற்றில் ஏதாவது விட்டுப்போய் இருந்தால் இப்போதே சொல்லிவிடு. பட்டியலில் சேர்த்துக் கொள்கிறோம்.*

*ஹநுமான்: - ஸோதரர்களே! அது எனக்கு தெரியாது. அந்தந்த நேரத்தில் அந்தந்த ஸேவையை எதிர் பார்த்து செய்வேனே. தவிர - முன் கூட்டியே சிந்தனை செய்ய மாட்டேன்.*

சிந்தனையில் இறங்கினால் கையில் எடுத்த காரியம் கவனக்குறைவினால் கெட்டுவிடும்.

பரதன்:- ஹநுமந்தா! நீ கூடவே இரு. அவர்களுக்கு வழி காட்டு.

ராமன்: - நான் தான் முன்பே சொன்னேனே. அவனுக்கு வேறு வேலை வைத்திருக்கிறேன் - என்று அவனை விட்டுவிடுங்கள். நீங்கள் சந்தோஷமாக எனக்கு செய்கிற பணிவிடை போதும். அதில் ஒரு குறைவுமிராது. கவலைப்படாதீர்கள்.''

மறுநாள் காலை முதல் அவரவர்கள் தமது பட்டியல்படி அந்தந்த சேவைகளை அந்தந்த நேரத்தில் தவறாமல் செய்தார்கள். ராமனுக்கு பரம ஸந்தோஷம்.

இரவு சயனக்ருஹத்தில் பிரவேசித்தார் - சகோதரர்களும் அவர்களுடைய மனைவிகளும் -பின் வாங்கினார்கள்.

ஸீதா தேவியை கைலாக்குக் கொடுத்து ராமன் மஞ்சத்தில் ஏற்றிக்கொண்டார்.

ஸீதா தேவி பால் ஆற்றிக் கொடுத்தாள். அருந்தினார். திண்டின் மீது - சாய்ந்தார். - ராமனுக்கு தூக்கம் வந்தது, வாய்திறந்து கொட்டாவி விட்டார்.

திறந்த வாய் மூடவில்லை. இரண்டு, நான்கு, ஆறு, பத்து நிமிஷங்கள், ஆகிவிட்டன. தேவி ராமன் முகத்தைப் பார்த்தாள். கண்கள் கண்ணீர்த் ததும்பி ஜொலித்தன. பிரபு பிரபு என்று நான்கு தடவை கூப்பிட்டாள். பதில் இல்லை. அவளுக்கும் பயம் வந்துவிட்டது. மஞ்சத்திலிருந்து இறங்கிப்போய் - கதவை திறந்தாள்.

கதவு திறக்கும் சத்தம் கேட்டு. அடுத்த அந்தப் புரத்தில் - படுக்கப் போன லட்சுமணன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். தேவி அழைத்தாள். ''இங்கே பாருங்கோ - அண்ணாவுக்கு என்னவோ ஆகிவிட்டது''

உள்ளே போய்ப் பார்த்தார். ராமன் திறந்த வாயோடு மூடாத கண்களோடு அசையாமல் படுத்திருந்தார்.

அதற்குள் பரதரும் சத்ருக்னரும் ஓடி வந்தனர். தாய் மார்கள் ஓடிவந்தனர். அரண்மனை வைத்யர் ஓடோடி வந்தார். பட்டுவிரித்து -கைபிடித்து - நாடி பார்த்தார். விசேஷம் ஒன்றுமில்லை. கண்ணிமைகளை பிதுக்கிப் பார்த்தார். ஒரு தோஷமுமில்லை. எல்லோரும் பதறிப் போய்விட்டனர். ராமனுக்கு அமைதி கெடுக்க வேண்டாமென்று - குசு குசுவென்று பேசினர். லட்சுமணன் வெளியே ஓடினார். ஆஜாரத்தில் ஜேணம் பூட்டின குதிரை நின்றது. அதன் மேல் தாவி ஏறினார். நகரத்து புற வெளியில் உள்ள குருதேவர் வஸிஷ்டர் ஆச்ரமத்திற்குச் சென்று செய்தி தெரிவித்தார். அவர் பல்லக்கில் ஏறிப் பறந்து வந்தார். அந்தப்புரத்தில் நுழைந்தார். மற்றவர்கள் விலகி வழிவிட்டனர். குருதேவர் ரகுராமனின் மார்பைத் தொட்டுப்பார்த்தார். அமைதியாக இதயம் துடித்தது திரும்பினார்.

''எங்கே ஹநுமான்?''

வாசற் படியில் காத்து நின்ற ஹநுமான் ஓடோடி வந்தார். நேரே ராமனுடைய மஞ்சத்திற்கு ஓடினார். **ராமனுடைய வாயில் விரலால் சொட்டை போட்டார்.** ராமனுடைய திறந்த வாய் மூடிக்கொண்டது. தலை நிமிர்ந்து மஞ்சத்திலிருந்து இறங்கி குருதேவரை வணங்கினார்.

''என்ன இது? ராம'' என்று கேட்டார். வஸிஷ்டர்.

ராமன் : - ஒன்றுமில்லை - நான் படுத்துக்கொண்டதும் கொட்டாவி விடுவேன். ஹநுமான் என் வாயில் விரல்களைச் சொடுக்கி சொட்டை போடுவான். நான் வாய் மூடித்தூங்க ஆரம்பித்து விடுவேன். இன்று யாரும் என் வாயில் சொட்டை போடவில்லை. அதனால் வாய் மூடவில்லை.''

எல்லோரும் கல கலவென்று சிரித்தனர். ஸீதாதேவி சிரிக்கவில்லை - படுக்கையில் படுத்துக் கொட்டாவி

விட்டால், விரல் சொடுக்கி சொட்டை, போட வேண்டும் - என்று ஒரு கைங்கர்யமா? இந்த கைங்கர்யத்தை - நான் கவனித்துச் செய்ய மறந்து விட்டேனே! ஹநுமான் வாசலில் காத்திருந்து அழைத்த உடன் ஓடிவந்து சொட்டை போட்டானே! ஆக ராம கைங்கர்யத்தை இவ்வளவு நுணுக்கமாக கவனித்து - வேறு யாராலதான் செய்ய முடியும்? பரதன் ஹநுமானின் கையைப் பிடித்துக் கொண்டார்.

''ஹநுமந்தா- நாங்கள் அனைவரும் தோற்றுப்போனோம் - வெறுமனே சேவை செய்வோம் என்று ஆசைப்பட்டால் போதுமா? அதில் எவ்வளவு நுணுக்கம் இருக்கிறது? அது தெரிந்தவன் நீ ஒருத்தன் தான். நாங்கள் உன் வாலைப் பிடித்துக் கொண்டு. உன் ஆணை ஏற்று ராமனுக்குக் கைங்கர்யம் செய்வோம். அதற்கு அநுமதி தருவியா?'' என்று வணங்கினார்கள்.

''மதனி கதை முடிந்துவிட்டது. நீங்கள் என்ன உளுந்து உருட்டுவதை விட்டுவிட்டு - என் வாயையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

''அற்புதமான சரித்திரம் அப்பா! ராம ராய! அண்ணாவுக்கு நீ கிடைத்தாயே!''

ரேழித் திண்ணையில் நாம மாலையை உருட்டாமல் கதை கேட்டுக் கொண்டிருந்த தியாகராஜரும் எழுந்து வந்தார். ''ராம! - ராயா! உன்னைத்தான் கேட்கிறேன். இப்படி ஒரு சரித்திரமா! ஆஹா ஆஹா ராமனுடைய ஸந்நிதானத்திற்கு வந்தார்.

தம்புராவை எடுத்து வைத்துக் கொண்டார். மீட்டினார். பைரவி பொங்கிக் கொண்டு பீரிட்டது.

ராம -நானும் தான் உன் க்ருபை கிடைக்க வேணுமே. அதற்கு உனக்கு உபசாரங்கள் செய்து பூஜிக்கலாமே என்று ஏதோ பாடிக் கொண்டிருக்கிறேன்.

இதுவெல்லாம் ஈடேறுமா?

உனக்கு நான் என்ன உபசாரம் செய்து விட முடியும்? எனக்கு என்ன தெரியும்?

எப்பொழுது என்ன கைங்கர்யம் செய்ய வேண்டு மென்று குறியோடு வாசற்படியிலே காத்திருகிறான். வாதாத்மஜன் ஹநுமான்.

**வாகிடனே பதிலமுகா வாதாத்மஜுடு உந்நாரனி**

உனக்குக் கைங்கர்யம் செய்யவே உன்னோடு பிறந்தவர்கள் கொடுத்து வைத்தவர்கள் ஸ்ரீகரர்கள். அப்படி ஆர்வமுடைய உன் தம்பிகள் அவர்கள் காத்திருக்கிறார்கள்.

**ஸ்ரீகருடு நீ தம்முலு சேரி உந்நாரனி**

கைங்கர்ய லட்சுமியே ஸீதையாக அவதரித்து உன் அந்தப்புரத்தில் காத்திருக்கிறான்.

**ஏகாந்தமுநநு ஜாநகீ ஏர்ப்படி யுந்நாரனி**

இப்படி இருக்கும் போது - ''எனக்கு உபசாரம் செய்ய பிறர் எதற்கு ?'' என்று நினைத்து விடாதே.

**ஸ்ரீ காந்த பருவேலநி –ஸ்ரீ த்யாகராஜவிநுத –**

உபசாரம் செய்பவர் இவ்விதம் இவ்வளவு பேர் இருக்க இவன் எதற்கு? என்று மறந்துவிடாதே

**உபசாரமுசேஸேவாருந்நாரனி மரவகுரா** என்று பாடினார் தியாகராஜர்.

ஸ்ரீராமன் ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். தியாகராஜர் கானத்தை நிறுத்தியவுடன் ராமன் சொன்னார்.

''தியாகராஜ! இத்தனை சிறந்த உபசாரங்களைச் செய்யக்கூடிய பரிவாரங்கள் - எனக்கு கிடைத்தது பெரிய பாக்கியம் தான். ஆனால் இவர்களுக்கு என் மேல் உள்ள பரிவையெல்லாம் எடுத்துக்காட்டி. இப்படி ஒரு கீர்த்தனம்

*பாடினாயே அதை நீ தானே செய்ய முடிந்தது - எனக்கு உபசாரம் செய்ய - பிறர் எதற்கு? என்று நான் நினைப்பதாகப் பாடினாயே பருலேலனி என்று (தஸநிதப நிஸநீதப) பைரவியின் அந்த சொடுக்கு ஸவாரஸ்யமானது. பாவம் பொங்குகிறது - என்று பாராட்டினார்.*

*ஹநுமானுடைய ஸேவையை மற்றொரு கீர்த்தனத்திலும் பாராட்டிப் பாடுகிறார்.*

*ஒரு நாள் ராமனை வேண்டுகிறார் ''ராம! என்னை உன்னருகிலேயே எப்பொழுதும் வைத்துக் கொண்டு வா ஐயா!*

*குந்தலவராளியில்*

***''செந்தநே ஸதா உஞ்சுகோவைய''***

*ராமன் சிரித்தார்.*

*என்னுடனே நீ இருந்து பாடிக்கொண்டே இருந்தால் - நான் மற்ற பேர்களை எப்படி கவனிப்பது?*

*தியாகராஜர் - ஹநுமானை வைத்துக் கொள்ளவில்லையா!*

*ராமன் ''ஹநுமானா? அவனும் நீயும் ஒன்றா! அவனுடைய கைங்கர்யப்புகழ் உலகெல்லாம் பரவியிருக்கிறது. கைங்கர்ய ஸ்ரீமான் அவர்.''*

*தியாகராஜர் - ''நானும் முடிந்த அளவு கைங்கர்யம் செய்வேன்.*

***மந்துகெக்கு ஸ்ரீமந்துடௌ ஹநு***
***மந்து ரீதிகா ஸ்ரீ காந்த***

*ராமன் - உன்னால் முடியுமா! அவனுடைய வீரதீர பராக்ரமங்களை நினைத்துப்பார். அவன் எங்கே? நீ எங்கே?*

*தியாகராஜர் - ''ஆமாம். ராம! ஹநுமான் எங்கே நான் எங்கே! அவனைப் போல உன்னோடு இருக்கலாம் என்று*

ஆசைப்பட்டதே தவறு. ஆனால் மற்றொன்று கேட்கிறேன். ராம நீ எனக்கு வேறு ஏதாவது தொண்டு கொடு. உன் அருகில் கொடுத்தாலும் சரி. எட்டிக் கொடுத்தாலும், நீ கொடுக்கிற தொண்டை பரதன் போல - தலை மேல் தாங்கி என்னால் முடிந்த அளவு செய்து வருகிறேன்.''

**தலசின பநுலநு நே தெலிஸி**

**தலதோ நடசி – ஸந்தஸில்லுதுரா!**

என்ன செய்யவேண்டுமென்று பலதடவை சொல்ல வேண்டாம். ஒருமுறை சொன்னால் போதும்.

**பலுமாறு பல்க பனிலேது ராம**

**பரதுநி வலத்யாகராஜநுத –**

''அப்படியானால் நீ என்னைப்பாடிக் கொண்டே இரு. அது போதும் -'' என்று அருள் பாலித்தார்.

ஹநுமான் ருத்ரனுடைய அவதாரம் - என்ற பகுதியில் மற்றொரு கீர்த்தனம் நினைவு படுத்தினோம் அதிலே மற்றொரு ஸ்வாரஸ்யம் உண்டு.

தியாகராஜருடன் ராமன் பேசுவதுண்டு. அதற்கு பல கீர்த்தனங்களில் சான்றுகள் உண்டு. அதுவல்ல இங்கு நாம் எடுத்துக் கொண்ட விஷயம். ஆனால் ஒரு நாள் ராமன் தியாகராஜர் எவ்வளவு முயன்றும் ராமன் பதில் சொல்லவில்லை. தியாகராஜருக்கு சற்று கோபம் வந்துவிட்டது.

''இதோ பார் ராம? உன்னை நம்பி உன்னை மனதில் இருத்தி உன்னையே பூஜிக்கிறேன். மற்றவர் போல தர்சனம் செய்த கோயில்கள் எல்லாம் தர்சனம் செய்து - நீயே கதி. உன்னையல்லால் வேறு தெய்வமில்லை - என்று நான் விடபுருஷனைப் போல நடந்து கொள்ளவில்லை. உனக்கே நிறைய பஜனை செய்துவிட்டு - ஒரு காரியம் உடனே

நிறைவேற திருட்டுத்தனமாக மற்றொரு தெய்வத்தை அண்டி விரதமிருந்து பூஜித்ததுமில்லை. அது உனக்கே தெரியும்.

**ஜார சோர பஜந சேஸிதினா**

ஸ்ரீரஞ்ஜனியில் வேதனை வெளிப்படுகிறது.

நேர்மையுடன் உன்னைத் தானே பூஜித்து வருகிறேன். கோவூரில் சுந்தரேச்வரரைத் தரிசித்து என்ன வரம் கேட்டேன் தெரியுமா? சுந்தரேச உன் சரணத்தில் எனக்கு பக்தியைக் கொடு என்று கேட்கவில்லை.

**அம்போருஹ லோசந பதாம்புஜ பக்திம் தேஹி**

(சம்போ மஹாதேவ கீர்த்தனத்தில்) தாமரைக் கண்ணன் ராமன் திருவடிகளில் - எனக்கு பக்தியை கொடு - என்று தான் வேண்டினேன். எந்தக் கோயிலுக்குப் போய் எந்த தெய்வத்தை தரிசித்தாலும் நான் கேட்கும் வரம் ஒன்று தான்.

**நாதபமுயொக்க பலமு நீவே**

என்னுடைய தவங்களுக்கெல்லாம் பயன் நீதான். உன்னை விட்டு என் மனம் வேறொன்றிலும் நிலைக்காது.

**நிநுவிநா நாமதி எந்து நிலுவதே**

என்ற தான் பாடி இருக்கிறேன்.

அப்படிப்பட்ட எனக்கு பதில் சொல்லாமல் இருக்கிறாயே! நியாயமா இது ?

**மாறுபல்ககுன்ன வேமிரா**

ராமன் பேசவில்லை.

சலுகையோடு ராமனிடம் கோபித்துக் கொள்கிறார் த்யாகராஜர். சாருகேசியில்,

**ஆடமோடி கலதே மாடலாட மோடிகலதே**

**என்ற க்ருதியில்**

''என்னுடன் பேசுவதற்கு பிகு பண்ணிக்கிறாயே!''

மோடி என்ற சொல்லுக்கு ஸ்வரப்ரயோகம் கவனிக்கத் தக்கது - **மபாமகரிகா** - என்ற பஞ்சமத்தில் ஒரு அசைவு கொடுக்கிறார். மோடி என்றால் முகத்தைக் கோணிக் கொள்வது என்று பொருள். அது அங்கே தொனிக்கிறது.

''என்னோடு பேசிவிட்டால் - நான் ஏதாவது வரன் கேட்டுவிடுவேன் என்ற சந்தேகமா ராம! எனக்கு ஒருவரனும் வேண்டாம். என்னை வரம் கேட்கும் நிலையில் நீ வைக்கவில்லை. ஸந்தோஷமாக இருக்கிறேன். நீ எனக்குத் தோழன் என்ற எண்ணத்துடன் பேசுகிறேன்.

**தோடுநீட நீ வேயநுசு.**

உன் சரணங்களை என் மடியில் போட்டுக்கொண்டு நண்பன் என்ற உரிமையுடன் பேச்சுக் கொடுக்கின்ற என்னிடம் பிகு பண்ணிக்கிறாயே.

**கூடி பாதமுபெட்டின நாதோ**

**மாடலாட மோடி கலதே**

ராம! நீ நினைக்கிறாய். ஆனானப்பட்ட ஹநுமானே வந்தான். அவனைத் தேடித்தானே நானே போய்க் கொண்டிருந்தேன். அவனே வந்தான். அவனோடு நான் பேசவில்லையே! த்யாகராஜ! உன்னோடு என்ன பேச்சு வேண்டிக்கிடக்கிறது என்று தானே நினைக்கிறாய். அவனோடு நீ ஏன் பேசவில்லை - என்பது எனக்குத் தெரியும். அவன் சுய ரூபத்தோடு வரவில்லை. பிக்ஷுவேஷம் போட்டுக் கொண்டு வந்தான். இடுப்பில் முழங்கால் வரை ஒரு துண்டு. பூணூலோடு மான் தோல்பட்டை, தலையைச் சுற்றி ஒரு ருத்ராட்ச வடம், ஹநுமானுக்குத் தன்னை மறைத்துக் கொண்டதாக எண்ணம் ஆனால் அவன் போட்டவேஷத்தினால் அவன் பரமேச்வர அவதாரம் தான் என்று நீ கண்டு பிடித்து விட்டாய். ராவணனை வதைப்பதற்காக நாம் எடுத்த அவதாரத்தில் நமக்கு உதவி

*செய்ய பரமேச்வரன் இப்படி ஒரு அவதாரம் எடுத்திருக்கிறாரே! அவரிடம் என்ன பேசுவது? பரமேச்வர! நான் பெண்டாட்டியைப் பறி கொடுத்துவிட்டு அழுது கொண்டிருக்கிறேன் - என்று சொன்னால் அது பொய் அல்லவா! அவதார நாடகத்தில் தானே இந்த நடிப்பு? எனக்கு ஏது துக்கம்?*

*அப்படிச் சொல்லாமல் ''என்னுடைய அவதார நாடகத்தில் இந்த வேஷம் போட்டு நடிக்க வந்திருக்கிறீர்களா? - என்று கேட்டுவிட்டால் அவதார ரகசியம் வெளிப்பட்டு விடும். அது வெளிப்படக் கூடாதே. என்ன பேசுவது என்று புரியாமல், லட்சுமணனை அழைத்து ஏதாவது கதை சொல்லி இவருடன் பதில் பேசு என்று சொல்லிவிட்டாய்.*

*''உனக்கு நன்றாகப்பேசத் தெரியும்.* ***சநுவுலன்ன தெலிஸி*** *ஆனால் வந்திருப்பவன் சங்கராம்சமான வாயுகுமாரனல்லவா?*

***சங்கராம் சுடை ஸதயுடு ஆசுகஸம் பவுண்டு ஸதயுடு***

*பரிவோடு வந்திருக்கிறார். அது மட்டுமல்ல பரமேச்வர அவதாரமான ஹநுமான் என் கால்களில் விழுந்து வணங்கிவிட்டாரே!* ***ம்ரொக்க*** *- அதனால் தம்பியை ஏதாவது கதைவிடச் சொன்னாய்.*

***கதலு தம்முலு பலக சேஸிதிவி.***

*அப்படி ஒரு தர்ம ஸங்கடமும் உனக்கு என்னிடம் இல்லையே பேசலாமே.*

***காகநு த்யாகராஜு ஆடின மாட***

***லாட மோடி கலதே***

*ராமன் பலமாகச் சிரித்தார்.*

*''ஸபாஷ் தியாகராஜ, அருமையான கீர்த்தனம் எனக்கு கிடைத்தது.''*

ஹநுமான் ராமாவதாரத்தில் மட்டுமல்ல கிருஷ்ணாவதாரத்திலும் ஸேவை செய்திருக்கிறார். அதைப்பற்றி முன்னொரு அத்யாயத்தில் குறிப்பிட்டிருக்கிறோம்.

க்ருஷ்ணாவதாரத்தின் போது ஒரு சமயம் ஹநுமானை பீமஸேனன் சந்தித்தான். பரஸ்பரம் பேசி நெருங்கின உறவோடு பீமஸேனன் ஹநுமானுக்கு ஒரு விண்ணப்பம் செய்தான்.

பாரதப் போர் நாட்கள் நெருங்கிக் கொண்டிருந்தன. பீமஸேனன் சொன்னான் ''அண்ணா எங்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையே பெரியபோர் நடக்க இருக்கிறது. போரில் எங்களுக்கு ஏற்படக்கூடிய வெற்றி தம்பி அர்ஜுனன் கையில் இருக்கிறது. அவன் வீராதி வீரன் தான் - என்றாலும் அவனுடைய ஸ்வபாவத்தை நினைத்தால் போரில் ஒத்துழைக்க மாட்டானோ என்று பயமாக இருக்கிறது. என்ன தான் காரியமிருந்தாலும் கண்ணனைக் கண்டு விட்டால் கைவேலையைப் போட்டுவிட்டுக் கண்ணனிடம் ஓடிவிடுவான். நல்ல வேளையாக கண்ணனே அர்ஜுநனுக்கு போரில் தேர் சாரத்யம் செய்வதாக உறுதி கூறியிருக்கிறார். ஆனால் க்ருஷ்ண லீலையில் மனம் கொடுத்து போரில் இவனுக்குத் தடுமாற்றம் நேராமல் இருக்க வேண்டுமே! இது தான் எங்கள் கவலை. ஆகவே அண்ணா! நீங்கள் போரில் அவன் கூடவே இருக்க வேண்டும்.

''அவ்வளவு தானே! கவலைப்படாதே. அவன் தேரில் உள்ள கொடிக்கம்பத்தைப் பிடித்துக் கொண்டு அவனை ஒவ்வொரு கணமும் கவனித்துக் கொள்கிறேன்'' என்று ஹநுமான் உறுதியளித்தார்.

போர் தொடங்கிவிட்டது. படைகள் எதிரெதிராக ஆயத்தமாக நிற்கின்றன. அர்ஜுனனுக்கு மனக்கலக்கம் வந்து விட்டது. ''கண்ணா! நான் போர் புரியமாட்டேன் -

நயோத்ஸ்யே' ' என்று கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு தேர்த்தட்டிலே உட்கார்ந்து விட்டான்.

கண்ணனுக்கு கோபம் வரவில்லை. நெருக்கடி என்றால் கண்ணனுக்கு குஷி. அவர் பாட ஆரம்பித்து விட்டார். வாய் மொழியாக உபதேசம் செய்தால் அர்ஜுனன் காது கொடுத்துக் கேட்க மாட்டான். அவனுக்கு ஸங்கீதத்தில் மிகவும் ருசி. அதுவும் கண்ணன் வேணுவை எடுத்து வாசிக்க ஆரம்பித்து விட்டால். அர்ஜுநன் உலகையே மறந்துவிடுவான்.

அவனுடைய கவனத்தை ஈர்ப்பதற்காக கண்ணன் பாட ஆரம்பித்துவிட்டான். அதனால் தான் கிருஷ்ணன் யுத்த களத்தில் அர்ஜனனுக்கு உபதேசம் செய்த ஆத்மஞானத்திற்கு பகவத்கீதை என்று பெயர். அர்ஜுனன் கண்ணனுடைய கீதத்தை ஆர்வமுடன் கேட்டான். கருத்தை கவனிக்கவில்லை - ராகத்தை ரஸித்தான். அதனால் தான் கண்ணன் மிகத் தெளிவாகச் சொன்ன கருத்திலேயே அர்ஜுநனுக்கு அடிக்கடி குழப்பம் ஏற்பட்டது.

ஆனால் கொடிக்கம்பத்தைக் கட்டிக் கொண்டிருந்த ஆஞ்ஜநேயர் கான இனிமையையும் ரஸித்தார். கருத்துக்களையும் ஊன்றி கவனித்தார்.

கண்ணன் திருமொழிகளில் சில முன்னே எங்கேயோ கேட்ட நினைவு ஹநுமானுக்கு நினைவு வந்தது.

எங்கே கேட்டோம்? என்று சற்று நிதானித்தார்.

கண்ணன் விளக்கம் அளித்தார்.

''இதை முன்னே நான் சூரியனுக்கு உபதேசித்தேன்''.

பளீரென்று புரிந்தது ஆஞ்ஜநேயருக்கு, ஆஹா ஸூர்ய பகவான்க்ருஷ்ண பகவானிடம் கற்ற வித்தையையல்லவா நமக்கு உபதேசம் செய்திருக்கிறார். அதே சொற்கள் அதேச்லோகங்கள் இப்போது கண்ணன் பாடுகிறாரே.

இவ்வாறு ரஸித்தார் ஹநுமான்.

அதைத்தான் தியாகராஜர் பாடுகிறார். ஸீதாபதியின் தாமரை திருவடிகளில் நிலை பெற்ற மனமுடைய வாதாத்மஜன் ஹநுமானுக்கு கீதையின் அர்த்தமும் தெரியும், அதற் கானரஸத்தையும் அநுபவித்திருக்கிறார்.

**ஸீதாபதி சரணாப்ஜமு நெலகொந்ந,**

**வாதாத்மஜுநிகி பாக தெலுஸரா.**

**கீதார்த்தமு ஸங்கீதாநந்தமு பாகாதெலுஸுரா –**

நன்றாகத் தெரியுமே, மனமே - ஹநுமான் ராமனுடைய சரணத்தில் இப்படி சுகித்திருப்பவன்.

**த்யாகராஜவரதுடு ஸுகிரா**

இதை கவனத்தில் கொள்.

**தாவுந ஸூடரா என்கிறார் தியாகராஜர்.**

இது தவிர ஹநுமானையே நேரிடையாக பிரார்த்தித்த கீர்த்தனம் ஒன்று முழுவதும் ஸம்ஸ்கிருதத்திலே அமைந்த க்ருதி தான். தெலுங்கு மொழியில் அல்ல. ஆனால் ஹநுமானைப் பற்றியது தியாகராஜருடையது - என்ற ரீதியில் இங்கே இடம் பெறுகிறது.

**ராகம் வஸந்த வராளி**

**பாஹி ராம தூ$_3$த ஜகத்**

**ப்ராண குமார – மாம்**

**அ. வாஹிநீச$_+$ தரண – தச**

**வத$_3$நஸூநு தநுஹரண – பாஹி**

**ச. கோராஸுர வாராம் நிதி**

**கும்ப$_4$தநய க்ருதகார்ய**

அசுரப்பெரும் கடலை அகஸ்த்யர் செய்த காரியம் செய்து

*அழித்தீரே?*

***பாரிஜாத தருநிவாஸ***

***பவநதுல்ய வேக***

***2. பாத$_3$விஜித து$_3$ஷ்டக்$_3$ரஹ***

***பதித லோக பாவந***

***வேத$_3$சாஸ்த்ர நிபுண வர்ய***

***விமல சித்த ஸததம் மாம் பாஹி***

***3. தருணாருண வத$_3$நாப்$_3$ஜ***

***தபந கோடி ஸங்காச$_+$***

***கரத்$_4$ருத ரகு$_4$வர ஸுசரண***

***கலிமலாப்$_4$ர க$_3$ந்த$_4$வஹ பாஹி***

*கலிக் கொடுமை என்ற துர்நாற்ற மேகத்தை விரட்டுகின்ற நறுமணக் காற்றே-*

***4. கருணாரஸ பரிபூர்ண***

***காஞ்சநா த்$_3$ரிஸ மதே$_3$ஹ***

***பரம ப$_4$ாகவத வரேண்ய***

***வரத த்யாகராஜ நுத- பாஹி***

*கோவிந்த புரத்தில் பிரதிஷ்டையாகியுள்ள ஹநுமானுக்கு தியாகராஜரின் இந்தச் சொல் சேர்த்து* ***பரமபாகவத வரேண்ய ஸ்ரீ ஆஞ்ஜநேயர்*** *என்ற திருநாமதேயம் வைக்கப்பட்டது.*

## பத்ராசலராம தாஸருடைய

## ஸ்ரீ ஆஞ்ஜநேய சூர்ணிகா

*பத்ராசலத்தில் ஸ்ரீராமனுடைய ஆலயத்தை புதுப்பித்து ஸம்ப்ரோக்ஷணம் நடத்தி - ஸ்ரீராம நவமி மஹோத்ஸவத்தை - விசேஷமான அன்னதானங்களுடன் பத்து*

*நாட்கள் மஹா பாகவதகோஷ்டியருடன் கோலாஹலமாகநடத்தி ஏகாதசியன்று ஆஞ்ஜநேயருக்கு விடையாற்றியை நாமகோஷத்துடன் நிறைவேற்றி கடைசியில் கைகளில் சாமரங்கள் ஏந்தி ஹநுமானை ஒரு சூர்ணிகா கத்யத்தினால் ஸேவிக்கிறார் பத்ராசல ராமதாஸர்.*

***ராஜாதி$_4$ராஜ ராஜமார்த்தாண்ட***
***ராஜ க$_3$ம்பீ$_4$ர***
***ஸகல ராக்ஷஸகுல வந த$_3$ஹந***
***ப்ரசண்ட$_3$ கோத$_3$ண்ட$_3$ ஶ்ரீராம சந்த்$_3$ர***
***சரணஸேவகப்ரகாண்ட$_3$ - பராக் ஸ்வாமிந்***

***ஓ வாயு நந்தந!***
***நூவு வாரி$_4$தி தாடிந விசித்ரம்பு***
***ஆவருணிநிகே தெலுஸுநு -***

***நூவு உசிதம்பைந மார்ஜாலரூபம்பெ$_3$த்தி***
***மஹாப்ரதாபமுகா லங்கநு***
***ப்ரவேசிம்சி நதி லங்கநு காசின***
***ஆலங்கிணிகே தெலுஸுநு***

***நூவு வநம்புநகேசி வஞ்சக ராக்ஷஸ***
***தளமுந வதிஞ்சிநதி***
***ஆ அசோகவந தே$_3$வநுலகே தெலுஸுநு***

***விச்$_+$வ ரூபம் பெத்தி கனிபி$_2$ஞ்சதி***
***ஜக$_3$தீச்வரியகு ஆஜநகதநயகே தெலுஸுநு***

***நூவு புச்ச$_2$ம்புந அக்நி பெ$_3$ட்டி வெலகிஞ்சுட***
***அம்ம சோகிஞ்சி அக்நிப்ரார்த்$_2$தநயு சேஸி***
***நீ புச்ச$_2$ம்புந அதிசீதளம் பெடை***
***நீ ஆத்ம ப்ரபா$_4$வம்பு நீகே தெலுஸுநு***

அத்யாச்$_+$ சர்யம் பொந்திந அதி$_3$தயாளுண்டைந
பரம பா$_4$கவதோத்தம விபீஷணதநயா
த்ரிஜடகே தெலுஸுநு

நீ புட்டுக பூர்வ வ்ருத்தாந்தம்பு
ஹரிச்ரேஷ்டு$_2$லகு பூர்வ குண்டைந
ஜாம்பவந்துநிகே தெலுஸுநு
நீ பராக்ரம ஸாஹஸம்பு வாலிதநயுடு
அங்க$_3$துநிகே தெலுஸுநு

இடுல மஹாப்ரதாப மஹி பொந்திந
நவவ்யாகரண ஸ்வரூபுடை நிந்து
நேநு ஏமநி வர்ணிந்துநு
ஜநக! நேநு ஜேயு கைங்கர்யமுலந்
தப்போ ஒப்போ? அக்ஷரதட்டிலு
கலிகி$_3$யுந்நநு மெப்பநகரநு ஒப்புகொநி
ரக்ஷிஞ்சுமு
அதி எட்லயந்யே –''கரோமி ய$_3$த்யத்
ஸகலம் பரஸ்மை''யநே
சுக வாக்ய ப்ரமாணமுலந்

நேநு ப$_3$லுகரிஞ்சிந ப$_3$லகுலந்
ப்ரேமயஞ்சி ஈமஹோத்ஸவம் புந
ப்ரத்யக்ஷம்மை செய் கொநி
ரக்ஷிந்துவே ஸ்ரீவாயுநந்தந த$_3$யாநி$_4$தே

அரசர்க்கெல்லாம் அரசனான ராஜ ஸூர்யனான ராஜமாட்சிமையுடையவனே ஸகல அரக்கர் குலத்தையே வேரோடு தீயிட்டணைத்து விண்ணென்று நிமிர்ந்து வளைந்த கோதண்டம் கையில் ஏந்திய ஸ்ரீராம சந்த்ரனுடைய சரணஸேவகர்களின் தலைவனே! பராக் - ஸ்வாமி ஜய விஜயீபவ

ஓ வாயு குமாரனே!

நீ கடலைக்கடந்த வண்ணம் விசித்திரம் வருண பகவானுக்கே தெரியும்

நீ ''இது தான் சரியென்று கணித்து பூனை போல சிறு உருவமெடுத்து -மிகுந்த வீர்யத்துடன் லங்கையில் ப்ரவேசித்த சொகுசு லங்கிணிக்குத்தான் தெரியும்.

நீ அசோக வனத்தில் வரவேற்பு வளைவில் அமர்ந்து கொண்டு, வஞ்சகர்களான அரக்கர் படையை அழித்தது. இந்த அசோகவன தேவதைகளுக்குத் தான் தெரியும்.

நீ விச்வரூபம் எடுத்து பூமியிலிருந்து நெடிதுயர்ந்து ஆகாயத்தை அளாவி நின்ற பெருமை ஜகதீச்வரியான அந்த ஜனகன் பெண்ணுக்குத் தான் தெரியும்.

நீ உன்னுடைய வாலில் பற்றிக்கொண்ட நெருப்பை வாலை வீசிவீசிப் பெருக்கிக் கொண்டு சுற்றுவதைக் கேள்விப்பட்டு அன்னைஜாநகி அக்நி தேவனைப் பிரார்த்திக்க - உன் வாலின் மிகுந்த குளுமையை நீயாகவே வரவழைத்துக் கொண்ட போது. அது தேவியின் பிர பாவமா - ஹநுமானின் ப்ரபாவமா அது உனக்குத்தான் தெரியும்.

மிகவும் தயாளுவான - பரமபாகவகோத்தமனான விபீஷணனுடைய பெண் த்ரிஜடை ''தாயான தேவிக்கு நல்ல காலம் பிறந்து விட்டது'' என்ற தைரியம் ஊட்டின அந்த ஆச்சர்யத்தில் உண்மை த்ரிஜடைக்குத்தான் தெரியும்.

உனக்கே தெரியாத உன் பெருமை - உன் பூர்வவ்ருத்தாந்தம் தெரிந்து கொண்ட, பழைய பேர் வழியான ஜாம்பவானுக்கே தெரியும்.

உன்னுடைய பராக்ரமமும் அபார ஸாஹஸமும் வாலிகுமாரன் அங்கதனுக்குத் தான் தெரியும்.

உன்னுடைய ஒன்பது வியாகரண ஞானமும் மஹாபராக்ரமத்தின் ஸூக்ஷ்மமும் பற்றி நான் எவ்வாறு வர்ணித்து தலைக்கட்ட முடியும்?

தந்தையே! நான் உன் பிரபுவுக்கும் உனக்கும் செய்த கைங்கர்யங்கள் உவப்போ தப்போ இப்படியெல்லாம் என் வாயில் வெளி வந்த அட்சரங்கள் சரியோ தப்போ - நீ பெரிய மனது பண்ணி அவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். -

சரியா தப்பா என்று உன்னாலேயே தீர்மானிக்க முடியாவிடில் ஏன் பிதற்றுகிறாய்? என்று கேட்டுவிடாதே. சுகாசாரியர் சொல்லி இருக்கிறார் ''செய்வதெல்லாம் பரம் பொருளுக்கே அர்ப்பணம்'' என்ற பாவனையோடு செய்தாலே போதும்'' என்று. அதை உண்மைஎன நம்பி பேசிவிட்டேன். அவற்றை அன்போடு ஏற்றுக் கொண்டு நடந்த மஹோத்ஸவத்தில் ஏற்பட்ட குறைகளை நிறைவு செய்து பிரபுவிடம் அர்ப்பணம் செய்து என்னைரக்ஷி வாயு குமார. தயாநிதே''

ஆந்த்ரபிரதேசத்திலேயே பிறந்த மஹநீயர்கள் எழுதிய ராமாயணம் உண்டு. அவர்களில் ஹநுமானைப் பற்றி எழுதியவர்கள் ஹுலக்கி பாஸ்கரர் என்பவர் பாஸ்கர ராமாயணத்தை எழுதினார். கௌநபுத்தரஹு என்பவர் எழுதியது ரங்கநாத ராமாயணம். மொல்லா என்ற பெண்மணி எழுதியது மொல்லா ராமாயணம் இவையெல்லாம் பெரும் பாலும் வால்மீகி ராமாயணத்தை அடியொற்றியே எழுதப்பட்டவை. அதிலும் ஸுந்தரகாண்ட கதைகளை மூவருமே விஸ்தாரமாக எழுதுகிறார்கள்.

## கன்னட மொழி இலக்கியங்களில் ஹநுமான்

கர்நாடகத்தில் ஹநுமானுக்கு பெரிய ஸ்தானம் உண்டு. ஹநுமான் பிறந்த இடம் அஞ்ஜநாத்ரி கர்நாடகத்துடன் தொடர்புடையது. அவர் வளர்ந்த பிரதேசம் கிஷ்கிந்தை கர்நாடகத்தில் உள்ளது. அங்கு நூற்றுக்குப் பத்து பேருக்கு ஹநுமான் பெயர் தான். ஹநுமந்தா. ஹநுமந்தையா, ஹநுமந்தப்பா, ஹநுமந்தராய, ஹுச்சுராம ஹுச்சப்பா, கடவீராம என்றெல்லாம் குழந்தைகளுக்குப் பெயரிடுவார்கள். அங்கு பல இடங்களில் ஹநுமானே கிராம தேவதை. ஊரு ஹத்தி உருமுத்தித்தரு ஹநுமந்தகராம ஹோ

ஊரேபற்றி எரிந்தாலும் ஹநுமான் இருப்பார் என்று பழமொழி உண்டு.

கர்நாடகத்தில் மத்வஸம்பரதாயத்தைச் சார்ந்தவர்கள் அதிகம். அவர்களை ஹரிதாஸர்கள் என்று அழைப்பார்கள். இவர்களைத் தவிர வைதிகஸம்பிரதாயத்தில் வந்தவர்களில் தோரவேநரஹரி. இவருக்கு குமாரவால்மீகி என்ற பட்டம் உண்டு. அவர் எழுதிய தோரவே ராமாயணம் முற்றிலும் வால்மீகி ராமாயணத்தையே அடி ஒற்றியது. அதில் ஹநுமான் ஸஞ்ஜீவி மலையைக் கொண்டு வருவதற்காக கிளம்பிய போது காலநேமி என்பவன் பஜனை கோஷ்டி போட்டுக் கொண்டு தாமதப்படுத்தினான். அவனை ஹநுமான் அடித்து வீழ்த்தினார் என்ற கதை விஸ்தாரம்.

குமார வால்மீகியின் மற்றொரு நூல் மைராவணன் கதை. இதில் அஹிமஹி ராவணன் கதை விஸ்தாரமாக உள்ளது.

பதலேச்வரர் என்பவர் பதலேச்வர ராமாயணம் எழுதினார். அதில் போரில் ராவணன் நாகபாசத்தினால் ராம லட்சுமணர்களைக் கட்டிப்போட்டான். ஹநுமான் ராமநாமஜபத்தினால் கட்டுப்படாமல் இருந்து அவர்களைக் காப்பாற்றினார் என்று வருகிறது. அதிலும் அஹிமஹி ராவணன் கதை உண்டு. ராம லட்சுமணர்களை அந்த விபத்திலிருந்து மீட்டு தனது இரு தோள்களிலும் ராம லட்சுமணர்களைத் தூக்கிக் கொண்டு கிளம்பின ஹநுமான் உண்டு.

ஸ்ரீவிஷ்ணுபகவானைத் தன்தோளிலேற்றி வருகின்ற கருடன் போல ஆகாசவீதியில் காட்சிஅளித்தார். கோடிஸூர்ய பிரகாசனாக கிரணங்கள் நாற்புறமும் வீசதொடை வரை ஒளிவட்டம் பரவியது

வாநரநு க$_4$நதாத தேஜஸி$_3$
வைநதேயந ஹோரநு திர்த$_3$நு

மாநநிதி$_4$ ராகவநு ஹேகலலி விஷ்ணுரூபதவி ||
பாநுகோடி க$_3$லதே ஹோராளேத$_3$ா
ஜாநு முக$_3$ மண்டல$_3$த கிரணதி
ஹாநி மில்லதே ப$_3$ந்தனினகுல திலக ரேட்டகூடி ||

இவ்விதம் ஒவ்வொரு ஹரிதாஸரும் ஹநுமானைப் புகழ்ந்திருக்கிறார்கள். ஸ்ரீபுரந்தரதாஸர் ஹநுமானைப்பற்றி இருபது பதங்கள் பாடிஇருக்கிறார். ஸ்ரீவ்யாஸராயர் பாடிய பதம் ஒன்று மிகவும் கொண்டாடப்படுகிறது.

ஜாண நீநஹூ$_3$தா கு$_3$ரு முக்$_2$ய ப்ராண நீந ஹூதோ ||
ராணி ப$_4$ாரதீரமண நினகே கே$_3$ணே
காணே த்ரி$_4$பு வநோலகே ஸர்வ

ப்ராணி க$_3$ள ஹ்ரு$_3$தய த$_3$தி முக்$_2$ய
ப்ராண நேந்$_3$த நிஸி தேவோ தி$_4$ட்ட ||

ஹநுமானே நீங்கள் மஹா ஞானி, குரு, முக்யப்ராணர், தேவி பாரதியின் மணாளன் பிரம்ம தேவன்உமக்கு ஈடாகமாட்டார். யார் தான் உமக்குஸமானர்? ஜீவர்களின் இதயத்தில் நீங்கள் முக்ய ப்ராணனாக விளங்குவீர்.

புரந்தரதாஸர் ஹநுமானைப் பற்றிப் பாடிய பல பதங்களில் பஜநஸம்ப்ரதாயத்தில் முக்யமாகப் பாடப்படுவது ஒன்று.

ஹநுமந மதவே ஹரிம மதவே |
ஹரிம மதவே ஹநுமந மதவே ||

ஹநுமந ஹோலிதரே ஹரிதாஜோலிவநு |
ஹநுமந முந்$_3$தரே ஹரி முனிவ ||

***ஹநுமந ஒலி$_3$த விபீஷண கே$_3$த்$_3$த$_3$ |***
***ஹநுமந முளி$_3$தகே ராவண பி$_3$த்$_3$த$_3$ ||***

***ஹநுமந புரந்தர வி$_3$டலந தாஸ |***
***புரந்தர விட$_2$லநு ஹநுமநோ வாஸ ||***

*ஸ்ரீ ஹநுமானுக்கு எது மதமோ அதுவே ஹரியின் மதம்*

*ஸ்ரீ ஹரிக்கு எது மதமோ அதுவே ஹநுமன் மதம்*

*ஸ்ரீ ஹநுமான் ப்ரீதி அடைந்தால் - ஸ்ரீஹரி ப்ரிதி அடைவார்*

*ஸ்ரீஹநுமானுக்கு பிடிக்காதது ஸ்ரீ ஹரிக்கும் பிடிக்காது*
*ஸ்ரீஹநுமானுக்கு வாலி சரிப்படவில்லை*
*ஸ்ரீஹநுமானுக்கு **ஸுக்ரீவன்** பால் பரிவு **அவன்** வெற்றி பெற்றான்*

*வாலி வீழ்ந்தான்*

*ஸ்ரீஹநுமானுக்கு விபீஷணனிடம் மதிப்பு*

*அவன் வெற்றி பெற்றான்*

*ஸ்ரீஹநுமானுக்கு ராவணன் பொல்லாதவன். அவன் அழிந்தான்*
*ஸ்ரீஹநுமான் - நம்முடைய புரந்த விட்டலனின் தாஸன்*
*நம் புரந்தரவிடலன் ஹநுமானிடம் வாஸம் செய்கிறார்*

*தாஸமார்க்கத்தை அநுஸரித்த **திப்பண்ணார்யர் ஹநுமான் விலாஸம்** என்று ஒரு யக்ஷகானம் பாடியிருக்கிறார். அது பாடல் நாடகம். இடையே உறைநடையும் உண்டு. அது ராம கதையில் ஆரம்பித்து த்வாபரயுகத்தில் கண்ணன் பீமஸேநன் கதையுடன் சேர்ந்து - கலி யுகத்தில் மத்வராக அவதாரம் செய்து பிரகாசித்த வரை நீள்கிறது.*

*ஹரிகதா ப்ரவீணர்கள் வெகுவாக இவருடைய பாடல்களை - எடுத்துப் பாடி உரைநிகழ்த்துவர்.*

***ஸ்ரீமருத்புத்ர ச$_+$ாச்$_+$வத சாரு சரித்ர***

***ஸஜ்ஜந ஸ்தோத்ர ஸத்வஜ் வலக$_3$ாத்ர***

*கபிலோக ஸிங்க$_3$ மங்கள தரங்$_3$க*
*ஆமிஷீக்ருத த$_3$ ச$_+$ாநந மித்ர*

இப்படியெல்லாம் எதுகை மோனைகளோடு, பாடுவதால், காது கொடுத்துக் கேட்பதற்கும் இனிமையான பாடல்கள்.

தற்காலத்து மஹாகவி ஸ்ரீகுவ்வேம்பு ஜீ அவர்கள் ராமாயண தர்சனம் என்ற தனது மஹாகாவியத்தில் ஹநுமானைப் பற்றி அருமையான கருத்துக்களைக் கூறுகிறார். நரஜீவனுக்கும் நாராயணனுக்குமிடையே - ஞானப்பாலமாக ஹநுமான் விளங்குகிறார். ஹநுமான் கடலைக்கடக்க முனைந்த போது, தன்னுடைய யோகாப்யாஸப் பயிற்சியினால் குண்டலினீயை விழிக்கச் செய்து, நெற்றியில் ஸஹஸ்ராரத் தாமரை வழியாக -பூத உடலிலிருந்து பிரிந்து பரவெளியில் கலந்து ஸீதாதேவியின் இதயத்தில் ஸ்ரீராமனை ப்ரகாசிக்கச் செய்து தேவிக்கு உயிர் ஊட்டினார் என்று அவர் எழுதுகிறார்.

தற்காலத்து மேதாவீயான திரு.D. குண்டப்பா எழுதுகிறார்.

அவருடைய ''வாலி கோந்து நவிகே'' என்ற நூலில் நாட்டு மக்களை அறை கூவி அழைக்கிறார்.

ஹநுமானைப் பாருங்கள்! தீரனான குரு தேவனை நினையுங்கள். அவரிடம் நமக்கு பௌருஷம் ஆண்மை வேணுமென வரம் கேளுங்கள். அவருடைய ஒருகையில் ஆண்மை மறுகையில் அறத்தின் நேர்மை. ஒரு கால் விஞ்ஞானம் மறுகால் மனித நேயம். இவையெல்லாம் உருவெடுத்த குருமஹாராஜன் நம் மாருதி, திடமாக அவர் காட்டிய வழியில் செல்வோம். பரோபகாரமே குறிக்கோள். ராமனை மனதில் நிலை நிறுத்துவான். கிடைத்த மானிடப் பிறவியைப் பயனுள்ளதாக ஆக்குவான் ஹநுமான்.

மேலும் பலவாறு தற்காலத்து மனித இனம் தலை குப்புற விழுந்து, காசுப் பிசாசும், காமப் பேயும் பிடித்து, வெறி

பிடித்து, அலைகின்ற மனிதப்பதர்களுக்கு - வேரிலே பண்பு நீர் ஊற்றி அநுதாப உணர்ச்சி என்ற மெல்லிய காற்றுவீசி அமரச் செய்து காதுகளில் அமுதமாக மனித நேய நல்லியல்புகளை **ஹநுமானின் க்ருபையால்** பெற்று மனிதனாக வாழுங்கள் என்று கூறுகிறார்.

## சீக்கிய மொழி இலக்கியங்களில் ஹநுமான்

சரித்திர ரீதியாக ஸீக்கியமதம் என்பது நான்கு நூற்றாண்டுகளுக்குள் பிறந்தது தான். ஆனால், அந்த பிராந்தியத்தில் மக்களுடைய இதயங்களில் வெகுவேகமாக இடம் பிடித்து வலுவாக ஊன்றிவிட்டதற்கு காரணம் கட்டுப்பாடாக ஒரு மனித இனத்தை உருவாக்கியவர்களுடைய நாட்டுப் பற்றும், தெய்வப்பற்றும், அவற்றில் தவறாத நேர்மையும் தான்.

தெய்வப்பற்று - என்ற ரீதியில் பார்க்கும் போது சீக்கிய மதம் - வைதீக ஹிந்து மதத்திற்கு மிகவும் புறம்பானது என்று சொல்ல முடியாது - நெல் வயல்களில் பயிர்கள் தழைத்து ஓங்குவதற்காக, இடையிலே முளைத்த காளான்களை களை பிடுங்குவது போல் - வைதிக மதத்தில் காலத்தின் தேய்வினால் உண்மைத் திறன் இழந்து வெறும் சடங்குகளில் உயிர் தொத்திக் கொண்டிருக்கின்றது என நினைத்து அவற்றை ஒதுக்கி -ஸாரத்தை எடுத்துக் கொண்ட மதம் சீக்கிய மதம்.

அவர்களுடைய குருமஹாராஜர் கோவிந்த ஸிங் கூறுகிறார்.

**ஸர்வம் மந்த்ரஹீநம் ஸர்வம் அந்த காலம்**
**ப$_4$ஜோ ஏகசித்தம் ஸுகாலம் க்ருபாலம்**

ஆயுள் முடியும் தருணத்தில் மந்திரமாவது, தந்திரமாவது, செல்லுபடியாகாது. க்ருபாளுவான பகவானை மனதார நினைப்பாயாக.

கோவிந்தஸிங் தசரத குமாரனான ராமனை பரப்ரஹ்மத்தின் அவதாரமாகவே கொண்டாடுகிறார்.

**''ந்ருதேவ தேவ ராமஹை! அபே$_4$தத$_4$ர்ம த$_4$ாமஹை**

பலவிதமான நெருக்கடிக்கு இடையே மனஅமைதிக்காக அவர் கோவிந்த ராமாயணம் எழுதினார்.

**ஸகல த்$_3$வாரகீ சா$_4$டி$_3$கே க$_3$ஹ்யோ தும்ஹாரீ த்வார ।**
**ப$_3$ாம்ஹ க$_3$ஹே கீலாஜ அஸ கோவிந்த தாஸ தும்ஹார ॥**

பலவழிகள் திறந்து கிடக்கின்றன - உன் வழியில் நுழைந்து விட்டான் கோவிந்தன் என்ற உன்தாஸன். கைநீட்டி இழுத்துக் கொள்வது உன் பொறுப்பு. ஸ்ரீகுருகோவிந்தஸிம்ஹஜீ தன்னுடைய கோவிந்த ராமாயணத்தை நயநா தேவி மலையின் அடிவாரத்தில் ஸதலஜ் நதிக்கரையில் **ஆநந்த பூர் ஸாஹப்** என்ற க்ஷேத்திரத்தில் எழுதி முடித்தார்.

**நேத்ர துங்க கே சரண தர**

நயநாதேவி மலையை நேத்ர துங்கம் என்று

குறிப்பிடுகிறார்.

**சதத்ரவ தீர தரங்க$_3$**

வேதத்தில் சொல்லப்பட்ட சத$_3$த்ரூ என்ற

நதிதான் ஸதலஜ்

**ஸ்ரீபகவத பூரந கியோ**
**ரகுவர கத$_2$ா ப்ரஸங்க**

இந்த ரகுவரகதா ப்ரஸங்கத்தில் ஹநுமானுடைய வீரதீர க்ருபா வைபவங்களை அழகாக விவரிக்கிறார்.

பம்பா நதிக்கரையில் ஹநுமானுடைய போக்கையும் ருச்ய மூகத்தில் ஸுக்ரீவனுடைய ஸக்யத்தையும் குறிப்பிடுகிறார்.

*ஹநுவந்த பாரக மோ*
*மிலே தபமித்ரதா தாஸைளம் கரீ*
*திந ஆந ஸ்ரீரகுராஜ கே*
*கபிராஜ பி$_8$ராயந ட$_3$ாரயோ*

ஹநுமான் ராமனுடைய மோதிரத்தை எடுத்துக்கொண்டு போய் கடலைக்கடந்து ஸீதையிடம் சேர்த்து , லங்காபுரியைக் கொளுத்தி அட்சகுமாரனை வதைத்து திரும்பி வந்து ராமனிடம் சேதி சொன்னார்.

*ஸைம் மு$_3$த்ரிகா, லங்க$_4$ வாரிதை$_4$தம்*
*ஜஹம்ஸய ஹூதஹம் ஜாதபே$_4$ப।*

*புர ஜாரி சச்ச$_2$ குமார சை$_2$ வந*
*டாரிகை பி$_2$ரி ஆயியோ।*

*க்ருதச$_1$ார ஜோ அமராரி கோஸ$_3$ப*
*ராம பீர ஜதா இயோ ।*

ஸஞ்ஜீவி மலையை யார் கொண்டுவருவது - என்று திகைத்த போது ஹநுமான் ராமனிடம் கூறினார்.

ஸ்ரீராம! கேளுங்கள் என்னை என் தலைமீது கை வைத்து ஆசி அளித்து அனுப்பி வையுங்கள். தேவலோகத்து அமுதம் வேண்டுமானாலும் கொண்டு வருகிறேன்.

*ஸாக$_3$ட$_3$ ஸூநஹூ ராக$_3$ட$_3$த்க ராமம்*
*த$_3$ாக$_3$ட$_3$த$_3$ம்க$_3$ பீ$_2$டம்அக$_3$ட$_3$த$_3$ம்க$_3$ டே$_2$ாகோ*
*ஹூரசாம் ஆளு பாநம் ஸூரம் மோஹேலோகே*

போரில் ராவணன் பஞ்சமுக ஹநுமானை பார்த்து அவருடைய தேஜஸிலே சுணங்கி தைரியத்தையும் அமைதியையும் இழந்தான்.

*பஞ்ச$_1$ஏம் ஹநுமந்தம்ல$_2$க$_2$*
*து$_3$திமந்தம் ஸூப$_3$ல து$_3$ரந்தம் தஜி கலிநம்॥*

*ராவணவதம் ஆனபிறகு ஸீதா தேவியிடம் சென்று ஹநுமான் கூறுகிறார்.*

*ராவணன் ராமன்விட்ட பாணத்தில் ஏறி. வைகுண்டதாமம் போய்ச் சேர்ந்தான். தேவியே கேளுங்கள்! உங்களை அழைத்துப் போவதற்காக, வாசலில் ப்ரபு காத்திருக்கிறார். கிளம்புங்கள் ராமனோடு, சேருங்கள். ஸகல சத்ருக்களையும் அழித்து - பூமியின் சுமையை நீக்கி காத்திருக்கிறார்''*

*ஸீதை மகிழ்ந்து ஹநுமானுடன் ராமனிடம் சேர்ந்தாள்.*

***ப்ர்யோ ஜாஇ பாயம்! ஸூநோஸீய மாயம் ||***

***ரிபம் ராம மாரே! க$_2$ரோ தோடி$_3$ த்$_3$வாரோ***
***ச$_1$லோ வேகி$_3$ ஸீதா! ஜஹாம் ராம ஜீதா ||***

***ஸபை$_3$ சத்ருமாரே! புவம் பார தாரே***
***ச$_1$லீ மோ$_3$த கை கை! ஹநூஸங்க ஸலகை ||***

*குரு கோவிந்த ஸிங் -ராமகதையை விஸ்தாரமாகச் சொன்னார். ஆனாலும் யுத்த பூமியில் ஹநுமான் காட்டிய வீரதீர பராக்ரமங்களைச் சொல்லும் இடங்களை அவருடைய கோவிந்த ராமாயணத்தில் படிக்கும் போது - அதர்மத்தின் மீது ஆக்ரோசத்தையும் அதை அழித்தே தீர வேண்டும் - என்ற ஆக்கிரகத்தையும் தற்கால நிலையில் மக்களுக்கு வீராவேசம் பொங்கும் படியாக எழுதியிருக்கிறார். அவருடைய ஹநுமத் பக்தி - போர் வீரர்களுக்கு வீராவேசத்தை உசுப்பி விடுவதாகவே அமைந்திருக்கிறது.*



## வங்க மொழி இலக்கியங்களில் ஹநுமான்

வங்க நாட்டில் பரவலாக வெகு காலமாக சாக்த மதம் தான் எங்கும் ஊன்றியிருக்கிறது. உபாஸனையென்றால், ஏதோ இஷ்ட தெய்வத்தை பூஜிப்பது, துதிப்பது, வணங்குவது, என்றில்லாமல் மந்திரஜபம் - யோகஸாதனை விஸ்தாரமான அங்க தேவதைகளின் பூஜை என சடங்குகள் அதிகமான வழிபாட்டு முறையைக் கடைபிடிப்பவர்கள் அதிகம். எந்த தேவதையையும் மந்த்ரதந்த்ர முறையில் அணுகுவதே அவர்களுடைய வழக்கம்.

அந்த பாதையில் வங்காளத்தில் **மஹாமஹோபாத்யாய ஸ்ரீரகுநந்தன் பட்டாசாரியார்** என்ற மஹான் - ஸ்ரீராம உபாஸனையை ஸ்ரீராமநவமியின் போது நடத்தும்படிவிஸ்தாரமான சடங்குகள் நிரம்பிய கிரமத்தை வழிபடுத்தியிருக்கிறார். ஸ்ரீராம நவமீ வ்ரதம் - என்று தன்னுடைய **க்ருத்ய தத்துவம்** என்ற நூலில் விவரிக்கிறார். அதே முறையில் ஹம் ஹநுமதே நம : - என்ற மந்த்ரத்தை மூலமாகக் கொண்டு ஹநுமத் உபாஸனையைச் சொல்கிறார்.

அது போல் **மஹாமஹோபாத்யாய ஸ்ரீக்ருஷ்ணாநந்த ஆகம வாகீசர்** என்பவர், **ஹநுமத்கல்பம்** என்ற நூலில் **தந்த்ரஸாரம்** - என்ற நூலிலும் ஹநுமத் உபாஸனையை தாந்த்ரிக ரீதியில் முறை வகுத்திருக்கிறார். அது மிகவும் ரகசியமானது. அவற்றை குருமுகமாகவே தெரிந்து கொள்வதற்காக ஸங்கேத பாஷையில் எழுதியிருக்கிறார். அந்த ஸங்கேதம் அந்த குருபரம்பரையில் வந்திருப்பவர்களுக்குத் தான் தெரியும். இந்த முறைப்படி ஹநுமானை உபாசித்தால் வித்யையோ, செல்வமோ, ராஜ்யமோ, சத்ருநாசமோ, அக்கணமே ஸித்திக்கும். இது முக்காலும் ஸத்யம் என்கிறார் தந்த்ரஸாரத்தில்,

**வி$_3$த்யாம் வாபி த$_4$நம்வாபி**
**ராஜ்யம் வா சத்ரு நிக்$_3$ரஹம்** ||

**தத்க்ஷணாதேவ ச$_1$ாப் நோதி**
**ஸத்யம் ஸத்யம் ஸூநிச்$_+$சிதம் ||**

பரமஹம்ஸ ஸ்ரீராமக்ருஷ்ணர் சாக்த முறையில் காளிதேவியை உபாஸித்து அதிலே ஸித்தி பெற்றார். அவருடைய குலதெய்வம் ஸ்ரீராமன். அவர்பால் அவருடைய மனம் துளிர்விட்டது. ஸ்ரீராமதர்சனம் செய்ய வேண்டுமென ஊக்கம் பிறந்தது. அதற்கு ஒரே வழி ஹநுமத் உபாஸனை தான் என்று தெளிந்து ஹநுமத் உபாஸனையில் இறங்கினார். அவருக்குக் கைவந்த கலையான த்யானம், யோகம் என்று பல நாட்கள் தனிமையில் தீவிரமாக தவத்தில் ஈடுபட்டார்.

அவர் ஆடை, உடை அணிந்து கொள்ளும் போது துணியை நீளமாகத் தைத்து - வால் சேர்த்துச் கொண்டார். வாலை வளைத்து எடுத்துக்கொண்டு குதித்துக் கொண்டே நடந்தார். பழங்கள், கிழங்குகள், தவிர சமைத்த உணவு உட்கொள்வதில்லை. மரத்தின் மீது ஏறிகிளைகளில் உட்கார்ந்து கொள்வார். எப்போதும் ராம ராம ராம என ஆழ்ந்த குரலில் சொல்வார். திடீரென்று நாக்கு தழுதழுக்கும். கண்களில் நீர் பெருகும், அவரறியாமல் அவர் தரையில் இருந்து ஓரங்குலம் எழுந்து சப்பணம் போட்ட கால்பிரியாது. உட்கார்ந்த நிலையிலேயே காணப்படுவார்.

ஸ்ரீராமக்ருஷ்ண லீலா ப்ரஸங்கம் என்ற நூலில் ஸ்வாமி சாரதாநந்தர் எழுதுகிறார்.

''ஏன் ஸ்வாமி! இப்படி!'' என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டேன்.

அவர் கூறினார், ''மனது உடலின் மீது அதிகாரம் செலுத்தவில்லை. லேசாகிவிட்ட உடல் சருகு போல காற்றிலே மிதக்கிறது. இந்தா பார் நீ கேட்டவுடனே மனதுக்கு உணர்வு வந்துவிட்டது. அதன் அழுத்தம் உடலைத் தரையில் உட்காரவைத்து விட்டது''.

தக்ஷிணேச்வரம் மாதாகாளிகோவிலில் ராம கிருஷ்ணரின் அறையில் சுவற்றில் ஒரு ஹநுமான் படம் தொங்கியது. ஸ்வாமி கூறினார்,

இதோ பார்! இந்தப்படம் ஒரு கதை கூறுகிறது. ராவணனுடைய அந்தப்புரத்தில் ஒரு ஸ்படிகத்தூண். அதில் ஒரு குரங்கு பிம்பம் தெரிந்தது.

மந்தோதரி திரும்பிப் பார்த்தாள். எதிர்த்தூண் மீது ஹநுமான் உட்கார்ந்திருக்கிறார். அந்த தூணடியில் ஒரு சீப்பு வாழைப்பழத்தைக் கொண்டு வைத்தாள் மந்தோதரி. ஹநுமான் இறங்கவில்லை.

மந்தோதரி கூறினாள், ''இதோ பார் வாழைப்பழம்''

ஹநுமான் கூறினார். ''பழத்தையெல்லாம் பழமாக்கிய பெருமான் என் உள்ளத்திலே வீற்றிருக்கிறார். எனக்கு மற்றப்பழம் பிடிக்காமலே போய்விட்டது? என் ஜந்மஸபலமாகிவிட்டது. மோக்ஷபலமான (பயனான) ராமன் உள்ளத்திலே இருக்கிறார். மோக்ஷம் வேணுமானால் அதை எடுத்துக் கொள்வேன். எனக்கு மோக்ஷம் வேண்டாமே. ராமப்பழம் அங்கேயே இருக்கட்டும்.

**ஆமாரகி ப$_2$லேர அப$_4$ாவ?**
**பேயேச்சி$_2$ ஜே ப$_2$ல ஜநம ஸப$_2$ல**

**மோக்ஷப$_2$லே வ்ருக்ஷ ராம ஹ்ரு$_3$தயே**
**ஸ்ரீராம கல்பதருலே ப$_3$ஸே ராஈ**

**ஜக$_2$ந ஜே ப$_2$ல வாஞ்ச$_2$ா**
**ஸேஇ ப$_2$ல ப்ராப்த ஹூஈ ||**

இது ஸ்ரீராமக்ருஷ்ணபரமஹம்ஸரின் வாக்கு.

ஒரு சமயம் பரமஹம்ஸர் பக்தர்கள் கூட்டத்தில் அமர்ந்திருந்தார். வாய் ராம ராம ராம என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது. திடீரென்று கூறினார், ''ஹநுமான்

ராமதாஸன், அவனால் எது தான் நடக்காது?'' மறுபடியும் ராம ராம முணு முணுப்பு தொடர்ந்தது.

பரமஹம்ஸர் ஒரு நாள் ஒரு பக்தனிடம் கூறினார், ''நான் இன்று ஹநுமானிடம் கேட்டேன் -இன்று என்ன திதி?''

அவர் கூறினார், ''எனக்கு திதியும் தெரியாது, நட்சத்திரமும் தெரியாது. ராமநாம சொன்ன நாளல்லாம் ஸுதினம். நிமிஷமெல்லாம் ஸுநிமிஷம் அவ்வளவு தான்''

ஒருவர் என்னைக் கேட்டார். ''ராமன் எப்படிப் பட்டவர்? நான் சொன்னேன்'' எனக்கென்ன தெரியும்?

அவர் எல்லாம் வல்லவர் என்று வேதமே கூறுகிறது. ஆகவே நடப்பதெல்லாம் அவன் செயல் - என்று இன்பமோ, துன்பமோ வந்ததை அநுபவிக்கிறேன். ஒரு நாள் ராமன் ஹநுமானைக் கேட்டார். ஹநுமந்தா - நீ என்னை என்ன கருத்தோடு பார்க்கிறாய்?

ஹநுமான் சொன்னார் ''தங்களை பிரஹ்மம் என்று நினைப்பேன். அப்போது நான் உங்கள் அம்சம் ஆவேன். மறுசமயம் தங்களை பிரபு - என்று நினைப்பேன். நான் அப்போது அடிமையாவேன் - எப்போதாவது தத்வம் என்ன என்று சிந்திப்பேன். தாங்களே நான் - நானே நீங்கள் என்று தோன்றும்.''

உனக்கு இவற்றிலே பிடித்தது என்ன?

நீங்கள் கேட்க வேண்டுமா? நான் சொல்ல வேண்டுமா? நீங்கள் பிரபு, நான் தங்கள் அடிமை. இது தான். ஆகவே நான் உங்களை வேண்டுகிறேன். உங்களை நானே என்றோ - உங்கள் அம்சம் - என்றோ பாவிப்பதில் எனக்கு நிம்மதி இல்லை. இந்த தாஸபாவம் என் உள்ளத்திலிருந்து அகலாதவாறு எனக்கு வரம் அளியுங்கள்'' என்றார் ஹநுமான்.

இதுவே பரமஹம்ஸரின் உள்ளப்பாங்கு என்பது இந்த உரையாடலிலிருந்து தெரிகிறது.

பரமஹம்ஸரின், பரமாநந்தசிஷ்யர், விவேகாநந்தருக்கும், ஹநுமானிடம் அளவற்ற ஈடுபாடு. அவருடைய இளம்வயதில் அவருடைய தாயார் சொல்லிவிட்டார் ''ஹநுமான்சிரஞ்ஜீவி - இன்னும் இருக்கிறார்''

அன்று முதல் ஹநுமானை எப்படியாவது தர்சனம் செய்துவிட வேண்டுமென்று ஓயாத துடிப்பு அவருக்கு வந்துவிட்டது.

ஒரு நாள் ஒரு பௌராணிகர் மிகுந்த ஹாஸ்யரஸத்தோடு ஹநுமானைப் பற்றி விரிவுரை செய்து கொண்டிருந்தார். அவரை அணுகி கேட்டார்.

''மஹாசயரே! ஹநுமானுக்கு வாழைப்பழம் பிடிக்கும் என்றும், வாழைத் தோட்டத்தில் தான் அவர் எப்போதும் இருப்பார் என்று கூறினீர்களே - வாழைத் தோட்டத்திற்குப் போனால் இப்பொழுது அவரை பார்க்கலாமா?

விவேகாநந்தரின் முகத்தில் ஏற்பட்ட பரபரப்பைப் பார்த்து பௌராணிகர் அச்சமுற்றார். பதில் சொல்லச் சற்று தயங்கிவிட்டு கூறினார், ''அங்கே தான் இருப்பார். வேறு எங்காவது போனாலும் போவார்''.

''போனால் திரும்பி அங்கே வந்து விடுவார் அல்லவா!''

''ஆமாம் - என்று கூறிவிட்டு பௌராணிகர் நகர்ந்து விட்டார்''.

விவேகாநந்தர் - சிறு பையன் - வெகு தூரம் நடந்து ஒரு வாழைத் தோட்டத்தைக் கண்டு பிடித்து விட்டார். உள்ளே நுழைந்தார். எங்கும் சுற்றினார் காணவில்லை. ''வரட்டும்'' -

என்று ஒரு வாழைமரத்தின் அருகில் உட்கார்ந்துவிட்டார் - இரவு வந்து விட்டது. பையனுக்கு தூக்கம் வந்துவிட்டது. வீடுதிரும்பினான். தாயார் கவலையோடு வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள்.

''எங்கேடா போனாய்''

ஹநுமான் வாழைத் தோட்டத்திற்கு வருவார் . என்று பௌராணிக மஹாசயர் சொன்னார். வரவில்லை ஏன் அம்மா வரவில்லை?''

புத்திசாலியான புவனேச்வரீ தேவி -அவனுடைய தாயார் கூறினாள். ''அப்பா கலங்காதே - ராமன் ஏதாவது காரியம் சொல்லி வேறு எங்கேயாவது அனுப்பியிருப்பார். என்றாவது ஒரு நாள் வந்து விடுவார்''

பையன் முகம். மலர்ந்தது ஹநுமானையே நினைத்துக் கொண்டார். சமவயது பாலகர்களைக் கூட்டி வைத்துக்கொண்டு தாயார் சொன்ன மஹாவீரரின் கதைகளை வீராவேசத்தோடு கூறுவார்.

''தேசத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் செல்லுங்கள், மஹாவீரனுடைய லீலைகளை வர்ணியுங்கள். உள்ளத்தில் சாஹஸமில்லாமல் உடலில் திறனில்லாமல் - எதற்காக உடலைச் சுமக்க வேண்டும்?'' ஒவ்வொரு வீட்டிலும் மஹாவீரனின் படம் இருக்க வேண்டும். அவர் எதிரே உடற் பயிற்சி நடக்க வேண்டும்'' என்று உபதேசித்தார்.

பேலூர் ராமகிருஷ்ண மடத்தில் -மஹாவீரனுடைய பிரதிமையை பிரதிஷ்டை செய்யவேணும் என்று நினைத்தார். அது ஏனோ தடைப்பட்டது.

ஸ்வாமியின் சீடர்கள் கேட்டார்கள் ''நாங்கள் எதை ஆதர்சமாக வைத்துக்கொள்வது''

''ஸாதாரண நேரங்களில் - சோம்பலில்லாமல் உழைப்பதையும் பரோபகார சிந்தையையும் ஹநுமானிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள். நெருக்கடியில் தைரியத்தையும், ஸாஹஸத்தையும், சாதுர்யமாக சமாளிப்பதையும் கற்றுக் கொள்ளுங்கள். பகைவனைக் கூட வெறுக்காதீர்கள். அட்சகுமாரன் - என்ற வீரதீர அரக்க இளைஞன் படு உற்சாகமாகப் போருக்கு வந்தான். அவனைச் சீண்டிவிட்டு விளையாடினார் ஹநுமான். அவன் ரோஷத்தோடு தாக்கினான். அவனைச் சிரித்துக் கொண்டே அலைக்கழித்துத் தப்பினார். அவன் கொதித்து எழுந்தான் - பளார் என்று ஒரே அறையில் வீழ்த்தினார் ஹநுமான். அவன் தான் உங்கள் லட்சியபுருஷன்

பூஜை செய்து நிவேதனம் படைத்து தீபஹாரதி எடுத்து வணங்க வேண்டியதில்லை. நேர்மை பராக்ரமம் பரோபகார சிந்தனைகளை உள்ளத்தில் வளர்த்துக் கொள்வதே நாம் செய்யக்கூடிய ஆராதனை. அவனுக்கும் நமக்கும் உள்ள ஒரே தொடர்பு ராம நாமம் தான். அந்தக்கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். அவன் நம்மைக்கைவிடவே மாட்டான் இந்த ஏகநிஷ்டையைப் பெற்றுவிட்டால் உங்களை யாரும் வெல்ல முடியாது.

உங்கள் தோழமையை எல்லோரும் விரும்புவார்கள் - பிறருக்கும் உலகிற்கும் உதவியாகப் பல ஸாதனைகளை நீங்கள் புரியலாம்.''

கி,பி.1910ல் மேலூார் ராமக்ருஷ்ண மடத்திலிருந்து ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம் என்ற புஸ்தகம் பிரசுரிக்கப்பட்டது. அந்தப் புத்தகத்தில் விவேகாநந்தருக்கு பிறகு மடத்தில் புதிய தலைவாரக வந்த ஸ்வாமி **பிரஹ்மாநந்தர் கூறியிருக்கிறார்.**

''சில ஆண்டுகளுக்கு முன் நான் தக்ஷிண தேசயாத்திரை செய்த போது பல இடங்களில் இரவு

நேரங்களில் பலர் கூடி ஸம்பிரதாய பஜனை - என்ற நிகழ்ச்சியை நடத்தினார்கள். அங்கு போய் -நான் பெற்ற பேரானந்தம் சொல்லி மாளாதது. அந்த மாதிரி நம்முடைய பிரதேசத்திலும் நாம ஸங்கீர்த்தன்ங்கள் நடத்த வேண்டுமென்பதற்காகத் தான் இந்தப் புஸ்தகம் வெளியிடப்படுகிறது. நம் இதயங்களில் ராம நாம நாதம் ஒலிக்க வேண்டும்.''

இவ்வாறு விரஜபூமி பிருந்தாவனம் ஹிமாசல பிரதேசம், ஹரித் வாரம் ஹ்ருஷிகேசம் முதலிய பகுதிகளில் எல்லாம் - புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவது -க்ஷேத்ரவாஸம் செய்வது என்றெல்லாம் - விரதங்கள் மேற்கொண்டு நல்ல பொழுது போக்குவது - என்ற ரீதியில் கூடுபவர்களுக்கு எல்லாம் - நாமஸங்கீர்த்தனம், அவற்றிலே கபீர் பஜன், ஹரிதாஸ் பஜன், மீரா பஜன் இவையெல்லாவற்றிலுமே - ஹநுமானுக்கு என நீண்ட நேரம் ஒதுக்கிப் பலர் நாட்டுப் பாடல் - நம் நாட்டு தெம்மாங்கு போல - எளிய பாடல்களை மஹாவீரர் மாருதி. பவனகுமாரனின் கீதங்கள் பாடுவார்கள், ஆடுவார்கள் - எல்லை மீறின உற்சாகம் கரைபுரண்டு ஓடும். அவையெல்லாம் புஸ்தக வடிவிலும் வந்துள்ளன. எல்லாமே உயிர் ஊட்டமுள்ள கீதங்கள். அவற்றைத் திரட்டி எடுக்கத் தான் நமக்குச் செயலில்லை.இவ்வாறு கூறினார்.

## ராஜஸ்தான் நாட்டு மொழியில் ஹநுமான்

தண்ணீர்ப் பஞ்சமுள்ள ராஜஸ்தானத்தில் கிராமங்களில் பொதுக் கிணறுகள், கிணற்று விசால வட்டங்களில் சுற்றி நின்று பலர் ஒரே நேரத்தில் தண்ணீர் இறைத்துக் கொள்கிற வசதியுடன் அமைந்தவை உண்டு. அவற்றின் பக்கத்தில் ஹநுமானுக்கு ஒரு சிறு ஆலயம் உண்டு. பக்கத்தில் உள்ள மரத்தின் உச்சியில் சிகப்புக் கொடியில் ஹநுமான் வீற்றிருப்பார். பக்கத்தில் மண் மேடை.

கிணற்றிலிருந்து நீர் சேந்துகிறவர்கள் சேர்ந்து பாடுகின்ற ஒரு பாடல்.

ஜய ஹநுமானே - என்னுடைய கிணற்றுக்கயிறு உனது வால் போல் தண்ணீர் வற்ற வற்ற - நீண்டு கொண்டே போகட்டும்! நீங்கள் பாதாளத்திலிருந்தாவது நீரைக்கிணற்றில் ஏற்றி விடுங்கள். உமது குழந்தைகள் அல்லவா நாங்கள்''.

**ஜய ஹநுமாந பலாகாரீ வால ப$_3$ந்த்$_4$யால் யா பாணீ ।**
**பாணீல்யா பதாலகா ஜீவே தேரஜ பாலகா ॥**

ராஜஸ்தானத்தில் ஹநுமானுக்காக பலவிதமான விரதங்களை ஜனங்கள் மேற் கொள்வார்கள். இரவு கண் விழிப்பார்கள். வாசலில் குழந்தைகளுக்கு முடி இறக்குவார்கள். சுரமா - என்ற மாவு உருண்டை பிரஸாதம் பண்ணி நிவேதனம் செய்வார்கள்.

சித்ரா பூர்ணிமை விசேஷமான நாள். ஆங்காங்கே ஹநுமான் ஆலயங்களில் பெருவிழா நடைபெறும். ஸாலாஸா கிராமத்து ஹநுமானுக்குத் தான் அதிகக் கூட்டம். செவ்வாய், சனிக்கிழமை ஹநுமானுக்கு ஏற்ற நாள். ராஜஸ்தானி பெண்கள் வட்டமாகக் குதித்துப் பாடுகின்ற ஒரு நாட்டுப் பாடல்.

**ஹணமத கோடை$_2$ தோ பாஜா பாலாஜீ த$_2$ரை பாஜியா**

**ஹணமத கோடை$_2$ தோ கே$_4$ார்யா சை$_2$ நீஸான**
**ப$_3$ாபை$_3$ ப$_3$ஜரங்க$_3$ஜீ ரோ பு$_3$ங்க$_3$ளோ ஹத ப$_3$ண்யோ ॥**

**ஹணமத ஸாலாஸர் பா$_3$ ஜா ப$_3$ாலாஜி**
**ஹணமத பி$_3$ஸாஊம் மேம் தாரை பாஜியா**
**ப$_3$ாஜை$_3$ப ஹணமத கே$_4$ார்யா சை$_2$ நீஸாண ।**

**ப$_3$ாக பி$_3$து$_4$ம்ஸ்யோ ஜீ லம்கா தலமலீ**
**ஹணமத ஸார்யா ராஜா ராமசந்தர் கா காஜா ।**
**ப$_3$ாபை$_3$ பஜரங்கீறீ ரோ பு$_3$ங்கலோ ஹ$_3$த ப$_3$ண்யோ**

ஹநுமானுக்காக விரதமிருந்து வழிபட்டு விரதத்தை பூர்த்தி செய்து கொண்டவர்கள் பெற்ற நன்மை பஜரங் பலியின் பராக்ரம மஹிமை பாடப்பட்டது.

ராஜஸ்தான் ஆண்களும் ஹநுமானைப்பற்றி பாடுவார்கள். இரண்டிற்கும் இடையே வித்யாஸம் உண்டு. பெண்கள் பாடுகின்ற பாடல்கள் எல்லாம் ஆண்களின் சபல புத்தியை கிண்டலாகப் பாடி - ஹநுமானுடைய பிரம்ம சர்யத்தைப் போற்றுவதாக இருக்கும். ஆகவே ஆண்கள் அவற்றைப் பாட மாட்டார்கள்.

ஆண்கள் பாடுகின்ற பாடல்கள் எல்லாம் ஹநுமானுடைய வீரதீர, பராக்ரமங்களைப் போற்றுவதாக இருக்குமே தவிர ராம பக்தியைப் பற்றி அதிகம் பேசாதவையாகவே இருக்கும். ஆகவே பெண்கள் அவற்றைப் பாட மாட்டார்கள்.

ஸ்த்ரீகள் பாடல்களுக்கு ஒரு மாதிரி.

ஒரு கிராமத்தில் ஒரு பெண் பாடுகிறாள். நான் உனக்கு இளவயதில் குஞ்ஜாலாடு கொடுப்பேன். வயதான காலத்தில், கொஞ்சம் ரொட்டிபோடுவேன்,

**மைம் தேவூம் தரணாயே தூ ே$_3$தா பு$_3$ட$_4$ாபேமேம்**

அவளுக்கு வயதாகிவிட்டது. அவளுக்கு பாலாஜியின் (ஹநுமானின்) ஆலயத்திற்குக் கூட போகமுடியவில்லை. அவளுடைய பேரன், பேத்திகள், எல்லோரும் ''சாப்பிடவாருங்கள்'' என்று அழைத்தால் - ஹநுமானுக்கு நிவேதனமாகாமல் சாப்பிடமாட்டார். பாலாஜிக்கு நிவேதனம் செய்வதில் சிரத்தை இல்லை. கிழவி பட்டினி கிடந்தாள். பாலாஜி - ஒரு பையன் போல ஓடிவந்தான். பாட்டி! பாட்டி! இந்தா குஞ்ஜாலாடு, இதோ பார் தயிர் வடை - பாலாஜி ப்ரஸாதம்.

கிழவி கேட்டாள் ''உனக்கு ஏதடா இது வெல்லாம்?''

*தூம் தி$_3$யோ தரணாயேம். மைம் தே$_3$வூம் பு$_3$ட$_4$ா பேருமம்*

*நீ கொடுத்தாயே இளமையில், தள்ளாத வயதில் உனக்கு நான் தருகிறேன்.*

*இப்படிச் சில நாட்கள் நடந்தன. பக்கத்து வீட்டுக்காரர்கள் இதைப்பார்த்து, பாட்டியின் பேரப்பிள்ளைகளைக் கடிந்து கொண்டார்கள். ''வயதான காலத்தில் பாட்டிக்கு இவையெல்லாம் ஒத்துக் கொள்ளுமா?''*

*அந்தப் பையன் மறு நாளிலிருந்து வருவதில்லை. பாட்டி மறுபடியும் பட்டினி கிடந்தாள். பேரன், பேத்திகள் கவனிக்க ஆரம்பித்தனர் - ஹிதமாக உணவு கொடுத்தனர். பையன் வந்தான்.*

*''பாட்டி நீ என்ன சாப்பிடறே''*

*''கூழ் - சாப்பிடுகிறேன் அப்பா''*

*''நன்னா இருக்கா?''*

*''ரொம்ப நன்னா இருக்கு.''*

*பாட்டி பேத்தியை அழைத்து ''இந்தப் பையனுக்கு கொஞ்சம் - கூழ் கொடு'' என்றாள். அவள் ஒரு கிண்ணத்தில் கொண்டு வைத்தாள்.*

*பையன் அதை எடுத்து முகர்ந்து பார்த்தான். ''பலே ஜோர்'' என்றான் - ''பாட்டி இதையும் சாப்பிடு'' பாட்டியிடம் கொடுத்தான். அது புளித்து இருந்தது. பாட்டி நாக்கில் இறங்கவில்லை.*

*''பாட்டி அதை இங்கே கொடு - நான் சாப்பிட்டுப் பார்க்கிறேன்.''*

*பேத்தி கண்ணீர் விட்டாள்'' இப்போ கொடுத்தது பழைய கஞ்சி. அது தான் இருந்தது. ''தேவாம்ருதமாக*

இருக்கிறது'' என்று பையன் சாப்பிட்டான் - வீட்டில் தரித்திரம் தொலைந்தது. செல்வம் கொழித்தது. இன்றைக்கும் பாலாஜிக்கு அந்த ஊர் கோவிலில் கூழ் நிவேதனம் உண்டு.

பாலாஜிக்கு சிகப்பு கோவணம் - நெற்றியில் கோபீ நாமம் - வாயிலேராம நாமம் பாலாஜி எங்கள் தெய்வம்.

***லால லங்கே₃ாடீ ஹா₃த பண்யோ***
***திலக ப₃ண்யோ அஸமாந***
***நாம பஹலீ ஸுமரியே***
***அஞ்ஜநிகா ஹணமாந ||***

## மாலவார் நாட்டு மொழியில் ஹநுமான்

மாலவார் மலைப்பரதேசத்தில் குடிசைகள் எட்டி எட்டி இருக்கும். மேடு பள்ளங்களில் மலை முகடுகளில் குடிசைகள் -மழை நீர் தேங்கிய பாறைச் சுனைகளில் தண்ணீர் அபூர்வமான - தாதுப் பொருள்கள் பூமியை வெட்டினால் கிடைக்கும். அவற்றைத் தேட நகரங்களிலிருந்து வியாபாரிகள் - ஒரு ரூபாயைக் கொடுத்து நூறு ரூபாய் ஸாமானை வாங்கிப் போவார்கள். ஆனால் குழந்தைகளுக்கும் கிழவர்களுக்கும் துணிமணிகள் இலவசமாக கொடுப்பார்கள். குடிமக்கள் - நன்றி அறிதலோடு கிராக்கி காட்டாமல் - தம்மிடம் உள்ள பொருளைக் கொடுப்பார்கள்.

அவர்களுக்கு மலையும் சுனையும் தெய்வம். பாறையில் முண்டும், முடிச்சுமாக, ஒரு வடிவம் தெரியும். அவளே மஹாகாளி. அவளுக்குப் படையலும், பாட்டும் அமர்க்களப்படும். அதுபோல பாலாஜி, அவரைப்பற்றி பாடல்களிலே ஹநுமானுடைய பரந்த மார்பும், நீண்ட புஜமும், பருத்த தோளும், உருண்டு திரண்டகால்களும் பற்றிச் சொல்லியிருக்கும். அவற்றைப்பாடி ஒரு நெடியப் பாறைத்தூணை பாலாஜியாக

வழிபடுவார்கள். தூணின் உச்சியில் குங்குமப்பொட்டு - நடுப்பக்கத்தில் ஒரு முரட்டு ஆடை. மலைகளில் உருண்டு வரும் சிறு கற்களை மாலை கட்டிப் போடுவார்கள். சில சமயம் அவற்றிலே விலைமதிப்பில்லா ரத்தினமே ஜொலிக்கும். அதன் மதிப்பு அவர்களுக்கு தெரியாது. ஆனால் அவர்களுடைய பாவனைகள் எல்லாம் பாடல்களில் அதிகமான கற்பனைகளோடு பளீரென விளங்கும். இப்படி அவர்கள் பாடுவதற்கு துளஸீதாஸர் தான் வழிகாட்டினார். பாலாஜியோடு சேர்த்து துளஸிதாஸரையும் கொண்டாடுவார்கள்.

ஜே பாலாஜி மாராஜ
அநோகீ$_2$ த$_2$ ர(ம)கீ ச$_4$ ரா(ம)கீ ||

த$_2$ ாரே மாதே$_2$த முகுட விராஜே -
தீராஜே காநாமேம் குண்ட$_3$ல
ராஜே ப$_3$ாபா க$_3$ ளே பை$_3$ஜந் மால
அநோகீ$_2$ த$_2$ ா(ம்)கீ ச$_4$ாம்கீ ||

த$_2$ ாரே கேஸர   திலக பிராஜே
நைநா(மேம்) ஸூர பீ$_4$ சா$_2$
ப$_3$ாபா$_3$ முக$_2$ மே நாத$_3$ர பாந
அநோக்$_2$ த$_2$ ா(ம்)கீ     ச$_4$ ா(ம்)கீ ||

த$_2$ ாரே கம்க$_3$ஜ சோளோ  ஸோவே(ம்)
சோா பே ச$_4$ லகபிராஜே |

பாபா ரோம ரோம மேம்ராம
அநோகீ$_2$ த$_2$ ா(ம்)கீ ச$_4$ ா(ம்)கீ

த$_2$ ாரே பயியாம் ப$_3$ாஜூ ப$_3$ந்த$_4$
ஸோஹே ஹரத$_2$ மேம்   க$_4$டி$_3$யா(ம்)

***பாபா கே$_4$ாம்டா கீப$_3$லீஹாரீ***
***அநோகீ$_2$ த$_2$ாமகீ ச$_4$ாம்கீ***
***த$_2$ாரே பா(ம்)வ பஞ்ஜநீயா(ம்)***
***ஸோஹே, ஹ்யடே$_2$தாம் லடுயா ஸோஹே***

*ராமனுடைய இக்கட்டான வேளையில் ஹநுமானுடைய கைங்கர்யங்கள் - தானே ஏற்றுக்கொண்டவை. அவரை எவரும் இதைச் செய் என்று தூண்டவில்லை. யாராலும் ஸாதிக்கமுடியாத தாயிற்றே -என்ற அவர்களுடைய அச்சம். ஆயினும் ஹநுமான் அந்த காரியங்களில் துணிவுடன் இறங்கினார்.*

*எப்படி இறங்கினாய்? என்று அவரைக் கேட்டால் அவர் என்ன பதில் சொல்வார்?*

*ராம நாமம் தூண்டியது. ராம நாமம் விரட்டிற்று - என்னால் சும்மா இருக்கமுடியவில்லை. ராம நாமம் என்னைச் செய்ய வைத்தது என்கிறார்.*

*இப்படியெல்லாம் கருத்துக்களை - லகுவான வசனங்களில் திருப்பித்திருப்பி பாடியிருக்கிறார்கள். மஹாகவிகள் எல்லாம் சிறந்த வாக்கு வன்மையோடு கவிதா விலாஸத்தோடு சொன்னவற்றை - கொச்சை மொழியில் இவர்கள் உணர்ச்சி ததும்பும்படி பாடியிருக்கிறார்கள்.*

*பட்டாபிஷேகத்திற்குப் பிறகு தாயாரைஸேவிக்க மகன் அஞ்ஜநாத்ரிக்கு வந்தார். லங்கையில் ஸீதா தர்சனம் ஆனதையும், அதை பிரபுவிடம் சொல்லி, அவர் படைகளோடு வந்து ராவணனை வதைத்து ஸீதாதேவியை மீட்டதையும் விபரமாகச் சொன்னார்.*

*அஞ்ஜநா தேவி அத்தனையும் கேட்டுவிட்டு - ஹநுமானைச் சீண்டினாளாம். ''ஏண்டா பிள்ளே! ஸீதா தேவியைப் பார்த்தவுடனே அந்த அசோக மரத்தோடு கூடத்*

தரையைப் பெயர்த்துக் கொண்டு போய்- ஸீதா தேவியை ராமனிடம் ஒப்புவிக்க வேண்டியது தானே! - என் பாலை உறிஞ்சி உறிஞ்சிக் குடித்த உனக்கு இது கூடத் தெரியவில்லையா? என்றாளாம.

''அம்மா - பிரபு தேவியைப் பார்த்துவிட்டு வா என்று தான் சொன்னார். கொண்டுவா என்று சொல்லவில்லையே''.

''அப்படியானால் நீ செய்தது சரிதான். என் பாலைக்குடித்த உனக்கு சரியான நேரத்தில் சரியாக புத்திதான் வந்தது - என்று கூறி தனயனை இழுத்து அணைத்து உச்சி மோந்தாளாம். இப்படியெல்லாம் அந்தப் பாடல்கள் விரிகின்றன.

ஒரு பெண்மணி - ஹநுமானுக்கு பூஜை செய்யக் கிளம்புகிறாள். அவள் என்னவெல்லாம் கொண்டு போனாள்? பாலும், தயிரும், ராமனுக்கு அபிஷேகத்திற்கு எண்ணையும், பொடியும், ஹநுமானுக்கு குங்குமப்பூவும், கஸ்தூரியும், ராமனுக்கு கோபீயும், ஸிந்தூரமும், ஹநுமானுக்கு பொங்கலும், பாயசமும், ராமனுக்கு ரொட்டியும், வெண்ணெய்யும், கொண்டு போவாள் ஹநுமானுக்கு. ஸீதாதேவி ராமனுக்கு உபகாரம் செய்யட்டும். பாலபிரம்மசாரி ஹநுமான். தானே தனக்கு உபசாரம் செய்து கொள்ளட்டும். தூபம் தீபம், நைவேத்யம் எல்லாம் ஹநுமானுக்கு வேண்டாம். அவற்றை ஏற்றுக் கொள்ள அவருக்குப்பொறுமை கிடையாது. ராம நாம பஜனம் பண்ணினால் நம்மோடு கூட குதிப்பார், நடனம் ஆடுவார், பஞ்சகச்சமும், யோகவேஷ்டியும் ரத்தின மாலைகளும் அவருக்கு ஏன்? இடுப்பிலே முழங்கால் வரை ஒரு துண்டு, அதை இறுக்க இடுப்பிலே ஒரு துண்டு. கழுத்திலே துளஸிமாலே. கைகளிலே ஜாலரா சிப்ளா. வாக்கிலே ராம நாம கீர்த்தனம் - நிறைந்தது. ஹநுமானின் ஆராதனை இப்படி ஒரு பாடல். எளிமையும், நேர்மையும் தான் இப்பாடலுக்கு ஆதாரச்ருதி.

# புந்தேல் கண்ட் என்ற வடநாட்டு பகுதியில் ஹநுமான்

நாட்டுப் பாடல்களில் - ஹநுமான்.

இந்தப்பகுதியில் மக்கள், வீட்டில் எந்த சுபகாரியம் நடக்க வேணுமானாலும் - முதலில் லகுரியா -(ஹநுமான்) பூஜை செய்து விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பார்கள். ஹநுமானோடு துர்காதேவியையும் சேர்த்து பூஜிப்பது அவர்களுடைய மரபு. ஒரு பாடல்.

ஸுமிர சார$_3$தா மைஹல் வாரீ
அரு கே$_2$நேகே ஹநுமான்
கீர்த்தன மே ஆஜா பஜரங்கீ
ே$_4$டாலகபைபஜாவோ பஜரங்கீ

ஜாநகீ ஸரந ஜாஸேம் பு$_3$லாவேம்
துஹோ புராநே ஸதஸங்கி

ஜாநகீ சரணன் - என்ற கவி பாடுகிறார்.

சாரதா தேவியை த்யானம் செய்து ஹநுமானை அண்டுகிறேன். நாம கீர்த்தனத்தில் பஜரங்கஜீயே! பிரஸந்ந மாகுங்கள்.

கனச்யாமதாஸ் ராமாயணீ என்பவர் பாடுகிறார்.

ஆஜ கோஸரீபௌந
ஸுஹாநேம் ஸோஹரே மஹாராஜ
ஆஜபா ஸோனேம் கீராத
ஜயஜய ஹோஇ மஹாராஜ

ப$_4$ாரதகே ஸிரதாஜ்
ப்ரக$_3$ட ப$_4$யே மாருதீ மஹாராஜ
லம்காகர த$_3$ஈ ச$_2$ார
து$_3$ஷ்ட த$_3$ல மார கே மஹாராஜ

***ஸிய ஸூத$_4$ தே$_3$தப்ரிய***
***பி$_3$னேஅவதஸாகார கே மஹாராஜ***

***ப$_3$நேம் பூ$_2$ல பஜரங்க***
***ராமஹிய ஹாரகே மஹாராஜ***

***த$_3$ாய ப$_4$யோ க$_4$நச்யாம***
***ஸோஹரோ காயகே மஹாராஜ***

*கேஸரீ குமாரனே முன்னேவா மஹாராஜனே*

*இரவு கண்விழித்து விரதம் காத்தேன் மஹாராஜனே*

*பாரதத்தின் நம்பிக்கை நட்சத்திரமான மஹாராஜனுக்கு ஜய ஜய! துஷ்ட அரக்கரைக் கொன்று லங்கைக்கு தீவைத்தீரே. ஸீதை பற்றி நல்ல சேதி சொல்லி அயோத்தியாதிபதிக்கு பிரியன் ஆனீரே! ராமனுக்கு ஹிதம் தேடிய மஹாராஜ! இந்த கநச்யாமனுக்கும் அருள் புரிவீரே. நான் விரதமாக இருப்பதாக ஆரம்பித்து பல தவறுகளைச் செய்திருப்பேன். அவற்றை மன்னித்து என் இயலாமையை மனதில் கொண்டு என் விண்ணப்பத்தைக்கேள்.*

*லட்சுமணன் ராவணனின் சக்தி ஆயுதத்தின் அடிபட்டுக்கிடந்த போது - ஹநுமானிடம் கூறுகிறார் ராமன்.*

*பாலாஜி! இரவு கழிந்து விட்டால் ஜனங்கள் நாளை என்னை எவ்விதம் தூற்றுவார்களோ! அயோத்திக்கே ஆபத்து வந்துவிடும். ஸீதை என் முகத்தில் விழிக்கமாட்டாள். லட்சுமணன் பொழுது விடிவதற்குள் கண்திறக்க வேணும்! இரவு மிஞ்சியிருக்கும் போதே - உன் வீரபிரதாபத்தைக் காட்டிவிடேன்.*

***ஜோ கஊம் பீ$_3$த ஜாம ஜேஹை(ம்)***
***கா மோஸே(ம்) கோ உ கைஹை***

***மரே த$_4$ரே லக்ஷமந ஹம தே$_3$ கே$_2$(ம்)***
***ஜியத ராமகா ரைஹை***

***ஸுந்தந பி$_3$பத அவதை$_4$ப பரஹை***
***ஜநகஸுதா தஜ தை$_3$ம் ஹை***

***ஈஸுர ஹநுமான் தே$_3$ ஹூம் கே***
***தே$_2$ரீ ராம அனபஹை***

*ஹநுமானுக்கு புந்தேல் கண்டில் லகூர் என்ற பெயர். மாலவ நாட்டுப்பாடலில் கண்ட அஞ்சனாதேவியின் முலைப்பால் மஹிமை இங்கேயும் பாடல்களில் வருகிறது.*

*புந்தேவி பெண்கள் - ஹநுமானைத் தமது குமாரனாகவே பாவித்து லாலனை பாடுகிறார்கள்.*

*துர்கா நவராத்ரிகளிலும் ஹநுமஜ்ஜயந்தி விழாவின் போதும், இரண்டு பேருக்கும் சேர்த்தே தான் விழாக் கொண்டாடுவார்கள். ஹநுமானை த்யானத்தில் அமர்ந்தவராகவும், ஸஞ்ஜீவி மலை ஏந்தி பறப்பவராகவும், தரையில் ஓடி வருபவராகவும், ராமனுடைய திருவடி ஸேவகனாகவும், ராவணத் தர்பாரில் வால் கோட்டையின் மீது அமர்ந்தவனாக**வும்** ஸீதாதேவியுடன் பணிவுடன் பேசுபவராகவும், பல பாடல்கள் பாடுவார்கள். இப்படி நூற்றுக்கணக்கான பாடல்கள் பாடிக் கேட்டிருப்பார்கள். ஆனால் அச்சில் வந்தவை மிகச்சில. அவற்றிலும் சிலவற்றை மேலே குறிப்பிட்டோம்.*

***மாந கவி என்றொருவர்***

***ஒக்ரா கவி என்ற மற்றொருவர்,***

*இருவருக்குமிடையே பலத்த போட்டி. இருவரும் காகநீ என்ற ஊரில் உள்ள ஹநுமான் ஸந்நிதியில் கவிதைப் போர் நடத்தினர். வித்வான்கள் கூடி இருந்தனர். ஹநுமானுடைய முகத்தில் சந்தனக்காப்பு சாத்தியிருந்தது எவருடைய பாடலை*

ஹநுமான் பாராட்டுகிறாரோ அப்போது அந்தச் சந்தனக்காப்பு கலையும். அவருக்கே வெற்றி,என்ற ஒப்பந்தம் ஏற்பட்டது. முதலில் பாடினார் மாநகவி. ஐம்பது பாடல்கள்

மஹாவீர ஸாஸா பூஜவரா ஓபதாஸா கரே

தாஸ ஆஸா பூரகபசாஸா ஹநுமந்தகோ

மஹாவீரனுக்கு பூஜை செய்து இந்த ஹநுமத் பச்ஸொ (ஹநுமான் ஐம்பது) வைப்பாடினால் ஆசைகள் பூர்த்தி ஆகும். ஹநுமானின் முகம் மாநகவியின் பக்கம் சற்றே திரும்பிய அடையாளம் சந்தனக்காப்பு கலைந்ததால் தெரிந்தது.

மஹாகாய மஹாப$_3$ல மஹா ப$_3$ாஹு மஹாநக$_2$
மஹாநாத மஹாமுக மஹா மஜ$_3$பூ$_3$தஹை

பனை கவி ‘‘மாந’’ மஹாவீர ஹநுமாந மஹா
தேவந கோ தேவ மஹாராஜராம தூ$_3$தஹை
பைதகே பாதாள கீந்ஹோம் ப்ரபு$_4$ கோஸஹாய மஹி
ராவந த$_3$ராயவே கௌ ப்ரெடை$_4$ர ஸபூதஹை

ட$_3$ாகிநீ கோ கால, சாகி நீகோ ஜீவஹாரீ ஸ$_3$தா
காகிநீ கே கிரிபை விராஜே பௌந பூத ஹை ॥

உடல், பலம், கைகள், நகங்கள், குரல், முகம், எல்லாமே பெரியவை. மிக அழகானவை. தேவாதி தேவன் ஸ்ரீராமனுடைய தூதன். அஹிராவணனுக்கு விரோதியாம். தன் தெய்வத்திற்கு ஸஹாயம் செய்கின்ற வாய்ப்புள்ள தன் மகனுக்கு தேவதையான டாகிநீ தேவியின் அருளது வேண்டினார். காநீ தேவியின் உதவியை நாடிலர். வஞ்சனையினால் மதி இழந்த அஹிமஹிராவணரை வஞ்சித்தே - ராமலக்ஷ்மணர்களை மீட்டார். வாயு குமரன் காகி நீ கிரியில் தவம் செய்தார்.

வஜ்ரகீ சி$_4$லந பாநு மண்டலீ கி$_3$லந
ரகுராஜ கபிராஜ கோமிலந, மஜபூத கோ

*ஸிந்$_4$து மத ச$_4$ார்யோ உஜாரபே$_3$ா பி$_3$பிநலங்க*
*ப$_3$ாரதே$_3$பா உப$_3$ாரதே$_3$பா விபீஷண கே ஸூத கோ ॥*

*பனைகபி ''மாந'' ப்ரஹ்ம சக்தி க்ரஸந ஜாந*
*ராமப்$_4$ராத ப்ராண தாந த்$_3$ரோணகி$_3$ரியே அக்ஷததே$_2$கா*
*ரஜ்ஜந த$_4$நஞ்ஜய லோகக$_3$கஞ்ஜந ஸியாகோ லகோ।*
*ப$_4$ாலக$_2$ல பஞ்ஜந ப்ரப$_4$ஞ்சந கே பூத கோ ॥*

*மானகவி கூறுகிறார். இந்திரனின் வஜ்ராயுதத்தின் தாக்கலை உதறியவனே! ஸூர்யமண்டலத்தை விழுங்கியவனே! ஸ்ரீராமசுக்ரீவ நட்பை மூட்டியவனே! கடல் மார்க்கத்தின் தடை நீக்கினவனே! லங்கையின் அசோகவனத்தின் வேர் பிடுங்கியவனே! விபீஷணனுடையவும் இந்திரனுடைய தேரோட்டியைக் காத்தவனே! பிரஹ்ம சக்தியை தனக்குள் ஏற்றுக் கொண்டவனே. ராமனின் தம்பிக்கு பிராண தானம் செய்தவனே! துரோணமலையைச் சுமந்தவனே. அர்ஜுநனுக்கும் ஸீதாதேவிக்கும் துயர் தீர்த்தவனே! துஷ்ட அரக்கரின் திமிர் அடக்கியவனே வாயுகுமார.*

*ஸிளத்ர ரஸ ரேலே, ரநகேலே, முக$_2$ே$_4$பஜேப$_4$ார*
*அஸுரசஸேலே ஜோ உடீ$_3$லே ஸுர க$_3$ாடதே।*

*சபலநிஸாசர ச$_1$முந ச$_1$க சூ$_1$ரே மஹி*
*பூரே லம்க ப$_4$ாஜந ஜரு ஜாட$_3$பாட$_4$ தேம் ॥*

*ஜாநத கோ ட$_3$ாே$_4$டம் சோக ஸாக$_3$ரதே காடேஸாந*
*ஸாடே$_4$குந ப$_3$ாடே$_4$ க$_2$ல பாட$_4$தேம்*

*பரேப்ராந பாடே$_3$ த$_3$லது$_3$ஷ்டநகோ ப$_3$ாடே$_4$ த$_4$ ந்ய*
*பௌந புத்ர ட$_3$ாடே$_4$ ஜே உக$_2$ாடே$_3$ யம க$_3$ாட$_4$ தே ॥*

*இந்தப்பாடலில் ஹநுமானின் பயங்கர ருத்ர தோரணையை வர்ணிக்கிறார். போர்க்களத்தில் அரக்கர்களை கதி கலங்க வைக்கின்ற ஹநுமானின் கோர ஆவேசம். போாரை ஒரு விளையாட்டுப்போல லாகவமாக எதிர் கொள்வது. அவர்*

கையை விரித்து அறைவிட்டாரானால் எதிராளி காது மூக்கு, கண்களெல்லாம் மோவாய் கன்னமெல்லாம் நசுங்கும். பவன புத்திரனின் வால் வீச்சு எட்டிய தூரம் அரக்கர்கள் சுருண்டு விழச்செய்யும். யமபாசம் வெட்கிச்சுணங்கும்.

***அருண ஜ்யெனம் பீ$_4$ம***
***ஸோம து$_3$க$_3$லெள(ம்) அஸமலோம***
***கோமலஜ் யோ(ம்) சே$_2$ம***
***நரே கரஸிய கந்தகே!***

***மஹாப்ரள யோம்மே முநி***
***லோமஸகே லோமந லிம்***
***வைரிந விலோம அந***
***லோம ஸூரஸந்தகே ||***

***ப$_3$ஜ்ரமுத்ர மோம ச$_2$வி***
***''மாந'' ஸம்த ஸோம ஜே***
***அஸோம க்ரஹ ஸோம***
***கர அரேிகே அந்த கே ||***

***க$_2$லந கே கே$_2$ாம ஜோம***
***ஹோதஹைஅஜோம ஜோம***
***ஜ்வாலிநகே தோம ப$_3$ந்தி$_3$***
***ரோம ஹநுமந்த கே ||***

இந்தப்பாடலில் மகார முடிவுள்ள சொற்களை சோழி போல உதிர்த்து விளையாடுகிறார் கவி மாநகவி. ஹநுமானின் ரோமம் போர்த்த மேனியின் திறனை வர்ணிக்கிறார். அவை செவ்வாய் கிரஹத்தின சிவப்பு நிறத்தால் ஜொலிக்கின்றன. சந்திரன் போல குளிர்ச்சி. ஸ்ரீராமனின் கைத் தாமரைகள் போல தாபத்தைப் போக்குகின்றன. லோமச முனிவரைப் போல அவை மஹாப்ரள்யத்தில் கூட அழிந்துவிடுவதில்லை. சத்ருக்களின் மீது ஹநுமானின் திருமேனி பட்ட இடமெல்லாம் நமநம வென்று அரிக்கும். அடியார்களின்

மேனியில் பட்டால் மெத்தென்று இருக்கும். கம்பளி உஷ்ணத்தைப் பெருக்குவது போல துஷ்டர்களைத் தீண்டி வேக வைக்கும். ரோமங்களின் மீது வஜ்ரமோ உலக்கையோ பட்டால் மெழுகு போல உருகிவிடும்.

***ஜ்வால ஸோம் ஜலேந ஜலஜோர***
***ஸோம்ஜமுலநா அஸ்திர***

***அரிகோ த$_2$லே நஜோ***
***ச$_1$லே நாஜிமீ ஜங்ககீ ।***

***கால$_3$தண்$_3$ட ஓடஸத***
***கோடகீ நலாகே சே$_1$ாட***
***ஸாத கோடி மஹாமந்த்ர***
***மந்த்ரித அபங்ககீ ॥***

***கஹே கவி "மாந"***
***மாத்ரகே ப்ரஸங்ககீ***
***ஜீதமோஹ மாயா மார***
***கீந்ஹோ ச$_2$ார ச$_2$ாயா ராம***
***ஜாயாகர த$_3$ாயா த$_4$ந்ய***
***காயா பஜரங்ககீ ॥***

ஸூர்யனை பழுத்தபழம் என்று கவ்வின குழந்தை ஹநுமானை இந்திரன்தாடையில் வஜ்ராயுதத்தினால் அடித்து கூம்பப்படுத்தினான். வாயுதேவன் கோபித்து தன் ஸஞ்சாரத்தை ஒடுக்கி பிராணிகளை மூச்சு முட்டத்திணர வைத்தான். அக்நி வருணன் விச்வகர்மா யமன் இந்திரன் பரமேச்வரன் போன்ற தேவர்கள் கூடி வரமளித்தனர். ராமநாமஜபத்தினால் காமத்தையும், மோகத்தையும் அழித்த ஹநுமான் ஸ்ரீராம கரகமலங்களில் அகப்பட்டுள்ளான். ஹநுமான் தன்யன் என்று கொண்டாடுகிறார்.

## நாகபுரீ மொழியில் ஹநுமான்

நாகபுரி ப்ராந்தத்தில் கிராமவாஸிகளிடையே ஜூமர் என்றும், பகுஆ என்றும், இரண்டு மொழிகள் பரவலாகப் பேசப்படுகின்றன. ஸம்ஸ்கிருதம், அதிகமாகவும் மராடியும், ஹிந்தியும், கலந்த மொழி.

ஜூமரப் பாடல் ஒன்று

**ஜயஜயஹநுமாந அதுலித ப$_3$லவாந ஜயதி**
**ஜயமஹாவீர கை ஸாஜைந அஞ்ஜநீலால**

**ப4ஜூஸத$_4$ா மகநே அமரே ||**

**கேஸ குஞ்சித ப$_4$ாலாதில கஸோஹவிமல**
**குண்டலகாநந ஜநேவு (பூணூல்)**

**மாலாகணட$_2$ தரேகே ஸாஜைந**
**பஜூஸதா மகநே அமரே**

பகுவா பாடல் ஒன்று.

**“நௌமி ஸ$_3$தா ப$_3$த அஞ்ஜநீ லாலகே**
**நௌமி ஸதா ப$_3$த அஞ்ஜநிலால ||**
**கேஸரீ நந்தந சங்கரகே தந**
**ராமஸியாப்யாரே சிரஜீவந**
**அமித பராக்ரம தேஜ தயாலகே**
**நௌமிஸதா பத அஞ்ஜநீ லால**

கல்வி பெற்ற மட்டத்து மக்களால் இயற்றப்பட்டவை.

கிராம வாஸிகள் மட்டுமல்லாமல் நகரத்து நாகரீக மக்களும் - ஹநுமான் - என்றவுடன் பயபக்தியோடு கைகூப்பி வணங்குகின்ற பண்பாடு உள்ளவர்கள். ஆழ் மனதில் ஒடுங்கியுள்ள இவர்களின் பக்தி உலகியல் ஈடுபாடுகளை மீறி வெளிப்படுவதும் உண்டு.

ஆகவே பாடல் நாட்டுப் பழகு மொழியில் அல்லாமல் கல்வி பெற்ற மேல் மட்டத்து மக்களால் இயற்றப்பட்டவை.

## ஆதிவாஸி ஜனங்களிடையே ஹநுமான்

வடநாட்டில் மலைவாசிகளான ஜனங்கள் இன்றும் கூட பாரத பீட பூமியின் ஜனங்களுடன் கலந்து கொள்ளாமல் வாழ்கிறார்கள். அவர்களுடைய மேம்பாட்டுக்காக தற்கால அரசாங்கம் பல திட்டங்களை வகுத்து செயல்படுத்துவதாக செய்திகள் கூறுகின்றன.

ஆனால் மலை பிராந்தியங்களில் கூட ஜனங்கள் இந்து சமயப் பண்பாடுகளில் ஆதிகாலம் தொட்டே ஊறினவர்களாக தம்மிடையே சில கட்டுப்பாடுகளை வைத்துச் கொண்டிருந்தனர்.

கோஸ்வாமி துளஸீதாஸர் தமது ஸ்ரீராம சரிதமாநஸத்தில் - ஸ்ரீராமன் சித்ரகூடவாஸம் செய்து கொண்டிருந்த போது ஸ்ரீஸீதாராமலட்சுமணர்களை அணுகி அவர்களைப் பற்றிய தகவல்களைக் கேள்விப்பட்டனர் மலை வாசிகள்.

''ஐயோ பாவம் இந்த நல்ல மனிதர்களை - நகர வாசிகள் ஏனோ காட்டுக்கு அனுப்பிவிட்டார்களே'' - என்று பரிதாபம் கொண்டு வனவாஸத்தில் காட்டுப்பகுதிகளில் பல வஸதிகளைச் செய்து கொடுத்து - காய் கனிக்கிழங்குகளைக் கூடை கூடையாகச் கொண்டு ஸமர்ப்பித்தனர். கல்வியறிவே இல்லாத அந்த ஜனங்கள் காடுகளில் கொடிய மிருகங்களுடன் வாழும் கலையை இயல்பாகவே பெற்றிருந்தார்கள் - என்றெல்லாம் கோஸ்வாமி எழுதியிருக்கிறார்.

தற்போது சோடா நாக்பூர் -என்று வழங்கப்படுகின்ற மலைக்காட்டுப் பகுதி வாழ் ஜனங்களுக்கு ஸ்ரீராமனுடைய சித்ரகூட வாஸம் இயல்பான கபடமற்ற ஈர்ப்பினால் ஏற்பட்ட ராமபக்தியை அவர்கள் உள்ளங்களிலே ஊன்றச்

செய்துவிட்டது. ஆகவே வடநாட்டு மற்ற மலை வாழ் ஜாதி மக்களுக்கும், இவர்களுக்கும் அதிக வித்யாஸமுண்டு. ஹிந்து ஜனங்களுக்கு ராமனைத் தெரியும். ஹநுமானைத் தெரியும். ராமாயணம் தெரியும். இவர்கள் ஆண்டு தோறும் ஸ்ரீராமநவமி ஸந்தர்ப்பத்தில் - மலைகளை விட்டு இறங்கி நாடு நகரங்களில் புகுந்து, ஆனால் தனிப்பட்ட முறையில் ஸ்ரீராமநவமி கொண்டாடுவார்கள். அதற்கென ஸ்ரீராமனோ ஹநுமானோ வரையப்பட்ட சிவப்புக் கொடிகளை - உயர்த்திக்கொண்டு உயரமான மூங்கில்களில் இந்தக் கொடியேற்ற விழா அமர்க்களப்படும். ராம நாம கோஷம் வானைப் பிளக்கும் முக்கால் வாசி மலை வாசிகள் ஹநுமான் வேஷம் பூண்டு விடுவார்கள் - கொடி மரம் தயாரிப்பதிலும் ஹநுமான் வேஷம் போட்டுக் கொள்வதற்காகவும் ஏராளமாகச் செலவு செய்வார்கள்.

கோஷ்டி கோஷ்டியாக இந்தக் கொடி மரங்களை தூக்கிக் கொண்டு - மலையிலேயே ஒரு சமதளத்தில் கூடிவிடுவார்கள். ஒவ்வொரு கோஷ்டியினரும் மற்ற கோஷ்டியினரை விருந்துக்கு அழைப்பார்கள். இப்படிப் பகலில் மாலை வரை அன்னதானம் நடக்கும். இரவு முழுவதும் தீவட்டிகளை ஏற்றி வைத்துக் கொண்டு ஆட்ட பாட்டங்கள், போட்டிகள், நடைபெறும். சிலம்பம், பட்டாகத்தி வீசுகின்ற போட்டி குத்துச்சண்டைகள் - என்ற வீர விளையாட்டுப் போட்டிகள் நடைபெறும். ஒரு புறம் பெண்கள் நாம கீர்த்தனம் செய்வார்கள். கீர்த்தனங்கள் ராமாயணக் கதைகளையே விவரிக்கும். விடியற் காலை மூன்று மணிக்கு அந்தந்த மண்டலங்களில் தலைவர்கள் மேடைகளில் கூடுவார்கள். இரவு நடந்த போட்டிகளில் வெற்றி பெற்ற வீரர்களில் முதல் மூவரைத் தேர்ந்தெடுத்து ஸன்மானமும் வீரப் பட்டயங்களும் வழங்கப்படும். போட்டியில் கலந்து கொள்பவர் அனைவருக்குமே ஆறுதல் பரிசு உண்டு. இதற்கான அந்தந்த மண்டலிக்காரர்கள் செல்வம் சேர்த்து அந்த மஹாசபையில் கொண்டு ஸமர்ப்பிப்பார்கள்.

அத்தனை தொகையும் போட்டியிட்டவர்களின் தரப்படி வகுத்துக் கொடுக்கப்படும்.

மறுநாள் காலையிலே அந்த மலை வாசிகள் அந்த மேடையில் கூடி ஸீதாராமலட்சுமண ஹநுமான் பிம்பங்களுக்குப் பூஜை செய்வர். படு உற்சாகமாக அவர்கள் கொண்டு வந்தவற்றையெல்லலாம் - வரிசையில் அந்த பிம்பங்களுக்கு தாமே ஸமர்ப்பிப்பார்கள் - நாம கீர்த்தனம் கோஷ்டி கோஷ்டியாக நடைபெறும் -மாலைவரை விழா நடக்கும். அதுவரை கொடி மரம் தாங்கிகள் அயராமல் மாற்றி மாற்றித் தூக்கிச் கொண்டிருப்பார்கள். பாடல்கள் எல்லாம் விசித்ரமாக இருக்கும். ஹநுமான் ஸீதாராமலட்சுமணர்களுக்கு செய்த கைங்கர்யங்கள் தான் பாடல்களிலே துலங்கும் ஒரு பாடலின் கருத்து இவ்வாறு,

கடலின் மீது அணைகட்டியாயிற்று வாநரர்கள் கடலைக் கடக்கத் துடிக்கிறார்கள். ராம லட்சுமணர்களும் சுக்ரீவனும் - படைகளை ஒழுங்குபடுத்த நினைக்கிறார்கள்.

ஹநுமான் சிம்மக்குரல் கொடுத்து ஜயஸ்ரீராம் என்று கோஷம் போட்டார். அந்த ஒலி திசைமுகட்டில் முட்டி எதிரொலித்ததாம். வாநரக் கூட்டம் அதிர்ந்தது, அமைதியுற்றது.

கவிஞர் $பு_4$தா பாபு பாடுகிறார். - வாநரர்கள் ராம நாம கோஷத்தின் தாளத்திற்குக் கட்டுப்பட்டு கோலாஹலமாக ஸேதுவை கடந்து லங்கை சேர்ந்தனர். வாநரப்படை லங்கை முழுவதும் புகுந்துவிட்டது. வீதிகளிலும், வீடுகளிலும், ஒரு அரக்கர்க்கு நான்கு வாநரர்கள் வீதம் நடமாடினர். ராம நாமம் அரக்கர்களுடைய காதுகளையெல்லாம் துளைத்ததாம்.

சில அரக்கர்கள் ஜெயராவண என்று குரல் கொடுத்தார்கள். வாநரர்கள் உடனே அவர்களுடைய குரல்வளையைப் பிடித்தார்கள். அரக்கர்கள் திக்குமுக்காடினர் - சொல்லு ராம நாமம் என்று வாநரர்கள்

மிரட்டினர். அரக்கர் பெண்டிர் எல்லாரும் உரக்க ராம நாமம் கோஷம் போட்டார்கள். ராமாயணத்திலே காணப்படும், அரக்கர் தலைவர்களின் மோதல்கள் எல்லாம் ராமநாம கர்ஜனத்தினாலேயே பயனற்றுப் போய் அவர்கள் மடிந்தார்கள்.

இப்படியெல்லாம் பாடல்கள்.

பாடலுக்கு பாடல் ஹநுமான் வழிபட்ட ராமனை பஜியுங்கள் - என்பது தான் பல்லவி. நாம ஸங்கீர்த்தனத்தில் ஒருவர்க்கொருவர் குரல் உயர்த்திப் பாடுவதில் தான் போட்டி - நகரத்து மக்கள் வேடிக்கை பார்க்கக் கூடினவர்கள் இந்த ஆதிவாஸிகளின் ஆர்ப்பாட்டம். ஒவ்வொன்றிலும் ஹநுமானின் ராம ஸேவையை ராம பக்தியை வியப்பதிலேயே திளைக்கின்றனர் என்பதைக் கண்டு ஆச்சரியப்படுவார்கள்.ஆனால் கூச்சல் காதுகளைத் துளைப்பதால் கிட்ட நெருங்கமாட்டார்கள். இங்கே முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு.

இந்த ஆதிவாஸிகள் யார்? சற்றுச்சிந்தித்துப் பார்ப்போம். மனிதப்பண்பு விளக்கம் பெற்ற வேத காலம் என்று சொல்லக்கூடிய பண்டைக்காலத்திலேயே - சில மலை வாழ் மக்கள் வளர்ந்து வருகின்ற மனிதமன வளர்ச்சிகளுக்கு ஆட்படாமல் தனித்தே வாழ்ந்தவர்கள் உண்டு. அவர்களுடைய பரம்பரை தொடர்ந்து வருகிறது - மிருகங்களோடு மிருகங்களாக 1. பசித்தால் புசிப்பது, 2.அயர்ந்தால் தூங்குவது, 3. எதிர்ப்படும் பிராணி நம்மைத் தாக்குமோ என்ற பயம், 4. பாலியல் இயற்கை இவற்றிற்கு ஆட்பட்டு - நூற்கல்வி பெறாமல் வாழ்கின்ற ஜனங்கள். ஆனால் அநுபவ பூர்வமாக பல அறிவுகள் உண்டு. மூலிகைகள், - மலை தாதுக்கள், - புற்பூண்டுகள், இவற்றின் தன்மை பற்றிய அறிவுகள், உண்டு. கருநாகம், சிங்கம் முதல் பல்லி, எறும்பு வரை உள்ள பிராணிகளின் இயல்பு பற்றிய

அறிவு உண்டு. இவையெல்லாம் மிருகங்களுக்கும் சேர்த்துப் பொதுவான தற்காப்பு அறிவுகள், நாளைக்கென பொருள் சேர்ப்பது கூட கோடை மழை காலங்களை முன்னிட்டு உணவுப் பொருள்களைச் சேமிப்பது தவிர நாணயத்தைச் சேர்க்க வேண்டுமென்ற உவகையற்ற ஜீவன்கள். -நீதி நூலோ தர்மசாஸ்திரமோ தேவையில்லாத - கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்ற மனப்பான்மை. எதிர்வந்த நெருக்கடியைத் தற்காப்புக்காக கொலை வரை செய்து விட்டு - உடனே அதை மறந்துவிடுவது, தொடரும் பகை உணர்ச்சி கிடையாது.

ஆராய்ச்சியாளர்கள் இப்படியெல்லாம் ஆராய்ச்சி செய்து மலைவாசிகளைப் பற்றி பொது இலக்கணம் வகுத்திருக்கிறார்கள் - இந்த ரீதியில் ராமாயண காலத்திலே - உலகரீதிக்கு கட்டுப்படாத மலை வாசிகள் இருந்திருக்கிறார்கள். அவர்களைக் காட்டுமிராண்டிகள் - என்று அவச் சொல்லால் குறிப்பிடக் கூடாது, ஏனெனில் அவர்களுக்கு இயல்பாக நேர்மையுண்டு. பொய் சொல்லமாட்டார்கள், கபடு சூதுடன் இச்சகம் பேசமாட்டார்கள். மோதல் வந்தால் தோற்றவன் அழிவான். வெற்றி பெற்றவன் அஹங்காரப்படாமல் அதை உடன் மறந்து அடுத்த காரியத்தைப் பார்ப்பான். ஆழ்ந்த பகையும் கிடையாது. நேசமும் கிடையாது - சமூக உணர்ச்சியே அற்ற தனிப்பட்ட ஜந்மங்கள். ஆதிவாசிகளைப் பற்றி கோஸ்வாமி துளஸீதாஸர் ராம சரிதமாநஸத்தில் பேசுகிறார்.

ஸீதா ராம லட்சுமணர் மூவரும் சாதாரண வழிப் போக்கர்களாக - அடர்ந்த காட்டிலே நுழைந்திருக்கிறார்கள் - கோஸ்வாமி அவர்களை பதி$_2$க$_3$ தௌ வழிப்போக்கர்கள் என்றே குறிப்பிடுகிறார்.

இந்த அப்பாவி வழிப்போக்கர்களை மலைவாழ் ஆதிவாசிகள் காண்கிறார்கள். கண்களில் பட்டவுடனே அந்த மூவரின் இயற்கை அழகும், நடை அழகும் கவர்ந்து

*விடுகின்றன. மோவாயில் கைவைத்து மலை ஜாதி இனம் பெண்கள் பேசிக் கொள்கிறார்கள்.*

*''ஐயோ பாவம் வழி தவறி வந்து விட்டார்களே' ' ''இல்லேடி நாட்டைவிட்டு விரட்டிவிட்டார்களாம் அடி''*

*''என்ன தப்பு செய்தார்களோ?''*

*''ஒரு தப்பும் செய்திருக்க மாட்டாங்களடி - நமக்கு அதிர்ஷ்டம் இவர்கள் நம் இடத்திற்கு வந்து காட்சி கொடுக்கிறார்கள் - இல்லாவிட்டால் நாம நாட்டுக்குப் போய் இவங்களைப் பார்க்கவா போகிறோம்? என்ன அழகு! அப்படியே போய் வாரிக் கட்டிக்கலாம் போல இருக்கு இல்லையா?*

*''அப்படியெல்லாம் செய்யாதே - பாவம்! பயந்து விடுவாங்க.''*

*இரண்டு கிழவிகள் வருகிறார்கள். மரப்பட்டையில் செய்த தொன்னை நிறையத்தேன். மற்றொரு தொன்னையில் தினை மாவு. சின்ன கோரைக் கூடையில் - சக்ரவள்ளிக் கிழங்கு*

*''சாப்பிடுங்க ! பசி ஆறுங்க''*

*ஸீதாதேவி சொன்னாள் ''ஏன் இப்படி சிரமப்படுகிறீர்கள்? மைத்துனர் எல்லாம் கொண்டு வருவார்''.*

*''அவருக்கு என்னா தெரியும்! நாங்க வேறே என்னா செய்யப்போறோம்? நாங்க வழியிலே ஏதாவது சாமான் கவனியாமல் கிடந்தால் நாங்க பாட்டுக்கு எடுத்துக்கிட்டு போயிருவோம். நீங்க உஷாராக இருங்க. ஒண்ணையும் கீழே போட்டுடாதீங்க''*

*இத்தனையும் துளஸிதாஸர் சொன்னது. நாம் வரட்டுத்தனமாக இந்த ஆதிவாஸிகள் பற்றிச் சொன்ன கணிப்பை - எவ்வளவு காவியரஸத்தோடு - மனமுருக -*

துளஸீதாஸர் வர்ணிக்கிறார். ஆதிவாஸிகள் காட்டுமிராண்டிகள் அல்ல. இதற்காக இத்தனை சொன்னோம்.

ஸமீபகாலத்தில் காசியில் ஸர்தார் ராம நாராயணஸிங். அவர் ஒரு வக்கீல் அவருடைய ஒரே குமாரனுக்கு க்ஷய ரோகம் வந்துவிட்டது எத்தனை சிகிச்சைகள் நடந்தும் கூட அவன் பிழைப்பது அரிது என்று நிலைவந்துவிட்டது. அவர் போகும் வழியில் - ஒருசின்ன ஹநுமான் கோயில் இருந்தது. அவர் சீக்கியர் தான். ஆனாலும் - மக்கள் கூடி இருந்த அந்த கோவிலின் வாசலில் அவர் சற்று நின்றார். என்னவோ தோன்றியது. இத்தனை பேருக்கு அருள் புரிபவர் நமக்கும் க்ருபை செய்ய மாட்டாரா?

கூட்டம் நகர்ந்ததும் தனிமையில் ஹநுமானிடம் சென்றார். ''ஹநுமானே! என்பிள்ளை பிழைக்க வேண்டும். அதற்கு நீங்கள் என்ன பலி கேட்டாலும் தந்துவிடுகிறேன்''

என்று சொல்லி நின்றார். அப்போது சாலையில் போய்க் கொண்டிருந்த ஒருவன் மற்றவனிடம் சொல்லிக் கொண்டு போனான்.

''உசிரையே கொடுத்தாவது நான் அவனைக் காப்பாற்ற வேண்டும்''

சிங்குக்குச் சுரீர் என்று இந்தப் பேச்சு தைத்தது.

ஹநுமானை வேண்டிக் கொண்டார் - ''என் ஆயுளைத் தருகிறேன். குழந்தையைக் காப்பாற்று''

நிம்மதியாக வீட்டுக்குப் போனார். அவருடைய ஜோதிடர் அவருடைய ஜாதகத்தில் - 64 வயது வாழ்வு உண்டுஎன்று கணித்திருக்கிறார்.தற்போது ஐம்பத்தெட்டு. பிள்ளை பிழைத்து விட்டான் அவர் ஹநுமானிடம் ஓடினார். ''இனி என் ஆயுள் உன்னுடையது. எந்த நிமிஷமும் எடுத்துக்கொள்'' என்று விண்ணப்பித்தார்.

பக்கத்தில் ஒருவர் ராம ராம ராம - என்று கூறிக் கொண்டிருந்தார். ஸிங் வீட்டுக்கு வந்து ஓயாமல் ராம நாமம் சொல்லிக் கொண்டிருந்தார். 62 வயதில் காலமானார் அவருடைய குமாரன் இவனிடம் சொன்ன விருத்தாந்தம் இது.

காசியில் மற்றொரு நண்பர். அவர் முனிஸிபாலிடியில் கமிஷனராக இருந்து ஓய்வு பெற்றவர். ராம நாமம் ஓயாமல் சொல்பவர். ஸங்கட மோசன ஹநுமானிடம் சென்று ஹநுமான் சாலீஸா - ஒப்புவித்துச் கொண்டே இருப்பார்.

ஸந்நிதியில் நின்று ஹநுமானிடம் தம் தொல்லைகளைச் சொல்லி அழுகின்ற சேவார்த்திகளிடம் - பேசுவார்.

''அது தான் ஹநுமான் கிட்ட சொல்லியாயிற்றே - எல்லாம் அவர் பார்த்துக் கொள்வார் நீபோ'' என்பார்.

ஒரு நாள் - ஒரு பெண்மணி ஒரு குழந்தையைக் கொண்டு வந்து ஸந்நிதியில் போட்டு ''பவநகுமார! என் குமரனைக் காப்பாற்று'' என்று புலம்பிக் கொண்டிருந்தாள். காப்பாற்றுவான் போ- என்று அவளை நகரச் சொன்னார்.'' அதைக் கேட்டு அவள் இவரைத் திருப்பிப் பார்த்து கன்னத்திலே போட்டுக் கொண்டுகுழந்தையை எடுத்துக் கெண்டு நகர்ந்தாள்.

இந்த பக்தர் -திடுக்கிட்டார். ''ஏன் இப்படிச் சொன்னோம்! காப்பாற்றுவார் - என்று உறுதி மொழி கூற நமக்கு என்ன தகுதி? சொல்லிவிட்டோமே ! அந்தப் பெண்மணி - இந்த வார்த்தையைக் கேட்டுக் கொண்டு நிம்மதியாகப் போனாளே! அந்தக் குழந்தை பிழைக்க வேண்டுமே! பிழைக்காவிட்டால் -ஹநுமானை அவள் திட்டுவாளே! துடிக்கிறார். ஹநுமான் சாலீஸாவை உரக்கப் படிக்கிறார். ஹநுமானே - என்னை மன்னித்துவிடு. நான் உன் பெயரில் இப்படி ஆணையிட்டேனே! அவள்

நம்பிவிட்டாளே! - என் ஆயுளை எடுத்துக்கொள். குழந்தையைக் காப்பாற்று. இல்லாவிட்டால் அவள் உன்னைத் திட்டுவாளே! நான் அதைப் பொறுக்க மாட்டேன் என்று கதறினார்.

மறுநாள் அந்தத்தாய் குழந்தை விளையாடுகிற நிலையில் எடுத்து வந்து இவருடைய காலடிகளில் போட்டாள்.

''அம்மம்மா! இங்கே போடாதே அவன் காலடியில் போடு'' என்றார். அன்றிலிருந்து ஸந்நிதியில் நின்று சேவார்த்திகளை விரட்டுவதை நிறுத்திவிட்டார். இத்தனையும் - அந்த ஓய்வு பெற்ற முனி**ஸிபல் கமிஷ**னர் சொன்னது.

## பிற இலக்கியங்களில் ஹநுமான்

ஜைந மதத்தைச் சார்ந்த கவிஞர் **ஸ்வயம்பூ** என்பவர் **பசமசர்** என்று பிராக்ருத மொழியில் ஒரு ராமாயணம் எழுதியிருக்கிறார் அவர் கூறுகிறார்.

ஹநுமான் **ஹநுருஹத்தீ**வில் வஸித்தார். அவர் ஸ்ரீராமனுடன் ஏகசிம்மாஸனத்தில் அமர்வார், அற்புதமான விமானத்தில் ஏறி லங்கைக்குச் சென்று ஸீதாதேவியைக் கண்டுபிடித்தார். ஹநுமான் ராவணனுக்கு ஜைநமத தத்துவங்களை பனிரெண்டு அநுப்ரேக்ஷைகளை உபதேசித்தார்.

ஜைநமதத்தில் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களைச் சேர்த்து இருபத்து நான்கு மன்மதர்களைச் சேர்த்து அறுபத்து மூன்று உயர் பதவியாளர்கள் உண்டு. அவர்கள் பரமாத்மாவை அடைபவர்கள். அத்தகைய - இருபத்து நான்கு மன்மதர்களில் ஹநுமான் ஒருவர். பதினெட்டாவது பெரியவர் அவர் ராவணனுக்கு தூரத்து உறவினர்.

*ராவணன் ஜைநமரபுப்படி - ப்ரதி நாராயணன் - என்ற மஹாபுருஷக் கூட்டத்தைச் சேர்ந்தவன். தான் துஷ்டனாக இருந்ததால் பலபத்ரர் என்ற மஹாபுருஷர் ராமனுக்கு உதவி செய்து - ராவணனை வதைக்கச் செய்தார். ஹநுமான் திருமணமும் செய்து கொண்டார். பிறகு துறவியாகி ராமனுடன் சேர்ந்தார்.*



# தென்கிழக்கு ஆசிய நாடுகளில் ஹநுமான்

பொதுவாகவே தென்கிழக்கு ஆசிய நாடுகளில் **லாவோஸ் பாலித்தீவுகள்** முதலிய சிறு நாடுகளில் ராமலீலா கொண்டாட்டங்கள் இன்றும் நடைபெறுகின்றன. ராம சரிதமும் பலவாறு மாறுபட்டுப் பேசப்படுகின்றன. லாவோஸின் ராமாயணத்தில் ஹநுமான் ராமனின் புத்திரன்.

சீனாவில் தசரதஜாகதம் என்ற பெயரில் ராம சரிதம். மொரிஷியஸின் இலக்கியங்களில் ஹநுமானைப் பற்றிய கதைகள் பல உள்ளன. லங்கையில் ஹநுமான் தீ வைத்த கதைகளில் முக்கியக் கருத்து இது. பெண்ணின் கற்புக்குக் களங்கம் செய்கின்ற பாவம் ஒருவன் செய்தாலும் அது நாட்டிற்கே பெரும் தீங்குவிளைவிக்கும் என்றும் அந்த இலக்கியங்களின் கோட்பாடு.

மொரிஷியஸ் பிஜி கயானா த்ரிநிடாட் முதலிய இடங்களில் பிழைப்புக்காகப் போன பாரத மக்கள் ஆடுமாடுகளைப் போல் கடுமையான வேலைகளில் பலவந்தமாக பிணைக்கப்பட்டாலும் கூட அவர்களுடைய கையில் துளஸிராமாயணம் இருக்கும். ஹநுமான் சாலீஸா இருக்கும். இவை கையில் உள்ளவர்கள் - பலரும் தனியாக பல பகுதியில் பிறந்தவர்களாயினும் ஒரு சமூகமாகப் பிணைபட்டனர். இப்படி மூன்று நான்கு தலைமுறையினர் இன்னும் தாய் நாட்டு நினைவுடன் உள்ளனர். ஆயினும் அந்த ஊர் நாட்டு மேம் பாட்டிலும் வளர்ச்சியிலும் ஈடுபட்டவர்களாக - சமுதாயத்தில் பெருமையோடு - அந்த நாட்டு மக்களாக கருதப்பட்டு - தேர்தல்களில் நின்று வெற்றி பெற்று பெரும் பதவி பெற்றிருக்கிறார்கள்.

இன்றும் கூட மொரீஷியஸில் பல வீடுகளில் - ஹநுமான் - பூஜையில் இருக்கிறார்.

ராம சரித்ரத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. ஆனாலும் ஹநுமானைப் பற்றியவரை அவர்களுடைய

பார்வை ஒரே விதம் தான். ஹநுமானின் முயற்சியையும் தன்நம்பிக்கையையும், நேர்மையையும் மதிப்பவர் பாராட்டுபவர் அத்தகையவர்களுக்கு அருள் உண்டு என்று வழிபடுகிறார்கள்.

இந்தோனீஷியாவில் கி.பி.பத்தாம் நூற்றாண்டில் பலிதுங்க மஹாராஜனால் கட்டப்பட்ட பெரிய சிவன் கோவில் - கோபுரம் 140 அடி உயரமுள்ளது. இந்த ஆலயத்தைச் சுற்றி 224 சிறு கோவில்கள் உள்ளன. சிவாலயத்தின் வெளி பிராகாரத்தில் கருங்கல் சுவர்களில் - ராம சரித சித்திரங்கள் கீறப்பட்டுள்ளன. அவற்றில் பல ஹநுமான் சித்திரங்கள் பல நிகழ்ச்சிகளில் அவருடைய வீரப்பிரதாபங்களை விளக்குகின்றன.

ஹநுமான் ஸீதைக்கு அடையாள மோதிரம் அளிக்கின்ற காட்சி மிக அருமை. இந்தோனிஷியாவில் ராம சரிதம் பற்றிய தோல் பொம்மலாட்டங்கள் இன்றும் நடைபெறுகின்றன. அவற்றில் ஹநுமானின் லீலைகள் பற்றிய காட்சிகள், பாலர், முதல் பழுத்த கிழவர்கள் வரை அனைவரையும் ஈர்க்கின்றன.

இவை நிழலாட்டங்களே ஆயினும் காட்சி நுணுக்கங்கள் பளிச் சென்று தெரியுமாறு நெளிகின்றன. இவை முன்பு பாரத நாட்டில் ஒரிஸ்ஸாவில் பிரசித்தமாக நடைபெற்றன. தற்போது மங்கிவிட்டன. இந்தோநீஷியாவில் புத்துயிர் பெற்றுவிட்டன. இந்தோனீஷியாவில் வைரம் பாய்ந்த தேக்கு மரங்களில் செதுக்கப்பட்ட ஹநுமானின் சிற்பங்கள் - பெரிய நாகப்பாம்புகளை உடலில் சுற்றிக் கொண்டிருப்பவற்றை அடக்கி நசுக்குகின்ற வடிவங்கள் மயிர்க் கூச்சலை உண்டாக்குன்றன. பலி தீவுகள் ஹநுமானை உபாசித்து உடல் பயிற்சி செய்து முண்டாப் புரட்டுவார்கள்.

கம்போடியாவில் ‘‘ராமகீர்த்தி’’ சிற்பங்கள் நுணுக்கம் நிறைந்தவை.

தாய்லாந்தில் தாயி மொழியில் ராமாயணம் இலக்கியத்தரமுள்ளதாக போற்றப்படுகிறது.

ஹநுமான் ஆலயங்கள் இங்கே அதிகம். ராமாயணச் சொற்பொழிவுகளும் அதிகம். முன்னர் குறிப்பிட்ட படி - ஜாவாவில் **ப்ராம்பநன்** என்ற இடத்தில் விஸ்தாரமான **சண்டீலோரோ ஜோநரவ்** என்ற அரங்கத்தில் ராமாயணத்திலிருந்து பல காட்சிகள் கருங்கல் சுவற்றில் வரிவடிவங்களாக காட்சி தருகின்றன. அவற்றில் சிறந்த சில

1. லங்கையிலிருந்து திரும்பி வந்த ஹநுமான், ராம லட்சுமணர்களிடம் அந்தரங்கமாகச் சேதி கூறுகிறார்.

2. ஹநுமான் லங்கையில் தீ இடுவது

3. ஹநுமான் தேவியுடன் அசோக வனத்தில் உரையாடுதல்

4. அரக்கர்கள் வரிசையாக நின்று - துணி சுற்றி எண்ணை வார்த்த நீண்ட வாலில் தீ மூட்டுதல் - சுவற்றின் முழுநீளம் வரை.

5. தீ மூட்டப்பட்ட வாலின் நுனியைத்தூக்கி, முதலில் ராவணன் மாளிகை கோபுரத்தில் தீ மூட்டுதல்

6. கடல் மீது அணைகட்டும் போது ஹநுமான் ராம லட்சுமணர்களிடம் வந்து ஸ்ரீராமனின் குறிப்பு அறிந்து கொள்ளுதல்.

**கிழக்கிந்தியத் தீவுகளில்** இராமாயணத்தின் தாக்கம் - பரவலாக சாதாரண மக்களிடையே பக்தியையும் பரவசத்தையும் ஊட்டியிருக்கிறது. தூரத்துப்பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி என்பார்கள். ராமாயணம் நிகழ்ந்த பாரத புண்ய பூமியில் இவ்வளவு ஆண்டுகளுக்குப் பின்னும் ஹநுமானிடம் ஈடுபாடு இருப்பது ஆச்சரியமல்ல. ஹிந்துப் பண்பாடோ பாரதபூமிக்கே உரிய பக்திப்பண்பாடோ

*இல்லாத வெளி நாடுகளில் இந்து தர்மம் ஜனங்களின் ஆர்வத்தை ஈர்க்கிறது என்றால் அதன் தார்மீக அழுத்தம் எவ்வளவு வலிவானது?*

*(இருபது ஆண்டுகளுக்கு முன் புதுடெல்லியில் ஆல்இந்தியா ரேடியோவின் கவி அரங்கத்தில் பங்கு கொள்ள சென்றிருந்த இதன் ஆசிரியருக்கு அங்கு* ***ஸ்ரீவ்ரஜேந்த்ர நாத்ஜீசர்மா எம் ஏ பீலிட் திமிகிஷி ப்ராசின கலைக் களஞ்சியத்தின்*** *தலைவர் எழுதிய கட்டுரையை அன்புடன் அளித்தார். அதிலிருந்து தொகுக்கப்பட்ட செய்தி ரத்தினங்கள் இவை)*



## சிற்பக்கலையில் ஹநுமான்

பாரத புண்ய பூமியில் இமயமலை முதல் கன்யாகுமாரி வரை பல இடங்களில் ஹநுமானுடைய மூர்த்திகள் - சித்ர கலைகளிலும் புராதநக்கலைக் கருவூலங்களிலும் வழிபாட்டு ஸ்தலங்களிலும் காணக்கிடக்கின்றன.

அவற்றில் அபூர்வமானவை சில பிம்பங்கள்.

உத்தரப்பிரதேசத்தில் ஜான்ஸீ மாநிலத்தில் உள்ள தேவகட் என்ற நகரத்தில் விஷ்ணுவினுடைய தசாவதார மூர்த்திகளின் ஆலயம் ஒன்று உண்டு. பாறைகள் நிறைந்த அந்த ஆலயத்தில் ஒவ்வொன்றும் புராணக்கதைகளைக் குறிப்பிடுகின்றது. சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஒரு பாறையில் ஒரு அபூர்வ சிற்பம். ஹநுமான் த்ரோணமலை சென்று ஸஞ்ஜீவிக் கொடிகளுடன் பெயர்த்து எடுத்து வந்து - யுத்த களத்தில் ராவணனுடைய சக்தி ஆயுதத்தால் அடிபட்டு மூர்ச்சித்துக் கிடந்த லட்சுமணனைப் பிழைப்பித்த வடிவமைக்கப்பட்டிருக்கிறது.

மற்றொரு பாறையில் சுக்ரீவனுக்கும் வாலிக்கும் நடந்த போரில் ஸ்ரீராமன் மறைந்து நிற்கும் காட்சி.

மத்யப்ரதேசத்தில் ரசநா - என்ற இடத்தில் ஒரு பாறையில் ஹநுமான் ஸுக்ரீவனை ஸ்ரீராமனுக்கு அறிமுகம் செய்து வைக்கின்ற காட்சி. பக்கத்தில் ராமனுடைய வில்லையும் அம்புறாத்தூணியையும் சேர்த்து தோளில் சார்த்திக் கொண்டு பணிவுடன் நிற்கின்ற லட்சுமணன். ச்ருங்கி பேரபுரத்திலிருந்து எடுத்து வந்து ப்ரயாக க்ஷேத்ரத்தில் புராதன அரும் கலை அகத்தில் வைத்துள்ளது மேலே குறிப்பிட்ட காட்சியின் கற்சிலை வடிவம்.

வாராணஸியில் பாரத கலாபவனத்தில் கடலில் ஸேதுபந்தனக் காட்சி மிகவும் நுணுக்கமான பல விபரங்களை

*உள்ளடக்கிய சிற்பம். சித்திரத்தில் கூட இவ்வளவு நுணுக்கமான விபரங்களை வரைய முடியாது. ஹநுமான் மற்ற வானரர்களுடன் - மலைகளைப் பெயர்த்து தோளிலும் கக்கத்திலும் இடுக்கிக் கொண்டு வருகிறார், ஸ்ரீராமன் ஒரு பாறைமேல் நின்று லட்சுமணனிடம் தம் வில்லினால் நாண் கயிற்றில் கடலில் அணை போட வேண்டிய திசை காட்டி மணலில் புதிய வைத்துள்ள குறியீட்டைக் கவனிக்கச் சொல்லும் காட்சி இவையெல்லாம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டவை.*

*பீஹாரில் பாட்னாவில் புராதன அரும்கலைஅகத்தில் -குப்தர்காலத்தில் வடிக்கப்பட்ட பாறைச் சிற்பம் அதில் போர்க்களத்தில் -ஸ்ரீராமன் நின்று கொண்டு லட்சுமணன் இந்த்ரஜித்துடன் போரிடும் காட்சியை கவனிக்கிறார்.*

*பல இடங்களில் ஹநுமான் ஸஞ்ஜீவி பர்வதத்தை இடது கையில் எதிரே தூக்கிக் கொண்டு வலது கையில் கதாயுதத்தைத் தூக்கிக்கொண்டு பக்க வாட்டில் காட்சி கொடுக்கின்ற மூர்த்திகள் ஸஞ்ஜீவி ஹநுமானின் பிம்பங்கள் உள்ளன.*

*கிழக்கு கோதாவரி மாநிலத்தில் பீமாவரத்தில்* ***மாண்டவ்ய*** *நாராயணர் ஆலயத்தில் - ஸ்ரீராமன் லட்சுமணனுடன் ஸீதையைத் தேடுகின்றார். மரத்தின் மீது ஹநுமான் அமர்ந்திருப்பது போல ஒரு சிற்பம். இதே மாதிரி ஜாவாவில் ப்ராம்பநநிலும் உள்ளதாம்.*

*எல்லோராவில் புகழ்பெற்ற கைலாசம் என்ற குடைவரைக் கோவிலில் சுற்றுப்புறச் சுவர்களில் ராமாயணக்கதைச் சிற்பங்கள் பலவற்றில் ஹநுமானின் பிம்பங்கள் உள்ளன.*

*ஒரிஸ்ஸாவில் கடக்மாநிலத்தில் மணிகேச்வரர் ஆலயத்தில் ஸ்ரீராமன் லட்சுமணன் ஹநுமான் மூர்த்திகள் பூஜிக்கப்படுகின்றன.*

ராஜஸ்தானில் சித்தூர்கட்டில் இருந்த ஹநுமானின் கலைச் சிற்பமான மூர்த்தி டெல்லியில் ராஷ்ட்ரிய அரும்கலை அகத்தில் பாதுகாப்பாக உள்ளது.

கஜூராஹோவில் சந்தேல வம்சத்தினர் ஆட்சியின் போது ஹநுமானை **பும்பகதேவர்** என்ற பெயரில் வடித்த பெருமையான சிற்பங்கள் பூஜையில் உள்ளன. இங்குள்ள **பார்ச்₊வநாதர்** என்ற ஜைனத் துறவியின் கோவிலில் ஒரு சிற்பம். ஸ்ரீராமனும் ஸீதையும் லட்சுமணனும் வலது புறத்தில் குனிந்து கை கூப்பி நிற்கின்ற ஹநுமானுக்கு ஆசியளிக்கும் காட்சி. ஸ்ரீ ஸீதா ராம லட்சுமணர்களின் முகங்களில் பரிவும் - ஹநுமானின் முகத்தில் பரவசமும் பார்க்கப் பார்க்கத் திகட்டாதவை. இதே மாதிரி ராஜஸ்தானில் **ஒளியாவில்** அம்பா மாதா ஆலயத்தில் பிம்பங்கள் வரிவடிவங்களாக உள்ளன.

கஜுராஹோ கிராமத்தில் உள்ள பல கோயில்களில் ஹநுமானின் பலவிதமான சிற்பங்கள் உள்ளன.

அங்கேயே தற்காலத்தில் எழும்பியுள்ள ஒருபுது ஆலயத்தில் மிகவும் அழகான ஹநுமானின் மூர்த்தி பூஜையில் உள்ளது. காலஞ்ஜரக் கோட்டையின் அருகே ஹநுமான் ‘‘குண்டம்’’ என்று புகழ் பெற்ற வழிபாட்டு ஸ்தலம் உள்ளது. அங்கே ஒரு மலையையே செதுக்கி வடிவமைக்கப்பட்ட ஒரு பெரிய ஹநுமானின் ஸ்வரூபம் கம்பீரமாக நிற்கிறது. இதை தர்சித்தவர் சற்று நேரம் மயங்கி நிற்காதவர் ஒருவரும் இல்லை. இதே மாதிரி ஜோத்பூரில் கோட்டைக்கு வெளியே மலையைச் செதுக்கி வடிவமைக்கப்பட்ட பதினெட்டு அடி உயரமுள்ள ஹநுமான் ஐந்து முகங்கள் உடையவர் காட்சித் தருகிறார்.

மத்யப்பிரதேசத்தில் சேதிஸம்ராட்டின் ஆட்சிகாலத்தில் **பில்ஹரி** என்ற இடத்தில் லட்சுமீ நாராயணஆலயம் **யோகிநீ** தேவதைகளின் ஆலயம்

இவற்றிலும் ஹநுமானின் பெரிய மூர்த்திகள் தர்சனம் அளிக்கிறார்கள். ஜபல்பூர் மாநிலத்தில் பெரிய ஹநுமான் நிற்கிறார். இந்த எல்லா வடிவங்களின் தனிச்சிறப்பு என்னவென்றால் - ஹநுமானின் வலது கை தலைக்கு மேலே நீண்டு ஏதோஒரு உடலைதூக்கி எறிவது போல் உள்ளது. அந்த அரக்கி லங்கிணியாக இருக்கலாம் என்பது பௌராணிகர்களின் கருத்து.

மேலும் வடநாட்டில் பல அருங்கலை அகங்களில் - ஹநுமானின் உடைந்த உடற் பகுதிகள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. அவற்றை சாதாரணமாகப் பார்த்தாலே - அவை மிகவும் கலை அழகுமிளிர்ந்த மூர்த்திகளுக்கு உரியவையாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது.

ராஜஸ்தானத்தில் பல இடங்களில் கோவில்களில் பாறாங்கல் சுவர்களில் ஹநுமானைப்பற்றிய கதை அம்சங்கள் உளிக் கீறல்களாக வரையப்பட்டுள்ளன. ஹநுமான் ஸஞ்ஜீவ பர்வதத்தை எடுத்துக் கொண்டு ஆகாசவீதியில் பறந்து வருவது - வாநர ஸேனைகளைக் கூட்டிவைத்துக் கொண்டு ராம நாம பஜனம் செய்வது, கூப்பிய கையுடன் த்யானத்தில் அமர்ந்திருப்பது முதலிய வடிவங்கள் அவை.

ராஜஸ்தானத்தில் கிராட் என்ற ஊரில் உள்ள கோவிலில் - ஒரு பாறைச் சுவற்றில் -ஸீதாதேவி கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருப்பது. அந்த மரத்தின் கிளைகளில் ஹநுமான் அவளைப் பார்த்துக் கொண்டிருப்பது. இவை நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் கீறப்பட்டிருக்கின்றன. மறுபுறம் கிளைகள், இலைகள் உள்ள மரங்களும், கொடிகளும் நிறைந்த ஸஞ்ஜீவி மலையை இடது கையில் தூக்கியபடியே வாநர வைத்யர் ஸுஷேணருக்குக் காண்பித்தல், அடுத்த சுவற்றில் இந்திரஜித்தின் சக்தி ஆயுதத்தினால் அடிபட்டு மூர்ச்சையாகிக் கிடந்த லட்சுமணனை தோளில் சுமந்து வந்து ராமனிடம் நிற்பது. ஒவ்வொரு கீறலும் ஒரு கதை சொல்கிறது.

ராஜஸ்தானிலே பாம்ஸ்வாடாவிலிருந்து தென்மேற்கே இருபது மைல் தூரத்தில் ஆபூர்ணா என்ற நகரம். அங்குபல பழைய கோவில்கள் முழுமை பெறாதவை. அங்கு ஹநுமான் க $_{3}$ த்தி (சிம்மாஸனம்) என்ற ஆலயத்தில் உள்ள ஹநுமான். மற்றொரு சிறிய ஆலயம் அதில் ஹநுமானுடைய உயரமான மூர்த்தி. அதன் சரண பீடத்தில் விக்ரமசகம் 1165ல் பராமார் அரசன் விஜயராஜனைப் புகழ்ந்து பாடிய பாடல் ஒன்பது வரிகளில் அமைந்துள்ளது.

ஜோத்பூர் ஸம்ஸ்தானத்தில் ஜுநாகட்டில் பல ஆலயங்களில் ஹநுமான் ஆலயம் தான் பழமையானது. ஜுநாகட்டில் தமிழ்நாட்டில் பதினெண் ஸித்தர்கள் - என்ற மஹாயோகிகள் போல பல யோகஸித்தி பெற்ற மஹான்கள் - யோக ஸித்தியினால் பூதவுடலையே லிங்கமாக்கிக் கொண்ட மஹான்களின் ஆலயங்கள். அனேகமாக அவை சிவாலயங்களாகவே கட்டப்பட்டிருக்கின்றன. அவற்றில் இந்த ஹநுமான் கோயில் தான் மிகப் பழமையானது என்று பேராசிரியர்கள் கூறுகிறார்கள்.

கதியாவாட் என்ற ஸம்ஸ்தானத்தில் - தலஜாவில் - ஐந்து முகங்கள் உடைய ஹநுமானின் மூர்த்தி உள்ளது. சிங்கம் வாநரம் கருடன் வராஹம் இவற்றின் முகங்கள் நாற்புறமும் மேலே குதிரை முகமும், கிழக்கு நோக்கி உள்ளன. நான்கு கைகள், மேல் இரண்டு கைகளில் பர்வதமும் கதாயுதமும், கீழ் இரண்டு கைகளால் வில்லும், அம்பும் உள்ளன. ராஜஸ்தானிலும் மத்ய ப்ரதேசத்திலும் அரசு புரிந்த ராஜபுத்ர அரசர்கள் - முஸ்லீம்களின் ஆக்கிரமணத்தை முடிந்த மட்டில் எதிர்த்தவர்களானாலும் பிறகு பணிந்து அவர்களுடன் ஸமாதான உடன்படிக்கைகள் செய்து கொண்டார்கள் தேவாலயங்களுக்குப் பெரிய சேதங்கள் ஏற்படவில்லை.

ஆயினும் ராஜஸ்தானிலும் மத்யப்ரதேசத்திலும் மஹாநகரங்களில் உள்ள பல அரும் கலை அகங்களில் உடைந்து போன சிற்பங்கள் - கலையழகுமிளிர்ந்தவை -

வைக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஹநுமான் பிம்பங்களே அதிகமானவை. அவை சிறு தனிக்கோவில்களில் இருந்தவையாக இருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் எழுதுகிறார்கள்.

ஓரிஸ்ஸாவில் கங்க அரசர்களின் வரிசையில் வந்த அநங்க பீமனின் மூன்றாவது புதல்வி சந்த்ரிகாதேவியினால் கி.1278ல் கட்டப்பட்ட நந்தவாஸு தேவர் ஆலயம் புவநேச்வர் நகரத்தில் உள்ளது. அந்த ஆலயத்தில் ஸீதா ராமன் லட்சுமணன் தவிர ஹநுமான் சுக்ரீவன் அங்கதன் முதலிய பல வாநர வீரர்களுடையவும் மூர்த்திகள் உள்ளன.

அஸ்ஸாமில் தேவ பர்வதம் என்ற இடத்தில் ஒரு சிவாலயம் இடிபட்டுக் காணப்படுகிறது. அதில், ஒரு அழகான சிற்ப வரிசை ராமன். அவருக்கு பின்னால் லட்சுமணன் முன்னால் ஸுக்ரீவன் வணக்கத்துடன் நிற்கிறான். இவர்களை எட்டியிருந்து ஹநுமான் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஹநுமான் ஸுக்ரீவனுக்கு ஸ்ரீராமனுடைய நட்பை சிபார்சு செய்கிறார் போலும்,

த்ரிபுராவில் - ஒரு பெரிய ஹநுமான் - ஓர் அரக்கியைத் தாக்குவது போன்ற நிலையில் அமைந்த சிற்பம். மறுகையில் கதாயுதத்தை ஊன்றிக் கொண்டு நிற்கிறார்.

லண்டனில் உள்ள விக்டோரியா ஆல்பர்ட் ம்யூஸியத்தில் ஒரு விசித்திரமான ஹநுமானின் கல்வடிவம். ஹநுமான் ஓர் அரக்கனை மிதித்துக் கொண்டு நிற்கிறார். வலது கை தலைக்கு மேலே நீண்டு இருக்கிறது.

இடது கை ஒரு கட்டாரியைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ராவணனுடைய இளையமகன் அட்ச குமாரனை மிதித்துக்கொண்டு அவனுடைய கையிலிருந்து பிடுங்கிய கட்டாரியாக இருக்க வேண்டும்.

டொரண்டோ (அமெரிக்கா)வில் ராயல் அன்டாரியாக் காப்பகத்தில் இந்த மாதிரி ஒரு மூர்த்தி. ஒரு அரக்கனை மிதித்துக் கொண்டு நிற்கிறது.

நேபாளத்தில் நேற்றுவரை சுதந்திர ஹிந்து ராஜ்யமாக விளங்கிய நாட்டில் பக்த புரா - என்ற சதுக்கத்தில் உள்ள ஹநுமானின் பீடக்கல்லில் கி.பி.1698ல் எழுதப்பட்ட சிலாசாஸனம் உள்ளது. நான்கு கைகளுடன் ஓர் அரக்கப்பதுமையின் மேல் ஹநுமான் பிம்பம் நின்று கொண்டிருக்கிறது. இவ்விதம் நான்கு கைகளுடன் கூடிய ஹநுமானின் பிம்பம் நம் நாட்டில் மிகவும் அரிதாகச் சில இடங்களில் உள்ளன.

## அரசு முத்திரைகளில் ஹநுமான்

வட நாட்டில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்தே அரசாண்டு வந்த மன்னர்கள் தமது அரசுகளின் அரசாங்க முத்திரைகளில் ஹநுமானின் உருவத்தைப் பதிப்பிக்கின்ற முறை வழக்கத்தில் இருந்திருக்கிறது.

அரசாங்கத் தாக்கீதுகளிலும் ஆணைகளிலும் -மற்ற அரசுகளுடன் அரசாங்க முறையில் ஆவணங்களை பரிமாறிக் கொள்கின்ற போதும் ஏதாவது ஒரு வடிவத்தில் ஹநுமானுடைய வடிவத்தை தமது பிரத்யேக அடையாளமாக இடுவார்கள். தடித்த தோலிலும் செம்பிலும் வார்க்கப்பட்டு அழியாமசியினால் அழுத்திப் பதிப்பிக்க முத்திரைகளை ஆவணங்களில் வைப்பார்கள். அவை மற்றவர்களால் அதிகாரப்பூர்வமானதாக ஏற்றுக் கொள்ளப்படும்.

அரசாங்க ஆவணங்களில் மிகப் பழமையானதாக புந்தேல் கண்டு சத்தீஸ்கன்ட் அரசுகளின் ஹநுமான் முத்திரைகள் கி.பி. பத்தாவது நூற்றாண்டில் ஏற்பட்ட அரும்கலை அகங்களில் காணக்கிடக்கின்றன.

கஜுராஹோ சிற்பக் கூடத்தில் ஏழரை அடி உயரமுள்ள ஹநுமான் மூர்த்தியின் பாதபீடத்தில் ஒரு அரசாங்க முத்திரை காணப்படுகிறது.

அந்த முத்திரையில் - சிறு ஹநுமானின் வலதுகை தலைமீது -பின்னல் வளைந்து வருகின்ற வாலுக்கு முன்னால் மடிந்திருக்கிறது. இடது கை மார்பில் வைக்கப்பட்டுள்ளது கால்கள் இரண்டும் மிடுக்காக அகன்று நிற்கின்றன.

அந்த நாட்களில் அந்தந்த அரசர்களின் அரசாங்க அறிக்கைககள் ஆலய பிராகாரச் சுவர்களில் கல்வெட்டுகளாகப் பதிக்கப்படும். அவற்றில் அந்த அரசின் பரம்பரை அதிகாரத்தின் பிரஸ்தாப ஆண்டு மாதம் தேதி - செய்தி கடைசியில் அரசின் முத்திரை கல்வெட்டிலேயே பதிப்பிக்கப்பட்டு வந்தன. அந்த முத்திரைகள் பலவற்றில் ஹநுமானைக் காணலாம். அந்த கஜுராஹோ சுவற்றுச் சிற்பம் - ஹநுமான் ஸர்வாலங்கார பூஷிதராக பாதங்களில் சலங்கை கொலுசுகளுடன் விளங்குகிறார். அந்தச் சிற்பத்துக்கு மட்டும் இன்றும் பூஜை நடந்து வருகின்றது. மற்றதைவபிம்பங்கள் எத்தனையோ காட்சிப் பொருள்களாகவே உள்ளன. இதிலிருந்து ஓர் உண்மை துலங்குகிறது. தைவப்பரதிமைகள் கல்வெட்டுகள் பலவற்றில் வடிக்கப்பட்டிருந்தாலும் மக்கள் அவற்றை காட்சிப் பொருள்களாகவே கண்டனர்.

ஹநுமான் வடிவை மட்டும் பூஜைக்குரியதாக யாரோ ஒருவர் ஆரம்பித்து அது தொடர்ந்து நடந்துவருகிறது.

சந்தேல் கண்டு அரசர் **ஸல்லட்சணவர்மா** ஹநுமான் முத்திரையை ஆரம்பித்து வைத்தார். அது பின்னர் ஜயவர்மா ப்ருத்வீவர்மா, மதனவர்மா ஆட்சிவரை அந்த முத்திரை தொடர்ந்தது. அந்த முத்திரை வட்டமாக தலைப்பில் பாதி சந்திர வடிவம் கீழே அநுமானின் உப்புஸமூர்த்தி. ஜயவர்மாவின் முத்திரையில் சிறு மாறுதல். ஆகாயத்தில் காற்றில் ஊறுகின்ற ஹநுமான் கைகளை நேரே முன்னால் நீட்டி பின்னங் கால்கள் உதைத்து காணப்படுகின்றன. இந்த சிறிய முத்திரைகள் கற்களில் செதுக்கப்பட்டவை. ஆகையால் ஸ்பஷ்டமாகத் தெரியவில்லை. ஆனால் செப்புக்காசு முத்திரைகளில் ஸ்பஷ்டமாகத் தெரிகின்றன.

ப்ரதிஹார நாட்டின் அரசன் மிஹிரபோஜன் - தனது முத்திரையில் வராஹப்பெருமானைப் பதிப்பித்திருக்கிறார்.

இவற்றிற்கு முன்பே சதிஸ்கட் அரசன் கமலராஜன் ஹநுமான் முத்திரையை பதிப்பிக்க ஆரம்பித்துவிட்டான். அந்த அரசனை எதிர்த்த கல்சூரி அரசன் - போட்டியாக தனது முத்திரையில் ஸஞ்ஜீவி ஹநுமானை பதித்துக்கொண்டார். ஆனால் ஒன்று. ஒரு அரச முத்திரை மாதிரி - மற்றொரு அரசு முத்திரை இராது. தமது தனித்துவத்தில் அவர்கள் கவனம் செலுத்தினர்.

கர்நாடக யாதவர்களின் ஆட்சியின் போது தேவகிரி அரசனின் முத்திரையில் ஹநுமானுடன் கருடனும் சேர்ந்திருக்கிறார். அந்த யாதவ அரசன் தன்னை த்வாராவதீ புரீச்வரன் என்றும் விஷ்ணுவம்சத்தில் பிறந்தவன் என்றும் பெருமை கொண்டாடினார்.

தாமிரப் பட்டயங்களிலும் இந்த கருட ஹநுமான் ஜோடி முத்திரை காணப்படுகிறது. அதே வம்சத்தில் வந்த த்ருடப்ரஹர - என்ற அரசன் -ஹநுமானை மட்டுமே முத்திரையில் பதித்துள்ளார். அதே யாதவ வம்சத்தைச் சார்ந்த மைசூர் அரசர்களும் தமது முத்திரைகளிலும் அரசாணைதாக்கீதுகளிலும் ஹநுமான் முத்திரையை பதிப்பித்திருக்கிறார்கள்.

சிவாஜிக்குப் பின் வந்த சில மஹாராஷ்ட்ரச் சிற்றரசர்கள் - ஹநுமான் பதித்த செப்புக்காசுகளை நாணயமாகக் செலாவணி செய்தார்கள். அவை வெகு நாட்கள் நீடிக்கவில்லை - மக்களே பல பகுதிகளில் அவற்றின் நாணய மதிப்பை ஏற்கவில்லை. பத்து ஆண்டுகளுக்குள் செப்பு உலோகத்தின் விலை சற்று ஏறிவிட்டதால் - மக்கள் ஹநுமான் பதித்த செப்புக்காசுகளைத் திரட்டிச் சேர்த்துக் கொண்டார்கள்.

# மூன்று வித சிற்பங்கள்

பொதுவாகவே பாரத நாடு எங்கிலும் காணப்படுகின்ற ஹநுமானின் சிற்பவடிவங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்

1. வீர ஹநுமான் - நேர்முகமாக கால்களை அகட்டி ஊன்றிக் கொண்டு கால்களில் பரட்டைத்தலைப் பெண் வடிவங்களையோ, கோரைப்பற்கள் தெரிய, வாய் பிளந்துள்ள அரக்கர்களையோ மிதித்துக்கொண்டு வாயில் பல்வரிசைகள் தெரிய, கர்ஜனை புரிகின்ற வடிவங்கள் வடநாட்டில் பரவலாக - எங்கும் கோவில்களிலும் - நகர நாற் சந்திகளிலும் உள்ளன.

2. தக்காணம் ஆந்திரா, கர்நாடகா முதலிய பிரதேசங்களில் பெரும்பாலும் ஸஞ்ஜீவிராய ஹநுமானின் மூர்த்திகள் அதிகம். அனேகமாகத் தனிக் கோயில்களிலேயே தர்சனம் அளிக்கின்றனர். இவற்றில் பக்கவாட்டில் (PROFILE) முகம் திரும்பியிருக்கும். முன்னே தூக்கிய இடது கையில் ஸஞ்ஜீவி மலை மார்பு முன்புறம் தெரிய - இடது கால் தூக்கிய பாய்ச்சல் நிலையில் - வலது கால் முட்டி மடங்கி முன்னங்கால் தரையில் ஊன்றிய நிலையும் பார்க்கலாம். வால் தலைக்கு மேலே தூக்கப்பட்டு வால் நுனியில் ஒரு சின்ன மணியுடன் விளங்கும்.

3. நேர்முகமாக கூப்பிய கரங்களுடன் உதட்டில் ராமநாமம் துலங்க வால் பின்புறம் தரையில் நுனி தெரியும்படி விநய ஆஞ்ஜநேயர். இத்தகைய மூர்த்திகள் பெரும் பாலும் தமிழ் நாட்டிலும் கேரளத்திலும் அதிகம்.

வடக்கே பெரும்பாலும் சுவற்றில் உப்புசம் கொடுத்து செதுக்கப்பட்ட ஸஞ்ஜீவிராய ஹநுமானின் மூர்த்திகள் ஸங்கட மோசநன் என்ற பெயருடன் தனி ஆலயங்களிலும் - மற்ற பிரதான மூர்த்திகளின் ஆலயங்களில் ப்ராகாரச் சுவர்களிலும் விளங்குகின்றன. சுற்றுச்சுவர்களில் செதுக்கப்பட்ட மூர்த்திகள் பக்தர்களின் நேரடி வழிபாட்டுக்குரியவை பலப்பல.

## ஹநுமானும் விபீஷணனும்

ஹநுமான் ஸீதாதேவியைத் தேடிக் கொண்டு -லங்கை சென்றார். இரவு நேரம் பௌர்ணமி நிலவு. நகரமே ஆழ்ந்த தூக்கத்தில் மூழ்கி இருக்கிறது. சந்தடி செய்யாமல் ராஜவீதியில் ஒவ்வொரு மாளிகையாக தாவித்தாவி - பரந்த முற்றங்களிலே இறங்கித் தேடுகிறார். அந்த மாளிகைகளின் இடையே ஒரு வித்யாஸமான மாளிகை. வீட்டு வாசற்புற அலங்கார வளைவில் இருபுறங்களிலும் விசாலமான தூண்களின் சுவர்களில் - ஒரு புறம் ''வில்'' இலச்சினை. அதன் மேல் புறம் வளேவில் அழகான வெண்கல மணி - அடிப்புறம்நாண்கயிறு ஒருவிதமாக மடித்து விடப்பட்டு இருக்கிறது - ஊன்றி கவனித்தால் ராம நாமம் தெரியும் மறு தூணில் ''அம்பு'' இலச்சினை அதன் மேல் புறம். முக்கால் வாசி தேய்ந்த துவாதசீ சந்த்ரவளைவு. கீழ்புறம் மிகக் கூரான அம்புநுனி. அந்த அலங்கார வளைவைத் தாண்டி உள்ளே போனால் - ஒரு துளஸிமாடம் ஆண்மார்பு உயர முடையது அதில் அடர்த்தியாகப் பரந்து விரிந்த - துளஸிச்செடி மற்ற மாளிகைகளில் காணப்படாத ஒரு தெய்வீகக்களை.

ஏதாவது, ஆலயமாக இருக்குமோ! என்று ஒரு கணம் சிந்திக்கிறார் ஹநுமான். மறுகணம் தலை அசைத்து அப்படி இருக்காது என்று உணர்ந்தார். அந்த ரம்யமான சூழ்நிலையில் - ராம ராம ராம என்ற மெல்லியதாக அவருடைய குரல் எழுந்தது.

இரண்டு மூன்று நிமிஷங்களில் வாசற் கதவுதிறந்து நெற்றியில் அமரிக்கையான திருமண். அடக்கமான மீசை துளஸி மாடத்தை கடந்து வந்தவர் -துளஸீ மாடத்தின் முன்புறம் கூப்பிய கையுடன் நின்றிருந்த ஒரு அந்தணனைகக்கண்டார். (நினைத்தவுடன் நினைத்த விதம் உருமாறுகின்ற ஹநுமான் வீட்டுச் சொந்தக்காரரை பண்பும் பக்தியும் நிறைந்த அரக்கர் கோமான் - என்று கண்டு இப்படிச் செய்தார்.

*வந்தவர் அவரை வணங்கினார்.*

*''தாங்கள் யாரோ? இலங்கையில் என்றுமே காணமுடியாத ஒரு தனி அந்தணரைக் காண எனக்கு வியப்பாக இருக்கிறது.''*

*உங்களைப் பார்த்தால் ஹரிதாஸர் என்று தோன்றுகிறதே. உங்களைக் கண்டவுடன் என் உள்ளத்தில் தங்களிடம் பக்தி பெருகுகிறதே! என் தெய்வம் ரகுவீரன் கருணை கூர்ந்து தன் அடியாரை அனுப்பி வைத்தாரோ. நான் அவ்வளவு பாக்கியம் பண்ணியிருக்கிறேனா?''*

*அப்போது ஹநுமான் தன் பெயர் கூறி தன் பிரபுவான ராமனுடைய சரிதம் தற்கால நிலையெல்லாம் சொல்லி நிறுத்தினார். அந்த மாளிகை அதிபர் தன்னை ராவணன் தம்பி விபீஷணன் என்று அறிமுகம் செய்து விட்டு ''இந்த அநாதனான தன் தாஸன் இப்படிஅரக்கர் கோட்டையில் மாட்டிக் கொண்டு தவிக்கிறானே என நினைத்து - சூரியகுலத் தோன்றலான என் பிரபு உம்மை அனுப்பி வைத்து கருணையைப் பொழிந்தாரோ! ராம நாமம் சொல்கிறேனே தவிர தாமஸ அரக்கர் பிறவி நான். நற்பண்புகள் கிடையாது. நல்ல ஸாதனைகள் ஒன்றும் புரிந்ததில்லை ராமனுடைய திருவடியில் பக்தியும் கிடையாது. பயந்து பயந்து ராம நாமம் சொல்கிறேனே தவிர பக்தி இல்லை எனக்கு தங்களின் தர்சனம் கிடைக்குமானால் அது பிரபுவின் க்ருபையினாலே தவிர என்னுடைய தகுதியால் அல்ல''*

*என்று ஹநுமானின் திருவடிகளில் வீழ்ந்து பற்றிக் கொண்டார். விபீஷணன் அவரைத் தூக்கி மார்புறத் தழுவினார். இருவரும் சேர்ந்த சில கணங்கள் ராம நாமம் ஓதினர்.*

*பிறகு ஹநுமான் சொன்னார் ''விபீஷணரே கேளும் நமது பிரபுவின் இயல்பு - வேறு யாரிடமும் காணமுடியாதது அவருக்கு அடியார்களிடம் அளவற்ற கருணை. அவனுடைய*

ஆசாரங்களையோ குணநலன்களையோ கருத மாட்டார்'' பிறவி கல்வி என்றெல்லாம் பார்க்க மாட்டார் நீங்களே பாருங்களேன் - நான் வாநரப்பிறவி. ஒருதகுதியும் அற்றவன். சஞ்சல புத்தியுடைய குரங்கு - நண்பரே இவ்வளவு தரம் கெட்டவன். என்னையே ஆட்கொண்டிருக்கிறாரே!

`விபீஷணன் இதைக் கேட்டு ராமனின் கருணை உள்ளத்தை நினைத்து - தனக்கும் கிடைக்கும் போலிருக்கிறதே ராமக்ருபை- என்று ஆறுதல் அடைந்தார்.

இந்த வரலாறு இவ்விதம் கோஸ்வாமிதுளஸிதாஸரால் தன்னுடைய ஸ்ரீராமசரித மாநஸத்தில் லங்காகாண்டத்தில் கூறப்படுகிறது.

## ஹநுமானைப் பற்றி மஹாத்மா காந்தி

1927 துவக்கத்தில் காந்திஜி ஸபர்மதியிலும் வார்தா ஆச்ரமத்திலும் மாற்றி மாற்றி இருந்துவந்தார். அப்போது அவர் எடுத்து கொண்ட செயற் திட்டம். சர்க்கா கதர் உற்பத்தி.

2. தீண்டாமை விலக்கு, 3.இந்து முஸ்லிம் ஒற்றுமை. இதற்காக அங்கிருந்து யாத்திரை மேற் கொண்டார்.

மஹாராஷ்ட்ரத்தில் ஸஞ்சாரம் செய்த போது - சில தொண்டர்கள் - வந்து வேண்டினர்.

''நாங்கள் - ஒரு உடற்பயிற்சி நிலையம் நடத்தி வருகிறோம். அங்கு எங்களுக்கு ஆதர்சமாக - ஒரு ஹநுமான் பிரதிமையை ப்ரதிஷ்டை செய்ய விரும்புகிறோம். தாங்கள் வந்து ஆசி அளிக்க வேண்டும்''.

மாணவர்களிடம் காந்திஜி அதிக அக்கரை காட்டினார். நாட்டில் மாணவர்களிடம் - தேசபக்தியை வளர்க்க வேண்டும். அதற்குரிய மனப்பண்புகளை - நடத்தையில் நன்னெறி, உற்ற வயதுள்ளவர்களுடன் சாதி, மதம் வேறுபாடின்றி - சகோதர பாவத்துடன் பழகுதல்,

வீண்பொழுது போக்காது, அடக்கமாக, துணிவுடன் உடற்கட்டைப் பேணிக்காத்து, நிமிர்ந்து நிற்பது, இவற்றில் ஊக்கமளிக்க வேண்டுமென நினைத்தார். அதற்குரிய சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை.

ஹநுமான் பிரதிஷ்டையில் காந்திஜி - மாணவர்களிடையே பேசினார்.

''குழந்தைகளே! உங்களுக்கு ஹநுமானைப் பற்றி ஏதாவது தெரியுமா? காற்றின் குமாரன்அவன். அவனுடைய பிம்பத்தை ஏன் நீங்கள் லட்சியமாகக் கொள்ள வேண்டும்? அவன் பெரிய போராளி என்பதற்காகவா! அவனுக்கு உடற்கட்டும் பலமும் இருந்தது என்பதற்காகவா? அவரைப் போல நமக்கும் உடலில் வலிமையும் திறமையும் செயல் சாதுர்யமும் இருக்க வேண்டும். இவை மட்டும் தானா நாம் ஹநுமானிடம் காண்பது? உடற்கட்டும் வீரமும் நமது லட்சியமானால் - நாம் ராவணனுடைய பிம்பத்தை ஆதர்சமாக வைத்துக் கொள்ளலாமே! ஹநுமானுடைய பலம் ராவணனுடையதை மிஞ்சி இருக்க முடியாதே. ஆனால் ஹநுமானிடம் ஆத்மபலம். என்கின்ற நன்னடத்தை - பிறரைத் துன்புறத்தாமை, பிறருடைய ஆபத்திற்குக் கை கொடுத்து மீட்பது, இவை ஆத்மபலம்.

ராவணனைவிட்டு ஹநுமானை லட்சியமாகக் கொள்வது - அவருடைய ஆத்ம பலத்திற்காகத்தான்.

ஸகல நற்பண்புகளுடைய ஸ்ரீராமனிடம் இருந்த ப்ரேமைக்காகத்தான் அவர் ராமனை அணுகினார். அந்தப் ப்ரேமை ஹநுமானுக்கு ஆத்மபலம் கொடுத்தது - நாம் இன்று வரட்டுப் போக்கிரியை லட்சியமாகக் கொள்ளவில்லை. நற்பண்பை லட்சியமாகக் கொள்கிறோம். அந்த லட்சியத்தில் தடுமாறாமல் மேன்மேலும் ஊக்கம் பெற்று - நாமும் மாருதி ஆகிவிட வேண்டும். ஹநுமான் நமக்கு உடல் வலிமையைக்கூட்டி வைக்கட்டும். ராமன் நமக்கு மாருதியின்

ஆத்ம பலத்தை அருளட்டும். அதன் பொருட்டு - நாம் பிரம்ம சரியத்தை மேற்கொண்டு - ஆத்ம பலம் பெறுவோம்'' என்று பேசினார். மற்றொரு சமயம் மாருதியின் பேச்சு வந்த போது கூறினார். நாம் எதற்காக மாருதியை தர்சனம் செய்ய வேண்டும்! மாருதி யார்? குரங்கு தானே! அப்படி நாம் நினைக்கவில்லை. அவருடைய உடல் வலிமையையும் புத்தி கூர்மையையும், எண்ணத்தில் நேர்மையையும் ஸேவை மனப்பான்மையையும் தான் நினைக்கிறோம்.

மாருதி அரக்கன் அல்ல. இந்திரஜித்தைப் போல ராமனிடம் பகை கொண்டவனல்ல. ஸ்ரீராமனுடைய சேவகன். பிரம்மசாரி. அதனால் அவருடைய ஆத்மபலம் பெருகிற்று. அவருடைய- தன்னலம் சிறுது கூட இல்லாத ஸேவை மனப்பான்மை - அதற்காக அவரை வணங்குகிறோம் - பாரத மாதாவின் ஸேவைக்கு ஊக்கம் அளிக்க வேண்டுகிறோம்.

ஒரு சமயம் தரித்திர நாராயணனுடைய ஸேவை பற்றிய பேச்சு வந்தது. காந்திஜி கூறினார்.

''என்னுடைய உள்ளத்தில் ஒரு தீபற்றி எரிகிறது. ஓயாமல் ஏழைகளுக்கு ஸேவை செய்ய வேண்டும். அந்த தீ அணையாமல் இருக்க ஒரு மறைப்பு வைத்திருக்கிறேன்.

ஹநுமானுக்கு ஒரு முத்து மாலை கிடைத்தது. அந்த மாலையை அறுத்து ஒவ்வொரு முத்தாக உடைத்துப் பார்த்தாராம்.

எல்லோரும் ஏன் இப்படிச் செய்கிறீர்? என்று கேட்டார்களாம்.

உள்ளே ராம நாமம் உள்ளதா? என்று பார்த்தேன். அது இல்லை. தூக்கி எறிகிறேன். ராம நாமம் இல்லாத எந்தப்பொருளும் எனக்குத் தேவை இல்லை என்றாராம் ஹநுமான்.

*உங்கள் உள்ளத்தில் ராமன் இருக்கிறான் - என்ற நினைப்போ? என்று மாருதியைக் கேட்டார்கள்.*

*இருக்கிறானா? இல்லையா? பார்த்து விடுங்களேன் என்று உடன் கூரிய தமது விரல் நகங்களினால் தமது மார்பைக் கீறி காட்டினாராம். உள்ளே ஸீதா லட்சுமண ஸமேத ராமன் தகதக வென்றுக் காட்சி அளித்தானாம். அப்படி என் உள்ளத்தில் இருக்கிறானா? என்பது எனக்குத் தெரியாது. உங்களில் யாரிடமாவது கைகளில் கூறிய நகம் இருந்தால் தாராளமாக- என் மார்பைக்கீறிப் பாருங்கள் ராமன் இருக்கிறானோ இல்லையோ தெரியாது -ஆனால் அவனுடைய ராம நாமம் நிச்சயமாக உள்ளது.*

*பிறகு பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அவருடைய மார்பில் குண்டு பாய்ந்த போது அவருடைய இதயத்திலிருந்து வந்தது. ''ராம ராம!''.*

இத்துடன்

**''ஜெய ஹநுமான் முதற் பகுதி''**

முடிகிறது.

# ஜய ஜய ஹநுமான்

## ஹநுமானின் திவ்ய சரித்திரம்

## முதல் பகுதி

### ஹநுமானின் அவதாரம்

***ஸீதாராம ப$_3$தாம்$_3$பு ஜே ம$_4$துபவ$_3$த் யந் மாநஸம் லீயதே***
***ஸீதாராம கு$_3$ணாவளீ நிசி$_3$திவா யஜ்ஜிஹ்வயாSSச்ரீயதே***
***ஸீதாராம ஸுப$_4$த்ர ரூபம நிசம் யச்சக்ஷுஷோ: பூஷணம்***
***ஸீதாராம ஸுநாம தேய ரஸிகம் தம் வாதஸூநும் பஜே ||***

*ஸீதாராமர்களுடைய திவ்ய சரணத் தாமரைகளில் தேன் வண்டுகள் போல மனது எப்போதும் மொய்த்துக் கொண்டுள்ளது. ஸீதாராம கல்யாண குணங்களை நாக்கு இரவு பகலாகப் பாடிக் கொண்டே இருக்கிறது - ஸீதா ராமர்களுடைய மங்கள ஸ்வரூபம் கண்களுக்கு அழகூட்டுகின்றது. ஸீதாராமர்களுடைய திருநாமத்தையே சொல்லிச் சொல்லிச் சுவைத்துக் கொண்டிருக்கின்ற அந்த வாயு குமாரனை சரண் புகுகின்றேன்.*

*ஸ்ரீகைலாஸத்தில் அன்று காலை ஒரே பரபரப்பு. ஸூர்யோதயமாகி பலநாழிகைகள் கடந்தும் பனி மூட்டத்தினால் வெளிச்சம் மங்கி இருக்கிறது. நித்யஸூரிகளான சிவ பக்தர்கள் ஸதா சிவ த்யானத்தில் அமைதியாக அமர்ந்திருந்தவர்களின் த்யானம் கலைந்து விட்டது. வேத முழக்கத்தின் ரீங்காரம் செவிகள் வழியாக உள்ளே புகுந்து நிறைவு பெறுகிறது.*

பனியைச் சுமந்து அசையாமல் காத்திருந்த காற்று - வீச ஆரம்பித்து விட்டது. எது அப்படி காற்றை வீச வைக்கிறது - என்று கண்களை விழித்துப் பார்த்த பக்தர்களுக்கு ஒரு காட்சி. இரண்டு விசாலமான தங்கமயமான இறக்கைகளை வீசிக் கொண்டு கருடன் தாழ்ந்து பறந்து வருகிறார். அவருடைய தோளின் மீது லக்ஷ்மீநாராயணர்கள் நெருங்கி அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் இருவரையும் சேர்த்துப் போத்திக் கொண்டிருந்த பீதாம்பரம் இருபுறமும் படபட வென்று காற்றில் அடித்துக் கொள்கின்றது.

ஸ்ரீகைலாய மஹாமண்டபத்தின் திருவாசலில் நந்திகேச்வரர் - தனது தங்கப் பிரம்பை வீசி - கருட பகவான் தரையில் இறங்க - இடம் காண்பிக்கிறார்.

கருட பகவானின் பாதங்கள் தரையில் ஊன்றி மடிந்து தாழ்வாகத் தரையில் அமர்ந்தன. ஸ்ரீலக்ஷ்மீ நாராயணர்கள் இறங்கிப் போத்திக் கொண்டிருந்த பீதாம்பரத்தை கருடனுடைய கழுத்தில் போட்டுவிட்டு நடந்து வருகிறார்கள்.

அதற்குள் பார்வதீ பரமேச்வரர்கள் மஹாமண்டப வாசலில். வாம தேவரும், மார்க்கண்டேய முனிவரும் - பூர்ண கும்பம் ஏந்தி வந்து நாராயணனுக்கு பில்வ மாலை சாத்துகிறார்கள். நாராயணர் பூர்ண கும்பம் ஏற்று பரமேச்வரனை ஆலிங்கனம் செய்து கொள்கிறார்.

பார்வதீ தேவி மணம் மிகுந்த சம்பக மாலையை லக்ஷ்மீதேவிக்கு அணிவித்து அணைத்துக் கொள்கிறாள்.

முனிவர்கள் ஸ்வஸ்திவாசநம்கூற இரு திவ்ய தம்பதிகளும் - மஹா மண்டபத்தில் ப்ரவேசித்து ஆஸ்தானத்துக்கு வந்து உரிய ஆஸனங்களில் அமர்கிறார்கள். ருத்ரகணிகைகள் - விபூதி ருத்ராக்ஷங்கள் துலங்க கவரி வீசுகிறார்கள்.

பரமேச்வரன்: வைகுண்ட திவ்ய தம்பதிகளின் சரண ஸ்பர்சத்தினால் கைலாஸமே பரமபாவனமாகின்து.

நாராயணன் : லோக நாயகர்களான கைலாய நாதரை தர்சித்து மனதை லேசாக்கி கொள்ளலாம் என்று தான் திரும்பும் வழியில் இங்கே வந்தோம்.

பரமேச்வரன்: நாராயணனுக்கு மனதில் பாரமா? ஆச்சரியமாக இருக்கிறதே!

நாராயணன்: செய்யக் கூடாததைச் செய்ய வேண்டிய நிர்பந்தத்தில் அகப்பட்டுக் கொண்டுவிட்டால் மனதில்பாரம் அழுத்தத் தானே செய்யும்?

பரமேச்வரன்: நாராயணனுக்குச் செய்யக் கூடாததைச் செய்யும்படி நிர்பந்தமா? இதுவும் ஆச்சரியம் தான். என்ன விஷயம்? சொல்லலாமே!

நாராயணன்: பூலோகத்தில் - தசரத மஹாராஜன் அச்வமேதயாகம் செய்கிறான். அந்தயாகத்திற்காக - மஹரிஷிகள் எல்லோரும் ரக்ஷோக்ந மந்திரங்களை ஜபித்து யாக சாலையைச் சுற்றிலும் காப்புக் கட்டி வைத்திருக்கிறார்கள்.

(1). ரக்ஷோக்ந மந்த்ரமென்றால் எங்கே இந்த மந்திரம் ஜபித்து ரக்ஷை கட்டியிருக்கிறாரோ அஸுர ராக்ஷஸர்கள் துர்தேவதைகள் அங்கே பிரவேசிக்க முடியாது. இது தான் காப்புக் கட்டுவது.

ராவணனுக்குப் பயந்து ஒளிந்து கொண்டிருந்த தேவர்கள். அங்கே தைரியமாக பிரஸந்நமானார்கள். அவர்கள் கூடி ராவண உபத்ரவத்தைப் பற்றி பிரஹ்மதேவனிடம் முறையிட்டார்கள். பிரம்ஹதேவன் - என்னை த்யானித்தார். அவருக்காக அங்கே போனேன்

- மனிதனாக அவதரித்து ராவண உபத்ரவத்தை நீக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். நானும் சரி என்று ஏற்றுக் கொண்டுவிட்டேன் - திரும்பு காலில் லக்ஷ்மீ தேவி சொன்னாள், ''ராவணன் பெரிய சிவபக்தன் ஆயிற்றே! அவனை வதம் செய்கிறேன் - என்று நீங்கள் ஏற்றுக் கொள்ளலாமா?'' என்று கேட்டாள்.

கேள்வி சரிதான் என்று எனக்கும் தோன்றிற்று சிக்கலைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று நேரே- வைகுண்டம் போகாமல் இங்கு வந்தேன்''.

பரமேச்வரன் கடகட வென்று சிரித்தார். எட்டி நின்று இவர்கள் - என்ன பேசுகிறார்கள் என்பது காதில் விழாத முனிவர்களின் காதுகளில் பரமேச்வரனுடைய வாய்விட்ட சிரிப்பு வீழ்ந்தது. அவர்கள் ஆச்சரியமாகப் பார்த்தார்கள். சிரிப்பு அடங்க சற்று நேரம் ஆயிற்று. நாராயணன் புன்னகையுடன் பரமேச்வரனைப் பார்த்தார்.

பரமேச்வரன் : இப்படி ஒரு தர்மஸங்கடம் உங்கள் மனதில் தோன்றலாமா?

நாராயணன் : பரம துஷ்டனானாலும் தங்களிடம் ஸாஹஸமாக பக்தி செய்து - தங்களை திருப்தி செய்திருக்கிறான். கைலாஸ பர்வதத்தையே தூக்கியிருக்கிறான். தங்கள் ஸந்நிதியில் வீணை வாசித்து ஸாம கானம் பண்ணியிருக்கிறான். அவனைத் தாங்கள் வாயாரக் கொண்டாடியிருக்கிறீர்கள். இதையெல்லாம் சொல்லியே - தனது பராக்ரமத்தைக் காட்டியிருக்கிறான்.

தேவர்கள் நடுங்கிக் கொண்டிருக்கின்றார்கள். அவனை நான் வதம் செய்வது உசிதமில்லை என்று தான் எனக்கு அச்சம்.

பரமேச்வரன் :- எனக்கு ஒரு கெட்ட குணம். என்னை ஒருவன் ஆச்ரயித்து விட்டால் அவன் நல்லவனா, கெட்டவனா - என்று பாராமல் அவனை ரக்ஷித்து விடுவேன்.

நாராயணன் : -இது கெட்ட குணமா? உங்களைப் பார்த்துத் தான் - நானும் ஒருவனுடைய குண தோஷங்களைப் பாராமல் ஆச்ரிதரக்ஷணம் செய்து வருகிறேன்.

பரமேச்வரன்: அதுசரி. பிறகு அவனைத் திருத்தி - நல்ல வழியில் செலுத்தி வருகிறீர்கள். நான் கொண்டாடி விட்டு அவனை மறந்து விடுவேன். இதை கவனித்து இந்த ராக்ஷஸர்களும் அஸுரர்களும் என் பெயரைச் சொல்லிக் கொண்டு அட்டஹாஸம் பண்ணுகிறார்கள்.

*நாராயணன் :- இவர்கள் எல்லோரும் தமோ குணம் பூண்டவர்கள். இவர்களுக்கு தர்மம் ஸத்யம் எல்லாம் தெரியாது. அதனால் நினைத்ததைச் செய்கிறார்கள்.*

*பரமேச்வரன் :- அதிலும் இந்த ராவணன் மஹாதுஷ்டன். மாலி, சுமாலி, பாணன், விரோசனன், இவர்கள் எல்லோரும் தாமஸப்ரகிருதிகளாக இருந்தாலும் கூட - ஸ்த்ரீகளை பலாத்காரம் செய்ய மாட்டார்கள். அந்த மஹாபாபத்தை இந்த ராவணன் செய்து கொண்டிருக்கிறான்.*

*அது இருக்கட்டும். நான் உங்களைக் கேட்கிறேன். இந்த ராவணன் யார்? தங்களுடைய த்வாரபாலகன் ஜயன் தானே? பரமஸாத்விகனாக இருந்ததால் தானே வைகுண்டத்திலே துவார பாலகப் பதவி அவனுக்கு கிடைத்தது! அந்த ஸாத்விகர்களுக்கு கொஞ்சம் கர்வம் வந்து விட்டது. அந்த கர்வத்தை அடக்க உங்கள் மாயையை ஏவி விட்டீர்கள். அவர்கள் ஸநகாதிகளிடம் அபசாரப் பட்டார்கள். முன்னே பின்னே இப்படி உண்டா? அந்தப்பரமஸாத்விகனுக்கு இவ்வளவு துஷ்டத்தனம் எப்படி வந்தது?*

*நாராயணன்:-க்ஷமிக்க வேண்டும். உங்களிடம் ஒளிப்பானேன்?ஜய விஜயர்களுக்கு நான் ஒரு தண்டனை விதித்தேன். ''நீங்கள் எனக்கு எதிரிகளாகப் பிறந்து எனக்கு விரோதமாக நடந்து கொள்ள வேண்டும். உங்களை நான் தண்டித்து மீட்பேன்'' என்று சொன்னேன். அவர்களுக்கு தமோ குணமே பிடித்து விட்டது. அவர்களுக்குப் பிடிவாதத்தை முறுக்கி விட்டு, அவர்களை கோரமான தவம் செய்ய வைத்துவிட்டது. நல்லவிதமோ, கெட்டவிதமோ - தவம் என்பதற்குத் - தானே பலம் உண்டாகுமே! அந்த பலத்தை உண்டாக்கி விட்டது.*

*பரமேச்வரன் :- நீங்கள் சொல்வது தான் சரி. ஸாத்விகமான தவமாக இருந்தால் அதனால் லோகத்திற்கே க்ஷேமம் உண்டு. ராஜஸமான தவமாக இருந்தால் - கொடுமையில்லாத அந்தத் தவம் அவனுக்கும் குடும்பத்திற்கும் க்ஷேமத்தைக் கொடுக்கும். ஆனால் தாமஸமான தவமும், தவம்*

தானானாலும் அதன் விளைவு லோகத்திற்கும் அவனுக்கும் ஹானியைத் தான் கொடுக்கும்.

பரமேஸ்வரன்-ஆனால் இந்தப்பாவி - எல்லையெல்லாம் மீறி - ஸ்த்ரீதர்மத்தைக் கெடுக்க ஆரம்பித்து விட்டானே - அது எப்படி என்று தான் புரியவில்லை.

நாராயணன் :- க்ஷமிக்க வேண்டும். என்னுடைய மாயையின் காரியம் இது. எவ்வளவு தான் கொடுமையாளன் ஆனாலும் இவனுடையதபோ பலமும் பரமேச்வர பக்தியும் சேர்ந்து அவனைக் காப்பாற்றி வருகிறது. அவை இரண்டையும் குறைத்தால் தான் அவனுக்கு ஹானி ஏற்படும் என்று நினைத்தாள் மாயை. பெண் பாவம் ரொம்பப் பொல்லாதது. அது இவனுடைய தபோபலத்தையும், பரமேச்வர பக்தியையும் கூட மாசுபடுத்தி விடும். அப்போது தான் அவனை அழிக்க முடியும் - என்று மாயை நினைத்து, அவனைப் பெண் பாவத்தில் இறக்கிவிட்டாள்.

அதை நினைத்துத்தான் ''ராவணனை அவனுடைய பெண்பாவமே கொன்றுவிடும் - நாம் கருவியாக மட்டும் இருப்போம்? என்று நினைத்துத் தான் - பிரம்ஹ தேவரிடம் அவனை வதம் செய்வதாக உறுதியளித்தேன்

பரமேச்வரன்:- ரொம்ப சரி. நீங்கள் எடுத்த முடிவு தான் யுக்தமானது.

பார்வதீதேவி :- அதெல்லாம் சரி. என் அண்ணாவை - அந்த மஹா கொடியவனிடம் மோதவிட்டு - நீங்கள் வேடிக்கை பார்க்கப் போகிறீர்களா? அவனுடைய தமோ குணம் அவனுக்கு முட்டாள் தனத்தை கொடுக்கவில்லை. அதீதமான ராக்ஷஸக் கொடுமையைக் கொடுத்திருக்கிறது. அண்ணா அவனை எப்படியாவது வதைத்து விடுவார். அதில் சந்தேஹமில்லை.

அதற்குள் அவன் அண்ணாவைப் படாதபாடு படுத்திவிட்டால்? அண்ணாவின் மாயை அளவற்ற சக்தி உடையது தான். ஆனால் அது நேர்மையானது.

ராவணனுடைய ராக்ஷஸமாயை நேர்மையற்றது. குடிலமானதும். அவன் மாயையினால் என்ன வேணுமானாலும் செய்வான்.

அண்ணா நேர்மையாளர். அவருடையமாயையும் நேர்மையானது. அதனுடன் ராக்ஷஸமாயையைச் சேர்த்துப் பார்க்கும் போது - எனக்கு பயமாக இருக்கிறது.

நாராயணன் :- தேவீ! இப்படியெல்லாம் கவலைப்படத் தேவை இல்லை. ராவண ஸம்ஹாரம் என்பது தர்மநியதியின் காரியம் - தர்மம் பொய்க்காது. அதன் நியதியில் கட்டுப்பட்டு நான் கடமையைச் செய்வேன். அது தானாக நடந்துவிடும்.

பரமேச்வரன்:- நாராயண! இப்போதுதான் உங்களுடைய மாயையை என் மீது விரிக்கிறீர்கள். ஸர்வவ்யாபகன் ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தன், தர்மநியதியே, நீங்கள் தான்.

ஆனாலும் பார்வதீ சொல்வதில் அர்த்தம் இருக்கிறது. நீங்கள் எடுக்கப்போவது மநுஷ்யாவதாரம் - மனுஷ்ய நியதியை நீங்கள் மீறாது நடந்து கொள்ளும் போது ராவணனுடைய கொடுமையைத் தங்களால் தாங்கமுடியாது.

மனுஷ்யநியதிக்கு அதீதமான தொல்லைகளுக்கு நீங்களும் லட்சுமியும் ஆட்படும் போது நான் கைலாஸத்தில் உட்கார்ந்து வேடிக்கை பார்க்க முடியாது - உசிதமில்லை. ஆகவே தேவீயின் விருப்பம் போல - நானும் பூமியில் வந்து பிறப்பேன். மனிதனாக அல்ல. மனிதனாகப் பிறந்தால் - நானும் நியதியை மீற முடியாது. அதனால் உங்களுக்கு எந்தவிதத்திலும் உதவி செய்ய முடியாது.

வாநரனாகப் பிறப்பேன். ஆனால் ஒரு நிபந்தனை, ஏவல் இட வேண்டியது உங்கள் காரியம். அதை எப்படி சாதிப்பேன் - என்பது என் இஷ்டம்.

நான் மனிதனாகப் பிறக்காததால் மநுஷ்ய நியதிக்கு - என்னைக் கட்டுப்படுத்த முடியாது. இப்போது கைலாஸத்திலிருந்து தேவிக்கு உபதேசித்து தாரக நாமம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதை பூவுலகில் பிறந்து ராம

நாமம் சொல்வேன். அது தான் எனக்கு எஜமான். அது என்ன தூண்டுகிறதோ அதைச் செய்வேன்.

நாராயணன்:- குறுக்கிடுவதற்கு மன்னிக்க வேண்டும். நான் இன்னும் உங்களை எனக்கு உதவி செய்ய வேணுமென்று வேண்டிக் கொள்ள வில்லையே?

பரமேச்வரன்:- என்னை உங்களுக்கு உதவி செய்ய அநுமதிக்க மாட்டீர்களோ?

நாராயணன்:- நான் யார் உங்கள் காரியத்தை அநுமதிப்பதற்கு?

பரமேச்வரன்:- அவ்வளவு தான். பார்வதீ! அண்ணா வந்திருக்கிறாரே - ஏதாவது விருந்து உண்டா?

பகவானுடைய மற்ற அவதாரங்களில் காணப்படாத முன்னேற்பாடுகள் ராமாவதாரத்திலும், க்ருஷ்ணாவதாரத்திலும், ஏற்பட்டன.

தேவர்கள் கூடி, பகவானை அவதாரம் செய்ய வேணுமென்று பிரார்த்தனை செய்தனர். ராமாவதாரத்தில் தேவர்களுக்கு தான் அவதரிக்கப் போவதாக வாக்களித்தார். க்ருஷ்ணாவதாரத்தில் பூமி தேவி பிரார்த்தனை செய்தாள். வஸுதேவ தேவகீகளுக்கு ''உங்களுக்குப் புத்திரனாக பிறக்கிறேன்? என்று வாக்களித்தார் -

மற்ற எந்த அவதாரத்திலும் பரமேச்வரன் தானும் அவதார காரியத்தை ஈடேற வைக்க உதவி செய்வதாக வாக்களிக்கவுமில்லை, அவதரிக்கவும் இல்லை. அது ராமாவதாரத்தின் தனிச்சிறப்பு.

அதுபோலவே ஹநுமானுடைய அவதாரத்திற்கும் சந்தர்ப்பச் சூழ்நிலைகள் முன்னமே உருவாகிவிடுகின்றன.

தேவேந்திரனுடைய ஸபையில் அப்ஸரஸ்கள் - என்ற தேவ கன்னிகைகள் அழகிலும் கலை ஆர்வத்திலும் சிறந்தவர்கள் உண்டு. அவர்களிலே முதன்மை பெற்றவள் புஞ்ஜிகஸ்தலா.

இந்த புஞ்ஜிகஸ்தலா - என்ற பெயர் வேதத்தில் சதப$_2$த ப்ராஹ்மணத்திலயே இடம் பெற்றிருக்கிறது. அந்த வேதப் பகுதியில் புஞ்ஜிகஸ்தலா என்பவள் - ஒருத்தி. திசைகளின் தேவதை. அப்ஸரஸுகளே - அமுதத்திற்காக தேவர்களும், அசுரர்களும் கூடிப் பாற்கடலை கடைந்த போது உதித்தவர்கள். ஆகவே அழகுக்கெல்லாம் அழகானவர்கள். நித்ய கன்னிகள். அவள் ஹிமயமலைச் சாரலில் உலாத்திக் கொண்டிருந்த போது ஒரு தாடி முனிவருக்கு முகம் கோணி அழகு காட்டினாள்.

அவர் ''அட குரங்கே'' என்றார். அவளுடைய முகம் வாநரமுகமாகி விட்டது.

அவள் நடுங்கிப் போய் விட்டாள். அவள் வருந்திப் பணிந்து முனிவரைத் தன்னை மன்னிக்க வேண்டினாள். முனிவர் சொன்னார்.

''நீ அழகு காட்டினதோ, நான் உன்னைக் குரங்கே என்று கூறினதோ நம் இயல்பினால் நடந்ததல்ல. நீயும் முனிவரைப் பரிஹஸிக்க மாட்டாய். நானும் இதைப் பொருட்படுத்துகின்ற இயல்புடையவன் அல்ல. தெய்வச் செயலாக நடந்திருக்கிறது.

நீ விரும்பாவிட்டால் முன்போல அப்ஸரஸ்முகத்தோடும் இருக்கலாம்'' என்று சொல்லி நகர்ந்தார்.

அவ்வமயம் மிகுந்த பௌருஷசாலியான வாநரன் - குஞ்ஜரன் என்ற பெயர் - வந்தான். அவனிடம் மோஹம் கொண்டாள். அவளுக்கு ஒரு வாநரப் பெண் பிறந்தாள். அவள் பிறந்த இடம் அஞ்ஜநாத்ரி - ஏழுமலைகளில் ஒன்று - அவளுக்கு அஞ்ஜநா என்ற பெயர் வைக்கப்பட்டது.

அவள் அஞ்ஜநாத்ரியில் வளர்ந்து கொண்டிருந்த போது மேருமலையிலிருந்து ஒரு வாநரவீரன் அங்கே வந்தான். அவனுடைய பெயர் கேஸரி. குங்குமப் பூ போல சிவந்த முகம் உடையவன். மிக அழகானவன். அஞ்ஜனையும் கேஸரியும் கூடி அஞ்ஜநாத்ரியிலேயே வாழ்ந்தனர்.

இதற்கு வெகுகாலம் முன்பே ஒரு அற்புதமான தைவீக நிகழ்ச்சி நடந்தது. தேவர்களும், அஸுரர்களும் சேர்ந்து பாற்கடலை கடைந்தனர். அங்கே ஒரு அமுதக் கலயம் தோன்றியது.

''நாம் கடைந்தது வீண் போகவில்லை -என்று உற்சாகத்துடன் அஸுரரும் தேவரும் அமுதத்தை அருந்த முனைந்தனர். அமுதக்கலசம் அஸுரர் கையில் அகப்பட்டுக் கொண்டது.

அப்போது அங்கே ஒரு மோஹினி வந்தாள் - லாகவமாக அஸுரன் கையிலிருந்து அமுதக் கலயத்தை வாங்கி தன் இடுப்பில் வைத்துக் கொண்டாள். ஒய்யாரமாக நடந்தாள்.

அஸுரரும் தேவரும் பவ்வியமாக அவள் பின்னே சென்றனர். சற்று தூரத்தில் ஒரு நதி. ''நீங்கள் எல்லோரும் நதியில் ஸ்நாநம செய்து விட்டு அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு - தேவர்கள் ஒரு புறமும், அஸுரர்கள் ஒரு புறமும் வரிசையாக அமருங்கள் - என்று கூறிவிட்டு அமுதத்தை இடுப்பில் வைத்துக் கொண்டே ஒய்யாரமாக உட்கார்ந்தாள்.

அவள் அந்தக் கலசத்தைக் கட்டி அணைத்து உட்கார்ந்து இருக்கின்ற அழகைப் பார்த்துக் கொண்டே ஸ்நாநம் செய்தார்கள். அநுஷ்டானம் செய்தார்கள். வரிசையாக தரையில் அமர்ந்தார்கள்.

அந்த மோஹினி அஸுரர்கள் பக்கமாக நடந்து கொண்டே - கையில் உள்ள நீண்ட அகப்பையினால் - அமுதத்தை எடுத்து எடுத்து எதிர்ப் பந்தியில் உட்கார்ந்திருந்த தேவர்களுக்கு பரிமாறினாள். அஸுரர்கள் அதைப் பார்க்கவில்லை. அவளுடைய தலைப் பின்னல் முதுகில் அழகாகப் புரள்வதையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஒரு அசுரப்பயல் பந்தி மாறி - தேவர் பந்திக்கு போனான். ஸூரியனுக்கும், சந்திரனுக்கும் இடையே இடைவெளி இருந்தது. அங்கே உட்கார்ந்து கொண்டான். கையை நீட்டினான். காலி அகப்பையினால் அவனுடைய

*கழுத்தில் ஒரு போடு போட்டாள் மோஹினி. தலைவேறு உடல் வேறாகிவிட்டது. ஆனால் அகப்பையில் ஒட்டிக் கொண்டிருந்த அமுதம் தலையின் வாயிலும் உடலின் கழுத்திலும் வீழ்ந்தது. அமுத ஸ்பர்சத்தினால் அவர்கள் சாகவில்லை.*

*ஸூர்ய சந்திரர்களின் இடையில் இவனாக வெளிச்சத்தில் உட்கார்ந்துவிட்டு - அவர்கள் தன்னைக் காட்டிக் கொடுத்து விட்டார்கள் - என்ற கோபத்தோடு ராகு கேதுக்கள் என்ற கிரஹங்களாக ஆகிவிட்ட அவர்கள் அடிக்கடி சூரிய சந்திரர்களை கிரஹணம் செய்து பீடிக்கிறார்கள்.*

*அதற்குள் அஸுரர்கள் தமக்கு அமுதம் வழங்காமல் மோஹிநி ஏமாற்றிவிட்டாள் - என்று நினைத்து மோஹினியைச் சூழ்ந்து கொண்டார்கள். மோஹிநியான பகவான் நாராயணன் மறைந்து விட்டான்.*

*புருஷோத்தமனான நாராயணன் ஒரு பெண் வேஷம். மிக அழகான மோஹிநீ வேஷம் போட்டார் - என்ற செய்தி கேட்டதும் பரமேச்வரனுக்கு ஒரே ஆவல் - அவருடைய ஆண்ஸ்வரூபமே புருஷர்களை மோஹிக்க செய்யும் -* ***பும்ஸாம் மோஹநரூபன்.*** *அவர் ஸ்திரீயாகவும் வந்தார் என்றால் அதை நாம் பார்க்கத் தவறி விட்டோமே என்று நினைத்தார்.*

*பரமேச்வரன் பார்வதீயையும் அழைத்துக் கொண்டு மஹாவிருஷபத்தில் ஏறி வைகுண்டம் வந்து சேர்ந்தார்.*

*அப்போது தான் வைகுண்டத்தில் வந்து இறங்கிய நாராயணன் கைலாஸ தம்பதிகளைப் பார்த்து ஆநந்தமாக வரவேற்றார். திருமாமணி மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார். நித்யஸூரிகள் ஸ்ரீருத்ரம் சொல்லி வரவேற்றார்கள்.*

*நாராயணன்:- என்ன இப்படி திடீர் விஜயம்?*

*பரமேச்வரன்:- ஸகல லோகங்களிலும் இதே பேச்சாக இருக்கிறது. அவ்விடத்திலே ஸ்த்ரீமோஹினிவேஷத்திலே ஸேவை ஸாதித்ததாகப் பேசிக் கொள்கிறார்கள்.*

திவ்யத்திலும் திவ்யம் பரமதிவ்யமாக இருந்ததாமே! நான் பார்க்க வேண்டாமா?

நாராயணன்:- தங்களுடைய சாந்தமான பரமாத்ம நிஷ்டையிலே இந்த அசட்டுத்தனம் ஒரு பெரிய விஷயமா? நாரதர் வந்து ஏதாவது சொன்னாரோ?

பரமேச்வரன்:- நாரதர் மஹா ரஸிகர். அவர் மட்டும் சொல்லவில்லை - ஸநகர் முதலான பரமஹம்ஸர்களே ஆச்சரியமாகச் சொல்கிறார்கள்.

அதை நான் தர்சித்து விடத்தான் வேண்டும்.

நாராயணன்:- அப்படியெல்லாம் சொல்லப்படாது அப்புறம் ''பூ! இவ்வளவு தானா?'' என்ற சொல்வீர்கள். உங்களுக்கு வீண் ஆயாஸம் வேண்டாம்.

பரமேச்வரன்: ஆயாஸமோ பாயஸமோ நான் பார்த்துவிட்டுத்தான் போவேன்''

திருமாமணி மண்டபத்திலிருந்து இருவரும் இறங்கினார்கள். அங்கே ஒரு அழகான நந்தவனம். மொட்டும் மலருமாக மரங்கள் எல்லாம் பச்சைப் பசேலென்று ஒளிபாய்ச்சிச் கொண்டு பூத்துக் குலுங்குகின்றன - அங்கு ஒரு லதாக்ருஹம் கொடிகளால் ஆன பந்தல். அதிலிருந்து ஒரு பதினைந்து வயதுப் பெண் பந்து ஆடிக்கொண்டு வந்தாள்.

பூமியில் தட்டி அது எழும்பும் போதெல்லாம் அவளும் எழும்பி தட்டுவாள். அந்த வேகத்தில் அவளுடைய மேலாடை காற்றில் பறந்து அப்பால் போய் விழுந்தது.

அவளுடைய தலைப்பின்னலில் கோத்திருந்த முல்லைச் சரம் மார்பிலே புரண்டது. தாவிக் குதித்த வேகத்தில் அவளுடைய இடுப்புச் சிற்றாடையும் நழுவிக் கீழே புரண்டது - அவள் வேகமாக லதாக்ருஹத்தில் மறைந்து விட்டாள்.

கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த பரமன் வேகமாக ஓடுகிறார். பார்வதியும் லட்சுமியும் கை கொட்டிச் சிரிக்கிறார்கள்.

லதாக்ருஹத்தில் புகுந்தவள் அங்கிருந்து பின்புறமாக ஓடி - படர்ந்த மாமரத்தடியில் மறைந்தாள்.

க்ருத்திவாஸ பரமேச்வரனின் யானைத் தோலாடை நழுவி விட்டது.

மார்க்கண்டேயரும் உமாதேவியரும் பின்னோடு ஓடுகிறார்கள். பரமேச்வரன் அவளைப் பிடித்துவிட்டார். வெடுக்கென்று தப்பித்துக் கொண்டு அவள் ஓடிவிட்டாள்-

பரமேச்வரன் ஓடினார். மார்க்கண்டேயரும். புரசமரத்தடியில் ஒரு காய்ந்த - புரச இலையின் மீது பாதரஸம் போல சிவபெருமானின் வீர்யம் உருண்டது.

அதை அப்படியே புரசு இலையோடு எடுத்து - தன்கையிலிருந்த வில்வக்காயில் குடைந்த குடுவையில் அந்த வீரியத்தை விட்டு அந்த குடுவையில் வாயை கோரோசன ரஸப்பசையினால் மூடிவிட்டார். பத்திரமாக எடுத்துக் கொண்டார் முனிவர்.

பரமேச்வரனும் நாராயணனும் கைகோத்துக் கொண்டு வந்தார்கள். மார்க்கண்டேயரிடம் பரமேச்வரன் கூறினார் - **மம மாயா துரத்யயா** - என் மாயையிலிருந்து மீளமுடியாது என்று நாராயணன் சொல்லியிருக்கிறாரே! அது ஸத்யம் தான் - என்று எனக்கு நிரூபித்து விட்டார். அடேயப்பா என்னமாயை? என்ன விலாஸம்?

நாராயணன் பூ! இவ்வளவு தானா - என்று நினைக்கின்ற தாங்கள் - என்னை உபசாரமாகப் பாராட்டுகிறீர்கள். அதை தலை பணிந்து ஏற்றுக் கொள்கிறேன் என்று சொல்லி மறைந்தார்.

மார்க்கண்டேயர் வில்வப்பழக் குடுவையை பரமேச்வரனிடம் காண்பித்தார். ''அதை நீரே வைத்துக் கொள்ளும். அதற்கு ஒரு உபயோகம் உண்டு''. என்று அன்று சொன்னதை நினைவுறுத்தி இப்போது பரமேச்வரன் மார்க்கண்டேயரிடம் கூறினார்.

''மஹரிஷே! குடுவை இருக்கிறதா?

''இதோ பத்திரமாக வைத்துக் கொண்டிருக்கிறேனே''.

பரமேச்வரன் - அதை எடுத்துக் கொண்டு போங்கள். அஞ்ஜநாத்ரியில் கர்ப்பிணியான அஞ்ஜனை படுத்துக் கொண்டிருப்பாள். அவளுடைய காதில் இந்தக் குடுவையில் உள்ளதை ஊற்றிவிடுங்கள்''.

மார்க்கண்டேயரும் அவ்விதமே செய்தார்.

அஞ்ஜநாத்ரியின் பக்கத்தில் ஸ்ரீகாளஹஸ்தியில் வாயு பகவான் பரமேச்வரனை ஆடாமல் அசங்காமல் த்யானம் செய்து கொண்டிருந்தார். அந்த ஸந்நிதியிலுள்ள தீபத்தில் இன்றுகூட தீபச்சுடர் அசையாமல் முத்துப்போல ஒளிரும்.

அவருக்கு ஒரு கவலை. பிரஹ்மதேவன் ஆணையிட்டுவிட்டார் - நீ ஒரு குமாரனைப் பெற்று - ராமாவதாரத்தில் கைங்கர்யம் செய்ய அனுப்ப வேண்டும் என்று அதை எப்படிச் செய்து முடிப்போம்? என்ற கவலை.

காளஹஸ்தீச்வரர் சொன்னார். அதோ அஞ்ஜநாத்ரியில் கர்ப்பிணியான அஞ்ஜநா என்ற வாநரப் பெண். வியர்க்க விருவிருக்க நின்று கொண்டிருக்கிறாள். அவள் மீது சுகமாக வீசி அவளைஸுகப்படுத்தினால் அவளிடம் உமக்குப் புத்திரன் பிறப்பான் என்றார்.

பரமேச்வர வீர்யம் காதில் புகுந்த மறுநாள் காலை அஞ்ஜனை மிகவும் உல்லாஸமாக - அஞ்ஜநாத்ரி தாழ்வரையில் நின்று கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு காற்று வீசியது.

அவளுடைய மேலாடை சிதறியது. உடலெல்லாம் ஜிலீர் என்று புல்லரித்தது. யாரோ தன்னை இறுக்கித் தழுவுவது போல - கூச்சம் ஏற்பட்டது. ஏதோ தனக்கு அசுத்தி வந்து விட்டது போல் திகைத்தாள்.

அப்போது வாயு பகவான் அவள் முன்னே பிரத்யக்ஷமாக நின்றார்.

''அழகியே! நான் வாயு தேவன். உன்னை உல்லாசமான நிலையில் பார்த்தேன். மனது உன்னிடம்

ஈடுபட்டது. உருவமற்ற நான் உன்னைத் தழுவினதால் உனக்கு மஹாவீரனான ஒரு குமாரன் பிறப்பான் -

நல்ல பலசாலியாக மிகுந்த தேஜஸ்வீயாக பராக்ரம ஸாஹஸங்கள் செய்யக் கூடிய பிள்ளையாக அவன் இருப்பான். என்னைப் போலவே தாவுவான். ஆகாயத்தில் பறப்பான். ராமனுக்கு ஸேவை செய்து பிரம்மசாரியாக இருப்பான்'' என்று சொன்னார்.

***மநஸாSஸ்மி க$_3$தோஹம் த்வாம் பரிஷ்வஜ்ய***
***யச$_+$ஸ்விநி।***
***வீர்யவாந் பு$_3$த்$_3$தி$_3$ஸம்பந்ந: தவ புத்ரோ ப$_4$விஷ்யதி ।।***
***மஹாஸத்த்வ: மஹாதேஜா: மஹாப$_3$ல பராக்ரம:।***
***லங்க$_4$நே ப்லவநே சை$_1$வ ப$_4$விஷ்யதிமயாஸம:।।***

என்று அருள்பாலித்தார்.

இந்திரன் தன்மாற்றாந் தாயான திதியின் கர்ப்பத்தில் தனக்கு விரோதி பிறக்கப் போகிறான் என்று அறிந்து - அவனை முளையில் கிள்ளிவிட நினைத்தான்.

திதி தேவி பகல் நேரத்தில் தாறுமாறாகப் படுத்திருந்த போது அவளுடைய கர்ப்பத்தில் நுழைந்து - அந்தக்கருவை தனது வஜ்ராயுதத்தினால் - ஏழு துண்டங்களாக வெட்டினான். அவற்றை - ஒவ்வொன்றையும் ஏழு துண்டுகளாக வெட்டினான். கச்யபருடைய தேஜஸ்ஆனதால் அந்த துண்டங்கள் சாகவில்லை.

அவற்றை நாற்பத்தொன்பது மருத்துக்களாக ஏற்றுக்கொண்டு ஆகாயத்தில் **வாதஸ்கந்தம்** என்று சொல்லப்படுகின்ற வாயு வீதியில் ஸஞ்சரிக்கச் செய்தான்.

அந்த மருத்துத் துண்டங்களில் ஒன்று பூமியிலே கனமாக - எல்லாவாயுத் தத்துவங்களுக்கும் ஆதாரமான ப்ராணதத்துவமாக அவர் கணபதி ஆனார் - கடைசியாக மருத்துத் துண்டம் லேசாகி - மற்ற மருத்துக்களுக்கு மேல் - எல்லா ஜீவர்களுக்கும் உள்ளே ப்ராணனாக மஹாவீர ஹநுமான் ஆனார்.

இவ்விதம் பல விதமான தெய்வானுகூலங்கள் கூடி - ஹநுமானுடைய அவதாரத்தைப் பெருமைப்படுத்தின.

அஞ்ஜநா தேவி முன்பெல்லாம் பலவிதமான விரதங்களை அநுஷ்டித்து வந்திருக்கிறாள். ஸுமேரு பர்வதத்தில் மஹா முனிவர்களின் தவமெல்லாம் தரிசித்திருக்கின்ற கேஸரி வீரனுக்கும் இயல்பாகவே மஹா பராக்ரமமும் அதே சமயம் மனக்கட்டுப்பாடும் அமைந்திருந்தன.

கருவுற்ற காலத்தில் கருவின் சேஷ்டையினால் இன்பமும், துன்பமும் கலந்தே வந்தன. நாராயண நாமம் சொல்லி பிரஸவத்தை எதிர் பார்த்திருந்தாள் அஞ்ஜநா.

***ஸித்$_{2}$தா$_{4}$ர்த்தி$_{2}$ வத்ஸரே மார்க$_{3}$சீர்ஷக்ருஷ்ண சதுர்த$_{3}$சீ***

***மூலபே$_{4}$ऽநில ரு$_{3}$த்ராம்ச:***

***கேஸர்யஞ்ஜநயோ:ஸுத: ||***

ஸித்தார்த்தி ஆண்டு மார்கழி மாதத்து க்ருஷ்ணசதுர்த்தசீ மூலநக்ஷத்திரம். வாயுவின் அம்சமாகவும் ருத்ரனின் அம்சமாகவும் - கேஸரியினுடையவும் அஞ்ஜநா தேவியினுடையவும் குமாரன் பிறந்தான் என்று **நாரத புராணம்** கூறுகிறது.

***சைத்ரே மாஸிஸிதே பக்ஷே ஹரிதி$_{3}$த்$_{2}$யாம் மக$_{4}$ாபி$_{4}$தே$_{4}$***
***நக்ஷத்ரே ஸ ஸமுத் பந்ந: ஹநுமாந் ரிபு ஸூதந: |***
***மஹாசை$_{1}$த்ரீ பூர்ணிமாயாம் ஸமுத்பந் நோऽஞ்ஜநீஸுத:***
***வதந்தி கல்பபே$_{4}$தே$_{3}$ந பு$_{3}$த$_{4}$ா இத்யாதி$_{3}$கேசந ||***

சித்திரை மாதம் சுக்ல பக்ஷ ஏகாதசியில் மகநக்ஷத்திரத்தில் பிறந்தார் - என்றும் சித்ரா பூர்ணிமையன்று ஹநுமான் பிறந்தார் என்றும் - ஒவ்வொரு கல்பத்தில் அவருடைய அவதார திதி நக்ஷத்திரங்கள் மாறுபட்டன என்று **ஆநந்தராமாயணம்** கூறுகிறது.

ஆனால் பொதுவாக தென்னாட்டில் பக்தர்கள் மார்கழி க்ருஷ்ண சதுர்தசி மூல நக்ஷத்திரத்தில் ஹநுமத்ஜயந்தி கொண்டாடுகிறார்கள்.

வட நாட்டில் சித்ரா பூர்ணிமையன்றும் - சைத்ர சுக்ல ஏகாதசியிலும் சில இடங்களில் மாறுதலாக ஹநுமத்ஜயந்தி கொண்டாடப்படுகிறது.

கிஷ்கிந்தையில் தவம் செய்து கொண்டிருந்த மதங்கமுனிவரை அணுகி - தனக்குப் புத்திரபாக்யம் அருள வேணுமென அஞ்ஜநாதேவி - பிரார்த்தித்தாள் - என்றும் - அவர் ''நீ வ்ருஷபாசலம் (திருப்பதி ஏழுமலைகளில் ஒன்று) போய் வெங்கடாசலபதியின் சரணங்களில் வீழ்ந்து - அங்கேயே ஆலயத்தைக் கூட்டி மெழுகி ஸேவை செய்து வந்தால் உனக்கு ஸத்புத்ரன் பிறப்பான்'' என்று அருள் பாலித்தார். அவள் அவ்விதமே ஸேவை செய்து பிள்ளையைப் பெற்றாள். இவ்வாறு சிவபுராணம் சதருத்ரஸம்ஹிதையில் கூறப்படுகிறது.

மார்கழி மாதத்தில் ஸூர்ய பகவான் கண்களுக்கு குளுமையாகவும், உடலுக்கு ஹிதமான கிரணங்களுடன் கீழ் திசையில் உதித்தார். அந்த மங்கள வேளையில் அஞ்ஜநா தேவி மகனைப் பெற்றாள். குழந்தை பளபள வென்று இளம் சூரியனின் சிவப்பு மேலிட்ட காந்தியுடன் பிறந்தது. பிறக்கும் போதே காதுகளில் மரகத ரத்ந குண்டலங்கள் ஜ்வலித்தன.

பிரஹ்ம தேவன் நேரே வந்து பார்த்தார். அஞ்ஜனையிடம் கூறினார். ''காதுகளில் உள்ள குண்டலங்களை எவரும் காண முடியாது. கவலைப்படாதே. முதன் முதல் எவருடைய கண்களில் இந்த குண்டலங்கள் காட்சியளிக்குமோ. அவர் தான் குழந்தையின் ப்ரபு'' என்று அநுக்ரஹித்தார்.

பிறந்த குழந்தைக்கு சிவந்த கம்பளிப் பனிக் குல்லாவையும் பீதாம்பர கௌபீநத்தையும் அளித்தார். தாய் முலைப்பால் ஊட்டினாள். குழந்தை கை கால்களை உதைத்துக் கொண்டு தாயாருக்குக் கிளுகிளுப்பு உண்டாக்கியது.

ஒரு வயதுக்குள்ளேயே குழந்தை தவழ ஆரம்பித்து விட்டது. ஸமதளமில்லாத மலைப் பகுதிகளில் ஏறியும்,

உருண்டும், எழுந்தும், தவழ்ந்தும், கைகளால் கூறான பாறை முகடுகளைப் பிடித்துக் கொண்டு குதித்தும், விளையாடியது.

தாயார் குழந்தையை மடியில் போட்டுக்கொண்டு நாராயண நாராயண என்றாள். குழந்தை மழலையில் என்னவோ உளறியது.

ப்ருகு மஹரிஷி வந்தார். குழந்தையைக் கையில் ஏந்தினார். ராம ராம என்றது. தாயாருக்கு பரம குதூகலம். ராம ராம சொல்லு என்றாள். கை கொட்டினாள்.

குழந்தையும் ராம ராம என்று கை கொட்டியது. தாயும், தந்தையும் மற்ற வேலைகளை மறந்தனர். ஒவ்வொரு கணமும் குழந்தை குதித்து குதித்து மேடு பள்ளங்களில் ஏறி விழுந்து அழுது அமர்க்களம் செய்தது

- ராம என்று தாய் சொன்னால் அழுகை நின்றுவிடும். இதை அருணாச்சலக் கவிராயர். அநுமன் பிள்ளைத் தமிழ் - என்ற மரபிலக்கியத்தில் பாடுகிறார்.

***மைவார் நறும் கூந்தல் அஞ்சனை***

***அமைந்த திருமஞ்சனக்களப மாட்டி***

***வார் நறும் சுண்ணம் திமிர்ந்து, திருநெற்றி மிசை***

***மணிநிலக்காப்பு மிட்டு***

***கைவார் நறும் குஞ்சிசூட்டி, மணிநூபுரக்***

***காலணிகலன்கள் பூட்டிக்***

***கைவிரல் சுவைத்தன்னை, மெய் விரற்சிந்தூர***

***காந்தி கொள் இரேகை தீட்டிப்***

***பெய் வாய் நறுத் தேறல் ஒழுக, ஒழுக்கக்கால்***

***பெயர்த்த முலை உண்டு, விம்பிப்***

***பெரு விழிக்கடை சிவந்தங் காந்து குறுநகை***

***பெருக்கி மணி முத்தமாடிச்***

*செவ்வாய் திறந்து, பலர் சீராட்ட வளர் குழவி*

*செங்கீரை யாடி அருளே*

*தீர திரி நேத்ரம் உள வீர அநுமந்தனே?*

*செங்கீரை ஆடி அருளே*

பிறந்த நாற்பது நாட்களுக்குள் கமகம வென்று நறும் கூந்தல் அழகியான அஞ்ஜனை - குழந்தையை கணுக்கால்களிடையே போட்டுக் கொண்டு - தரையில் அமர்ந்து - கஸ்தூரிகோ ரோசனை கலந்து காய்ச்சிய நல்லெண்ணையை தலையிலும் - கண்களிலும் பெய்து வழித்துக் கை கால்களைப் பிடித்து விட்டுக் களபமாட்டி குழந்தையை பூந்துகில் கொண்டு ஒத்தி ஒத்தித்துடைத்து விட்டு, கண்களுக்கு மைதீட்டி - நெற்றியில் பொடித்த முத்துத்துகளால் திலக மிட்டு - சுருள் சுருளான கேசங்களை கை விரலினால் கோதிவிட்டுப் பதிய வைத்து ரத்தினச்சரம் சூட்டி கால்களில் மணி நூபுரக் காலணிகள் பூட்டி குழந்தையின் பிஞ்சு விரல்களைத் தம் வாயினால் சுவைத்து முத்தமிட்டு விரல்களில் சிந்தூரம் தீட்டி உள்ளங்கைகளில் சிந்தூர ரேகை எழுதி வாயில் விரலிட்டுக்குதப்பும் கடை வாய் வழியே நறும் தேன் ஒழுக - அப்படி ஒழுக்கக்கால் - குழந்தை கையினால் குச கலசத்தைப் பெயர்த்து முலை உண்ணத் தாய் விடுகிறாள். குழந்தை பரபரப்பாக பெரு விழிக்கடை சிவந்து, அண்ணுந்து தாயின் முகம் பார்த்து குறு நகை பெருக்குகிறது. தாய் குழந்தை வாயில் முத்தமிடுகிறாள். குழந்தை - கால்களை உதைத்து - கைகளை ஆட்டி ஆட்டி அங்கிங்கு - உங்க என்றெல்லாம் செவ்வாய் திறந்து மழலை பேசும் போது - ஓடி வந்து சிறுபெண்கள் கைகொட்டி குழந்தை என்னோடு பேசுகிறான் - என்று குலவும் போது தீரனே - த்ரிநேத்ரம் உள்ள முக்கண்ணனின் அவதாரமே! வீர அநுமந்தனே - என்று அழைத்து செங்கீரை பாடி அருளே - என்று பாடுகிறார் அருணாச்சலக் கவி. குழந்தை மழலை உளரலை ரஸிக்கிறார். இதற்கு செங்கீரைப்பருவம் - என்ற மரபுப் பெயர்.

## பால லீலை

ஒரு நாள் காலை கேஸரீ வெளியே சென்றிருந்தார். அஞ்ஜனி ஒரு மரத்தில் தூளிகட்டி அதில் குழந்தையைப் போட்டுவிட்டு - நன்றாக ஆட்டினாள். நாராயண நாமம் பாடினாள். குழந்தை தூங்கிவிட்டது - கபில தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்யப் போய்விட்டாள்.

தூங்கின குழந்தை விழித்துக் கொண்டுவிட்டது - கண்களைக் குஞ்சு விரல்களால் கசக்கிக் கொண்டது. தூளியின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு எழுந்தது. அதற்குப்பசிவந்து விட்டது.

உரக்க அழுதது. சற்று நேரம் அழுதுவிட்டு தானே ஓய்ந்தது. கீழ்திசையிலிருந்து இளஞ் சூரியனின் சிவப்புக் கிரணம் பாய்ந்தது. அந்தப் பக்கம் திரும்பியது. ஆகாயத்தில் ஒரு மரத்தின் ஓரத்தில் ஒரு பழம்! செக்கச் செவே லென்று.

குழந்தை இரண்டு கைகளையும் நீட்டியது - கைகள் நீண்டு கொண்டே போயின.

மரக்கிளையைப் பிடித்துக் கொண்டன. குழந்தை தூளியிலிருந்து எழும்பியது. மரத்துக்கிளையில் தொத்திக் கொண்டது -

பழம் இன்னும் மேலே தெரிந்தது. கைகளை கிளைப் பிடிப்பை விட்டுவிட்டு விரித்து ஆகாயத்தில் பாய்ந்தது - ஸூர்ய பகவான் பார்த்து விட்டார்.

அன்று அமாவாசை. ராகு ஸூர்யனை கிரஹணம் செய்ய ஓடி வந்து கொண்டிருந்தான். அவன் ஸூர்ய மண்டலத்தை எட்டுவதற்குள் ஸூர்யன் ஒரு ஆரஞ்ஜுப்பழமாகக் கீழே இறங்கினார். தாவின குழந்தை வெடுக்கென ஆரஞ்ஜுப்பழத்தை வாயினால் கவ்வியது - விழுங்கிவிட்டது. உலகம் இருண்டு விட்டது. ஸூர்ய மண்டலத்தை எட்டின ராகு சூரிய மண்டலத்தையே காணாமல் இருட்டில் பரிதவித்தான்.

''உலகில் ஸூர்ய கிரஹணம் இன்று. அது விட்டதும் இருட்டு நீங்கி விடும்'' என்று காத்திருந்தனர். கிரஹண நேரம் தாண்டியும் வெளிச்சம் வரவில்லை.

ராகு த்ரிலோகாதிபதியான இந்திரனிடம் போய் முறையிட்டான் ''இன்று எனக்கு ஸூர்யனை கிரஹணம் செய்ய வேண்டிய நியதி உள்ளது. அதற்காகப் போனேன். சூரியனைக் காணோம் '' என்று முறையிட்டான்.

சூரியனை விழுங்கிய குழந்தை ஸூர்யனைக் கடிக்க முடியாமல் சூடு பொறுக்க முடியாமல் தவித்தது. அஞ்ஜநா தேவி வந்து பார்த்தாள். குழந்தை வாயில் ஓர் அக்நிப் பிண்டம். கைநீட்டினாள். உஷ்ணம் தாங்கவில்லை.

குழந்தை வீல் என்று கத்தினான். அது திசை எங்கும் எதிரொலித்தது ஸகலப்ராணிகளுடைய காதுகளையும் துளைத்தது. ஒருவர் பேசுவது மற்றவர் காதில் விழவில்லை. சைகை பாஷையில் பேசினர். ஒரே பேரிரைச்சல்.

தேவேந்திரன் ஓடோடி வந்தான், அஞ்ஜநமலையை அண்ட முடியவில்லை. ஒரே கொதிப்பு. அங்கே அஞ்ஜனை. அவள் மடியில் குழந்தை! அதன் வாயில் ஸூர்யக்குஞ்சு தகித்தது. அலறல் காதுகளில் பட்டு செவிடாகிவிட்டது.

தேவேந்திரன் எட்டியிருந்தபடி வஜ்ராயுதத்தை நீட்டினான் -குழந்தையின் வலது தாடையை லேசாகத் தட்டினான். ஸூர்யபிம்பம் இடது தாடைக்கு மாறிவிட்டது. அந்தப்பக்கம் வஜ்ராயுதத்தால் கொஞ்சம் வேகமாகத் தட்டினாள் -ஸூர்ய பிம்பம் வெளிப்பட்டு ஆகாயத்தில் சீறிப் பாய்ந்தது.

குழந்தையின் அலறல் ஓயவில்லை. அஞ்ஜனை குழந்தையின் இரு தாடைகளையும் இருகைகளால் தடவினாள். அவை நீண்டு இருந்தன. அவள் தடவத்தடவ குழந்தையின் அலறல் நிற்கவில்லை.

ஆகாசத்தில் தேவர்கள் கூடிவிட்டார்கள். ஸஞ்சரித்துக் கொண்டிருந்த வாயு பகவான் குழந்தையைப் பார்த்தார்.

குழந்தையின் தாடைகள் நீண்டு - வலி பொறுக்க முடியாமல் அலறுவதைப் பார்த்தார் - ஸ்தம்பித்து நின்று விட்டார். உலகெங்கும் வாயு ஸஞ்சாரம் நின்று விட்டது இலைகள் அசையவில்லை - ப்ராணிகள் மனிதர்கள், தேவர்கள், மூச்சு விடமுடியாமல் திணறினர்.

பிரம்ம தேவன் வந்தார். வாயு பகவானை கைகளால் அசைத்தார். அவர் திடுக்கிட்டுத் திரும்பினார்.

என்ன வாயு தேவா! ஏனிப்படி ஸ்தம்பித்து விட்டாய்?

வாயு தேவன்:- ''பாருங்கள் என் குழந்தையை'' பிரம்ம தேவன் குழந்தை அருகே சென்றார்.

கமண்டலுவிலிருந்து ஜலமெடுத்து -குழந்தையின் முகத்தில் தெளித்தார். குழந்தையின் அலறல் அடங்கியது. வாயுவின் சலனத்தடைவிடுபட்டு வாயுஸஞ்சாரம் ஏற்பட்டது. எல்லோரும் நிம்மதியாக மூச்சுவிட்டனர்.

பிரம்ஹ தேவன் அஞ்ஜநா தேவியைப் பார்த்துக் கேட்டார். ''என்னம்மா நடந்தது''.

அஞ்ஜநா:- ''குழந்தையைத் தூளியில் தூங்கவிட்டுக் கிளம்பினேனா-? கபில தீர்த்தத்துப் போனேனா? ஸ்நானம் செய்தேனா? அங்கே சிலர் பேசிக் கொண்டிருந்தனர். இன்று ஸௌர்ய கிரஹணம் -ஐந்து நிமிஷத்தில் பிடிக்கப் போகிறது.

எனக்கு பயமாகப் போய்விட்டது. ஓடோடி வந்தேனா? -குழந்தை பாறையில் கிடந்தான் - என்னவோ ஏதோ என்று நெருங்கினேனா? ஆகாசத்திலே ராகு கிரஹம் ஸௌர்யனைத் துரத்திக் கொண்டு வந்ததா? ஸௌரியன் பயந்து போய் - ஆரஞ்ஜுப்பழம் மாதிரி - குழந்தை வாயில் புகுந்து ஒளிந்து கொண்டு விட்டார்'' என்றாள்.

பிரஹ்மதேவனுக்குத்தான் உண்மை தெரியுமே! ஆகாயத்தில் தன்னைப் பார்த்துப் பாய்ந்து பறந்து வருகின்ற குழந்தை தன்னைப் பழம் என்று நினைத்து பறந்து வருகிறதே - என்ற கருணையினால் ஸௌர்ய பகவான் லீலையாக குழந்தை

வாயில் புகுந்து விட்டார். ஆனாலும் அஞ்ஜநா தேவியின் கற்பனை வளத்தை ரஸித்தார்.

''அப்புறம்'' - என்று கேட்டார்.

தேவேந்திரன் வந்து வஜ்ராயுத்தத்தால் ஓங்கி அடித்து விட்டான். ஸூர்ய பகவான் பறந்து போய்விட்டான். பாருங்கோ குழந்தையை. எவ்வளவு அழகாக இருப்பான் தெரியுமா! அவனுக்கு ஸுந்தரன் என்று பெயர் வைத்திருக்கிறேன்.

பிரம்ஹதேவன் ''இப்போது தான் குழந்தை ரொம்ப அழகாக இருக்கிறான். காதுகளில் குண்டலம் சரியாக இருக்கிறதா பார்? அஞ்ஜநாதேவி தடவிப் பார்த்தாள். குண்டலங்கள் இருந்தன.

இந்திரன் சொன்னான் ''அஞ்ஜநாதேவி! குழந்தை பிரம்ஹ தேவர் சொன்னது போல மிக அழகாக இருக்கிறான். தாடை நீண்டிருப்பதே அந்த அழகுக்குச் காரணம். அவன் பெயர் ஹநுமான். நீ வைத்த பெயரைக் காட்டிலும் நான் வைத்த பெயர் தான் இனி விளங்கப்போகிறது.

ப்ரமஹதேவர்: அஞ்ஜநாதேவி! ஸந்தோஷப்படுவாய் - உன் பிள்ளை மஹா பராக்ரம சாலியாக விளங்கப் போகிறான். நான் சொல்கிறேன் - என்னுடைய பிரஹ்மாஸ்த்ரம் அமோகமானது. அதன் அடி- அடிபட்டவனின் உயிரை வாங்கியே தீரும். அது உன் பிள்ளையிடம் பலிக்காது.

அவனால் நினைத்த உருவத்தை எடுத்துக் கொள்ள முடியும். பெரிய காரியங்களை ஸாதிக்க போகிறான்.

ஸ்ரீமன் நாராயணனுடைய வரப் போகின்ற அவதாரத்தில் அவன் அவருடைய தாஸனாக இருக்கப் போகிறான். அவருக்கு வெற்றி தேடி தரப் போகிறான்.

அவன் புகழ் மூவுலகத்திலும் பரவும். அவன் சிரஞ்ஜீவியாயிருந்து ஸகலஜீவர்களுக்கும் பரம உபகாரியாக இருக்கப் போகிறாள்.

அடுத்த கல்பத்தில் - என் ஸ்தானத்தில் பிரஹ்மதேவனாக விளங்கப் போகிறான். உன்னைப் போல பாக்யவதி பிரபஞ்சத்திலேயே கிடையாது - என்றும் உன் புகழ்விளங்கப் போகிறது'' என்று ஆறுதல் கூறினார். தேவர் கூட்டம் கலைந்தது.

ஹநுமானுக்கு வயது இரண்டு. ஒரு நாள் ஒரு மரத்தின் உச்சிக்கிளையில் ஏறினான். அங்குமிங்கும் பார்த்தான் -

வடக்கே விடியற்காலையில் ஒரு பெரிய வெளிச்சம் - கிழக்கே பார்த்தான், அப்போது தான் விடி வெள்ளி உதித்துக் கொண்டிருந்தது. ஆனால் வடக்கே, ஒரு ஆச்சரியமான வெளிச்சம். மரத்திற்கு மரம் தாவினான் - ஓரே குறியாக வடக்கே பாயப்பாய - அந்த வெளிச்சம் எட்டியே இருந்தது.

ஆனால் முன்னை விட பிரகாசம் அதிகம். மரங்களிலிருந்து - மலைமுகடுகளின் மீது தாவினான் - கீழே பெரிய நகரங்கள் , நதிகள். அத்தனையையும் கவனியாமல் அந்த வெளிச்சத்தை நோக்கிப் பாய்ந்து கொண்டே போனான்.

ஒரு மஹா நகரத்தின் தோரண வாசல். அதன் உச்சியில் அமர்ந்து நோட்டம் விட்டான் -

பளபளவென்று ஒரு அரண்மனை. அதன் மதில் சுவர் மீது தாவினான். உள்ளே அழகான தோட்டத்து மத்தியில் ஓர் மாளிகை. அந்த மாளிகையின் மேல் மட்டத்தில் -வழவழ வென்று தாழ்வாரம். அதன் கைப்பிடிச்சுவரில் உட்கார்ந்து கொண்டான்.

அங்கே ஒரு தாயார். சுற்றிலும் நான்கு அழகான குழந்தைகள். நால்வரும் இவனைப் பார்த்து விட்டனர். வயது மூன்று இருக்கும்.

அயோத்திமாநகரம். தசரதரின் அரண்மனை. கௌஸல்யாதேவி, ராமலட்சுமண, பரத, சத்ருக்நர்களுக்கு- காலை ஆஹாரம் கொடுத்துக் கொண்டிருக்கிறாள்.

ராமன் ஹநுமானைப் பார்த்துவிட்டான். ஓடி வந்தான் - கைப்பிடிச்சுவரின் மேலேயே ஹநுமான் இங்கும் அங்கும் பாய்ந்தான். குழந்தைகள் பாய்ச்சல் காட்டின.

கௌஸல்யாதேவி தங்கக்கிண்ணத்திலிருந்து ஒரு ஸ்பூன் பாயஸம் எடுத்து ராமன் திறந்த வாயில் ஸ்பூனைச் செறுகினாள் - ராமன் பாயஸத்தைத் துப்பினான்

ஹநுமான். வாய் பிளந்து லபக் கென நாக்கை நீட்டி அந்தப்பாயஸத் துப்பலை ஏந்தி விட்டான்.

பரத லட்சுமண, சத்ருக்நர்கள் கை கொட்டிச் சிரித்தனர். எல்லோரும் சேர்ந்து பாயஸம் துப்ப ஆரம்பித்தனர். ஒரு துளி கீழே விழாமல் ஹநுமான் நாக்கை நீட்டி நீட்டி கவ்வினான்.

கௌஸல்யா தேவி பாயஸக்கிண்ணத்தை வழித்துக் கையில் எடுத்துக் கொண்டு நீட்டினாள். ஹநுமான் பயந்து கீழே வந்து நாக்கை நீட்டி தேவியின் கையை நக்கி எடுத்துக் கொண்டான்.

குழந்தைகளுக்குக் குரங்குக் குஞ்சை ரொம்ப பிடித்து விட்டது. ஹநுமான் அரண்மனைத் தோட்டத்தில் ஜிலுஜிலு வென்று தூங்கிவிட்டு - விடியற்காலம் - அரண்மனை மேல் மாடத்திற்கு வந்து விடுவான்.

ராமன் முதலிய குழந்தைகள் அரண்மனையின் ஆஜாரமைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அதை மேல் மாடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த ஹநுமான் பாய்ந்தோடி வந்தான். சகோதரர்கள் பந்து விளையாடிக் கொண்டிருந்தனர்.

ராமன் பந்தை ஆகாயத்தில் தூக்கி எறிவான் - ஸஹோதரர்கள் போட்டி போட்டுக் கொண்டு - அதை எட்டிப்பிடிப்பார்கள். அந்த ஆஜாரச்சதுரத்திற்கு அப்பால் பந்து வீழ்ந்தால் அதைத்தரை தட்டுவதற்கு முன் - ஹநுமான் தாவிப்பிடித்துக் கொண்டு வந்து நால்வர் சரணங்களில் கொண்டு சேர்ப்பான்.

குழந்தைகளுக்கு எல்லை வெளியில் ஹநுமானுக்காகப் பந்து போடுவதில் குதூஹலம் - எந்தத்திசையில் பந்து பாயுமோ அதே திசைக்கு ஹநுமான்

பாய்ந்து போய் கீழே விழுவதற்குள் பிடிப்பதைப் பார்த்து சஹோதரர்கள் ஆநந்த ஆரவாரம் செய்வார்கள்.

குழந்தையைக் காணாமல் அஞ்ஜநாதேவி தவியாய் தவித்தாள். வாயு பகவானைத்யானித்து, அவருடைய தர்சனம் பெற்று ''குழந்தையைக் காணோமே'' - என்று புலம்பினாள் -

வாயு பகவான் ஹநுமான் அயோத்தியில் ராம லட்சுமணர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கிறான் என்ற சேதி சொன்னார். அதைக் கேட்டு நிம்மதியடைவாள் -

குழந்தைகளுக்கு ஐந்து வயது. அவர்களுக்குப் பல ஆசிரியர்கள் வந்து வந்து பல வித்தைகளைக் கற்பிக்க ஆரம்பித்தனர். குழந்தைகளை வெளியிலே காணாமல், செய்வதறியாமல் சுணங்கி - ஹநுமான் அஞ்ஜநாத்திரி திரும்பினார்.

அஞ்ஜனை குழந்தையை நினைத்து நினைத்து இனி வரவே மாட்டான் - என்று அலுத்துப் போய்விட்டாள். வெங்கடாசலபதி ஸந்நிதியில் அமர்ந்திருந்தவள் மடியில் பொத்தென விழுந்து அம்மாவைக் கட்டிக் கொண்டான் ஹநுமான்.

தாயார் குழந்தையை வாரி அணைத்தாள். உச்சி முகர்ந்தாள். என் கண்ணே என்று முத்தமிட்டாள்.

ஏழுமலைக் காடுகளில் மான், முயல், புலி, சிங்கம், சிறுத்தை முதலிய மிருகங்கள் ஏராளம். அவற்றோடு வாநரர்களும் அதிகம். ஐந்து வயது ஹநுமான் பயமற்று அந்த மிருகங்களுடன் விளையாடினான் - புலிக்குட்டிகளை வாலினால் சுருட்டிக் எடுத்துக் கொண்டு மரக்கிளைகளில் வைத்து விடுவான். சிங்கக்குட்டிகளின் கழுத்தில் வாலைச்சுற்றி அதன் முதுகில் ஏறி அமர்ந்து சவாரி செய்வான்.

மான் குட்டியின் வாயில் தன்னுடைய மெல்லிய வாலைக் கொடுப்பான். அது வாலைக் கவ்விக் கொள்ளும். அதை வைத்துக்கொண்டு தட்டாமாலை சுற்றுவான். அதைப் பார்த்த மற்ற முயல் குட்டிகளும் ஹநுமான் வாலை

வாயினால் பற்றிக் கொள்ளும். எல்லாவற்றையும் சேர்த்து வேகமாகத் தட்டாமாலை சுற்றுவான். அந்த வேகம் தாங்காமல் முயல் குட்டிகள் பொத்து பொத்தென நாலா பக்கங்களிலும் விழுந்து ஓடிவிடும்.

ஒரு மரத்தின் கிளையில் உட்கார்ந்திருந்தான். கீழே ஒரு பெரிய பாம்புப்புற்று. அதிலிருந்து ஒரு கரு நாகம் வெளிப்பட்டது. புற்றிலிருந்து வெளிப்பட்டு - மெதுவாகத் தலையை தூக்கிப் படம் எடுத்தது - மரக்கிளையில் இருந்த ஹநுமான் அதைப் பார்த்து விட்டான்.

உர்ரென்றான். நாகம் சத்தம் வந்த திசையில் பார்த்தது. ஹநுமான் உர்ரென்றான். நாகம் உடலை நிமிர்த்தி ஹநுமானை உற்றுப் பார்த்தது - பலநிமிடங்கள் ஆகிவிட்டன. நாகத்தின் பார்வையில் கட்டுப்பட்ட ஹநுமானும், ஹநுமானின் பார்வையில் கட்டுப்பட்ட நாகமும், அசையாமல் ஒன்றை ஒன்று பார்த்தன. எங்கிருந்தோ ஒரு கீரிப் பிள்ளை ஓடி வந்தது - கருநாகம் பரபர வென்று பாய்ந்து புற்றுக்குள் மறைந்து விட்டது. ஹநுமான் பிறகு தான் மரக்கிளையிலிருந்து இறங்கினான்.

ஏழுமலைச்சிகரங்களில் சித்தர்களும் ருஷிகளும் தவம் செய்து கொண்டிருந்தனர். ஹநுமான் அவர்களிடம் போய் உட்கார்ந்து கொண்டு அவர்கள் - ஆசமனம் ப்ராணாயாமம் சிரஸ் மூக்கு மார்புகளைத் தொடுவது கைகளை குதிரை முகப்பைகளில் விட்டுச் ஜபம் செய்வதையெல்லாம் பார்த்துப் பார்த்து விட்டு ஓடிப்போய் தாயாரின் முன்னே உட்கார்ந்து அவர்கள் செய்த மாதிரியே செய்து காட்டுவான். தாயார் விழுந்து விழுந்து சிரிப்பாள்.

ருஷிகள் ஸாலக்ராம மூர்த்திக்குப் பூஜை செய்துவிட்டு - த்யானம் செய்யக் கண்ணை மூடுவார்கள். ஹநுமான் உடனே கிட்டச் சென்று - அந்த ஸாலக்ராம மூர்த்தியை எடுத்து கடை வாயில் அடக்கிக் கொள்வான். த்யானம் கலைந்து ருஷி கண்ணைத் திறந்து எதிரே பார்த்தால் புஷ்பங்கள் எல்லாம் கலைந்து கிடக்கின்றன.

ஸாலக்ராமத்தைக் காணோம். அங்கும் இங்கும் உருண்டு போய் விட்டதோ - என்று பார்ப்பார், துளாவுவார். ராம ராம நீ எங்கே போய்ட்டே? என்று கூச்சலிடுவார்.

ராம நாமம் கேட்டதும் ஹநுமான் ஓடிவந்து கடைவாயில் வைத்துக் கொண்டிருந்த ஸாலகிராமத்தை துப்புவான். ருஷி அவனை அடிப்பதற்காகக் கை ஓங்குவார்.

கேஸரியும், அஞ்ஜனையும் ஓடோடி வருவார்கள். ருஷிகளின் கால்களில் வீழ்வார்கள். ''ஐயா நாங்கள் தவம் கிடந்து பெற்றபிள்ளை ஐயா - பிரம்ம தேவன் வரம் பெற்ற பிள்ளை ஐயா - அவனை அடித்து விடாதீர்கள் என்று கெஞ்சுவார்கள்.

அவர்களுக்கு அந்தக் கதை தெரியுமே! ''அந்த ஹநுமானா? என்று மூக்கில் விரல் வைப்பார்கள். இப்படிப்பல ருஷிகள் ஆச்ரமங்களுக்குப் போய் பல தொல்லைகள் கொடுப்பான். அவர்கள் அவனை கெஞ்சுவார்கள். ஒரு குட்டிக் கரணம் போட்டுவிட்டு ஹநுமான் ஓடிவிடுவான்.

மறுபடியும் தொல்லை கொடுப்பான். அவர்கள் எல்லோரும் சேர்ந்து ஆலோசித்தார்கள். பகவானுடைய அநுக்ரஹம் பெற்ற ஹநுமானை - ஒன்றும் செய்யக்கூடாது தான். ஆனால் தொல்லை தாங்கவில்லையே!

மதங்க முனிவரிடம் சென்றார்கள். தொல்லைகளைச் சொன்னார்கள். மதங்கர் சற்று தியானித்தார். ''இவனுடைய வீர பராக்ரமங்கள் எல்லாம் பகவான் ஸ்ரீராமச்சந்திரனை இவன் தர்சனம் செய்கின்ற வரை மறைந்தே இருக்கும். கவலைப்படாதீர்கள்'' என்றார். ஹநுமான் விஷமங்கள் குறைந்து ஸாதுவாகி விட்டான்.



## வித்யாப்யாஸம்

*வாநர ராஜன் கேஸரீ தன் தனயனுக்கு வயது ஏழாகிவிட்டதே - என்று உபநயனம் செய்து வைத்தார். தண்டகவனத்து ரிஷிகளான், சரபங்கர், ஸுதீக்ஷ்ணர், முதலானோர் கூட இருந்து - மங்களமாக ஹநுமானுக்கு உபநயனம் செய்வித்தனர்.*

*மறுநாள் காலை ஹநுமான் - தாய் பக்கத்தில் உட்கார்ந்திருந்து கவனிக்க - ஆயிரம் ஆவ்ருத்தி - காயத்ரீ ஜபம் செய்தான்.*

*ஸூர்யோதயம் ஆக சில விநாடிகள் மீதம் இருந்தன. அஞ்ஜநாத்ரி மலை முகட்டில் நின்று உதய ஸூர்யனை தர்சித்தார். கிழக்கே வெகு தூரத்தில் - கடல் அலை மீது ஸூர்ய ரதம் எழும்புவதைக் கண்ணாரக் கண்டார் - கீழே பொய்கையில் தாமரை மலர்ந்தது - அதை எடுத்து சூரிய பகவான் முன்னே இரு கரங்களாலும் நீட்டினார். ஸூர்ய பகவான் தன்னை அழைப்பது போலத் தோன்றியது -*

*எம்பினார், தாவினார் சில நொடிகளில் ஸூர்ய ரதத்தின் முன்னே நின்ற ஹநுமானை ஸூர்ய பகவான் கண்குளிரக் கடாட்சித்தார்.*

*ஸூர்ய பகவான்:- என்னப்பா? எங்கே வந்தாய்? என்னை விழுங்கலாம் என்று வந்தாயோ!*

*ஹநுமான்: ஸவிதாவே! தாங்கள் அழைத்தது போல தோன்றியது வந்தேன். எனக்கு ஸகல வித்தைகளையும் கற்பிக்க வேண்டும்.''*

*ஸூர்யன்: உன்னுடைய ச்ரத்தை - என் உள்ளத்தை உருக்குகிறது. உன் பிரார்த்தனையை நிறைவேற்ற எனக்கு இஷ்டம் தான். ஆனால் - எனக்குப் பரமன் இட்ட கடமை - ஒரு கணம் ஓயாமல் பிரபஞ்சத்தைச் சுற்றி வந்து - வெளிச்சம் போட்டு - எங்கும் என் கிரணங்களால் ஆரோக்கியத்தைப் பரப்ப வேண்டும். ஒரு கணம் கூட என்னால் நின்று பேச முடியாது. உன்னை உட்கார்த்தி வைத்து - நான் உன் முன்னே*

*அமர்ந்து பாடம் சொல்வது ஸாத்தியமாகாதே, என் செய்வேன்?*

*ஹநுமான்: குருதேவ! நான் வாயு குமாரன். என்தந்தை எப்பொழுதும் ஸஞ்சரித்துக் கொண்டே இருப்பவர். அவர் என்னை தாங்குவார். நான் தங்கள் முன்னே பின் நடையாக ஓடுவேன். ஓடி ஓடிப் பாடம் படிப்பேன்.*

*ஸூர்யன்: அப்படியா? பரம் பொருளின் பிரேரணை - உனக்கு இவ்விதம் புத்தி அருளி - என் முன்னே கொண்டு வைத்திருக்கிறது. கையிலே என்ன?*

*ஹநுமான்: ஸமிதாதானம் செய்வதற்காக சில ஸமித்துகள்.*

*ஸூர்யன்: அவற்றை என் முன்னே வை.*

*சொல் ''ஹரி: ஓம்''*

*ஹநுமான்: ''ஹரி: ஓம்''*

*பாடம் ஆரம்பித்து விட்டது. ஸூர்ய ரதத்தின் முன்னே பின் நடையாக நடப்பவருக்கு இரவு பகலோ - நாட்கள் மாதங்களோ தெரியாது. ஸூர்யகிரணங்கள் பாய்வது போல - ஸகல வித்யைகளும் - ஹநுமான் புத்தியிலே பாய்ந்தன. ஸூர்யன் அருளால் நிறைவு பெற்றன''*

***மேத$_4$ாவீ பூ$_4$யாஸம் வர்ச்சஸ்வீ பூ$_4$யாஸம்***

***பிரம்ஹ வர்ச்சஸீ பூ$_4$யாஸம்***

*என்று ஹநுமான் பிராத்தித்தார்.*

*ஸகல தேவதைகளுடைய க்ருபையும் உனக்குப் பரிபூர்ணமாக இருக்கிறது. எல்லாவற்றிகும் மேலே பராசக்தி வித்யாதேவி உன் ஹிருதயத்திலே பிரகாசிக்கிறாள்''.*

*ஹநுமான் விண்ணப்பித்தார்.*

*''குருதேவ! தங்களிடம் பெற்ற இந்த மஹாவித்யை - எனக்கு எப்பொழுது அநுபவத்திற்கு வரும்?*

*யத்தத்வம் பரமம் ப்ரோக்தம்*

*ப$_4$க$_3$வந் கு$_3$ரு புங்க$_3$வ ।*

*க$_3$தா மே த$_3$ர்சனம் தஸ்ய – ஜக$_3$த்திமிர நாச$_+$ந ॥*

சூரியன்: படைப்பு - வாழ்வு -அழிவு என்ற பகவானுடைய ப்ரபஞ்சலீலை நேர் சீராக நடப்பதற்கான பொறுப்பை மனித வர்க்கத்திற்கு ஒப்புவித்திருக்கிறது பரம் பொருள். அதற்கு தர்மம் என்றும் ருதம் என்றும் பெயர்.

*ஸ்ருஷ்டிஸ்தி$_2$தி விநாச$_+$ாதி விஹாரே யத் ருதம்*
*ஹிதம் ।*

*தஸ்யநிர்வாஹ கோ த$_4$ர்ம: மநுஷ்யேஷுநிரூபித:*

அந்த தர்மத்தை த்தானே கடைப்பிடித்து மாந்தர்களுக்கு வழிகாட்டுவதற்காக பரம் பொருள் எனக்குப் புகழ் ஏற்பட வேண்டும் - என்ற க்ருபையினால் - என் வம்சத்தில் அவதரிக்கப் போகிறது.

*த$_3$தநுஷ்ட$_2$ாந பரமம் ப்$_3$ரஹ்ம மாநுஷ ரூப த்$_4$ருத் ।*

*மம கீர்த்திப்ரதிஷ்ட$_2$ாயை மம வம்சே$_+$ ஜநிஷ்யதி ॥*

மனுஷ்ய அவதாரம் எடுக்கப் போகின்ற அந்தப் பரமாத்மாவுக்கு உதவியாக - என் புத்திரன் ஒருவன் பிறந்திருக்கிறான். அவன் நேர்மையாளன். அவனுக்குப் பல கஷ்டங்கள் ஏற்படும். நீ அவனுக்கு மந்திரியாக இருக்க வேண்டும். இந்தப் பரமாத்மாவினுடைய நட்பைத் தேடிக் கொடுக்க வேண்டும்.

அப்போது சிரேயஸ் உனக்கு ஸித்திக்கும்.

*மஹாத்மந ஸ்தஸ்யபுந: ஸஹாயார்த்த$_2$ம் மமாத்மஜ:*

*ஜாத : ஸருஜு பு$_3$த்$_3$தி$_4$த்வாத் து$_3$ஸ்ஸஹம் க்லேச$_+$ம்*
*ஆப்நுயாத் ॥*

*த்வம்தஸ்ய ஸசி$_1$வோ பூ$_4$யா: தேநஸக்$_2$யம் மஹாத்மநா ।*

*ஸம்பாத$_3$ய – தத: ச்$_+$ரேயோ ப$_4$விதா தே ந ஸம் சய: ॥*

ஹநுமான் குரு தேவரான ஸூர்ய பகவானை வணங்கினார். ''ஐயா! தங்கள் ஆஜ்ஞையைத் தலை மேல் தாங்குகிறேன். அந்தப் பரமாத்மாவின் தர்சனத்திற்காகக் காத்திருப்பேன். அது எத்தனை நாட்கள் ஆகும்? அதுவரை நான் என்ன செய்ய வேண்டும்? ஏதாவது ஜபம் செய்யலாமா!

*தத் ச்ருத்வா ஹநுமான் தஸ்ய வசநம் தபநஸ்ய ச।*

*ப்ரணம்யோவாச$_1$ – ''ப$_4$க$_3$வந் சிரஸாSSஜ்ஞா ஸமுஹ்யதே!*

*தாவத்காலம் ப்ரதீக்ஷேSஹம் கிம்குர்வந் –கிம்ஜபந் – குரோ'' ॥*

ஸூர்ய பகவான் ஹநுமானுடைய பரபரப்பை கவனித்துப் புன்னகை புரிந்தார். அவனுடைய புத்திகூர்மையையும் சிரத்தையையும் உணர்ந்தார்.

''ஹநுமந்தா மனதைக்கொஞ்சம் அடக்கு. கவனத்தைக் கூர்மையாக்கிக் கொள். ஏதாவது காதில் வீழ்கிறதா?

*தத$_3$ாSSஹ ப$_4$க$_3$வாந் ஸூர்ய: ஹநுமந்தம் மஹாமதிம்।*

*ஸம்ஸ்தம்ப$_4$ய மந: கிஞ்சித் – ச்$_+$ ரூயதே கிந்நு ஸாம்ப்ரதம்॥*

''ஆஹா - எங்கோ எட்டி மலையிலிருந்து ஓம் காரம் போல ஏதோ கேட்கிறதே! என் மனதையும் இதயத்தையும் கிளுகிளுக்கச் செய்கிறதே! அதென்ன? சொல்லுங்கள் தயவு செய்து.

*ச்$_+$ரூயதே ப்ரணவோந் நாத$_3$: குதோSபி கி$_3$ரிகூடத:।*

*மாநஸம் ஹ்ருதயம் ச$_1$ாபி யுக$_3$பத் ஹ்லா$_3$தயந் மம॥*

*கிமேததி$_3$ தி ஜிஜ்ஞாஸே ப்ரஸீ$_3$த கு$_3$ரு ஸத்தம ॥*

ஹநுமானுடைய கூரிய கவனசக்தியைக் கண்டு சூரியன் பெருமிதம் அடைந்தார். ''சரியாகக் கண்டு பிடித்து விட்டாயே! அது ஓம் காரம் தான். ஆனால் அதிலே இரண்டு அட்சரங்கள் உண்டு. ''ராம'' இதை ரீங்காரம் பண்ணுபவர் தான் வால்மீகி. வெகு ஆண்டுகளாக சித்திரகூட சிகரத்தில் அமர்ந்து ஜபம் செய்கிறார். அது ஒரு ஸித்தமந்த்ரம். அதை

ஓயாமல் நீ ஜபிக்க வேண்டும். இது ஜகத்தையே காக்கின்ற தாரக மந்திரம். இந்த ஜபத்தினால் உனக்குப் பரம் பொருள் இதயத்தில் பிரகாசிக்கும். ஆநந்தம் பெருகும். நீ எடுத்த காரியங்கள் எல்லாம் கை கூடும்.

*பாநு: த$_3$தநுஸந்தா$_4$ய ப்ரீத : ப்ரோவாச மாருதிம் |*
*ப்ரணவஸ்யாயம் உந்நாத$_3$: ராமேதி த்$_3$வ்யக்ஷராத்மக: ||*

*சி$_1$த்ரகூடே ஜபத் யேதம் மந்த்ரம் ப்ராசே$_1$தஸோ முநி: |*
*ததே$_3$வ ராம ராமேதி ஜப நித்யம் அதந்த்$_3$ரித:*

*ஸர்வலோக ஹிதஸ்யாஸ்ய மந்த்ரஸ்ய பட$_2$நாத்தவ |*
*பரே ப்ரஹ்மணி ராமாக்$_2$யே நைஷ்டி$_2$கீ ரதி ராத்மதா$_3$ |*
*ஸர்வகார்யேஷு விஜய : நியமேந ப$_4$விஷ்யதி ||*

*(பாஸ்கர ஸம்ஹிதை என்ற நூலில் இவ்விஷயம் கிடைத்தது. இதில் ஒரு குறை - அந்த ராமப்ரஹ்மம் தான் தசரதராஜ குமாரன் - என்று புதிரை அவிழ்க்கவில்லை)*



## வாலி ஸுக்ரீவ நட்பு

ராமாவதாரத்தில் கைங்கர்யம் செய்வதற்காக தேவர்கள் வாநரர்களாகப் பிறந்தார்கள். அவர்கள் மேற்குமலைத் தோடரில் ருச்யமூக பர்வதத்தின் தாழ்வரையில் உள்ள கிஷ்கிந்தையில் இருந்தனர்.

அந்த சமயத்தில் தான் ருக்ஷ ரஜஸ் என்ற வாநரன் கைலையங்கிரியின் பக்கத்தில் உள்ள மாநஸ ஸரஸ்ஸில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தான். அவன் மஹாவீரன்.

மாநஸ ஸரஸ்ஸில் அருகே போய் - தெளிவான நீரில் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்தான். அது வேறு ஒரு வாநரன் - என நினைத்து அவனைப்பிடித்துவிடலாம் என நினைத்துக் கைகளை நீட்டினான். பிரதி பிம்பமும் கைகளை நீட்டியது. தன்னைப் பிடிக்க ஒரு எதிரி முனைகிறான் - என்று நினைத்து தாவி - நீரில் குதித்தான். பிடிப்பதற்கு ஒன்றுமில்லாததால் கரை ஏறினான். ஈரத்துணியோடு தன்னைக் குனிந்து பார்த்துக் கொண்டான்.

தான் வாநரீ ஆகிவிட்டதை உணர்ந்தான் ''ஒன்றும் புரியாமல் கரை ஓரமாக நடந்தாள். சூரியன் உதயமாகும் வேளையில் தேவேந்திரன் கைலாஸ தர்சனம் செய்து விட்டுத்திரும்பும் வழியில் இவளைப் பார்த்தான். ராம ஸஹாயத்திற்காக - தான் ஒரு புத்திரனைப் பெற்றுக் கொடுக்க வேண்டுமே என்ற கவலை - அந்த வாநரியிடம் மோஹமானான், சேர்ந்தான், வாலி பிறந்தான்.

பிறக்கும் போதே முரட்டுத் தனத்தைக் காண்பித்த - அந்த வாநரக் குழந்தையை - ''சரியான வால்'' என்று நினைத்து வாலி எனப் பெயர் வைத்தான்.

ஓராண்டுக்குப் பின் ஒரு நாள் ஸூர்ய அஸ்தமனத்தின் போது ஸூர்ய தேவன் அந்த வாநரியைப் பார்த்தார். மோஹம் கொண்டார். தாமஸ வேளையில் ஒரு பிள்ளை பிறந்தான்.

குழந்தை இப்புறமும் அப்புறமும் தலையை அசைத்துத் தாயைப் பார்த்தது. அதற்கு ஸுக்ரீவன் என்று பெயர் வைத்தார்.

இரண்டு குழந்தைகளையும் வைத்துக்கொண்டு அந்த வாநரி செய்வதறியாமல் பரம் பொருளை த்யானித்தாள். பிரம்ம தேவன் தர்சனம் கொடுத்தார்.

''படைக்கும் பரமனே! எனக்கு ஏன் இந்த விதி?'' வீரனாகப் பிறந்து வாநரீ ஆகி பிள்ளைகளைப் பெற்று சந்தியில் நிற்கிறேனே? எனக்கு என்ன வழி?'' என்று கேட்டாள்.

''ருக்ஷரஜஸ்ஸே! இவையெல்லாம் பகவானுடைய லீலை. நீ மறுபடியும் மாநஸஸரஸ்ஸில் இறங்கி ஸ்நாநம் செய்வாய். புருஷ வாநரன் ஆவாய்.

வீரக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு கிஷ்கிந்தைக்குப் போய் அங்குள்ள வாநர ஜாதியினருக்கு உன் பிள்ளையை அரசன் ஆக்கு. பகவானுடைய அவதாரத்திற்கு கைங்கர்யம் செய்யும் காலம் வரும் என்று அருளினார். வாநரக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு கிளம்பினான் ருக்ஷரஜஸ்.

இதனிடையே பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள வாநர ஜாதியினர் அனைவருக்கும் பெருமை சேர்க்கிறாப் போல நிகழ்ச்சி நடந்து விட்டது.

ஒரு ஸூர்யக்ரஹணத்தன்று - ஒரு வாநரக் குஞ்சு ஒன்று சூரியனை நோக்கிப் பாய்ந்து சென்று கொண்டிருந்தது. சூரிய கிரஹணம் பார்ப்பதற்காக - ஆகாயத்திலே பார்வையைச் செலுத்தியிருந்த - உலகத்தில் உள்ள அத்தனை வாநரர்களின் கவனத்தையும் ஈர்த்தது.

''அடேடே! நம்மடவன் சூரிய கோளத்தையே கவ்வப் போகிறானடா '' - என்று திக்குகள் எங்கிலும் இருந்த வாநரர்கள் பெருமைப்பட்டார்கள். அவன் சூரியனை விழுங்கிவிட்டு- த்துப்பி விட்டான். அதனால் சூரியன் பிழைத்தான் -என்ற உலகெங்கும் அளாவிய செய்தி கேட்டு ஆங்காங்கே உள்ள வாநரர்கள் கூடிப் பேசினர்.

நம்ம ஆள்! நம்ம வீரன், நம்ம குலக்கொழுந்து - என்றெல்லாம் பேசி, அந்த வாநரன் பிறந்த திசை நோக்கி -

தேசம் நோக்கி - அஞ்ஜன மலை நோக்கி அனைத்து உலக வாநரர்கள் கொண்டாடினார்கள்.

அஞ்ஜநாத்ரியில் கட்டுக்கடங்காத வாநரக் கூட்டம். ஹநுமானைக் கண்டு களித்தது. பனிரெண்டு வயது ஹநுமான் உலகம் போற்றும் வாநர வீரனாகி விட்டான். இதையெல்லாம் கேள்விப்பட்ட ருக்ஷரஜஸ் தன் குமாரர்களுடன் அஞ்ஜநாத்ரி வந்து சேர்ந்தான். வாலி, சுக்ரீவர் என்ற இரு வீரர்களும் தமது வீரஸாஹஸங்களால் அனைத்து வாநரர்களின் கவனத்தையும் போற்றுதலையும் பெற்றனர்.

இதனிடையே வாயு குமாரன் பரம பராக்ரமசாலியாக ஆனால் அடக்கமே உருவமாக கம்பீரமாக உலக எல்லை களிலிருந்தெல்லாம் வந்திருந்த வாநரர்களை இன்முகம் காட்டி வரவேற்றான். அந்தந்த நாட்டு வாநரப்பிரமுகர்கள் அனைவரும் - ஹநுமானைச் சந்தித்து ‘‘தாங்கள் எங்கள் எல்லோருக்கும் தலைவர். தாங்கள் என்ன பணியிட்டாலும் செய்யக் காத்திருக்கிறோம் - என்றெல்லாம் விண்ணப்பித்தார்கள்.

வாலியும், சுக்ரீவனும் ஹநுமான் பக்கலில் எப்பொழுதும் நின்று - அலை மோதுகின்ற வாநரக் கூட்டத்தை ஒழுங்கு முறைக்குக் கட்டுப்படுத்தி - ஹநுமானின் துணை நாயகர்கள் - என்ற அந்தஸ்தைப் பெற்றார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு -ருக்ஷரஜஸ் - ஹநுமானை அணுகி - தனது விருத்தாந்தத்தையும் இந்திரன் சூரிய பகவான் அருளால் தான் பெற்ற மகப்பேறுகளையும் பிரம்ம தேவனுடைய ஆணையையும் எடுத்துச் சொன்னான். உடன் ஹநுமான் தன்னுடைய குரு குமாரனின் கைப்பற்றினார்.

‘‘உலகமே கொண்டாடுகின்ற தங்களை அழைத்துப் போய் கிஷ்கிந்தா ராஜ்யத்தை நிறுவுவோம் - என்றும் விண்ணப்பித்தார். வாலி சுக்ரீவர்களுடைய பராக்ரமத்தையும் அவர்களுக்குத் தம் பால் பெருகி வருகின்ற மதிப்பையும் கவனித்தார் ஹநுமான் - தாயிடம் விடை பெற்றார்.

வாலி சுக்ரீவர்களுடன் கிஷ்கிந்தை வந்து சேர்ந்தார். உலகம் போற்றும் உத்தமனான ஹநுமானை தம் பிரதேசத்திற்கு அழைத்து வந்திருக்கின்ற வாலி சுக்ரீவர்களிடம் அபார நம்பிக்கையும், ஆதரவும் காட்டி வாலி சுக்ரீவர்களை அகில உலக வாநரஜாதியினரின் சக்ரவர்த்திகளாக பட்டாபிஷேகம் செய்து வைத்தனர்.

இத்தனை பெருமையும் ஹநுமானுக்கே உரியது - என்று அனைவரும் நினைத்தாலும் ஹநுமானால் நியமிக்கப்பட்டவர்கள் என்ற மதிப்பு வாலிசுக்ரீவர்களுக்கு வாநர சக்ரவர்த்திப் பதவியை அளித்துவிட்டது.

வாலி சுக்ரீவன் இருவரும் ஹநுமானிடம் அளவற்ற பரிவு காட்டினாலும் சுக்ரீவனிடம் ஹநுமானுக்குத் தனிப்பட்ட அன்பு வளர்ந்தது. 'சுக்ரீவன் தனது குரு தேவரின் புத்திரன். பராக்ரமத்தில் குறையில்லாவிட்டாலும் வாலி போல கபடு சூது கிடையாது'' என்ற கணிப்பு உண்டு. அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. வாலி கெட்டிக்காரன். கபட நாடகமாடி ஹநுமானை பலர் மத்தியில் கொண்டாடிப் போற்றுவான். சுக்ரீவன் கபடமற்று சுவாதீனமான ஹநுமானிடம் பழகி - ஹநுமான் செய்கின்ற உபசாரங்களை - தமக்கு உரியது போல -ஏற்றுப் பெருமைப்படுவான்.

கிஷ்கிந்தையைச் சுற்றி அரக்கர் ஆதிக்கம் - ஒரு புறம் விராதன், மறுபுறம் கரதூஷணர். அப்பால் ராவணன். அதனால் பாமர மக்களுக்குத் தொல்லைகளும் துன்பங்களும் பெருகின.



## வாலி பராக்கிரமம்

ஒரு நாள் வாலி - கீழ்க்கடற்கரையில் காலையில் - சூரியனை வழிபட்டுக் கண் மூடி த்யானத்தில் அமர்ந்திருந்தான். அவனைச் சுற்றி வாநர வீரர்கள் காவல் காத்துக் கொண்டிருந்தனர்.

ராவணன் புஷ்பக விமானத்தில் ஏறி அவ்வழியே ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் போது - பூமியில் உள்ள மக்கள் அரக்கர்கள் - எல்லோரும் தாம் செய்கின்ற தொழிலை நிறுத்திவிட்டு - கைகூப்பி வணங்குவது வழக்கம். ராவணன் அலட்சியமாக அவர்களைப் பார்வையிட்டுப் போய்க் கொண்டிருப்பான்.

வாலி தியானத்தில் அமர்ந்திருந்த இடத்தில் அந்த உபசாரம் நடை பெறவில்லை. வாலியின் காவலர்கள் கூட ஆகாயத்தை நிமிர்ந்து பார்த்து ராவணனுக்குக் கைகூப்பவில்லை.

ராவணனுக்கு ரோஸம் வந்து விட்டது. புஷ்பகம் தரை தட்டியது. இறங்கி ஆக்ரோஷத்துடன் வாலி மேடையை நெருங்கினான். வாநர வீரர்கள் தமது சூலங்களை எதிரெதிரே கோத்து வழி மறித்தார்கள்.

ஹா என்று அலறினார்கள் பின்னால் வந்த அரக்கர்கள். இருபது கைகளையும் வீசி - சூல மறிப்பைத் தகர்த்து விட்டு ராவணன் இடது காலை மேடை மீது தூக்கி வைத்தான்.

அவனறியாமல் அவன் இடுப்பிலே ஒரு இறுக்கம் ஏற்பட்டது. வாலியின் வால் நீண்டு அவனுடைய இடுப்பை மூன்று தடவை சுற்றி ஆகாயத்தில் வீசி - வாலியினுடைய இடது கக்கத்தில் சொறுகியது.

ராவணனுடைய பத்து தலைகள் கிரீடங்கள் இழந்து - பின்புறம் தொங்கின. ராவணனுடைய இருகால்களும், இருபது கரங்களும், வாலியின் வாலின் இறுக்கத்தினால் - செயல் இழந்து முன்புறம் தொங்கின.

வாலி அப்படியே ஆகாசத்தில் கிளம்பினான். கிஷ்கிந்தை வந்து சேர்ந்தான். தொட்டிலில் வாலியின் பிள்ளை அங்கதன் ஒரு வயதுக் குழந்தை விழித்துக் கொண்டு அழுதது.

தொட்டிலின் மேல் மட்டத்தில் தொங்கிய இரும்புச் சங்கிலியில் ராவணனைப் பிணைத்துவிட்டான் வாலி. ராவணனின் பத்து தலைகளும், இருபது கைகளும் ஆடி ஆடி அலட்டிக் கொள்வதைப் பார்த்து அங்கதன் ஒரு கிலுகிலுப்பை என்று சிரித்தான்.

வாலி பகல் உணவை முடித்துக் கொண்டு வந்து ஆஸனத்தில் அமர்ந்தான். ஸகல நாடிகளும் ஒடுங்கி - உயிர் தொக்கி நிற்கின்ற தருவாயில் தொட்டிலின் விட்டத்திலிருந்து தொங்கின ராவணன் முனகினான்.

''வாநர சக்ரவர்த்தியே! வாலி மஹாராஜனே!''

''அடடே நீ இன்னும் உயிரோடு இருக்கிறாயா? ஐயோ பாவம்''

வாலி ஒரு சேடியைக் கூப்பிட்டான். முதிர்ந்த வயதின் மிடுக்கோடு வந்தாள் ஒரு வாநரி.

''அந்தக் கிலுகிலுப்பையை அவிழ்த்துவிடு'' என்றான் வாலி

அவள் கூரான சூர்க்கத்தியினால் அந்தக் கயிற்றைச் சாடினாள். பொத்தென விழுந்தான் ராவணன். எழுந்திருக்க சற்று நேரம் பிடித்தது.

வாலி ராக்ஷஸ மஹாராஜனுக்கு ஒரு குவளை தண்ணீர் கொண்டு வா'' என்று சேடியை ஏவினான்.

''ராக்ஷஸாதிபதியே சற்று அமர்ந்து இளைப்பாறலாமே'' என்று எதிரிலிருந்து ஆஸனத்தைக் காட்டினான்.''

ராவணன் மெதுவாக எழுந்து ஆஸனத்தில் அமர்ந்தான். சேடி கொண்டு கொடுத்த ஒரு பெரிய குவளைத் தண்ணீரையும் பத்து வாய்களில் ஊற்றிக் கொண்டான்.

''நான் கிளம்பலாமா?''

''அரக்கர் அதிபதியான தாங்கள் எதற்காக வந்தீர்கள்? சொல்லவே இல்லையே'' உங்கள் பெயரென்ன?

''ராவணேச்வரன்''

''ராவணனா? ஈச்வரனா?

''இரண்டும் சேர்ந்த ராவணேச்வரன்''

''ராவணன் என்றால் ஓங்கி ஓலமிடுகிறவன் என்று பொருள். தாங்களோ முனகுகிறீர்கள்? ஈச்வரனாவது''

''வாநரசக்ரவர்த்தி அவர்களே! உங்கள் பெருமையை உணர்ந்து கொண்டுவிட்டேன். நான் என்ன செய்ய வேண்டும்?

அதைமட்டும் சொல்லுங்கள் - நமக்குள் பிணக்கு வேண்டாம்''

''ராக்ஷஸாதிபதி! இந்தவிநயம் உமக்கே தகும். இனி நாம் நண்பர்கள்''

''அப்படியா? நான் தங்கள் நண்பனா?

''ஆமாம். இனி நீங்களோ - உங்கள் ஆட்களான கரதூஷணாதிகளோ தண்டகவனத்தில் வாழ்கின்ற தவசிகளுக்கும், ஜநங்களுக்கும், எந்தவிதமான தொந்தரவும் கொடுக்க கூடாது உம்முடைய லங்கை எல்லையில் உங்கள் அரசு; இங்கெல்லாம் எங்கள் அரசு; தேவை என்று தோன்றினால் உம்மை உதவிக்கு அழைப்போம். நீரும் தேவைப்பட்டால் எமது உதவியை நாடலாம். நண்பரே! போய் வாரும்''.

ராவணன் தள்ளாடி நடந்து சென்று புஷ்பகத்தில் ஏறினான்.

வாலிசுக்ரீவர்களின் வாநர ராஜ்யம் அரக்கர் கொடுமைகளை இவ்வாறு தடுத்து நிறுத்தி வைத்திருந்தது.

மாயாவி துந்துபி போன்ற ராவணனுக்குக் கட்டுப்படாத அரக்கர்கள் வாலியிடம் வந்து மோதினார்கள். இருந்த இடம் தெரியாமல் அழிந்தார்கள்.

ஆனால் துந்துபியுடன் போருக்குச் சென்ற வாலி - துந்துபியைத் துரத்தினான். அவன் ஒரு குகைக்குள் புகுந்தான்.

வாலியுடன் கூடச் சென்ற சுக்ரீவனை வாலி தடுத்தான். ''இந்த கோரபாதகன் குகைக்குள் நுழைந்து விட்டான். அவனை விடப்போவதில்லை. நானும் உள்ளே போகிறேன். நீ வாசலில் காத்திரு. நான் அவனோடு போரிடப் போகிறேன். போரில் வெற்றி தோல்வி மாறுபடும்.

ஒரு கால் அவன் என்னைத் தோற்கடித்து விட்டால் அவன் வெளியே வந்து நம் குலத்தையே அழித்துவிடுவான்.

நீ கவனமாகக் காத்திரு - நான் அவனை த்வம்ஸம் செய்து விட்டு வெளியே வரும் வரை. பதினைந்து நாட்களுக்குள் நான் வராவிட்டால் உடனே நீ அதோ கிடக்கின்ற பாறையைப்புரட்டி இந்த குகை வாசலை அடைத்து விட்டு - நீபோய் வாநர அரசை ஆளலாம்''.

''அண்ணா! நானும் உங்களுடன் வருகிறேன். இரண்டு பேருமே சேர்ந்து அவனை நொறுக்கி விடலாம்''

''அடேயப்பா! என்னைக் காட்டிலும் பெரிய வீராதி வீரனாக்கும்! பேசாமல் நான் சொன்னபடி செய்'' - என்று குகைக்குள் புகுந்தான் வாலி.

சுக்ரீவனும் பின் தொடர்ந்தான்.

ஹநுமான் முன்னே சென்று சுக்ரீவனைத் தடுத்து நிறுத்தினார்.

'' ஏன் என்னைத் தடை செய்கிறீர்கள்?''

''சுக்ரீவா! சொல்வதைக் கேள். இதுவோ குகை. உள்ளே கும்மிருட்டு. ஒருவரை ஒருவர் தாக்கலாம். மூன்றாம் ஒருவர் புகுந்தால் - நீ துந்துபியை அடிப்பதற்கு பதிலாக வாலியைத் தாக்கலாம். வாலி துந்துபியைத் தாக்குவதற்கு

பதிலாக உன்னைத் தாக்கலாம். துந்துபி மாற்றி மாற்றி உங்கள் இருவரையும் தாக்கலாம்.

போர் முறைப்படி ஒருவரை இருவர் தாக்கலாகாது. அது போர் அல்ல. முரட்டுப் போக்கிரித்தனம் தான். ஆகவே காத்திருப்போம். அரக்கன் அழிவான். வாலி ஜயிப்பான். ''ராம ராம'' என்றார்.

மைந்தன் துவிவிதன் போன்ற மந்திரிகளும் ஹநுமானுடைய ஆலோசனையை ஆமோதித்தார்கள்.

மறுபடியும் சுக்ரீவன் கிளம்பினான்.

''அண்ணாவுக்கு ஆபத்து வந்திருக்கிறது நான் சும்மா இருப்பதா?''.

ஹநுமான் கூறினார். ''உன் அண்ணன் ஆபத்தை-தானே தேடிக் கொண்டிருக்கிறான்.

சுக்ரீவன்: எதிரியைத் துரத்தி அடிக்கத் தானே வேண்டும்?

ஹநுமான்: ஓடி ஒளிபவனை எதற்காகத் துரத்துகிறது? அது யுத்த தர்மமா?''

சுக்ரீவன்: நீங்கள் ஏன் அண்ணாவைத் தடுத்து நிறுத்தவில்லை?

ஹநுமான்: உன் அண்ணன் ஒரு மூர்க்கன். வீரத் திமிர் பிடித்தவன். மூர்க்கர்களுக்கு உபதேசம் செய்யாதே - என்கின்றன சாஸ்திரங்கள். நீ கொஞ்சம் விவேகி. அதனால் தடுத்தேன்.

சுக்ரீவன்: இருந்தாலும் நீங்கள் தடுத்திருக்கலாம்.

ஹநுமான்: வாலி மட்டும் சற்று யோஜித்திருந்தால் இப்படிச் செய்திருக்க மாட்டான். ஓடி ஒளிந்தவனை - எதற்குத் துரத்த வேண்டும்?

வாலி உன்னிடம் சொன்னானே ''பாறையைப் புரட்டி குகை வாசலை மூடிவிடு'' அந்தக் காரியத்தை அப்பொழுதே அவனே செய்திருக்கலாமே!

போர் என்பது கடைசி ஆயுதம். விதியை மதியால் வெல்ல வேண்டும்'' சுக்ரீவன் அடங்கிவிட்டான்.

பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. குகை வாசலில் கண் வைத்துக் காத்திருந்தனர்.

குகை வாசலில் குபுகுபு வென்று இரத்த வெள்ளம் பெருகியது.

சுகரீவன் கோ வென்று கதறினான். ஐயோ அண்ணா! போய்விட்டாயே!

ஹநுமான்: அவனைக் கட்டிப்பிடித்தார்.

''ஏன் பதறுகிறாய்? சற்றுப் பொறு - யார் வெளியே வருகிறார் பார்ப்போம்''

''ஹநுமானே!- துந்துபி ஒரு எருமைக்கடா! அவன் வெறி பிடித்து அண்ணாவை அடித்துக் கொலை பண்ணியிருப்பான்.''

''சுக்ரீவ! வாலி பராக்ரமத்தில் உனக்கு ஏன் இவ்வளவு அவ நம்பிக்கை! போரில் முரட்டுத்தனம் வெற்றி பெறாது - மதியூகம் தான் முக்கியம். கவலைப்படாதே''.

மற்ற வாநர வீரர்களும் சுக்ரீவனுடன் சேர்ந்து கொண்டார்கள். வாலி பராக்கிரம சாலி என்பதில் அவர்களுக்கு மாற்றுக் கருத்து கிடையாது.

ஆனால் வாலி தம்மை மதிப்பதில்லை என்பதில் ஆதங்கம். சுக்ரீவன் தம்மை அநுஸரித்துப் போகிறான் - என்பதில் அதிகப் பரிவு. இந்த கெடுபிடியில் சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டால் வாலி திரும்பி வந்தாலும் முரண்டு பிடிக்க மாட்டான் என்று தப்புக் கணக்குப் போட்டார்கள்.

பரபரவென்று எழுந்திருந்தார்கள்.

பாறையைப் புரட்டி குகை வாசலை மூடினார்கள். சுக்ரீவனைச் சுற்றி நின்று கொண்டு ''சுக்ரீவ மஹாராஜாவுக்கு ஜே'' போட்டார்கள்.

ஹநுமான் எட்டி நின்று வேடிக்கைப் பார்த்தார். வாநர வீரர்கள் சுக்ரீவனை அழைத்துக் கொண்டு நகரத்தில் பிரவேசித்தார்கள்.

வாநர பரிவாரத்தில் மைந்தனும் துவிவிதனும் பொல்லாதவர்கள். சுக்ரீவன் புத்தியைச் சலவை செய்தார்கள்.

''நாங்கள் சொன்னபடி செய்தால் உனக்கே வெற்றி. நீயே வாநர ஸாம்ராஜ்ய அதிபதி.

முதலில் மதனியார் தாரா தேவியிடம் கால்களில் வீழ்வாயாக. ''மஹாராணி! இனி தாங்கள் தான் அண்ணா அவர்களின் ஸ்தானத்தில் சிம்மாஸனம் ஏற வேண்டும். அங்கதனை யுவராஜன் ஆக்க வேண்டும். அண்ணாபோன பிறகே எனக்கு உலகமே பிடிக்கவில்லை. நான் தலையிலே துணியைப் போட்டுக் கொண்டு பரதேசியாகப் போய்விடுகிறேன். என் மனைவி ருமையைக் காப்பாற்றுங்கள். அவள் உங்களுக்கு சகல பணிவிடைகளும் செய்வாள் - என்று கூறி கண்களால் தாரை தாரையாகக் கண்ணீர் விட வேண்டும்.

நாங்கள் கூட நின்று ''இந்த நேரத்தில் ராணியைத் தனியாக விட்டுவிட்டு - பொறுப்புகளை கை கழுவி விட்டுப்போகக் கூடாது. அண்ணாவின் அரசு புகழ் மங்காமல் இருக்க வேண்டுமானால் நீங்கள் ராணிக்கு உதவியாக இருந்துதான் ஆக வேண்டுமென்று வற்புறுத்துவோம்.

அப்போது தான்ராணி கணவன் போனபிறகு எனக்கு எதற்கு ராஜ்யம்? என்பாள்.

அப்படியானால் அங்கதனுக்கு முடி சூட்டுவோம் என்போம்.

தாரா அங்கதன் சிறுபிள்ளை. இந்த மஹாஸாம்ராஜ்யத்தை அவனால் ஏற்க முடியாது - என்பாள்.

அப்படியானால் இப்போதே அங்கதனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்து சுக்ரீவ மஹாராஜா ராஜபிரதிநிதியாக அங்கதனுக்குக் கீழ் - பதவி ஏற்கட்டும் என்று நாங்கள் கூறுவோம்.

''அப்படியெல்லாம் வேண்டாம். மைத்துனரே அரசராகட்டும் என்று ராணி கூறுவாள்.

அப்படியானால் ராணி அவர்களே சுக்ரீவ மஹாராஜாவுக்கு உறுதுணையாக ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டும். இதை நீங்கள் ஏற்றுக் கொண்டால் தான் - எங்கள் மனது சமாதானம் ஆகும் என்போம். காரியம் கைகூடிவிடும்.

முதலில் வாலி மஹாராஜாவுக்கு நாளைக்கே வீர வணக்கம் கோலாஹலமாக நடக்க வேண்டும். ஸகல வாநரர்களும் கூடி கொடி பிடித்து நகர் வலம் வந்து வாலி மஹாராஜாவாழ்க! வீர தீர சூர சக்ரவர்த்தி வாழ்க என்றெல்லாம் கோஷம் போட்டு நகரத்து நடுச் சதுக்கத்தில் அவருக்கு ஒரு நினைவுச் சின்னம் நிறுவுவோம் என்றனர்.

சுக்கிரீவன் ஹநுமானைத் தேடினான், அவரைக்காணவே காணோம்.

''அவர் பரமசாது, ஆர்ப்பாட்டமெல்லாம் பிடிக்காது. ராஜகார்யம் என்றாலே இப்படித்தான் கோலாஹலமாக நடக்க வேண்டும் என்றார்கள்,

எல்லாக்காரியங்களும் மின்னல் வேகத்தில் நடந்தன. ஐந்தாறு நாட்கள் ஆகிவிட்டன. ஹநுமான் மட்டும் துந்துபி குகை வாசலில் காத்துக் கொண்டிருந்தார்.

ஆறாவது நாள் குகை வாசலில் மூடி இருந்த பாறை மிகுந்த கர்ஜனையுடன் நகர்ந்தது. வாலி வெளியே வந்தான். உடல் முழுவதும் ரத்தக்கரை. பச்சிலைகளைப் பறித்து வந்து வாலி உடலைத் துடைத்தார்.

வாலி கேட்டான் ''சுக்ரீவன் எங்கே?''

ஹநுமான்: நகரத்திற்குள்ளே போயிருக்கிறான்.

வாலி: நீங்கள்?

ஹநுமான்: உனக்காகத் காத்திருக்கிறேன்.

வாலி: சுக்ரீவனை எனக்காக இங்கேயே காத்திருக்கச்

சொன்னனே?

ஹநுமான்: அதன் படி சுக்ரீவனும் காத்திருந்தான் - ஆனால்!

நடந்ததெல்லாம் விபரமாகச் சொன்னார் ஹநுமான் கடைசியில் சொன்னார்.

''சுக்ரீவன் பேரில் சிறிதும் தவறில்லை. ஆனால் அவனுடைய பரிவாரத்தில் சில மந்த புத்திகள் அவன் மனதைக் கெடுத்து விட்டனர்.

வாலி - நீர் தடுத்திருக்க வேண்டியது தானே

ஹநுமான்:- ஏழை சொல் அம்பலம் ஏறவில்லை.

வாலிக்கு வந்ததே கோபம். ஆவேசம் கொண்டு பேசினான்.

'' ஹநுமானே - தெரிகிறது உமது நயவஞ்சகம். என்னிடம் நாடகமா ஆடுகிறீர்? உமக்கு - வந்த நாளாகவே சுக்ரீவனிடம் பட்சபாதம். அவனை ராஜாவாக்கிவிட வேண்டும் என்று சூழ்ச்சியா செய்கிறீர்! மற்றவர்களை அனுப்பி சுக்ரீவனுக்கு பட்டாபிஷேகம் செய்து விட்டு - நீர் ஸாது போல - ஒதுங்கி நின்று - என்னை நயவஞ்சகமாகப் பேசி - சுக்ரீவராஜ்யத்தை திடப்படுத்தி விட்டு என்னை ஊரை விட்டே விரட்டலாம் என்று திட்டம் போட்டீரா!

ஹநுமான்: ஈசனறிய எனக்கு அப்படியெல்லாம் கபடநாடகம் போடத் தெரியாது - அஞ்ஜநாத்ரியிலிருந்து நீங்கள் இருவரும் தான் என்னை வற்புறுத்தி அழைத்து வந்தீர்கள்! உங்கள் ராஜ காரியத்தில் என்றாவது நான் தலையிட்டிருக்கிறேனா? ஒன்று மட்டும் ஒரு கடமையைச் செய்ய எனக்கு அவகாசம் கொடு. ''நடந்த காரியத்தில் - சுக்ரீவன் மீது ஒரு தவறும் இல்லை.

கோபிக்காதே இப்போதே போய் அவனை அழைத்துவந்து உன் திருவடிகளில் அடிபணிய வைக்கிறேன்.''

உம்முடைய தயவு எனக்குத் தேவை இல்லை'' என்று கூவிவிட்டு - ஒரு வீர கர்ஜனை செய்து கிஷ்கிந்தையில் பிரவேசித்தான் வாலி.

நகரமே கிடுகிடுத்தது. ''வாலி மஹாராஜன் வந்து விட்டார்'' -என்று வீதியெல்லாம் கோஷம் வானைப் பிளந்தது.

*தர்பாரில் சிம்மாஸனத்தில் அமர்ந்திருந்த சுக்ரீவன் கிரீடத்தைக் கழற்றி ஆஸனத்தில் வைத்துவிட்டு தலைவிரி கோலமாக - ஓடோடி வந்தான். வாநர வீரர்கள் நாற்புறமிருந்தும் சூழ்ந்த கூட்டத்தை - ஒழுங்குபடுத்தி ஊர்வலமாக வாலியை அழைத்து வந்தனர். வீறுகொண்டு, பூமி அதிர - நடை போட்டுக் கொண்டு - கதாயுதத்தைச் சுழற்றிக் கொண்டு வருகின்ற வாலியைப் பார்த்து - எட்டின தூரத்திலேயே தரையிலே வீழ்ந்து சுக்ரீவன் கைகளை நீட்டினான்.*

*நெருங்கி வந்த வாலி சுக்ரீவனை இடது காலால் உதைத்தான். சுக்ரீவன் எழுந்து அண்ணனின் இரு கால்களையும் பிடித்துக் கொண்டான்.*

*''என் அண்ணா அருமை மூத்தவரே! வாருங்கள். தாங்கள் பிழைத்து வந்தீர்களே! என் பரம பாக்கியம்''*

*''என்னடா! பசப்புகிறாய்! நான் வெளியே வரமுடியாதபடி - குகை வாசலை கெட்டியான பாறையால் மூடி இண்டு இடுக்குகளை பாறைச்சில்லுகளால இறுக்கிவிட்டு வந்தாயே! உனக்கு எவ்வளவு திமிர்!''*

*''அப்படியெல்லாம் நினைக்காதீர்கள் அண்ணா! ரத்த வெள்ளம் குகையிலிருந்து பீறிட்டு அடித்த போது வாநர வீரர்கள் எல்லோரும் அது தங்கள் ரத்தம் தான் என்று ஒரு குரலாகச் சாதித்தார்கள். அதை நம்பிவிட்டேன். அண்ணா! எருமைக்கடா துந்துபியை என்னால் சமாளிக்க முடியாது - என்று நினைத்து வாநரவீரர்கள் குகை வாசலை அடைத்து விட்டார்கள். மதனியாரைக் கேளுங்கள். அவர்கள் தான் வற்புறுத்தி அங்கதனை இளவரசனாக்கி - என்னை ராஜ பிரதிநிதியாக்கினார்கள். இது தான் உண்மை.*

*உன் சாகஸமெல்லாம் என்னிடம் பலிக்காது - உன்னை விட்டேனா பார்- கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த - சுக்ரீவனை ஒரு உதறு உதறினான். சுக்ரீவன் பத்தடி தூரத்தில் போய் மல்லாக்க வீழ்ந்தான்.*

இந்தக் காட்சியை எட்டி நின்று பார்த்துக் கொண்டிருந்த ஹநுமான் ஓடோடி வந்து வாலியினுடைய கதாயுதத்தைப்பிடுங்கி - பக்கத்திலிருந்து வீரன் கையில் கொடுத்து விட்டு வாலியினுடைய இரு கரங்களையும் பற்றிக் கொண்டார்.

''வாலி! நான் சொல்வதைக் கேள். நீ உலகெங்கும் உள்ள வாநரஸாம்ராஜ்யத்தின் அதிபதி. அந்த அந்தஸ்த்தைக் கைவிட்டு இப்படி ஆங்காரப்படுவது அழகல்ல. சுக்ரீவன் உன் வார்த்தையை மீறி நகரத்துக்குள்ளே வந்தது பெரும் தவறு. தவறு தான். அதை தர்பாரில் அமர்ந்து விசாரித்து உரிய தண்டனை கொடுப்பது தான் ராஜரீகம்''.

''என்ன ஐயா! நியாயம் பேசுகிறீர். அவனை சிம்மாஸனத்தில் அமர்வதற்கு எப்படி அநுமதித்தீர்''.

''மஹாராஜ் - அது என் செயல் அல்ல. வாருங்கள். தர்பாருக்குப் போய் பேசுவோம்.

''நகருங்கள்! வழி விடுங்கள்! அவனை ஒரு கைபார்த்து விடுகிறேன்''.

என்று கூறி இடது கையால் ஹநுமானை ஒதுக்கினான் வாலி.

இதைப் பார்த்தான் சுக்ரீவன். எடுத்தான் ஓட்டம். கிஷ்கிந்தையின் சந்து பொந்துகளில் எல்லாம் புகுந்து ஓடினான். ஹநுமான் நகர தோரண வாசலில் நின்று கொண்டார்.

''சுக்ரீவ! நில் நான் சொல்வதைக் கேள். ஓடாதே''.

''அண்ணன் என்னைக் கொன்று விடுவான்.''

''அவனால் உன்னைக் கொல்ல முடியாது - நான் இருக்கிறேன். பார்த்துக் கொள்கிறேன்.''

''உம்மை அவன் காலால் மிதித்துவிடுவான். என்னை ஓட விடுங்கள்.'' என்று நகரத்துக்கு வெளியே ஓடினான். வாலி துரத்தினான் - எங்கெல்லாம் போனார்களோ? வால்மீகி

ராமாயணத்தில் சுக்ரீவன் அண்ணனுக்கு பயந்து திசைகள் எங்கும் ஓடினதாக கூறிக்கொள்கிறான்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு -ருச்ய மூக பர்வதத்தின் உச்சியில் காத்திருந்த ஹநுமான் - கண்களுக்கு எட்டிய தூரத்தில் சுக்ரீவன் ஓடிவருவதைப் பார்த்தார். அங்கிருந்தே - தன் வாலை வீசினார். வால் சுக்ரீவனுடைய இடுப்பில் சுற்றிக் கொண்டு - ஒரு சுண்டு சுண்டியது. சுக்ரீவன் ருச்ய மூக பர்வதத்தில் வந்து வீழ்ந்தான். வீழ்வதற்கு முன் அவனைக் கெட்டியாகப் பிடித்து நிறுத்தினார் ஹநுமான்.

''ஹநுமானே - நான் என்ன செய்வேன். என்னை விடமாட்டேன் என்கிறானே என் அண்ணன்.''

''அதற்காக இப்படியா ஓடுவது - நீ ஒரு வீரன் அல்லவா? எதிர்த்து - உன் சக்தி கொண்ட மட்டும் போரிடக் கூடாதா? யார் கண்டார்? ஒரு வேளை நீ ஜயித்திருக்கலமே! அதுவல்லவா வீர தர்மம்''.

ஹநுமானே ! நீங்களும் இப்படிப் பேசினால் எப்படி? அவன் வெறி கொண்டு துரத்துகிறான். இனி நான் எங்கே போவேன்?''

''எங்கும் போக வேண்டாம். இங்கயே இரு.''

''இன்னும் பத்து நிமிஷங்களில் வாலி மலை ஏறி வந்து விடுவானே!

''அது தான் நடக்காது. அவன் இங்கே வரமாட்டான்''

''ஏன்?''

''உனக்குத் தெரியாதே?

துந்துபி உடலை இடது காலால் தூக்கி எறிந்தானே! அது இங்கே தவம் செய்கின்ற மதங்க முனிவரின் ஆசிரமத்திலே வீழ்ந்து அசிங்கம் செய்துவிட்டதே. அப்போது முனிவர் சாபம் இட்டிருக்கிறார். இப்படி அசிங்கம் செய்த வாலி இந்த மலை மீது ஏறினால் அவனுடைய தலை வெடித்துவிடும்.''

*''அப்படியா! எனக்குத் தெரியாதே?'' அப்போதே என்னிடம் நீங்கள் சொல்லிவில்லையே.''*

*சொல்வதற்குத் தான் உன்னைக் கூப்பிட்டேன் - பலதடவை கூப்பிட்டேன். நீ தலை தெறிக்க ஓடினாய். வாலி குகையிலிருந்து வெளி வந்த போதே துந்துபியின் எருமை உடல் உருண்டு வந்து அவன் மீது வீழ்ந்தது. அதை அலக்காக தூக்கி எறிந்தான். அது தான் உனக்கு அதிர்ஷ்டம். கிஷ்கிந்தைக்குப் பக்கத்திலேயே உனக்கு ஒரு ரட்சாஸ்தானம் கிடைத்து விட்டது.*

*''ஹநுமானே! இப்போது நாம் என்ன செய்யலாம்''*

*''ஒன்றும் செய்ய வேண்டாம்''*

*''அவன் வீரர்களை அனுப்பி என்னைக் கொன்று விடுவானே!''*

*''என்னைப்பார். சுக்ரீவ! நான் சொல்வதை நம்பு.''*

*''எப்படி நம்புவது?''*

*''சுக்ரீவ! இப்படியெல்லாம் நீ நினைத்தால் எனக்கு உன்னிடம் வேலை இல்லை. நான் போகிறேன்.''*

*''ஹநுமானே! உங்கள் கால்களில் வீழ்கிறேன். என்னை விட்டுவிடாதீர்கள்.*

*''இப்படியெல்லாம் பேசினால் யாராவது உன்னோடு சகவாசம் வைத்துக் கொள்வார்களா?''*

*''ஆமாம் எனக்கு பரம உபகாரம் செய்கின்ற உங்களிடம் - எனக்கு நம்பிக்கை வரவில்லையே.*

*''அதற்கு காரணம் எனக்குத் தெரியும். ஆனாலும் உன்னை நான் கைவிடமாட்டேன். ஏன் தெரியுமா? நீ என்னுடைய குருபுத்ரன். உனக்கு சகாயமாக நான் இருக்க வேணுமென்று என் குரு நாதர் ஆணை. இப்போது - என்ன செய்திருக்கிறேன் தெரியுமா?*

*''சொல்லுங்கள்.''*

''நீங்கள் ஓடிப்போய் - நான்கு நாட்கள் ஆன பிறகு - உன் மதனியாரிடமிருந்து ஒரு தூதன் வந்தான். அவளுக்கு ரொம்ப மரியாதை என்னிடம். நல்ல விவேகம் உள்ளவள். என்னை கிஷ்கிந்தைக்கு வருமாறு அழைத்திருந்தாள். நான் போனேன். அவள் என்னை வணங்கினாள். ஆஸனம் அளித்தாள். அவளின் கண்ணீர் விட்டு அழுதாள்.

''சகோதரர்கள் இருவரும் இப்படி பரம விரோதிகள் ஆகிவிட்டார்களே''

''தாராதேவி! நீ சொல்வதில் ஒரு சிறு திருத்தம். உன் கணவனுக்கு தான் உன் மைத்துனன் மீது அடாத கோபமே தவிர - சுக்ரீவனுக்கு சிறிது கூட அண்ணனிடம் மரியாதையும் அன்பும் குறையவில்லை.

''ஆமாம், நீங்கள் கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. மைத்துனருக்கு துளிக்கூட அண்ணனிடம் அன்பு குறையவில்லை. எப்போதும் பயம் தான். இவர்களிடையே எப்படியாவது சமரஸம் செய்து வைத்தால் தேவலையே!''.

''ராணி! உன் கணவனுக்கு முரட்டுப் பிடிவாதம் இருக்கிறதே தவிர விவேகமில்லை.

''அதைத்தான் நான் தினமும் அநுபவித்து வருகிறேனே! எடுத்ததற்கெல்லாம் நுணுக்கென்று கோபம் வருகிறதே - தவிர ஆரஅமர யோஜிப்பதே இல்லை''.

''ஆனால் ஒன்று சொல்வேன். ராணியிடம் ராஜாவுக்கு அபாரமான மதிப்பு. உங்களை வாய்க்கு வாய் என்னிடம் பல தடவை கொண்டாடி இருக்கிறார்.''

தாரா தேவி வெட்கத்துடன் தலைகுனிந்தாள்.

''என்ன செய்கிறது? ஏதோ சமாளித்து வருகிறேன்''

''அதனால் தான் நான் சொல்கிறேன். சகோதரர்களிடையே சமரஸம் செய்து வைப்பது ராணியின் கையில் இருக்கிறது.''

''மைத்துனரிடம் ஜனங்களுக்கு எல்லாம் அபார மரியாதையும், அன்பும் உள்ளதே! இனி என் புருஷர் ராஜ்யம் ஆள முடியுமா?''

''அந்தக்கவலை உங்களுக்கு வேண்டாம். பைத்யக்கார ஜனங்கள் ஜே போட்டால் எல்லாம் சேர்ந்து கொள்ளும். வாலி தான் அரசாள வேண்டும். சுக்ரீவன் தலை நீட்டமாட்டான். நான் அதற்குப் பொறுப்பு.

''அப்படியா? மைத்துனர் இணங்கி வருவாரா?''

''ராணி துளிக்கூட சுக்ரீவனைத் தவறாக நினைக்கக்கூடாது. அண்ணனோடு அவன் முரண்டு பிடிக்கவே மாட்டான். நீங்கள் செய்ய வேண்டியது - முக்கியமாக - முந்தியிருந்த சகோதர வாஞ்சையை நீங்கள் தான் வாலிக்குக் கொண்டு வர வேண்டும்''

''என்னால் முடிந்த வரை முயற்சி செய்து பார்க்கிறன்''.

''சகோதர வாஞ்சை வராவிட்டாலும் பரவாயில்லை. அவனை ஒழித்து விட வேண்டும் - என்ற எண்ணத்தை நீங்கள் மாற்றத்தான் வேண்டும்.''

''அதை என்னால் சாதிக்க முடியும். நீங்கள் கவலையே பட வேண்டாம்''.

''கூடிய சீக்கிரம் வந்து விடுவார்கள். நான் சுக்ரீவனிடம் தமையனாரிடம் பகை காட்டாதே - என்பதை வலியுறுத்தி அவனிடம் சபதம் வாங்கி விடுகிறேன். நீங்களும் உங்கள் கணவருக்கு தம்பியிடம் உள்ள வெறுப்பையும் அவனைத் தண்டித்துவிட வேண்டும் என்ற எண்ணத்தையும் மாற்றிவிட வேண்டும்''. என்று சொல்லிவிட்டு வந்திருக்கிறேன் - என்று முடித்தார் ஹநுமான்.

சுக்ரீவன் நெஞ்சு தழுதழுத்துப் போய் ஹநுமான் கால்களில் வீழ்ந்தான்.

''அண்ணா! தங்களை சிறிது கூட புரிந்து கொள்ளாமல் தங்களை வெறும் தோழனாகவே மதித்து என் இஷ்டப்படியெல்லாம் உங்களை உதாஸீனம் செய்திருக்கிறேனே! அத்தனையையும் பொருட்படுத்தாது என் நலனின் மீது இவ்வளவு பொறுப்பெடுத்துக் கொண்டு

எனக்கு அபயம் அளித்திருக்கிறீர்கள். இனி நீங்கள் அண்ணாதான். நீங்கள் தான் எனக்கு அண்ணா. உலகிலே இந்த அண்ணா என்ற சொல் பல நல்லோர்களின் வாயில் புறப்பட்டு பல பெரியோர்களின் சரணங்களில் ஸாதுக்களைக் கொண்டு சேர்ந்திருக்கிறது. அந்தத்திருக்கூட்டத்தில் நானும் சேர்ந்து விடுகிறேன். இனி மேலும் நான் உங்களை உதாஸீனம் செய்யாமல் இருக்க - எனக்கு நல்ல புத்தியை வழங்குங்கள்.''

''சுக்ரீவ! இப்படியெல்லாம் மனதில் நல்ல எண்ணங்கள் இருக்க வேண்டுமே தவிர வாய்விட்டுச் சொல்லக்கூடாது. சொல்லி விட்டால் அதன் கண்யம் குறைந்து விடும். அது போகட்டும். இனி ஆக வேண்டியதைப் பார்ப்போம். இனி யாராவது உன்னிடம் வந்து - நீங்கள் தான் எங்களுக்கு ராஜா - என்றெல்லாம் கூட்டம் சேர்த்துக் கொண்டு கட்சி கட்டிக் கொண்டு வந்தால் - அவர்களுக்கு சிறிதும் இடம் கொடுக்காதே. இப்படியெல்லாம் பேசிக் கொண்டு யாரும் என்னை அணுக வேண்டாம். என் தமையனார் தான் வாநரர்களின் ஏகசக்ராதிபதி என்று பட்டுக் கத்தரித்தாற் போல சுருக்கமாகத் தெரிவித்து விடு''.

''ருமையை அழைத்து வர வேண்டுமே!''

''அதைப்பற்றியெல்லாம் நமக்குக் கவலை வேண்டாம். தாரா தேவி பார்த்துக் கொள்வாள். எவரிடமும் இதைப் பற்றிப் பேசாதே - வதந்திகளுக்குக் கைகால் முளைத்து விஷயத்தை விபரீதம் ஆக்கிவிடும். நடப்பது நடக்கட்டும் நிம்மதியாக என்னோடு கூட ராம நாமம் சொல்லிக் கொண்டு இரு.

ஹநுமானுடைய நேர்மையும் பேச்சில் அழுத்தமும் வெகுவாக சுக்ரீவனைக் கவர்ந்து விட்டது.

# ஜாம்பவான்

காச்மீரத்தில் - ராமாவதார கைங்கர்யத்திற்காக பிரஹ்ம தேவனின் அம்சமாக ஜாம்பவான் - என்ற கரடி நாயகன் பிறந்திருந்தான். அவன் பிறந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ஹிமாலயத்தின் குளிர் பிரதேசங்களில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற கரடிகளுக்கெல்லாம் அரசனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வாழ்ந்தான்.

எப்போதோ காச்மீரத்தை விட்டு கிளம்பி கங்காதீரத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த போது சித்திரகூடத்தில் ஓர் புற்றிலிருந்து ராம ராம ரீங்காரம் காதில் வீழ்ந்தது.

அது ஜாம்பவானுடைய நாக்கில் தொத்திக் கொண்டது. (இன்று கூட கரடி வித்தைக்காரர்கள் - கழுத்தில் கயிறு கட்டி கரடியை இழுத்து வருகின்ற பிச்சைக் காரர்களுடன் வருகின்ற கரடியைப் பார்த்து - பாட்டி சொன்ன பேச்சை நம்பி - ‘‘பாரடா கரடி ராம நாமம் சொல்கிறது - என்று பையன்கள் தம்மிடையே சொல்லிக் கொள்வார்கள்) மறுபடியும் காச்மீர் போய்விட்டார்.

அங்கு (தற்காலத்திய ஜம்முநகரில்) ஜாம்பவான் குகை - என்று புகழ் பெற்ற இடம் உள்ளது. தரை மட்டத்திலிருந்து இருநூறு படிகள் கீழே இறங்கினால் அங்கே பத்து அடி உயரமுள்ள - நாற்பது தூண்கள் கொண்ட நூறு சதுர அடிவிஸ்தாரமான நந்தவனம் வளர்த்திருக்கிறார்கள். வாகனங்களோ மற்ற கனரக வண்டிகளோ உள்ளே செல்ல அநுமதியில்லை.

க்ருஷ்ணாவதாரத்தில் கண்ணன் ஸத்ய பாமாவின் தந்தையிடமிருநது ஸ்யமந்தக மணியைக் கவர்ந்து சென்றதாகப்பழி ஏற்பட்டு விட்டது.

அந்தப்பழியைத் தீர்த்துக் கொள்வதற்காக ஸ்யமந்த கமணியைத் தேடிப் புறப்பட்ட கண்ணன்- அந்த குகையில் புகுந்தான். ஜாம்பவானுடைய பெண்ணான ஜாம்பவதியின் மஞ்சத்தின் விதானத்தில் ஸ்யமந்த கமணி விடிவிளக்காக

இருப்பதைப் பார்த்து அதை எடுக்கப் போனான்.

ஜாம்பவானுக்கும் கண்ணனுக்கும் இடையே துவந்துவ யுத்தம் -ஒருவர்க்கொருவர் மோதிக் கொள்கின்ற வரை போய் விட்டது.

ராமாவதார காலத்தில் பிறந்த ஜாம்பவான் க்ருஷ்ணாவதார காலத்தில், மிகக் கிழவனாக தளர்ந்துவிட்டார்.

கண்ணனிடம் போரில் தோல்வியுற்றார். ராமனே கண்ணன் என்று புரிந்து - ஸ்யமந்தகமணியையும் போரிட்ட குற்றத்திற்காக - தன் பெண் ஜாம்பவதியையும் கண்ணனுக்கு அர்ப்பணம் செய்தார்.

அந்த நிகழ்ச்சி நடந்த இடம் ஜாம்பவான் குகை. இன்றும் காட்சிப் பொருளாக விளங்குகிறது.

அங்கு ராமாவதார காலத்தில் வாழ்ந்து வந்த ஜாம்பவான் - தான் சொல்லும் ராம நாமத்திற்குரியவனான ராமன் வன வாஸம் போயிருக்கிறார் - என்பதைக் கேள்விப்பட்டு ராமனைத் தேடிக் கொண்டு - தென் நாட்டில் ஸஞ்சாரம் செய்த போது கிஷ்கிந்தை வந்து சேர்ந்தார்.

அங்கு ராம நாமம் சொல்லிக் கொண்டிருக்கின்ற - ஹநுமானிடம் நட்பு ஏற்பட்டது. தமது பரிவாரங்களையெல்லாம் காஷ்மீரிலிருந்து வரவழைத்து அனைவரும் கிஷ்கிந்தா பிரஜைகளாக வாழ்ந்தனர்.

சுக்ரீவன் ஜாம்பவான் பரிவாரத்தை வரவேற்று நட்புக் கொண்டு விட்டான்.



## சித்ர கூடத்தில் ராமதர்சனம்

வாலி சுக்ரீவர்களுக்கிடையே எழுந்த புயல் அடங்கி - ஒரு மேல் எழுந்த வாரியான ஒப்பந்தம் -

வாலி ராஜ்யத்தில் சுக்ரீவன் பிரவேசிப்பதில்லை. வாலி சுக்ரீவனுக்கு தானாக எந்தவிதமான தொந்தரவையும் கொடுப்பதில்லை.

இந்தவிதம் ஏற்பட்டு மேலெழுந்தவாரியான அமைதியும் உள்ளே புகைச்சலும் கனிந்து கொண்டிருந்தன.

ஹநுமான் பொறுமை இழந்து கொண்டிருந்தார். குருதேவரிட்ட கட்டளைப்படி - சுக்ரீவனுக்குத் துணையாக ஆதரவு தந்து வருகிறோம். ஆனால் அவர் உபதேசித்த ராம நாமத்தின் பொருளான ''பரம் பொருளின் தர்சனம் கிடைக்கவில்லையே அது எப்போது'' - என்று தவித்துக் கொண்டிருந்தார்.

இதனிடையே அயோத்தி அரசன் தசரதன் குமாரன் ராமன் என்ற பெயருடையான். தந்தையின் ஸத்யத்தைக் காப்பதற்காக - தனக்குரிய ராஜ்யத்தைத் துறந்து வனவாஸம் செய்கிறார் - என்று சேதி காதில் வீழ்ந்தது.

(இவ்வாறு கோஸ்வாமிதுஸஸீ தாஸரின் வாக்கிலே பக்தி நடனமாடுகின்ற கவிதா தேவி சந்தமிழைக்கின்றாள்.)

யமுனை தாண்டி சித்ரகூட பிரதேசத்தில் அடி எடுத்து வைத்த ஸீதாராமலட்சுமணர்களை - வனவாசி ஜனங்கள் ஆச்சரியமாகப் பார்க்கிறார்கள்.

''என்ன காரணமோ இந்த திவ்ய மங்கள சொரூபங்கள் - நாம் இருக்கும் இடம் தேடி வந்திருக்கின்றனர்.

***லக$_{2}$ந ராம ஸிய ஸுந்தரதாஈ***
***நிஜ ப$_{4}$ாக்ய ப$_{3}$ட$_{3}$ாஈ***

இவர்களைக் கண்ணார தே$_{3}$கி$_{2}$ கரஹிம் சேவிக்கின்ற பாக்கியம் நமக்குக் கிடைத்ததே.

அந்த நேரத்தில் - ஒரு தவசி வந்தார். இளம் வயது பொலிவின் களஞ்சியம்.. இதை எழுதுகின்ற கவிக்குப் புரியவில்லை. பார்த்தால் வைராகி மாதிரி. ஆனால் உள்ளம் செயல் சொல் எல்லாம் ராமனிடம் செல்கின்றன. கண்களிலே பாஷ்பம் உடல் சிலிர்க்கின்றது.

ஆஹா நம் இஷ்ட தெய்வமல்லவா? இவரைத் தேடினோம். தடி விழுந்தாற் போல தரையில் வீழ்ந்தார். அவர் உள்ள நிலை புரியவில்லை. ராமன் அவரை உவகையோடு எழுப்பி மெய் சிலிர்க்க அணைந்து கொண்டார். பரம தரித்ரனிடம் ஸ்பர்ச வேதிக்கல் (அந்தக்கல் பட்ட இடமெல்லாம் தங்கமாகும்) கிடைத்தாற் போல் மகிழ்ந்தார். பேரன்பும், பேருண்மையும் இணைந்து விட்டது போலும்

ஸாது லட்சுமணனை வணங்கினார். லட்சுமணன் அவரைத் தழுவினார். ஸீதா தேவியின் சரண தூளியை தமது தன் தலை மீது தூவிக் கொண்டார். தன் குழந்தையே போல் ஸீதா தேவி அவரைத் தடவிக் கொடுத்தாள். காட்சி மறைந்தது.

**தேஹிஅவஸர ஏக தாபஸூ ஆவா ।**

**தேஜபுஞ்ஜ லகு$_4$வயஸ ஸுஹாவா ॥**

**கவி அலகி$_2$தக$_3$தி பே$_3$ஷுவிராகீ$_3$**

**மநக்ரம் பசந ராம அநுராகீ$_3$ ॥**

**ஸஜலநயந தந புலகி நிஜ இஷ்ட $_3$தேஉ பஹிசாநி ।**

**பரேஉ த$_3$ண்ட ஜிமி த$_4$ரிநிதல த$_3$ஸா நஜாஇப$_3$க$_2$ாநீ ॥**

**ராம ஸப்ரேம புலகி உர லாவா**

**பரமரம்க ஜநு பாரஸ பாவா ॥**

**மநஹும் ப்ரேமு பரமார்த்$_2$த $_3$தாஊ**

**மிலத த$_4$ரேம் தநகஹ ஸ$_3$பு கோஊ ॥**

*ப$_3$ஹூரி லக$_2$ந பாயந்ஹ ஸோஇலாகா |*

*லீந்ஹ உட$_2$ாகு எமக$_3$ அநுராகா ||*

*புநிஸிய ச$_1$ரண த$_4$ரி ஸீஸா |*

*ஜநநி ஜாநி ஸிஸூ தீ$_3$ந்ஹி அஸூஸா ||*

*(கோஸ்வாமி தவஸி என்று சொன்னாரே தவிர ஹநுமான் பெயரைக் குறிப்பிடவில்லை. ஹநுமான் முதலில் பம்பைக்கரையில் தான் ராம தர்சனம் பெற்றார் என்பது தான் கதாஸ்வாரஸ்யத்திற்குப் பொருந்தும். ஆயினும் கோஸ்வாமிக்கு ஹநுமானிடம் உள்ள பரிவு காரணமாக ஹநுமானுக்கு சித்ரகூடத்திலே தர்சனம் செய்து வைக்கிறார் என்ற பக்தி ரஸத்தின் பொருட்டு எடுத்துக்காட்டப்பட்டது)*



# இரண்டாவது பகுதி

## ராமதரிசனம்

சுக்ரீவன் ருச்யமூக பர்வதத்தில் நான்கு தோழர்களுடன் ஹநுமானோடும். பொழுது போக்கிக் கொண்டிருந்தான். சுக்ரீவனிடம் பரிவுள்ள கிஷ்கிந்தை வாநரர் சிலர் வந்து வாலியின் அந்தப்புரச் சேதிகளைச் சொல்வார்கள்.

வாலி ருமையை மிகவும் கடைநிலை வேலைக்காரி போல நடத்திக் கொடுமைப் படுத்துகிறான் என்பார்கள். அவனைப்பெண்டாள முனைகிறான் என்பார்கள். சுக்ரீவன் ஹநுமானிடம் வருவான்.

''அண்ணா! கிஷ்கிந்தையில் ருமை கஷ்டப்படுகிறாளாம். எப்படியாவது அழைத்து வந்து விட்டால் தேவலை.

ஹநுமான்: சுக்ரீவ - கஷ்ட காலத்தில் இவையெல்லாம் நினைக்கவே கூடாது. அநுபவ வேளை - என்ற விவேகம் வேண்டும். பேசாமல் ராம நாமம் சொல்லு, எல்லாம் நல்ல படியாக நடக்கும்.

சுக்ரீவன்: நாம் ஏதாவது முயற்சி செய்ய வேண்டாமா?

ஹநுமான்: முயற்சி செய்யத்தான் வேண்டும். அதற்கு ஒரு தருணம் வரும். நான் சொல்கிறேன் இப்போது - நீ செய்ய வேண்டியது உன் மனைவியின் கஷ்டத்திற்காக அண்ணனிடம் விரோதம் பாராட்டி - அதை வெளியிடக் கூடாது. செய்தால் ருமைக்கு அதிகத் துன்பங்கள் நேரும்.

சுக்ரீவன்: நீங்கள் சொல்வது சரிதான். ஒன்றும் செய்ய முடியாத நேரத்தில் வீணாகப் பகையை வளர்த்துக் கொள்ளக் கூடாது தான். அதை நான் உணர்கிறேன்.

அண்ணா! இந்த நேரத்தில் - தாங்கள் எனக்குத் துணையாக நிற்பது பகவானுடைய க்ருபையினால் தான்.

ஒரு நாள் காலை -சுக்ரீவன் ருச்யமூக மலைத் தாழ்வரையிலிருந்து பூமியை எட்டிப் பார்த்தான். பம்பைக் கரையில் உள்ள ஆலமரத்தடியில் ஒரு காட்சி கண்டான்.

இரண்டு தவசிகள் நல்லயௌவன வயது. உடலில் இறுக்கிக் கட்டிய மரவுரி. தலை முடி சடையாகி மேல்புறம் சுருட்டிக் கட்டப்பட்டிருக்கிறது. இடது கையில் வில். இடுப்பில் அம்புறாத் தூணி. வலது கை விரலில் அஷ்டமி சந்திர வளைவு கொண்ட மேல் பிடியுள்ள அம்பு ஒன்று லீலையாகச் சுழன்று கொண்டிருக்கிறது - கிளை கிளையாகப் பார்த்துக் கொண்டே சுற்றுகிறார்கள்.

அவர்கள் யார்? எதற்கு இங்கே சுற்றுகிறார்கள்? தாபஸ வேஷம். ஆனால் கைகளில் வில்லும் அம்பும் - பொருத்தமாக இல்லையே? எதற்குக் கிளைகளில் நோட்டம் விடுகிறார்கள்? மரக்கிளைகளிலே வாநரங்கள் தானே இருக்கும்?

எதற்கு வாநரங்களைத் தேடுகிறார்கள்? ஒருக்கால் வாலியின் கூலிப்படை வேவுக்காரர்களாக இருப்பார்களோ? - என்னைத் தேடுகிறார்களோ? அப்படித்தான் இருக்கும் இப்படியெல்லாம் யோஜித்து ஹநுமானிடம் ஓடி வந்தான்,

''அண்ணா! அண்ணா! வாருங்களேன் இதைப்பாருங்களேன்.''

ராம நாம மாலை உருட்டிக் கொண்டிருந்த ஹநுமான் கண்விழித்தார்.

''என்னப்பா?''

''அதோ பாருங்கள். பம்பைக்கரை ஆலமரத்தடியில் யாரோ இரண்டு பேர் என்னத்தையோ தேடுகிறார்கள்.''

''தேடட்டும்''

''அவர்கள் - என்னைத் தான் தேடுகிறார்களோ என்னவோ? அண்ணன் காரன் என்னைத் தீர்த்துக்கட்ட சரியான ஆட்களைத் தான் அனுப்பியிருக்கிறான்.''

''அப்படி யார் சொன்னார்?''

''எனக்கு அப்படித்தான் நிச்சயமாகத் தோன்றுகிறது''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை யாரோ வழிப்

*போக்கர்கள் --குளித்துவிட்டுத் துணி உலர்த்த மரக்கிளை தேடுகிறார்கள்''*

*''உங்களுக்கு எல்லாமே அலட்சியம் தான். எனக்கு பயமாக இருக்கிறது. சற்றுப் போய் பாருங்களேன். யார் என்று கேளுங்களேன்''.*

*''சுக்ரீவ! இப்படியெல்லாம் பயப்பட்டால் வாழவே முடியாது. உன்னைத் தேடி அவர்கள் இங்கே வந்தால் நாம் பார்த்துக் கொள்ளலாம்.*

*''அண்ணா!அண்ணா! தயவு செய்யுங்கள். சற்று கீழே இறங்கி - நீங்களும் வழிப் போக்கர் போல யார் என்று விசாரியுங்கள். இப்படியே போகாதீர்கள் - வாநர உருவத்திலே போனால் எங்கே அந்த சுக்ரீவன்? என்று கேட்டு உங்களைத் துரத்திக் கொண்டு இங்கே வந்து விடுவார்கள்.*

*பிராமணப் பிரம்மசாரி போல - முழங்கால் வரை துண்டு கட்டிக் கொண்டு - ஒரு புரசங்குச்சியை கையிலே எடுத்துக் கொண்டு போய் விசாரியுங்கள் -*

*நீங்கள் எனக்கு உங்கள் முகம் தெரிகிறாப் போல நின்று பேசுங்கள். என்னைத் தான் தேடுகிறார்கள் என்று தெரிந்தால் தலையைத் தூக்கி என்னைப் பாருங்கள் - நான் கரடிக் குகைக்குள் போய் ஒளிந்து கொள்கிறேன்''.*

*ஹநுமான் ஒரு கணம் சிந்தித்தார். ''குருதேவர் ஆணையின் பேரில் இவனிடம் வந்து மாட்டிக் கொண்டோம். இப்படியெல்லாம் அல்லல் படுத்துகிறானே? என்ன செய்வது? குருதேவர் சொல்லியிருக்கிறார்- இவனுக்கு அநுஸரணையாக இருந்தால் பிரம்ம தர்சனம் கிடைக்குமென்று - பார்ப்போம்.*

*ருச்யமூகமலையிலிருந்து - நான்கே தாவலில் பம்பைக் கரை சேர்ந்தார். அவர்கள் இருவரையும் கண்டார். தேஜஸ்ஸும் வீர்யமும் ஒருங்கே திரண்டு வல்லமையெல்லாம் புஜங்களிலும் கால்களிலும் துலங்க - பரந்த முக ராசியில் கவலை தோய அவர்களும் இவரை நின்று பார்த்தார்கள்.*

''யாரப்பா! பிரம்மசாரி! இங்கே ஏதாவது தபோவனம் இருக்கிறதா? மஹரிஷிகள் இருக்கிறார்களா? - என்று லட்சுமணன் கேட்டார்.

அடுத்தவருடைய முகத்தைத் திரும்பிப் பார்த்தார். அவருடைய சீரிய கடாட்சம் ஹநுமான் மீதுபட்டது. உடலெல்லாம் மின்சாரம் பாய்ந்தது. பிரம்மசாரி தடி போல விழுந்து வணங்கினான். எழுந்திருக்கும் போதே - பிரம்மசாரி வேஷம் கலைந்து வாநரனாகக் கை கூப்பினார்.

இருவர்களுடைய முகமும் மலர்ந்தது. ஹநுமான் அவர்களை வலம் வந்தார்.

''ஏனப்பா! எங்களைச் சுற்றுகிறாய்? என்று கேட்டார் லட்சுமணன்.''

ஹநுமான் கை கூப்பினார்.

''தங்களைப் பார்த்த மாதிரி இருக்கிறதே''

''எங்கே எப்போ பார்த்தாய்?''

மூத்தவர் கூறினார்.

லட்சுமணா! களைப்பாக இருக்கிறது. பம்பையில் இறங்கி - மரக்குடுவையில் தீர்த்தம் கொண்டுவா''

அவர் சொல்லி வாய் மூட வில்லை. குபீரெனப் பாய்ந்தார் ஹநுமான். இரண்டு பசுமையான தேக்கு இலைகளைப் பார்த்தார் - முடைந்தார். பெரிய தொன்னை ஆயிற்று -பம்பையில் குதித்து தொன்னை நிறைய நீர் மொண்டு வந்து நீட்டினார். ராமன் வாய்குளிர உள்ளம் குளிர அந்த ஸ்படிக நீரை அருந்தினார்.

ஒர் இலைக் குலையைப் பறித்துக் கொண்டு வந்து ராமனுக்கு விசிறினார். ராமன் நிமிர்ந்து பார்த்தார். ஹநுமானுக்கு உடலெல்லாம் சிலிர்த்தது. குரு குரு வென்று நரம்பெல்லாம் புடைத்தன. ஒரு கணம் கண்களை மூடினார்.

உள்ளத்திலே மதங்க முனிவர் தர்சனம் கொடுத்தார்.

''நீ சிறு வாநரனாக முனிவர்களுக்கெல்லாம் தொல்லை கொடுத்தாயே! அப்போது - நான் சொன்னேனே! இவன் பரம புருஷனை தர்சிக்கும் வரை தான் இவனுடைய மனோபலமும் ஞானபலமும் அடங்கிக் கிடக்கும்'' தர்சித்து விட்டால் இவனுடைய வலிமைகள் எல்லாம் பூரித்துக்குலுங்கும். அந்த நேரம் வந்துவிட்டது.

''இக்கணமே உனக்கு இவையெல்லாம் பிரகாசிக்கும்.''

ஹநுமான் கண்களைத் திறந்தார். ஸ்ரீராமனுடையவும் லட்சுமணருடையவும் சரணங்களைத் தீண்டிக் கண்களில் ஒற்றிக் கொண்டார். இவருடைய மனது துள்ளியது.

''நீங்கள் அரச குமாரர்கள் தானே! ஸந்தர்ப்ப வசத்தினால் ருஷிவேஷம் பூண்டிருக்கிறீர்கள் அல்லவா? பல்லைக் கடித்துக் கொண்டு உங்கள் மஹிமைகள் எல்லாவற்றையும் அடக்கிகொண்டிருக்கிறீர்கள் அல்லவா! இந்தப்பக்கம் எதற்கு வந்தீர்கள்? புலி, சிங்கம் எல்லாம் உங்களைக் கண்டு அடங்கி ஒடுங்கிப் பதுங்குகின்றனவே!

இங்குள்ள மரங்கள் ஒன்று விடாமல் நிமிர்ந்து சுற்றி - என்ன தேடுகிறீர்கள்? சிங்கம் போன்ற தீர்க்கமான பார்வை! கருகரு வென்று மீசையும் தாடியும் அடர்ந்து உங்கள் வலிமைகளை மறைக்கின்றனவே!

ஏன் அடிக்கடி பெரு மூச்சு விடுகிறீர்கள்? உங்களுக்கு என்ன கவலை? உங்களுடைய உருண்டு திரண்டு நீண்ட புஜங்கள் எப்பொழுதோ நிறைய ராஜபூஷணங்களை அணிந்திருக்கின்றன.

அவற்றின் பதிவு தெரிகிறது. அகில பிரபஞ்சத்தையும் அடக்கி ஆளக் கூடிய தேஜஸ் உங்கள் முகங்களிலே பிரகாசிக்கிறதே.

ராமனும் லட்சுமணனும் அவன் அடுக்கிக் கொண்டே போகின்ற கேள்விகைளக் கேட்டு - வாய் விட்டுச் சிரித்தார்கள். அவர்களுடைய கபடமற்ற சிரிப்பை உற்று கவனித்த ஹநுமான் - ஒரு துள்ளு துள்ளினார்.

*''ஆஹா - ப்ரபோ! - நீங்கள் தசரத ராஜ குமாரர்கள் அல்லவா! உங்களுடைய கபடமற்ற இந்தச்சிரிப்பிலே - உங்களுடைய மூன்று வயது பிஞ்சு முகம் முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கண்டது நினைவுக்கு வந்து விட்டதே.*

*என்னைத் தெரியவில்லையோ! அயோத்தியிலே அரண்மனை மாடத்திலே - உங்கள் தாயார் தங்கக் கிண்ணத்திலேயே பாயஸம் வைத்துக் கொண்டு உங்களுக்கு ஊட்டினாளே!*

*அப்போது குஞ்சுக் குரங்கு அங்கு ஒன்று உங்களிடம் வந்ததே! அதன்முகத்தில் நீங்கள் பாயஸத்தைத் துப்பினீர்களே! அதை அப்படியே அந்தக் குஞ்சுக் குரங்கு கவ்வியதே - உடனே நீங்க நாலு குழந்தைகளும் மாற்றி மாற்றி - பாயஸம் துப்ப அந்தக் குட்டி குடித்ததே. கை கொட்டிச் சிரித்தீர்களே. அந்தக் குஞ்சு குரங்கு இவன்தான்.*

*ராம லட்சுமணர்களுக்கு ஓரே வியப்பு. எவ்வளவு துல்லியமாக முப்பத்தைந்து ஆண்டுகள் முன் பெற்ற அநுபவத்தை எடுத்துக் கூறிவிட்டான். மறுபடியும் ஹநுமான் பேச ஆரம்பித்து விட்டார்.*

*''ப்ரபோ! நிஜமாக நீங்கள் தசரத குமாரர்கள் தானே! எனக்கு சந்தேகமே இல்லை. நீங்கள் மஹாராஜ குமாரர்கள். உங்களுக்கு எத்தனையோ காரியங்கள். அதன் மத்தியிலே இந்தக் குஞ்சுக் குரங்கை மறந்துவிட்டீர்கள்*

*- நான் வெறும் குரங்கு தானே! வேறு வேலை இல்லை - அந்தப் பாயஸத்தை மறக்கவே இல்லை, அந்தப் பாயஸம் குடித்த மஹிமை தான் - நான் இப்போது உங்கள் முன்னே அடியானாக நிற்கிறேன். சொல்லுங்கள் பேச மாட்டீர்களா?*

*ஹநுமானுடைய கரைபுரண்டு ஓடுகின்ற உற்சாகமும் அவனுடைய பேச்சும் கண்டு கேட்டு ராம லட்சுமணர்கள் திக்கு முக்காடினார்கள். தமது மழலைப் பருவத்து லீலையை நினைவூட்டிய வாநரக்குஞ்சா இவன்?*

ஹநுமான் தொடர்ந்தார்

''நீங்கள் பந்து விளையாடியபோது அரங்கத்துக்கு அப்பால் பறந்து பந்துகளைப் பிடித்துக் கொடுத்தேனே. அந்த வால் தான் இவன். ராம லட்சுமணர் கலகல வென்று சிரித்தனர்.

''இப்போது நான் இங்கே தான் இருக்கிறேன். நான் வாயு குமாரன். என் பெயர் ஹநுமான். அஞ்ஜநா பிள்ளை ஆஞ்ஜநேயன் என்பார்கள்.

இது கிஷ்கிந்தா. இது வாநர ராஜ்யம். வாலி தான் அரசன். அவன் தம்பி சுக்ரீவன். நல்லவன். தெரியாத்தனமாக அண்ணன் வெளியே போயிருந்த போது - வாநரவீரர்கள் சேர்ந்து இவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விட்டார்கள். வாலி திரும்பி வந்தான். தம்பி பணிந்து ராஜ்யத்தை ஒப்பு வித்தான். அண்ணனுக்கு கோபம் தணியவில்லை. இவனுடைய பெண்டு பிள்ளைகளை வைத்துக் கொண்டு இவனை அடித்துத் துரத்திவிட்டான்.

ஒரு சாபத்தினால் வாலி இங்கே நுழைய முடியாது. அதனால் இந்த ருச்யமூக பர்வதத்தில் இருக்கிறான். அவனுக்கு நான் துணையாக இருக்க வேண்டுமென என் குருநாதர் கட்டளை. அதனால் அவனை அண்டி இருக்கிறேன்.

இவ்வளவெல்லாம் பேசுகிறேன் - ஒரு வார்த்தை - பேச மாட்டீர்களா? அடியேன் உங்கள் தாஸன். கருணை காட்டுங்கள்.

ராமன் லட்சுமணனை மரத்துக்குப் பின்புறம் அழைத்துச் சென்றார்.

''லட்சுமண! பார்த்தாயா ஈச்வர கடனையை - நாம் யாரைத் தேடி வந்தோமோ அவனுடைய மந்திரி இந்த ஹநுமான். இனி என்ன கவலை? இவனிடம் விஷயத்தைச் சொல்லி விடட்டுமா?

''அண்ணா! சற்று நிதானியுங்கள். சுக்ரீவனோ அகதியாக ஒளிந்து வாழ்கிறான். கபந்தன் சொன்னான்

என்பதற்காக - அவனிடம் போய் அவன் காலடியில் நீங்கள் நிற்பதா? எனக்குப் பிடிக்கவில்லை.''

''லட்சுமண! சுக்ரீவன் கிடக்கிறான். நாம் ஹநுமானைப் பிடித்துக் கொள்வோம். ஹநுமான் புத்திசாலி. எவ்வளவு இங்கிதமாகப் பேசி விட்டான் பார்த்தாயா? வாலி கொடுமையாளன். சுக்ரீவன் சாது. அவனை விரட்டி விட்டான் அண்ணன்.

கபந்தன் சொன்னது அலட்சியம் செய்யாதே! அவன் வரும் காலம் உணர்ந்தவன். அவன் வாலியிடம் போங்கள் என்று சொல்லவில்லை. சுக்ரீவனைச் சரணடையுங்கள் - என்று சொல்லியிருக்கிறான். ஆகவே சுக்ரீவன் கை ஓங்கப் போகிறது. அதைத்தான் ஹநுமான் ஸூசனையாகச் சொல்லிவிட்டார். நாம் சுக்ரீவனுக்குத் துணை போனால் நமக்கு நல்லது. அதனால் ஹநுமானிடம் நம் விஷயத்தை பிரஸ்தாபிக்கிறேனே!''

''அண்ணா! நீங்கள் பேச வேண்டாம். உங்கள் வாயால் ''எனக்கு ஸஹாயம் செய்'' என்று கேட்பதை நான் சகிக்கமாட்டேன்''.

''அப்படியானால் நீ பேசு''

''நான் என்ன பேசுவேனோ?

அதை நீங்கள் அனுமதிக்க வேண்டும்''

''சுக்ரீவனுடைய சகாயத்தை நாம் வேண்டத்தானே வேண்டும்.''

''எப்படியோ சொல்லி விடுகிறேன்''

மரத்தைச் சுற்றி வந்தார்கள். ஹநுமான் இருந்த இடத்தை விட்டு நகராமல் அங்கேயே காத்திருந்தார். ஒட்டுக் கேட்கின்ற புத்தியில்லை என்று ராமன் ஹநுமானை மதித்தார்.

''லட்சுமண! ஆஞ்ஜநேயன் என்ன அழகாகப் பேசுகிறான் பார்த்தாயா? அவன் இச்சகம் பேசவில்லை. ஒவ்வொரு அட்சரமும் ஸத்யம் - என்று கபடமற்ற குரலே சொல்கிறது. அன்போடு கேட்கிறான். நம் சோகக் கதையை

ஊருக்கெல்லாம் சொல்வானேன் என்று நினைத்தேன் ஆனாலும்,

ஹநுமானுடைய பேச்சு எனக்கு ஆறுதலாக இருக்கிறது - நம் கதையை நீ சொல்லு

*(கத$_2$லு தம்முலு ப$_3$ல்க$_3$சேஸிதிவி*

*என்கிறார் த்யாகராஜஸ்வாமி)*

ஹநுமான் லட்சுமணனுடைய முகத்தை ஆவலோடு பார்த்தார்.

''ஆஞ்ஜநேயா! அருகேவா! அண்ணா சொன்னார் அல்லவா. நம் சோகக்கதையை ஊருக்கெல்லாம் சொல்லி அவர்களுக்கு துயரமளிப்பது தவறு - என்ற எண்ணத்தினால் மட்டுமே உனக்கு உடனுக்குடன் பதில் சொல்லவில்லை. நீ அடுக்கடுக்காகப் பேசினாயே அதிலேயே - எங்களைப் பார்த்தவுடனேயே நன்கு புரிந்து கொண்டு விட்டாய் என்று புரிந்தது -

நீ கண்டு பிடித்தது போல - நாங்கள் தசரத ராஜகுமாரர்கள். இவர் மூத்தவர் ராமன் என்று பெயர். நான் அவருடைய சிறு தாயார் சுமித்ரையின் மகன் லட்சுமணன். நான் அவர்கூடவே பிறந்த அன்றிலிருந்து வளர்ந்தவன்.

அவர் குணக்கடல். பொறுமையே வடிவானவர். நான் அவருக்குச் சற்றுக் கூடப் பொருந்தாத - பொறுமை அற்றவன். ஆனால் அவர் என்னைத் தம்பி என்கிறார். என் உள்ளப்படி அவருக்கு நான் அடிமை. அவருடைய கல்யாண குணங்களால் ஈர்க்கப்பட்டவன். அவற்றில் சில எனக்குப் பிடிக்காதவை. ஆனாலும் அவருடைய அடிமை நான்.

**தஸ்யாஹம் அவரோ ப்ராதா**
**கு$_3$ணைர் த$_3$ாஸ்யம் உபாக$_3$த:**

எனக்குத் தம்பி - ஒருவன் சத்ருக்நன். மற்றொரு சிறு தாயார் கைகேயி மாதா. அவளுடைய பிள்ளை. அவன் ராமனே அச்சாகப் பிறந்தவன் பரதன்.

எங்கள் நால்வருக்கும் சேர்ந்தே ஆண்டின் நிறைவு முடி வைப்பு வித்யாப்யாஸம். கல்யாணம் - எல்லாம் நடந்தன.

தகப்பனார் உரிய வயதில் ராமனுக்கு பட்டாபிஷேகம் செய்ய ஏற்பாடு பண்ணினார்.

அண்ணாவுக்கு வருத்தம் தான். நால்வருக்கும் சேர்ந்தாற்போலவே எல்லா மங்கள காரியங்களும் நடந்தனவே - எல்லோருக்கும் சேர்ந்தே பட்டாபிஷேகம் செய்யக் கூடாதா என்று வருந்தினார்.

''இக்ஷ்வாகு வம்சத்தில் மூத்த பிள்ளைக்குத்தான் பட்டாபிஷேகம்'' என்று எங்கள் குருநாதர் வஸிஷ்டர் குல வழக்கத்தை எடுத்துச் சொன்னார். ராமனும் அரை மனதோடு ஏற்றார்.

ஆனால் எங்கள் சின்னம்மா கைகேயி பரதனுக்குத் தான் ராஜ்யம். அண்ணா காட்டுக்குப் போக வேண்டியது என்று எங்கள் தகப்பனாரிடம் வரம் வாங்கிவிட்டாள். அரை மனதோடு பட்டாபிஷேகத்தை ஏற்றுக் கொண்ட எங்கள் அண்ணா முழு மனதோடு வன வாஸத்தை ஏறறுக் கொண்டு விட்டார். மதனியும் கிளம்பிவிட்டார்

''அப்பா அம்மாவுக்கு உபசாரம் செய்து கொண்டு இங்கேயே இரு'' - என்று அண்ணா என்னை ஒதுக்கப்பார்த்தார். நான் பிடிவாதம் பிடித்து அண்ணாவுடன் வந்துவிட்டேன்.

தாயார் ஏற்பாடு பண்ணிய பட்டாபிஷேகத்தை தனயன் பரதன் ஏற்கவில்லை. அவன் ராமனுடைய தம்பி அல்லவா? ''நீங்கள் தான் அரசன்'' என்று காட்டுக்கு வந்து அண்ணாவை மண்டியிட்டு வேண்டினான். அண்ணா மசியவில்லை. பரதனும் மசியவே இல்லை.

''உங்கள் பாதுகையைக் கொடுங்கள். அதற்கு ராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்து அதன் ஏவலாளாக நான் அரசைப் பேணிக்காக்கிறேன் - என்றான்.

வேறு வழியில்லாமல் அண்ணன் இசைந்தார். வனவாசம் பதிமூன்று ஆண்டுகள் ஓடிவிட்டன. திடீரென்று ஒரு நாள் லங்காதிபன் ராவணன் நாங்கள் அருகில் இல்லாத நேரத்தில் மதனியாரைக் களவாடிக் கொண்டு போய்விட்டான்

- அண்ணாவினுடைய உயிர் மதனியிடத்தில் - மதனியுடைய உயிர் அண்ணாவிடத்தில். அண்ணா பெரும் துயரத்தில் ஆழ்ந்துவிட்டார். பின்னர் ஒருவாறு மனம் தேறி மதனியாரைத் தேடித் தெற்கு திசை நோக்கி வருகின்றோம். சில நாட்கள் முன்பு கபந்தன் - என்பவன் சாபக் கேட்டினால் அரக்கனாகி எங்கள் இருவரையும் வழி மறைத்தான். எங்களை வணங்கினான்.

''ஐயா! நான் கந்தர்வன். எனக்கு ஒரு சாபம் - எனக்கு வரும் காலம் இனி நிகழப் போவதெல்லாம் கண்டு பிடிக்கக்கூடிய சக்தியும் உண்டு. சபித்த முனிவர் சொன்னார். இரண்டு மஹாபுருஷர்கள் உன் வழியில் வருவார்கள். அவர்கள் கையினால் நீ மரணம் அடைந்தால் மறுபடியும் கந்தர்வன் ஆகிவிடுவாய். அவர்களுக்கு வரும் காலம் பற்றிய உண்மை கூறுவாயாக.''

அதனால் உனக்கு மோக்ஷமேஸித்திக்கும் என்று அருளினார். ஆகவே தாங்கள் தங்கள் வாளினால் வெட்டி என்னைக் குழியில் தள்ளிப் புதையுங்கள் - நான் நற்கதி பெற்று உங்கள் வரும் காலம் கூறுவேன் - என்று சொன்னான்.

நாங்கள் அவன் விருப்பத்தை நிறைவேற்றினோம். அவன் கந்தர்வனாக ஆகாயத்தில் தோன்றி கூறினான்.

''நீங்கள் ஒரு அருமையான வஸ்துவை இழந்திருக்கிறீர்கள். அதைத் தேடி வந்திருக்கிறீர்கள். பம்பைக்கு அருகே -சுக்ரீவன் என்ற வாநர அரசன் இருக்கிறான். அவனைச் சரணடையுங்கள். அவன் உங்களுடைய அருமையான வஸ்துவைக் கண்டுபிடித்துக் கொடுப்பான்'' என்று சொன்னான்.

அவன் பேச்சை நம்பி இங்கே வந்தோம் தெய்வச்

செயலாக ஹநுமானே! நீ வந்து விட்டாய். சுக்ரீவன் எங்கிருக்கிறான்? அவனிடம் போய் நாங்கள் வேண்டிக் கொள்கிறோம் - என்று சொல்லி முடிப்பதற்குள் லட்சுமணன் குரல் தழுதழுத்து - வாய் குளறிக் கண்ணீர் விட்டான்.

ஹநுமான் உடனே அருகில் சென்று லட்சுமணனை அணைத்து ஆச்வாஸம் செய்து வைத்தான். ராமர் கண்ணீர் ததும்பும் கண்களை கம்பீரமாகத் தேற்றிக் கொண்டார்.



## 2.சுக்ரீவ நட்பு

ஹநுமான் இருவருடைய திருவடிகளிலும் வீழ்ந்து எழுந்தார். கிழக்கு நோக்கிக் கும்பிட்டார். சூரிய பகவான் மேகங்களிலிருந்து வெளிப்பட்டு பளீரென்று ஜொலித்தார். அவருக்கு பதினாறு நமஸ்காரங்கள் செய்தார் ஹநுமான்.

ப்ரபோ! - என் நல்ல காலத்தை என்னவென்று சொல்வேன்? சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள். எனக்கு குருநாதர் ஸூர்யதேவன். அவர் ஸகல வித்யைகளுடன் ஆத்ம வித்யையையும் போதித்தார். உபதேசம் முடிந்தவுடன் நான் கேட்டேன் - தாங்கள் நிரூபித்திருக்கின்ற பரம் பொருளின் அநுபவம் - எனக்கு எப்போது கிடைக்கும்? அதற்கு நான் என்ன செய்ய வேண்டு மென்று கேட்டேன்.

அப்போது குருநாதர் எனக்கு அருள் பாலித்தார் ''நாராயணன் ராவண ஸம்ஹாரத்திற்காக அவதாரம் செய்வார். அவருக்கு சகாயம் செய்வதற்காக - பிரம்ம தேவரின் நியமனப்படி -எனக்கொரு பிள்ளை பிறந்திருக்கிறான். ஸுக்ரீவன் என்ற வாநரன். அவனுக்குத் துணையாக நீ போய் அவனை ஸங்கடத்திலிருந்து விடுவிக்க வேண்டும். அப்போது உனக்குப் பரமபுருஷ தர்சனம் கிடைக்கும்'' என்றார்.

குருக்ருபையை என்னென்று சொல்வேன்? எவ்வளவு எளிதாக எனக்கு பரமபுருஷனுடைய தர்சனம் கிடைத்துவிட்டது? ராம நாமம் ராமனையே கொண்டு என் முன் நிறுத்திவிட்டதே.

அது ஒரு புறம் இருக்கட்டும்.

மற்றொருக்ருபையை நினைத்துப் பார்க்கிறேன். ஆஹா! எப்படிச் சொல்வேன்?

மரத்தைச் சுற்றி வருகின்ற தங்களைப் பார்த்து - சுக்ரீவன் - தன் எதிரியான அண்ணன் ஏவிவிட்ட கொலையாளி என்று பயந்துவிட்டான். என்னை ''போய் அவர்களை திசை திருப்புங்கள்'' - என்று வேண்டினான்.

*நான் அலட்சியமாக ''அவர்கள் இங்கு வந்தால் பார்த்துக் கொள்ளலாம் - என்று சொன்னேன். மறுபடியும் வற்புறுத்தி என்னை அனுப்பினான்.''*

*''ஆஹா! க்ருபையை என்னவென்று சொல்வேன். நான் அவன் வற்புறுத்தலுக்கு இணங்கி இங்கு வந்திராவிட்டால் - என்ன ஆகியிருக்கும்? நீங்கள் மலை ஏறி - அங்கு வந்திருப்பீர்கள். லட்சுமண ஸ்வாமி அவனிடம் இந்தக்கதை சொல்லியிருப்பார்.*

*ஆனால் அப்பப்பா! அந்த விபரீதத்தை - என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது.*

*நல்ல வேளை நான் வந்தேன். தனியாக தங்களை ஸந்தித்தேன். குருநாதர் க்ருபை என் கண்களைத் திறந்து விட்டிருக்கிறது.*

*பரம புருஷனான தாங்கள் சுக்ரீவனைத் தேடி வருவதாவது? தாங்கள்எங்கே? அவன் எங்கே! நான் சொல்வது அதிகப் பிரஸங்கம். ஆனால் என்னை மன்னித்து விடுங்கள். சற்றுக் கேளுங்கள்.*

*இந்த மலையின் மீது ஏறுவதற்கு மறுபக்கத்தில் சரிவான பாதை இருக்கிறது. சிறுபடிகளும் உள்ளன. சற்று மேலே ஏறினால் அங்கே மலை உள் வாங்கி - ஒரு நிழல் கூடம் உள்ளது. அங்கு ஒரு மேடையும் இருக்கிறது - தாங்கள் அங்கு அமர்ந்திருங்கள்.*

*சுக்ரீவன் மலையின் அடிவாரத்தில் இறங்குவதற்கு பயப்படுவான்.*

*நான் அவனை தாங்கள் தங்கி இருக்கும் இடத்திற்கு அழைத்து வருகிறேன்.*

*லட்சுமண ஸ்வாமி சொன்ன விஷயங்கள் எல்லாம் அங்கே பேச வேண்டாம். அவன் தங்களை சரணாகதி பண்ணுவான். அவனுக்கு தாங்கள் அபயம் அளிக்க வேணும். அதுவே என் பிரார்த்தனை.*

அத்துடன் எனக்கு குருநாதர் இட்ட ஆணை நிறைவேறி விடுகிறது. பிறகு நான் தங்களுடையவே தாஸன்.

இவ்வாறு கூறி ஹநுமான் விடை பெற்றார். நான்கே தாவலில் சுக்ரீவன் முன்னே நின்றார்.

''சுக்ரீவ! உனக்கு நல்ல காலம் பிறந்துவிட்டது. உன்னுடைய தொல்லைகள் எல்லாம் தீரப் போகின்றன. நீ காட்டினாயே! அவர்கள் யார் தெரியுமா? அயோத்தியாதிபதி தசரத மஹாராஜனுடைய குமாரர்கள் ராமலட்சுமணர்கள் - ஜகதேக வீரர்கள் (உலகில் அவர்கள் இருவரே வீரர்கள்)

அவர்கள் பித்ருவாக்கிய பரிபாலனம் பண்ணுவதற்காகக் கானகம் வந்திருக்கிறார்கள். பஞ்சவடியில் தங்கியிருந்தார்கள். ராமனுடைய மனைவி ஸீதாதேவியை - அவர்கள் இல்லாத நேரத்தில் ராவணன் களவாடிக் கொண்டு போய் விட்டான். அவனை லங்கைக்கே கொண்டு போகாமல் தண்டகவனத்திலே எங்காவது ஒளித்து வைத்திருப்பானா - என்று ஸீதா தேவியைத் தேடிக் கொண்டு தென் திசை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களைத் தான் நான் சந்தித்தேன். அவர்கள் மஹாவீரர்கள். அவர்களிடம் உன் பரிதாப நிலையையும் உன் அண்ணனின் கொடுமையையும் சொன்னேன். அவர்கள் மனம் இரங்கிவிட்டார்கள். உன் கஷ்டத்தைத் தீர்ப்பதே முதல் வேலை. பிறகு ஸீதையைத் தேடிக் கொள்கிறோம் - என்றார்கள்.

பிறருடைய துயரம் தீர்ப்பதில் அவர்களுக்கு இவ்வளவு முனைப்பு. உனக்குத்தான் சேதி சொல்லியிருக்கிறேனே. தண்டகவனத்து முனிவர்களுக்குக் கொடுமை செய்து கொண்டிருந்த பதினான்காயிரம் அரக்கர்களையும் கரதூஷணர்களையும் ஒன்றரை நாழிகையில் துவம்ஸம் செய்து விட்டார். ராமன் - ஒருவனே - தனியாக,

அப்படிப்பட்ட பராக்ரமசாலிகள். அவர்களிடம் - நீ போய் கால்களில் விழவேண்டும். அவர்கள் உனக்கு அபயம்

அளிப்பார்கள். வாலியை வதைப்பார்கள். உனக்கு வாநர ராஜ்யம். நீ அவர்களுக்கு ஸீதாதேவியை தேடிக் கொடுக்க வேண்டியது''.

''அப்படியா! அண்ணா? அண்ணா! நீங்கள் எனக்கு எவ்வளவு க்ருபை செய்து வீட்டீர்கள்! அவர்கள் என்னைத் தேடி வர வேண்டாம். அவர்கள் இருக்கும் இடத்திற்கு நாம் போவோம். வாருங்கள்''.

நண்பர்கள் நான்கு பேரும் நான்கு கூடைகளில் பழங்களை நிரப்பிக் கொண்டார்கள் - மலை இறங்கினார்கள். சுக்ரீவன் முன்னால் ஓடோடி வந்து ராமன் திருவடிகளில் வீழ்ந்தான். ராமன் அவனைத் தூக்கி அணைத்துக் கொண்டார். லட்சுமணனை வணங்கினான். ராமனும் சுக்ரீவனும் மேடையில் அமர்ந்தார்கள்.

ஹநுமான் ஒரு மரக்கிளையை ஒடித்து வந்து மேடை ஓரமாகப் போட்டார். அதன் மீது லட்சுமணன் அமர்ந்தார்.

''பெரியோர்களே - நான் பெரிதும் பாக்கியம் பண்ணியிருக்கிறேன். நான் என்ன பாக்யம் பண்ணினேன்! ஒன்றுமில்லை. எல்லாம் என் அண்ணா - இந்த ஹநுமந்தப்பாவின் க்ருபை. தங்கள் திருவடி சேவை கிடைத்தது. ஆஹா என்ன பாக்யம்?

ராவணன் தங்கள் மனைவியைக் களவாடிக் கொண்டு போய்விட்டானாமே. அண்ணா சொன்னார்கள். நீங்கள் கவலையே படாதீர்கள் -

உங்களுக்குத் தெரியுமோ? இந்த அண்ணா இருக்கிறாரே - அவருக்கு அகில பிரபஞ்சத்தில் உள்ள வாநரர்கள் எல்லோரும் அடங்கினவர்கள். அவர் என்ன சொன்னாலும் கேட்பார்கள். அவர் என்னோடு இருக்கிறார் என்று எல்லா வாநரர்களுக்குமே தெரியும். நான் ஆணையிட்டால் ஸகல வாநரர்களும் கூடி அதை நிறைவேற்றி வைப்பார்கள்.

உடனே ஏற்பாடு செய்கிறேன்.

ராமன் அமைதியாகக் கூறினார்.

சுக்ரீவ! உன்னுடைய விசாலமான மனதில் எனக்கு இடம் கொடுத்துவிட்டாய். இதோ அன்புக்கரம் நீட்டுகிறேன். நாம் நண்பராவோம்'' என்றார்.

சுக்ரீவன் ராமனுடைய கரத்தைப் பிடித்துக் கொண்டான். ஹநுமான் அக்நி மூட்டினார். இருவரும் கை கோர்த்துக் கொண்டு மூன்று முறை வலம் வந்தனர். இது அந்த நாளில் அந்தப் ப்ராந்தியத்து வழக்கம். இருவர்களுடையவும் நட்பு தைவஸம்மதமானது. ஒருவர்க்கொருவர் தேவைப்படும் போது பரஸ்பரம் உதவி செய்து கொள்ள வேண்டியது என்றும் துரோகம் செய்வதில்லை என்றும் சபதம் செய்து கொண்டார்கள்.

ஸகல லோகாதிபதியான ஶ்ரீராமன் வாநராதிபதியாக ஆகப் போகின்ற சுக்ரீவனுடன் தோழமைச் சபதம் செய்து கொண்டார்.

ஹநுமான் தமது குருதேவருடைய ஆணையைக் குறைவின்றி நிறை வேற்றி விட்டோம் என்ற நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.

ஹநுமான் கூறினார்.

ஐயா! ஒரு விண்ணப்பம். சுக்ரீவனுடன் தங்களுக்கு இப்படி ஒரு தோழமை - ஏற்பட வேணும் என்று தங்களுடைய தேவி நினைத்து விட்டாள். அவள் லோக மாதா அல்லவா?'' என்றார் ஹநுமான்.

ராமன் ஆச்சரியமாக ஹநுமானைப் பார்த்தார்.

ஹநுமான்: ''சுக்ரீவ! அன்றொரு நாள் ஒரு சேலைத் தலைப்பில் கட்டிய திருவாபரணமூட்டை ஒன்று - நாம் பேசிக் கொண்டிருந்த போது நம்ம மடியில் வீழ்ந்ததே எங்கே அது?

ஸுக்ரீவன் எழுந்து ஓடினான்

''பிரபோ - பதினைந்து நாட்களுக்கு முன் நாங்கள் ஆறு பேர்களும்- இவன் சுக்ரீவன் அவனுடைய நண்பர்

நால்வர்- இந்த மலை முகட்டில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

ஆகாயத்தில் - நாங்கள் அடிக்கடி பார்க்கின்ற ராவணனுடைய புஷ்பக விமானம் பறந்து சென்றது. நாங்கள் அதை லட்சியம் செய்யமாட்டோம்.

ஆனால் அதில் ஒரு பெண்மணியின் கூக்குரல் கேட்டோம். அண்ணாந்து பார்த்தோம். ஒரு கணம் விமானம் எங்களைத் தாண்டிப் போயிருக்கும். அதற்குள் எங்கள் மடியில் - ஒரு பட்டு முடிச்சு வந்து விழுந்தது.

உடன் மேலே பார்த்தோம் - ஒரு பெண் மணி - விமானத்தில் எங்கள் பக்கம் கை நீட்டினாள். அதுவே அவள் எங்களுக்குச் செய்த ஆசி என்பது இக்கணம் தான் புரிகிறது -

அவளுடைய ஆசி இல்லாவிட்டால் உங்களுடைய தர்சனம் கிடைத்திருக்குமா?

லட்சுமணன் அண்ணாவை ஆர்வத்துடன் பார்த்தான். அவருடைய திருவடியில் வீழ்ந்தான்.

அதற்குள் சுக்ரீவன் பட்டு மூட்டையுடன் வந்தான். மெல்லிய பூந்துகில் மேலாக்கு.அதற்குள் இருந்த திருவாபரணங்கள் டால் அடித்தன. ராமனுடைய திருக்கரங்களில் ஸமர்ப்பித்தான்.

ஸ்ரீராமன் கண்களில் நீர்த்ததும்ப மெதுவாக அந்த முடிச்சை அவிழ்த்தார் திருவாபரணங்கள் பளிச்சிட்டன. ஒருகை ரத்தின வளையல், ஒரு கை ரத்தினக் தோள்வளை, இடுப்பில் அணியக்கூடிய மெல்லிய ஒட்டியாணம், ஒருகால் கொலுசு அதனிடையே ராம நாமம் பதித்த மோதிரம்.

அந்த மோதிரத்தைப் பார்த்ததும் ராமனுடைய கண்களிலிருந்து கலகல வென்று கண்ணீர் பெருகி. அத்தனை ஆபரணங்களையும் நனைத்துவிட்டது. கையில் மோதிரத்தை எடுத்து அங்கவஸ்திரத்தினால் துடைத்துப் பார்த்தார்.

‘‘லட்சுமணா இந்த மோதிரத்தைப் பார்த்தாயா? இது ஏது? உனக்கு நினைவு இருக்கிறதா?

ஸகல திவ்யாபரணங்கள் சீர் செய்த ஜநக மஹாராஜவுக்குத் தோன்றவில்லை. அத்தனை சீர்வரிசைகளை அனுபவித்த என்னுடைய தாயார்களுக்குத் தோன்றவில்லை. அத்திரி மஹரிஷியின் ஆச்ரமத்தில் அநசூயா மாதா எங்களை ஊஞ்சலில் அமர்த்தி காலுக்குப் பாலிட்டு கண்களுக்கு மைதீட்டி - ஸீதையின் வலது கரத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டு மாணிக்க ரத்னங்களால் ராம என்ற எனப் பொறித்த மோதிரத்தைப் பூட்டினாளே. அந்த மோதிரம் இது.

லட்சுமண! பார்த்தாயா? அந்தப் பழுத்த சுமங்கலியின் ஆசியைத் தாங்கின மோதிரமடா!

லட்சுமணன்: ''மதனியின் இந்த ஆபத்தான வேளையிலே அதை ஏன் கழற்றினாள்?''

ராமன்: புரியவில்லையா உனக்கு? தன்னைக் காத்துக் கொள்வதைக் காட்டிலும் எனக்கு ஒன்றும் ஆபத்து வந்து விடக் கூடாதே என்று - எனக்கு ரக்ஷையாக - இந்த மோதிரத்தை இந்த முடிச்சில் ஞாபகமாகச் சேர்த்திருக்கிறாளடா!

அவளைப் பறி கொடுத்து விட்டேனே- லட்சுமண என்னடா செய்வேன்?

உட்கார்ந்திருந்த ராமன் பின்புறம் சாய்ந்தார். ஓடி வந்து ஹநுமான் அவருடைய பின்புறம் அமர்ந்து ராமனைத் தன்மார்பில் சாய்த்துக் கொண்டார்.

சுரீரென்று லட்சுமணனுக்கு இந்தக் கணத்தில் இந்த கைங்கர்யம் செய்ய வேண்டுமென எனக்குத் தோன்றவில்லையே. நானும் பிறந்த நாளாக அண்ணாவுக்குத் தொண்டு செய்து வருகிறேன்.

நேற்றுவந்த ஹநுமானுக்கு இப்படியெல்லாம் ஸேவை செய்ய வேணுமென்று எப்படித்தான் தோன்றுகிறதோ? இனி தினந்தோறும் காலையில் ஹநுமானின் பாததூளி சிரஸில் தரிக்க வேண்டும். அப்படியாவது கைங்கர்ய ரஹஸ்யம் எனக்கு புரியாதா? பார்க்கலாம்''.

ஹநுமான் அந்த திருவாபரணங்களை புதுப்பட்டினால் துடைத்து அவை நெளிந்து உடையாமல் இருக்க மரப்பேழையில் வைத்து ராமனிடம் சேர்த்தார்.

ராமன் சில நொடிகளில் ஆச்வாஸமடைந்து பெருமூச்சு விட்டு நிமிர்ந்தார்.

சுக்ரீவன் அருகே வந்தான். ''என்ன இது? இப்படி மூர்ச்சித்து விழுந்து விட்டீர்களே! எனக்கு ரொம்ப பயம் வந்து விட்டது - புருஷோத்தமன் தீரபுருஷன் தாங்கள்!

இப்போ என்ன ஆகிவிட்டது? அரக்கன் மனைவியை கொண்டு போய்விட்டான். அவன் எங்கே போனாலும் அவன் சிண்டைப்பிடித்துக் கொண்டு உங்கள் மனைவியையும் கொண்டு வந்து விடுகிறேன். இவ்வளவு தானே!

இதற்காக இப்படியா மனம் கலங்குவது? இப்போது நான் கூடத்தான் மனைவியை இழந்து விட்டு நிற்கிறேன். அதற்காக இப்படியா அழுகிறேன்? நமக்கு தைரியம் இருக்க வேண்டாமா'' - என்று பேசிக் கொண்டே போனான்.

லட்சுமணர் குபீரென்று சிரித்து விட்டார். இரண்டு மூன்று நிமிஷங்கள் தொடர்ந்து சிரித்தார்.

சுக்ரீவன் கேட்டான். ஏன் இளைய அண்ணா இப்படி சிரிக்கிறார்? அவர் அழுகிறார். இவர் சிரிக்கிறார் - எனக்கு ஒன்றுமே புரியவில்லையே....

லட்சுமணன் சுக்ரீவனிடம் வந்தான் ''சுக்ரீவ! உன்னைப் போன்ற ஒரு நண்பனைப் பெற்றதற்கு - என் அண்ணா நிரம்பப் புண்ணியம் செய்திருக்க வேண்டும் - என்று தட்டிக் கொடுத்தார்.

ஹநுமான் ஜாடையாக சுக்ரீவனை அழைத்துக் கொண்டு அப்பால் சென்றார்.

லட்சுமண! இந்தப் பேழையை ஜாக்கிரதையாக எங்கேயாவது வை. அதிருக்கட்டும் எதற்கு இப்படிச் சிரித்தாய்?

''அண்ணா! என்னை மன்னிக்க வேண்டும். என்னால் அடக்க முடியவில்லை சிரித்து விட்டேன்''

''என்ன நடந்தது?''

நீங்கள் கோழையாக பெண்டாட்டியை பறி கொடுத்து விட்டு அழுகிறீர்கள். அவன் மனைவியை இழந்து தைரியமாக இருக்கிறானாம்.

நீங்கள் எங்கே ? உங்கள் உள்ளத்தின் அடிவாரத்தில் ஊறிக் கொண்டிருக்கின்ற பவித்ரமான ப்ரேமபரிமாணம் எங்கே? வெறும் காமுகனான சுக்ரீவனின் மனப்பாங்கு எங்கே? தியாகமே உருவெடுத்து வந்திருக்கின்ற மதனியாரின் ஆழ்ந்த பரிவு எங்கே? தனக்கு ரக்ஷை இல்லாவிட்டாலும் பரவாஇல்லை. தங்களுக்கு ரக்ஷை வேணுமென்று வேறு எந்த மாநுஷஸ்த்ரீ நினைப்பாள்? அவள் எங்கே? போக போக்யங்களுக்கு ஆசைப்படுகின்ற ருமை எங்கே?

இரண்டையும் ஒரே தட்டில் வைத்துப் பேசினானே சுக்ரீவன். அதை நினைத்தால் இப்போது கூட சிரிப்பு வருகிறது.

''லட்சுமணா! சுக்ரீவனை அசடன் என நினைக்காதே. அவன் கள்ளம் கபடமற்றவன். உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் விண்டு வைக்கிறவன்.

நான் கோழை போல சற்று மனம் கலங்கிவிட்டேன். பாவம்! அவன் பதறிப்போய் விட்டான். எனக்கு தைரிய மூட்டவேணுமென்று மனதில் உள்ளதை அப்பட்டமாகப் பேசி விட்டான்.

அவனுடைய பரிவுக்கு நீ மதிப்புக் கொடுக்க வேண்டும். அவன் அப்பாவி. அவனை அடிக்கடி பெருமைப்படுத்த வேண்டும். அப்போது தான் அவன் உற்சாகமாக நமக்கு உதவி செய்வான்.

ஹநுமானோடு சென்ற ஸுக்ரீவன் கேட்டான்.

''அண்ணா! நான் ஏதாவது தகாத வார்த்தை பேசி விட்டேனா? ஏன் இளைய பிரபு அப்படி சிரித்தார்?

''சுக்ரீவ! நீ ஒன்றும் தகாத முறையில் பேசவில்லை. பிரபு உன்னை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார். கவலைப்படாதே. நீ உன் மனதில் பட்டதை அப்பட்டமாகச் சொன்னாயே! அது தான் சரி''.

''பின் ஏன் சின்னவர் அப்படிச் சிரித்தார்.?''

''அதுவா? சொல்கிறேன் கேள்.

நீ மனைவியைப் பிரிந்து வேதனைப்படுகிறாய். அதற்காக நீ மனம் தளர்ந்து விடவில்லை.

''அண்ணா! அப்படி நான் மனம் தளராமல் இருப்பதற்கு நீங்கள் தானே காரணம்? வீணாக பரிதவிக்காதே. முயற்சி செய்து ருமையை அழைத்து வந்து விடுவோம் என்று நீங்கள் தானே சொன்னீர்கள்.

''ஆமாம். அதையே நீ பிரபுவுக்கும் சொன்னாய். அது சரி, ஆனால் லட்சுமணர் வனத்திற்குக் கிளம்பும் போதே - மனைவியைத் துறந்து வந்திருக்கிறார்.

தமையனாரின் சேவைக்கு - மற்றப் பொறுப்புகள் இருந்தால் இடையூறு - என்று தியாக மனப்பான்மையோடு வந்திருக்கிறார்.

அவர் தமையனாரை சமாதானப்படுத்த - நான் பெண்டாட்டியை விட்டு வாழவில்லையா - என்று உன்னைப் போல கேள்வி கேட்க முடியவில்லை.

அதை நீ செய்து விட்டாய் - என்று தான் சிரித்தார். உன்னிடம் அவருக்கும் தவறான எண்ணம் கிடையாது கவலைப்படாதே''

''அண்ணா! அவர்களைப் பார்த்தால் எனக்கு மிகவும் தைரியமாகவும் இருக்கிறது. வாலியை நினைத்தால் பயமாகவும் இருக்கிறது''.

''இப்படியெல்லாம் குழம்பாதே நாளைக்காலை நீ - பிரபுவிடம் உன் ஆதங்கத்தைச் சொல்லிவிடு''.

# 3.பலப்பரீட்சை

மறுநாள் காலை ருச்யமூக பர்வதத்தில் ப்ரஸரவணச்சுனையில் ராமனும் இலட்சுமணனும் நீராடிவிட்டு அமர்ந்திருந்தனர்.

சுக்ரீவன் போய் வணங்கினான். ராமன் அவனைத் தன்னருகே அமர்த்திக் கொண்டார்.

''சுக்ரீவ! இப்போது சொல். உனக்கு என்ன கஷ்டம்?''.

சுக்ரீவன் ஆதியோடந்தமாக நடந்ததையெல்லாம் சொன்னான். ''நான் ஒரு நாளும் அரசாள வேண்டும் என்று நினைத்ததே இல்லை. அண்ணாவோடு சுமுகமாக வாழ வேண்டும் என்று தான் நினைத்தேன். குகை வாசலில் காத்திரு - என்று தான் சொல்லி - துந்துபியோடு யுத்தத்திற்குப் போனார். அதன் முடிவு வரை காத்திராமல் - நான் இந்த அசட்டு மந்திரிகளின் பேச்சைக் கேட்டு விட்டேன்.''

''அப்போது ஹநுமான் உன் கூடத் தானே இருந்தார்''.

''ஆனால் அப்பொழுதெல்லாம் அவர் பாட்டுக்கு ஜபமாலை ராம நாமம் உருட்டிக் கொண்டிருப்பாரே தவிர பேசவேமாட்டார். உங்கள் தர்சனம் பெற்றபிறகு அவர் பெரிதும் மாறி விட்டார். ஒரு அற்புதமான வீரக்களை அவருக்கு வந்து விட்டது.

உங்களை அழைத்து வந்து எனக்கு காப்புக்கட்டிவிட்டாரே. கிஷ்கிந்தையிலிருந்து சில வாநர வீரர்கள் வந்து சொல்கிறார்கள் ''சுக்ரீவனை ஒழித்துக்கட்டாத வரை எனக்கு நிம்மதி கிடையாது - என்று அண்ணன் கருவிக் கொண்டிருக்கிறாராம். எனக்கு யாரும் எந்த உதவியும் செய்யக்கூடாது - என்று கட்டுப்பாடு பண்ணி வைத்திருக்கிறார். என் மனைவியை மிகவும் கொடுமை படுத்துகிறாராம்.

அது மட்டுமில்லை - இப்போது எனக்கு ஒரு புதுக் கவலை. தாங்கள் தேவியைத் தேடிக் கொண்டு என்னிடம் வந்திருக்கிறீர்கள். இது வாலிக்குத் தெரிந்தால் உங்களுக்கே

அபாயம் வருமோ? என்று பயப்படுகிறேன்.

''எனக்கு என்ன அபாயம்?''.

அதாவது ராவணனும் வாலியும் இப்பொழுதெல்லாம் மிகவும் கொஞ்சிக்குலாவுகிறார்கள். அவனுடைய அக்ரமத்திற்கெல்லாம் வாலி துணை போகிறார். அவனுக்கு இந்தச் சேதி தெரிந்தால் ராவணனை உஷார்ப்படுத்தி விடுவார். ஸீதாதேவிக்கு மேலும் கொடுமை செய்வாரோ - என்று பயமாக இருக்கிறது.

லட்சுமணன் விருட்டென்று எழுந்தார். ''அண்ணா! சுக்ரீவன் சொல்வதில் உண்மை இருக்கிறது''.

''லட்சுமண! பதறாதே. சுக்ரீவனைப் பேச விடு.''

சுக்ரீவன் பேசினான்.

''ப்ரபோ! நீங்கள் ஏதாவது உடனே வாலி விஷயமாக நடவடிக்கை எடுக்க வேண்டும்.''

''சுக்ரீவ! நீயும் நானும் நண்பர்கள் என்று சபதம் செய்து கொண்டுவிட்டோம். இனி நீ என்னுடைய பொறுப்பு - உனக்குப் பகைவன். எனக்கும் பகைவன். முதலாக உன் பகையைத் தீர்த்து விடுகிறேன். கவலைப்படாதே''

ப்ரபோ! இப்போது தான் எனக்கு மிகவும் நிம்மதியாக இருக்கிறது. நீங்கள் என் சத்ருவை ஒழித்துவிடுவீர்கள். எனக்கு அந்த நம்பிக்கை வந்துவிட்டது. ஆனால் - என்று பேச ஆரம்பித்தவன் ஹநுமான் முகத்தைப் பார்த்தான். ஹநுமான் கூறினார்.

''சுக்ரீவ! நீ என்ன சொல்ல வேண்டும் என்று நினைக்கிறாயோ! அதைச் சொல்லிவிடு. பிரபுவிடம் ஒன்றையும் ஒளிக்கத் தேவையில்லை''.

சுக்ரீவன் தயங்கினான். ராமன் அவனுடைய வலது கையைப் பிடித்துக் கொண்டார்.

''சுக்ரீவ! பயப்படாதே உன் மனதில் உள்ளதைச் சொல்லிவிடு''

''எனக்கு என் அண்ணனை நினைத்தால் மிகவும் பயமாக இருக்கிறது. அவன் மஹாபலசாலி. போட்டிக்காகப் பெரிய பெரிய வாநரவீரர்கள் எல்லோரும் வந்து விளையாட்டுப் போர் நடத்தியிருக்கிறார்கள். வெளிச் சீமைகளிலிருந்து - பனிரெண்டு அடி உயரம். ஒரு குன்று போல காத்திரம் உள்ளவன். வந்து சவால் விட்டுப் போரிட்டிருக்கிறான்.

அவர்களுக்கெல்லாம் வாலியை நினைத்தால் சிம்ம சொப்பனம் - வெளிச் சீமைகளில் எல்லாம் வாலியை தமது தலைவராக ஏற்றுக் கொண்டுவிட்டன.

நானும் பல வீரர்களுடன் மோதிப் பயிற்சி பெற்றிருக்கிறேன். இப்போது என்னால் படைதிரட்ட முடியாது. வாலிக்கு எதிராக எந்த வாநர வீரனும் எனக்குத் துணையாக வரமாட்டான்.

அதோ பாருங்கள் - மலையாகக் கிடக்கிறதே - அது என்ன தெரியுமா! அந்த துந்துபியின் எருமைக்கடா உடல். அதை இடது காலால் உதைத்து இத்தனை தூரம் மதங்க முனி ஆச்ரம வாசலில் போட்டிருக்கிறான்.

நானும் முனிவருக்கு இடைஞ்சலை நீக்குவோம் என்று நினைத்துப் பல வாநரர்களைச் சேர்த்து - புரட்டி மலைச்சரிவில் தள்ளி விடுவோம் என்று நினைத்து முயற்சி செய்தேன். ஒரு அங்குலம் கூட நகர்த்த முடியவில்லை.

அவ்வளவு முரட்டு பலசாலி உங்கள் எதிரி. நீங்கள் மஹாவீரர். அதில் எனக்கு சந்தேகமில்லை. ஆனால் வாலியை எப்படி எதிர்ப்பது - என்பதை நீங்கள் தான் தீர்மானிக்க வேண்டும்.

ராமன் எழுந்தார் - ஆச்ரமவாசலுக்கு சென்றார். செத்த எருமையின் கொம்பு ஒன்று பூமியில் புதைந்திருந்தது. அதை இடது கால் கட்டை விரலால் நெம்பினார். அது பூமியைப் புட்டுக் கொண்டு கிளம்பியது. முன்னம் பாதத்தை நுழைத்து எத்தினார். அந்த சடலம் முழுதும் விர்ரென்று ஆகாயத்தில் எழுந்து - கிஷ்கிந்தை வாசலில் போய் விழுந்தது.

ராமன் திரும்பினார். சுக்ரீவன் துள்ளிக்குதித்தான். ராமனுடைய இடது பாதத்தைத் தடவினான். முத்தமிட்டான்.

''ஆஹாஹா - அடேயப்பா என்ன காரியம் செய்து விட்டீர்கள்! ராமனைப் பலதடவை பிரதக்ஷிணம் செய்தான் - சுக்ரீவன்.

அவனுடைய கையைப் பிடித்தார்.

''ஏன் இப்படியெல்லாம் பரபரக்கிறாய். வீரர்களுக்கு இவையெல்லாம் அழகல்ல. மேலே விஷயத்தைச் சொல்லு.

''ப்ரபோ! தங்கள் பராக்கிரமத்தை நினைத்து எனக்கு மாளவில்லை. உங்கள் எதிரிலே வாலி - எந்த மூலை? ஆனால் எனக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது.

''என்ன விஷயம் சொல்லு''

''பெரிய விஷயம் ஒன்றுமில்லை, இருந்தாலும் சொல்லித்தானே ஆக வேண்டும். அவன் எத்தி எரிந்த போது அது மாம்ஸமும் சதையும், ரத்தமும் பீரிட்டுக் கொண்டு ரொம்ப ரொம்ப கனமாக இருந்தது. இன்று அது ரத்தமெல்லாம் சுண்டி எலும்பெல்லாம் காய்ந்து கூடாகத் தானே கிடந்தது. இன்றைக்கு அவ்வளவு பளு இருக்காதல்லவா?

லட்சுமணன் வெகுண்டு எழுந்தான்.

''சுக்ரீவ! என்ன பேச்சு பேசுகிறாய்?''

ராமன் அவனைக் கை அமர்த்தினார்.

''லட்சுமண! சுக்ரீவனைப் பேச விடு''

சுக்ரீவன் : ''இல்லை, இல்லை இனி நான் பேசவில்லை.

ராமன்: ''பயப்படாதே - சொல்லு''.

சுக்ரீவன்: ''எனக்கு ஒரே பயம் தான். அந்த முரட்டுப் போக்கிரி வாலியோடு தங்களை மோத விட்டு - தங்களுக்கு ஒரு அபாயமும் நேரக் கூடாதே என்ற கவலையினால் இந்த விஷயத்தைச் சொல்ல வந்தேன்.

''நீ எச்சரிக்கை செய்ய வேண்டியது அவச்யம் தான். மேலே சொல்லு. வாலி பராக்கிராமத்தைப் பற்றி கேட்க எனக்கு ஆர்வம் உண்டாகிறது''.

''அதோ பார்த்தீர்களா ஏழு மராமரங்கள்! ஒரு வரிசையாக இல்லாமல், இங்கொன்று அங்கொன்றாக மைதானம் முழுவதும் வியாபித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றிலே தன்னுடைய வாலைக் கோர்த்து உலுக்குவான் அண்ணன்.

ஏழு மரங்களும் தள்ளாடும். அவற்றை வாலினால் அழுத்துவான். அவைபூமியில் புதைந்து விடும். இப்படி ஒரு வேடிக்கை பண்ணுவான்.''

''நான் ஒரு வேடிக்கை பண்ணட்டுமா? - என்றார் ராமன். வில்லில் நாணைப் பூட்டினார். ஒர் அம்பைக் கோத்துச் சுண்டினார். வக்கிரமான திசைகளில் இருந்து ஏழுமரங்களையும் ஒவ்வொன்றாகத் துளைத்துக் கொண்டே போய் - வெளியே வந்து ராமனுடைய அம்புறாத்தூணியில் பவ்வியமாக நுழைந்தது.

சுக்ரீவன் அசந்து போய் வாயைப் பிளந்தான். பேச்சே எழும்பவில்லை. லட்சுமணன் அவனை உலுக்கினான்.

சுக்ரீவன் குழறினான்.

''இதென்ன அதிசயம்? குறி நோக்கி ஒரு அம்பையெய்தால் - நேரே போய் அம்பு அந்தக் குறியைத்தாக்கினால் அதுவே பெரிய வித்தை. கேள்விப்பட்டிருக்கிறோம்.

மூலைக்கு மூலை உள்ள ஏழு மரங்களைத் துளைத்துக் கொண்டு போயிருக்கிறதே இந்த அம்பு. அது மட்டும் அல்லாமல் அம்புறாத்தூணியில் வந்து அமைந்ததே. இப்படி எங்கும் கேள்விப்பட்டதே இல்லை.

''அப்புறம் ஆச்சரியப்படலாம்.மேலே வாலி பற்றி விஷயம் சொல்லு''

*''ப்ரபோ! போதும் போதும் வாலியைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போனேனானால் - எல்லோரும் உங்கள் பிரதாபத்தை நான் குறைவாக நினைப்பதாகச் சொல்லுவார்கள்.*

*உண்மையில் எனக்கு என் காரியம் நிறைவேறட்டும்! நிறைவேறாமல் போகட்டும் அதைப்பற்றிக் கவலையில்லை தங்களுக்கு ஒரு ஆபத்தும் வாலியினால் ஏற்படக் கூடாதே! என்ற ஒரே கவலை.*

*வீணாக வாலியைக் கிளப்பிவிட்டுவிட்டு உங்களையும் அவன் விரோதிக்க ஆரம்பித்தால் - உங்கள் காரியம் ஸீதாதேவியைக் கண்டுபிடிக்க வேண்டுமே - அதற்கு குந்தகம் நேரக் கூடாதல்லவா?''*

*அப்படியெல்லாம் ஒன்றும் வராது - என்று கூறி எழுந்தார் ராமன். ஸுக்ரீவனும் ஹநுமானும் நகர்ந்தனர்.*

*லட்சுமணன் : அண்ணா! ஏனிப்படித் தாங்கள் தங்களைத் தாழ்த்திக் கொள்கிறீர்கள்? எனக்குப் பிடிக்கவே இல்லை.*

*ராமன் : என்ன சொல்கிறாய்?*

*லட்சுமணன்: அநாதையான இந்த சுக்ரீவன் உங்களை வீர்ய பரீட்சை பண்ணுவதாவது? நீங்கள் அதற்குப் பணிந்து வீர்யத்தைக் காட்டுவதாவது? இதை என்னால் தாங்கவே முடியவில்லை.*

*ராமன் : நீ சொல்வது சரி தான். இவனுடைய வீரியப் பரீட்சைக்கு உட்பட்டிருக்கக் கூடாது தான். ஆனால் என் முன்வினை இப்படிச் சுட்டுவிட்டது.*

*லட்சுமணன் : முன் வினையா? அதென்ன?*

*ராமன் : லட்சுமணா! நீ மறந்து விட்டாய். நாம் வனவாஸம் கிளம்பின போது நம் செல்வம் எல்லாம் தானம் பண்ணினோம் இல்லையா, அப்போது கடைசியாக த்ரிஜடப்ராமணன் வந்தாரில்லையா -*

மற்றவருக்கெல்லாம் மரியாதை பண்ணினாற்போல இவருக்கு மரியாதை பண்ணாமல் ''அதோ சரயு நதிக்கப்பால் ஆயிரம் பசுக்கள் உள்ளன. அவற்றின் மீது உமது கைப்பிரம்பை வீசி எறியும்! அது எது வரை போகிறதோ அது வரை உள்ள பசுக்கள் உம்முடையது - என்று சொன்னேன்.

அவர் பிரம்பு வீசினார். அத்தனை மாடுகளையும் தாண்டி அந்த பிரம்பு தரையில் குத்தியதே. அப்படி ஒரு பிராமணனுக்கு மரியாதை செய்யாமல் பரீக்ஷை பண்ணினேன் இல்லையா! அந்த வினை இப்போது என்னைச் சுட்டது.

அவருக்கு ஒரு பரீக்ஷை -எனக்கு இரண்டு பரீக்ஷை - என்று சிரித்தார் ராமன்.

லட்சுமணன்: ஆமாம்! ஏன் அவரைப் பரீக்ஷைக்கு உள்ளாக்கினீர்கள்!

ராமன்: அதையும் நீ தெரிந்த கொள்ளத்தான் வேண்டும். நம்முடைய நாட்டில் நமது தந்தையார் கையால் - தானம் வாங்காத பிராமணர்களே கிடையாது.

வேதமோதின இவர் மட்டும் தானம் வாங்க மாட்டேன். மூலிகைகள் பயிர் பண்ணி அவற்றை வைத்யர்களுக்கு கொடுத்து அவர்கள் வைக்கின்ற காணிக்கைகளினால் - நான் குடும்பம் நடத்துவேன் என்று பிடிவாதமாக இருந்தார்.

தானம் வாங்குவதில்லை என்ற அவருடைய சபதத்தை நாம் கெடுப்பானேன்? என்று நினைத்தேன். தவறு என்று தெரிந்தும் கூட பரீக்ஷைவைத்தேன். அதன் பயனை இப்பொழுது அநுபவித்தேன். லட்சுமணன் அண்ணாவின் திருவடிகளைப்பற்றி கண்ணீர் விட்டார்.



## வாலியின் முடிவு

மறுநாள் காலை சுக்ரீவன் வந்து ராமனை வணங்கினான்

ராமன்:- இப்போது நீ போய் வாலியை மல்லுக்கு இழுக்க வேண்டியது. நீங்கள் இருவரும் மல்ல யுத்தம் செய்ய வேண்டியது. உனக்கே நிறைய வீர்யம் இருக்கிறது பராக்கிரமம் இருக்கிறது.

ஹநுமான் துணையிருக்கிறார். நீ அவனை வதைத்து விடுவாய். அப்படி உனக்கு ஏதாவது ஆபத்து வந்தால் - ஒரே அடியில் அவனை நான் வீழ்த்தி விடுகிறேன்.

சுக்ரீவன் தயங்கினான். ஹநுமான் வந்தார்.

''பிரபு சொல்வது தான் சரி. பகைவர்களுக்கிடையே போர் நடப்பது தான் முறை. அவனிடம் விரோதமில்லாத பிரபு நேரேஅவனைப் போருக்கு எப்படி இழுக்க முடியும் ...? அது யுத்த தர்மத்திற்குக்தகாத காரியம். பிரபு சரணங்களில் பக்தியோடு நாம் பிரபு சொன்னபடி கேட்பது தான் நல்லது கிளம்பு!''

சுக்ரீவன் பயந்தான்.

இதற்கிடையே - கிஷ்கிந்தையில் பரபரப்பு அதிர்ச்சி. வாநரர்கள் கொந்தளித்தார்கள். அரசனிடம் சென்றார்கள். ''நமது ஆஜாரவாசலில் துந்துபியின் எலும்புக்கூட விழுந்து கிடக்கிறது''

வாலி திடுக்கிட்டான்.

''அப்படியா?''

''ஆமாம் வாசலைத் தாண்டிப் போக முடியவில்லை''

வாலி நேரில் வந்துபார்த்தான். அவன் முகம் கோரமாயிற்று.

''அந்த அயோக்யன் சுக்ரீவன் வேலை தான் இது விட்டேனா பார்''

தாரை ஓடோடி வந்தாள். வாலியைக் கட்டிப்பிடித்தாள்.

''பதறாதீர்கள் - ஒரு நாளும் சுக்ரீவன் இதைச் செய்திருக்க முடியாது. அவருக்குத் தெம்புமில்லை- தைரியமுமில்லை. வேறு யாரோ செய்திருக்கிறார்கள்.''

''அதெல்லாம் இல்லை. அவனைத் தொலைத்து விட்டுத்தான் மறுவேலை.''

''வேண்டாம்! வேண்டாம்! எனக்குத் தெரியும். இதை யார் செய்தார் என்று. மைத்துனர் செயல் அல்லவே அல்ல. சற்று என்னோடு வாருங்கள் - ''என்று கையைப்பிடித்து இழுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றாள்.

உடனே வீரர்களை அழைத்து - அந்த எலும்புக் கூட்டை அகற்றும் படி ஆணையிட்டாள்.

வாலியை மஞ்சத்தில் அமர்த்தினாள். விசிறி கொண்டு விசிறினாள்.

''நான் சொல்வதை சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள். எடுத்ததற்கெல்லாம் ஆத்திரப்பட்டு மேலே மேலே ஆபத்தைப் பெருக்கிக் கொள்வதில் அர்த்தமில்லை.

நேற்று மாலை தான் இது நடந்திருக்கிறது. நீங்கள் போதையில் இருந்தீர்கள். உங்களிடம் சொல்லிப்பயனில்லை. நானே வேவுகாரர்களை அனுப்பி விஷயங்களைச் சேகரித்தேன். என்ன விஷயம்? சொல்கிறேன் கேளுங்கள்.

ஆர்யாவர்த்தத்தில் அயோத்தி இருக்கிறதல்லவா - அதன் சக்ரவர்த்தி தசரதர் - தெரியுமே! அவருடைய குமாரர்கள் இருவர் - ஏதோ காரணமாக - நாடு கடத்தப்பட்டு காட்டுக்கு வந்திருக்கிறார்கள். பதினான்கு ஆண்டுகள் கெடுவாம் - பதிமூன்று ஆண்டுகள் ஆகிவிட்டனவாம்.

தண்டகவனத்திற்கு வந்து - கரதுஷணர் முதலான பதினான்காயிரம் அரக்கர்களை அழித்து தண்டக வனத்தை

தபோபூமி ஆக்கி அயோத்திராஜ்யத்தோடு சேர்த்துக் கொண்டு விட்டார்களாம்.

அந்த ராமனுடைய மனைவி - சீதை என்று பெயராம். அவளை உங்கள் நண்பர் ராவணன் - அவர்கள் அருகில் இல்லாத நேரத்தில் களவாடிக் கொண்டு போய் விட்டாராம். அவளைத் தேடிக் கொண்டு இந்தப் பக்கம் வந்தவர்களை - ஹநுமான் பார்த்திருக்கிறார்.

அவர்களைக் காக்காய் பிடித்து ''உங்கள் மனைவியை தேடிக் கண்டு பிடித்துதருகிறோம் - சுக்ரீவனோடு சேருங்கள்'' என்று அக்னிஸாக்ஷியாக சபதம் செய்ய வைத்திருக்கிறார் ஹநுமான். சுக்ரீவனுக்கு சகாயம் செய்வதாகச் வாக்களித்திருக்கிறார்களாம்.

சுக்ரீவனுக்கு பயம் தெளியவைப்பதால். அதற்கு பலபரீட்சையாக அந்த ராமன் இடது கால் கட்டை விரலால் எத்தினாராம் - துந்துபி எலும்புக் கூடு நம் வாசலில் வந்து விழுந்திருக்கிறது.

வாலி: அப்படியா சங்கதி! இந்த இரண்டு பயல்களையும் இதோ போய் - வாலில் கோத்துக் கொண்டு வந்து விடுகிறேன்.''

தாரா: சொல்வதைக் கேளுங்கள். அவர்களுக்கு ஹநுமான் ஸஹாயம் இருக்கிறது. அவர் உங்களைக் கவிழ்த்து விடுவார். அவருடைய புத்திசாலிதனத்திற்கும், தந்திரத்திற்கும் எதிராக நாமும் புத்திசாலித்தனமாகவும் தந்திரமாகவும் செயல்பட வேண்டும்

வாலி: என்ன தந்திரம்?

தாரா: ராமனுடைய மனைவியை உங்கள் நண்பர் கடத்திக் கொண்டு போயிருக்கிறார். ராவணனுக்கு உடனே தாக்கீது அனுப்புங்கள். நடுங்கிக் கொண்டு ராவணன் அந்தப் பெண்பிள்ளையைப் கொண்டு விட்டு விடுவார்.

பொழுது விடிவதற்குள் இது நடக்கவேண்டும். காலையில் நாம் ராமனுக்கு தூதுவிடுவோம். ''பெண்டாட்டி வேணுமா சுக்ரீவன் வேணுமா? என்று

அப்போ அந்தபுத்திமான் ஹநுமான் பணிந்து - சுக்ரீவனை உங்கள் காலில் கொண்டு தள்ளுவார். உங்கள் உடம்பு வியர்க்காமல் நமக்கு வெற்றி கிடைத்துவிடும்'' என்றாள்.

வாலி அப்படியே தாரையை வாரிக்கட்டிக் கொண்டான். ராவணனுக்குத் தூது ஆனுப்பிவிட்டான்.

பொழுதுவிடிந்தது. வாலி எழுந்தான். வீரகர்ஜனை கேட்டது. ''அண்ணனே! வாடா வெளியே''

வாலி திடுக்கிட்டான். மறுபடியும் கர்ஜனை கேட்டது.

தாரே! என்று அலறினான். அவள் ஒடிவந்தாள். அவளுடைய காதிலும் வீரகர்ஜணை கேட்டது.

தாரே! பார்த்தாயா? இரவுக்குள் - என்ன காரியம் நடந்துவிட்டது!

''ஆமாம் என் திட்டம் பலிக்கவில்லை. ஆனாலும் நீங்கள் பதட்டப்படக் கூடாது. கொஞ்சம் நிதானிக்க வேண்டும்''.

''இனித்தாமதிக்க மாட்டேன். அவனைத் தொலைப்பேன். அவனோடு அந்த இரண்டு க்ஷத்ரியப்பதர்களையும் அழிப்பேன்.''

''நாதா! பதறாதீர்கள் இப்பொழுதே நான் செய்தி அனுப்பிவிருக்கிறேன். ''உங்களுக்கு உடல் நலம் சரியில்லை நாளைக்காலை மஹாராஜா உங்கள் சவாலை சந்திப்பார்''

ராம லட்சுமணர்கள் யுத்த தர்மத்தை மீற மாட்டார்கள். சுக்ரீவன் திரும்பிவிடுவான். அதற்குள் ராமலட்சுமணர்களுடன் பேரம் பேசிவிடலாம்'' என்றாள் தாரை

''போடி போடி . ராமனைப்பற்றி உனக்குக் கொஞ்சம் தான் தெரியும். எனக்கு நிறையத் தெரியும். அவன் மஹாவீரன். அதனால் காரணமில்லாமல் தன்னை

எதிர்க்காதவனை எதிர்த்துப் போராட மாட்டான். தன் காரியத்திற்காக - தர்மத்தை விட்டுக் கொடுக்கமாட்டான்.

காலில் விழுந்தவனை சத்ருவிடம் காட்டிக் கொடுக்க மாட்டான். காப்பாற்றியே தீருவான்.

அவனோடு நமக்கு வம்பு இல்லை. சுக்ரீவன் சவால் விடுகிறான். அவனைத்தீர்த்து விடுகிறேன். பிறகு ராமன் தன் காரியமாக ஸீதையை தேடுவதற்கு - என்னை நாடுவான். பார்த்துக் கொள்கிறேன்.''

வாலி பாய்ந்து வந்தான்.

சுக்ரீவனுக்கும் வாலிக்கும் இடையே கடுமையான போர். ராமலட்சுமணர் ஹநுமான் மரங்களுக்கிடையே மறைந்து நின்றனர்.

வெகு நேரம் போர் நடந்தது. சுக்ரீவன் சளைத்து விட்டான். திரும்பித்திரும்பி ராமன் நிற்குமிடம் நோக்குகிறான். ராமன் - வில்லை எடுத்து நாணேற்றினார். அம்பு கோர்த்தார். ஹநுமான் முன்னே வந்தார்.

''இப்போது அம்பு எய்யாதீர்கள்?''

வாநரவீரர்களுக்கு ஒரு துர்குணம். ஒன்றுக்கொன்று - என்று மல்யுத்தம் செய்யும் போது - ஒருத்தனுக்கு உதவியாக யாரும் தலையிடக்கூடாது, ஓய்ந்து சாய்ந்தால் உதவிக்குப் போகலாம். சற்றுப் பொறுங்கள்''.

சில நொடிகளில் தப்பித்து சுக்ரீவன் ஓடிவந்து விட்டான். சுக்ரீவன் தேம்பினான்.

''வாலியை அடிக்க எனக்கு பயமாக இருக்கிறது - என்று அப்போதே சொல்லியிருந்தால் - நான் வாலியிடம் சவாலிட்டிருக்கமாட்டேனே! நான் பிழைத்தது தம்பிரான் புண்யம்''

ஹநுமான் இடை மறித்தார்.

சுக்ரீவ! நீ சொல்வது முற்றிலும் உண்மை. நீ பிழைத்தது இந்த தம்பிரான் ராமன் புண்யம்.

வாலி திரும்பி பிரபுவை ஒரு கணம் பார்த்து விட்டான். ஒரு கணம் ஸதம்பித்து விட்டான். நீ பிழைத்தாய்.

''சரி வாருங்கள்! ருச்யமூகம் போய்விடுவோம். இனி வாலி பக்கம் தலைவைத்துப்படுக்க மாட்டேன். அப்பப்பா! உடலெல்லாம் வலி தாங்கவில்லை. ஒவ்வொரு குத்தும் குந்தாணிக்குத்தாக வீழ்கிறது'' என்றான் சுக்ரீவன்.

ராமன் அவனை அணைத்தார். லட்சுமணன் சுக்ரீவனுடைய உடம்பை நன்றாகப் பிடித்து விட்டார். ஹநுமான் பச்சிலைகளைக் கொண்டு வந்து சுக்ரீவனுடைய உடலில் அடிபட்ட இடங்களில் பிழிந்தார்.

எல்லாம் ஹிதமாக இருந்தது.

வாலி அந்தப்புறம் திரும்பினான். தாரை அவருக்கு சிகித்ஸைகள் செய்தாள். ''இந்தப்பயல் ஒடி விட்டான்.

ஒரு நொடி ராமனையே தாக்கலாமா? என்ற எண்ணம் வந்தது - நீ சொன்ன பராக்ரமங்கள் நினைவுக்கு வந்தது. ராமனும் தயங்கி நிற்பதைப் பார்த்துவிட்டான். வெறும் வீரனாக இருந்தால் ஒரு அம்பால் துளைத்திருப்பான்.

ராமன் தர்மவீரன். அதனால் அவன் என்னை அடிக்கவில்லை என்றான்.

சுக்ரீவன் சற்றுக் கண் அயர்ந்தான். ஹநுமான் அவன் உடம்பைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்தார்.

ராமன் நெகிழ்ந்துவிட்டார் ''நான் அப்போதே அம்பை நாணில் கோத்துவிட்டேன். ஹநுமான் தடுத்தானே ஏன்?''.

லட்சுமணன்: ஹநுமான் தடுத்தது நல்லதாய்ப் போயிற்று. நீங்கள் அம்புவிட்டு வாலி மடிந்திருந்தால் சுக்ரீவன் வந்து சொல்வான் ''நானே கடைசியாக மூச்சை அடக்கி ஒரு குத்துவிட்டு அவனைக் கொன்றுவிடலாம் என நினைத்தேன். அதற்குள் உங்கள் அம்பு வந்து அவனைத் தாக்கிவிட்டது'' என்பான்.

ராமன்: இப்படியெல்லாம் பேசாதே லட்சுமண!

*ஹநுமான்: பிரபுவுக்கு ஒரு விண்ணப்பம். இளையஸ்வாமி சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. சுக்ரீவன் வெகுளி. கொஞ்சம் ஜம்பம் அடித்துக் கொள்கிற பழக்கம் உண்டு. கட்டாயம் இப்படிச் சொல்லியிருப்பான்.*

*ராமன்: கபடு சூழ்ச்சி இல்லாதவன் தான் இப்படிப்பேசுவான். சுக்ரீவனுடைய வெள்ளை உள்ளத்தை நாம் மதிக்க வேண்டும்.*

*ஹநுமான் : சுக்ரீவ! எழுந்திரு கிளம்பு.*

*சுக்ரீவன் : மலைக்குத்தானே*

*ஹநுமான் : போருக்கு*

*சுக்ரீவன் : போருக்கா?*

*ஹநுமான் : ஏன் என்ன பயம்? பிரபு இருக்கும் போது நீ தைரியமாகச் செல்ல வேண்டும்.*

*சுக்ரீவன் : இந்தத் தடவை நான் தளர்ந்து விட்டால் அதோடு முடிந்துவிடுவேன்.*

*ஹநுமான் : ப்ரபு உன்னைத் தளரவிடமாட்டார்.*

*ராமன் : அதோ பார் லட்சுமண! மர மல்லிகை மரத்திலிருந்து மலர்கள் கொட்டிக்கிடக்கின்றன. அவற்றை எடுத்து வந்து சுக்ரீவனுக்கு - ஒரு மாலை தொடுத்துப் போடு. அப்போது தான் எனக்கு அடையாளம் தெரியும். போன தடவை இவர்கள் இரண்டு பேரையும் மல்யுத்தத்தில் பார்த்த போது - எனக்கு வித்யாஸம் தெரியவில்லை. இரண்டு பேரும் அவ்வளவு ரோஷத்தைக் காட்டினார்கள்.*

*ராமலட்சுமணர், ஹநுமான் மூவரும் முன்னே செல்ல பின்னால் சுக்ரீவன் செயற்கையான ரோஷத்தோடு பின் தொடர்ந்தான். கிஷ்கிந்தை வாசலுக்கு வந்து கர்ஜனை புரிந்தான் ''அண்ணா! வீரம் இருந்தால் வாடா வெளியே''.*

*வாலி மஞ்சத்திலிருந்து எழுந்து குதித்தான். தாரை ஓடி வந்து கட்டிக் கொண்டாள்.*

*''என் துரையே! நான் சொல்வதைக் கேளுங்கள்*

மறுபடியும் சுக்ரீவன் சவால் விடுகிறார் - என்றால் - அவனுக்கு ராம லட்சுமணர் நெருங்கித் துணை கொடுப்பார்கள் - என்று தெரிகிறது - ஒரு சமயம் - சுக்ரீவனை சவால் விடச் சொல்லிவிட்டு போர்க்களத்தில் ராமனே நிற்கிறாரோ என்னவோ?

வாலி :-ஒரு நாளும் ராமன் அப்படிச் செய்ய மாட்டான். துந்துபி எலும்புக்கூட்டை எறிந்ததற்காக - நானே ராமனைப் போருக்கு அழைக்கலாம் என்று கூட நினைத்தேன். நீ அவனுடைய பராக்ரமங்களை எடுத்துச் சொன்ன போது - நாமாக அவனுடன் மோதுவது சரியல்ல - என்று பேசாமல் இருந்துவிட்டேன்.

மறுபடியும் சுக்ரீவன் தான் கர்ஜனை புரிகிறான். ஒரே அடியில் அவனை வீழ்த்திவிட்டு திரும்பிவிடுவேன். கவலைப்படாதே என்று சொல்லிக் கிளம்பி விட்டான்.

போர் நடந்தது. இருவரும் மிகவும் ரோஷத்தோடு மோதினர். சுற்றிச்சுற்றி மோதுபவர்களில் வாலி தன் எதிரே கண்களில் படும் கணம் நோக்கி - ஒரு அம்பைத் தேடி தேர்ந்தெடுத்தார் ராமன்.

**சரம் ச$_1$ வீக்ஷதே ராம:** என்கிறார் வால்மீகி. விடப்போகின்ற அம்பு எதிரியை உடனே கொன்று விடக்கூடாது. அவனை மல்லாக்கக் கீழே தள்ளி - அவனுடைய உயிரையும் வெளியே போகாதவாறு தடுத்து உடலோடு உயிரையும் பூமியில் தைத்துவிடவேண்டும்,

அத்தகைய அம்பினைத் தேர்ந்தெடுத்தார். வாலி மார்பு எதிர்ப்பட்டதும் ஏவினார். அது பறந்து போய் வாலியை வீழ்த்தி அவன் உடல் அசையாதவாறு உடலோடு உயிரையும் பிணைத்து பூமியில் தைத்து விட்டது.

மல்லாக்க விழுந்தவன் துடிக்கிறான். அசைய முடியவில்லை. கால்களை உதைத்துக் கொள்கிறான். கைகளால் அம்பைப் பிடுங்க முயல்கிறான், முடியவில்லை.

வலி தாங்கவில்லை ஹநுமான் அவனருகில் வந்தார்,

குனிந்தார், நெற்றியைத் தடவினார்.

அதற்குள் ராமனும் அங்கு வந்துவிட்டார்

**தம்தத$_2$ா வ்யதி$_2$கம் தீ$_3$நம்**
**வாலிநம் ஹேமமாலிநம் |**
**லக்ஷ்மணாநுக$_3$தோ ராம:**
**த$_3$த$_3$ர்ச உபஸஸர்ப ச$_1$ ||**

ஹநுமான் கேட்டார் ''அந்த பாணத்தைப் பிடுங்கி விடட்டுமா?

ராமன்: பிடுங்காதே. அவன் உடல்முழுதும் உன் கையால் தடவிக் கொடு. வேதனை குறையும். ஹநுமான் ராமனை நிமிர்ந்து பார்த்தார்.

ராமன் :- வாலி சாகத்தான் போகிறான் அவனுக்கு உடல் வேதனை பெரிதல்ல, மன வேதனை தான் பெரிது.

அவன் அந்த மனவேதனையோடு சாகக்கூடாது - எனக்கு உதவி செய்வதற்காகத்தான் இந்திரன் இவனைப் பிள்ளையாகப் பெற்றான். சந்தர்ப்ப சூழ்நிலை அவனை மாற்றிவிட்டது. நான் சுக்ரீவனுக்குத் துணையாக வந்திருக்கிறேன் என்று தெரிந்தும் கூட -சுக்ரீவனின் சவாலுக்கு பதில் சொல்ல வந்திருக்கிறான்.

அவனுக்கு ஒரு திடமான நம்பிக்கை என்னிடம். தான் மாற்றானுடன் மோதும் போது - நான் குறுக்கிட மாட்டேன் என்னை எதிர்த்துப் போரிடுகிறவனோடு தான் மோதுவேன். ஆகவே நான் துணையாக வந்தாலும் பூரணநம்பிக்கை. ஆனால் நான் அவனை அம்பினால் அடித்து விட்டேன்.

''அடப்பாவி'' - என்று என்னைப் பற்றி நினைக்கிறான். அவனுக்கு அந்த மனவேதனை ஒவ்வாது. அதோ பார் அவன் பேச ஆரம்பிக்கிறான்.

ஹநுமானின் ஹிதமான தடவுதலால் உடல் வேதனை குறைந்த வாலி பேச ஆரம்பித்தான். எடுத்த எடுப்பிலே முகமன் ஒன்றும் கூறவில்லை.

''நீர் பெரிய க்ஷத்ரியராஜ வம்சத்தில் தசரதராஜனுக்குத் தானே பிள்ளையாகப் பிறந்தீர்! இப்படித்தானே உம்மை எல்லோரும் கொண்டாடுகிறார்கள்? பார்த்தால் அழகாக இருக்கிறீர், நல்ல குலம்- நல்ல பலம் - நல்ல தேஜஸ் - நல்ல நடத்தை - எல்லாவற்றையும் காற்றில் பறக்கவிட்டு - ஒண்டிக்கு ஒண்டி வேறுதிசையில் நான் மல்யுத்தம் செய்யும் போது - என்னை அடித்தீரே! இது நன்றாக இருக்கிறதா?''

ஹநுமான் ஸ்தம்பித்து விட்டார் ''எவ்வளவு சரியாக ராமன் இவனுடைய மனப்பாங்கை கணித்திருக்கிறார்!!.

''பிறனோடு போர் புரியும் போது குறுக்கே புகுந்த மார்பிலே பாணம் போட்டீரே!''

வாலி க்ஷத்திரிய தர்மம் பேசினான். திடீரென்று சுவடுமாறினான் ''நான் குரங்கு தானே, எங்கள் மாம்ஸம் மனிதன் தின்னமாட்டானே! ஏனய்யா என்னை வேட்டையாடினீர்''

குபீரென்று ராஜதர்மம் பேசினான். ''உமக்கு உம்முடைய கார்யத்தை சாதித்துக் கொள்ள வழி தெரியவில்லையே! உம்ம பெண்டாட்டியை ராவணன் கொண்டு போய்விட்டான். வாலியும் ராவணனும் நெருங்கிய நண்பர்கள் என்பது உலகறிந்த விஷயமாயிற்றே. நீர் உமது மனைவியை மீட்க என்னையல்லவா நாடி இருக்க வேண்டும். ஒரே நாளில் அவளை உம்மிடம் கொண்டு சேர்த்திருப்பேனே.

**மாமேவ ய$_3$தி பூர்வம் த்வம்**
**ஏத$_3$தர்த்த$_2$ம் அசே$_1$ா$_3$தய: ।**
**மைதிலீம் அஹம் ஏகாஹ்நா**
**தவ ச$_1$ாநீதவாந் பவே: ॥**

ஏனிப்படி துப்புக் கெட்ட காரியம் செய்தீர்? முடிந்தால் பதில் சொல்லும்.

லட்சுமணன் துடித்தார். ஹநுமான் வேதனைப்பட்டார். பிரபுவின் முகத்தைப் பார்த்தார். அது அப்போது மலர்ந்த தாமரை போல ஜிலு ஜிலுத்தது. புன்னகை

புரிந்தார்.

''வாநர மஹாராஜ! - உன் மனவேதனை எனக்கு நன்றாகப் புரிகிறது - என் தோழனை என் கண்ணெதிரே கொன்று விட முடியும் என்று கணக்குப் போட்டாய். அந்தக் கணக்கு பிசகிவிட்டது. உன் மனது கலங்குகிறது.

உன் கலக்கத்தை தீர்த்து உன்னை அமைதியாக சாகவிட வேண்டும் என்று தான் உன் கேள்விகளுக்கு பதில் சொல்ல விரும்புகிறேன்.

உன் கேள்விகள் எல்லாமே முரணானவை. நீ - குரங்கா? நீ மனித தர்மத்தை ஏற்கிறாயா? கடைப்பிடிக்கிறாயா? போர் வீரனா? போர் முறையை அநுஸரிக் கிறாயா? நீ ஏதாவது ஒரு நிலையில் நின்று பேச வேண்டும்.?

குரங்கை வேட்டையாடக்கூடாதே ஏன் என்னை அடித்தாய்? என்று கேட்கிறாய். நீ குரங்கு தான். அடாத கொடுமை செய்கின்ற குரங்கோடு மனிதன் போர் செய்யமாட்டான். மறைந்து நின்று தான் அடிப்பான். இது தான் வேட தர்மம்.

நேரில் போரிடாதவனை ஏன் அடித்தாய் என்று மனிததர்மம் க்ஷத்ரிய தர்மம் பேசுகிறாய். நானும் மனிதனாக க்ஷத்ரியனாக பதில் சொல்கிறேன்.

இந்த பூமிமுழுவதும் இக்ஷ்வாகு வம்சத்தினரின் ஆளுகைக்குட்பட்டது. நான் அதன் பிரதிநிதியாக ஸஞ்சாரம் செய்து வருகிறேன். நீ மனித தர்மப்படி உன்னுடைய சகோதரனின் மனைவியைப் பிடித்து வைத்துக் கொண்டு சித்ரவதை செய்கிறாய். அது உண்மை என்று தெரிகிறது. குற்றவாளியை தண்டிப்பது ராஜதர்மம். அங்கே யுத்ததர்மம் செல்லுபடி ஆகாது. உன்னை தண்டித்தேன். நீ அந்தப் பாவம் நீங்கி உத்தமலோகம் போவாய்.

எனக்கு என் காரியத்தைச் சாதித்துக் கொள்ளத் துப்பில்லையே என்று பரிஹாஸம் செய்தாய்.

நீயும் ராவணனும் தோழர்கள் என்பது - எனக்கு நன்றாகத்தெரியும். சத்ருவின் மித்ரனை இச்சகம் பேசி அவனைத் தம் கட்சியில் சேர்த்துக் கொள்வது மனிதப்பண்பு அல்ல. மிருகம் கூட அப்படிச் செய்யாது. நீ உன் தோழனுக்கு உதவி செய்ய வேண்டும். நான் என் தோழனுக்கு உதவி செய்வேன். இது தான் மனிதப்பண்பு.

***வயஸ்யஸ்ய உபகர்த்தவ்யம்***
***த $_4$ர்மமே வானுபச்யதா!***
***சக்யம் த்வயாபி தத்கார்யம்***
***த $_4$ர்மமே வானு வர்த்ததா?***

ஆகவே எந்த வகையில் ஆராய்ச்சி செய்தாலும் நான் செய்தது தான் சரி.

ஆகவே உன்னை அடித்தது தர்மநீதிக்கு உட்பட்ட செயல்தான். நாங்கள் மனம் போன படி ஒரு காரியமும் செய்யமாட்டோம்.

***தத $_3$லம் பரிதா பேந த $_4$ர்மத: பரிகல்பித:***
***வதே $_4$ா வாநர சார்தூ $_4$ல - நவயம் ஸ்வவசே $_+$ ஸ்தி $_2$தா:***

வாலி ராமனின் குரலிலிருந்து தேனாகப் பெருகிவருகின்ற மொழிகளைக் கேட்டான். ஆஹா பேச்சிலே என்ன தெளிவு? என்ன நிச்சயம்? எத்தனை கனிவு? என்ன அன்பு ? அடிபட்டு வீழ்ந்தவனுக்கு மனது அமைதி அடைய வேண்டுமென்று எந்த எதிரியாவது நினைப்பானா?

ராமனுடைய செயல் பட்சபாதமற்ற நடுநிலைமையைக் கண்டு ஆஞ்ஜநேயர் உள்ளம் பூரித்தார். வாலியிடம் சென்றார்.

''வாலி! மனது நிம்மதியா?''

''ஹநுமானே! பரம பாக்யம் செய்திருக்கிறேன். ராமன் புருஷோத்தமன் தான். உயிர் பிரியும் நேரத்தில் இவ்வளவு பொறுமையாக என் மனதிற்கு ஓத்தடம் கொடுத்தாரே! அவரிடம் தெரிவிக்க வேணும்,

*ஸுக்ரீவனிடம் என் பகை தீர்ந்தது.*

*என்பிள்ளை அங்கதனை ராமனிடம் ஒப்புவிக்கிறேன்.*

*என்று கூறினான் மார்பில் பாய்ந்த அம்பு கழன்றது. வாய் பிளந்து தெத்திப்பற்கள் தெரிய அவன் உயிர் பிரிந்தது.*

*வாலிக்கு தக்கபடி ஈமக்கிரியைகள் நடந்தன. வாநரர்கள் சுக்ரீவனை வாழ்த்தி வரவேற்றார்கள்.*

*ராமன் ஹநுமானை அழைத்தார். வனவாஸம் முடியும் வரை நான்எந்த நகரத்திலும் பிரவேசிக்கமாட்டேன்.*

*சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் ஏற்பாடு செய். லட்சுமணன் அவனுக்கு முடிசூட்டட்டும். மழைக்காலம் வந்து விட்டது. ஆகவே ஸீதையை தேடும் முயற்சியைச் சற்று ஒத்திப் போடுவோம். சுக்ரீவனும் ராஜபோகத்தைக் கொஞ்ச நாட்கள் அநுபவிக்கட்டும்.*

*அங்கதனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைக்க வேண்டும். சுக்ரீவனுக்கு குழந்தை இல்லை அல்லவா? அதனால் அது தான் நியாயம்.*

*சுக்ரீவன் ராம லட்சுமணர்களை வணங்கி ஆசி பெற்றான்.*

*கிஷ்கிந்தையில் ஹநுமான் பிரபுவின் ஆணையை சிரமேல் தாங்கி சுக்ரீவனுக்கு அரசுப் பதவியும் அங்கதனுக்கு இளவரசுப் பதவியும் சூட்டி வைத்தார்.*



# 5. ஸீதையை தேடுதல்

*ஹநுமான் ஸுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தார். மந்திரிகளை நியமித்தார். அங்கதன் இளவரசனாக - எப்போதும் ஹநுமானிடம் காத்துநின்றான்.*

*ஹநுமான் ப்ரஸ்ரவணமலைக்குத் திரும்பிவிட்டார். ருச்யமூக பர்வதத்தின் மலைமுகட்டிலிருந்து பக்கத்தில் ஒரு பள்ளம். அதில் மழை நீர் தேங்கி - ஒரு சிறு இடைவெளியின் வழியாக நீர் வழிந்து - பத்தடி கீழே ஓர் அகலமான பாறையில் தடைபட்டு சற்றுப்பள்ளத்தில் தேங்கி - பாறைமுனையின் ஒரு வெடிப்பு வழியாக கீழே சிதறிப் பாய்கிறது.*

*பக்கத்திலே ஆறடிக்கு நான்கு அடி விஸ்தாரத்தில் ஒரு குகை. எட்டடி உயரம். அதன் தரைமட்டத்தை வாநரர்களைக் கொண்டு ஹநுமான் சீர் படுத்தினார். இரண்டு பக்கங்களிலும் மூன்றடி உயரத்தில் அகலமாக மேடை கட்டினார். மேடையின் ஒரு புறத்தில் சாய்மானப்பாறை ஒன்றை வைத்துவிட்டார். ஹநுமானின் சிற்பக்கலை கற்பனையைக் கண்டு லட்சுமணர் மகிழ்ந்தார்.*

*இது வரை வனவாசத்தில் லட்சுமணன் தானே பர்ணசாலைகள் அமைத்து வந்திருக்கிறார். செயற்கையாக இல்லாமல் இயற்கையாகவே இந்த குகைப் பகுதியில் வஸதிகள் செய்து கொடுத்த ஹநுமானின் கற்பனை வளம் பற்றி அண்ணாவிடம் பேசினார், ராமனும் மந்தஹாஸத்துடன் கேட்டு மகிழ்ந்தார்.*

*மழை கொட்டோ கொட்டு என்று கொட்டியது. சாரலும் சீறலும் சில சமயம் ஹிதமாகவும் பலசமயம் தொல்லையாகவும் இருந்தன.*

*ஹநுமான் தரையில் தண்ணீர் தேங்காமல் தள்ளிவிட்டு ஈரம் காக்காமல் மரப்பட்டைகளால் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தார்.*

*ராமன் பல நேரங்கள் வேலை ஒன்றுமில்லாததால் ஸீதாதேவியை நினைத்துக் கண்ணீர் வடித்துக்*

கொண்டிருந்தார் -குகையின்தலை முனையிலிருந்து - கோவென்று ஒரு சாண் கனம் கொட்டுகின்ற தாரையின் ஓசை அவருடைய உள்ளத்தை அமைதி அடையவிடாமல் தகர்த்தது. ஹநுமான் எஙகேயோ போய் ஒரு தேவதாரு மரத்தின் பட்டையை எடுத்துவந்தார். நெடிதுயர்ந்த மரத்தில் அந்தப்பட்டை இரண்டடி அகலம் எட்டடி உயரமும் கொண்டிருந்ததால் அதை தாரையின் பின்புறம் நிமிர்த்திவைத்தார். தாரை ஓசையின்றி ஜலம் அதன் வழியே வழிந்து கொண்டிருந்தது.

அந்தப்பாறை மேடையில் உட்கார்ந்து கொண்டு ஒரு பாதிசந்திர வளைவுள்ள மேல் பிடியுள்ள பாணத்தை கூறாக தரையில் ஊன்றி மோவாயை அந்த சந்திர வளையில் கொடுத்து கைகள் தலையைத் தாங்க சோகமே வடிவாக அமர்ந்திருந்தார் ராமன்.

எங்கிருந்தோ ஒரு பல்லி வந்து ராமன் முதுகில் விழுந்து ஓடும். தத்துப்பூச்சிகள் தத்தித்தத்தி தொடையிலும் புஜங்களிலும் வந்து உட்காரும். ஒரு மர வட்டை இடது பாதத்தில் ஏறி வலது பாதத்தின் வழியாகக் கீழ் இறங்கும் இவற்றைப்பற்றிய உணர்வே அற்று ராமன் இருப்பார். குத்திட்ட கண்கள் எதையும் பாராமல் வெறிச்சென்று பார்க்கும்.

ஹநுமான் பக்கத்தில் உட்கார்ந்து ஊறுகின்ற பூச்சிகளையெல்லாம் ராமன் மீது தன் விரல்படாமல் அகற்றுவார்.

கட்டைபிரம்மசாரியான ஹநுமானுக்கு மஹா தீர புருஷனான ராமன் மனைவியை நினைத்து இப்படிப் பரிதவிப்பது விந்தையாக இருந்தது.

ப்ரேமை இவ்வளவு ஆழமானதா? கனமானதா? விரிவுள்ளதா? மற்ற எண்ணங்கள் எல்லாவற்றையும் அகற்றி பிரேமை இப்படி உள்ளத்தை முழுமையாக ஆட்கொண்டுவிடுமா?

இப்போது புருஷோத்தமனை இப்படி ஆடவைக்குமனால் அந்த ப்ரேமை எவ்வளவு உயர்ந்ததாக இருக்க வேண்டும்?

அத்தகையை ப்ரேமைக்குரிய ஸீதாதேவி எத்தகையவளாக இருக்க வேண்டும்?

தீரோதாத்த குணோத்தமனான ராமன் இளவயதில் தனக்கே உரியதான- தன்கையில் வந்துவிட்ட அயோத்தியா ராஜ்யத்தை - தந்தையின் ஸத்யத்தைக் காப்பதற்காகத் துறந்த மஹாபுருஷன் - கேவலம் காமுகனாக மனைவியின் பிரிவைப் பற்றி அலட்டிக் கொள்வானா?

ஸீதாதேவி ஸாதாரணப் பெண்ணல்ல. ஸாதாரணப் பெண்ணாக இருந்தால் - வஸிஷ்டர் உள்பட அத்தனை பெரியோர்களும் ஜாநகீக்குப்பட்டம் சூட்டுவோம். ராமனுக்குத் தானே வனவாஸம் விதித்தாள் கைகேயி -என்று முனைந்த போது அரசை கைப்பற்றி சுகபோகத்தில் ஆழ்ந்திருக்கமாட்டாளா!

வனவாஸத்தில் எத்தனை கஷ்டப்பட வேண்டியிருக்கும் - என்று ராமன் - ஸீதையைப் பலவாறு எச்சரித்தாரே! ஸீதாதேவி முடிவாகச் சொன்னாளே! ‘‘இவ்வளவு பிரிவுத்துயரத்தில் ஆழ்ந்த என்னை வனத்திற்கு அழைத்துப் போக தாங்கள் விரும்பிவில்லையானால் - விஷத்தைக் குடிப்பேன், நெருப்பில் வீழ்வேன். கிணற்றில் குதிப்பேன். உயிரோடு இருக்க மாட்டேன்.

**யதி$_3$மாம் து: கி$_2$தாம் ஏவம்**
**வநம் நேதும் ந சே$_1$ ச்ச$_2$ஸி ।**
**விஷம் அக்நிம் ஜலம் வாऽஹம்**
**ஆஸ்த$_2$ாஸ்யே ம்ருத்யுகாரணாத் ॥**

இத்தகைய தியாகபுத்தி உலகில் வேறு எந்தப் பெண்மணிக்கு வரும்?

காட்டிற்குத்தானே வந்தாளே! வெயிலிலும் மழையிலும் தாங்கமுடியாத குளிரிலும் வெப்பத்திலும் -

*என்ன பாடு பட்டிருப்பாள்? அத்தனையையும் - முகமலர்ச்சி மாறாது மதனியார் சகித்தார் - என்று லட்சுமண ஸ்வாமி சொல்லியிருக்கிறாரே!*

*அத்தகையவளை நினைத்து நம் ப்ரபு பிரிவு தாங்காமல் கண்ணீர் வடிக்கிறார் என்றால் அது நியாயம் தானே?*

*அவருடைய துயர்தீர்க்க நாம் பொறுப்பு ஏற்றுக் கொண்டோமே!*

*பொறுக்கமுடியாத துயர்தீர்க்க யாராவது காலதாமதம் செய்வார்களா? துயர் தீர்க்க வேண்டியவனின் சௌகர்யத்திற்காக யாராவது பொறுத்துக் கொள்வார்களா?*

*ஒவ்வொரு நொடியும் பொறுக்க முடியாத வேதனையைத் தாங்கி கொண்டு பிரபு சுக்ரீவனுக்காகக் காத்திருக்கிறாரே!*

*தன்துயரை நொடியில் தீர்த்த பரம நண்பரை மறந்து ஸுக்ரீவன் பச்சை சுகபோகத்தில் ஆழ்ந்துவிட்டானே!*

*ஹநுமான் கிஷ்கிந்தைக்கு ஓடினார். அரசரை பேட்டி காண வேண்டும் என்றார்.*

*''தங்களுக்கு பேட்டி கொடுக்கும் நிலையில் சிற்றப்பா இல்லை'' என்றான் அங்கதன்.*

*''உன் தாயாருடனாவது பேசமுடியுமா?''*

*அங்கதன் : இதோ அழைத்து வருகிறேன்.*

*தாரை ஓடி வந்து ஹநுமானை வணங்கினாள்.*

*ஹநுமான் : ராணி! ஒரு மாதத்திற்கு மேல் ஆகிவிட்டது. இன்னும் சில நாட்கள் தான் உள்ளன. பிரபுவின் கைங்கர்யத்தை ஏற்றுக் கொண்டாரே மஹாராஜா. அதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டாமா? வாநரப்படைகளை ஒன்று சேர்க்க வேண்டாமா?*

*தாரா: அண்ணா! தங்கள் கவலை எனக்கும் உள்ளது. பொழுதுவிடிந்தால் மஹாராஜா போதையில் ஆழ்கிறார்.*

ராத்திரி மனைவியுடன் குலவுகிறார். **அங்கதன்** யுவராஜாஆயிற்றே! அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை. அவனை முன்னே வைத்துக் கொண்டு -மந்திரிமார்களுடன் ஆலோசித்தேன்.

அவர்கள் எங்கெல்லாம் வாநர வீரர்கள் அவர்களின் தலைவர்கள் இருக்கிறார்கள் என்று தகவல் திரட்டி அவர்களுக்கு எல்லாம் மஹாராஜன் கட்டளை - உடனே வந்து சேர வேண்டும் என்று தாக்கீது அனுப்பியிருக்கிறேன்.

ஹநுமான்: அப்படியா? மிகவும் நல்லகாரியம். வீரர்கள் வந்தவுடன் எனக்கு சொல்லியனுப்புங்கள். ஆக வேண்டியதை கவனிப்போம்''.

ஹநுமான் ராமனிடம் திரும்பிவிட்டார். மழைக்காலம் முடிந்து அதிகப்படி வெள்ளங்கள் எல்லாம் கரைந்துவிட்டன.

லட்சுமணன் : அண்ணா! இன்னும் சுக்ரீவன் வரவில்லையே?''

ராமன் : சுக்ரீவன் என்று சொல்லாதே - மஹாராஜா என்று சொல்லு.

லட்சுமணன்:மஹாராஜாவின் தயவுக்கு பேசாமல் காத்திருக்க வேண்டியது தான்

ராமன்: நீ போய் அவனை நினைவு மூட்டிவிடு. ஏற்றுக் கொண்ட கடமையைச் செய்யப்போகிறாயா? இயலாது என்றால் நாங்களே எங்கள் காரியத்தைப் பார்க்கலாமா? என்று கேள். வாலி போன பாதை இன்னும் அடைக்கப்படவில்லை என்று சொல்''.

லட்சுமணனுக்குச் சுரீர் என்றது.

ஹநுமான் விரைந்தோடினார் கிஷ்கிந்தைக்கு.

''உடனே மஹாராஜாவை நான் காணவேண்டும்''.

தாரை பதறிப் போனாள். ஹநுமான் முகத்தில் இத்தனை கடுமையை அவள் பார்த்ததில்லை. உள்ளே

ஓடினாள். கச்சமும் தலைமுடியும் அவிழ்ந்து தொங்க சுக்ரீவன் தள்ளாடி நடந்து வந்தான்.

''என்ன அண்ணா! கோபமாக இருக்கீங்களா?''.

''பிரபுவுக்கு கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டாமா?''

'' நான் தயாராகத்தான் இருக்கிறேனே. அவர் தான் இரண்டு மாதம் போகட்டும் என்றார்.''

ஹநுமான்: அதற்காக நாம் தாமதிக்கலாமா? முஸ்தீப்புகள் செய்ய வேண்டாமா!

சுக்ரீவன்: ''செய்தால் போயிற்று''

அதற்குள் அங்கதன் ஓடி வந்தான்.

''சித்தப்பா - இளைய பெருமாள் கோபத்தோடு வந்து கொண்டிருக்கிறார்.

சுக்ரீவன்: எதற்குக் கோபிக்கிறார்?

அங்கதன்: நாம் சொன்னவாக்கைக் காப்பாற்ற வேண்டாமா?

சுக்ரீவன்: காப்பாற்றினால் போயிற்று. அதற்கு ஏன் கோபிக்க வேண்டும்? எவனோ நமக்கு வேண்டாத பயல் அவர்களிடம் போய் வத்தி வைத்திருக்கிறான்.

**அஸூஹ்ருத்$_3$பி$_4$: மமாமித்ரை:....................**
**மமதே$_3$ாஷாந் அஸம் பூ$_4$தான்**
**ச்$_+$ராவி தோ ராக$_4$வாநுஜ: |**

எனக்கு ஒன்றும் பயம் கிடையாது. லட்சுமணன் ஆகட்டும். ராமன் தான் ஆகட்டும். நான் ஒன்றும் தப்பு செய்யவில்லையே!

**நக$_2$ல்வஸ்தி மமத்ராஸ:**

**லட்சுமணாத் – நாபி ராகவாத் |**

சிநேகிதர்கள் காரணமில்லாமல் கோவித்துக் கொண்டால் ஸங்கடம் தான்.

*மித்ரம் து அஸ்த$_2$ான குபிதம்*

*ஜநயத்யேவ ஸம்ப்ரமம் ।*

*சுலபமாக நண்பர்ஆகிவிடலாம். ஆனால் நட்பைக் காப்பாற்றுவது ரொம்ப சிரமம். திடீரென்று புத்தி மாறிவிடும். உடனே பிரியம் பகையாகிவிடும்.*

*ஸர்வத$_2$ா ஸுகரம் மைத்ரம்*

*து$_3$ஷ்கரம் பரிபாலநம்।*

*அநித்யத்வாத்து சித்தாநாம்*

*ப்ரீதி ரல்பேऽபி பி$_4$த்$_3$யதே*

*இது கேட்டவுடன் ஹநுமான் எழுந்திருந்தார் ஸுக்ரீவனைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு வெளியே போய்விட்டார்.*

*''அண்ணா! அண்ணா!!*

*ஹநுமான் திரும்பியே பார்க்கவில்லை*

*சுக்ரீவன் : இவரும் கோபித்துக் கொண்டு போய்விட்டாரே! நான் அப்படி என்ன சொல்லிவிட்டேன்.*

*தாரா: அவருடைய தெய்வத்தை அலட்சியமாகப் பேசிவிட்டீர்கள்.*

*சுக்ரீவன்:- நான் எது சொன்னாலும் தப்பாகப் போய்விடுகிறதே! அவரைப் போய் அழைத்து வாருங்களேன்.*

*ஹநுமான் வெளியே வந்ததும் சுதாரித்துக் கொண்டார்.*

*சுக்ரீவன் எதிர் பாராமல் தனக்குக் கிடைத்திருக்கின்ற பெரும் செல்வத்தை - மதிக்கவில்லையே - என்று தானே நமக்கு தாபம் வருகிறது.*

*பிரபு தான் அவனுடைய வெகுளித்தனத்தைத் அவனுடைய அப்பாவித் தனத்தைப் புரிந்து கொண்டாரே! அவனுடைய பேச்சில் கபடமோ சூதோ இல்லையே. இவ்வாறு நினைத்து அவனுடைய அவலப் பேச்சுகளைப் பொருட்படுத்தவில்லையே! நாம் ஏன் - காரியம்*

கெட்டுவிடுமோ? பிரபு அவனிடம் கோபம் கொள்வாரோ - என்று பதட்டப்பட வேண்டும்? இனி சுக்ரீவனுடைய அப்பாவித்தனமான பேச்சுகளை ரஸிக்க வேண்டுமே தவிர குற்றம் காணக் கூடாது. அவனைத் திருத்தவும் முயலக்கூடாது.

சுக்ரீவனைப் பற்றி இனி நாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. என்ன நடந்தாலும் பிரபு பார்த்துக் கொள்வார். நமக்கு பிரபுவின் கைங்கர்யம் தான் முக்கியம்.

இந்த உறுதிப்பாட்டுடன் - ஹநுமான் எட்டி நின்று நிகழ்வதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்.

லட்சுமணஸ்வாமி வந்து சுக்ரீவனை கடுமைகாட்டாமல் அழுத்தமாக அவனுடைய கடமையை அறிவுறுத்தியதோ - சுக்ரீவன் படைகள் வந்து சேர்ந்த தருணத்தில் ராமனிடம் போய் விண்ணப்பித்துக் கொண்டதோ - பிரபு அவனுடைய முயற்சிகளைப் பெரிதும் பாராட்டினதோ. ஹநுமானுக்குப் பெரிதில்லை. இவையெல்லாம் ஸீதையைத் தேடுவதற்காக - படைகளை நான்காகப் பிரித்து அந்தந்த திசைகளில் தேட வேண்டிய பகுதிகளைப்பற்றி - அந்தந்த தலைவர்களுக்கு விபரம் சொன்னது - ராமனுக்கு சுக்ரீவனிடம் பெருமதிப்பை வளர்த்துவிட்டது.

கடைசியாகத் தெற்கு திசைக்கு அங்கதன் தலைமையில் ஜாம்பவான் முதலிய பொறுக்கி எடுத்த வீரர்களுடன் ஹநுமானைச் சேர்த்துவிட்டது -மற்ற திசைகளைக் காட்டிலும் லங்கையைத் தேடுவதுதான் முக்கியமான ஆனால் சிக்கலான விஷயம் என்பதை கருத்தில் கொண்டிருக்கிறான். என்று புரிந்து கொண்டார்.

அங்கதன் தன் குழுவுடன் வந்து ராமனை வணங்கினான். இந்த ரீதியில் ஹநுமானைப்பற்றி சிந்தித்த - அருணாச்சலக்கவி அநுமன் பிள்ளைத் தமிழில் பாடுகிறார்.

''**ஆதவன் மைந்தா** (சுக்ரீவா) **இதோர் மொழியும் கடவாது நடந்து** கொள். (நீ நான் சொல்வதைக் கேள் அதைப்பின்பற்றி செயல்படு) **அண்ணலை மாமணி**

வண்ணனை நண்ணுதி (ராமனைச்சரணடைவய்) அபயம் எனக் கொடுபோய் பாதம் வணங்கி நீ தந்தருள் இன்று இவன் (எனக்கு அபயம் அளிக்க வேணுமாய்பாதம் வணங்கி வேண்டுவாய்) என ஓதுமுன்னே பொருசிலைராகவன் வரிசிலையால் விடுபூமுக வாளிபட (உலர்ந்த பூப்போல ஒரு அம்பு எய்து) மாமர வீழ்ச்சி செய்தானே.

சாம்பன், கவையன், கவையாக்கன் ,இடபன், சரபன், நளன், சுஷேணன், குமுதன், அருமைத்துரை அங்கதன் மயிந்தன், துவிதன், வஸந்தன், முதல் எழுபாள் கடல் வாநர மாருதிநடுவே (சிறந்த வீரர்களிடையே மாலை மத்திய மணியாக மாருதியைத் தேர்ந்தெடுத்து) தொழுத முதல்வ பெருமை பெற்ற மாருதி – என்று அடையாளம் காட்டுகிறார்.

அங்கதன் தலைமையில் தக்ஷிணதிசை செல்கின்ற வாநரவீரர்கள் அணிவகுத்து நின்றனர். அங்கதன் ஜாம்பவான் - ஹநுமான் என்ற வரிசை. மரத்தடியில் அமர்ந்து ராமன் - சுக்ரீவன் வாநரர்களுக்கு கம்பீரமாக ஆணையிடுகின்ற மிடுக்கைப் பார்த்து மகிழ்ந்தார்.

அணிவகுத்த வரிசையில் முறையாக மிடுக்காக நின்று கொண்டிருந்த ஹநுமானை விரல் நீட்டி ஸுக்ரீவன் அழைத்தார். வால்மீகி பகவான் இந்த ஸந்தர்ப்பத்தை மிகவும் இங்கிதமாகப் பாடுகிறார்.

விசேஷேண துஸுக்$_3$ரீவோ
ஹநூமத்யர்த்$_2$தம் உக்தவான்।

தனிமையில் அண்ணா அண்ணா என்று பரிவுடன் அழைக்கின்ற சுக்ரீவன் மஹாராஜா என்ற தோரணையோடு பேசுகிறார். ஹரி புங்கவ! என்று பெருமை கொடுத்து அழைக்கிறார். ‘‘இந்த பரந்த பூமியிலோ - எல்லையற்ற ஆகாயத்திலோ அதற்கு மேலே கிரகங்கள் நக்ஷத்திரங்களின் யாத்திரை வீதியிலே தேவலோகத்திலோ....

இவ்வாறு அடுக்கிக் கொண்டே போகின்ற மஹாராஜாவைப் பார்த்து ஹநுமான் ஆச்சரியப்படுகிறார்

- ''நமது பிரபுவின் நிழலில் நிற்கின்ற வாய்ப்புக் கிடைத்தவுடனேயே சுக்ரீவனுக்கு வல்லமை வந்து விட்டதே''

ராமன் குறிப்பாக லட்சுமணனைப் பார்க்கிறார் - சுக்ரீவனை அசடு என்று நினைத்தாயே! என்ன அழகாகப் பேசுகிறார் பார் மஹாராஜா - என்பது குறிப்பு

சுக்ரீவன் தொடர்ந்தார்.

**நாப்ஸுவா க$_3$திப$_4$ங்கம் தே**

**பச்$_+$யாமி ஹரிபுங்க$_3$வ ||**

இந்த பிரஹ்மாண்டத்தில் - முப்பாகம் விரிந்து கிடக்கின்ற கடலிலோ நீங்கள் போனால் உங்களை யார் தடுக்கமுடியும்?

**ந பூ$_4$மௌ நாந்தரிக்ஷேவா**

**நாம் ப$_3$ரே நாமராலயே |**

**நாப்ஸுவா க$_3$தி ப$_4$ங்கம் தே**

**பச்$_+$யாமி ஹரிபுங்க$_3$வ ||**

ஆகவே தேடிப் பார்த்தேன் காணோமே - என்று சொல்லிக் கொண்டு திரும்பிவரக்கூடாது.

**த$_3$த்யத$_2$ா லப்$_4$யதே ஸீதா**

**தத் த்வமேவ உபபாதய**

எப்படி ஸீதா தேவியைக் கண்டுபிடிப்பீர்களோ? அதை நீங்கள் தான் ஸாதிக்க வேண்டும் என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ராமன் நினைத்தார் ''நல்லவேளை! நாமே ஹநுமானால் தான் காரியம் நிறைவேறும் என்று நினைத்தாலும் கூட வாநர மஹாராஜனுக்கு - நாம் ஹநுமானை பிரேரேபிக்க கூடாது என்று நினைத்தோமே- சுக்ரீவனுக்கே ஹநுமானால் தான் காரியம் நிறைவேறும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளதே.

***ஸர்வத₂ா நிச்சிதார்த்தே₂ாऽயம்***

***ஹநூமதிகபீச்₊வர:।***

*அந்தக்கணமே காரியம் நிறைவேறிவிடும் என்று நம்பிக்கை ராமனுக்கும் வந்துவிட்டது. உள்ளமும் உடலும் புலன்களும் - ''அப்பாடா'' என்று நிம்மதி அடைந்தன.*

***க்ருதார்த்த₂ இவ ஸம்வ்ருத்த:***

***ப்ரஹ்ருஷ் டேந்த்ரிய மாநஸ :।***

*ஸீதாதேவி உயர்ந்த நினைவுத்திறனுடன் கழற்றிப் போட்ட ஆபரணங்களில் - எந்த மோதிரத்தைச் சேர்த்திருந்தாளோ அந்த மோதிரத்தை தனது விரலிலிருந்து கழற்றி, ஹநுமானிடம் அளித்தார்.*

***த₃தெ₃ள தஸ்மை தத : ப்ரீத:***

***ஸ்வநாமாங்கோ பசே₊ாபி₄தம்।।***

*அந்த மஹாபதிவ்ரதை அநஸூயா தேவி - எத்தகைய பரிவுடன் - ஸீதைக்கு என்ன பரிசு கொடுக்கலாம் - என்று ஆராய்ந்து மோதிரத்திலே என் நாமத்தைப் பதித்து தயாரித்துக் கொடுத்தாளே! நமக்கு நம் பெயரை மோதிரத்தில் பதித்துக் கொள்கிற தற்பெருமை கிடையாது. நமது தாய்மார்களுக்கோ நமது மாமியாருக்கோ இந்த அளவு சிந்திக்க நேரமில்லை. இந்த யுகக்கிழவி சிந்தித்தாளே அது எவ்வளவு முக்கியமான காரியத்துக்கு உபயோகப்படுகிறது!*

*ராமன் தீர்மானமாக நினைக்கிறார். ''அரக்கனிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கின்ற - ஜாநகி - எதையும் யாரையும் லேசில் நம்பமாட்டாள். அத்தனை பயங்கரமான சூழ்நிலையில் இருக்கிறாள். அவளை இது ஒன்றினால் தான் நம்பவைக்க முடியும்''*

*''ஹநுமந்தா இந்த மோதிர அடையாளத்தினால் -ஸீதா தேவி கவலையற்று என்னிடமிருந்து தான் வந்திருக்கிறாய் என்று நிம்மதியாகப் பேசுவாள்.*

***சி$_1$ன்ஹேந ஜநகாத்மஜா!***

***மத்ஸகாசா த$_3$னுப்ராப்தம்***

***அநுத்$_3$விக்$_3$நா அநு பச்$_+$யதி***

ஹநுமான் மோதிரத்தைப் பெற்றுக் கொண்டார்.

எங்கே வைத்துக் கொள்வது?

எப்பொழுதும் கைகளில் வைத்துக் கொண்டிருக்க முடியாது.

கைகளுக்கு ஆயிரம் வேலைகள். இடுப்புத் துணியோ முரடானது, முடிச்சுக்கு வணங்காது. தலைப்பில் முடிச்சு அவிழ்ந்துவிடும்.

நம் விரலில் போட்டுக்கொள்ளமுடியாது 1.அளவு, 2. அபசாரம், 3.மலைஏறும் போதோ பிடித்துக் கொள்ளும் போதோ மோதிரத்தில் பதிக்கப்பட்டுள்ள மாணிக்கத் ரத்தினங்கள் தெரித்துவிழுந்து விடுமே!

என்ன செய்யலாம்? மறுபுறம் திரும்பி - யாரும் பார்க்காத நேரத்தில் வாயில் போட்டுக் கொண்டு கடை வாயில் அடக்கிக் கொண்டார். சொல்கின்ற ராம நாமத்திற்கு ரத்தின ராம நாம பாதுகாப்பு. ரத்தின ராம நாமத்திற்கு சொல்கின்ற ராம நாமம் பாதுகாப்பு. வணங்கி விடைபெற்றார்.

***துளஸீதாஸர் கூறுகிருர்-***

***ஸ்ரீப்ரபு முத்ரிகா பேலிமுக மாஹீ***

***ஜலதிலாங்கி கர கர அசாஜநாஹீ***

***ராம மோதிரம் வாயிகலே***

***ஆழி தாண்டினீர் அதிசயமல்ல***



## 6.சுயம்பிரபா விருந்து

*அங்கதனுடைய தேடு படையில் அத்தனை பேரும் சூரவீரர்கள். எடுத்துக் கொண்ட காரியத்தில் மிகுந்த அக்கறை கொண்டவர்கள். பிரிந்து பிரிந்து ஆங்காங்கே தேடி - அடிக்கடி கூடுவார்கள். அவரவர்கள் உரக்கக்கூறுகின்ற ராம நாமம் கேட்டு ஒருங்கே கூடுவார்கள். அவரவர்களுக்கு வழியில் கிடைத்த கிழங்குகளையும் பழங்களையும் சேர்த்து வைத்துக்கொண்டு ஒருங்கே கூடி கோவிந்த நாமம் சொல்லி உண்பார்கள்.*

*காரியமுனைப்பில் நேரம் போவதே தெரியாமல் ஒரு மலைமீது - நான்கு பக்கங்களிலிருந்து ஏறிக் கொண்டே போனார்கள். மாலை வந்துவிட்டது. ராமநாமக்குரல் கேட்டு ஓரிடத்தில் கூடினர்.*

*பகல் முழுதும் ஒன்றும் சாப்பிடக் கிடைக்கவில்லை. மேலே கிடைக்கும் - என்று நம்பிக்கையோடு ஏறினார்கள். மலை - மொட்டைத்தலை பாறாங்கல். பசிதாகம் மிகுந்து விட்டது. நாக்கு உலர்ந்து மேல் அண்ணத்தில் ஒட்டிக் கொண்டுவிட்டது.*

*நாற்புறமும் பார்த்தனர். எட்டினமட்டில் மரமோ காயோ சுனையோ காணோம். பாறையில் சாய்ந்த படியே ராம நாமம் சொன்னார்கள் - ஹநுமான் மட்டும் ஆங்காங்கு நடந்து கீழே பார்த்தார்.*

*மலையின் மேற்குப்புறம் செங்குத்தான உயரம். சூரியகிரணங்கள் பதிந்து பாறைகள் அனல்வீசுவதை பார்த்துக் கொண்டே இருந்தார். சில நிமிஷங்கள் கழித்து - மலையின் அடிவாரத்தில் - ஒரு மூலையில் இருந்து பட்சிகள் பறந்து வந்தன.*

*ஹநுமான் நண்பர்களை அழைத்தார் ''அதோ பாருங்கள்!''.*

*''ஆமாம் - பட்சிகள் அந்த மூலையிலிருந்து பறந்து வருகின்றன.*

ஹனுமான் கூறினார் - கவனித்துப்பார்! பறக்கும் பட்சிகள் இறக்கைகளை உதறுகின்றன. வெளியே நீர் தெறித்து விழுகிறது பார்''.

''ஆமாம் அங்கே ஒரு சுனை இருக்குமோ?''.

அங்கதன்: இறங்கிப்பார்ப்போமா?

கவயன்: எப்படி இறங்குகிறது?

கவாட்சன்: செங்குத்தான மலைச்சுவற்றில் கால் வைக்கவோ கைபிடிக்கவோ ஒன்றுமில்லையே.

சரபன்- குதித்துவிடலாம்

கந்தமாதனன் - நேரே மோக்ஷத்திற்கு போய்விடலாம்.

ஜாம்பவான்:- எப்படித்தான் போவது?

ஹனுமான் : அஞ்சாதீர்கள்! நான் இந்த மலைமுகட்டில் இந்த பாறை இடுக்கில் கை கொடுத்து உட்கார்ந்துவிடுகிறேன். என் வாலைத் தொங்கவிடுகிறேன். ஒவ்வொருவராக என்வாலைப் பிடித்துக் கொண்டு இறங்குங்கள்.

அங்கதன்: ஒருவர் கீழே இறங்குவதற்கு காத்திருந்து மற்றவர் இறங்க ஆரம்பித்தால் பொழுது விடிந்துவிடும்.

ஹனுமான்: நான் காத்திருக்கச்சொல்லவில்லையே ஒவ்வொருராக வரிசையாகப் பிடித்துக்கொண்டு இறங்குங்கள்

ஜாம்பவான்: உம்மால்தான் தாங்க முடியுமா?

ஹனுமான் : நானா தாங்கப் போகிறேன்? நீ ங் க ள் சொல்கின்ற ராம நாமம் தாங்கும்.

வேறு வழியின்றி அந்த உபாயத்தைக் கைக் கொண்டார்கள். பதினாறு பேரும் ஹனுமானின் வாலைப் பிடித்துக் கொண்டு சரசரவென்று சருக்கினார்கள். தரையில் குதித்தார்கள். ஹனுமான் ஒரு பாய்ச்சலில் குதித்தார்.

மாலை நேரம் கவிந்து - பட்சிகள் பறப்பது ஓய்ந்து விட்டது. சூரியன் மறைந்தாலும் மலைப்பாறையில் பதிந்த

*வெளிச்சம் தெரிந்தது. அங்கு ஒரு குகை வாசல் அதிலிருந்து குளிர்ந்த காற்று வீசியது. அங்கே போனார்கள். கும்மிருட்டு எப்படி உள்ளே போவது? திகைத்தார்கள்.*

*ஹநுமான்: ''நான் முன்னே போகிறேன். என் வாலைப் பிடித்துக் கொண்டு ராம நாமம் சொல்லிக்கொண்டு வாருங்கள்''.*

*ஹநுமான் இருட்டில் கைகளை முன்னே துளாவிக் கொண்டு - பத்தடிக்கு ஓரிடம் இடதுபுறமும் -வலதுபுறமும் திரும்பியபோது வெளிச்சம் தெரிந்தது.*

*- ''பெரிய விசாலமான பூங்கா, மாமரங்கள், பலா மரங்கள், விளாமரங்கள், தாண்டிப் போனால் பெரிய நீர்த்தேக்கம், அதில் நிலவொளிபட்டு பிரகாசம் வாழைத்தோட்டம், வெள்ளரிக் கொடிகள்,*

*வாநரர்களின் வரண்ட நாக்கில் நீர் ஊறியது. ஹநுமான் எச்சரித்தார் ''கைநீட்டாதீர்கள். சற்றுப் பொறுங்கள். அந்தச் சுனையின் எதிர் கரையில்மிகவும் அழகான பெண்மணி ஒருத்தி தியானத்தில் அமர்ந்திருந்தாள்.*

*சில வினாடிகளில் வானரர்களின் குசுகுசுப் பேச்சினால் அவளுடைய தியானம் கலைந்தது. அவள் கண்திறந்தாள். வாநரர்கள் அனைவரும் அவளை வணங்கினர். அவள் வாநரர்களை விசாரித்தாள். ஹநுமான் கைகூப்பி வணங்கி தமது கதையை உள்ளபடி எடுத்துரைத்தார்.*

*''இந்த முயற்சியில் ஈடுபட்ட எங்களுக்கு இன்று காலை முதல் ஆஹாரம் கிடைக்கவில்லை. என் பிரபு ராமன் க்ருபை எங்களை இங்கே கொண்டுவிட்டிருக்கிறது. தாங்கள் யாரோ? நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?*

*அந்தப் பெண்மணி ஆச்சரியமாக இவர்களைப் பார்த்தாள். மேலும் கூறினாள்.*

*''அப்படியா சேதி! பெரும் புண்ணியம் பண்ணியிருக்கிறேன். தங்களை இங்கே வரவேற்க நான் கொடுத்து வைத்திருக்கிறேன். என் தவம் பயன் பெற்றது.*

நீங்கள் எல்லோரும் விருப்பம் போல இதோ மரத்தில் பழுத்துத் தொங்குகின்ற பழங்களை உண்ணலாம். இவையெல்லாம் தேவலோகத்து மரங்கள். இவற்றின் பழங்களை வாழ்க்கையில் ஒரு தடவை புஜித்தால் பிறகு வாழ்க்கை முழுவதும் ஒன்றுமேபுஜிக்கவே வேண்டாம்.

அமோகமான சக்திவளரும். இந்தச் சுனையின் நீரைக் குடித்தால் - பிறகு தாகமே எடுக்காது. ராம காரியம் செவ்வனே நிறைவேறி பட்டாபிஷேகம் நடக்கின்ற வரை இவை உங்கள் வலிமையை வளர்க்கும், தாங்கும். வயிராற உண்ணுங்கள்'' - என்றாள்.

அதுவும் ராமக்ருபை என்றார் ஹநுமான். ராம நாமம் சொல்லி வயிராற உண்டார்கள். புத்துணர்ச்சி பெற்றார்கள்.

''இரவு கும்மிருட்டாகிவிட்டதே நாங்கள் வெளியேறி எங்கள் கடமையை ஆற்ற வேண்டும்'' என்றான் அங்கதன்.

ஸ்வயம் ப்ரபா சொன்னாள் ''எல்லோரும் கண்களை மூடிக்கொள்ளுங்கள்.''

மூடிக்கொண்டார்கள்.

''இருகைகளாலும் கண்களைப் பொத்திக் கொள்ளுங்கள். நான் சொல்கின்ற ராம நாமம் உங்கள் காதுகளில் விழுகின்ற வரை கண்திறக்கக்கூடாது.''

எல்லோரும் கண்களை மூடிக் கொண்டார்கள். ஸ்வயம்ப்ரபையின் ராம நாமக்குரல் கேட்டுக் கொண்டே இருந்தது.

பொழுதுவிடிந்து கொண்டிருந்தது. வாநரர்கள் கண்திறந்தார்கள். தென்கடற்கரையில் ஸூர்யோதயம் ஆயிற்று.



## 7.கடற்கரையில் ஆலோசனை

ஹநுமான் முன்னே விஸ்தாரமான கடலின் நீர்ப்பரப்பில் ஸூர்ய ஒளி பாய்ந்து தகதகவென்று பிரகாசித்தது.

ஆகாயத்தில் குருநாதர் தரிசனம். நீலக்கடல் நீர்பரப்பில் நீலமேகச்யாமளன் தரிசனம். தியானத்தில் ஆழ்ந்தார் ஹநுமான்.

ஜாம்பவான் முதலியோர் கூடினர்.

ஜாம்பவான் கூறினார் ''இன்றோடு மஹாராஜா நமக்கு தேவியைத் தேடுவதற்காக அளித்த காலக்கெடு - ஒரு மாதம் தீர்ந்து விட்டது'' அங்கதன் திடுக்கிட்டான்.

''அப்படியா? இன்னும் தேவியைக் கண்டுபிடிக்கவில்லையே! மஹாராஜா -லங்கைக்கும் போய் அங்கும் கிடைக்காவிட்டால் -யமலோகத்தில் எல்லை வரை போய் தேடச் சொல்லியிருக்கிறாரே! கடலைத் தாண்ட வேண்டுமே! என் செய்வோம்?

கண்டுபிடிக்காமல் திரும்பிப் போனால் மஹாராஜா நம் தலைகளைச் சீவி விடுவார். இங்கேயே காத்திருந்து சாக வேண்டியது தானா?

கவயன் சொன்னான் ''சாவானேன்? மறுபடியும் சுயம்பரபா குகைக்கே போய்விடுவோம். வேளா வேளைக்கு நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டு ராம நாம பஜனை செய்து மீதி ஆயுளைக் கழித்துவிடுவோம்.''

அங்கதன்:- அது தானே நடக்காது. சுக்ரீவ மஹாராஜா சும்மா இருக்கமாட்டார். நம்மைத் தேடிக்கொண்டு வர வாநரவீரர்கள் - பாசக்கயிறுகளுடன் அனுப்புவார். நாம் எங்கே போனாலும் தப்பமுடியாது

ஏன் இப்படியெல்லாம் வருகிறது? நாம் சுதந்திரமாக கிஷ்கிந்தையில் சுற்றிக் கொண்டிருந்தோம்.

இந்த ராமன் எதற்கு வந்தார்? பாவம் பத்தினியைப் பறிகொடுத்து விட்டு பரிதாபமாக நிற்கிறாரே. இந்த லட்சுமணஸ்வாமி சூர்ப்பணகை மூக்கை அறுத்து உயிரோடு விடுவானேன? அவளைத் தீர்த்துக் கட்டியிருந்தால் - ஸௌக்யமாக வனவாஸத்தை முடித்துக்கொண்டு அயோத்தி போயிருக்கலாமே.

அவளாலே வந்தது தானே இத்தனைவினை. ராவணன் கொண்டு போனான் அம்மாவை. ஜடாயு - அந்தக் கழுகு போய் ராவணனோடு மோதுவானேன்?

சுஷேணன் : அவர் தசரத மஹாராஜாவுக்கே நண்பராம்.

அங்கதன்: கழுகுக்கும் மனிதனுக்கும் நட்பாவது?

அந்த ஜடாயுக்கிழம் நம்ம ராமலட்சுமணரிடம் இவ்வளவு பாசம் வைப்பானேன்? - பாவம் ஜடாயு வயதான காலத்திலும் ராவணனோடு மோதி அவனுடைய ரதத்தைப் பொடி பண்ணி குதிரைகளைக் கொன்று .... ஏஅப்பா என்ன காரியம் பண்ணிவிட்டார்!.

அந்தப்பாவி ராவணன் ஜடாயுவினுடைய சிறகுகளையல்லவா வெட்டிப் போட்டுவிட்டான்.

மைந்தன்: சற்று நேரம் கழிந்தால் ராவணன் களைத்துப் போயிருப்பான். ஜடாயு அம்மாவை அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டு பறந்திருப்பார். அதனால் தான் வெட்டிவிட்டான்.

அங்கதன்: எப்படியோ! ராமனுக்கு உதவப்போன - ஜடாயு மரித்துவிட்டார். அதுபோல ராமனுக்காக உதவக் கடமையை ஆற்றும் நமக்கும் ஜடாயுவின் கதிதான்.

கடற்கரையில் மணல் தான் இருக்கிறது. அதையா சாப்பிடமுடியும்? ஒன்றும் தின்னாமல் உயிரைவிட வேண்டியது தானா?

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருந்த போது - அவர்கள் மீது ஒரு நிழல் வீழ்ந்தது - என்ன வென்று திரும்பிப் பார்த்தார்கள்.

ஒரு பெரிய கழுகு - இறக்கைகளை விரித்துப் பறக்க முடியாமல் மலை உச்சியிலிருந்து தத்தித்தத்தி வந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்து பயந்துவிட்டார்கள்.

மலை அடிவாரத்திற்கு மேல் ஒரு உயர்ந்த பாறையில் வந்து உட்கார்ந்தது கழுகு. இவர்களை ஒரு நோட்டம் விட்டது''

''பையனை ஏதாவது சாப்பிடுவதற்கு எதையாவது அடித்துக் கொண்டு வா - என்று அனுப்பினோம். அவனைக் காணோம். குருநாதர் அருளால் நம்மூக்குக்கு முன்னால் சாப்பாடுகள் படுத்துக் கொண்டிருக்கின்றனவே. ஒவ்வொரு நாளும் ஒன்றை அடித்தால் போதும். எல்லாம் முரட்டு மாம்ஸ பிண்டங்கள் - பதினாறு நாட்களுக்கு கவலை இல்லை.''

இவ்வாறுநினைத்து பாறையிலிருந்து இறங்கி தத்தித்தத்தி நெருங்கியது கழுகு.

வாநரர்கள் பயந்து கொண்டே கடலின் நீர் ஓரத்துக்கே போய்விட்டார்கள்.

அதுபேசியது. அதனுடைய குரல்கேட்டு வாநரர்கள் பதறினார்கள்.

கழுகு : பயப்படாதீர்கள் நான் உங்களை ஒன்றும் செய்ய மாட்டேன். நீங்கள் எல்லாம் யார்? ஜடாயு என்று பெயர் சொன்னீர்களே! அவன் என் தம்பி! அவனுக்கு என்னவாயிற்று?

என் பெயர் சம்பாதி. நானும் அவனும் அந்த நாளிலே - சூரியனைப்பிடித்து விடலாம் என்று வான்வெளியிலே பறந்தோம் - நான் மேலே மேலே பறந்தேன். அவன் என் நிழலிலே என்னைத் தொடர்ந்து பறந்தான். ஒரு இலக்கிலே என்னை சூரிய வெப்பம் தாக்கியது. இறக்கை முனையில் நெருப்புப் பற்றியது - நான் கிடுகிடு வென்று கீழே விழுந்தேன். இந்த மலைமுகட்டில்.

ஜடாயு என்ன ஆனான்னே தெரியாது. அவனுக்கும் தசரதமஹாராஜாவுக்கும் நட்பு என்றீர்களே அது எப்படி?

அங்கதன்: ‘‘அதெல்லாம் எங்களுக்கு தெரியாது. பஞ்சவடியில் ராமனுடைய பரிசயம் ஜடாயுவுக்கு ஏற்பட்டது. அவர்களிடம் புத்திர பாசமே கொண்டாடினாராம் ஜடாயு.

ராமனின் தேவி ஸீதையைக் களவாடிப் போன ராவணனை வழி மறைத்துப் போராடினார். ராவணன் அவரது இறக்கைகளை வெட்டிவிட்டான். ஜடாயு பாறைமீது விழுந்தார். அவர் உடல் சிதிலமாகி விட்டது. ராமன் தேடிவரும் வரை மூச்சைப் பிடித்துக்கொண்டு காத்திருந்தார். ராமன் வந்ததும் சேதி சொன்னதும் அவர் உயிர்பிரிந்துவிட்டது-

‘‘சொந்தத்தகப்பனாருக்கு ஈமக்கடன் செய்ய நாம் கொடுத்து வைக்கவில்லை. நம் தகப்பனாரின் உயிர் நண்பரான ஜடாயுக்காவது ஈமக்கடன் செய்வோம்-’’ என்று நினைத்து அவருக்கு தகனம் செய்து ராமன் மாமிச பிண்டம் வைத்தாராம்!

ஸம்பாதி கதை கேட்டு தாரை தாரையாகக் கண்ணீர் விட்டார். ‘‘ரகுவீரன் என் தம்பிக்கு ஈமக்கடன் செய்தாரா? என்ன பாக்கியம்? அதனால் தான் என் குருநாதர் எனக்கு இப்படி ஆணையிட்டிருக்கிறார்.

நான் சூரிய கிரணத்தினால் பொசுங்கி கீழே விழுந்த இடத்தில் நிசாகரர். முனிவர்க்கே உரிய தயவுடன் அவர் - எனக்கு சிகித்ஸை செய்து உயிரூட்டினார். உடல் தேறின நிலையில் அவரை வணங்கினேன்.

‘‘எனக்கு இறக்கைகள் போய்விட்டனவே நான் என்ன செய்வேன்?’’

முனிவர் சற்று நேரம் தியானத்தில் ஆழ்ந்தார்.

சற்று நேரம் கழித்துக் கண்விழித்து நிசாகரர் சொன்னார்.

‘‘சம்பாதி! கவலைப்படாதே எல்லாம் தைவசித்தம். இந்த பிரபஞ்சத்தைப் படைத்த ராமன் - ஒவ்வொரு நொடியும்

பிரபஞ்சத்தின் இயக்கத்தைக் கவனித்து வருகிறார்.

இயற்கையில் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளை - மாலை போலக் கோக்கின்றார். உனக்கு இறக்கை ஒடிந்து நீ இந்த இடத்தில் வீழ்ந்ததும் - ஜடாயு இறக்கைப் பாதுகாப்பினால் தன் இறக்கைகள் பொசுங்காமல் தப்பி வந்து பஞ்ச வடியில் இறங்கியதும் நீ வீழ்ந்த போது நான் உன்னருகில் இருந்ததும் இவையெல்லாம் தைவிக கடனை. நம் செயல் ஒன்றுமில்லை.

ராமனுடைய பத்னியைத் தேடிக் கொண்டு வாநரவீரர்கள் இங்கே வருவார்கள். நீ இந்த மலைச்சிகரத்தில் இருந்த படியே லங்கையில் ஸீதை இருக்கும் இடத்தை உன் கூர்மையான கண்களினால் கண்டு அவர்களுக்குக் கூற வேண்டியது.

இவ்வாறு ராம கைங்கர்யம் செய்த உனக்கு அடுத்த கணம் இறக்கைகள் முளைத்து விடும். நீ பறக்கலாம்.

''இவ்வாறு என் குருநாதர் சொன்னார். அதோ லங்கையில் அசோகமரத்தடியில் - ஸீதா தேவி வடக்கு நோக்கித் தவம் செய்து கொண்டிருக்கிறாள். வேறெங்கும் தேட வேண்டாம்''

என்று ஸம்பாதி சொல்லி முடிக்கவில்லை. அவருக்கு இறக்கைகள் முளைத்துவிட்டன.

ஸம்பாதி சொன்னார்.

''பார்த்தீர்களா? முனிவர் வாக்கு பலித்து விட்டது. உங்கள் பணி நல்ல படியாக நிறைவேறும் என்று கூறிவிட்டு சம்பாதி பறந்துவிட்டார்.

இந்தச் செய்தி கேட்டு இந்தக் காட்சிப்பார்த்து வாநரர்கள் சில நிமிஷங்கள் விக்கித்து நின்றார்கள். சற்று நேரம் கழித்து சுயநினைவுக்கு வந்தார்கள்.

வாநரர்கள் உற்சாகம் கரைபுரண்டு ஓடியது ''கிளம்பலாமா?''

''கிளம்பலாமே!''.

''கடலைக்கடக்க வேண்டுமே!''

''நீந்திப் போனால் திசைமாறி எங்கேயாவது வழி தப்பிப் போய்விடுவோம் - லங்கை போய் சேரமுடியாது''.

''பறக்கலாமே!''

''எவ்வளவு தூரம் பறக்க வேண்டும்''

''நூறு யோஜனை தூரம் என்று தான் ஸம்பாதி சொன்னாரே!

கஜன் : நான் பத்து யோஜனை தான் தாண்டுவேன்

கவாக்ஷன்: நான் முப்பது

சரபன்: நான் நாற்பது

கந்த மாதனன்: நான் ஐம்பது
மைந்தன்: நான் அறுபது

த்விவிதன்: நான் எழுபது

ஸுஷேணன் : நான் எண்பது

ஜாம்பவான்: நான் அந்த நாளிலே - எப்போ தெரியுமா, வாமனன் திரிவிக்ரமாவதாரம் எடுத்தாரே அன்றைக்கு அவரை பேரிகை கொட்டிக் கொண்டு எத்தனையோ தூரம் பிரதக்ஷிணம் பண்ணியிருக்கிறேன். இப்போ ரொம்ப வயஸாயிடுத்து. ஆனாலும் 90 யோஜணை தாண்டி விடமுடியும் - என்று நம்பிக்கை இருக்கிறது.

அங்கதன்: நான் நூறு யோஜனை தாண்டிவிடுவேன். ஆனால் திரும்பி வரமுடியுமா? எனக்கு நம்பிக்கை இல்லை''

''அப்படியானால் ஒவ்வொருவராக வரிசையாகக் கடலில் விழுந்து கொண்டே போனால் தேவியிடம் போய்ச் சேருவது எப்படி?

ஜாம்பவான்: ''அதெல்லாம் சரி. நாமே பேசிக் கொண்டே இருக்கிறோமே! ஹநுமான் எங்கே?''

''அதோ - அந்தப்பவளமல்லி மரத்தடியில் உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருக்கிறார்.''

எல்லோரும் ஓடினார்கள் ராம. ராம ராம என உரக்க நாம கோஷம் செய்தார்கள். ஹநுமான் கண்விழித்தார்.

ஜாம்பவான் ''தேவியைத் தேட வேண்டாமா? தியானத்தில் அமர்ந்தால் எப்படி?

ஹநுமான் : ஸீதாதேவி எங்கிருப்பாளோ என்று தியானம் செய்து கொண்ருந்தேன்.

ஜாம்பவான்:- ஜாநகி இருக்கும் இடம் தெரிந்துவிட்டதே.

ஹநுமான் குதித்தெழுந்தார்.

''எங்கே!''

''லங்கையிலே அசோகவனத்திலே அசோக மரத்தடியிலே தவம் செய்து கொண்டிருக்கிறாள்.''

''உங்களுக்கு எப்படித் தெரியும்''

ஜாம்பவான் நடந்ததெல்லாம் சொன்னார். ஹநுமான் சிரித்தார்.

ஹநுமான்: ''ப்ரபு என்னவெல்லாம் லீலை புரிகிறார் - நம்மை அனுப்பிவிட்டு வழியெல்லாம் அநுகூலங்களையும் ஏற்படுத்தி தருகிறரே! என்னக்ருபை! ஸ்வயம்ப்ரபா விருந்து - இப்போது ஸம்பாதி செய்தி இப்படியெல்லாம் அநுகூலங்கள் நம்முன் வந்து நிற்கிறதே!- என்று சிந்தனை தொடர்ந்தது.

ஜாம்பவான்: ஹநுமானே! பேசாமலே இருந்தால் எப்படி? நாங்கள் எல்லாம் யோஜனை செய்து ஒரு முடிவுக்கு வந்துவிட்டோம் நீங்கள் தான் கடலைத்தாண்டி லங்கைபோய் - ஸீதாதேவியை தர்சனம் செய்ய வேண்டும்.

ஹநுமான்: ஸீதாதேவியின் தர்சனமா? அது எனக்கு கிடைக்குமா?

ஜாம்பவான்: உம்மால் தான் முடியும். உமக்கு முடியாத காரியம் உலகில் ஒன்றுமே இல்லை பிறருக்கு ஸாத்யம் அற்றதெல்லாம் உம்மால் விரல் சுண்டினால் நடந்துவிடும். இப்போது தான் சுயம் பிரபா குகை புகுந்ததோ - வெளி வந்ததோ வேறு யாராலும் ஸாதிக்க முடிந்தது.

**அஸாத்$_4$ய ஸாத$_4$க ஸ்வாமிந்**

**அஸாத்$_4$யம் தவகிம் வத$_3$|**

ராமனுடைய தூதனல்லவா நீர். அது மட்டும் அல்ல. உங்களுக்கு உள்ள செயல் திறனும் தன்நம்பிக்கையும் வேறு யாருக்கும் கிடையாது.

**ராமதூ$_3$த க்ருபா ஸிந்$_4$தோ**

**மத்கார்யம் ஸாத$_4$ய ப்ரபோ||**

நமக்கென்று பொதுவாக விதிக்கப்பட்ட இந்தப்பணி உம்மால் தான் நிறைவேற வேண்டும் எழுந்திரும்!.

ஹநுமான் எழுந்திருந்தார்.

கை கால்களை நீட்டி மடக்குகிறார். இரண்டு தடவை எம்பிக் குதித்தார். குபீர் என்று பாய்ந்தார் - பக்கத்தில் உள்ள - மஹேந்த்ரமலை 300 அடி உயரம் தாவினார். சிகரத்தில் நின்றார். ''ஜய ஸ்ரீராம'' என்று குரல் கொடுத்தார். மற்ற வாநரர்கள் கிடுகிடு வென்று ஏறி ஹநுமான் பக்கலில் நின்றார்கள்.

அதற்குள் ஹநுமான் வளர்ந்துவிட்டார். விச்வரூபம் எடுத்துவிட்டார். வாநரர்கள் பிரமித்தார்கள் வானளாவி ஜோதி ஸ்வரூபமாக காட்சியளித்தார்.

''தோழர்களே - சொல்லுங்கள் - ஜய ஸ்ரீராம ஸ்ரீராம ஜயராம ஜய ஜய ஜயராம ஸ்ரீராமஜயம்! அவர்கள் கோஷமிட்டனர்.

தோழர்களே! ராமனுடைய கோதண்டத்திலிருந்து கிளம்பிய பாணம்போல நான் செயல்படுவேன். வாயு புத்ரன் அல்லவா? என் தந்தையின் வலிமையெல்லாம் என்னைச் சாரும்.

நான் பக்ஷிராஜன் கருடாழ்வாரின் வேகத்தை மிஞ்சுவேன். என்னை யாரும் தடுக்கமுடியாது கடலின் மீது நான் பாய்ந்து பறக்கும் போது திரிவிக்ரமாவதாரம் செய்த ஹரியின் ஸ்வரூபத்தை நீங்கள் காண்பீர்கள்.

நான் ஸீதாதேவியைக் கண்டு விடுவேன். நீங்கள் ஸந்தோஷமாக இருங்கள்.

**அஹம் த்$_3$ரக்ஷ்யாமி வைதே$_3$ஹீம்**

**ப்ரமோத$_3$த்$_4$வம் ப்லவங்க$_3$மா:**

இதோ இந்த மஹேந்திரமலையில் வளர்ந்திருக்கின்ற மரங்கள் எல்லாம் அசைந்தாடி - என்மீது பூச்சொரிகின்றன''

இதோ கிளம்பிவிட்டேன் என்று உற்சாகக் குரல் கொடுத்தார். அங்கதன் ஜாம்பவான் முதலானோர் ஹநுமானுடைய தைவீக தேஜஸ்ஸைக் கண்டு பரவசமடைந்து பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்கள்.



# மூன்றாவது பகுதி

# ஸுந்தரகாண்டம்

## லங்கையில் தேடல்

லங்கையில் தேடி ஸ்ரீராமன் திருவருளால் முழுமையாக ராவணன் களவாடிப்போன ஸீதாதேவியின் திருவடி சேவைபெற வேண்டும்.

அதனால் தான் நமக்குப் பூரணத்வம் நிறைவேறும் - என்ற லட்சியத்தோடு அதன் பொருட்டு உடலுக்குப் பசி, தாகம், வேட்கை, சபலம், சுகம், ஓய்வு, என்ற சத்ருக்களை அடியோடு நசுக்கி அகற்றிவிட்டு - முன்னோர்கள் மஹான்கள் சென்ற பாதையிலே மனதைப் பக்குவப்படுத்திக் கொண்டு செயலில் முனைந்தார்.

**ததோ ராவண நீதாயா:**

**ஸீதாயா: ச$_4$த்ருகர்ச$_4$ந:**

**இயேஷ பத$_3$ம் அந்வேஷ்டும்**

**ச$_1$ாரணாச$_1$ரிதே ப$_2$தி ||**

சூரியனோடு யாராவது போட்டி போட முடியுமா? அவரது பணியை வேறு யாராவது நிறைவேற்ற முடியுமா? அந்த சூரியன் போல - ஒரு கடமையை நிறைவேற்றுவதற்காக முனைந்தது **வாநரன்**

(வாநரனா அவன்? வால்மீகி - ஹநுமானின் உள்ளத்தில் உள்ள விநயத்தை இந்தச் சொல்லாலே எடுத்துக்காட்டுகிறார்)

கழுத்தையும், தலையையும் நேரே நிமிர்த்தி எங்கும் பார்த்தார்.

**து$_3$ஷ்கரம் நிஷ்ப்ரதி த்$_3$வந்த்$_3$வம்**

**சிகீர்ஷன் கர்ம வாநர: |**

**ஸமுத$_3$க்$_3$ர சி$_+$ரோ க்$_3$ரீவ:**

**க$_3$வாம் பதிரிவா ப$_3$பெ$_4$ள ||**

*ஹநுமானுக்கு பிறவியிலேயே தெய்வங்களின் அருள் நிறைந்து விட்டது. பரமேச்வரன் தானே அவருடைய ஜீவனில் புகுந்தார். பிரபஞ்சத்தையே தன் வலிமையாலே ஆட்டிப் படைக்கின்ற வாயு தேவனின் வீர்யாவேசமும் பிரம்ம தேவன் இந்திரன் முதலியோர்களின் அருள், ஸூர்ய பகவானே ஆசானாக அமைந்த பெருமை, இவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்கிறார் ஹநுமான் அவர்களை வணங்குகிறார்.*

***ஸ ஸூர்யாய மஹேந்த்$_3$ராய***

***பவநாய ஸ்வயம்$_4$புவே |***

*தோழர்களிடம் கூறுகிறார்.*

*பிரபுவினுடைய கோதண்டத்தினால் ஏவிவிடப்பட்ட அம்பு போல - நேரே தேவியைத் தேடிக் கண்டுபிடிப்பது என்ற ஒரு லட்சியம் தவிர வேறொன்றும் கிடையாது அவருக்கு.*

*லங்கைக்குப் போவேன் - லங்கையில் தேடுவேன். அங்கே தேவி இல்லாவிட்டால் இதே வேகத்தில் தேவலோகம் போவேன். அங்கும் கிடைக்காவிட்டால் ராவணனையே கட்டி இழுத்துக் கொண்டு வந்துவிடுவேன். அல்லது ராவணனோடு லங்கையை பெயர்த்துக் கொண்டுவந்து போடுவேன். ஒன்று நிச்சயம் தேவியைக் கண்டு பிடித்துக் கொண்டு வரத்தான் போகிறேன்.*

***ஸர்வத$_2$ா க்ருதகார்யோ Sஹம்***

***ஏஷ்யாமி ஸஹஸீதயா |***

*ஒரு காரியத்தில் இறங்கினவனுக்கு தெய்வப்பற்றும், செயலூக்கமும் தளராது இருந்துவிட்டால் அவன் இப்படித்தான் பேசுவான். செய்வான்.*

*வாநரர்கள் கைகூப்பிச் சூழ்ந்து நின்று பார்க்கிறார்கள்.*

*ஹநுமான் மால்யவான் (மஹேந்திர) மலையின் உச்சியில் - கால்களை அகட்டிப் போட்டு நிற்கிறார். ஒரு*

தடவை உடலை உலுக்குகிறார். ரோமங்கள் சிலிர்க்கின்றன. மேகம் போல இடிக்குரலில் ஜயஸ்ரீராம் என்று கோஷிக்கிறார்.

வாலை அழகாகச் சுருட்டி - பம்பரம் விடும் பையன்கள் பம்பரத்தில் கயிற்றை அடுக்குப்போல சுற்றி வீசுவது போல் - ஆகாயத்தில் வீசினார். அது - ஒரு பெரிய வட்டமாகச் சுழன்று நின்றது. கருடன் ஒரு மஹாநாகத்தை - கால்களில் பிடித்து வளையமாகச் சுற்றுவது போல இருந்தது.

கைகளை இரண்டு புறமும் விசையோடு மடக்கி ப்பெரிய உலக்கைகளைப் போல நீட்டினார். கால்களை எம்பி உதறிப்பின்புறமாக இடுப்பு வரை மடக்கி குந்தி உட்கார்ந்தார். மார்பு நிறைய மூச்சை அடக்கிக் கொண்டார். ஒரு எம்பு எம்பினார். கால்களை நீட்டிக் காற்றை உதைத்தார். இருபுறமும் புஜங்கள் கழுத்து முகம் பக்கமாகச் சேர்ந்தன. விசையுடன் தாவின. மார்பில் மூச்சை அடக்கி விண்ணென்று தாவினார். உடலில் தேஜஸ் மனதில் திண்மை, புத்தியில் வீரபராக்ரமம், மேலிட்டன. ஆகாயத்தில் ஹநுமான் விர்ரென்று பறக்கிறார்.

அவருடைய பக்கம் வழியாக காற்று வீசி விர்ரென்று ஒலி எழுப்புகிறது. வால்மீகி பகவானுக்கு AERONAUTICS தெரிந்திருக்கிறது. இன்றைய மிக நவீனமான ஆகாயவிமானம் - எப்படி வரிசையாக இஞ்ஜினுக்குடைய செயற்பாட்டின் PROPULSION மூலம் ஆகாயத்தில் எழும்புமோ - அத்தனையையும் வர்ணித்துவிட்டார். இத்தகைய செயற்பாட்டிற்குரிய ஸம்ஸ்க்ருத சப்தங்கள் - எவ்வளவு பொறுத்தமாக வீழ்ந்திருக்கின்றன!!!

எஞ்ஜின் எவ்விதம் Energise ஆகிறது என்பதை வெகு தெளிவாக கூறுகிறார்.

சூடு, காற்றின், அழுத்தம், அதனால் ஏற்பட்ட பலமான உந்துதல், இம்மூன்றும், ஆகாயத்தில் பறப்பதற்குத் தேவை என்பதை

**தேஜ: ஸத்த்வம் த$_3$தா வீர்யம்**

*ஆவி வேச ஸ வீர்யவாந்*

*தெளிவாகக் குறிப்பிடுகிறார்.*

*ஆகாய வீதியில் அவருக்கு ஏற்பட்ட பிரயாணத்தடைகள் - நவீன விமானங்களுக்கு ஏற்பட்டால் அவை நொருங்கிக்கடலில் வீழ்வதைத் தவிர வேறு வழியில்லை. அவற்றை மிஞ்சினார் லாகவமாக - பிரயாசை இன்றி என்பது தான் காவியரஸம்*

***பாவித்து எழுந்து தனிவிசுவ***

***ரூபத்து டனே பாய்ந்து***

***கடல் வழியக்கிழித்த மைநாக***

***விரையை க்கிழித்து***

***வளர் சுரசை – வாயைக்கிழித்து***

***வெளி கிழிய அங்கார தாரை எனும்***

*(ஸிம்ஹிகை)க் கொடியைக் கிழித்துவிட்டு தென்னிலங்கைக்கு வேட்டைக் கிழித்தான்'' என்கிறார் அருணாச்சலக் கவி. அநுமன் பிள்ளைத்தமிழில்.*

*சூரியன் மறையும் நேரத்தில் லங்கையை மிதித்த ஹநுமான் சற்று இளைப்பாறவில்லை. விச்வ ரூபத்தை மறைத்து - பூனை வடிவானார்.*

*லங்கை தெய்வம் காளி - அந்தப் பூனைக்கு வழி விடமறுத்தாள். காளிக்கு எத்தனை வைரம். அவளை ஒரே அறையில் தீர்த்ததின் மூலம் லங்கையின் கடும்காவலைக் கலகலக்க வைத்தார்.*

*தற்கால தீபாலங்காரங்கள் அந்தக்காலத்து லங்காதீபாலங்காரத்துக்கு உரை போடக் காணாது -*

*நெருங்கி நெடி துயர்ந்த மாளிகைகளின் கோபுரங்களின் மீது தாவியே லங்கை முழுவதும் ஒரு நோட்டம் விட்டாயிற்று. வீதியில் இரவுக் கடைகளில் - மது பானமும் கேளிக்கைகளும் அந்தயுகத்திலேயே கூட லங்கையில் மலிந்திருக்கின்றன.*

வால்மீகி பகவானின் அயோத்தி வர்ணனைகளைப் படித்தால் - பாரதபுண்ய பூமியின் புராதன தார்மீகப் பண்பாடு துலங்கும்.

லங்கா வர்ணனையைப் படித்தால் தற்கால மனித வர்க்கத்தின் - சிறிது கூட பண்பில்லாத தான் தோன்றித் தனமான வாழ்க்கையின் அவலங்கள் எல்லாம் தெரியும்.

அதுவும் ராவணனுடைய அந்தப்புற வர்ணனை! எப்படித்தான் தற்காலத்திய அலங் கோலங்கள் கவியினுடைய FUTURISTIC கண்களிலே புகுந்தனவோ?

ராவணனுடைய அந்தப்புரத்திலே ஒரு காட்சி கண்டார் ஹநுமான். அதில் தைவீகக்கவி வால்மீகி ஒரு கவிநயம் காட்டுகிறார்.

மஞ்சத்தில் ராவணன் மனைவி மண்டோதரி அடக்க ஒடுக்கமாகப்படுத்துத் தூங்குகிறாள் இது வரை பல அவலங்களைக் கண்ட ஹநுமானின் கண்களுக்கு குளிர்ச்சியான காட்சி. அவளைப் பார்த்து கைகூப்பிய ஹநுமான் ஸீதை என்றே நினைத்து மகிழ்ந்தார் - என்று கூறுகின்ற கவிராஜர் - ஹநுமானுக்கு அசட்டுப்பட்டம் கட்டுவது போல - பெண்ணின் கற்பின் உயர்வுக்கு புதிய விளக்கம் தருகிறார்.

மறுகணம் ஹநுமான் ஸுதாரித்துக் கொண்டுவிட்டார். ''ஸீதாதேவி மஞ்சத்திலா தூங்குவாளா?'' இதுவல்ல ஸீதாதேவி. இந்தப் பைத்தியக்காரத்தனத்திற்காகத் தன் தொடையைத் தானே கிள்ளிக் கொண்டார். நன்றாக வலித்தது.

இத்தனை பெண்மணிகளை இந்த அந்தப்புரத்திலும் , தாழ்வாரத்திலும் பார்த்தோமே! ஊன்றி ஊன்றிப் பார்த்தோமே! அவர்களுடைய அவலநிலைகள் எல்லாம் தெரிந்ததே? ஒரு பிரம்மசாரி பார்க்கலாமா...?

தேவியா இவள் என்று தானே பார்த்தோம்? என் செய்வது? பெண்ணைத் தேடிக் கொண்டுவந்தால் அவளைப் பெண்களிடையே தானே தேடலாம்! - மாடுகளிடையேயா தேடுவது? செய்தது சரிதான்.

பொழுது விடிந்து ஓர் உயரமான மாளிகையின் கோபுரத்தில் ஏறி - நகரத்தை நாற்புறமும் நோட்டம்விட்டார் ஹநுமான். நகர அமைப்பு நன்றாக மனதில் பதிந்து விட்டது. தெருக்கள் வீதிகளில் வரிசையாக ஒரு வீடுவிடாமல் தேடினார். காலை வேளையில் அவரவர்கள் வீட்டில் தானே இருப்பார்கள்? ஜோடி ஜோடியாகப் போகிறவர்களையும், பெண்களே கூட்டமாகப் போகிறவர்களையும், சந்தையிலும் குளக்கரைகளிலும் தேடினார். ஒரு கணம் நிறை இடத்தில் மறுகணம் நிற்பதில்லை.

குட்டிக்குரங்கு உற்று உற்றுப் பார்ப்பதை எவரும் லட்சியம் செய்யவில்லை. பிற்பகலில் உத்யானங்களிலும் தோட்டங்களிலும் அலைந்தார். நகரத்தின் விஸ்தீர்ணம் முழுவதும் குறுக்கும் நெடுக்குமாக ஒரு நாலு அங்குலம் விடாமல் தேடினார்.

**சதுரங்கு$_3$ல மாத்ரோऽபி**

**அவகாசோ நவித்$_4$யதே ।**

இரவு வந்துவிட்டது. வாயில் - கடைவாயில் உள்ளராம நாம மோதிரத்தையும் ராம நாமம் சொல்லிக் கொண்டே இருக்கின்ற நாக்கையும் துளாவிக் கொண்டதைத் தவிர வாயில் ஒன்றும் புகவில்லை.

ஒரு நிமிடம் தலைசாய்க்கவில்லை - மாலை சூரியன் மறைந்து கொண்டிருந்தார். ஆங்காங்கே தீபங்கள் - ஒளிபாய்ச்சின. விளக்கேற்றுவதற்காக வாசலுக்கு வந்த பெண்மணிகளை உற்று உற்று பார்த்தார். தலையில் அடித்துக் கொண்டார் ''என்னமுட்டாள் தனம்?'' நம் அன்னை லங்கையில் வீட்டு வாசலில் விளக்கேற்றிக் கொண்டா இருப்பாள்? மறுகணம் மனதை தேற்றிக் கொண்டார்.

தேடுவது என்றால் ஒன்றையும் விடக் கூடாதல்லவா?

குளத்தங்கரை அரசமரத்திற்கு வந்தார். கிளை நுனியில் உட்கார்ந்து ஊசலாடினார். அவருடைய மனதும் ஊசலாடியது.

*மறுகணம் ஆங்கே ஒரு விமானம் தெரிந்தது. ''இது தானா? புஷ்பகவிமானத்தில் அல்லவா தேவியைக் கொண்டு வந்திருக்கிறான். அதற்குள் இருப்பாளோ? தேடினார். விசாலமான அந்த விமானத்தில் நுண்ணிய ஸகலவசதிகளையும் கண்டுவியந்தார். விமானத்திலிருந்து இறங்கினார்.*

*லங்கைமுழுவதும் தேடி ஆயிற்றே!*

*ஸீதா தேவியைக் காணவில்லையே! ''லங்கையில் அதோ இருக்கிறாள்'' என்று காட்டினாரே ஸம்பாதி. கழுகுக்கண்ணுக்குத் தெரிவது நமக்கு தெரியவில்லை. நெருங்கிப் போனால் பார்த்துவிடலாம் என்று நினைத்தோமே தேவியைக் காணோமே.*

*ஸம்பாதி வேறு யாரையோ பார்த்தாரோ!*

*விமானத்தில் ராவணன் பிடியில் இருந்து விலகி ஸீதாதேவி கீழே விழுந்திருப்பாளோ!*

*ஆபரணங்களை முடிச்சாகப் போட்டாளே! பூமி தெரிந்தவரை விமானத்திலிருந்து விட்டு - விமானம் கடல் மீது பறந்த போது கடலில் குதித்திருப்பாள். அவளைத் திமிங்கிலம் விழுங்கி இருக்குமா?*

*அப்படியிருக்காது - ராவணன் பிடியிலிருந்து தப்பமுடியாது. இருபது கைகளல்லவா அவனுக்கு? இங்கே தான் நிச்சயமாக கொண்டு வந்திருக்கிறான். இவளைப் பார்த்து பொறாமைப்பட்டு அரக்கிகள் கடித்துத் தின்றிருப்பார்கள்!*

*ராவணன் அப்படி விட்டிருப்பானா! அரக்கிகள் கைக்கு அகப்படாமல் எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிறான்?*

*நாம் தான் அத்தனை பாதுகாப்பு அறைகளிலும் புகுந்து பார்த்து விட்டோமே!! எங்கும் காணவில்லையே.*

*நம் கடமையை முற்றிலும் செய்தாகிவிட்டது. தேடச் சொன்னார் தேடிவிட்டோம் அவள் இங்கு இல்லை.*

தேடப்போன ஹநுமானைக் காணோமே! அலட்சியமாக எங்கே போய்விட்டான்? என்று நினைப்பாரே பிரபு!

அப்படி ஒரு எண்ணத்துக்கு இடம் கொடுக்கக்கூடாது. ‘‘எங்கும் தேடிவிட்டேன். கிடைக்கவில்லை - என்று போய் சொல்லிவிட வேண்டியது. நம் கடமை தீர்ந்தது.

நம் பேரில் வஞ்சனை இல்லை. இருந்தால்தானே காணலாம்? இல்லை! காணவில்லை. அவ்வளவு தான். போய் இப்படிச் சொன்னால் ராமன் உயிரைவிட்டு விடுவார். போகாமல் தாமதித்தால் நாம் கடமையைச் செய்யவில்லை என்ற குற்றம் வரும்!

**நிவேத்யமாநே தோஷ: ஸ்யாத்**

**தோஷ: ஸ்யாதநிவேதநே।**

சொல்லுவதும் தவறு, சொல்லாமல் இருப்பதும் தவறு.

அப்படியல்ல! போய்ச் சொல்லாமல் இருந்தால் அவர் உயிரோடிருப்பார் அல்லவா? ஹநுமான் தேடிக் கொண்டிருக்கிறான். கண்டுபிடித்து விடுவான் - காத்திருப்போம் என்று நம்பி உயிரோடு இருப்பாரே! பேசாமல் இங்கே இருந்து பட்டினி கிடந்து சாவோம்.

இது தவறு. கொடுத்த கடமையை நிறைவேற்ற முடியவில்லை என்று சொல்வது தான் முறை. போய்ச் சொல்லிவிடுவோம். நடப்பது நடக்கட்டும்.

என்ன நடக்கும்? செய்தி கேட்டதும் ராமன் பிராணனை விடுவார். லட்சுமணனும் மடிவார். சுக்ரீவனுக்கு ராமனிடம் எவ்வளவு பக்தி? நமக்கு ராஜ்யத்தைக் கொடுத்தவருக்கு நாம் கடமையைச் சரிவரச் செய்யாததால் நாசம் வந்துவிட்டதே. நாம் எதற்கு உயிரோடு இருக்க வேண்டும் என்று உயிரை விட்டுவிடுவார்.

எப்படியோ அயோத்திக்கு சேதி தெரிந்துவிடும். பரதர் சத்ருக்னர் தாய்மார்கள் குருமார்கள் ராமனிடமே உயிர்

வைத்திருக்கின்ற அத்தனை பிரஜைகளும் உயிரைத்துறப்பார்கள். இத்தனையும் எதனால்? நாம் தேவியைக் கண்டுபிடிக்காததனால்.

நம்மால் முடியவில்லையே. ஆனால் அதனால் ஸர்வநாசம் ஏற்படுவதற்கு நாம் காரணமாக நிற்கிறோமே!

ராம என் தெய்வமே! இப்படி ஸர்வநாசம் ஏற்படுவதற்குக் காரணமாவதற்காகவா உங்கள் திருவடி பணிந்தேன்?

உன் திருநாமம் சொல்லி - உன் திருவடி பணிந்தவனுக்கு உலகத்தையே உயிரிழக்க விடாமல் காப்பதற்குரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டவனுக்கு காரியத்தை நிறைவேற்ற முடியவில்லை - என்றால் உங்கள் கீர்த்தி - என்ன ஆகும்? உங்கள் அமோகமான ராம நாமம் என்ன ஆகும்?

ராம! இத்தனை பெரிய மஹாபாபத்திற்கு என்னை ஆளாக்காதீர்கள்.

ராம! உமக்கு கோடி நமஸ்காரம்

லட்சுமணஸ்வாமி! ப்ரபு விழித்திருக்கும் போதும் தூங்கும் போதும் அண்ணலின் அருகாமை விட்டு அகலமாட்டேன் - என்று தவம் கிடக்கின்றீரே! உம்மைப்போல ராம ஸேவை செய்யத்தானே நானும் வந்தேன்? எனக்குக் கொடுத்த ஆணையை நிறைவேற்றமுடியவில்லையே. தம்பித்துணையே !! எனக்குக் கைகொடுத்து உதவும்மய்யா!

என் தாயே! ஸீதாதேவி நீ பராசக்தி. உன் திருக்கை பிடித்ததினால் தான் என் பிரபுவுக்கே பெருமை. மாஜாநகீ செட பெட்டக மஹாராஜு இத்தனைபெருமை. உன்னைத் தேடிக்கண்டுபிடிக்க முடியாமல் கதறுகிறேனே! குழந்தை அழுதால் தாய் தானே தேடி வரவேண்டும்? அப்படிவா! அம்மா! தரிசனம் கொடு!

உலகில் பிறவி எடுத்த அத்தனை ஜீவர்களின் செயலையும் கண் காணிக்கின்ற பொறுப்பில் உள்ள தேவர்களே ருத்திரனே! இந்திரனே! யமனே! வாயு பகவானே! - நான் எனக்கு விதிக்கப்பட்ட கடமையை அயராது வஞ்சனையில்லாது நிறைவேற்ற முயற்சி செய்திருக்கிறேன் - என்பது உங்களுக்குத் தெரியுமே. அது வீண் போகலாமா! அருள் பாலியுங்கள்.

நமோSஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய

தே$_3$வ்யைச$_1$ தஸ்யை ஜநகாத் மஜாயை ।

நமோஸ்து ருத்ரேந்த்$_3$ர யமாநிலேப்$_4$யோ

நமோSஸ்து சந்த்$_3$ரார்க மருத்கணேப்$_4$ய:!!

நீங்கள் என் கண்களுக்கு அகப்படாத தெய்வங்கள்! சூரியன் சந்திரன் இங்கும் அங்கும் ஓயாமல் அலையும் வாயுவும் பிரத்யக்ஷ தைவங்களாயிற்றே! நீங்கள் சொல்லுங்கள் - நான் கபடமில்லாமல் சிறிது கூடதன் நலம் கருதாமல் எனக்கு அளித்த கடமையில் சிரத்தையோடு ஈடுபட்டிருக்கிறேன் அல்லவா? அது நிறைவேற வேண்டாமா? என்று கண்ணீர் விட்டு கதறினார்.

மரக்கிளையில் நுனியில் இருந்த ஹநுமானின் கால் நழுவியது. கீழே விழுந்திருக்க வேண்டும். கைப்பிடி கெட்டியாக இருந்ததால் தொங்கினார். எதிரே பார்த்தார். ஒரு பெரிய உத்யானம்.

அட இத்தனையெல்லாம் சுற்றினோம். இதுகண்ணில் படவில்லையே! கடமை முடியவில்லையே! அதற்குள் அவசரப்பட்டுவிட்டோமே! காரியசித்தி வரை முயற்சி செய்து கொண்டே இருக்க வேண்டுமே தவிர நிராசைப்படக்கூடாது.

தனிமையில் அகப்பட்டுக் கொண்டு தவித்த ஹநுமானின் இந்த மன ஓட்டம் - முயற்சி பலிக்கவில்லையே என்ற நிராசை- அப்படி பலிக்காததனால் ஏற்படக்கூடிய

ஸர்வநாசம் அத்தனைக்கும் காரணம் பொறுப்பு நம் தலைமேலே : என்று நெஞ்சில் பாரம் அழுத்திய போது அவருடைய தெய்வநம்பிக்கை விழித்து எழுந்தது என்று எடுத்துகாட்டுகிறார். வால்மீகி பகவான்.

ஸுந்தர காண்டம் பதிமூன்றாவது ஸர்க்கத்தில். வாழ்க்கையில் மிகப் பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்ட பல பெரியோர்கள் இந்த பதிமூன்றாவது ஸர்கத்தைப் பாராயணம் செய்து தைரியம் பெற்று சங்கடத்தை சமாளித்திருக்கிறார்கள்.

அடுத்த கணம் பாய்ந்தார். செயற்கை அழகு மிகுந்த நந்தவனம். ஒவ்வொரு செடிவரிசையும் ஒரே அளவில் அதிகப்படிகள் கத்தரிக்கப்பட்டு சுவர்போல விளங்கின. நடை பாதையெல்லாம் அருகம்புல் வளர்க்கப்பட்டு மெத்தென்று இருந்தன. சுரைக்காய் - வடிவில் ஓர் அழகான நீர்த்தேக்கம். பளிங்குப்படிகள். அதன் எதிரே ஒரு அசோக மரம். இலைகள் எல்லாம் பூக்கள் போல சிவந்த நிறம்.

அதன் அடியில் ஒரு பளிங்கு மேடை. அதன் மீது அமர்ந்த ஜாநகியைக் கண்டுவிட்டார்.

மந்தோதரியைப் பார்த்து தேவி என்று நினைத்துக் குதித்தது போல குதிக்கவில்லை. ஸ்தம்பித்து நின்றார். ஸத்யத்தின் முன்னே தளும்பாத மனநிறைவு முந்தியது!!

மாயையின்முன்னே பொருளற்ற கோலாஹாலம்!!

எட்டியிருந்து தேவியைப் பார்த்துவிட்ட ஹநுமான் ஓசைப்படாமல் ஒவ்வொரு மரங்களாகத்தாவி அந்த அசோக மரத்தின் - நடுக்கிளையில் பாய்ந்துவிட்டார்.

பக்கத்தில்ஒரு மரமல்லிகை மரம். பூக்கள் எல்லாம் மலர்ந்து வீழ்ந்து - வெள்ளை வெளேர் என்று ஜமுக்காளம் விரித்திருந்தது.

பார்வைக்கனுகூலமாகக் கிளையில் அமர்ந்து ஜாநகீயைப் பார்க்கிறார். அவளுடைய இயல்பான தைவீக சோபையை மறைத்துக் கொண்டு சோகமும் களைப்பும் இளைப்பும் திருமேனி முழுவதும் வியாபித்திருந்தன.

சுக்ல பக்ஷத்து பிரதமையன்று சந்திரன் - ஒரு சிறு கீற்றுப் போல் தெரியுமே அவ்வளவு மெலிந்திருந்தான்.

புகைசூழ்ந்த ஹோம அக்நிக் கொழுந்து போல் பொலிவிழந்து இருந்தாள். தாமரைக் குளத்துள் தாமரை பூத்திருக்கிறது - சேற்றிலிருந்து ஒரு தவளை கிளம்பி அந்தத் தாமரை மீது வீழ்கிறது. தாமரை மீது சேறுபடிகிறது. மலரின் ஒருபுறம் தூய இதழ். மறுபுறம் சேறு பட்ட இதழ். அசிங்கம் என்று பார்வையை விலக்கிக் கொள்ளவும் முடியவில்லை. பார்க்கவும் முடியவில்லை.

***ம்ருணாளீ பங்க தி$_3$க்$_3$தே$_4$வ***

***விப$_4$ாதி - நவிப$_4$ாதிச$_1$।***

நினைவு மறந்த ஒரு செய்தி, ஒருவஸ்து, இதுவா, அதுவா, என்று சந்தேகம். ஜாநகியா இப்படி ஆகிவிட்டாள்? இவள் ஜானகி தானா?

பங்களாவில் சீரும் சிறப்புமாக வாழ்ந்த சீமாட்டி செல்வமெல்லாம் அழிந்து கிழிந்த ஒற்றைத்துணியை உடுத்திய மூதாட்டியாகக் கண்ணீர்விடுவது போல் இருந்தாள்.

ஒரு மங்களமான வைபவத்தை வீட்டில் கோலாஹலமாக நடத்திக் கொண்டிருந்த போது திடீரென சோகச் செய்தி கேட்டு அத்தனை வைபவமும் களையிழந்து போவது போல் இருந்தாள்.

எதிர் பார்த்த வேலை கிடைக்கும். கையெழுத்தாகும் நிலையில் ஒரு சின்னத் தகவல் கோளாறினால் தடைப்பட்டுப்போனால் அந்த நிலையில் ஏமார்ந்து நிற்கிறவன் போல் இருந்தாள்.

இப்படியெல்லாம் ஹநுமான் ஜாநகீதேவியை - நம் கண்முன்னே நிறுத்துகிறார். அவளுடைய திக்கற்ற நிலையை நமக்கு உணர்த்துகிறார். கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்தவன் உள்ளம் உடனே ராமனிடம் பாய்ந்தது. கண்கள் ஸீதையிடம். மனது ராமனிடம்.

*''ஐயா! என் ஐயனே! நீர் கல் நெஞ்சுக்காரர் ஐயா! இந்த தேவியைப் பிரிந்து இன்னமும் உயிரோடு இருக்கிறீரே!!*

***துஷ்கரம் குருதே ராம:***

***ந து: கே₂ந அவஸீத தி।***

*முன்பு ப்ரஸ்ரவண மலையில் ப்ரஸ்ரவண நீர்வீழ்ச்சி அருகில் உள்ள குகையில் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த ராமனைப் பார்த்த இந்தக் கட்டை பிரம்மசாரி - நினைத்தார் ''ஒரு பெண் பிள்ளைப் பிரிந்ததற்காக இந்த மஹாபுருஷன் இப்படி அழுது கொண்டிருக்க வேண்டுமா?''.*

*இப்படி நினைத்தவர் இப்போது ''ஆஹா! ஸர்வமங்களங்களுக்கும் கருவூலமான இந்த தேவியை ஏன் தான் இழந்தாரோ! எப்படித்தான் தனியே விட்டுப் போனாரோ? இவள் ஒருத்தியை அடைவதற்காக உலகத்தையே புரட்டிப் போட வேண்டியிருந்தால் அந்தச் செய்கை தகும்.*

*என்னைப் போல ஒரு கட்டை பிரம்மசாரியைக் காவல் வைத்துவிட்டு எப்படித்தான் பிரிந்து சென்றாரோ! அந்த - மானை இளையவர் பிடித்து வரமாட்டாரா? தானே போக வேண்டுமா? மனைவியின் விருப்பத்திற்கு அவ்வளவு அக்கரை எடுத்துக் கொண்டு போக வேண்டுமா? இப்படித் தன் உயிரை இவளிடம் ஒப்படைத்தவர் எப்படித்தான் பிழைத்திருக்கிறாரோ!*

*ஹநுமானின் இதயத்தில் இப்படித் துயரத்தில் ஆழ்ந்த ஸீதாராம தம்பதிகள் பொறுக்க முடியாத வேதனையை சுமந்தவர் ''இவர்களைச் சேர்த்து வைத்து விட்டு தான் நான் சாப்பிடுவேன் தூங்குவேன் - என்று விரதம் எடுத்துக் கொண்டார் ஹநுமான்.*

*இரவு மூன்றாவது யாமம். ராவணன் காம வேட்கை எல்லை மீறியதால் தூக்கமிழந்தான். அந்தப்புரத்திலிருந்து வெளி வந்தான். தான்யமாலிநீ என்ற இரண்டாவது மனைவி பின் தொடர்ந்தாள்.*

*திறந்த மார்போடு வாசனைச் சந்தனம் எல்லாம் பூசிக் கொண்டு மெல்லிய ஜரிகை சல்லாவை தோளிலிருந்து கால் வரை தொங்கும் படியாக விட்டு கைகள் இருபதும் மூடி போர்த்திக் கிளம்பினான்.*

*முன்னே பத்து சேடிகள் மணம் கமழும் எண்ணை வார்த்த தீபங்களின் பிடிகளைக் கையிலே தாங்கி - இரண்டடி முன்னே தீபம் தொங்க வரிசையாக வந்தார்கள். கலைந்த தலை முடியை சுருட்டி பந்து போல இடதுபுறம் சாயக் கொண்டை. அதிலிருந்து முத்துக் குஞ்சம் தொங்கி ஊசலாடியது அந்த தீபங்களின் மத்தியில் யானை நடை போட்டு பூமி அதிர நடந்து வருகின்ற ராவணனை அசோகமரத்துக் கிளைகளில் ஒளிந்து கொண்டிருந்த ஹநுமான் பார்க்கிறார்.*

*சில மயானங்களில் - நடு மேடையில் ஒரு தெய்வ பிம்பம் தெத்திப்பறக்களுடன் நிற்கும். சவங்களுக்குப் போட்டு வந்த மாலைகளை சிதையில் வைத்துக் கழற்றியவைகளை வெட்டியான் அந்த பிம்பங்களின் கழுத்தில் போடுவான். அந்தப் பூமாலைகளின் நடுவே இவ்வாறு அலங்காரம் பூண்டிருந்தாலும் பார்க்கிறதுக்கு பயங்கரமாக இருக்கும். அப்படி இருந்தானாம் ராவணன்.*

***ச்மசான சை$_1$த்ய ப்ரதிம:***

***பூ$_4$ஷிதோபி ப$_4$யங்கர:***

*அந்த பயங்கரக் காட்சியைக் கண்ட ஹநுமானுக்கே ஒரு நிமிஷம் உடல் தடுமாறியது. கீழே விழாமல் ஸமாளித்துக் கொண்டார். எவர் பெயரைச் சொன்னால் பேய்பிசாசுகள் எல்லாம் காத தூரம் ஓடுமோ அவரே தடுமாறினார்.*

***ஸ த$_2$ாவப்யுக்$_3$ர தேஜா:ஸந்***

***நிர் தூ$_4$த: தஸ்ய தேஜ ஸா***

***பூ$_4$த பிஸாச$_1$ நிகட நஹி ஆவை |***

***மஹாவீர ஜப$_3$ நாம ஸுநாவை || (துளஸிதாஸர்)***

இவனைப் பார்த்துவிட்ட ஜாநகீ தேவி. முழங்கால்களை மடித்து தலைப்பினால் போர்த்திக் கொண்டு மரத்தை நோக்கி குறுகி உட்கார்ந்து கொண்டாள். தாயின் உடலழகை கற்பனைபண்ணிக் கொண்டு புகழ்ந்தான் ராவணன். மூவுலகையும் வென்ற ராவணேச்வரன் தன் ஆண்மை வீர்யமெல்லாம் மறந்து மண்டியிட்டு மன்றாடினாள்.

**மயி லல லலநே யத$_2$ா ஸுக$_2$ம் த்வம்**

**த்வயிச ஸமேத்ய லலந்து பா$_3$ந்த$_4$வாஸ்தே ।**

நாக்கை பற்களிலே தட்டி உமிழ்நீர் சொட்டச் சொட்டக் கொஞ்சினான். ''என் மீது மையல் கொள்வாய். உன் பிறந்த வீட்டுக்காரர்களும் வந்து இங்கே கொம்மாளம் போடலாம்.''

தேவி திரும்பியே பார்க்கவில்லை காலடியிலே மிதிபட்ட அருகம் புல்லைக் கிள்ளி எதிரே போட்டாள். அதைப்பார்த்துப் பேசினாள்.

தேவர்களையெல்லாம் அடக்கி ஆள்கின்ற நீ இப்படி உன் கௌரவத்தையெல்லாம் புறக்கணித்து ஒரு அபலையிடம் இப்படி நடந்து கொண்டிருக்கிறாயே! திறந்த வீட்டில் நாய் நுழைவது போல - பர்ணசாலையில் தனிமையிலிருந்த அபலையைக் கொண்டு வந்தாயே! எங்கே உன் பராக்ரமம்? உனக்கு உண்டா அது?

இந்த ஊரில் நல்லோர் பெரியோர் கிடையாதா? அவர்கள் புத்தி சொல்லியிருப்பார்களே! அதை நீ காது கொடுத்துக் கேட்டால் தானே புத்தி வரும்?

நான் சொல்கிறேன். உன் மனதைத் திருத்திக் கொள். உன் அந்தப்புரத்தில் எத்தனை அழகான பெண்கள்? அவர்கள் பால் உன் கண்களைத் திருப்பிக் கொள். என்னை மனத்தாலும் தீண்டாதே. வீணாக அழிந்து போகாதே.

நீ என்ன கொடுத்தாலும் என்னை வசப்படுத்த முடியாது. சூரியனுடைய பிரபையை கழற்றி உன் தலையில் வைத்துக் கொள்ள முடியுமா? நடக்குமா இது? என்றெல்லாம் கூறினாள்.

ராவணனுக்கு கோபம் வந்தது? உடைவாளை உருவினான். தான்யமாலினி வந்து தடுத்தாள்.

கழுத்தைக் கட்டி அவனை நகர்த்திக் கொண்டு போனாள். போகும் போதே காவல் காக்கின்ற அரக்கிகளிடம் சொன்னான்.

''இன்னும் ஒரு மாதத்தில் அவள் என் வழிக்கு வரவில்லையேயானால் அவளைச் சமயல் அறைக்கு அனுப்புங்கள். அவளை அறுத்து சாம்பார் வைக்கச் சொல்லி அத்தனையையும் சாப்பிட்டு விடுகிறேன்.''

தொலைந்தான் என்ற சிறு நிம்மதியோடு திரும்பினாள். அரக்கியர் பிடித்துக் கொண்டார்கள். என்னவெல்லாமோ பிதற்றினார்கள். தேவியின் காதுகள் மரத்துவிட்டன.

அவளுக்குக் சிரிப்பு வந்தது.

முன்பு வைகுண்டத்தில் நடந்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது.

பகவான் வைகுண்ட நாதன் தசரதருடைய யாக சாலைக்குப் போய் தேவர்களுக்கு மனிதனாய் பிறந்து ராவணன் தொல்லையைத் தீர்த்து விடுகிறேன்.'' - என்று வரம் கொடுத்து விட்டு கருடன் மேல் ஏறி வைகுண்டம் வந்து சேர்ந்தார்.

லக்ஷ்மீ தேவி பகவானுடைய கரங்களைப் பற்றி திருமாமணி மண்டபத்திற்கு அழைத்து வந்தாள். பகவான் மஞ்சத்தில் சாய்ந்தார். என்ன சேதி? என்றாள் தேவி.

பகவான்: ''நான் மனுஷ்யாவதாரம் எடுக்கப் போகிறேன்''

லட்சுமி : இந்தத்தடவை நானும் உங்களோடு வருவேன்''

பகவான்: அப்படிச் சொல்லாதே அபசகுனம் அது - கணவன் வெளியே கிளம்பும் போது மனைவி நானும் வருகிறேன்- என்று கிளம்பக் கூடாதென்று யாஜ்ஞ வல்கியஸ்மிருதி கூறுகிறது.

லட்சுமீ: கணவனோடு மனைவி வெளியே போகவே கூடாதா?

பகவான் : அப்படி அல்ல அர்த்தம்! முன் கூட்டியே திட்டம் போட்டு யாத்திரை போவது என்று தீர்மானிக்கும் போது கணவனே ''நீயும் பின்னோடு வாயேன்!'' என்று அழைத்தால் போகலாம்.

அது மங்களமான காரியம். கணவன் முக்கியமான காரியமாக வெளியே கிளம்பும் போது - நானும் வரேன் என்று சொல்வதைப் போல அபசகுனமே வேறு கிடையாது.

லட்சுமி : நான் ஒன்றும் உங்களை அநுமதி கேட்கவில்லை. நான் வரத்தான் வருவேன்.

இத்தனை அவதாரங்களில் -நான் தங்கள் வக்ஷஸ்தல நாயிகையாக மார்பில் அலர் மேல் மங்கையாக வந்திருக்கிறேனே தவிர தனிநாயிகையாக வந்ததில்லை.

மத்ஸ்ய கூர்ம வராஹ நாரஸிம்ஹ அவதாரங்கள் எல்லாம் தற்காலத்திற்காக மட்டும் எடுக்கப்பட்டவை. வாமந அவதாரமோ பிரம்மசாரி அவதாரம். பரசுராம அவதாரமோ ஆவேச அவதாரம். சில நேரங்களில் பரசு பிராஹ்மணனுடைய தேஹத்தில் ஆவேசித்து அவதார காரியத்தை ஸாதித்தது.

அதனால் நான் உங்களுடன் வருகிறேன் என்று சொல்லவில்லை. இந்த அவதாரம் தான் நீண்ட காலம் பூமியில் இருக்கப் போகிறீர்கள். அந்த சமயத்தில் நான் உங்கள் கூட இருந்து க்ருஹிணீ (பத்நீ) தர்மத்தை அநுஷ்டித்துக் காட்ட வேண்டாமா?

ஆகவே தங்கள் அவதாரலக்ஷ்யம் குறைவற நிறைவேற வேண்டுமானால் நானும் உங்கள் கூட அவதரிக்கத் தான் வேண்டும்.

பகவான்:- ரமா! நீ சொல்கின்ற யுக்தியெல்லாம் மிகவும் நன்றாக இருக்கிறது. இப்படிப் பேசுகிற உன்னை இங்கே விட்டுவிட்டுப் போவதற்கு எனக்கு மனமில்லை.

ஆனாலும் இந்த அவதாரம் மிகச்சிக்கலான அவதாரம். ராவண வதம் செய்ய வேண்டும். அவனோ

மஹாசிவபக்தன். அவனை வதம் செய்ய வேண்டுமானால் ஏதாவது விசித்ரமான உபாயத்தைக் கையாள வேண்டியிருக்கும். அவையெல்லாம் உனக்கு ஒத்து வராத விஷயங்கள்.

அதனால் சொல்கிறேன் அடுத்த அவதாரம் செய்ய நேர்ந்தால் அவசியம் உன்னை அழைத்துப் போகிறேன்.

லக்ஷ்மீ: உங்கள் உள்ளம் எனக்குத் தெரியுமே! அதனால் தான் இந்த அவதாரத்தில் உங்களுடன் கூட இருந்து தான் ஆகவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

பகவான்: இருந்து தான் ஆகவேண்டும் என்றால் - என்னால் சாதிக்க முடியாது என்பது தானே பொருள்?

லக்ஷ்மீ: அப்படி நான் நினைக்கவே இல்லையே.

பகவான்: பிறகு வேறென்ன காரணம்?

லக்ஷ்மீ: சொல்லிவிடுகிறேனே. அந்த ராவணன் யார்? நம்முடைய வைகுண்ட துவாரபாலகன் ஜயன் தானே

பகவான்: ஆமாம்.

லக்ஷ்மீ: அவனுடைய முதல் பிறவி ஹிரணியகசிபுவாகப் பிறந்து பிள்ளைக்கே பரமபாகவதனுக்கே அவன் கொடுமையிழைத்த போது உங்களுக்கு எத்தனை கோபம் வந்துவிட்டது? அவனைத் தூக்கி மடியில் போட்டுக்கொண்டு வாசற்படியில் உட்கார்ந்து அவனுடைய மார்பைக் கிழித்து இதயத்தைப்பிடுங்கி - மாம்பழத்தை உறிஞ்சுவது போல - அவன் உயிரை உறிஞ்சினீர்களே! அப்பப்பா! என்ன கோரம்!

நம்முடைய பையன் துவார பாலகன் ஜயனாயிற்றே - என்று நீங்கள் நினைக்கவில்லையே - அது போல ராவணன் உங்களிடம் அகப்பட்டுக் கொண்டால் அவனை நீங்கள் என்ன பாடு படுத்துவீர்களோ! ராவணனும் நம்ம ஜயன் தானே! அவன் தப்புப் பண்ணலாம். அதற்காக அவனை இப்படிக்ரூரமாக வதைப்பதை என்னால் பொறுத்துக் கொள்ளமுடியாது.

*பகவான்: நீ வந்து அவனுடைய வதையைத் தடை செய்யப் போகிறாயா?*

*லக்ஷ்மீ: அப்படி அல்ல - உங்களுக்குமுன் அவனிடம் போய் உபதேசம் செய்வேன்.*

*பகவான்: என்ன உபதேசம்?*

*லக்ஷ்மீ: அவனிடம் இப்படிப் பேசுவேன். ராவண! என்னைக் கொண்டு போய் என் பிரபுவிடம் விட்டுவிடு. நான் துக்கப்பட்டால் அவர் சகிக்மாட்டார்.*

***ஸாது$_4$ ராவண ராமேண***

***மாம் ஸமாநய து: கித$_2$ாம்***

*அவருடன் உனக்குப் பகை இருந்தாலும் மனதிற்குள்ளே நட்பு இல்லா விட்டாலும் மேலுக்காக - காரியார்த்தமாகவாவது அவரிடம் ''நான் உங்கள் நண்பன்'' என்று சொல். - நான் சொல்வதைக் கேள். நீ கோரமாக அவர் கையால் அடிபட்டுச் சாக வேண்டாமென்று நினைத்தால் இப்படிச் செய். நீ த்ரிலோகாதிபதி என்ற பதவியைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.*

***மித்ரம் ஔபயிகம் கர்த்தும்***

***ராம: ஸ்தாநம் பரீப்ஸதா |***

***வ$_4$தம் சாநிச்ச$_2$தா கே$_4$ாரம்***

*நான் சொல்கிறபடி செய். அவர் தர்மாத்மா சரணாகதவத்ஸலன் அவரோடு ஸ்னேகம் கொண்டாடு.*

*நீ உயிரோடு இருப்பாய்.*

***விதி$_3$த: ஸஹி த$_4$ர்மஜ்ஞ:***

***ச$_+$ரணாக$_3$த வத்ஸல: |***

***தேந மைத்ரீ ப$_4$வது தே***

***யதி$_3$ஜீவிதுமிச்ச$_2$ஸி ||***

*இப்படியெல்லாம் சொல்லி அவனை கோர வதத்திலிருந்து காப்பாற்றி விடுகிறேன்!*

*பகவான்: நீ சொல்கிறது கேட்கிறதுக்கு எனக்கு நன்றாக இருக்கிறது. அவன் கேட்க வேண்டுமே! கேட்கமாட்டான்.*

*அவசியமில்லாமல் நீ கஷ்டப்படுவாய் நீ வர வேண்டாம்.*

*இப்படியெல்லாம் சொன்னாரே!*

*நான் கேட்கவில்லையே!*

*ராவணன் எவ்வளவு கொடியவன்! அவனுடைய நாக்கிலே எவ்வளவு அக்கிரமமான சொற்களைக் கேட்கும்படி ஆயிற்றே! பிரபு சொன்னதைக் கேட்காமல் மாநிட ஜன்மம் ஏன் எடுத்தேன்! சீ இது பொல்லாத ஜன்மம். இதைவிட்டுவிடலாம் - என்று நினைத்தால் அவருடைய உயிரை என்னிடம் வைத்திருக்கிறாரே! இப்படி மாட்டிக் கொண்டுவிட்டேனே. இஷ்டப்படி வாழ்வை முடித்துக் கொள்ள முடியவில்லையே!*

***தி$_4$க$_3$ஸ்து க$_2$லு மாநுஷ்யம்***

***தி$_4$க$_4$ஸ்து பரவச்$_+$யதாம் |***

***ந ச$_4$க்யம் யத் பரித்யக்தும்***

***ஆத்ம ச்ச$_2$ந்தேந ஜீவிதம் ||***

*இப்போது பிரபுவும் தம்பியும் எங்கேயெல்லாமோ தேடுகிறார்களோ? எனக்கு என்ன ஆயிற்று என்றே தெரியுமோ! தெரியாதோ!*

*ஜடாயுவைப் பார்த்திருக்க மாட்டாரா! அவர் தேடி வந்து பார்க்கின்ற வரையில் - ஜடாயு உயிரோடு இருந்திருப்பாரா? உயிரோடு இருந்தால் ராவணன் கொண்டு போய் விட்டான் என்று சொல்லியிருப்பாரே!*

*ஒரு மலை முகட்டில் சில வாநரங்கள் இருந்த இடத்தில் ஆபரணங்களைக் கழற்றி முந்தானையில் மூட்டைக்கட்டிப் போட்டோமே! அது அவர்கள் கையில் கிடைத்ததோ இல்லையோ!*

*கிடைத்தால் தான் - என்ன? அவர்கள் இது யாருடையதோ - என்று தேடிக் கொண்டா போவார்கள்? பிரபு அவர்கள் வழியில் வர வேண்டுமே!*

*போதாத காலம் இப்படியெல்லாம் படுத்தும் போது - இவையெல்லாம் எப்படி நடக்கும்?*

*பிரபுவும் தேடித் தேடி - களைத்துப் போவார். சாப்பிடுவாரோ? சாப்பிடத்தான் பிடிக்குமோ? பட்டினி கிடந்து - எங்கே மயக்க முற்றுக் கிடக்கிறாரோ!*

*என்னைத் தேடிக் கண்டுபிடிப்பது என்பது அவருக்கு சாத்யமே இல்லையே! என் செய்வேன்?*

*இத்தனை நாட்கள் பிரபு வந்திடுவார் என்ற நம்பிக் கொண்டே இருந்தோமே? இந்த ராவணன் என்னைக் கொல்வதற்காக உடை வாளை உறுவி விட்டானே!*

*அடுத்த கணம் வெட்டியிருப்பானே!*

*பாவம் - தான்யமாலினி - என்னைப் போல ஒரு அபலை - அவளுக்கு அவனே- கொல்லத் துணிந்தவனைத் தடுக்க வேண்டும் - என்று எப்படித் துணிவு வந்தது ?*

*அநஸூயா தேவி கொடுத்த முந்தானையில் முடிந்து கொண்டிருக்கிற மஞ்சள் கிழங்கு காப்பாற்றியிருக்கிறது.*

*என்னவோ - ஒரு மாதம் அவன் - எனக்கு ஆயுள் பிச்சை கொடுத்திருக்கிறான்.*

*பதிவிரதத்தினால் எனக்கு இருந்த ஆயுள் இன்று அவன் உடைவாளை உருவிய போதே முடிந்துவிட்டது*

*இனி அந்தப் பாவி கொடுத்த ஆயுள் பிச்சையில் வாழத்தான் வேண்டுமா?*

*என் பர்த்தாவுக்கு உதவாத ஆயுள் சத்ரு போட்ட பிச்சை எனக்கு எதற்கு?*

*பிரபு வரப்போவதில்லை. காத்திருப்பதால் பயனில்லை.*

*எழுந்திருந்தாள். முழங்கால் வரை நீண்டு தொங்கிய கூந்தலை முறுக்கினாள். கழுத்திலே சுற்றிக் கொண்டு - மீதத்தை - இடது கையாலே மேலே தூக்கி ஒரு கிளையைப் பிடித்துவிட்டாள்.*

*ஹநுமான் மரக்கிளையில் உட்கார்ந்திருந்தவர் அசையாமல் இதைப்பார்க்கிறார். நெருக்கடி முற்றுகிறதே - கணம் தப்பினால் என்ன ஆகும்?*

*வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்த அவர் அறியாமல் மெல்லிய குரலில் முனகிய ராம நாமம் வெளிவந்துவிட்டது.*

*இந்த இனிய நாமம் ஸீதாதேவியின் காதில் புகுந்தது.*

*ராம! ராம! ராம! ப்ரபோ பதியின் பெயரைச் சொல்லக் கூடாது. பதிவிரதை - என்ற சாஸ்திரம் நினைவுக்கு வந்தது. இப்போது சாஸ்திரமாவது மண்ணாங்கட்டியாவது? இப்போது என்னிடம் உள்ள ஒரே பிடிப்பு ராம நாமம் தான். சாகும் போது அவருடைய நினைவு மறக்கக்கூடாது.*

***ராமேதிராமேதிஸதை$_3$வ புத்$_3$த்$_4$யா***

***விசிந்த்ய வாச$_1$ா ப்$_3$ருவதீதமேவ***

***ராமா ராமா***

*ஸகல ஜீவர்களுக்கும் ஹிதமான ராம ராம ராம*

***ஹாஜீவலோகஸ்ய ஹித: ப்ரியச்$_+$ச***

*பத்நீ என்ற முறையில் நான் தங்களை அழைக்கவில்லை. ஜீவ கோடிகளில் ஒருத்தி - என்ற முறையில் தங்கள் ராம நாமத்தை உச்சரிக்கிறேன்.*

*அந்த்ய காலத்தில் உதவ - என் வாக்கில் வந்துவிட்டதே - ராம ராமராம ராம*

***முறுக்கின கூந்தலைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்திருந்த இடது கை துடித்தது.***

பொல பொல வென்று கண்ணீர் வடிந்தது. இடது கண் படபட வென்று அடித்துக் கொண்டது.

மீன்துள்ளி மேலே விழுந்ததால் - குளத்தில் உள்ள தாமரை மலரிதழ் போல இடது கண்- படபட வென்று அடித்துக் கொண்டது.

எம்பி நின்று கொண்டிருந்த இடது தொடை துடித்தது. மேலே சென்ற கை தளர்ந்தது. கூந்தலுடன் கீழே தாழ்ந்தது.

இவையெல்லாம் எப்படி நடந்தன? என்ன காரணம்? அந்தராத்மாவில் நிறைந்துள்ள ராம நாமம் துடித்தெழுந்து இத்தனையையும் சாதித்துவிட்டது.

வால்மீகி பகவான் அழுத்தமாக இந்தக் கருத்தை வெளியிடுகிறார்.

**ஸாராமஸங்கீர்த்தன வீத சே₊ாகா**

இன்றும் அவள் ராமனை அடைந்து விடவில்லை. ஆனால் சோகம் மாயமாகி விட்டது. தைரியம் வந்து விட்டது.இடுப்பிலிருந்து நழுவிய சேலையை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். இதுவும் ஒரு சுபசகுனம்.

ராம நாமம் தாரகநாம என்ற தன் புகழைக் காப்பாற்றிக் கொண்டது.

தாபமெல்லாம் நீங்கியது. உடலிலே புத்துணர்ச்சி மிளிர்ந்தது.

**சாந்த ஜ்வரா ஹர்ஷவிவிருத்த ஸத்த்வா**

*ஹநுமான் ''அப்பாடா!'' என்றுபெருமூச்சுவிட்டார்.*

*என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து - நாம் அந்தக் கணத்தில் சாதிக்க முடியாத காரியத்தை - சாதிக்காமல் விட்டிருந்தால் ஸர்வநாசம் ஏற்பட்டிருக்கக் கூடிய - ஒரு காரியத்தை ராம நாமம் சாதித்துவிட்டது.*

*இனித் தாமதிக்கக்கூடாது. இன்னும் தேவீக்குப் படபடப்பு அடங்கவில்லை. தவறாக நான் ஒரு அடி எடுத்து வைத்தாலும் காரியம் கெட்டுவிடும்.*

*சரியாக என்ன செய்வது? புரியவில்லையே - ஒன்றும் புரியாவிட்டால் - நாம் செய்கிற காரியத்தைச் செய்து விடுவோம். ராம கதை கூறுவோம். மரத்தில் இருந்த படியே கானம் பண்ண ஆரம்பித்தார்.*

*ராஜா த$_3$சரதே$_2$ா நாம*
*ரத$_2$ குஞ்ஜர வாஜிமாந்*

***புண்ய சீலோ மஹாகீர்த்தி : ............***

***சக்ரவர்த்தி குலே ஜாத: ..................***

***ராமோ நாம விசே$_+$ஷஜ்ஞ: .............***
***ரக்ஷிதா ஜீவலோகஸ்ய .............***

***ஸமார்க மாணஸ் தாம் தே$_3$வீம் ..................***

***யத$_2$ா ரூபாம் யத$_2$ாவர்ணாம்...............***

***நூந மாஸாதி$_3$தா மயா ||***

*எந்த ராம பத்னியைத் தேடி வந்தேனோ அவள் எனக்கு தர்சனம் கொடுத்துவிட்டாள்.*

*ஸீதை இத்தனையையும் காது குளிரக் கேட்டாள். ஹநுமான் சொல்லிமுடித்து இரண்டு நிமிஷங்கள் - கண்களைத் திறக்கவே இல்லை.*

மெதுவாகக் கண்திறந்து நாற்புறமும் பார்த்தாள். அவளுடைய தலைமுடி முறுக்குவிட்டுப் போய் முகத்தை மறைத்தது. அதை விலக்கிக் கொண்டு முகத்தைத் தூக்கி பயந்து கொண்டே மேலே பார்த்தாள்.

**ஸுகேசீ$_+$ கேச$_+$ஸம்வ்ருதம்**

**உந்நம்ய வத$_3$ நம் பீ$_4$ரு :**

*(இந்த ஸந்தர்ப்பத்தை - துளஸீ தாஸர் சற்றுமாற்றி அழகாக வர்ணிக்கிறார்.)*

நம்பிக்கை இழந்த ஸீதாதேவி - தனக்கு அநுகூலமான த்ரிஜடை என்ற அரக்கியிடம் ''எனக்கு ஒரு கரண்டி தணல் கொண்டு வாயேன்'' என்று கேட்டாள்.

த்ரிஜடை இரவு வேளையில் எவரும் தணல் கொடுக்க மாட்டார்கள்'' என்று சொல்லி நகர்ந்து விட்டாள். ஒரு கரண்டி நெருப்புக் கூட உதவுவாரில்லையே என்று வருந்தினாளாம்.

கையை விரித்தாளாம். அவளுடைய உள்ளம் வேண்டிய படி கையில் தணல் வீழ்ந்ததாம். ஆச்சரியமாகப் பார்த்தாளாம். அது மாணிக்கக் கற்களினால் ராம நாமம் பதிக்கப்பட்ட ராமநாம மோதிரமாம். ஆகா! அநஸூயா அம்மா கொடுத்த மோதிரமல்லவா? ஆர்வத்தோடு அதை முலைகளிடையே அழுத்திப் பதித்துக் கொண்டாளாம். இதிலே ஒர் அத்புதரஸம்)

ஹநுமான் கீழே இறங்கினார். தேவியிடம் சுருக்கமாகச் சொன்ன ராம கதையை விஸ்தாரமாகச் சொன்னார். கேட்க நன்றாகத்தான் இருந்தது.

''ஆனால் ராவணணின் தற்காப்பு மிகுந்த கோட்டையில் இப்படி ஒரு குரங்கு புகுந்து - ஹிதமாகக் கதை சொல்கின்ற தென்றால் அது ராவணனுடைய மாயவித்தையில் ஒன்று - என்று நினைத்தாள்.

ஸத்யமான - தனக்குப் பிடித்தமான - ராமகதையைக் காது குளிரக் கேட்டும் கூட சொன்னவனை மாயாவி என்று

*நினைக்க வேண்டுமானால் தேவியின் உள்ளத்தில் ராவண மாயையைப் பற்றி எத்தனை அழுத்தமாக கற்பனைகள் இருக்க வேண்டும்?*

*ஹநுமானே! நீ ராமனைப் பார்த்திருக்கிறாயா?*

*ஹநுமான் : தேவி என்ன இப்படிக் கேட்டுவிட்டீர்கள்? நான் இது வரை சொன்னதெல்லாம் பொய்யா?*

*ஸீதை : அப்படியல்ல. பிரபுவின் சரிதம் எல்லாருக்கும் தெரியும். அந்தக் கதையை நீ சொன்னதற்காக உன்னை எப்படி நம்ப முடியும்.?*

*ஹநுமான் : அதுவும் சரிதான். நான் பிரபுவோடு - அணுக்கத் தொண்டனாக கைங்கர்யம் செய்து வருகிறேன் அம்மா?*

*ஸீதை: அப்படியானால் அவர் எப்படி இருப்பார்? அங்க அடையாளங்களைச் சொல்லு பார்க்கலாம்.*

*ஹநுமான் குபீரென்று குதித்து எழுந்தார். பத்தாவது வகுப்பு மாணவன் - பரீட்சைஹாலில் - கேள்வித் தாளைப் பெற்று படித்து தனக்கு நன்றாகத் தெரிந்த விஷயங்களிலேயே கேள்விகள் - வந்திருக்கின்றன என்று கண்டு எப்படிக் குதுஹாலம் அடைவானோ அப்படியானார்.*

*ஹநுமான்:- நீங்களே நான் நன்கறிந்த விஷயங்களில் அல்லவா பரீட்சை **வைத்து** விட்டீர்கள்.*

***ஜாநதீ ப$_4$த தி$_3$ஷ்டயாமாம்***

***வைதே$_3$ஹிபரிப்ருச்ச$_2$ஸி***

*ராமனுடைய புகழ் பெற்ற கல்யாண குணங்களை எடுத்துச் சொன்னார்.*

*ஸீதை: ''இவை தான் எல்லோருக்கும் தெரியுமே! புதிதாக என்ன சொல்லிவிட்டாய்?*

*ஹநுமான் : ''அப்படியா? சொல்கிறேன் கேளுங்கள் என்று ராமனுடைய திருமேனிஅங்கலாவண்யங்களை யெல்லாம் - அந்தரங்க லட்சணங்களை யெல்லாம் மூன்று நான்கு என்று அடுக்கடுக்காகச் சொன்னார்.*

*தேவீ மூக்கின் மேல் விரல் வைத்தாள். ஏனெனில் அவள் ஒருத்திக்கு மட்டுமே தெரியும், சில குறிகள் எட்டநின்று பார்ப்பவர்களுக்குத் தெரியாது.*

*அந்தரங்கத் தொண்டனாக கைங்கர்யம் செய்கின்ற இவனுக்கும் தெரிந்து இருக்கிறது - என்று ஸந்தோஷப்பட்டாள். ஹநுமான் வணங்கினார். தேவி ஆசீர்வதித்தாள். நீ ராமனுடையவே தூதனாகவே வந்திருந்தால் உனக்கு மங்களம் உண்டாகட்டும்.*

***யதி$_3$ ராமஸ்ய தூ$_3$தஸ்த்வம்***

***ஆக$_3$தோ - ப$_3$த்ரமஸ்து தே।***

*ஸீதை: ஹநுமானே! பிரபுவை நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாய். அவர் தான் உன்னை அனுப்பினாரா? அவர் உன்னைத் தான் அனுப்பினார் அல்லவா? அப்படியானால் உனக்கு ஸர்வமங்களம் உண்டாகட்டும்.*

*ஹநுமானுக்குத் திக்கென்றது இன்னும் ஸந்தேஹமா? அப்போது தான் கடைவாயில் அடக்கிக் கொண்டிருந்த மோதிரம் வெளிப்பட்டது. அதைக் கையில் எடுத்தார். மாற்றுத் துணியினால் அதை நன்றாகத் துடைத்தார்.*

***ராம -ராம என்ற சொல்லி புண்யாஹவாசநம் செய்தார்.***

*கண்களில் ஒற்றிக் கொண்டார். மறுபடியும் ஹநுமான் தேவியை நம்ப வைப்பதற்காக அவள் நம்பக்கூடிய வாக்யம் பேசினார்.*

***பூ$_4$ய ஏவ மஹாதேஜா***

***ஹநுமான் மாருதாத்மஜ:***

***அப்$_3$ரவீத் ப்ரச்$_+$ரிதம் வாக்யம்***

***ஸீதா ப்ரத்யய காரணாத்***

*''அம்மா நான் வாநரனே தான். மாயாவி வடிவம் கொண்ட அரக்கனல்ல.*

*ராமனுடையவே தூதனே தான். இதோ பாருங்கள்! ராம நாம லச்சினையோடு கூடிய மோதிரம்'' - என்று உள்ளங்கையில் வைத்துக் கொண்டு நீட்டினார்.*

*நமது ப்ரபு மிகவும் முன்யோஜனை உள்ள புத்திசாலி அம்மா! நீங்கள் லேசில் என்னை நம்ப மாட்டீர்கள் என்று தெரிந்து அடையாளம் மோதிரம் கொடுத்தனுப்பியிருக்கிறார் அம்மா.*

***வாநரோ ऽஹம் மஹா ப$_4$ாகே$_4$க***

***தூதோ ராமஸ்ய தீ$_4$மத: |***

***ராமநாமாங்கிதம் சே$_1$த$_3$ம்***

***பச்$_+$ய தே$_3$வ்யங்குளீயகம் ||***

*ஹநுமானின் உள்ளங்கையில் இருந்த மோதிரத்தை ஆர்வத்துடன் எடுத்துக் கொண்டாள். அதைக் கண்ணாரக் கண்டாள். மோதிரத்தை மட்டுமா கண்டாள்? பர்த்தாவினுடைய அந்த மோதிரவிரலையே தீண்டிவிட்டாள். விரலை மட்டுமா? அந்த திவ்யமங்களத் திருமேனியையே கட்டிக் கொண்டுவிட்டாள். ஜாநகீ பேராநந்தமடைந்தாள்.*

***க்$_3$ருஹீத்வா ப்ரேக்ஷமாணாஸா***

***ப$_4$ர்து : கரவிபூஷணம்***

***ப$_4$ர்த்தாரமிவஸம்ப்ராப்தா***

***ஜாநகீ முதி$_3$தா ऽ ப$_4$வத்***

*''அம்மா! நான் கூட - உங்களைப் பார்த்து - நான் ராம தூதன் வந்திருக்கிறேன் - என்று சொல்லிவிட்டால் பரபரப்போடு என்னை நம்பிவிடுவீர்கள் - என்று நினைத்தேன்.*

*இப்பொழுது தான் தெரிகிறது. என்ன கஷ்டம் வந்தாலும் புது ஆசாமிகளிடம் ஏமாந்து விட மாட்டீர்கள்.*

இது ஒன்று. மற்றொன்று கூறுகிறேன். இந்த தைவீக சக்தி வாய்ந்த இந்த ராம நாம மோதிரம் - தானே காந்தம் போல் என்னை இழுத்துக் கொண்டு வந்து உங்களிடம் சேர்த்திருக்கிறது''.

இவையெல்லாம் தேவியின் காதுகளில் விழவே இல்லை. அவள் பரவசத்திலிருந்து மீள்வதற்கே வெகு நேரமாயிற்று.

மெய் சிலிர்த்து குப்பென்று பூக்கின்ற குமுதப்பூ போல முகம் மலர்ந்தது. தேஜோமயமாக தேவி காட்சியளித்தாள். ''ஹநுமந்தா! நீ மஹா பராக்ரம முடையவனப்பா'' மிகவும் கெட்டிக்காரன். நீ பேரறிவாளன்.

**விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்த$_2$ஸ்த்வம்**

**ப்ராஜ்ஞஸ்த்வம் வாநரோத்தம।**

(இந்த ச்லோகத்தின் ஆழ்ந்த கருத்துக்களை முன்னொரு அத்யாயத்தில் படித்திருக்கலாம்)

என்று ஹநுமானைக் கொண்டாடினாள். மேலும் ஸீதையும் ஹநுமானும் பேசியதெல்லாம் பாசமுள்ள தாயாரும் செல்லப்பிள்ளையும் குலவியது போல் வாத்ஸல்ய ரஸம் ததும்ப மூன்று ஸர்க்கங்கள் விளக்குகின்றன.

இத்தனை காலம் பர்த்தா எப்படியும் வந்து நம்மை மீட்டுவிடுவார் என்று நல்ல காலத்தைப் பொறுமையோடு எதிர் பார்த்திருந்த தேவிக்கு - ஹநுமான் வந்து ''பர்தாவை அடைந்து விடலாம்'' என்ற நம்பிக்கை புத்தொளி பெற்றவுடன் - பரபரப்பு அதிகமாகிவிட்டது.

ராவணன் ஒரு மாதம் தான் கெடு வைத்திருக்கிறான் என்பதும் அந்தப் பரபரப்புக்கு வேகம் ஊட்டியது. தேவி தன் பரபரப்பை ஹநுமானிடம் வற்புறுத்தினாள்.

ஹநுமான் அத்தனை பரபரப்புக்கும் ஈடு கொடுக்கிறாப் போல பேசின அழகு நினைத்து நினைத்து ரஸிக்கத்தக்கது.

தேவியிடம் கேட்டு மூன்று அடையாளங்களை மிகுந்த முன் ஜாக்கிரதையுடன் பெறுகிறார்.

நான் செய்தி சொல்கிற மறுகணத்தில் - ப்ரபு உங்கள் முன்னே நிற்பார்.

ஓரே பாய்ச்சலில் வாநரர்கள் லங்கைக்கு வந்துவிழுவர்.

***ஏகோத்பாதேந தேலங்காம்***

***ஏஷ்யந்தி ஹரி யூத$_2$பா:***

வெகு சீக்கிரம் துயரக் கடலிலிருந்து நீங்கள் அக்கரை சேர்ந்துவிடுவீர்கள். கிளம்பட்டுமா?

***க்ஷிப்ரம்த்வம் தேவி சே$_4$ாகஸ்ய***

***பாரம் யாஸ்யஸி மைதி$_2$லி!***

இவ்வளவு ஹநுமானுடைய உறுதியையும் பார்த்த வைதேஹி கூறுகிறாள்.

''இன்னும் ஒரு நாள் என்னோடு இருந்துவிட்டுப் போயேன்'' எனக்கு ஆறுதலாக இருக்கும்.

***யதி$_3$ வாமந்யஸே வீர***
***வஸைகா ஹம் அரிந்தம***

தேவியின் தாய்ப்பாசத்தைக் கண்டு ஹநுமான் உள்ளம் நெகிழ்ந்து விட்டது.

தேவியின் இந்தத்தழுதழுப்பை மாற்ற வேண்டும் என்று தோன்றிவிட்டது ஹநுமானுக்கு. உடனே கூறினார்.

''அம்மா எனக்கு மிகவும் பசிக்கிறது?''

ஸீதை: இத்தனை நாழி உன்னை நிற்க வைத்தே பேசிவிட்டேனே! வந்தவுடன் உனக்கு நான் ஏதாவது உணவு கொடுத்திருக்க வேண்டாமா? அதோ பார். மரங்களில் பழுத்துத் தொங்குகின்றன - வேண்டிய மட்டும் எடுத்துச் சாப்பிடு.

இப்படிச் சொன்னவள் அடுத்து ஒரு வசனம் பேசுகிறாள்.

''ஹநுமந்தா! உனக்கே பசி வந்துவிட்டது. என் பிரபு - எத்தனை நாட்களாகப் பட்டினியோ? நீ இந்தப் பழங்களை சாப்பிடும் போது என் பிரபு சரணங்களை உள்ளத்தில் நிறுத்திக் கொள் - பக்தன் சாப்பிட்டால் பகவானுக்கு பசிதீரும்.

**ரகுபதி சரந ஹ்ருதய த$_4$ரி**

**தாத ம$_4$துர ப$_2$ல க$_2$ாஹூ ||**
துளஸீதாஸர்.

ஸீதாதேவியிடம் ஆசிபெற்று - ஹநுமான் அடுத்து செய்ய வேண்டியதை ஆலோசித்தார், தேவியைக் கண்டுபிடித்துச் செய்தி கொண்டு வரவேண்டும் - என்பது தான் ஸுக்ரீவ மஹாராஜாவின் ஆணை.

ஆனால் பிரபுவின் காரியம் ஸீதாதேவியை அடைவது. அதற்கு வேண்டிய தகவல்களைச் சேகரிப்பதும் நமது கடமை ஆகும்.

ராவணனிடம் போய்ச் சொல்லிப் பார்ப்போமே! ராம நாமக்ருபையை அவனிடம் வீசிப் பார்ப்போமே! அதன் மஹிமையினாலே அவனுடைய புத்தி தெளிந்து தானே கொண்டு வந்து கொடுப்பதாக அவன் கிளம்பினாலும் காரியம் கைகூடிவிடுமே!.

ஆகவே ராவணனைப் பேட்டி காண்பது அடுத்த காரியம்.

கோரிக்கைப் பத்திரம் எழுதிக் கொண்டு அவன் வாசலில் போய் நின்றால் -நம்மை உள்ளே விடுவார்களா?

அரசாங்கம் - என்றால் மக்களின் கோரிக்கைகளை வரவேற்றுக் கேட்டு நிறை வேற்றுவது தான் முக்கியக் கடமை ஆகும். அது தசரதராஜ்யத்தில் நடக்கலாம்.

இது ராவண தர்பார் அல்லவா? பணிவோடு பெடிஷன் கொடுப்பதற்கு உள்ளே விட மாட்டார்கள்.

அவர்கள் நம்மை அழைக்க வேண்டும். அதற்கு என்ன வழி? யோஜித்து உலகிலேயே முதன் முதல் திட்டம் போட்டவர் ஹநுமான் தான். நியாயமான கோரிக்கைகளைக் கூட அரசாங்கத்தினரிடம் நிறைவேற்றிக் கொள்வதற்குப் போராட்டம் தான் ஒரே வழி - என்று கண்டுபிடித்தவர், அகில உலக சரித்திரத்திலேயே முதன்முதல் கண்டுபிடித்தவர் ஹநுமான் தான்.

என்ன செய்தார்?

ராவணன் தன் அரசாட்சியில் மிகவும் முக்கியமான - நகர அலங்காரமாக அமைத்தது அசோகவனம் தான். பொழுது விடிவதற்குள்ளேயே செடிகளைச் சிதைத்து மரங்களை உலுக்கியே பெயர்த்துக் கால்வைக்க இடமில்லாமல் அலங்கோலமாக்கிவிட்டார்.

ஸீதை வாழ்கின்ற அசோகமரம் மட்டும் பிழைத்தது.

ராவணன் செய்தி கேட்டவன் அந்தச்சிறு குரங்கைப் பிடிக்கப் படையை அனுப்பினான்.

படைத்தலைவன் வந்து ஸீதாதேவியை மிரட்டினான்.

''உன்னுடன் பேசிற்றாமே! எங்கே அந்தக் குரங்கு?''

தேவி:

எனக்கு என்ன தெரியும்? உங்க ஊரிலே ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்து செய்திருக்கலாம். பாம்பின் பால் பாம்புக்குத் தானே தெரியும்? எனக்குத் தெரியாதே''

கூசாமல் பொய் சொன்னாள் தேவீ. ஓர் உயிரைக் காப்பாற்றுவதற்காகப் பொய் சொல்ல நேர்ந்தால் - அது பாபமானால் அந்தப்பாவத்தைச் செய்து உயிரைக் காப்பாற்றிவிட்டு அந்தப்பாவத்தின் பயனை அநுபவிப்பதே பெரும் புண்ணியம்.

நிர்கதியாக அரக்கரிடம் அகப்பட்டுக் கொண்ட எனக்கு வாழ்வில் நம்பிக்கை அளித்தான். அவனைக் காட்டிக் கொடுப்பது தான் உண்மையானால் அந்த உண்மை மிகக் கொடிய பாவம்.

அவனைப் பொய் சொல்லிக் காப்பாற்ற முடியுமானால், அது பாபமானால், அந்தப் பாவத்தின் பயனை வரவேற்று துயரை அநுபவிப்பதே மஹாபுண்யம் - என்று ஸித்தாந்தம் செய்து கொடுத்தவள் ஸீதாதேவி.

ஸாதாரணப் படைவீரர்கள் வந்து அழைத்தால் போவாரா ஹநுமான்? படைகள் படைத்தலைவர்கள் மந்திரிகுமாரர்கள் இளையயுவராஜா - ஊஹூம் இவர்கள் எல்லாம் போதாது - மூத்த குமாரன் இந்திரனை ஜயித்தவனே - என்னை அழைத்துப் போக வர வேண்டும்.

அவனும் வந்தான். பிரம்மாஸ்திரத்தினால் கட்டிவிட்டான்.

பிரம்மாஸ்திரத்திற்கு நாம் மதிப்பு கொடுக்க வேண்டும். கட்டுப்பட்டார் ஹநுமான்.

இந்த பிரம்மாஸஸ்திரத்துக்குக் கட்டுப்படாமல் முரண்டு பிடித்தால் - ராவணனே வருவான். வரட்டுமே!

சேசே! நமக்கு காரியம் நடக்க வேண்டும். அதைக் கசந்து முகராமல் நாஸூக்காகச் சாதித்தால் தான் அழகு.

அவனைப் போர்க்களத்துக்குக்கு இழுத்து அவனை மடக்கினால் அவன் வெகுண்டு தேவிக்கு ஏதாவது அபாயம் உண்டாக்கிவிடுவான். அவனை தர்பாரிலேயே சந்திப்போமே.

கயிற்றைக்கட்டி ஹநுமானை இழுத்துப் போனார்கள். அதிலும் திமிறிக் கொண்டு - முன்னூறு வீரர்கள் முக்கி இழுக்கும்படி செய்தார் ஹநுமான்.



## ராவண சந்திப்பு

*தர்பாரில் ராவணனைப் பார்த்தார். அடேயப்பா! - என்ன விமரிசை! என்ன அலங்காரம்? என்ன கெடுபிடி? மஹாவீரர்கள் எல்லோரும் தமது ஆஸனங்களில் அடங்கி ஒடுங்கி ராவணனையே கண்சிமிட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கின்ற கட்டுப்பாடு.*

*இந்திரன் வருணன் முதலிய தேவர்கள் கடைசி வரிசையில் கைகட்டி வாய் புதைத்து நிற்கின்ற கொடுமை.*

*இத்தனையையும் பார்த்த ஹநுமான் ஆச்சரியப்படவில்லை. அங்கலாய்த்தார் பரிதாபப்பட்டார்.*

*அடப்பாவி! இத்தனை பவிஷ¬வாய்ந்த நீ ஏனப்பா ஜாநகீ மாதாவிடம் அபசாரப்பட்டாய்? கொடிய அதர்மத்தைச் செய்துவிட்டாயே! இதைச் செய்யாமல் இருந்திருந்தால் இந்திரலோகம் ஆள்வாயே! உலகம் முழுவதும் பிரளயம் வந்து மூழ்கும் படியான கொடுமையைச் செய்துவிட்டாயே!*

***யத்$_3$ யத$_4$ர்மோ – ந பலவான்***
***ஸ்யாத$_3$யம் ராக்ஷஸேச்வர: |***
***அயம்ஹி உத்ஸஹதே க்ருத்$_4$த$_4$:***
***கர்த்தும் ஏகார்ணவம் ஜ$_3$கத் |***

*சபையில் மந்திரி கேள்வி கேட்டான்.*

*''பொய் சொன்னால் பிழைக்கமாட்டாய்''*

***அந்ருதம் வத$_3$தச் ச$_1$ாபி***

***துர்லப$_4$ம் தவ ஜீவிதம் |***

*ஹநுமான் பதில் சொன்னார்.*

*''அப்படிக் கேளுங்களையா! உண்மையைப் பேருண்மையை - சொல்லத்தான் வந்திருக்கிறேன்.*

*நான் தேவதூதனல்ல. நான் மாயக்குரங்கு அல்ல. ஜாதிக்குரங்கு.*

**ஜாதி ரேவ மமத்வேஷா**

**வாநரோ ऽஹம் இஹாகத: ।**

முக்கியமான காரியமாக வந்திருக்கிறேன். உங்கள் அரசனைச் சந்திக்க விரும்பினேன்.

அதற்கு ஒரே வழி. அசோக வனத்தை அழிப்பது - என்று தோன்றியது. அந்த யுக்தி பலித்துவிட்டது.

உங்கள் அரசாங்கத்தில் - விருந்தினரைக்கட்டி இழுத்து வருவது தான் முறை போலிருக்கிறது. அதற்கும் கட்டுப்பட்டேன்!

''ராக்ஷஸாதிபதி அவர்களே! எங்களுடைய மஹாராஜாதிராஜ ராஜகம்பீர சுக்ரீவமஹாராஜா அவர்கள் உங்களை நலம் விசாரித்தார். எங்கள் மூத்த மஹாராஜா வாலி உங்களைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்ட போது உங்கள் விலா எலும்பு முறிந்து விட்டதாமே! அது குணமாகிவிட்டதா? என்று கேட்டு வரச் சொன்னார்.

கோஸலபதி என்ன காரியம் செய்தாலும் அதை நேர்மையுடன் செய்து முடிப்பவர் ராமன். அவருடைய தாஸன் நான்.

**த$_3$ாஸோऽஹம் கோஸலேந்த்$_3$ரஸ்ய**

**ராமஸ்யாக்லிஷ்ட க$_3$ர்மண: ।**

அவருடைய மனைவியை எவனோ களவாடிக் கொண்டு போய்விட்டான். அவளைத் தேடி எங்கிருக்கிறாள் என்று தெரிந்து வா- என்று அனுப்பினார் என் ப்ரபு. எங்கேயெல்லாமோ தேடி விட்டு இங்கேயும் தேட வந்தேன்.

ஆச்சரியம் பாருங்கோ

''தேவியை - உங்கள் அசோகவனத்தில் கொண்டு எவனோ வைத்திருக்கிறான்.''

**ப்$_4$ரமதாச மயாத்$_3$ருஷ்டா**

**க்ருஹே தே ஜநகாத்மஜா ।**

உங்களுக்கு ஏன் இந்த வம்பு! ஓசைப்படாமல் பொருளை உடையவனிடம் கொண்டு சேர்த்துவிடுங்கள். அவள் காளராத்ரீ. அவள் இங்கிருந்தால் லங்கை முழுவதும் நாசமாகிவிடும்.

**காலராத்ரீதி தாம் வித்$_3$தி$_4$**
**ஸர்வலங்கா விநாசி$_+$நீம்:**

ராவணன் சபையைப் பார்த்தான். மந்திரிகள் அனைவரும் திடுக்கிட்டு திகைப்பில் மூழ்கி இருக்கிறார்கள்.

அவர்களுக்குத் தெரியாத ரகசியம் வெளி வந்துவிட்டது. அவர்களுடைய திகைப்பை அடக்குவது போல ராவணன் பேசினாள்.

''இந்த மாதிரி எத்தனையோ பெண்களைக் கொண்டு வந்திருக்கிறேன். அப்படித்தான் செய்வேன். என்ன வாயிற்று? எனக்கு மேலும் மேலும் புகழும் செல்வமும் செல்வாக்கும் வளர்ந்து கொண்டு தானே இருக்கிறது''

ஹநுமான் : ராவண! நீ இந்த ஊரின் அரசனாயிற்றே - என்று உன் குற்றத்தை மறைத்து - நாஸூக்காக உன்னிடம் பேசினேன்.

நீ இந்த மஹாபாபத்திலிருந்து வசைதூசி படாமல் தப்பிக்க வழி சொன்னேன். நீ கேட்கவில்லை. என்ன சொன்னாய்! இத்தனை பாவம் பண்ணிவிட்டு செல்வாக்கோடு நன்றாகத்தானே இருக்கிறேன் - என்றாயே - அதற்கு முடிவு காலம் வந்துவிட்டது.

நீ பரமேச்வர பக்தன். அவருக்கு பூஜை பண்ணிண புண்ணியம் இது வரை உன்னைக் காப்பாற்றி விட்டது.

**ப்ராப்தம் த$_4$ர்ம ப$_2$லம் தாவத்**
**ப$_4$வதாநாத்ரஸம் ச$_+$ய: ||**

இப்போது -தேவிக்களவு - என்ற மிகக் கொடிய பாபத்தைச் செய்துவிட்டாயே அது உன்னுடைய மிச்ச மீதிப் புண்ணியங்களையும் விழுங்கிவிட்டது.

*இந்தக் கொடிய பாபத்தின் பயனை அநுபவிக்க வேண்டிய தருணம் மிக நெருஙகிவிட்டது.*

***ப$_2$லம ஸ்யாபி அ$_4$தர்மஸ்ய***

***க்ஷிப்ரமேவ ப்ரபத்ஸ்யஸே |***

*பல தர்மங்களைச் செய்திருக்கலாம். பரமேச்வரனை உத்தேசித்து யாகங்கள் எல்லாம் பண்ணியிருக்கலாம். உன் கழுத்தை அறுத்து தலையை ஹோமம் பண்ணியிருக்கலாம். இவையெல்லாம் பரமேச்வரார்ப்பணம் - என்பதனால் இந்த கொடுமையான பாபகார்யங்கள் இந்தப் புண்யத்தில் கரைந்து விட்டன.*

***நநு த$_4$ர்மோபஸம்ஹாரம்***
***அத$_4$ர்ம ப$_2$ல ஸம்ஹிதம் |***
***ததே$_3$வ ப$_2$லமந்வேதி***
***த$_4$ர்மச்ச$_1$அத$_4$ர்ம நாசந: |***

*ஸீதைக்களவு - என்ற மஹாபாபத்தில் ஒரு புண்ணியமுமில்லை. ஆகவே இந்த மஹாபாபத்திலிருந்து நீ மீள வேண்டுமானால் தேவியைக் கொண்டு போய் பிரபுவிடம் ஸமர்ப்பித்துவிடு. இவளை உன்னால் ஜீர்ணிக்கவே முடியாது* ***நேயம் ஜரயிதும் ச$_+$க்யா.***

*பிடிவாதம் பிடித்து உன்னையும் உன் பரிவாரத்தையும் லங்கையையும் நாசத்திற்கு இலக்காக்காதே.*

***போ$_4$கா$_3$ராந் த$_3$ராரம்ச்$_+$சு லங்காம் ச$_1$***

***மாவி நாச$_+$ முபாநய |***

*பேரிடி தாக்கியது போல ஸபை அதிர்ந்து செயலற்றுக்கிடந்தது.*

*ராவணன் இந்த குரங்கைச் கொல்லுங்கள் என்று ஆணையிட்டான். வீபீஷணன் தடுத்தான்.*

*''தூதனைக் கொல்வதாவது? உங்கள் தைரியத்தை இவன் போய் சொன்னால் தானே ராமன் அறிந்து கொள்வார்''.*

''சரி, வாலுக்குத் தீயிட்டு ஊர்வலம் செய்யுங்கள்'' என்று சொன்னான்.

வாலில் தீயிட்டு ஊரைவிட்டு விரட்டுங்கள் - என்று ஆணையிட்டிருந்தால் -லங்கை பிழைத்திருக்கும்

அவனுடைய தலைவிதி ''ஊர்வலம் நடத்துங்கள் என்று ஆணையிட்டது.''

லங்கை பற்றி எரிந்தது. வாலைக் கடலில் நனைத்து தீயை அணைத்துக் கொண்டு கரை ஏறினார் ஹநுமான்.

''ஆஹா'' பதறினார் ஹநுமான். ''அம்மா என்ன ஆனாள்? ஐயோ! இத்தனை பெரிய தவறு செய்துவிட்டோமே!

**லங்காம் ப்ரத$_3$ஹதா காமம்**

**கிம்ஸ்வித் க்ருதமித$_3$ம் மயா |**

மனிதனுக்கு கோபத்தைக் காட்டிலும் கொடிய சத்ரு கிடையாது. ராவணனிடம் கோபம் இருந்தால் அவனையே வாலில் சுருட்டித் தரையில் மோதியிருக்கலாமே!

லங்கையில் தேவி இருக்கிறாளே! அவளை மறந்தோமே! அவள் போயிருந்தால் இனி எது மிஞ்சினால் என்ன? ப்ரபுவுக்குக் கொடிய கொடுமை இழைத்து விட்டோமே! ராம ராம ராம் என்று கதறினார்.

எங்கும் ஒரே கூச்சல். ஆகாயத்தில் பேரொலி.

''லங்கை அழிந்தது. ஜாநகீயும் அசோக மரமும் தப்பி ஜொலிக்கிறார்கள்.''

**த$_3$க்தேயம் நகரீலங்கா .............**

**ஜாநகீ நச$_1$ த$_3$க்$_3$தே$_4$தி ..........**

ஹநுமான் தலையில் அடித்துக் கொண்டார். எத்தனை பெரிய முட்டாள் நான். வாலில் தொற்றிய நெருப்பு ஊரெல்லாம் எரித்ததே. என்னைப் பொசுக்க வில்லையே?

என்னையே பொசுக்கவில்லை என்றால் தேவியைத் தீண்டுமோ? தேவி பிரபுவினிடம் கதறிப்ரார்த்தித்திருப்பாள்!

ப்ரபு என்னையும் தேவியையும் காப்பாற்றிவிட்டார். ராம! ராம இது தெரியவில்லையே எனக்கு.

தேவியிடம் திரும்பி வந்தார். ''அம்மா!தங்கள் க்ருபையால் வந்த காரியம் முழுதும் நிறைவேறிவிட்டது''.

''ஆமப்பா! எனக்கும் பயம் தெளிந்துவிட்டது. இனி ராவணன் என்னை எட்டிக் கூட பார்க்க மாட்டான். கிளம்பினால் உன் ஆவேசம் அவனைத் தடுக்கிவிடுமே! ஆனாலும் இங்கே ஒவ்வொர் நிமிஷமும் - என்னை நெருப்பாகவே தகிக்கும்.

ஹநுமான்: அப்படியானால் ஒன்று செய்கிறேனே! நான் வானரனுக்குரிய நாலுகால் பிராணியாக தரையில் கைஊன்றி நிற்கிறேன். என் முதுகில் ஏறிக் கொள்ளுங்கள். நீங்கள் ரா என்று ஆரம்பித்து மா என்று முடிப்பதற்குள் - பிரபுவின் ஸந்நிதியில் இறக்கிவிட்டுவிடுகிறேன்.

தேவீ கலகலவென்று வாய்விட்டுச் சிரித்தாள். ஜாநகீயின் கபடமற்ற குழந்தைத் தனமாக சிரிப்பைப் பார்த்தார். காதுகுளிரக் கேட்டார்.

முட்டிக்கால் போட்டு தரையில் உட்கார்ந்து கைகளை பூமியில் பதித்துவிட்டார்.

''உம் ஏறுங்கள்''

ஏறுவதா? உன் மீதா? நானா ஏற வேண்டுமா? எழுந்திரு. அது முடியாதப்பா. ராவணன் என்மீது கை வைத்துத் தூக்கிவிட்டான். அதே கணம் அவன் பொசுங்கிப் போயிருப்பான். ராம என்று கூச்சல் போட்டேன். ஐயோ! இவனுக்கு ஒன்றும் ஆகக்கூடாதே! ப்ரபுவினுடைய அநுமதியின்றி நான் செயல்படக் கூடாதே'' என்று துடித்துப் போனேன்.

*புராச$_1$ யத$_3$ஹம் வீர*

*ஸ்ப்ருஷ்டா க$_3$ாத்ரேஷு ரக்ஷஸா ।*

*அநீச$_+$ாகிம் கரிஷ்யாமி*

உன்னுடைய பல பாக்ரமம் தான் புகழ் பெற்றுவிட்டதே. உனக்கு இது ஸாத்யம் தான். ஆனால் பிரபுவந்து சத்ருவை ஸம்ஹாரம் செய்து என்னை மீட்டாரானால் அது அவருக்குப் பெருமை. அவசரப்பட்டு அவருக்குச் அந்தப் பெருமைகிட்டாது செய்ய நான் விரும்பவில்லை.

*பர்யாப்த : பரவீரக்ந*

*யச$_+$ஸ்யஸ் தே ப$_3$லோத$_3$ய: ।*

*தத்$_3$யத$_2$ா தஸ்ய விக்ராந்தம்*

*அநுரூபம்மஹாத்மந: ।*

*மாம் நயேத்$_3$ யதி$_3$காகுத்ஸ்த$_2$:*

*தத் தஸ்யஸத்$_3$ருச$_+$ம் ப$_4$வேத் ॥*

ஹநுமான் நினைத்தார். ''இவள் அல்லவா ராமனுக்கு ஏற்ற பெண்டாட்டி''.

தேவி சொன்னாள். அது இருக்கட்டும் இத்தனையூண்டு இருந்து கொண்டு என்னைத் தூக்குகிறேன் என்கிறாயே - உனக்கு என்ன தைரியம்?

*கத$_2$ம் வாऽல்பசரீரஸ்த்வம்*

*மாம் இதோ நேதும் இச்ச$_2$ஸி ।*

ஹநுமான் தலைகுனிந்தார். நம்மை இவ்வளவு குறைவாக மதிப்பிட்டுவிட்டாளே தேவி. நம்மை இத்தனையூண்டு என்று யாரும் சொன்னதில்லையே!

**நவம் பரிப$_4$வம் க்ருதம்.**

ஹநுமான் மரத்தடியிலிருந்து நகர்ந்தார். வெட்டவெளியில் நின்றார்.

*''அம்மா! என்னைப் பாருங்களேன்''*

*தேவி எழுந்திருந்தாள். மரத்தடியிலிருந்து முன்னே நகர்ந்து அண்ணாந்து பார்த்தாள் ஆகாயத்திலே நட்சத்திரகணங்கள் ஹநுமான் மீது உராய்வது போல் இருந்தது. மேரு மந்தர மலைகள் மீது கொழுந்துவிட்டு எரியும் தீபம் போல நெடிதுயர்ந்து நின்றார் மாருதி.*

***மேருமந்தர ஸங்காச:***

***ப$_4$ெளதீப்தாநலப்ரப: |***

***அக்$_3$ரதோவ்யவதஸ் தே$_2$ச***

***ஸீதாயா வாநரோத்தம: ||***

*அம்மா! ராவணனோடு கூட லங்கையையே - உங்களையும் சேர்த்து கொண்டு போகத் திறன் உண்டு.*

***லங்காம் இமாம் ஸநாத$_2$ாம்வா***

***நயிதும் ச$_+$க்தி ரஸ்திமே |***

*பிரபுவின் ஆணையில்லை. அதனால் தயங்கினேன். நீங்கள் சொன்னதும் உசிதமானது தான் என்று சொல்லி தேவியை வணங்கி விடைபெற்றார் ஹநுமான்.*

*மலைஉச்சிக்குச் சென்றார், பாய்ந்தார். வெகு தூரத்திலேயே அங்கதர் முதலானோர் ஹநுமான் பறந்து வருவதைப் பார்த்துவிட்டனர். அவருக்கு நாம் இருக்குமிடம் தெரியவேண்டுமே. அவரவர்கள் இடுப்புத் துணியை அவிழ்த்து - காற்று வாக்கில் வீசினர். சிலர் மரக்கிளைகளை ஒடித்துவீசினர்.*

***வாஸாம்ஸிச ப்ரச$_+$ாக$_2$ாச்$_+$ச***

***ஸமாவித்$_4$யந்த வாநரா: |***

*ஹநுமான் ஐம்மென்று அவர்களிடையே குதித்தார். பெரியவரான ஜாம்பவானை வீழ்ந்து வணங்கினார். ஒரு நிகழச்சிவிடாமல் வானரர்களுக்கு எடுத்துச் சொன்னார்.*

மதுவனத்தில் புகுந்து வெற்றிக் கொண்டாட்டம் கொண்டாடினார்கள் வாநரர்கள். வெற்றிநாயகன் - துளஸிச் செடி அருகே அமர்ந்து ராம நாம ஜபம் செய்தார். குடிமயக்கம் தெளிந்தவுடன் அவர்கள் ராமன்இருக்குமிடம் வந்தனர்.

தலைக்குத் தலை -ஸீதை இருக்கும் இடம் தெரிந்துவிட்டது - என்று கூறினார்கள்.

''விபரம் என்ன? கேட்டார் ராமன் தவிப்போடு. மற்றவர் பின் வாங்கினர். ஹநுமான் அருகே வந்து கைகட்டி வாய் புதைத்து ''கண்டேன் ஸீதையை'' இதன் விவரம் நூலின் முன் பாதியில் இரண்டு அத்யாயங்களில் சொல்லப்பட்டன.

ராமன்: நன்றிக்கடன் பெரும் சுமையாக உள்ளத்தை அழுத்த ஹநுமானை நெருங்கி அவரை வாரிக்கட்டி அணைத்தார். கூப்பின கைகளுடன் அணைப்பில் அடங்கிய ஹநுமான் பேராநந்தப்பேருவகையில் கரைந்தார்.



# நான்காவது பகுதி

# ஸ்ரீராம பட்டாபிஷேகம்

## 1.விபீஷண சரணாகதி

ஸ்ரீமத்ராமாயணத்தை அருளிய வால்மீகி பகவான் - **ஸீதாயாச்$_{4}$ சரிதம் மஹத் ச.** அதிலே ஸீதாதேவியின் பங்கு தான் சிறந்தது - என்று கணித்தார்.

இதிலே நினைத்து நினைத்து மாளாத விஷயம் - ஒன்று உண்டு என்றால் அது ஸீதாதேவியின் அசோகவன வாஸம் தான். அந்த மிகக் கொடிய சூழ்நிலையில் எப்படித்தான் உயிர் தரித்தாளோ - என்பது தான். அத்தகையை கொடுமையை அடியோடு அகற்றி தேவிக்குப் புத்துயிர் கொடுத்தவர் ஹநுமான். ஸுந்தரகாண்டத்தின் முடிவில் ஹநுமான் கூறுகிறார்.

வனவாசம் இடையூறுன்றி நிறைவேறி உங்களோடு ராகவனுக்குப்பட்டாபிஷேகம் நடக்கப் போவதை நீங்கள் காணத்தான் போகிறீர்கள் - என்று தேவிக்கு மநச்சாந்தி அளித்தார் ஹநுமான்.

**நிவ் ருத்தவந வாஸம் ச$_{1}$**

**த்வயா ஸார்த்த$_{4}$ம் அரிந்த$_{3}$மம் ।**

**அபிஷிக்தம் அயோத்$_{4}$யாயாம்**

**க்ஷிப்ரம் த்$_{3}$ரக்ஷ்யஸி ராக$_{4}$வம் ॥**

**ஜக$_{3}$ாம ச$_{+}$ாந்திம் மம மைதி$_{2}$லாத்மஜா ॥**

இங்கு மம - என்ற சொல் கருத்தாழமுடையது. ஹநுமான் இனிநடக்க வேண்டியதெல்லாவற்றிலும் தனக்குப் பெரிய பொறுப்பு உண்டு - என்று நினைப்பதை விநயத்துடன் தெரிவிக்கிறது அந்தச் சொல்

இவ்வாறு கூறுவார். சிமிழி வெங்கட்ராம சாஸ்திரிகள் தமது ராமாயணப்ரவசனத்தில். மேலும் கூறுவார். ஸுந்தர காண்டம் கடைசிச்லோகத்தை கவனிக்க வேண்டும். ஹநுமான் கூறுவார் ராம! அவளோ அளவற்ற சோகத்தினால் வாடிப் போய்விட்டார். அந்த சோகத்தைச் சொல்லிமுடிக்க முடியாது.

*தவ$_3$ாऽபி சோ கேந தத$_2$ாऽபி$_4$ பீடிதா*

அவளிடம் போய் உங்கள் சோகம் நன்றாகத் தெரிகிறது. நான் என்ன செய்ய முடியும்? வெறும் குரங்கு, அடிமை, என்னால் முடிந்தவரை சொல்லிப்பார்க்கிறேன் மேலே அவர் என்ன செய்கிறாரோ - செய்யட்டும் என்று அர்த்தமில்லாத விநயத்தை நான் காட்டினால் போதுமா? அவள் மனது தைரியமடையும் படி அழுத்தமாகப் பேசினேன்.

*அதீ$_3$நப$_4$ாஷிணா*

ராமன் வரத்தான் போகிறார். ராவணனைக் கூண்டோடு கைலாஸம் ஏற்றத்தான் போகிறார். உங்களைத் தன் மடி மீது அமர்த்திக்கொண்டு அயோத்திக்குப் போய் பட்டாபிஷேகம் செய்து கொள்ளத்தான் போகிறார் - என்றெல்லாம் ஆணையிட்டுச் சொல்லிவிட்டேன்.

இப்படி நல்ல வார்த்தை அவளுக்கு பிடித்தமானபடி சொன்னால் தானே நல்லது! நான் சொன்னதெல்லாம் நடக்குமோ நடக்காதோ! ஆனால் மங்கள வார்த்தைகள் தானே சொன்னேன். அதனால் தானே அவள் முகம் மலர்ந்தது.

*மம வாக்$_3$பி$_4$:சிவாபி$_4$ரிஷ்டாபி$_4$:*

*அபி$_4$ ப்ரஸாதி$_3$தா* அதனால் தான் அவள் அமைதி பெற்றாள்.

*ஜக$_3$ாம சாந்திம் மம மைதி$_3$லாத்மஜா*

இவ்வளவு தூரம் ஆணையிட்டுச் சொல்வதற்கு உனக்கு யார் அதிகாரம் கொடுத்தது? எனக்கு வேறு யோஜனை இருக்கிறது. அப்படிச் செய்தாலும் செய்வேன்

- நான் இப்படி அவளிடம் சபதம் செய்ய அநுமதித்தேனா? ஏன் இப்படிச் சபதம் பண்ணிவிட்டு வந்தாய்? - என்று என்னைக் கேட்காதீர்கள்.

என் ஹ்ருதயத்தில் நீங்கள் வீற்றிருக்கிறீர்கள். நானாக சிந்தித்து ஒரு வார்த்தை பேசவில்லை. அந்தராத்மா என்னை அப்படிப் பேச வைத்தது. நான் சொல்லிவிட்டு வந்து விட்டேன். அதை நிறைவேற்றவேண்டியது தங்கள் கையில். நீங்கள் எப்படிச் செய்தாலும் உங்களோடு கூட நின்று அயராது உழைக்க வேண்டியது - என் பொறுப்பு என்றார் ஹநுமான்.

அப்போது ஸ்ரீராமபிரான் சொன்னார். ''ஹநுமந்தா! இப்படியெல்லாம் பேசியது சரி தான். என் உள்ளத்தைத் தான் நீ விண்டுவைத்திருக்கிறாய். உன் சபதத்தை நிறைவேற்ற வேண்டியது என் பொறுப்பு. இதில் மாற்று யோஜனை கிடையாது.

சிமிழி சாஸ்திரிகள் மேலும் கூறுவார்கள். க்ருஷ்ணாவதாரத்தில் பகவான் அர்ஜுநனிடம் கூறுவார்.

அத்தை மகனே! நீ ஒரு பிரதிஜ்ஞை பண்ணு ''என் பக்தன் அழியமாட்டான்''

கௌந்தேய ப்ரதிஜாநீஹி
நமே ப$_4$க்த: ப்ரணச்$_+$யதி

அர்ஜுனன்:- அப்படி நீங்கள் அல்லவா பிரதிஞ்ஜை செய்ய வேண்டும். என்னை செய்யச் சொல்கிறீர்களே!

கண்ணன்:- சில சமயம் நான் என் பிரதிஜ்ஞையைக் காற்றில் பறக்க விட்டு விடுவேன். யுத்தத்தில் ஆயுதம் எடுக்கமாட்டேன் - என்று சபதம் செய்தேன். பீஷ்மரிடம் கோபம் வந்தது. உன் ரதத்திலிருந்து சக்ராயுதத்தை எடுத்துக் கொண்டு அவரை அடிப்பதற்கு கிளம்பிவிட்டேன். அப்போது நீ வந்து தடுத்தாய்! நினைவிருக்கிறதா? அது போல என் சபதத்தை நான் லட்சியம் பண்ணமாட்டேன்.

நீ மஹாவீரக்ஷத்ரியன் - எடுத்த சபதத்தைக் உயிர் போனாலும் கைவிடமாட்டாய் - என் பக்தன்

அழியமாட்டான் - என்று நீ எனக்காக சபதம் செய்துவிட்டால் உன் சபதத்தை நிறைவேற்றாமல் இருக்கமாட்டேன். பீஷ்மர் முதலில் நான் இந்தக் கண்ணனை ஆயுதம் எடுக்கவைக்கிறேன் - என துர்யோதனனிடம் சபதம் செய்தார். அந்த பீஷ்ம பிரதிஜ்ஞை செல்லாக்காசு ஆகக் கூடாதென்று - என் சபதத்தைக் கைவிட்டு அவருடைய சபதத்தை நிறைவேற்றினேன். அது போல் - என் பக்தன் அழியமாட்டாள் என்று நீ சபதம் செய்து விட்டால் அதை நிறைவேற்றியே தீருவேன் என்றார் கண்ணன்.

அது போல ராமனும் இங்கே ஹநுமானின் சபதம் - என்பதற்குப் பெரும் மதிப்புக் கொடுத்து - அதற்காக மேலே ஆகவேண்டிய கார்யங்களை ஆலோசித்தார்.

இது வரை சிமிழிசாஸ்திரிகளின் உரை.

சுக்ரீவமஹாராஜா சொன்னார். இனித் தாமதமெதற்கு? இன்றே கிளம்புவோம். படைகள் தயார்.

''ஜய ஸீதாராம'' என்று கர்ஜனை புரிந்தார் ஹநுமான்.

வாநரர்கள் ஒழுங்காக அணிவகுத்து நின்றார்கள் - படைத்தலைவர்கள் முன்னே செல்ல அடுக்கடுக்காகப் படைகள் பின் தொடர்ந்தன.

சுக்ரீவன் ஆணையிட்டார். பதினைந்து வயதுக்குட்பட்ட வாநரர்கள் எவரும் பின்னோடு வரக் கூடாது - பதினைந்து வயதுக்கு மேற்பட்ட ஆண்வாநரர்கள் எவரும் பின் தங்கக் கூடாது.

ஹநுமானின் காலைச் சுற்றிக் கொண்டு ஒரு ஐந்து வயது வாநரன். ஐந்தாறுமாதங்களாக அவர் அருகிலே இருக்கிறான்.

விஷமக்காரப்பையன். ஆனால் ஹநுமானிடம் அளவற்ற பற்றுதல் காரணமாக அவருடன் அடங்கி ஒடுங்கி நிற்பான். அவன் ''-நானும் உங்களோடு வருவேன் என்று மன்றாடினான்.''

ஹநுமான் ''நான் அநுமதிக்க முடியாது - மஹாராஜா உத்தரவு என்று தோளில் தட்டி அனுப்பினார்.

அவன் நேரே மஹாராஜாவிடம் போனான். வீரர்கள் இருபுறம் ஒதுங்கி வரிசையாக நிற்கின்ற இடைவெளியில் குட்டிக்கரணம் போட்டுக் கொண்டே வந்து மஹாராஜா அருகில் எழுந்து நின்று கை கூப்பினான்.

''என்னப்பா! என்ன விஷயம்?''

''நான் மாருதி தாஸன். கீலாலன் என்று பெயர். அவருடன் ராம நாமம் சொல்வேன். அவருக்குச் சின்ன உதவிகள் செய்வேன். நானும் அவரோடு வரக்கூடாது - என்று அவர் தடுக்கிறார்.''

''ஆமாம்! நீ வரக்கூடாது''

''அப்படின்னா அவருக்கு யார் சேவை செய் வா?

''அவருக்கு உன் சேவை தேவையில்லை''

அவன் அழ ஆரம்பித்தான்''

''நான் சேவை செய்யாட்டா. அவரே செஞ்சுக்க மாட்டாருங்க''

''அப்படி என்ன சேவை?''

''சொன்னால் சிரிப்பீங்க சொல்லமாட்டேன்''

''போடா''

''அவரோடு போகட்டும்களா?''

சுக்ரீவனுக்கு கவனம் வேறு இடத்தில் திரும்பியது - கீலாலன் ஹநுமானிடம் ஓடினான்.

''மஹாராஜா கிட்ட சொல்லிட்டேனே. அவர் போடா என்னுட்டாரே! நான் வந்துட்டேனே!''

ஹநுமானுக்கு அவனை அழைத்துப் போவதில் இஷ்டம் தான். கூடச் சேர்த்துக் கொண்டுவிட்டார்.

*(இந்தக் கீலாலன் - மஹாராஷ்ட்ரமஹாகவி போலாராம் மஹாராஜ் என்ற ஸந்யாஸியின் கற்பனை)*

*வாநரவீரர்களிடையே புகுந்து அவர்களுக்கெல்லாம் சுண்டைக்காய் இலந்தம் பழம் முதலியவற்றைப் பொறுக்கிக் கொண்டு போய் வழங்குவான். மரங்களில் ஏறி பாதாம் கொட்டைகள் மாவடுக்கள் - எல்லாம் பறித்து வழங்குவான். வாநரஸைன்யத்திற்கே இன்றியமையாத விளையாட்டுத் தோழனாகிவிட்டான்.*

*வாநரப்படை கடற்கரை வந்துவிட்டது. விசாலமாக இருந்தாலும் கடற்கரை போதவில்லை. சிறு மலைக்குன்றுகளில் - மலைத் தாழ்வரைகளிலும் தொத்திக் கொண்டிருந்தனர்.*

*கடற்கரையிலிருந்து சற்று உள்ளே பனங்காடுகளுக்கு அப்பால் சில வாழைமரங்கள் இருந்தன. அவற்றில் ஒன்றை தேர்ந்தெடுத்து - அதற்கு அடுத்த மலையிலிருந்து இரண்டு பாறைகளை தள்ளிக் கொண்டு வந்து - ஹநுமானும் கீலாலனும் தான் - அந்தப் பாறைகளை சமமாக தரையில் குழி தோண்டிப் புதைத்து களைப்பாற வஸதி செய்தனர். வாழை மரத்தை நட்டுவிட்டனர்.*

*பக்கத்தில் தரையை சமதளமாக்கி பத்தடி சதுரத்திற்கு முள் வேலி அமைத்தனர், லட்சுமணன் இவர்களுடைய ஒரு வசதியும் இல்லாத இடத்தில் இப்படி ஒரு வாஸஸ்தானம் தயாரிக்கலாம் - என்று ஹநுமானின் கற்பனை வளத்தை நினைத்து ஆச்சரியமடைந்தார்.*

*அன்றிரவு ஹநுமான் வாநரப்படைகளைத் திரட்டி ராம நாம கீர்த்தனம் செய்ய வைத்து - கடலின் ஆரவார ஓசையை முழுகவைத்தார்.*

*மறுநாள் காலை சுக்ரீவன் வாநரத்தலைவர்களைக் கூட்டினான். ராம பிரான் ஹநுமானுடனும் லட்சுமணனுடனும் ஸபைக்கு வந்து அமர்ந்தார்.*

*வாநரத் தோழர்களே! உங்கள் எல்லோரையும் காணும் போது என் மனது பூரிக்கிறது. உங்களில் ஒருவனான ஹநுமான்*

- செயற்கரிய - பிறரால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத பெரிய காரியத்தை சாதித்திருக்கிறார்.

**க்ருதம் ஹநுமதா கர்ம**

**ஸுமஹத் பு$_4$வி து$_3$ஷ்கரம்!**

**மநஸாऽபி யத$_3$ந்யேந**

**நச$_{+}$க்யம் த$_4$ரணீதலே ||**

ஒரு பணியாளனுக்கு ஒரு வேலை கொடுத்தால் அதுவும் செயற்கரிய பணியாக இருந்துவிட்டால் அந்தப் பணியாள் உற்சாகத்தோடும் அன்போடும் செய்து முடித்துவிட்டால் அவனை உலகம் புருஷோத்தமன் என்றே கொண்டாடும்.

**யோஹிப்ருத்ய: நியுக்த:ஸந்**

**ப$_4$ர்த்ரா கர்மணி து$_3$ஷ்கரே|**

**குர்யாத் ததநுராகேன**

**தமாஹு: புருஷோத்தமம்: ||**

ஹநுமான் அப்படி இந்த ஸாஹஸத்தைச் செய்துவிட்டார் என்பது மட்டுமல்ல அப்படி செயலாற்றும் போது காரியத்தைச் சாதிக்க வேண்டுமே என்று எவரிடமும் கைகட்டி உதவி கேட்டு நிற்கவில்லை.

**நச$_1$ாத்மா லகு$_4$தாம்நீத:**

அவன் செய்து முடித்த காரியம் எவ்வளவு உயர்ந்தது -

ஸீதாதேவி இருக்குமிடம் தேடி அவளைப்பார்த்தது மட்டுமல்லாமல் அவளுக்கு தைரியம் கூறி அவளைக் காவலில் வைத்திருக்கிறவர்கள் அவளைச் சீண்டாதவாறு உஷார்ப் படுத்தி வந்திருக்கிறானே!

இதனால் நானும் தம்பி லட்சுமணனும் எங்கள் ரகுவம்சமும் பழிக்கு ஆளாகாமல் புகழுக்குப் பாத்திரமாகிவிட்டோமே.

*அஹம்ச$_1$ ரகு$_4$வம்ச$_+$ச்$_+$ச*

*லக்ஷ்மணச்$_+$ச மஹாபல:*

*வைதேஹ்யா : தர்சநேநாத்$_3$ய*

*த$_4$ர்மத : பரிரக்ஷிதா:*

நாங்கள் செய்ய வேண்டிய கடமையில் தவறிவிட்டோமோ - என்ற இழுக்கு நேராமல் எமது கடமையை - பத்நியைக் காப்பது - என்ற பெரிய ஆற்ற முடியாத தர்மத்தை ஆற்றினதால் அவமானத்திலிருந்து விடுபட்டோம்.

இந்த தர்மத்தில் நாங்கள் ஈடேறாவிட்டால் ஏச்சுக்கும் கேலிக்கும் உள்ளாகிருயிப்போம்? அதை நினைத்தாலே குலை நடுங்குகிறது.

*தர்மத : பரிரக்ஷிதா:*

என்ற இரு சொற்களுக்கு இத்தனை பொருள் உண்டு.

எத்தனையோ வெள்ளம் வாநரர்கள் ப்ரபஞ்சம் முழுதும் தேடிக் கண்டுபிடிக்க முடியாத வஸ்துவை அல்லவா ஹநுமான் கண்டு பிடித்திருக்கிறார். கண்டேன் ஸீதையை என்ற இரு சிறு சொற்கள் - உடலிலே இருந்து கிளம்பிவிட்ட என் ஆவியை இழுத்துப் பிடித்துக் கொண்டு வந்து இந்த உடலில் மறுபடியும் புகுத்தியிருக்கின்றன.

இத்தகைய பேருபகாரத்திற்கு - நான் - நான் என்ன ? - ஸாக்ஷாத் நாராயணனே ஆகட்டும் - என்ன கைம்மாறு செய்துவிட முடியும்?

கைம்மாறு செய்துவிட நினைத்தாலும் என்ன செய்ய இருக்கின்றது? என் நாமத்தை முன்பே தன்னுடையதாக்கிக் கொண்டு விட்டான். அவன் உடலே ராம நாம மயம். அதற்குள்ளே என்னையே - என் ஆத்மாவையே செலுத்திவிடுகிறேனே!

என்று கூறி - ஹநுமானை இழுத்து இரு நீண்ட புஜங்களிடையே அடைத்து -கூப்பிய கரங்களுடன் கூசிக்

குறுகி நிற்கின்ற அந்த விநயமூர்த்தியை ஆலிங்கனம் செய்து கொண்டார்.

வானிலிருந்து தேவர்கள் பாரிஜாதப் பூமாரி பெய்து கொண்டே இருந்தனர். அந்தப்புஷ்பகிரியில் மறைந்துவிட்ட அந்த இரு மஹநீயத் திருமேனிகளும் கடற்கரையெங்கும் நறுமணம் வீசி அகண்ட வாநரக்கூட்டங்களின் மூக்குகளில் எல்லாம் புகுந்து அவர்களுடைய ஆத்மாவை சிலிர்க்க வைத்தன.

ஹநுமானுடைய திவ்யசரிதத்தில் இந்த நிகழ்ச்சிக்கு ஈடான - இதற்கு மேலான சிறந்த நிகழ்ச்சி நடைபெறவில்லை.

**க்ரீதோ஽ஹம் த்வயா மாருதே -**

என்ற கீர்த்தனத்தில் மஹாநுபாவரான ஸ்ரீஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் மிக ஸ்வாரஸ்யமாக அமைத்திருக்கிறார்.

அமைதி அடங்க வெகுநேரம் ஆயிற்று. மேலும் பேசினார்.

இத்தனை பெருமையும் உங்களைப் போன்ற வாநரக்குலத்தையே சாரும். ஹநுமான் எழுப்பியிருக்கின்ற ஆவேசத்தை நீங்கள் எல்லோரும் ஏற்று - நடக்க வேண்டிய - மிகச்சிக்கலான பணியை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்.

அடுத்து வாநரப்படை கடலைக்கடக்க வேண்டுமே! என்ன வழி?

**ஸமுத்ர பாரக$_3$மநே**

**ஹரீணாம் கிமிவ உத்தரம்**

ஸுக்ரீவமஹாராஜா பேச எழுந்தார் ''ப்ரபோ! இதற்கென்ன இப்படிக் கவலைப்படுகிறீர்கள்! பாமரன் போல நீங்கள் கவலைப்படலாமா?

**கிம் த்வம் ஸந்தப்யஸே வீர**

**யத$_2$ா஽ந்ய : ப்ராக்ருத: த$_2$தா ||**

கடலின் மீது பாலம் கட்டுங்கள். வாநரப்படை அதன் மீது சென்று நானே ஸீதையை என் பராக்ரமத்தினால் கொண்டு வருவேன்.

**ஸேதுர் ப$_3$த்த$_4$: ஸமுத்ரே சேத்**

**யாவல்லங்காஸமீபத:।**

**ஹதம் ச$_1$ ராவணம் யு$_3$த்தே$_4$**

**த$_3$ர்ச$_+$நாத் உபதாரய**

நீங்கள் அணையைக் கட்ட வேண்டியது. அடுத்த கணம் ராவண வதத்தை - நீங்கள் கண்ணால் பார்க்கப் போகிறீர்கள். லட்சுமணனுக்குச் சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டார்.

ராமன்: அணையை எப்படிக் கட்டுவது?

சுக்ரீவன்: இதற்கெல்லாம் அழாதீர்கள் இந்த சோகமிருக்கிறதே. அது பராக்ரமத்தைக் குலைத்துவிடும். அது ஒன்றே மனுஷ்யனை எல்லாவிதத்திலும் அழித்துவிடும்.

**புருஷஸ்ய ஹி லோகேஸ்மிந்**

**சோக: சௌர்யா பகர்ஷண : ।**

சோகத்தை விடுங்கள். ரோஷத்தை மேற் கொள்ளுங்கள்.

**தத்அலம் சே$_+$ாகம் ஆலம்ப்$_3$ய**

**க்ரோதம் ஆலம்ப பூ$_4$பதே।**

ராமன்: யாரிடம் ரோஷத்தைக் காட்டுவது?

சுக்ரீவனிடம் பதில் இல்லை.

ராமன் ஹநுமானிடம் திரும்பினார்.

''ஹநுமந்தா! லங்கையின் அமைப்பு அதன் பாதுகாப்பு அரக்கர் படையின் பலம் என்ன? ராவணனின் பலஹீனம் என்ன?

ஹநுமான் விஸ்தாரமாக எடுத்துச் சொன்னார். நுணுக்கமாகவும் அவசியம் எப்போதும் கவனத்தில் கொள்ள

வேண்டியவற்றையெல்லாம் ஹநுமான் கூறினார். சபை கலைந்தது. ராமன் தனிமையில் அமர்ந்திருந்தார். லட்சுமணன் அம்புகளை எடுத்துப் பாறையில் கூர் தீட்டிக் கொண்டிருந்தார்.

''கடற்கரை வந்து விட்டோம். கடல் தாண்டினால் லங்கை. அங்கே ஸீதை.

''ஜாநகீ இதோ வந்துவிட்டேன் கடலுக்குப் பாலம் கட்டி உடனே தாண்டி லங்கைக்கு வந்து விடுவோம் .அது வரை பொறுத்துக் கொள் அம்மா!''

ஜிலீரென்று தென்றல் காற்று வீசியது. ராமன் உடல்சிலிர்த்தது. லங்கையிலிருந்து தேவியே வந்து அணைத்துக் கொண்டாற் போலே இருந்தது.

மெல்லிய பூங்காற்றே அசோக வனத்திலே உள்ள தேவியை சேவித்து விட்டு வந்து அதே நறுமணத்தை - என் மீது வீசுகிறாயா இன்னொரு தடவை வீசு பார்க்கலாம் .

**வாஹி வாத யத : காந்தா**

**தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருச+**

ஆஹா! உத்தரீயத்தை எடுத்துப் போர்த்துக் கொள்கிறார். வந்த தென்றல் காற்றை மார்போடு அணைத்துக் கொள்கிறார்.

வானில் பூர்ண சந்திரன் உதயமாகிறது.

பங்குனி உத்திரநன்னாள் தமக்குத் திருமணமான நன்னாள். சித்ரகூடத்தில் இருந்த போது ஒரு நாள் இப்படித்தான் நள்ளிரவில் எழுந்து வந்து நீயும் நானும் மேடையில் நெருங்கி அமர்ந்து கொண்டு முழுநிலவைப் பார்த்தோம்.

பூரணசந்திரவட்டத்திலே நம் இருவர்களுடைய பார்வையும் ஸங்கமித்தன. அன்றிலிருந்து - எங்கு இருந்தாலும் பௌர்ணமி இரவில் இப்படிச் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு - நிலவைப் பார்த்து மகிழ்ந்ததுண்டு அல்லவா?

நாலைந்து மாதங்களாக அது நடைபெறவில்லையே. இன்று கடலின் அக்கரையில் ஸீதாதேவி, நான் இங்கே! நம் பார்வைகள் சந்திரனில் ஸங்கமிக்கின்றனவா?

**சந்த்$_3$ரே த்$_3$ருஷ் டிஸமாக$_3$ம:**

கீலாலன் ஓடோடி வந்தான். கையிலே பாக்குமரப்பட்டையாலான தொன்னை. அதிலே உரித்தமாதுளம் பழத்தின் முத்துக்கள் அதை நீட்டினான்.

ராமன்: என்ன இது?

கீலாலன்: ''தங்கள் கண்ணீர் துளிகள்! தங்கள் கண்களிலிருந்து துயரத்தினால் சிவந்து முத்துமுத்தாக விழுந்தன. அவற்றைஇந்தப் பாக்குப்பட்டையில் ஏந்தினேன்''

ராமன்: லட்சுமண பார்த்தாயா! இந்தப் பையன் வேடிக்கையை. அவன் பணிவோடு கொண்டுவந்ததை ப்ரபு பரிவோடு ஏற்றுக் கொண்டார்.

லங்கையில் ராவணனுக்குத் தலைவலி வந்துவிட்டது. ஒரு குரங்கு வந்து நகரம் முழுதும் தீ வைத்துவிட்டது. உடனே மயன் வந்து நகரத்தைப் புனர் நிர்மாணம் செய்துவிட்டான்.

இதுவரை ராவணன் லங்கைக்கு வெளியே பல தடவை மானபங்கப் பட்டிருக்கிறான். கார்த்த வீர்யனிடமும் வாலியிடமும் அவமானப்பட்டிருக்கிறான். அவையெல்லாம் லங்கை வாழ் மக்களுக்குத் தெரியாது.

இப்போது லங்கையிலே தன் கண்ணெதிரே - ஒரு வாநரன் நகருக்கே தீ வைத்து விட்டு சௌக்யமாகத் திரும்பிப் போய்விட்டான்.

**லங்காயாம் துக்ருதம் கர்ம**

அரசின் தற்காப்பு குலைந்துவிட்டது. ஸேநாதிபதிகளும் மந்திரிகளும் ஹநுமான் சபையில் பேசிய எச்சரிக்கையைப் பற்றி அவர்களுக்குள்ளே ஆராய்ந்தார்கள். கேடு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறதே - என்று குமைந்தார்கள்.

ராவணன் சபை கூட்டினான். என்னவெல்லாமோ பேசினார்கள். ராவணன் கடைசியாகத் தன் முடிவை வெளியிட்டான்.

ஸீதையை விட்டுக் கொடுக்க முடியாது. அதனால் வந்திருக்கின்ற பகையைத் தீர்க்க வேண்டும். வழி சொல்லுங்கள்.

வீரர்கள் அரசிடம் தின்று கொழுத்தவர்கள் - வீறாப்பு பேசினார்கள்.

ராவணன் தம்பி விபீஷணன் சொன்னார்.

''அண்ணா! உங்கள் பிடிவாதத்தை விடவில்லையானால் - நீங்களும் - நம்மைச் சேர்ந்த அரக்கர்களும் நாசமாகி விடுவோம். நாம் தப்பிப் பிழைக்கிறதற்கு ஒரே வழி - ஸீதையை மரியாதையாகக் கொண்டு போய் ராமனிடம் சேர்த்துவிட வேண்டியது தான் - என்றான்.

ராவணன் - வெகுண்டெழுந்தான். ''நீ ஒரு துரோகி, என்னை அடுத்துக் கெடுக்க வந்திருக்கிறாயே. சிச்சி என்று விபீஷணனை இடது காலால் உதைத்தான்.

விபீஷணன் நினைத்தார். நம் மனச்சாட்சி அண்ணனுக்கு நல்லதையே நினைத்தது. அண்ணன் அதை ஏற்கவில்லை. இனி அக்கிரமத்திற்கு துணையாக நாம் இங்கே இருக்கக்கூடாது. தர்மமே தலையாய கடமையாக கொண்ட ராமனைச் சரணடைவோம்.

என்று நான்கு தோழர்களுடன் கிளம்பிவிட்டார். ஆகாயமார்கமாகக் கடலைத் தாண்டி இக்கரையில் - மறுகடலே போன்ற வானநரப் பெரும் படையின் இடையே அமர்ந்திருந்த ராமனை தர்சித்து - வானில் இருந்தபடியே விண்ணப்பித்தார்.

''என் அண்ணனிடம் நியாயத்தை எடுத்துச் சொன்னேன். அவன் என்னைச் ச்சீ என்று காலால் உதைத்துவிட்டான்.

நான் லங்கையில் எனக்குள்ள உரிமைகளையும் நண்பர்களையும் உறவினர்களையும், செல்வங்களையும் விட்டுவிட்டு ராகவனைச் சரணமடைகிறேன்.

ஸர்வ லோகங்களில் உள்ளோர்க்கும் அவரே புகலிடம். குற்றம் குறை காணாமல் யாவருக்கும் அடைக்கலம் அளிப்பவர் அவர். அந்தஒன்றை நம்பி என் தகுதியற்ற நிலையைப் பற்றி கவலைப்படாமல் சரணடைகிறேன். இந்த விண்ணப்பத்தை அந்த மஹாத்மாவிடம் தெரிவியுங்கள்.

**த்யக்த்வா புத்ராம்ச்$_+$ச த$_3$ராராம்ச்$_+$ச**
**ராக$_4$வம் ச$_+$ரணம் கத:**
**ஸர்வலோக ச$_+$ரண்யாய**
**ராக$_4$வாய மஹாத்மநே**
**நிவேத$_3$யத மாம் க்ஷிப்ரம்**
**விபீ$_4$ஷணம் உபஸ்தித$_2$ம்**

வாநரர் தலைவர்கள் திடுக்கிட்டார்கள். ராவணன் தம்பியா! சரணம் என்ற கூவி விட்டானே! ஸர்வ லோக சரண்யனான ராமனைச் சரணடைய - எனக்கு உரிமை உண்டு - என்று அதட்டுகிறானே. இவனைச் சேர்த்துக் கொண்டு விடுவாரோ நம்தைவம் என்று கவலைப்பட்டார்கள்.

சுக்ரீவன் வேகமாக ராமனருகே சென்றான்.

''படபடக்காதீர்கள். என்ன விஷயம்! என்று கேட்டார் லட்சுமணன். ராமனிடம் நேரே பேசினான் சுக்ரீவன்.

ராவணன் தம்பியாம். விபீஷணனாம். நான் கூட கேள்விப்பட்டிருக்கிறேன் - நான்கு அரக்கர்கள் துணையுடன் வந்து தங்களைச் சரணடைகிறேன் - என்கிறான்.

(இத்துடன் நிறுத்திக் கொள்ள வேண்டியது தான் சுக்ரீவனுக்கு இங்கிதம் தெரிந்தால்?

நீங்கள் இதை நன்றாகச் சிந்திக்க வேண்டும்

தம்பியுடனும் சகாக்களுடனும் கலந்து ஆலோசிக்க வேண்டும். தாங்களும் வாநரர்களும் பத்ரமாக இருக்க வேண்டுமல்லவா.?

ஆகாசவீதியிலே வந்திருக்கிறார்கள் அரக்கர்கள். இஷ்டப்படி உருவம் எடுக்கின்ற மாயாவிகள். சூரர்கள். அவர்களை நம்பக்கூடாது.

ராவணனே துப்பறிவதற்காக இப்படி உளவாளியை அனுப்பியிருக்கலாம் அவன் நம் அப்பாவிகளான வாநரர்களிடையே புகுந்து சமயம் பார்த்து அவர்களை அடித்துவிடுவான்.

எதிரிகளைச் சார்ந்தவர்களை நாம் ஏற்கலாமா? அவனைக் கட்டிப் போட்டு செம்மையாக அடித்து விடுவது தான் நாம் இப்போது செய்ய வேண்டியது. பிறகு உங்கள் இஷ்டம் - என்றான்.

''மஹாராஜா நம் வாநரர் தலைவர்களை அழையுங்கள் கலந்து ஆலோசிப்போம்''. என்றார் ராமன்.

வீரர்கள் அவையில் கூடினார்கள். அவரவர்கள் விபீஷணனை நம்மிடையே சேர்த்துக் கொள்ளக்கூடாது - என்பதற்கு தமது அபிப்பிராயத்தைச் சொன்னார்கள். எல்லோரும் பேசிவிட்டார்கள். ஹநுமானை ராமன் திரும்பிப் பார்த்தார்.

நாம் பேசாமல் இருந்தால் சபையை அவமதித்ததாக ஆகும் - என்று பயந்தார் ஹநுமான். மெதுவாக ஆர்ப்பாட்டமில்லாமல் பேச ஆரம்பித்தார்.

ப்ரபோ! இந்த விஷயத்தில் தங்கள் முடிவு தான் உசிதமாக இருக்கும். ஆயினும் பெரும் தன்மையோடு ஸகாக்களைக் கலந்து ஆலோசிக்கிறீர்கள்.

இங்கு இப்போது பேசிய அனைவர்க்கும் ஓரே லக்ஷ்யம் தான். தங்களுக்கு எந்த விபத்தும் வந்து விடக் கூடாது - என்பது தான்.

அந்தக் கோணத்தில் அவர்கள் ஆராய்ந்து தமது முடிவைத் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே அவர்களின் முடிவைத் தவறானது - தெரியாமல் சொல்லிவிட்டார்கள் என்று எண்ணக்கூடாது.

ஒரு விஷயத்தைப் பற்றி ஆராயும் போது முதலில் அந்த விஷயத்தின் தன்மை என்ன? உண்மை - என்ன? என்பதை முதலில் சிந்திக்க வேண்டும்.

அது ஹிதமானால் - பிறகு அந்த விஷயத்தினால் நமக்கு ஆதாயம் உண்டா? பிறருக்கு ஆதாயமா? அதனால் நமக்கு ஆதாயம் இல்லாவிட்டாலும் - பிறருக்கு ஆதாயமானாலும் அதனால் நமக்கு ஹாநி இல்லையென்றால் அதை ஏற்கலாம். ஹானியாக இருந்தால் தவிர்க்கலாம்.

**அர்த்த$_2$ாநர்த்த$_2$ள விநிச்$_+$சித்ய**
**குணத: ஸங்க்$_3$ரஹம் குர்யாத்**
**தே$_3$ாஷதஸ்து விஸர்ஜயேத் ||**

இளவரசர் அங்கதன் சொன்னார். இதில் ஆராய்ச்சி என்ன வேண்டியிருக்கிறது? சத்ருவிடமிருந்து வந்தவனை எப்படி நம்புவது? அவசரப்பட்டு அவனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்றார்.

குண தோஷங்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனி. அண்ணனின் தோஷத்தை நினைத்து தம்பியும் துஷ்டன் என்று ஒதுக்கக்கூடாது. வீபீஷணனைப் பரீக்ஷிக்க வேண்டுமென்றார்.

எப்படிப் பரீக்ஷிப்பது? நம்மோடு பழகினால் தானே குணதோஷங்கள் தெரியும்.

ஆகவே ஒரு காரியத்தில் அவனை ஏவினால் தான் அவன் அதைச் செய்யும் போது திறமை வெளிப்படும். அவன் தன்மை தெரியாமல் எப்படி அவனை ஏவமுடியும்?

**ருதேநியோக$_3$ாத் ஸாமர்த்$_1$த்$_2$யம்**
**அவபே$_3$ாத்து$_4$ம் நச$_+$க்யதே |**

***ஸஹஸா விநி யோகே$_3$ாஹி***

***தே$_3$ாஷவாந் ப்ரதிப$_4$ாதிமா||***

*சரபன் என்ற மஹாவீரன் கூறினார் “அவனை உளவு பார்த்து நல்லவனா கெட்டவனா என்று தீர்மானிக்க வேண்டும் என்றார்.*

*நாம் உளவு பார்க்கிறோம் என்றால் அவன் ஜாக்ரதையாகி விடமாட்டனா? கபடநாடகம் நடிக்கமாட்டானா?*

*ஜாம்பவான் வயதான அநுபவசாலி கூறினார் ‘‘இவன் நல்லவனாக இருந்தால் ராவணன் தவறு செய்த உடனேயே வெளியேறி இருக்க வேண்டாமா? கிஷ்கிந்தைக்கே வந்திருக்க வேண்டாமா?- என்கிறார்.*

*அவர் பெரியவர். சரியான இடத்தில் சரியான நேரத்தில் தான் வந்திருக்கிறார் வீபீஷணன் என்று எனக்குத் தோன்றுகிறது.*

*ராவணன் எத்தனையோ தவறுகள் செய்திருக்கிறான். அவனை எவரும் எதிர்த்துப் போராட முன்வரவில்லை. நமக்கென்ன என்று பேசாமல் இருந்துவிட்டார்கள்.*

*கிஷ்கிந்தைக்கே வந்திருக்க வேண்டுமே - என்கிறார். விரோதம் முற்றி சங்கடம் வராத போது அவர் ஏன் பிள்ளை குட்டிகளை விட்டு விட்டு வெளியேற வேண்டும்? இவர் இப்போது சரியான நேரத்தில் - சரியான இடத்திலே தான் வந்திருக்கிறார்.*

*துஷ்டனான அண்ணனை வதைத்து தம்பிக்கு அரசு அளித்திருக்கிறார் பிரபு என்று தெரிந்து கொண்டார் வீபீஷணன். நமக்கும் அண்ணனுடைய ராஜ்யம் கிடைக்கும் என்று எண்ணத்தோடுதான் வந்திருக்கிறார்.*

*நீங்கள் ராவணனை எதிர்த்துப் போராட வந்திருக்கிறீர்கள் - என்று நன்றாகத் தெரிந்து கொண்ட பிறகு வந்திருக்கிறார்.*

*உத்யோகம் தவஸம்ப்ரேக்ஷ்ய*

*மித்$_2$யாவ்ருத்தம் ச$_1$ராவணம்*

*வாலிநச்$_+$ச வ$_4$தம் ச்$_+$ருத்வா*

*ஸுக்ரீவம் ச$_1$ாபிஷேசிதம் |*

*ராஜ்யம் ப்ரார்த்தய மாநஸ்து*

*பு$_3$த்$_3$தி$_3$ பூர்வ மிஹாSSக$_3$த: ||*

இது ஒன்றே போதும் விபீஷணரைச் சேர்த்துக் கொள்ளலாம்.

*ஏதாவத்து புரஸ்க்ருத்ய*

*யுஜ்யதே தஸ்ய ஸங்க்$_3$ரஹ:||*

ராமன் ஹநுமானுடைய ஆணித்தரமான வாதத்தைக் கேட்டுப் பூரித்துப் போனார். பிறகு மெதுவாக ஆரம்பித்தார்.

''நானும் என் அபிப்ராயத்தை வெளியிடலாம் என நினைக்கிறேன் - ஸபையோர்கள் அநுமதிக்க வேண்டும்''.

நீங்கள் எல்லோருமே - என்னிடம் உள்ள பரிவினால் - எனக்கு அபாயம் வந்து விடுமோ - என்ற பயம் காரணமாக வீபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது - என்று வாதாடினீர்கள். உங்கள் பரிவை நான் ஏற்றுக் கொள்கிறேன். உங்கள் பயத்தை நான் ஏற்க இயலாது.

என் கொள்கையைக் கூறிவிடுகிறேன்.

நண்பன் - என்று ஒருவன் வந்துவிட்டால் அவனை எக்காலத்திலும் தவிர்க்கமாட்டேன்.

*மித்ர ப$_4$ாவேந ஸம்பராப்தம்*

*நத்யஜேயம் கத$_2$ம்சந*

அவனிடம் குற்றமே இருந்தாலும் கூட எனக்கு இது தான் கொள்கை.

*தே$_3$ாஷோ யத்$_3$யபி தஸ்யஸ்யாத்*

சுக்ரீவன் கேட்டான்.

அது எப்படி? நீங்கள் கோஸலாதிபதி தசரத சக்ரவர்த்தியின் குமாரர். க்ஷத்ரியர் நீங்கள் குற்றம் புரிபவனைத் தண்டிக்கக் கடமைப் பட்டிருக்கிறீர்கள்.

ராமன்: தற்போது நான் கோஸலாதிபதியும் அல்ல. க்ஷத்ரியனுமல்ல - ஸாதாரண வழிப் போக்கன். ஸாதுக்கள் இப்படித்தான் செய்வார்கள். அது அவர்களுக்கு இழுக்கு அல்ல.

**ஸதாம் ஏதத் அக$_3$ர்ஹிதம்:**

சுக்ரீவன் மறுபடியும் ஆரம்பித்தார். நீங்கள் சொல்வதெல்லாம் சரி! ஆனாலும் எனக்கு பயமாக இருக்கிறது. தமையனுடைய கஷ்ட காலத்திலே அவனை விட்டுவிட்டு எதிராளியிடம் சேர்ந்து விடுகிறான் என்றால் அவன் யாரைத்தான் விட்டுக் கொடுக்க மாட்டான்?

ராமன் சுக்ரீவனைப் பார்த்தார்.

''சபாஷ் - மஹாராஜா மிகப் பொறுப்போடு பேசுகிறார். சாஸ்திரங்களைக் கற்றறிந்து நன்கு ஆராய்ந்தவனுக்குக் கூட இப்படிப் பேச வராது. உலகம் இப்படித்தான் இருக்கிறது.

நல்லவனிடமே ஸந்தேகம் வந்து விடுகிறது.

**ஏஷப்ராயோ நரேந்த்ராணாம்**

**சங்கநீயஸ்து சே$_+$ாப$_4$ந:**

மஹாராஜா ஒரு விஷயம் புரிந்து கொள்ள வேண்டும்.

உலகிலே எங்குமே பரதன் போல ஸஹோதரன் கிடைக்கமாட்டான் எல்லாப் பெற்றோருக்குமே என்னைப் போன்ற பிள்ளைகள் கிடைக்கமாட்டார்கள் - சொன்னபடி கேட்டு காட்டுக்கு போக மாட்டார்கள். உங்களைப் போன்ற நண்பரும் வேறொருவர் இருக்கமாட்டான்.

**நஸர்வே ப்$_4$ராதரஸ்தாத**

**ப$_4$வந்தி ப$_4$ரதோபமா:**

மத்$_3$வித$_4$ராவா பிது :புத்ரா
த்வத்$_3$வித$_4$ராவா ஸுஹ்ருத்தமா : ||

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஹநுமான் லட்சுமணனைப் பார்த்தார்.

லட்சுமணன் : என்ன பார்க்கிறாய்?

ஹநுமான்: ஸகல போகங்களையும் விட்டு விட்டு தமையன் கைங்கர்யமே தலையான கடமை - என்று வந்திருக்கிறீர்கள். உங்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டே பரதனைப் போல தம்பி கிடையாது என்கிறாரே ப்ரபு.

லட்சுமணன்: அதில் அர்த்தம் இருக்கிறது. ஸந்தர்ப்பத்தைச் சிந்திக்க வேண்டும். பொதுவாக சகோதரர்களைப் பற்றிப் பேசவில்லை. தாயாதிக் காய்ச்சல் உள்ள சகோதரர்களைக் குறித்துப் பேசுகிறார் அண்ணா!

பரதன் போல அண்ணா ராஜ்யம் எனக்கு வேண்டாம் - என்று சொல்கின்ற தம்பிகளே கிடையாது. அந்த ரீதியில் சுக்ரீவனும் வீபீஷணனும் ஒன்று தான். சுக்ரீவன் என்ன விபீஷணனை இறக்கிப் பேசுவதற்கு இருக்கிறது?

ஹநுமான் ஆமோதித்தார். லட்சுமணனுடைய பரந்த உள்ளத்தை வியந்தார்.

சுக்ரீவனுக்குப் புளகாங்கிதம் நம்மைப் போல நண்பர்களே கிடையாது என்று பிரபு சொல்லிவிட்டாரே! ப்ரபு!

தைரியமாக பேச ஆரம்பித்தான்.

''நான் சொல்கிறேன் நம்புங்கள். விபீஷணன் ராவணன் அனுப்பி வைத்த வேவுகாரன் தான். இவன் அடுத்துக் கெடுத்து விடுவான்'' என்று சொல்லி நண்பர்களைப் பார்த்தான். அவர்களுடைய அநுகூலமான தலையாட்டலைக் கண்டு விம்மிதத்தோடு அமர்ந்தான்.

ஹநுமான் தலையில் அடித்துக் கொண்டார். லட்சுமணன் கடுமையாக சுக்ரீவனைப் பார்த்தார் சுக்ரீவன் லட்சியமே பண்ணவில்லை.

ராமன்: மஹாராஜாவுக்கு இன்னும் என் கொள்கை புரியவில்லை. சரணாகதி பண்ணினவன் நல்லவனா - கெட்டவனா என்ற ஆராய்ச்சிக்கே இடமில்லை.

தன்னைச் சரணடைந்தவன் உண்மையில் கஷ்டப்படுபவனாக இருக்கலாம். அல்லது திமிர் பிடித்தவன் தற்காலம் தப்பிப்பதற்காகக் கூழைக் கும்பிடு போடலாம். அவனைத் தன் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற வேண்டும்.. இது தான்

**சரணாகத ரக்ஷண தர்மம்.**

**ஆர்த்தோ வாயதி வாத்ருப்த:**
**பரேஷாம் ச$_{+}$ரணாகத: |**
**அபிப்ராணாந் ப்ரித்யஜ்ய**
**ரக்ஷிதவ்ய : க்ருதாத்மநா**

அவன் தனிமனிதன் என்றால் பெருமைக் குரியவன். ஆகவே - ஒரு தடவை காலில்விழுந்து தங்களைச் சார்ந்தவன் - என்று ஒருவன் சரணாகதி செய்து விட்டால் அவனுக்கு உயிருள்ளதோ உயிரற்றதோ எந்தப் பொருளிலிருந்து ஆபத்து வந்தாலும் அபயம் அளிப்பேன். இதுவே என் விரதம்.

**ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய**
**தவாஸ்மீதி ச$_1$ யாச$_1$தே |**
**அப$_4$யம் ஸர்வ பூதேப்$_4$யோ**
**த$_3$த$_3$ாம் யேதத்$_3$ வ்ரதம் மம ||**

ஒரு தடவை காலில் விழுந்தவனுக்கு அபயமளிப்பேன் - என்று ராமன் சபதமிட்டது அந்த வேளையில் சரணமடைந்த விபீஷணனுக்கு மட்டுமல்ல சந்த்ர சூரியர்கள் இருக்கும் வரை இந்த சபதம் எல்லாருக்கும் தப்பாது என்று புகழ் பெற்ற -ராமன் தான் ஒரே தெய்வம் என்கிறார் தியாகராஜர்.

**ஆடின மாடலு தப்படலநுசு ஆசந்த்ரார்க்கமு கீர்த்திகலகின வாடேரா தைவமு** என்று பாடுகிறார் தியாகராஜர்.

இவ்வாறு ஸர்வமங்கள வாக்யத்தை உச்சரித்தார் ராமன். மேலும் கூறினார். ஆகவே வந்திருப்பவன் வீபீஷணன் மட்டும் தானா? அவனுக்குப் பின்னால் ராவணனும் நிற்கிறானா! பாருங்கள். அழைத்து வாருங்கள். அவன் காலில் விழுந்து சரணாகதி பண்ணுவதற்கு முன்னமே அபயம் அளித்துவிட்டேன். அழைத்து வாருங்கள்.

**விபீ$_4$ஷணோ வா ஸுக்$_3$ரீவ**
**யதி$_3$வாராவண: ஸ்வயம் ।**
**ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட**
**த$_3$த்தம் அஸ்யாப$_4$யம் மயா ॥**

சுக்ரீவன் ஓடினான். வாநரர்களை ஒதுக்கினான். வாநரர்கள் வழிவிட்டு ஒதுங்கி நின்றார்கள். விபீஷணனைக் கைகூப்பி அழைத்து வந்தான். விபீஷணன் ராம சரணங்களில் வீழ்ந்தார், எழுந்தார்.

நான் ராவணன் தம்பி. அவன் என்னை அவமதித்து விட்டான். அனைத்து உயிர்களுக்கும் அடைக்கலமான தங்களை நான் சரணடைகிறேன். உயிரினம் என்ற ஒன்று தான் எனக்குத் தங்களைச் சரணடைய தகுதியே தவிர வேறொன்றுமில்லை.

**அநுஜோ ராவணஸ்யாஹம்**
**தேந ச$_1$ாபி அவமானித: ।**
**ப$_4$வந்தம் ஸர்வ பூதாநாம்**
**ச$_+$ரண்யம் ச$_+$ரணம் கத: ॥**

இனி என் வாழ்வோ சுகமோ ராஜயமோ எல்லாம் தங்கள் பொறுப்பு.

**ப$_4$வத்க$_3$தம் மே ராஜ்யம்ச$_1$**

**ஜீவிதம் ச$_1$ஸுக$_2$ாநிச$_1$**

விபீஷணனுக்கு கடற்கரையில் ராகவன் லட்சுமணன் கையால் லங்கா ராஜ்யாபிஷேகம் செய்து வைத்தார்.

கடலில் ராம ஸேது அணைகட்ட வேண்டும் என்ன செய்யலாம்.

விபீஷணன் தனக்கு பலித்த உபாயத்தைச் சொன்னான். ''ப்ரபோ! ஸமுத்ரராஜனை சரணாகதி பண்ணுங்கள் ''

லட்சுமணன் - சரணாகதியா! அண்ணாவா பண்ண வேண்டும்?

ராமன்: ஒருவனை ஒரு அதிகாரியாக்கி ஒரு ஸ்தானத்தில் அமர்த்திவிட்டால் அவன் அந்த ஸ்தானத்திற்குரிய கடமையை ஆற்றும் போது அவனைவிடப் பெரிய அதிகாரி கூட அந்தஸ்தானத்தின் கட்டுப்பாட்டுக்கு அடங்கிப் போய் மற்றவர்க்கு வழிகாட்ட வேண்டும். இதில் கௌரவ ப்ரச்னை ஒன்றுமில்லை.''

தர்ப்பங்களை தரையில் பரப்பச் சொல்லி ஸமுத்ர ராஜனை ''படைகளோடு கடலைத் தாண்ட எனக்கு வழி வேண்டும்'' என்று பிரார்த்தித்து - அந்த தர்ப்ப விரிப்பில் உபவாஸம் இருந்தார்.

ராமன் கால் நீட்டிப் படுத்து மூன்று நாட்கள் ஆகிவிட்டன. ஸமுத்ர ராஜன் வெளிப்படவில்லை ராமனுக்கு கோபம் வரவில்லை. கோபம் வந்தது போலக் காட்டிக் கொண்டார்.

**க்ரோத$_4$ம் ஆஹாரயாமாஸ**

''கொண்டா லட்சுமண! வில்லையும் அம்பையும்- ஒரு அக்நி அஸ்திரம் விட்டு கடலை வற்ற வைத்து விடுகிறேன்.''

வில்லில் நாணேற்றி அம்பு கோர்த்து விட்டார். அஸ்த்ர மந்த்ரத்தை உச்சரித்தார். கடலில் விறகு இல்லாத தீ பாய்ந்தது.

கடலரசன் ஓடோடி வந்தான்.

''மஹாப்ரபுவே! மன்னிக்க வேண்டும் தாங்கள் என்னை சரணாகதி பண்ணவாவது! அதை நான் ஏற்றுக் கொள்வதாவது. இது விபரீத தர்மம்.

இதற்கு மூன்றுநாட்களானாலும் அதற்கு நான் ஆளாக மாட்டேன். ஆகையால் நான் வாளாவிருந்தேன் நீங்கள் கோபித்துக் கொண்டு - என்னை தண்டிக்க முனைந்து விட்டீர்கள். அது நியாயம்.

அதை ஏற்க இதோ முன் வந்து வட்டேன்.

ராமன்: அது போகட்டும் இப்பொழுது சொல். நான் இந்த அகண்ட வாநரப்படையோடு கடல் கடக்க வேண்டும் - அதற்கு நீ சற்றுமேடாகி எனக்கு வழிவிட வேண்டும்.

கடலரசன்: ஐயா நான் தங்கள் நியதிக்குக் கட்டுப்பட்டவன் - நான் கீழே ஆழம் பறித்து - மேலும் மேலும் வருகின்ற தண்ணீரையெல்லாம் ஏற்று -எல்லை கடக்காமல் இருக்க வேண்டும் - என்பது தாங்கள் எனக்கு இட்டபணி. அந்த இயல்பை மீறி நான் மேடிட்டால் - தங்கள் நியதியை மீறியவனாவேன். மீறுவதற்கு அநுமதிக்கிறீர்களா?

ராமன் சிந்தித்தார்! நாமே நியதியை வகுத்துவிட்டு - நாமே அதை மீறுவதற்கு ஆணையிடுவதா? அது தகாது''.

''கடல் அரசே! உபாயம் கூறுங்கள். படைகள் கடலைக் கடக்க வேணுமே!''

கடலரசன்: ப்ரபோ! தங்கள் சேவையில் விச்வகர்மா - என்ற தேவத்தச்சனின் மகன் - நளன் வந்திருக்கிறான். அவன் கையால் எதைத் தொட்டாலும் அது நீரில் மிதக்குமே தவிர மூழ்காது.

பெரிய பாறைகளைப் புரட்டி வந்து அவன் தொட்டு கடல் வெள்ளத்தில் தள்ளினால் அது மிதக்கும்.

அப்படி வரிசையாக அடுக்கினால் அணை. உடனே கடலில் அணை கட்டிவிடலாம்.

ஆரம்பம் - வாநரர்கள் மலைகளையே புரட்டிக் கொண்டு வருகிறார்கள். ஹநுமான் அவற்றை தம் கையிலே தாங்கி நளனின் கைக்கு எட்டும்படியாக அவற்றை வீசுகிறார்.

கீலாலன் -கரையில் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அவனருகே ஒரு கால் குட்டையாக - விந்தி

விந்தி நடந்து கொண்டே ஒருவர் வந்தார்.

''பையா - ஹநுமான் எங்கே?

கீலாலன் - அவர் ராம கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிறார்.

வந்தவர். ''அதெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். உடனே அழைத்துவா!

கீலாலன்: நீங்கள் அவரிடம் போங்களேன்.

வந்தவர்: ஒரு கால் ஊனமப்பா. கடல் மணலில் கால் வைத்துப் போக முடியாது. சற்று தயவு பண்ணு. நேரமாகிறது. இன்னும் பதினைந்து வினாடிகளில் நான் அவரைப் பிடித்தாக வேண்டும்.

கீலாலன் :தாங்கள் யார் என்று அவரிடம் சொல்ல?

வந்தவர்: ''சனீச்வர பகவான் என்று சொல்.''

கீலாலன்: ''அப்படின்னா என்ன?

சனீச்வரன்: க்ரஹங்களிலே ஒன்பதாமவன்

கீலாலன்: அப்படின்னா?

சனீச்வரன்: உனக்குப் புரியாது. அவரை அழைத்து வா.

கீலாலன் ஓடினான். கடற்கரையில் நின்று மலைகளை வரிசையாக வீசி எறிகின்ற ஹநுமானிடம் வந்தான்.

அண்ணா! யாரோ சனீச்வர பகவானாம். உங்களை இந்தக் கணமே பிடிக்க வேண்டுமாம். வரச் சொன்னார்''.

ஹநுமான்: நான் தான் வேலையாக இருக்கிறேனே! அவரை இங்கே வரச் சொல்.

கீலாலன் ஓடினான். நொண்டி கிரஹத்திடம் சொன்னான் ''வேலையை விட்டு வர முடியாதாம். உங்களை கடற்கரைக்கு வரச் சொன்னார்'' என்றான்.

சனிபகவான் கடல் மணலில் கால் புதைந்து எடுக்கமுடியாமல் தவித்தார். கீலாலன் போய் ஒவ்வொரு தடவையும் எடுத்து விட்டார்.

''அதோ ஹநுமான்'' -என்று காட்டினான் கீலாலன். அருகே சென்றார் சனிபகவான்.

''நீ தான் ஹநுமானா?''

''ஆமாம்''

''உனது விதிப்படி இந்த நிமிஷத்திலிருந்து - ஏழரை ஆண்டுகள் - உன் தலையில் நான் உட்கார வேண்டும்''.

ஹநுமான்: உட்காருங்களேன்! நான் கூடாது என்று சொல்லவில்லையே!

சனிபகவான்: ஒரே உயரமா இருக்கிறாய். சற்றுக் குனியேன். தோளில் ஏறித் தலைமீது உட்கார்ந்து விடுகிறேன்.

ஹநுமான்: தலை என்ன. என் இடுப்பில் உட்காரலாமே!

சனி: அது முடியாது. தலையில் தான் ஏறுவேன்.

ஹநுமான் குனிந்தார். சனீச்வரன் ஹநுமான் தலைமீது உட்கார்ந்து விட்டார்.

பர்வதங்களைக் கொண்டு வருகின்ற வாநரர்கள் அதிவேகமாக ஓடிவருகிறார்கள். ஒவ்வொன்றாக வாங்கி அதைக் கைமாற்றி எறிவதில் சற்றுத் தாமதமாமாயிற்று - ஒரு மலையைத் தலை மீது வாங்கி வைத்துக் கொண்டு அடுத்த மலைக்குக் கை நீட்டினார் ஹநுமான்.

மலை பாரம் தாங்க முடியாமல் சனி பகவான் வீல் என்று கத்தினார். ஹநுமான் அந்த மலையை எடுத்துக் கடலில் வீசிவிட்டு அடுத்த மலையை வாங்கித் தலையில் வைத்துக் கொள்ள கையை இறக்கினார்.

சனி பகவான் அலறினார். ''ஐயோ! ஐயோ! என் தலை மீது வைக்காதே. நான் நசுங்கி அப்பளம் ஆகிவிடுவேன்''.

*ஹநுமான்: நான் அப்பொழுதே சொன்னேன். இடுப்பில் உட்கார்ந்து கொள்ளுங்கள் - என்று - நீங்கள் தானே பிடிவாதமாக தலைமீது ஏறுவேன் என்றீர்கள்.*

*சனிபகவான்: ஹநுமானே! எனக்கு பெயரே* **மந்தன்** *தான், எதையும் உடனே புரிந்து கொள்ள முடியாது. தாமதம் ஆகும்.*

*கலியுகத்தில் ட்யூப்லைட் என்று ஒன்று வரப் போகிறது. அது ஸ்விட்ச் போட்டவுடனே பளீரென்று வெளிச்சம் தராது. அது மாதிரித் தான் நானும்.*

*ஹநுமான்: அடேயப்பா! நீங்கள் சனிபகவான் இல்லையா? வரும் காலம் கூட உங்களுக்குத் தெரிந்திருக்கிறது.*

*சனி: என்னைக் கிண்டல் பண்ணாதே. நான் உன் இடுப்பிலேயே உட்கார்ந்து கொள்கிறேன்.*

*ஹநுமான்: உட்காரலாம். எனக்கு ஆட்சேபணை இல்லை. ஒரு சமயம் இரண்டு மரங்களைக் கிளைகளோடு இடுப்பில் தூக்கிக் கொள்ள நேரும்.*

*அது மட்டுமல்ல லங்கைக்குப் போகிறோம். அங்கு அரக்கர்களுடன் போரிடப் போகிறோம். அரக்க வீரர்களிடம்* **பிண்டி** *பாலம் என்ற ஆயுதம் உள்ளது. அது ஒரு பெரிய இரும்பு உருண்டை. எங்கும் கூறான ஊசிகள் நீட்டிக் கொண்டிருக்கும். அந்த உருண்டை ஒரு இரும்பு சங்கிலியில் மாட்டி இருக்கும். அரக்கர்கள் அந்த இரும்புச் சங்கிலியின் மறுபுறத்தை கையில் பிடித்துக் கொண்டு வந்து அதைச் சுழற்றிச் சுழற்றி - நம் மீது அடிப்பார்கள். அந்த இரும்பு ஊசிகள் நம் உடலைக் குத்தி குதறிவிடும்.*

*சனி: ஐயையோ. என் அண்ணனும் பாவிகளை இப்படித் தான் அடிப்பானாம்.*

*ஹநுமான்: உங்கள் அண்ணன் யார்?*

*சனி: யமதர்மராஜன் தான்*

*ஹநுமான்: நீங்களும் என் குருநாதர் ஸூர்ய பகவானுடைய புத்திரரா? என்ன ஆச்சரியம்! என்குருநாதருக்கு மூன்று*

புத்திரர்கள். யமன், தாங்கள், சுக்ரீவன். அருமையான பிள்ளைகள்.

குருநாதரின் பிள்ளை சனி பகவான் என்னைப் பீடிக்க வந்திருக்கிறார். ஆஹாஹா என்ன பாக்யம் பண்ணியிருக்கிறேன்.

சனி: நான் உன்னைப்பிடிக்க வந்திருக்கிறேனா? பீடிக்கப்பட வந்திருக்கிறேனா - புரியவில்லையே!

என்னை விட்டு விடு. நான் எங்கேயாவது மலைக்குகையில் போய் தவம் செய்கிறேன்.

ஹநுமான்: அப்புறம் என் தலை விதி - நீங்கள் ஏழரை ஆண்டுகள் என்னிடம் இருந்தாக வேண்டுமே - எவரும் விதியை மீறினால் என் பிரபுவுக்குப் பிடிக்காது.

நீங்கள் என்னிடம் ஏழரை ஆண்டுகள் இருக்கத்தான் வேண்டும்.

சனி: அல்ல, அல்ல, நான் தவறு செய்து விட்டேன். ஒருவருடைய பாபச் செயல் காரணமாக - விதி- எனக்கு ஏழரை ஆண்டுகள் அவர்களைப் பிடிக்க வேண்டும் - என ஏவி இருக்கிறது.

ராம நாமம் ஓயாமல் சொல்கின்ற உன்னிடம் பாபம் எது? கால சக்ரத்தை மாத்திரம் கணக்குப் பண்ணி உங்களிடம் வந்து விட்டேன். தவறு, பெரும் தவறு. என்னை விட்டுவிடு.

ஹநுமான்: பிரம்மா என் தலையில் எழுதி விட்டார். நீங்கள் என்னை இந்த வயதில் பீடிக்கத் தான் வேண்டும் - என்று. நானும் அநுபவிக்கத்தான் வேண்டும்.

சனி : உன் தலையில் எழுதவில்லை அப்பா! என் தலையில் எழுதி விட்டாரப்பா! கால சக்கரத்தை மட்டும் கணக்குப் பண்ணி பல ராம நாமம் சொல்கின்றவர்களை படாத பாடுபடுத்தியிருக்கிறேன்

அதற்கு பிராயச்சித்தமாக அவஸ்தைப்படும்படி என் தலையில் எழுதிவிட்டார் போலிருக்கிறது.

தயவு செய்து என்னை விட்டுவிடு. இனி நான் ராம நாமம் திக்குக்கே போகமாட்டேன். உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன் - எனக்கு விடுதலை அளி என்று சனி பகவான் ஹநுமானை பிரார்த்தித்து விடை பெற்றார்.

அணை ஏழே நாட்களில் கட்டப்பட்டு முடிந்தது. பெரிய பெரிய மலை முகடுகளே கடலில் நங்கூரம் பாய்ச்சினாற் போல ஆழ்ந்து பதிந்துவிட்டதால். அது பல்லாயிரம் ஆண்டுகள் ஆகியும் அசைக்க முடியாமல் கெட்டியாக நிற்கிறது.

ஜய்ஸ்ரீராம என்ற கோஷத்துடன் வாநரர்கள் பாலம் மீது பிரயாணம் செய்து அக்கரை சேர்ந்தனர். பாலத்தின் இரு பக்கங்களிலும் வேடிக்கை பார்க்க வந்த முதலைகள் மீதும் திமிங்கலங்களின் மீது சவாரி செய்து - பல வாநரர்கள் அக்கரை சேர்ந்தனர். த்ரிகூடமலையின் அடிவாரத்தில் அகலமான கடற்கரையில் வாநரவீரர்கள் முகாம் - வகுக்கப்பட்டது.



## சுவேல மலைமுகாம்

ஹநுமான் மஹாராஜாவின் அநுமதி பெற்று - வானரத் தலைவர்களுக்கு ஆணையிட்டார். ''வீரர்களே! இது அரக்கர்களின் ராஜ்யம். அரக்கர்கள் மாயாவிகள். தோன்றியபடியெல்லாம் வடிவமெடுக்கத் தெரிந்தவர்கள். அவர்கள் நம்மிடையே புகுந்து பயமுறுத்துவார்கள்.

ஓடிப்போய்விடுங்கள் - என்று மிரட்டுவார்கள். வாநர வடிவம் எடுத்துக் கொண்டு வாநரர்களிடையே புகுந்து - மது பானம் செய்வித்து நமக்குள்ளேயே கலகத்தை விளைவித்து விடுவார்கள்.

வாநரர்கள் அனைவரும் - ஒருவருக்கொருவர் சந்திக்கும் போது ஜயஸ்ரீராம் - என்று கட்டியம் கூறிவிட்டுத்தான் பேச்சை ஆரம்பிக்க வேண்டும். பேச வந்தவன் பதிலுக்கு ஜயஸ்ரீராம் - என்று சொல்லாவிட்டால் அவன் அரக்கன் - என்று கண்டு கொண்டு இழுத்துப்போய் நமது படைத்தலைவரிடம் விட்டுவிட வேண்டும்.

அவனோடு சகவாஸம் வைத்துக் கொள்ளக் கூடாது.

அவர்கள் கொண்டு வந்துள்ள ஆயுதங்களைப் பறித்துக் கொள்ளலாம். ஆடை உடைகளைப் பிடுங்கி உடுக்கக் கூடாது. அவற்றில் வேண்டாத வாசனை பூசியிருப்பார்கள். அது மூக்கில் ஏறினால் மயக்கம் வரும்.

தலைவர் அநுமதியின்றி - நகரத்தில் தனியாக நுழையக்கூடாது. அரக்கப் பெண்மணிகளைச் சீண்டக் கூடாது. - வாயில் ஓயாமல் ராம நாமம் ஒலித்துக் கொண்டே இருக்க வேண்டும். அதுவே உங்களுக்கு எல்லாம் தற்காப்பு. அரக்கர்களுக்கு ராம நாமம் சொல்பவர்கள் எல்லாரும் ஹநுமான்கள் என்ற நினைப்பு. ஜயஜய ஸீதாராம.

லட்சுமணன் கூறினார். ''இந்த ஸுவேமலை மீது ஏறிப் பார்த்தால் லங்கைமுழுவதும் தெரியும் போலிருக்கிறதே!.

ராமன்: அப்படியானால் ஏறிப்பார்ப்போமே. மஹாராஜா நம்மோடு மலை ஏறப் பணிரெண்டு துணைவர்களைத் தேர்ந்தெடுங்கள்.

அவர்கள் மட்டும் மலைமீது ஏறட்டும். வாநரர்கள் கூட்டமாக ஏறினால் போர்என்று தீர்மானிப்பதற்கு முன்னால் கைகலப்பு ஏற்பட்டுவிடும்.

அது தவறு.

ஹநுமான் - ராமனை உற்றுப்பார்த்தார். என்ன நேர்மை? என்ன நீர்மை? யுத்தமில்லாமலே ராவணனைப் பணிய வைக்கவிரும்புகிறார் போலும்'' என்று எண்ணினார்.

மலைமீது ஏறினார்கள். அவர்களுக்கு முன்னே ஹநுமான் தாவி ஏறி ஸுவேல சிகரம் அடைந்தார். அங்கொரு விசாலமான சமநிலம் கண்டார்.

ஓரத்தில் கிடந்த பெரும் பாறையைப் புரட்டிக் கொண்டு வந்து - அதன் சாய்மானப் பகுதியைத் தூசிதட்டி - உத்தரீயத்தினால் துடைத்து - ஒரு புறம் பூமியிலே பதித்து - முப்பாகம் சமதளமாக்கினார்.

அனைவரும் வந்து விட்டனர். அங்கதன் ஒரு புலித்தோல் விரிப்புக் கொண்டு வந்திருந்தான். அதை அந்தப் பாறைமீது விரித்தான் - ராமன் ஆர அமர அதன் மீது உட்கார்ந்தார்.

பக்கத்தில் ஒரு பலா மரம் அதன் கிளை ஆடி ஆடி வீசிற்று.

லட்சுமணன் வந்து பாறையின் சாய்மானத்தை சீராக்கி விரிப்பை சமமாகப் படிய வைத்தார். அதில் ஸ்ரீராமன் அமர்ந்தார்.

**தஹம் தரு கிஸலய ஸுமநஸுஹாயே।**
**லசி$_2$மன ரசி$_1$நிஜ ஹாத$_2$ ட$_3$ஸாயே ।**
**தா பர ருசி$_1$ர ம்ருது$_3$ல ம்ருக$_3$ ச$_2$ாலா**
**தேஹிஆஸந ஆஸிந க்ருபாலா ॥**

ஸுக்ரீவன் தலைமாட்டில் வந்து அமர்ந்தான். அவன் மடிமீது தலை சாய்த்தார் ராமன். இடது புறத்தில் வில்லை அமர்த்தினார். வலது புறத்தில் அம்புறாத் தூணியைக் குத்திட வைத்தார்.

விபீஷணனை அருகே அழைத்து மெல்லிய குரலில் ஏதோ சொன்னார்.

**ப்ரபு$_4$ க்ருத ஸீஸ கபீஸ உச$_2$ம்கா**
**வாம த$_3$ ஹினதிஸி சாபநிஷங்கா ||**

**கஹலங்கேஸ மந்த்ர லகி$_3$ காநா ||**

பெரும் பாக்யம் செய்தவர்கள் அங்கதனும் ஹநுமானும். ராமனுடைய திருவடிகளைப் ஹிதமாகப் பிடித்துவிட்டார்கள்.

சற்று அப்பால் லட்சுமணன் இடுப்பில் அம்புறாத் தூணி தொங்க - இடது கையில் வில் ஏந்தி - வலது கையில் ஓர் அம்பை விரல்களிடையே சுழற்றிக் கொண்டிருந்தார்.

**ப$_3$ட$_3$ ப$_3$ாகீ$_4$ அங்க$_3$த ஹநுமாநா |**

**ச$_1$ரந கமல ச$_1$ாபத பி$_3$தி$_4$ நாநா |**

**ப்ர$_4$பு பாசே$_2$ லசி$_2$மந விராஸந |**

**கடி நிஷங்க ப$_3$ாந பீராஸந ||**

இந்த நிலையில் ஸ்ரீ ராமனை மனதில் த்யானம் பண்ணிக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்கிறார் கோஸ்வாமி.

**ஏஹி வித$_4$ க்ரூபா ரூப குநதாம**

**ராமு ஆஸீந |**

**த$_4$ந்ய தே ந ஏஹித்$_4$யாந**

**ஜே ரஹத ஸத$_3$ா லயலீந ||**

இதே காட்சியென தியாகராஜர் கிரிபை நெனை கொள்ள என்ற ஸஹானா க்ருதியில் பாடுகிறார்.

கிழக்கு திசையில் சந்திரன் உதித்தான். ராமன் சொன்னார் : நண்பர்களே பாருங்கள். சந்திரன் சிங்கம் போல ஆகாயத்தில் பாய்கிறான். மலை குகைகளில் தமது பொலிவுகளை மறைத்துக் கொண்டிருந்த சந்திரச் சிங்கம் இருட்டு என்ற யானைகளை நாற்புறமும் விரட்டிக் கொண்டு புறப்படுகிறது பாருங்கள்.

ராத்திரி தேவி வானத்துத் தாரைகளை எல்லாம் உடலெங்கும் அணிந்து கொண்டு தன்னழகை விரிக்கிறாள் பாருங்கள். ஆமாம்- அங்கு சந்த்ர பிம்பத்தின் நடுவில் சற்றுக் கறுப்பாகத் தெரிகிறதே! அதென்ன? சொல்லுங்கள் பார்க்கலாம்''.

சுக்ரீவன் சொன்னான்: ரகுநாதா! சந்திரன் மீது பூமியின் நிழல் விழுந்திருக்கிறது.

சிலபேர் சொல்வார்கள் - ராகு சந்திரனை அடித்த வடு என்று.

மற்றொருவன் சொன்னான்: பிரம்மதேவன் மன்மதனின் காதலி ரதீதேவியைப் படைப்பதற்காக சந்திரனிலிருந்து ஒளிப் பிழம்பைப் பெயர்த்திருக்கிறார். அதனால் ஏற்பட்ட பள்ளம்.

ராமன் கேட்டார். ஹநுமந்தா! நீ என்ன நினைக்கிறாய்?

ஹநுமான் : நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அதைச் சொல்லுங்கள் பிறகு நான் சொல்கிறேன்.

ராமன்: சொல்கிறேன் கேள். பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தார்கள் அல்லவா? அதற்கு முன்னால் சந்திரன் உண்டானான். அவனைத் தொடர்ந்து ஹாலாஹல விஷம் வெளி வந்ததல்லவா? பரமேச்வரன் அதை ஏந்தி தன் குரல் வளையில் தேக்கிக் கொண்டார் அல்லவா? சந்திரன் அந்த விஷத்தைக் கொஞ்சம் சுரண்டி எடுத்து - தன் கிரணங்கள் வழியாக - விட்டுப் பிரிந்த கணவன் மனைவிகளின் இதயங்களைச் சுட்டெரிக்கிறான்.

*ஹநுமான் புரிந்து கொண்டார். ''தேவியைப் பிரிந்த வேதனை பிரபுவின் உள்ளத்தை இப்படித் தாக்குகிறதே! இதை மாற்றிவிட வேண்டும்'' - என்று நினைத்தார்.*

*ஹநுமான் : சந்திரனை அப்படி தாங்கள் நினைக்கக் கூடாது. சந்திரன் உங்களுக்குப் பிரியமானவன். அவனுடைய உள்ளத்திலே தங்களுடைய ச்யாமளத் திருமேனி படிந்திருக்கிறது. அந்த ச்யாம நிறம் தான் சந்திரனில் தெரிகிறது. அப்படியும் ஒளி வீசுகிறது பாருங்கள். இருட்டடிக்கவில்லை. அது தங்கள் க்ருபை. வானத்திலே உலகத்திற்கு ஒரு சந்திரன். பூமியிலே என்னைப் போன்ற அடியார்களுக்கு உள்ளம் குளிர்விக்கின்ற நீங்கள் ராம சந்திரன். ஹநுமான் வைத்த இந்தப் பெயரைத்தான். இன்றைய தாயார் தகப்பனார் தமது அருமைக் குழந்தைக்கு இன்றும் வைக்கிறார்கள்.*

***கஹஹு ஹநுமந்த – ஸுநஹு***
***ப்ர$_4$பு ஸஸி தும்ஹார ப்ரியதாஸ।***
***தவமூரதி வித$_4$ உர ப$_3$ஸதி***
***ஸோ இ ஸ்யாமதா ஆப$_4$ாஸ ॥***



# போர் முனை

வால்மீகி ராமாயணத்திலும் கம்ப ராமாயணத்திலும் காண்டங்களுக்குள்ளேயே மிகப் பெரிது யுத்த காண்டம் தான். இரு மஹாகவிகளும் போட்டி போட்டுக் கொண்டு - வந்தது வராமல் - போரை வர்ணித்திருக்கிறார்கள்.

அவர்களிடையே நாடகப் பாங்கான பல நிகழ்ச்சிகளைப் படிப்பவர்களுடைய இதயத் துடிப்பு நின்று போகும் அளவுக்குத் திகைப்பையும், திருப்பங்களையும் - மாற்றி - மாற்றி - எழுதி - ஸ்வாரஸ்யப் படுத்தியிருக்கிறார்கள்.

போர்க்கதை தானே! இவனை அவன் அடித்தான். அவனை இவன் அடித்தான் - என்று பக்கம் புரட்டுபவர்கள் பல அருமையான செய்திகளை தர்ம ஸூக்ஷ்மங்களை - இழந்துவிடுவார்கள்.

ஸ்ரீராமன் முறைப்படி அங்கதனை அனுப்பி - ஸாம உபாயமாக ஸமாதான எச்சரிக்கை அனுப்பினார்.

விபீஷண சரணாகதியின் போதே - பேச்சு எழுந்தது.

ராமன் தான் ஒரு தலைபட்சமாக போர் தன் வெற்றியில் முடியும், என்று தீர்மானித்து - விபீஷணனுக்கு முன்பே பட்டாபிஷேகம் செய்துவிட்டார்.

அப்போது சுக்ரீவன் கேட்டான்.

''அதற்குள் விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விட்டீர்களே. ராவணன் தோல்வியுற்று சரணாகதி பண்ணினால் விபீஷணன் கதி என்ன?

ராமன்: விபீஷணனுக்கு அரசு கொடுத்தது கொடுத்தது தான். அது மாறாது.

பதினான்கு ஆண்டு கெடுவில் - ராவணனை அழைத்துக் கொண்டு சென்று அவனுக்கு அயோத்தியா ராஜ்யத்தை பட்டாபிஷேகம் செய்து வைப்பேன்.

இந்தக் காட்சியைத் தன் மனக் கண்களிலே கண்ட த்யாகராஜர் பாடுகிறார்.

ராவணனுக்கு ஹிதமாக அங்கதன் மூலம் செய்தி அனுப்பினீர்களே.

**ஹிதவு மாட எலந்தோ ப$_3$ாக பலகிதிவி**

**ராவணுனிகி தெலிய லேக போயே**

''ராஜ்யம் தான் விபீஷணனுக்கு கொடுத்து விட்டீர்களே - ராவணனுக்கு என்ன கதி ? - என்று கேட்கிறாயா-

**ஸதமுகாநு அயோத்யனு இச்சேநு அண்டிவி –**

நிஜமாக ராவணனுக்கு அயோத்தியைக் கொடுப்பேன் என்றீரே.ராம! நீங்கள்

**ஸரஸஸாமதாந பே$_4$த$_3$ த$_3$ண்ட ச$_1$துரர் ஐயா!**

இப்படி ராமனுடைய தான உபாயம் ராவணனிடம் பலிக்கவில்லை.

ராவண விபீஷண சோதரர்களுக்குள் பேதத்தை ராமன் செய்யவில்லை. ராவணன் தன் திமிரினால் தன் தலையில் போட்டுக் கொண்டது.

பேத உபாயத்தை ராவணன் கொண்டு - தம்பியை இழந்தான்.

கடைசியில் ராமன் தண்ட உபாயத்தைக் கைக் கொள்வது தவிர்க்க முடியாததாகி விட்டது.

அங்கதன் தூது பலிக்கவில்லை. போர் மூண்டது. ராவணன் - போரில் நேர் முகமாக நின்று - போரிடத் தைரியமில்லாமல் மாயாஜாலங்கள் செய்ய ஆரம்பித்தான்.

ராமலட்சுமணர்களை கொன்று விட்டதாகச் சொல்லி - மாயா வித்தையினால் - ராம லட்சுமணத் தலைகளைக் கொண்டு வந்து ஜாநகியின் முன்னே வைத்தான் - பலிக்கவில்லை.

ராவணனுடைய தாய் வழிப் பாட்டனார் அறிவுரை கூறினார். அந்த மால்யவானைத் துச்சமாக மதித்துப் பேசினான்.

தாத்தா நான் இரண்டு துண்டாக வெட்டிப் போடப்பட்டாலும் சரி - எவருக்கும் தலை குனிய மாட்டேன். இது என் பிறவிப் பிடிவாதம். கடலுக்குப் பாலம் கட்டி இங்கு வந்து என்னிடம் மாட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு பயல் உயிரோடு திரும்ப மாட்டான்.

**த்$_3$வித$_4$ா பஜ்யேயம் அப்யேவம் நநமேயம் துகஸ்யசித்**
**ஸது தீர்த்வார் ணவம்ராம: நஜீவந்ப்ரதியாஸ்யதி**

ராமன் வானரப்படைகளை நான்காக வகுத்து லங்கையைச் சுற்றி நாற்புறத்திலும் நிறுத்தினார். ஒவ்வொரு திசையிலும் ஒரு வானர வீரனை தலைவராக நியமித்தார்.

ஸுவேல மலையில் ராமன் அன்றிரவு ஸுக்ரீவன் முதலியவர்களுடன் போர்த் திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்தார்.

எதிரே லங்கையில் ராவணன் தன் அரண்மனை உச்சித் தாழ்வாரத்தில் பெண்களுடன் கொஞ்சிக் கொண்டிருந்தான்.

சுக்ரீவன் அந்தக் காட்சியைக் கண்டதும் கொதித்து எழுந்தான். குபீரென்று பாய்ந்தான். ராவணன் தலையில் கவிழ்த்திருந்த கிரீடங்களை பத்துத் தலைகளில் இருந்தும் இடது கையால் தட்டிவிட்டான். கனமான தங்கக் கிரீடங்கள் ணங் ணங் என்று விழுந்து சிதறின.

ராவணன் எழுந்து சுக்ரீவன் மீது பாய்ந்தான். இருவரும் கட்டிப்புரண்டனர்.

திடீரென்று சுக்ரீவன் ராவணனுடைய மார்பில் உதைத்துவிட்டு உதைத்த வேகத்தில் பந்து போல ஆகாயத்தில் எம்பினான். கைகளில் ராவணனுடைய நான்கு கிரிடங்களை லாவிக் கொண்டு பறந்தான்.

ஸ்ரீராமடைய திருவடிகளில் வைத்து வணங்கினான்.

''மஹாராஜா! என்ன ஸாஹஸம் செய்துவிட்டீர்கள் மிகவும் தவறான காரியம்.''

சுக்ரீவன்: தாங்கள் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் போது - அவன் கொம்மாளம் போட்டுக் கொண்டிருந்ததைக் காண எனக்கு சகிக்கவில்லை.

ராமன்: இங்கே நாம் சத்ருவின் நிலத்தில் போருக்கு வந்திருக்கிறோம். நாம் தற்காப்பை அலட்சியம் செய்யக் கூடாது - உங்களுக்கு ஒன்று ஆகியிருந்தால் - பிறகு நான் ஸீதையை மீட்டுத்தான் என்ன பயன்?

**த்வயிகிஞ்சித் ஸமாபந்நே**

**கிம்கார்யம் ஸீதயாமம।**

என் தோழர்கள் எல்லோரும் - ஒன்று புரிந்து கொள்ள வேண்டும். போரில் எந்த நண்பரையும் பறி கொடுத்து விட்டு - போரில் வெற்றியைத் தேடமாட்டேன். ஸீதையை நான் அடைவது எவ்வளவு முக்கியமோ அதைக் காட்டிலும் முக்கியமானது என்னைச் சார்ந்தவர்களின் பாதுகாப்பு. ஆகவே தாறுமாறாகக் களத்தில் இறங்கி யாரும் தன்னை இழக்கக் கூடாது.

ராமனின் உள்ளப்பாங்கை நினைத்து நினைத்து உருகினார் ஹநுமான்.

''சுக்ரீவ! ராவணனுடைய கிரீடங்களை எடுத்து வந்தாயே! எதற்காக?

சுக்ரீவன்; ஒரு விண்ணப்பம். ராமேச்வரக் கடற்கரையில் - விபீஷண மஹாராஜாவுக்கு அவசர அவசரமாக கடல் உப்பு நீரைத் தலையில் கொட்டச் சொல்லி பட்டாபிஷேகம் செய்து வைத்தீர்களே. ஆனால் மகுடம் சூட்டவில்லையே என்று நினைத்தேன்.

ராவணனின் தலையிலிருந்து வீழ்ந்த கிரீடங்களில் நான்கு தான் -என் கையில் சிக்கின. அவற்றைத் தங்கள் திருக்கரத்தால் சூட்ட வேண்டும்.

''நான்கு எதற்கு?

ஒன்றுக்கு நாலாக இருந்தால் பட்டாபிஷேகம் ஊர்ஜிதமாகுமே!

சுக்ரீவ! உனக்கு நல்ல உள்ளம். உன் கையால் விபீஷணனுக்குச் சூட்டு என்றார்.

விபீஷணனை அழைத்து சுக்ரீவன் விபீஷணன் தலையில் ஒன்றுக்கு மேல் ஒன்றாக சூட்டினான்.

மலை முகட்டில் நான்கு கிரீடங்கள் தாங்கி நிற்கின்ற விபீஷணனைப் பார்த்து - வானரப்படை அனைத்தும் விபீஷணமஹாராஜகீ ஜய் - என்று ஆரவாரம் செய்தனர். லங்கையே கிடுகிடுத்தது.

போர் மூண்டது. இந்திரஜித் போருக்கு வந்தான். அவனை அங்கதன் வளைத்துக் கொண்டான். பெரிய ஸால மரத்தைப் பிடுங்கி - அவனுடைய ரதத்தின் மீது வீசினான் - குதிரைகள் சாரதி ரதம் - எல்லாம் நொருங்கின.

இந்திரஜித் மாயையால் மறைந்தான். அவன் தாக்குதல் தான் தெரிந்ததே தவிர இருக்குமிடம் தெரியவில்லை. ராமலட்சுமணர்கள் திகைத்தார்கள்.

இந்திரஜித் நாகாஸ்திர பிரயோகம் செய்தான். நூற்றுக் கணக்கான ஸர்ப்பங்கள் ராமனனையும், லட்சுமணனையும் உடல் முழுவதும் சுற்றிக் கொண்டன.

இதற்குள் ராமன் முக்கியமான அங்கதன் முதலானவர்களை ஏவி ஆகாயத்தில் இந்திரஜித்தை தேடச் சொல்லிவிட்டார். இந்திரஜித் நகரம் திரும்பிவிட்டான்.

லட்சுமணனை நாகாஸ்திரம் பாதிக்கவில்லை (அவர் ஆதிசேஷனுடைய அவதாரம் - என்று ஒரு மரபு உண்டு) பிரஜ்ஞையோடு விழித்து. ராமன் தன் பக்கத்தில் வீழ்ந்து கிடப்பதைக் கண்டார்.

நாகங்கள் வலுவாக லட்சுமணனை இறுக்கிக் கொண்டிருந்த படியால் கைகால்களை விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

ஸுக்ரீவனும் விபீஷணனும் அருகே வந்தனர். ஸுக்ரீவன் கைகளைத் தலையில் வைத்துக் கொண்டு ஹோ என்று அழுதான்.

ஹநுமான் ஆகாயத்தை துழாவினார். எதைத் தேடுகிறோம் - என்பதே விளங்காமல் ஆகாயத்தைப் பார்க்கிறார்.

இதனிடையே இந்திரஜித் அசோகவனத்திலிருந்த ஸீதாதேவியைப் புஷ்பகத்தில் ஏற்றி வந்து ராமலட்சுமணர் வீழ்ந்து கிடப்பதைக் காட்டினான். ஸீதாதேவி அதிர்ந்துவிட்டாள்.

''மஹான்கள் எல்லோரும் என்னை புத்ரவதி ஆவாய். உன் மாங்கல்ய பாக்கியம் அழிவற்றது என்றெல்லாம் ஆசீர்வதித்தார்களே அவையெல்லாம் பொய்யாகிவிட்டனவே.

என்னைத் தேடிக் கண்டு பிடித்து விட்டவர்கள் இப்படி அடிபட்டு கிடக்கிறார்களே''

த்ரிஜடை வந்தாள்.

விபீஷணகுமாரி கூறினாள். ஏன் அம்மா வீரக்ஷத்ரிய குலத்தில் பிறந்த நீங்கள் இப்படி அழலாமா? அவர்கள் ஜீவித்திருக்கிறார்கள் அம்மா! அவர்களுக்கு அழிவு கிடையாது. தைரியமாக இருங்கள்!

திரிஜடை தேவியை அழைத்துச் சென்றுவிட்டாள் - ஹநுமானின்ஆகாயத்தேடல் - எங்கிருந்தோ கருடனை அழைத்து வந்துவிட்டது.

கருடனை வழி மறித்து ஹநுமான் கீழே இறக்கினார். கருடனின் இறக்கைக் காற்று வீச்சுக் காற்று பட்ட உடனேயே - நாகங்கள் எல்லாம் - மறைந்து விட்டன.

இறங்கி ராம லட்சுமணர்களைப் பார்த்தார் கருட பகவான் - இருவரும் எழுந்துவிட்டனர்.

ஹநுமான் கலசத்தில் குளிர்ந்த நீர் கொண்டு வந்து கொடுத்தார். ராமலட்சுமணர்கள் முகம் பாதம் கழுவிக் கொண்டு புத்துயிர் பெற்றனர்.

கருடனுக்கே தமது பிரபுவின் அடையாளம் தெரியவில்லை. அவர் உபதேசம் செய்ய முனைந்தார்.

அரக்கர்கள் மாயாவிகள். அவர்கள் இப்படித்தான் யுத்த தர்மத்திற்கு மாறாக ஏதாவது செய்வார்கள்.

இது தர்மயுத்தமல்ல. தாங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

எல்லோரிடமும் உங்களுக்குப் பரிவும் அன்புமுண்டு. சத்ருக்களிடம் கூட உண்டு.

போர் முனையில் சத்ருவை சத்ருவாகக் கருத வேண்டும். தம்பியாகக் கருதக் கூடாது'' எனக்கு உத்தரவு அளிக்க வேண்டும் - என்று கிளம்பிவிட்டார்.

அரக்க ஸேநாதிபதிகள் ஒவ்வொருவராக வந்து மாண்டார்கள். ராவணனுடைய படையில் தலைசிறந்த வீரர்கள் அனைவரும் பலி ஆனார்கள்.

ராவணனே வந்தான். வாநர வீரர்கள் மோதினார்கள். அவர்களை ஒதுக்கிவிட்டு - ராமனைத் தேடி வந்தான்.

ஹநுமான் வந்தார். அவரிடம் குத்துப்பட்ட கதை முன்னொரு அத்யாயத்தில் படித்திருக்கலாம். ராமன் சற்று நேரம் - ராவணனுடன் வீரவிளையாட்டு ஆடிவிட்டு கடைசியாக அவனுடைய ரதம் குதிரை சாரதிகளை வீழ்த்தி - தரையில் இறங்கிப் போரிட்ட ராவணனை நிராயுதபாணியாக்கி எதிரே நிறுத்தினார். ராவணன் தொலைந்தோம் - என்ற முடிவுக்கு வந்து விட்டான்.

ராவண! உன் பராக்கிரமத்தை மெச்சுகிறேன் - நிராயுதபாணியாக - என்னோடு போரிட முடியாமல் - நிற்கிறாய்.

உன்னை நான் அடிக்க மாட்டேன். நீ தைரியமாகத் திரும்பிப் போகலாம். இஷ்டமானால் நாளை நீ போருக்கு வரலாம் என்று அனுப்பினார்.

ராவணன் அரண்மனை திரும்பினான். மந்தோதரி அவனுடைய புண்களுக்கு மருந்து தடவினாள்.

ராவணன் ராம பாணங்களின் தாக்கத்தை நினைத்து நினைத்து அப்பப்பா! என்ன பாடுபடுத்திவிட்டான் என்று குமுறினான்.

**ஸ்மரந் ராக$_4$வ பாணா நாம்**

**விவ்யதே$_2$ ராக்ஷஸேச்வர:**

ஹநுமான் மார்பிலே விட்டகுத்து அதனால் முன்னமே பதிந்த ஐராவத யானையின் தந்த முனை கடகடத்தது. வலியைப் பெருக்கியது.

கும்பகர்ணன் வந்தான். கடுமையாகப் போரிட்டான். விபீஷணனைப் பாராட்டி விட்டு உயிர் துறந்தான்.



# இந்திரஜித் போர்

இந்திரஜித் வந்தான். ராவணன் பிள்ளையிடம் அழுது தீர்த்துவிட்டான். பிள்ளாய்! மஹாவீரர்களைப் பறி கொடுத்து விட்டேன். கும்பகர்ணனும் போய்விட்டான். இனி என் வரும் காலம் உன் பராக்ரமத்தை நம்பி வாழ்கிறது.

''தந்தையே கவலைப்படாதீர்கள். என்ன செய்வேனோ தெரியாது, வெற்றி பெறாமல் திரும்ப மாட்டேன்.'' என்று தந்தைக்கு தைரியம் கூறிவிட்டுப் போருக்கு வந்தான்.

வாநரவீரர்களை யெல்லாம் உலுக்கிவிட்டான். ஆனால் வாநர வீரர்கள் அயரவில்லை. தளரவில்லை - அவனை நகரவிடாமல் தாக்கினார்.

இந்திரஜித் தன் போருக்கு ஒரு திட்டம் வகுத்துக் கொண்டான். அதன் படி செயல்பட்டான்.

மற்றவர்களின் தாக்குதல்களை லட்சியம் செய்யாமல் - வாநரவீரர்களை ஒவ்வொருவராக அஸ்திரங்களை பிரயோகித்து தான் அயர வைத்தான்.

ஸுக்ரீவன் அங்கதன் கந்த மாதனன் ஜாம்பவான் ஸுஷேணன் மைந்தன் துவி விதன் நளன் குமுதன் எல்லோரையும் படுக்க வைத்து விட்டான். ஹநுமான் விபீஷணன் ராம லட்சுமணர்கள் மீதம்.

அவர்களை ஒரே பிரம்மாஸ்திரத்தினால் தாக்கித் தீர்த்து விடுவது என அதற்காக மந்த்ர ஜபத்தில் இறங்கினான்.

ராமன் அவனுடைய திட்டத்தைப் புரிந்து கொண்டுவிட்டார்.

''லட்சுமண! இந்திரஜித் பிரம்மாஸ்திரம் போடப் போகிறான். அதை எதிர்த்து நாம் அஸ்திரம் போட்டால் இரண்டுமே எதிர்த்து மோதி - பிரபஞ்சமே நாசமாகிவிடும். அது மாபெரும்தவறு.

பிரம்மாஸ்திரத்தைக் கை கூப்பி வணங்கி வரவேற்றுவிட்டால் அதன் தாக்கம் லேசாகிவிடும். ஆகவே இந்த முறையே புத்திசாலிக்கு ஏற்றது.

**பாணாவ பாதாந் த்வமிஹாத்$_3$ய தீ$_4$மந்**
**மயா ஸஹாவ்யக்$_3$ர மநா: ஸஹஸ்வ ।**

இதையே ஹநுமானும் வீபீஷணனும் கடைப்பிடித்தனர். வானரப்படை அனைத்துமே அடிபட்டு வீழ்ந்து விட்டது.

இந்திரஜித் - ''ஸர்வநாசம் செய்துவிட்டேன் என்று தந்தையிடம் கூறிவிட்டுத் தன் மாளிகைக்கு சென்று விட்டான்.

இரவு வந்து விட்டது. கும்மிருட்டு. ஜாம்பவானும் விபீஷணனும் - கையில் தீவட்டிகளை ஏற்றிக் கொண்டு போர்க்களத்தில் தேடினதும் - ஜாம்பவான் ஹநுமானுடைய தனிப்பெருமையை விபீஷணனுக்கு விளக்கியதும் முன்னொரு அத்யாயத்தில் கூறப்பட்டன.

ஹநுமான் தனியாகப் பல வாநரவீரர்களை அடையாளம் கண்டு ஜாம்பவான் இருக்குமிடம் வந்து சேர்ந்தார்.



## ஸஞ்ஜீவி மலை கொணர்ந்தது

ஜாம்பவான்: ஹநுமந்தா உன்னைத்தான் விசாரித்தேன். நல்லவேளை நீ வந்து விட்டாய். உனக்கு அவசரக் காரியம் உள்ளது. நீ உடனே கிளம்பி ஹிமாலயம் சென்று கைலாசத்தைத் தாண்டியுள்ள ஸஞ்ஜீவி மலையைக் கொண்டு வர வேண்டும்.

அங்கு ஜீவர்களின் ஸகல வியாதிகளையும் தீர்க்கக்கூடிய மூலிகைகள் உள்ளன. உயிர் பிரியும் தருவாயில் முகர்ந்தால் - புத்துயிர் தரக்கூடிய மூலிகைகள் உள்ளன. அவற்றை எடுத்து வர வேண்டும்'' என்றான்.

ஹநுமான் பறந்தார். ஓஷதீபர்வதம் சேர்ந்தார். மூலிகைகளைத் தேடினார். அவைகள் மறைவாகிவிட்டன.

ஹநுமானுக்கு கோபம் வந்து விட்டது.

''மலையே - உனக்கு ராகவனிடம் கருணை இல்லையா? இதோ பார்! உன்னை உலுக்கிப் பெயர்த்து கொண்டு போய் விடுகிறேன்.

**கிமேத தே$_3$வம் ஸுவிநிச்சிதம் தே**

**யத்$_3$ ராகவே நாஸி க்ருதாநுகம்ப:।**

**பச்$_+$யாத்$_3$ய மத்ப$_3$ாஹு ப$_3$லாபி$_4$பூ$_4$த:**

**விசீர்ண மாத்மாந$_3$ம் அதே$_2$ா நகே$_3$ந்த்ர ॥**

மலையைப் பிடுங்கிக் கொண்டு இடது கையில் தாங்கி ஆகாயத்தில் எம்பினார். மலை முகடு மூலிகைகளுடன் ஜொலித்தது.

மலைச்சிகரத்துடன் பறந்து வருகின்ற ஹநுமானை வெகு தூரத்திலேயே கண்டு ஆரவாரித்து -ஜய ஸ்ரீஸீதாராம் என்று வரவேற்றனர் வாநரர்கள்.

வெகு எட்டத்திலேயே மலையில் உள்ள மூலிகைகளின் நெடியை நுகர்ந்த ராம லட்சுமணர்களும் அடிபட்டு மயங்கிக் கிடந்த வாநரர்களும் எழுந்தனர்.

*தாவப்யுப$_4$ள மாநுஷ ராஜபுத்ரௌ*
*தம் க$_3$ந்த$_4$ம் ஆக்$_4$ராய மஹௌஷதீ$_4$நாம்*
*ப$_3$பூ$_4$வதுஸ்தத்ர தத$_3$ா விச$_+$ல்யௌ*
*உத்தஸ்து$_2$ ரந்தே$_4$ச ஹரிப்ரவீரா:*

போர்க்களத்தில் அன்றாடம் அடிபட்டு இறந்த அரக்கர்கள் உடல்களை அரக்கர்கள் கடலில் இழுத்துப் போட்டு விடுவார்கள். படை நாசத்தை மக்கள் பார்த்தால் பயந்து நம்மிடம் நம்பிக்கை இழந்து விடுவார்கள் என்று நினைத்து ராவணன் செய்த காரியம். அதனால் அவர்கள் பிழைக்கவில்லை.

போர் ஆரம்பித்தது முதல் அடிபட்டு வீழ்ந்து கிடந்த வாநரர்களின் உடல்கள் அகற்றப்படவில்லை. அதனால் அவை அத்தனையும் உயிர் பெற்று எழுந்தன.

இந்திரஜித் மறுபடியும் வந்து வாநரர்களைத் தாக்கினான். மறைந்து நின்று வாநரர்களையோ, ராம லட்சுமணர்களையோ அடிப்பானோ - என்று ஹநுமானுக்கு அடிவயிற்றில் பயம் வந்தது. அப்படி ஒன்றும் நிகழவில்லை.

- ஹநுமானும் விபீஷணனும் சுக்ரீவனும் - வாநரப்படைகள் களத்தை விட்டுப் ஓடுவதைப் பார்த்தனர். அவர்களை அறை கூவி அழைத்தனர்

சுக்ரீவன் கடுமையாக எச்சரித்தார். ''நீங்கள் எங்கு ஓடினாலும் உங்களை விடமாட்டேன். ராமபிரானுடைய ஸந்நிதியில் எவருக்கும் எந்த ஆபத்தும் வராது. வீரர்களானால் போரிடுங்கள். சோம்பேறிகளானால் தூங்குங்கள். எவரும் போர்க்களத்தின் எல்லைத் தாண்டக்கூடாது'' என்று கர்ஜனை புரிந்தான். வாநரர்கள் திரும்பிவிட்டனர்.

இந்திரஜித் - ஆகாயத்தில் விமானத்தில் - ஸீதையை ஏற்றிக் கொண்டு வந்து வெளிப்பட்டான். ஹநுமான் பார்த்து விட்டார். ஜய ஸீதாராம என்று கோஷம் போட்டார். வாநரர்கள் எதிரொலித்தனர்.

இந்திரஜித் எதிர்கர்ஜனை புரிந்தான்.

என்னங்கடா கூச்சல் போடுகிறீர்கள்? உங்கள் கூச்சலுக்கும் பயப்படுபவன் ராவணேச்வரனோ நானோ அல்ல. இதோ பாருங்கள் உங்கள் ஸீதையை! இவளுக்காகத் தானே இங்கே வந்து கொக்கரிக்கிறீர்கள்? பாருங்கடா.

இதோ இந்த இளைத்துப் போன பெண் பிள்ளையை என்ன செய்யப் போகிறேன் - தெரியுமா? இதோ உடைவாள். இதனால் இப்படி ஒரு வீச்சு வீசுவேன். இடது தோளிலிருந்து இடுப்பு வலது புறம் வரை பிளந்து இதோ பாருங்கள் - இரண்டு துண்டாக வீழ்ந்து விட்டாள்''.

சொல்லி முடிக்குமுன் செய்துவிட்டான். ஹநுமான் பாய்ந்தார். அடப்பாவி உன்னை விட்டேனா பார்- என்று பாய்ந்தார்.

இந்திரஜித் மறைந்துவிட்டான். ராமன்- ஆஸனத்தில் அமர்ந்திருந்தவர் வாநரர்களின் அதிர்ச்சியோடு கூடிய பெரும் கூச்சலைக் கேட்டு எழுந்திருந்தார். லட்சுமணன் வில்லில் நாணேற்றி - அம்புறாத்தூணியிலிருந்த ஒரு அம்பை எடுத்துத் தொடுத்து ராமனின் பக்கலில் நின்றான்.

ஹநுமான் பறந்து வந்து - பிரபுவின் காலில் வீழ்ந்தார். பரப்பரப்போடு ராமன் அவரைத் தூக்கினார்.

ஹநுமான் ராமனுடைய இடது கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

பிரபோ! அநியாயம் நடந்து விட்டது - என் கண் பார்க்க - அந்த மாயாவி இந்திரஜித் அன்னை ஜாநகியை - உடைவாளினால் இரு கூறாகக் கிழித்துப் போட்டுவிட்டானே!

ராமன் ஹநுமானின் துடிப்பை உணர்ந்தார். நிமிர்ந்து பார்த்தார். எதிரே பரமேச்வரன் நின்றார்.

''ராம! இனிப் பொறுக்கமாட்டேன் - சூலத்தினால் லங்கையைத் தலைகீழாகப் புரட்டி கடலுக்குள் புதைத்துவிடுகிறேன்.

''விடுங்கள் கையை''

என்று உதறினார். ராமன் விடவில்லை.

மேருஸமான தீரனாக அசையாத மலையாக நின்றார்.

லட்சுணன் வில்லைக் கீழே போட்டுவிட்டு அண்ணாவை அணைத்துக் கொண்டு போய் ஆஸனத்தில் அமர்த்தினார்.

ராமனுடைய ஸ்தம்பித்த நிலை அங்கு கூடியிருந்த அங்கதன் ஜாம்பவான் சுக்ரீவன் அனைவரையும் பற்றிக் கொண்டது. குத்திட்ட பார்வையுடன் திகைத்து நின்றார்கள்.

லட்சுமணன் கொதித்து எழுந்தான்.

''அண்ணா- பார்த்தீர்களா? தர்மம் தர்மமென்று அரசை இழந்தீர்கள். காட்டிற்கு வந்தீர்கள். கேடு கெட்ட ராவணனுக்கு தூது அனுப்பினீர்கள். இதெல்லாம் தர்மம் தானே!

அந்த தர்மம் எங்கே கொண்டுவிட்டிருக்கிறது பார்த்தீர்களா?

தந்தையைத் தூணில் கட்டிப் போட்டு உங்களுக்கு பட்டாபிஷேகம் பண்ணி வைக்கிறேன் என்றேன். கேட்டீர்களா! கேட்டிருந்தால் மதனியாரை இழந்திருப்பீர்களா?

இது மாயமான். மாயமானைத் துரத்திப் போகாதீர்கள் - என்றேன் கேட்டீர்களா'' என்றுமே ஒன்றும் கேட்காத தேவி கேட்டு விட்டாளே. நான் தான் போவேன் என்று போனீர்களே!

நான் சொல்வதைக் கேட்டு என்னை மான் வேட்டைக்குப் போகச் சொல்லியிருந்தால் - மதனியை இழந்திருப்பீர்களா.

தனயன் தர்மம் கணவன் தர்மம் - மாற்றாந் தாய் தர்மம் எல்லாம் எங்கே?

- நிராயுத பாணியான நின்றவனை ஒரு பாணம்

போட்டு தீர்த்துக் கட்டியிருக்கலாமே! யுத்த தர்மம் பேசினீர்களே.

இத்தனை தர்மங்களும் உங்களைத் தக்க தருணத்தில் காப்பாற்ற வில்லையே.

மதனியை இழந்துவிட்டேளே! என் தாய்க்கு நான் என்ன பதில் சொல்வேன்? - ஸீதை உன் தாய் என்று கூறினாளே. தாயைப் பறி கொடுத்து விட்டேனே.

செத்துவிடலாம் - என்று தோன்றுகிறது அண்ணா! உங்களை இந்த நிலையில் விட்டு விட்டு - நான் செத்தாலும் எனக்கு நிம்மதி கிடைக்குமா!

ஸ்ரீராமன் கண்களில் ததும்பியிருந்த கண்ணீர் - ராமன் விட்ட பெரு மூச்சின் உஷ்ணத்தில் ஆவியாகி விட்டது.

விபீஷணன் எங்கிருந்தோ ஓடி வந்தார்.

''ப்ரபோ - கடல் முற்றிலும் வற்றிவிட்டது.''

ராமன்: கடல் வற்றிவிட்டதா? என்ன சொல்கிறீர் விபீஷணா கடல் வற்றுமா?

விபீஷணன்: கடல் வற்றாதல்லவா! அது போல தேவியும் சாகவில்லை. அசோகவனத்தில் ராம நாமம் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

ராமனுடைய முகத்தில் இருந்த இறுக்கம் தளர்ந்தது. தெளிவான ப்ரஸந்நமான முக மண்டலம் - லட்சுமணனை நோக்கியது.

லட்சுமணன் கூசிக் குறுகி நின்றார். ராமன் அவரை இழுத்து - அணைத்துக் கொண்டார். விபீஷணன் மேலே பேசினார்.

ப்ரபோ! மிக்க அவசரம். இந்திரஜித் மாயவித்தை கடினமாக்கி காட்டி நம்மை சோகத்தில் ஆழ்த்திவிட்டு குகையில் போய் - நிகும்பிலை - என்ற மஹா கொடிய யாகத்தை அனுஷ்டிக்க முனைந்திருக்கிறான்.

அது முடிந்து விட்டால் அவனை ஜயிப்பது கடினமாகி விடும். அவனை அந்த யாகம் செய்யவிடாமல் தடுக்க வேண்டும்.

ராமன்: நிகும்பிலை என்று யாகத்தின் பேரால் ஒன்று நடக்கிறதா? யாகம் என்றால் உலக நன்மைக்காகச் செய்யப்படுகின்ற தியாகம் என்றல்லவா பொருள்?

விபீஷணன்: இது ராக்ஷஸகார்யம். அதர்வண வேதத்தில் - ஆபிசாரகர்மாவாக சொல்லப்பட்டு இருக்கிறது. உலக நன்மைக்காக யாரும் இந்த யாகத்தைச் செய்வதில்லை

- தன்னலம் கருதி - வேண்டாத பகையைத் தீர்த்துக் கொள்வதற்காக ஏவல்விடுகின்ற யாகம் நிகும்பிலை யாகம். ஆகவே அதை முடிக்கவிடாமல் தடுக்க வேண்டியது முதல் காரியம்.

அடுத்து அவன் வேறு திட்டத்தில் இறங்குவதற்கு முன் அவனைப் போருக்கு இழுத்து அவனுக்கு ஓய்வு கொடுக்காமல் போர் புரிந்து அவனை ஒழிக்க வேண்டும். இன்றேல் அவன் வேறு ஏதாவது மாயச்சூழ்ச்சி செய்து வீணான சங்கடத்தை விளைவிப்பான்.

ராம: லட்சுமண! நீ கிளம்பு. ஹநுமான் விபீஷணன் சுக்ரீவன் அங்கதன் ஜாம்பவான் மற்றவீரர்களையும் அழைத்துக் கொள்.

மஹாராஜா! விபீஷண மஹாராஜா சொன்னது போல் - வாநரர்கள் நீண்ட போருக்குத் தயாராக வேண்டும். உடனே கவனியுங்கள்.

ஹநுமந்தா ..........................

திரும்பிப் பார்த்தார். காணோம்.

ராமன்: எங்கே போனான்?

விபீஷணர் சொன்ன முதல் காரியம் முடித்தாயிற்று. முன்னாலேயே கீலாலன் ஓடி விட்டான். பத்து பதினைந்து இளைய வீரர்களை அழைத்துக் கொண்டு- நிகும்பிலா யாக சாலைக்குப் போய் சந்தடி செய்யாமல் கொட்டகையின்

*மீதேறி கொட்டகை நடுவில் புகை போக்கி இடைவெளியில் சுற்றிவர நின்று சிறுநீர் கழித்தார்கள்.*

*இந்திரஜித் தலை தூக்கிப் பார்த்தான் அவனுடைய கண்களில் சிறுநீர் சுரீரென்று பாய்ந்தது. கண்களைக் கசக்கினான் - ஒரே புகை. அக்நி அவிந்து விட்டது அவர்களை பிடிக்க முடியாமல் அரக்கர்கள் கண்களைக் கசக்கிக் கொண்டிருந்தனர்.*

*ஹநுமான் இந்திரஜித்தைப் பிடித்து இழுத்தான். இந்திரஜித் சீறிக்கொண்டு போர்க்களம் வருகிறான். இந்தச் சேதி சொன்னவர் ஹநுமான்.*

*சரி லட்சுமணனை - கவனித்துக் கொள்ளுங்கள். லட்சுமணன் மௌனமாக - போருக்கு ஆயத்தமானார். அம்புறாத்தூணிகளில் அம்புகளை நிரப்பிக் கொண்டார்.*

*வாநரவீரர்களிடம் சில அதிகப்படி அம்புறாத் தூணிகளைச் சுமந்து வரச் சொல்லி தன்னோடு அழைத்துக் கொண்டார். அண்ணலை வணங்கினார்.*

*ராமன் லட்சுமணனை அணைத்துத் தூக்கி அவருடைய கலங்கிய கண்களைத் துடைத்து விட்டார். தைரியமாகப் போ! ஜய விஜயீ பவ - என்றனுப்பினார். ஜயஸீதாராம என்று கோஷித்துக் கொண்டு படை கிளம்பியது.*



## லட்சுமணன் ஓதிய மந்திரம்

லட்சுமணர் நின்று நிதானமாக நடந்தார். மனதில் பெரும் சுமை.

''அண்ணலைப் பலர் மத்தியில் ஏசிவிட்டோமே!

எந்த ஆதாரத்தில் ஏசினோமோ அந்த ஆதாரமே பொய்யென்று ஆகிவிட்ட பிறகு - என் ஏச்சு பெரிய பாபகாரியமாகிவிட்டதே.

**கேவலம் தர்மம் ஆஸ்தி$_{2}$தம்.** தர்மம் ஒன்றே என் வாழ்வில் லட்சியம் என்று உறுதியாகக் கங்கணங்கட்டிக் கொண்டு வனத்துக்கு கிளம்பிய அண்ணலைப் பார்த்து - உங்கள் தர்மம் அர்த்த மற்றது - என்று சொல்லிவிட்டேனே. என்ன கொடுமை செய்து விட்டேன்?

அவருடைய லட்சியமே வீண் - என்று சொல்லிவிட்டால் அவருடைய வாழ்வே வீண் - என்று தானே அர்த்தம்.?

அது அவரை உயிரை முடித்துக் கொள்ள வேண்டியதாக முடிந்ததே.

இது வரை பல தடவை அவருடன் வாக்குவாதம் செய்திருக்கிறேன். அவற்றையெல்லாம் பொறுமையாகக் கேட்டு நியாயத்தை எடுத்துச் சொல்லி - என் தவறான கருத்துக்களைத் திருத்தியிருக்கிறாரே!

இன்று எல்லை மீறிய என் துடுக்குத் தனத்தைப் பொறுமையாக சகித்து பதிலே சொல்லாமல் என்னைப் போருக்கு அனுப்பிவிட்டாரே!

அவருடைய உள்ளம் எவ்வளவு புண் பட்டிருக்கும்? பத்தினியைப் பறி கொடுத்துப் பரிதவித்துக் கொண்டிருக்கும் நிலையில் அவருக்கு ஆறுதலாக இருக்க வேண்டிய நான் எவ்வளவு கொடுமையாற்றி விட்டேன். இதற்குத் தானா அவரோடு வந்தேன்?

லட்சுமணனுடைய உள்ளம் குமுறியது. போர்க்களத்தில் ஒரு பக்கம் விபீஷணனும் மறுபக்கம்

ஹநுமானும் அவரை ஊக்கப்படுத்தி வந்தனர். மூன்று நாட்கள் இடைவிடாத போர்.

இந்திரஜித் மாயைகள் பல புரிந்தான். அத்தனையும் இனம் கண்டு விபீஷணர் லட்சுமணரை உஷார்ப் படுத்தினார்.

லட்சுமணன் விடுகின்ற பாணங்கள் எல்லாம் இலக்குத் தவறின. ஹநுமான் பல அஸ்திரங்களை நினைவூட்டினார். லட்சுமணன் அவற்றை சரிவர உச்சரிக்க முடியாமல் தடுமாறினார்.

ஹநுமான் அங்கதனையும் நீலனையும் அழைத்து இந்திரஜித்தைத் தம் பால் ஈர்க்கும்படி ஏவினார் - அங்கதனும் நீலனும் பாய்ந்து பாய்ந்து பல மரங்களையும் பர்வதங்களையும் - மாற்றி மாற்றி இந்திரஜித் மீது ஏவினர்.

லட்சுமணனைத் தனித்து அழைத்தார் - ஹநுமான்.

''என்ன இப்படி இருக்கிறீர்கள்? இது போர்க்களமல்லவா? சிறிது கவனம் கலைந்தாலும் மிகப் பெரியவிபத்து நேரிடுமே''

லட்சுமணன்: ஹநுமந்தா! நான் என் சொல்வேன். என் மனது கொந்தளிக்கிறதே என்று மனதைத் திறந்து தன் வேதனையைக் காட்டினார்.

ஹநுமான்: போனது போகட்டும் இப்பொழுது - என்ன நினைக்கிறீர்?

ராமனுடைய தர்ம நிலை சரி தானா?

லட்சுமணன்: தர்மம் தான் தலைக் காக்கிறது. இப்பொழுது நாங்கள் இருக்கின்ற கொடிய ஆபத்தான நிலையில் தர்மம் தான் தலை காக்கிறது

ஹநுமான்: தர்மம் - என்பது ஸத்யம் தானா?

லட்சுமணன்: இதென்ன கேள்வி?

ஹநுமான்: ராமன் தர்மத்தைத் தவிர வேறொன்றையும் சாராத பௌருஷம் உள்ளவர் தானா?

லட்சுமணன்: முக்காலமும் அதுவே உண்மை

ஹநுமான்: அந்த உண்மையை நீங்கள் நம்புகிறீர்களா?

லட்சுமணன்: அசைக்க முடியாத அந்த நம்பிக்கை என் உள்ளத்தில் ஊன்றிவிட்டது.

ஹநுமான்: திடமாக ஊன்றிவிட்டதா என்பதில் எனக்கு சந்தேகம் இருக்கிறது.

லட்சுமணன்: அந்தரங்க சுத்தியாகச் சொல்லுகிறேன். சிறிது கபடமோ மாற்று எண்ணமோ கிடையாது.

ஹநுமான்: வேறு மந்திர தந்திரங்கள் வேண்டாம். போர்க்களத்தில் இந்திரஜித்தை - ஒரு பாணம் விட்டு உம்பால் அவன் கவனத்தை திருப்புங்கள். வில்லில் ஓரம்பைப் பூட்டுங்கள்.

''என்ன அண்ணல் ராமன் தர்மாத்மா தான். ஸத்யஸந்தன் தான். தர்மத்தைக் காப்பதே பௌருஷம் - என்ற திடமான விரதம் கொண்டவன் தான் என்றெல்லாம் நான் நம்புவது ஸத்யமானால் - ''ஏ அம்பே இவனைக் கொல்'' என்று சொல்லி ஏவுங்கள்.

லட்சுமணன் அவ்விதமே செய்தார்.

அது இந்திரஜித்தின் இதயத்தைத் துளைத்தது. ஆத்மாவை வெளியேற்றியது. உடல் வீழ்ந்தது.

தேவர்கள் பூமாரி பெய்தனர். ஜயஸ்ரீராம ஜய ஸீதாராம் - என்ற கோஷம் வானைப் பிளந்தது.

லட்சுமணனைக் கைத் தாங்கலாக விபீஷணனும் ஹநுமானும் அழைத்து வந்தனர்.

லட்சுமணனுக்குப் பரம சந்தோஷம் ''அண்ணாவை - என் வாழ் நாள் முழுதும் தவறாக நினைக்கமாட்டேன். அவர் செயலை ஆராயமாட்டேன் - என்று ஹநுமானிடம் கூறிக் கொண்டே வந்தார்.

விஷ்ணு தர்மோத்தரம் - என்ற புராணத்தில் ஹநுமான் லட்சுமணனுக்கு உபதேசித்த இந்த மந்த்ரம் உள்ளது.

***த$_4$ர்மாத்மா ஸத்யஸந்த$_4$ச்$_+$ச***
***ராமோ தாசரதிர்யதி$_3$ |***
***பௌருஷேசாப்ரதி த்து$_3$வந்த்$_3$வ:***
***சரைநம் ஜஹி ராவணிம் ||***

*ஸ்ரீ மத்ராமாயணத்திற்கே மூலமந்திரம். அப்படி அந்த மந்த்ரத்தை ஜபித்து ராமாயணம் படிப்பவனுக்கு ராம நாமம் சொல்பவனுக்கு ஸாந்தானிகம் என்ற ரகுவீரனுடைய லோகத்தில் சாச்வதமான ஸ்தானம் உண்டு. ஸாந்தானிகம் என்று வைகுண்டத்திற்கு மற்றொரு பெயர்.*

*நல்லஎண்ணமுள்ளவன் ஏதோ ஒரு இடரலால் தவறு செய்து விட்டால் பச்சாத்தாபப்படுவது இயல்பு தான். அந்தப் பச்சாத்தாபம் வாழ்நாள் முழுதும் அவன் உள்ளத்தை உருத்திக் கொண்டே இருக்கும். அந்தத் தவறு திருத்த முடியாமலே போய் விட்டால் அந்த தாபம் அவனை உருக்கிவிடும்.*

*தைவச் செயலால் அந்தத் தவறு திருத்தப்பட்டு விட்டால் - தவறிழைத்தவன் பிழைத்தோம் என்று ஆறுதல் அடைவான்.*

*லட்சுமணன் இவ்விதம் ஆறுதல் அடைந்தாலும் - கூட மீண்டும் அத்தகைய தவறு செய்யக் கூடாது என்று உறுதியோடு தன்னைத் திருத்திக் கொண்டு விட்டார்.*

*அத்தகைய திருத்தத்தை ஹநுமான் லட்சுமணனுக்கு செய்து வைத்தார் என்பது தான் இங்கு ஸாரம்.*

*கூடாரம் திரும்பிய வெற்றி வீரன் லட்சுமணனை ஓடோடி வந்து ராமன் கைநீட்டி ஆலிங்கனம் செய்து கொண்டார். லட்சுமணன் உடல் இந்திரஜித்தின் பாணங்களால் சல்லடைக் கண்ணாகத் துளைக்கப்பட்டிருந்தது.*

*ஸுஷேணரை அழைத்து ''தம்பியை கவனியுங்கள். வலிக்கு ஒத்தடம் கொடுங்கள். புண்களுக்கு மருந்து போடுங்கள் என்றார்.*

## ராவணன் முடிவு

போர் ஆரம்பிப்பதற்கு முன் ராவணன் வீறாப்பு பேசினான். யுத்த ரங்கத்தில் நான் என் ஆயுதங்களைக் கொண்டு வீணை வாசிப்பேன் என்றான்.

எவருக்கும் தலை குனியமாட்டேன் என்றான். போர் வலுத்து சேதங்கள் அதிகமானவுடன் சொன்னவன் மாற்றிச் சொன்னான்.

எதிரியைக் குறைத்து மதிப்பிடக் கூடாது என்றான்.

நெருக்கடி அதிகமானவுடன் வந்திருக்கின்ற எதிரி ஸாக்ஷாத் நாராயணன் போலிருக்கிறதே - என்று தயங்கினாள்.

இந்திரஜித் அழிந்த பிறகு- நாம் தனியாக விடப்பட்டோம். எதிரி - நமக்கு முடிவு கட்டியே தீருவான் என்று உணர்ந்தான் அந்த நிலையில் ராவணனுடைய மனைவி ஹிதோபதேசம் செய்தாள்.

''நாத! நான் சொல்வதைக் கேளுங்கள் பட்டதெல்லாம் போதும். எனக்கு அநுமதி கொடுங்கள். நான் ஸீதாதேவியைக் கொண்டு போய் ராமனிடம் சேர்த்துவிடுகிறேன். எங்களை விட்டுவிடுங்கள் - என்று வேண்டிக் கொள்கிறேன்''.

ராவணன்: ப்ரியே தம்பிகளையும் பிள்ளைகளையும் வீரதீர ஸேநாதிபதிகளையும் பறி கொடுத்துவிட்டு நான் சரணடைந்து தப்பிக்க நினைத்தால் இறந்தவர்களின் ஆவி என்னைச் சித்ரவதை செய்யும்

மாறாக நான் வெற்றி பெற்றால் அவர்கள் எனக்காக உயிர்விட்டது ஸபலம் ஆகும். ஆகவே போரிட்டு உயிரைவிட்டாலும் விடுவேன். பின் வாங்க மாட்டேன்.

இன்னொன்று நீ கொண்டு விட்டால் ஸீதையை அவர் ஏற்றுக் கொண்டு திரும்பிப் போய்விட மாட்டார். என்னை தண்டித்தே தீருவார்.

*மந்தோதரி: அப்படியானால் - நான் மாங்கல்யத்தை இழக்கத்தான் வேண்டுமா?*

*ராவணன்: என் பெயர் சாச்வதமாக உலகில் புகழுடன் இருக்கத்தான் போகிறது. அதுவரை நீ ஸுமங்கலி தான். உன் மாங்கல்யத்திற்கு அழிவே கிடையாது.*

*மண்டோதரி: அப்படியானால் பேசாமல் அந்தப்புரத்தில் இருந்துவிடுங்கள். நீங்கள் போரிட்டால் தானே உங்களை அவர் வதைப்பார்.*

*ராவணன்: எத்தனையோ போர்களில் நான் வெற்றி பெற்றுப் புகழடைந்திருக்கிறேன். அந்த வீரன் ராமனுக்கு பயந்து வீட்டில் ஒளிந்து கொண்டிருக்கிறான் - என்று ஜனங்கள் சிரித்தால் அதுவா எனக்குப் புகழ்?*

*மண்டோதரி: சரி போருக்குப் போங்கள். அங்கு போய் அவர் மீது பாணங்களைப் பொழிந்து அபசாரப்படாதீர்கள். பேசாமல் கைகூப்பி நில்லுங்கள். அவராக உங்களை அடித்தால் நீங்கள் வீரஸ்வர்கம் போகலாமே.*

*ராவணன்: கைகூப்பி நிற்பவனை ராமன் அடிக்க மாட்டான். அவருடன் போரிட்டு அவரை ஜயிப்பேன்.*

*மண்டோதரி: இன்னும் உங்களுக்கு ராமனை ஜயித்து விடமுடியும் - என்ற நம்பிக்கை இருக்கிறதா?*

*ராவணன்: மந்தோதரி! பிறந்தவன் என்றேனும் அழியத்தான் வேண்டும். ராமனையே வென்ற ராவணன் ஒரு நாள் மூச்சுவிட மறந்து போனான். செத்தான் - என்றால் அது எனக்கு ஒரு புகழா?*

*ராமனோடு போரிட்டு ராமன் பாணத்தை மார்பிலே தாங்கி உயிர்விட்டான் - என்றால் அதுவல்லவா எனக்குப் புகழ்.*

*ஆகவே - நான் தீர்மானித்துவிட்டேன் - ராமனிடம் எனக்குப் பகை இல்லை. கோபமில்லை. அவன் மஹாவீரன். அந்த மஹாவீரன் கையால் அடிபட்டுத்தான் சாவேன். இது என் ஸங்கல்பம்.*

ராமனுக்கு என்ன எண்ணம் தெரியுமா? ஜயித்துவிட வேண்டும். தன் காலில் விழவைக்க வேண்டும். நாம் அவனைக் காப்பாற்ற வேண்டும். நமக்கு பதித பாவநன்'' என்ற புகழ் வர வேண்டும் என்று அவன் ஸங்கல்பம்.

அவனுக்கும் என்னிடம் துவேஷம் கிடையாது . கோபம் கிடையாது. குற்றம் புரிந்தவனையும் காலில் விழுந்தால் மன்னிக்க வேண்டும் என்று தான் ஸங்கல்பம் இந்தப் போட்டியில் - நான் வெற்றி பெறுவது நிச்சயம்.

**ஜேதவ்ய மிதி ராமோஸௌ**

உயிரோடு எனனை ஜயித்துவிடலாம் என்ற அவருடைய ஸங்கல்பம் பலிக்காது. இந்தப் போட்டியில் எனக்கே வெற்றி நிச்சயம். **மர்த்தவ்யம் இதி** ராவண: கலங்காதே - என்று மண்டோதரிக்கு மனதில் சமாதானம் அளித்தான்.

போருக்குப் புறப்பட்டு விட்டான். ராவணனுடைய இந்த மனப்பாங்குக்கு ஸம்ரம்ப யோகம் - என்று பெயர்.

ஜயவிஜயர்களுக்கு பூமியில் பிறக்க வேண்டுமென விதி வந்தபோது - பகவான் அவர்களுக்கு ஒரு ஆணையிட்டார். ''மூன்று பிறவிகளிலும் - நீங்கள் என்னை எதிர்த்து - ஸம்ரம்ப யோகத்தின் மூலம் என் திருவடி சேர்வீர்கள்'' இப்படி ஸம்ரம்பயோகம் அநுஷ்டித்து பகவானிடம் ஸபாஷ் பட்டம் பெற்றவன் ராவணன் ஒருவன் தான்.

ராமனுடையவிருதுகளில் ஒன்று

**ஸம்ரம்ப$_4$ யோக ரத ராவண கும்பகர்ண**
**வீர்யோ பஹார ரஸிகோத்தம ராம ராம**

முன் போர்களில் பின் தங்கிய அரக்கவீரர்கள் ராவணனுடன் புறப்பட்டனர்.

## மீண்டும் ஸஞ்ஜீவி மலை

*ஸஞ்ஜீவி மலை கொணர்ந்தார் ஹநுமான்,*

*அங்கதனும் ஹநுமானும் - மாற்றி மாற்றி அந்த வீரர்களை வதைத்தனர்.*

*ராவணன் - நெருக்கடியில் திகைத்தான். அவனிடம் சக்தி என்ற ஓராயுதம் இருந்தது. மிகவும் யந்திர வலிமை உள்ள அந்த ஆயுதத்தை கையாள்வது கடினமான காரியம்.*

*ஆகவே முந்தைய போர்களில் ராவணன்அதை உபயோகித்ததே இல்லை. அதைத் தனி ஒருவனாகக் கையாள முடியாது. உதவியாளர்கள் இருவர் அதைக் கையாள்வதில் விற்பன்னர்கள். அவர்களைத் துணை கொண்டான். அதைக் கொண்டு வரும் போதே அது கொழுந்து விட்ட ஜ்வாலையுடன் நாற்புறமும் தகர்த்தது.*

***ஜஜ்வால ஸுமஹா கோரா***

***வஜ்ராசநி ஸமப்ரபா!***

*அதை லட்சுமணன் மீது ஏவுவதற்கு முனைந்தான். லட்சுமணன் ராவணனை செயல்படவிடாமல் அஸ்திரங்களால் துளைத்தான்.*

*எட்டுப் பெரிய மணிகள் கோரமாக ஒலி எழுப்பின. அது பாய்ந்து வருவதைப் பார்த்து விபீஷணன் அதன் முன்னே லட்சுமணனுக்கு முன்னே நின்றான். லட்சுமணன் விபீஷணனை இடது கையால் இழுத்து அப்புறம் தள்ளினார்.*

*ராமன் எட்டியிருந்து லட்சுமணன் மீது சக்தியாயுதம் பாய்ந்து வருவதை கவனித்து விட்டார். அபயஹஸதம் நீட்டி ''லட்சுமணனுக்கு மங்களம் உண்டாகட்டும்'' அவ்வாயுதம் வலிமையற்றுப் போகட்டும் என்று மனதார நினைத்தார்.*

***ஸ்வஸ்த்யஸ்து லக்ஷ்மணா யேதி ।***

***மோக$_4$ா ப$_4$வ ஹதே$_3$ாத் யமா ॥***

அது லட்சுமணனடைய மார்பில் பாய்ந்தது. லக்ஷ்மணன் தரையில் சாய்ந்தார். ராமன் வெலவெலத்துப் போய் விட்டார். ஓடி வந்து - லட்சுமணனை அழுத்திக் கொண்டிருந்த சக்தி ஆயுதத்தை கையால் தடவினார்.

அது வலிவிழந்து லட்சுமணனுக்கு மட்டும் லேசாகிவிட்டது.

வாநரவீரர்களை லட்சுமணனைச் சுற்றிப் பாதுகாப்பாக நிற்கச் சொல்லிவிட்டு சவால் விட்டார்.

***''முடிவு காலம் வந்துவிட்டது''***
***ஒன்று ராவணன் ஒழிய வேண்டும்***
***அல்லது ராமன் ஒழிய வேண்டும்***

அதை இப்பொழுதே உலகம் காணட்டும்.

***அராவணம் அராமம் வா***
***ஜகத் த்ரக்ஷ்யத வாநரா:***

அரசிழந்து வனம் வந்து தண்டக வனத்தில் அலைந்து - தேவியை இழந்து துயரங்கள் அலை அலையாக என்னைத் தாக்குகின்றன. இத்தனை துயரங்களுக்கும் காரணமாக ராவணன் என் கண்ணில் பட்டுவிட்டான். அவன் உயிரோடு திரும்ப மாட்டான்.

***சக்ஷுர் விஷய மாகம்ய***

***நாயம் ஜீவிது மர்ஹதி***

உலகம் ராமன்யார் என்பதை தெரிந்து கொள்ளட்டும்.

***அத்$_3$ய ராமஸ்ய ராமத்வம்***

***பச்$_+$யந்து மம ஸம்யுகே$_3$ ||***

ஸுஷேண! லட்சுமணனுக்கு சிகித்ஸைக்கு ஏற்பாடு பண்ணு. இவன் ப்ராணனை இழந்து விட்டால் இனி நான் வாழ்வதில் அர்த்தமில்லை.

மனைவியை இழந்தேன். நான் நினைத்தால் வேறு மனைவியை அடையலாம். மற்ற உறவினரையும்

அடையலாம். ஆனால் லட்சுமணனைப் போல ஒரு தம்பி அகில உலகிலும் எனக்குக் கிடைக்க மாட்டான். இவனை இழந்து விட்டால் நான் இறப்பதே மேல். **இஹைவ மரணம் ச்ரேய:**

லட்சுமண! எழுந்திரப்பா! நான் கண்ணீர் விட்டால் நீ துடித்துப் போவாயே! ஏன் படுத்துக்கிடக்கிறாய்?

ஸுஷேணன் ராமனிடம் கூறினான். ப்ரபோ! லட்சுமணன் உயிரோடு இருக்கிறார் கவலைப்பட வேண்டாம். ஹநுமந்தா முன்பு கொண்டு வந்தாயே - ஒஷதிமலை. அதன் வலது புறத்தில் ஒரு மூலிகை மண்டிக் கிடக்கும். அவற்றையெல்லாம் பறித்துக் கொண்டு வா.

ஹநுமான் மலைக்குப் போய் மூலிகைகளை தேட ஆரம்பித்தால் நேரம் ஆகும். மலையைப் பெயர்த்தே கொண்டு வந்து விடுகிறேன்.

பறந்தார் ஹநுமான். ராம நாம வேகத்தில் - நேரமே ஸ்தம்பித்து விட்டதோ என்னவோ! போனது வந்தது தெரியாமல் ஹநுமான் கிரியைக் கொண்டு வந்துவிட்டார்.

ஆகாயத்தில் அந்த மலை வரும் போதே - காற்றின் **வீச்சில்** மூலிகைகளின் நறுமணம் நுகர்ந்த அனைவரும் எழுந்துவிட்டனர்.

லட்சுமணனுடைய மூக்கிலும் ஏறிவிட்டது. அவர் சற்று அசைந்தார். ஸுஷேணன் தன் உள்ளங்கையில் ஒரு பச்சிலையைக் கசக்கி - லட்சுமணனுடைய மூக்கில் பிழிந்தார். அதன் நெடி - இதயத்தில் பாய்ந்தது. லட்சுமணன் பெருமூச்சு விட்டார்.

சகதி ஆயுதச்சுமை எகிரிப் போய் கடலில் வீழ்ந்தது. லட்சுமணன் எழுந்து கூட்டத்தைப் பார்த்ததும் வாநரர்களுடைய கோஷம் எழுந்தது.

ராமன்: ஹநுமான் எங்கே?

ஹநுமான்: இதோ வந்தேன்

ராமன்: எங்கே போனாய்?

ஹநுமான்: ஸஞ்ஜீவி மலையை யதாஸ்தானம் பண்ணிவிட்டு வந்தேன். அதை இங்கிருந்து தூக்கின போது பல மூலிகைகள் ரணகளத்தில் வீழ்ந்தன. அதன் நெடி பட்டு பலவாநரர்கள் அடிபட்டு வீழ்ந்தவர்கள் பிழைத்தெழுந்து விட்டார்கள்.

ராமன்: லட்சுமண! ஹநுமானை நமஸ்காரம் செய். நான் பண்ணினால் அவன் ஓடிப் போய்விடுவான்.

தரையில் குனிவதற்குள் லட்சுமணனை ஹநுமான் பிடித்து தூக்கிவிட்டு ஆச்வாஸப்படுத்தினார்.

மறுபடியும் ராவணன் போருக்கு வந்தான். ஆகாயத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள் - ராவணன் ரதத்தில் ஏறி வருவதையும் ராமன் ஹநுமான் தோளிலும் லட்சுமணன் அங்கதன் தோளிலும் அமர்ந்து போரிடுவது கண்டு தேவேந்திரனிடம் முறையிட்டார்கள். தேவேந்திரன் தமது பச்சை வர்ணக் குதிரைகள் பூட்டிய ரதத்தை ஸ்ரீராமனுடைய உபயோகத்திற்காக மாதலி என்ற ஸாரதியுடன் அனுப்பி வைத்தான்.

ரதத்துடன் மாதலி வந்து விண்ணப்பித்தான். ‘‘எங்கள் அதிபதி தேவேந்திரன் தனது உயர்ந்த வில்லையும், தமது அமோக கவசத்தையும் ரதத்தையும் தங்கள் உபயோகத்திற்காக அனுப்பியுள்ளார். தயவு செய்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ராமன் ரதத்திலேறி ராவணனை எதிர் கொண்டார். இந்திர ரதத்தில் ஏறி ராமன் வருவதைப் பார்த்து வெகுண்டான் ராவணன்.

‘‘இந்திரனுக்குத் துணிச்சல் வந்து விட்டதா! என்று ஆத்திரத்துடன் ரதத்தின் கொடியை அறுத்து குதிரைகளையும் மாதலியையும் வீழ்த்தினான்.

போர்முறைப்படி - பகைவனின் ஸாரதியை அடிக்கக் கூடாது. போர் வெறி ராவணனுடைய கண்களை மறைத்தது.

ராமன் மிகவும் வருந்தினார். ஹநுமான் ஓடோடி வந்து மாதலியைக் கை கொடுத்து தூக்கிவிட்டு ரதத்தையும் குதிரைகளையும் நிமிர்த்தி ஒழுங்கு படுத்தினார். ராவணனை

ராமன் கடுமையாக ஒரு பார்வை பார்த்தார்.

***ஸக்ருத்வா ப்$_4$ருகுடிம் க்ருத்$_3$த$_4$:***
***கிம்சித் ஸம்ரக்த லோ ச$_1$ந:|***
***நிர்த$_3$ஹந்நிவ ச$_1$க்ஷு¬ஷா ||***

அதைப்பார்த்துக் கடலே கொந்தளித்தது. வில்லில் விசிறி போல பல அம்புகளை ஓரே நேரத்தில் கோத்து - வில்லைக் குறுக்கே பிடித்து அம்புகளை ஏவினார். அம்புகள் ராவணன் அவனுடைய ரதம் அவனுடைய மெய்க்காவல்கள் படை வீரர்களையும் சாய்த்தன.

ராவணன் ஒரு கொடுமையான சூலத்தை எடுத்துக் கொண்டான். முரட்டுக் குரலில் கர்ஜித்தான். லங்கையிலிருநத பல கர்ப்பிணிகளின் கருக்கள் கலைந்தன.

ராகவ! நில் இதோ உன்மீது இந்த சூலத்தை ஏவுகிறேன். உன் பிராணனையும் உன் தம்பி பிராணனையும் - ஒரு கணத்தில் கோத்துக் கொண்டு போய் விடும்.

***திஷ்டே$_2$ த$_3$ாநீம் நிஹந்மித்வாம்***
***ஏஷசூ$_+$லேந ராக$_4$வ |***
***தவப்$_4$ராத்ரு ஸஹாயஸ்ய***
***ஸத்$_3$ய : ப்ராணாந் ஹரிஷ்யதி***

சூலம் சுர்ரென்று ஒலியுடன் பாய்ந்தது. ராமன் அந்த கணத்தில் மாதலி கொடுத்த - சக்தி ஆயுதத்தைப் பிடித்து ஏவினார். சூலமும் சக்தியும் ஆகாயத்தில் மோதிச் சிதறின. வெகு தூரத்திற்குப் பொறிகள் பறந்தன.

ராவணன் திகைத்தான். சற்று யோஜித்தான். ராமன் அதற்குள் மற்றொரு கூரான கணையை ஏவினார். அது ராவணனுடைய பத்து தலைகளையும் தாக்கியது.

தலைகள் ஒன்றோடொன்று மோதின. ராவணன் தலை குப்புறக் கவிழ்ந்தான். அவனுடைய தேரோட்டி - எஜமானை கீழே விழாமல் தடுத்து - ஆஸனத்தில் சாய்த்தான். குதிரைகளை அதிவேகமாக விரட்டினான்.

*போர்க்களத்துக்கப்பால் ஆலமரத்தடியில் ரதம் வந்து நின்றது.*

*ராவணன் ஓடி விட்டான். ராமன் அப்பாடா - என்று திரும்பினார். கைகளிலிருந்து வில்லையும் அம்புறாத் தூணிகளையும் கழற்றினார் ஹனுமான்.*

*ரதத்திலிருந்த வெண்சாமரத்தை எடுத்து ஹநுமான் ராமன் முகத்தில் வீசினார்.*

*''ஹநுமந்தா! ராவணனைப் பார்த்தாயா! - என்ன பாடு படுத்துகிறான்?*

*''ப்ரபோ - தாங்கள் மிகவும் களைத்திருக்கிறீர்கள். சற்று அமருங்கள்''*

*ராமன்: ஹநுமந்தா - நகரு - நகரு - பின்னால் யாரோ ரதத்தில் ஏறுகிறார் பார்.*

*ஹநுமான் : நகர்ந்தார். ஒரு தேஜோ வடிவம் முன்னே வந்தது.*

*ராமன்: ஆஹா! தாங்களா? வரவேணும் வரவேணும்*

*வந்தவர்: நான் தான் அகஸ்தியன். ஆச்ரமத்தில் உட்கார்ந்து கொண்டு ஒவ்வொரு கணமும் உன்னையே பார்த்துக் கொண்டிருந்தேன்.*

*நீ வீசி அம்புகள் விட்டதையும் பார்த்தேன். ராவணன் தடுமாறி வீழ்ந்ததையும் பார்த்தேன். நீயும் மிகவும் களைத்திருக்கிறாய் - முகத்தில் கவலை தெரிந்தது ஓடோடி வந்தேன்.*

***ததோ யுத்$_3$த$_4$ பரிச் ராந்தம்***
***ஸமரே சிந்தயா ஸ்திதம் |***
***தை$_3$வதைச்$_+$ச$_1$ ஸமாக$_3$ம்ய***
***த்ருஷ்டும் அப்யாக$_3$தோ ரணம் ||***

*நான் ஆச்ரமத்தில் தான் அத்தனை தெய்வங்களுக்கும் கோயில் கட்டியிருக்கிறேனா? அவர்கள் எல்லோரும் ப்ரஸந்நமாக இருக்கிறார்களா? அவர்களையும் அழைத்துக் கொண்டு உன்னைப் பார்க்கலாம் - என்று வந்தேன்.*

குழந்தாய்! யுத்த களத்தில் நீ பட்ட பாடெல்லாம் போதும். இனி உன் திருமேனி தாங்காது.

உனக்கு நான் மந்த்ரோபதேசம் செய்வதா? என்று தான் இத்தனை நாட்கள் வாளா இருந்தேன்.

நீ பகவானே தான். ஆனாலும் உபதேசிக்கிறேன்.

மிகவும் பழமையான ரகசியமான மந்த்ரம் கேட்டுக்கொள். அதை ஜபித்துக் கொண்டு உடனே எல்லாசத்ருக்களையும் பூண்டோடு அழித்து விடலாம்.'' என்று உபதேசம் செய்ய ஆரம்பித்தவர்.

சற்று நேரம் தாமதித்தார். ராமனுக்கு உபதேசம் செய்யத் தனக்குத் தகுதியை வரவழைத்துக் கொண்டார். என்ன செய்தார்? ராம ராம என்று இரண்டு தடவை சொன்னார். அவருக்குத் தகுதி வந்துவிட்டது.

**ராம ராம மஹாப$_3$ாஹோ**

**ச்ருணு கு$_3$ஹ்யம் ஸநாதநம் ।**

**யே ந ஸர்வாந் அரீந் வத்ஸ**

**ஸமரே விஜயிஷ்யஸி ॥**

ஹநுமான் ஆவலோடு ராமனுக்குப் பின்புறம் உபதேசத்தைத் தானும் பெறுகிறார்.

எவ்வளவு உயர்ந்த மந்திரம்? சூரிய பகவானுடையவே ஹ்ருதயம். அது அவருக்கு அந்தர்யாமியாகிய நாராயணனுடைய இருப்பிடமல்லவா.

**த்$_4$யேய: ஸத$_3$ா ஸவித்ருமண்டல மத்ய வர்த்தீ**

**நாராயண: ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:**

**கேயூரவாந் மகர குண்டலவாந் கிரீடீ**

**ஹாரீ ஹிரண் மய வபு: த்$_4$ருதச ங்க சக்ர:।**

ஸூர்ய பிம்பத்திலே காட்சி அளிக்கின்ற நாராயணனை - நம் கண் முன்னே நிறுத்துகின்ற த்யாநச் லோகம் இது.

***ஆதித்யஹ்ருதயம் புண்யம்***

***ஸர்வச$_{+}$த்ரு விநாச$_{+}$நம்***

***ஜயா வஹம் ஜபேந் நித்யம்***

***அக்ஷய்யம் பரமம் சிவம் ||***

*நம் முன்னோர்களான பெரியவர்கள் அத்யல்பமான வருமானத்தில் - பிள்ளைகளைப் பெற்று அவர்களுக்கு ஸகல ஸௌபாக்யங்களையும் அளித்து நிம்மதியாக வாழ்ந்தவர்கள் -என்றால் அதற்கு ஒரே காரணம் நாள் தோறும் ஆதித்யஹ்ருதய பாராயணம் தான்.*

*இது தான் ஸத்யம். அன்று ஆயிரத்தில் ஐந்து பேர்கள் தான் பிரபுக்கள். மற்றவர்கள் மேலே சொன்ன அன்றாடம் காய்ச்சிகள். இன்று இந்த ஐந்து பேர்களின் பேரன் கொள்ளுப் பேரன்கள் ஐம்பதினாயிரம் ஏழு லட்சம் - என்று ஸம்பாதிக்கிறார்கள் - என்றால் அதற்கும் அந்த முன்னோர்கள் செய்த புண்ணியம் தான் காரணமே தவிர இவர்களின் ஸாமர்த்தியம் இல்லை.*

*இவர்கள் குடும்ப ஸம்பிரதாயத்தை மறந்து ஆசாரம் கெட்டு பணம் சம்பாதிக்கும் யந்திரங்கள் ஆகி - பிள்ளை குட்டிகளுக்கு நற்பண்பை கற்றுக்கொடுக்காமல் மிருக வாழ்க்கைக்கு வழி காட்டுகிறார்களே - என்பது தான் அனைவரும் சிந்திக்க வேண்டிய விஷயம்.*

*அகஸ்தியர் - ஸ்தோத்திரத்தின் முடிவில் கூறுகிறார். இக்கணமே நீ ராவணனை வதம் செய்யப் போகிறாய்.*

***''அஸ்மிந் க்ஷணே மஹாப$_{3}$ாஹோ***

***ராவணம் த்வம் வதிஷ்யஸி'' |***

*தன்னுடன் வந்த தேவர்களின் மத்தியில் இருந்த அகஸ்தியர் - ''உடனே கிளம்பு என்கிறார்''.*

***ஸூரக$_{3}$ண மத்$_{4}$ய க$_{3}$தோ வசஸ்த்வரேதி***

*போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்திய தேரோட்டியைக் கடிந்து கொண்டான் ராவணன்.*

அவனுடைய நியாயமான பதிலைக் கேட்டு ஆமோதித்துப் போர்க்களத்துக்கு வந்து விட்டான்.

அகஸ்த்ய பகவான் கடைசியாகச் சொன்ன வார்த்தையின் - **த்வர** சீக்ரம் செய் - என்ற குறிப்பிடுவதற்கு ராவணனுடைய முதல் போரிலிருந்து இது வரை அவர் காலதாமதம் செய்தது ஒரே காரணம். - நமது பராக்ரமத்தை உணர்ந்து, - தன்னுடைய பராக்ரமம் இதனுடன் போட்டி போட முடியாது - என்று உணர்ந்து, தன்னை வதம் செய்யாமல் ராமன் விட மாட்டான் என்பதையும் உணர்ந்து, - தப்பித்துவிட வேண்டும் என்று முடிவு செய்து, - சரணாகதி செய்யமாட்டானா? நாம் அபயம் கொடுக்கலாமே - நமக்கு பதிதபாவநன் - என்ற பெயர் நிலைக்குமே - என்ற க்ருபை தான்.

அந்த க்ருபைக்கு ராவணன் கொடுத்து வைக்க வில்லை - என்று அகஸ்த்யர் குறிப்பால் உணர்த்திவிட்டார்.

போர் மும்முறமாகச் சூடு பிடித்தது. ராவணனுடைய ரதத்திலிருந்து அவனுடைய கொடியை அறுத் தெறிந்தார்.

போட்டி அரசர்களிடையே போர் நடக்கும் போது அரசர்களின் முக்கிய கவனம் தமது நாட்டுக் கொடியைக் காப்பது தான்,

அரசனே அடிபட்டு இறந்தாலும் - கொடி காப்பாற்றப் பட்டிருந்தால் சேநாதிபதிகள் போரைத் தொடர்ந்து நடத்தி வெற்றி பெற்று வாரிசை அரசனாக முடி சூட்டலாம்.

அரசன் உயிரோடு இருக்கும் போதே - எதிரி - நாட்டுக் கொடியைத் தாக்கி இறக்கிவிட்டால் பிறகு அரசன் வெற்றி பெற்றாலும் கூட நாட்டின் ஆட்சியுரிமையைக் கொண்டாட முடியாது.

அது நாட்டின் மஹாசபை கூடி நிர்ணயிக்க வேண்டிய விஷயம்.

ராமன் ரதத்தின் கொடியை அறுத்தவுடனே - ராவணன் தன்னுடைய அரசுரிமை பறிபோனதை உணர்ந்துவிட்டான்.

*ராமன் ஒரு லீலை புரிந்தார்.*

*ராவணனுடைய பத்துத் தலைகளையும் ஒரே பாணத்தினால் அறுத்தெறிந்துவிட்டார். அரக்கர் சேனை திடுக்கிட்டு நின்றது - வாநரர்கள் அந்தத் தலைகளைப் பந்தாட ஆரம்பித்தனர். மற்ற வாநரர்களும் பந்தாட விரும்பினார்.*

*101 தடவை ராமன் ராவணனுடைய பத்துத் தலைகள் முளைக்க முளைக்க அறுத்தெறிந்து விட்டார். போர்க்களம் வாநரர்களின் விளையாட்டரங்கமாகி விட்டது. வாநரர்கள் விளையாடிக் களைத்து விட்டனர். கடைசி நூறு தலைகளை வாநரர்கள் அலட்சியமாகக் கால்களால் உதைத்து விட்டு நகர்ந்தனர். ராமன் சளைக்கவில்லை.*

*தேரோட்டியான மாதலி திரும்பிப் பார்த்தான், ராமனை!*

*''ஸ்வாமி! அதோ பாருங்கள். மலை முகட்டில் அகஸ்த்ய பகவான் கையால் ஏதோ செய்கை காட்டுகிறார். ராமன்திரும்பிப் பார்த்து அவருக்கு கைகூப்பினார்.*

*ஹநுமான் பக்கத்தில் நின்று ஆதித்யஹ்ருதயம் சொன்னார். ராமன் தனது அம்புறாத் தூணியைக் கைகளில் - எடுத்துக் கொண்டார். பல அம்புகளை விலக்கி ஓர் அம்பைத் தேடி எடுத்தார்.*

*வில்லை நாணேற்றினார். அந்த வில்லில் பூட்டினார். காயத்ரீயை ஜபித்தார். அந்த அம்பு ஞானப் பிழம்பாகிவிட்டது.*

***ஜாஜ்வல்யமாநம் வபுஷா ...........***
***அபி$_4$ மந்த்ர்ய ததோராம:***
***தம் மஹேஷும் மஹாபல:***
***வேத$_3$ப் ரோக் தேந விதி$_4$நா***
***ஸந்த$_3$தே$_3$ கார்முகே பலீ***
***சிக்ஷேப பரமாயஸ்த:***

காயத்ரீ மந்த்ரோச்சாரம் பெற்ற அந்த ஞாண பாணம் ராவணனுடைய மார்பிலே தைத்தது. அது ராவணனுடைய இதயத்தைப் பிளந்தது.

**பி$_3$பே$_4$த ஹ்ருத$_3$யம் தஸ்ய**
**ராவணஸ்ய துராத்மந:**

அகந்தையும் மமதையும் அழுத்தமாக ஆழமாக கெட்டிப் பட்டிருந்த இதயத்தை அந்த பாணம் துளைத்தது.

ராவணனுடைய அஹங்காரத்தை அழிக்க ராமன் அத்தனை பாடுபட வேண்டியிருந்தது என்கிறார் வால்மீகி ப$_4$க$_3$வான். அந்த அஹந்தை உடலை வீட்டு நீங்கிய ராவணனை.

**நைர்ருதேந்த்ரோ மஹாத்யுதி:**

பெரும் ஞானஒளியோடு கூடிய ராவணன் என்கிறார் வால்மீகி பகவான்.

ராமனை அவருடைய ஜநங்கள் சூழ்ந்து கொண்டார்கள். ஹநுமான் முதலில் வந்து - கவசம் களைந்து - சுஷேணன் கொடுத்த சுகந்தமான நறுமண மருந்துப் பொடியை திருமேனி எங்கிலும் பூசி முகத்தைப் பஞ்சு போன்றதம் உள்ளங்கையினால் ஒத்தடம் கொடுத்து - களைப்பாற்றினார்.

தேவர்கள் கொண்டாடினர். பூமாரி பெய்தனர். பாசறை வந்து சேர்ந்தார் ராமன். விபீஷணனை தமையனாருக்கு ஈமக்கடன்கள் முறைப்படி செய்து முடிக்க வேண்டும் என்று ஆணையிட்டார்.

விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தது.

ராகவன் பாசறையில் உட்கார்ந்திருக்கிறார். சுக்ரீவன் அங்கதன் ஜாம்பவான் பட்டாபிஷேகம் செய்து கொண்ட விபீஷணன் மற்ற வீரர்கள் அமைதியாக ராமனுடைய திருமுக மண்டலம் பார்த்து நிற்கிறார்கள்.

*ஹநுமான் பிரபுவின் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே திருவடிகளை பிடித்து விட்டுக் கொண்டிருக்கிறார்.*

*ராமனுடைய முகத்தில் இறுக்கம். லட்சுமணனைப் பார்க்கிறார். லட்சுமணன் கோதண்டத்தையும் அம்புறாத் தூணியையும் துடைத்துக் கொண்டிருக்கிறார்.*

*வால்மீகி பகவான் ராமனுடைய அப்போதைய மனநிலையைக் குறிப்பாக எடுத்துச் சொல்கிறார்.*

*ஸந்தோஷம் - தன்னிரக்கம், ரோஷம் மூன்று ராமனுடைய உள்ளத்தை ஆட்கொண்டது.*

***ஹர்ஷோ தைந்யம் ச$_1$***

***ரோஷச்$_+$ச$_1$ த்ரயம் ராகவம் ஆவிச$_+$த்।***

*ஒன்றுக்கொன்று பொருந்தாத மனநிலைகள் ஒருங்கே ராமனை ஆட்கொள்கின்றன.*

*ஸந்தோஷம்- த்ருப்தி - இழந்த பத்நீயை மீட்டுவிட்டோம். வேறு எவராலும் இதைச் சாதித்திருக்க முடியாது. ராவணன் கொண்டு போனதை -யெல்லாம் இழந்தவர்கள் கைகழுவி விட்டார்கள். குபேரன் செல்வங்களுக் கெல்லாம் அதிபன். அவனே ராவணனிடம் தனது புஷ்பக விமானத்தை இழந்தானே!*

*அவனால் மீட்கமுடியவில்லையே! ராவணனிடம் பறி கொடுத்த வஸ்துவை மீட்டவன் நான் ஒருவன் தானே! அது மகிழ்ச்சிக்குரிய விஷயம் தான்.*

*அந்த தேவியை அடுத்த கணம் நான் மீட்டிருக்க வேண்டாமா? ஏழுமாதங்களுக்கு மேல் ஆக்கிவிட்டேனே! ஒரு அபலை தன் பாதி விரத்ய நெருப்பினால் தன்னைக் காத்துக் கொண்டாளே!.*

*வேறு எவள் தான் இப்படித் தன்னை காப்பாற்றிக் கொண்டிருக்க முடியும்?*

*அங்கே எத்தனை துயரங்களை அநுபவித்திருப்பாள்? என்னைப் பிரிந்தேனே எனத் துயரம். நான் என்ன கஷ்டப்படுகிறேனோ என்ற துயரம். நான் உயிரோடு இருப்பேனா - என்ற பொறுக்க முடியாத திகில். அவள் உயிரை விட்டிருந்தால் எனக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய அவமானம். இதையெல்லாம் என்னால் தவிர்க்க முடியவில்லையே.*

*அத்தகைய திறன் நம்மிடம் இல்லையே! ஒரு வாநரன் உதவியைத் தேட வேண்டியிருந்ததே! தாகத்திற்கு ஒருவாய் தண்ணீர் கிடைக்காமல் நாக்கு வரண்டு தவித்தவனுக்கு - அமிருதம் கிடைத்தது போல நம்மிடம் ஹநுமான் வந்து சேர்ந்தானே?*

*அவனல்லவா ப்ரபு - கையாலகாத நான் அல்லவா ஏழை?*

*இந்த ஏழையிடம் அந்த பிரபு கைகட்டி நின்றானே - நிற்கிறானே! இந்த கையாலாகாத்தனம் நினைக்க நினைக்க உள்ளத்தை நெகிழ வைத்தது.*

*அடுத்து ராமனுக்கு வந்ததே ஒரு வேதனை? அது தாங்க முடியாதது.*

*இதோ லட்சுமணன் நிற்கிறான். எனக்காக இரண்டு தடவை உயிரிழந்து பிழைத்தவன்!!*

*பஞ்சவடியில் மாயமான் குரல் கேட்ட எனக்கு விபத்து வந்துவிட்டதே - என்று பதறினாள் ஸீதை. அது சரி: அவரைக் காப்பாற்றுங்கள் - என்று லட்சுமணனை வேண்டினாள். அதுவும் சரி:*

*''தங்களைக் காப்பதே என் கடமை. இதுவே என் அண்ணனின் ஆணை. தங்களைத் தனியே விட்டுப் போக மாட்டேன்'' - என்றானே லட்சுமணன் - அதுவும் சரி:*

*அதற்காக - லட்சுமணனை என்ன பேச்சுப் பேசி விட்டாள்? ஸீதை ஒரு உத்தமிக்குக் கற்புக்கு வந்த துணைபற்றி இத்தகைய தகாத எண்ணம் வரலாமா!*

வந்தவுடன் இப்படி எண்ணம் வந்துவிட்டதே என்று தன்னையல்லவா அவள் நொந்து கொண்டிருக்க வேண்டும்.

அதை வாய்விட்டுச் சொன்னாளே! - என் மனைவி ஜநக புத்ரி - கோஸலை மறுமகள் என் அருமைத் தம்பியைப் பேசி விட்டாளே!

ரோஸமுள்ள ஆண்பிள்ளையாக இருந்தால் '' சீ இப்படியா பேசினாள் உன்னை! இனி அவள் முகத்திலே விழிக்கமாட்டேன் - என்று சொல்லியிருக்க மாட்டேனோ? எனக்கு அவளிடம் உள்ள பிரேமை- என் தம்பியினுடைய அவமானத்துக்குத் துணை போய்விட்டது!

லட்சுமண! என் ஆணையை எப்படி மீறினாய்? என்றல்லவா அவனைக் கேட்டுவிட்டேன்.

மதனி என்னை சீ என்று சொல்லி விட்டாள். இனி உங்களோடு வரமாட்டேன் - என்று சொல்ல நினைத்த லட்சுமணனை என்னுடைய அதட்டல் கட்டிப்போட்டு விட்டதே.

அண்ணன் ஆணையை மீறி - நான் அவளைத் தனியே விட்டுவிட்டுப் போனது தான் தவறு. நான் செய்த இந்தக் தப்பிதத்தினால் அண்ணனுக்குப் பேரிழப்பு நேரிட்டுவிட்டது. அதை மீட்க வேண்டியது - தன்னுடைய கடமை - என்றல்லவா லட்சுமணன் தன் அவமானத்தைப் பொறுத்துக் கொண்டு, - என்னோடு உழைத்து - ஸீதையை எனக்கு மீட்டுக் கொடுத்து விட்டான்.

இப்போது நான் செய்ய வேண்டியது என்ன? தன் தவறுக்கு பிராயச்சித்தம் செய்து கொண்டவனுக்கு - எதிரே - ஸீதை செய்த மஹா அபசாரத்திற்கு பிராயச்சித்தம் செய்து வைக்காமல் அவளை ஏற்றுக் கொள்வதா? இப்படி ரோஷம் வந்தது ராமனுக்கு.

ஹநுமான் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார். தேவி இத்தனை நாட்கள் துயரத்தை அனுபவிக்க நேர்ந்தது தவிர்க்க முடியாதது.

*ராவணன் சாய்ந்த மறுகணம் பிரபு தேவியை அழைத்துக் கொண்டு துயரக் கண்களைத் துடைத்து விட்டிருக்க வேண்டாமா! இனியும் ஏன் தேவி தவிக்க வேண்டும்!*

*அவரால் பொறுக்க முடியவில்லை உரக்க ராம நாமம் சொல்ல ஆரம்பித்தார்.*

*வாநரவீரர்கள் சேர்ந்து கொண்டார்கள். ராம நாமம் திக்கெங்கும் பரவியது.*

*கால்களைப் பிடித்துக் கொண்டிருந்த ஹநுமானை உற்றுப் பார்த்தார்.*

*ஹநுமந்தா - என் கால்களைப் பிடித்து விடுவது தான் இப்போது உன் கடமையா! நேரம் தவறாமல் கடமை ஆற்றுகின்ற நீ ஏன் தாமதிக்கிறாய்?*

*ஹநுமான் எழுந்தார்.*

*''என்ன திருவுள்ளமோ?''*

*ராமன்! லங்காதிபதியிடம் அநுமதி பெற்றுக் கொள். லங்கைக்குப் போ. தேவியிருக்குமிடம் செல் ''தேவிக்கு வெற்றி - என்று ஜய கோஷம் செய். ராவணன் போய்விட்டான். நானும் லட்சுமணனும் சுகம் என்று பிரியவார்த்தைகளைச் சொல்'' தேவியின் உள்ளமறிந்து வந்து சேர்''*

***''அநுமாந்ய மஹாராஜம்***
***இமம் ஸௌம்ய விபீஷணம்***
***க$_3$ச்ச$_2$ ஸத்$_3$ய: புரீம் லங்காம்***
***விஜயேநாபி$_4$ நந்த்யச$_1$ ।***
***வைதே$_3$ஹ்யை மாம் குச$_+$லிநம்***
***ஸஸுக்ரீவம் ஸலக்ஷ்மணம் ॥***

***ஆசக்ஷ்வ ஜயதாம் ச்ரேஷ்ட$_2$***
***ராவணம் ச$_1$ மயாஹதம்***
***ப்ரிய மேதது$_3$த$_3$ாஹ்ருத்ய***

***மைதி$_2$ல்யாஸ்த்வம் ஹரீச்வர$_+$***
***ப்ரதிக்ருஹ்ய ச$_1$ ஸந்தே$_2$ச$_+$ம்***
***உபாவர்த்திதும் அர்ஹஸி ||***

*அம்மா! நான் எடுத்துக் கொண்ட காரியம் வெற்றி பெற்று விட்டதம்மா -*

*ஜயதாம்ச்ரேஷ்ட$_2$ என்ற ஹநுமானை அழைத்ததற்கு இதுவே பொருள்)*

*ஹநுமானுக்கு பரமஸந்தோஷம் ''வெற்றிச் சேதி தேவிக்குச் சொல்ல நல்ல வேளையாக நம்மைத் தேர்ந்தெடுத்தாரே! தேவியை முதன்முதல் பார்த்த போது கண்ட சோகமுகம் ஹநுமான் உள்ளத்திலிருந்து மறையவே இல்லை.*

*இந்த மங்களச் செய்தி கேட்டு தேவி முகம் மலர்வதைக் கண்களால் கண்டால் தான் அந்த பழைய சித்திரம் மறையும்.*

*தேவியிடம் போனார். ஹநுமான் சேதி சொன்னார். பிரபு சொன்னதை அப்படியே சொல்கிறேன் கேளுங்கள்.*

*பெரியோர்கள் செய்த புண்ணியம் நீ உயிரோடு இருக்கிறாய். நீ உயிரை விட மாட்டாய். அது எனக்குத் தெரியும் உன் உயிர் என்னுடையதல்லவா?*

*கணவனுக்காக மட்டும் உயிரை தரித்திருப்பது பதிவிரதா தர்மம். அது உனக்கு தெரியுமே. போரில் நான் பெற்ற வெற்றியினால் நீ உயிருடன் இருப்பது ஸபலம் ஆயிற்று.*

*லட்சுமணன் உன்னுடன் நம் மூவருக்கும் கிடைத்த வெற்றி இது. வேதனைப்படாதே. நிம்மதியாக இரு. இப்போது நீ நம் அகத்தில் இருக்கிறாய். தைரியமாக இரு.*

***தி$_3$ஷ்ட்யா ஜீவஸி த$_4$ர்மஜ்ஞே***
***ஜயேந மம ஸம்யுகே |***
***லப்$_3$தே$_4$ா நோ விஜய: ஸீதே***
***ஸ்வஸ்த$_2$ா ப$_4$வ க$_3$தவ்யத$_2$ா ||***

**ததா$_3$ச்$_+$வஸிஹி ப$_4$த்ரம் தே**

**ஸ்வக் ருஹே பரிவர்த்தஸே ||**

தேவி ஆவலோடு கேட்டுக் கொண்டாள்.

''ஹநுமந்தா! மறுபடியும் சொல்! ப்ரபு என்ன சொன்னார்?''

ஹநுமான் ஒப்புவித்தார். தேவி ஆழ்ந்து வசனங்களை அசை போட்டாள். பட்டும் படாத விட்டேத்தியான வசனங்கள்!! மௌநமாக சிந்தித்தாள்.

ஹநுமான் திகைத்தார்.

''ஏனம்மா? என்ன சிந்திக்கிறீர்கள், ஏன் என்னுடன் பேச மாட்டேன்கிறீர்கள்''

ஸீதா - சுதாரித்துக் கொண்டாள்.

''வேறொன்றுமில்லை ஹநுமந்தா? நீ கொண்டு வந்த இந்த மங்களச் செய்திக்கு என்ன கைம்மாறு செய்யலாம் என்று நினைத்துப் பார்த்தேன். வாய் எழும்பவில்லை.

**நஹிபச்$_+$யாமி ஸத்ருசம்**

**சிந்தயந்தீ ப்லவங்கம |**

**ப்ரஹர்ஷ வச$_+$மாபந்நா**

**நிர்வாக்யாஸ்மி க்ஷணா ந்தரம் ||**

ஹநுமான்: அம்மா! உங்களுக்கு என்னிடம் தான் எவ்வளவு ப்ரியம்? வளர்த்தாமல் - எவ்வளவு ஸாரமாகச் சொல்லி விட்டீர்கள்.

**தவைதத்ஸத்ருச$_+$ம் ஸௌம்யே!**

**ஸாரவத்ஸ்நி க்$_3$த்$_4$ மேவச**

இதுவே போதுமெனக்கு. தேவராஜ்யமே என் கையில் வந்து விழுந்து விட்டது.

ஸீதா: எவரிடமும் காணமுடியாத வீர்யம் பலம் பராக்ரமம் செய்வதில் கலை அழகு பொறுமை தைரியம் விநயம்

எல்லாம் உன்னிடம் உள்ளன. அவற்றை யெல்லாம் இயல்பாக நீ வெளியிடும் போது உன்னிடம் தான் அவை சோபையோடு விளங்குகின்றன.

**தேஜ: க்ஷமா க்$_4$ருதி: தை$_4$ரியம்**

**கு$_3$ணாஸ்த்வய்யேவ சே$_+$ாபநா:**

தேவிக்கு நம்மைப் பற்றிய பரவசத்தைச் சற்றுக் குறைக்க வேண்டும். ஸாதாரண வாநரத் தன்மையைக் காட்ட வேண்டுமென நினைத்தார்.

ஹநுமான்: தேவி ஒரு விண்ணப்பம்

ஸீதை: என்னப்பா? சொல்லு!

ஹநுமான்: நான் முன் தடவை உங்களைப் பார்க்க வந்த போது - இப்போது கைகூப்பி பவ்யமாக நிற்கிறார்களே இந்த அரக்கிகள் எவ்வளவு கொடுமையாகப் பேசினார்கள்? அவர்களுடைய நாக்குகளை இழுத்து அறுக்க - எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்.

ஸீதை பதறிப்போனாள்.

''மஹாபாவம். ஹநுமந்தா! ஏன் இப்படி ஒரு விபரீத புத்தி! பாவம் இவர்கள் சுயமாகவா - என்னைப் படுத்தினார்கள்? எஜமான் சொன்னான். இவர்கள் அப்படிச் செய்தார்கள். அவ்வளவு தான்.

அதோ பார் - உன்னைப் பார்த்து நடுங்கிநிற்கிறார்கள் - நான் என்ன பாவம் செய்தேனோ! இப்படி இவர்கள் வாயினால் கேட்க வேண்டும் என்ற விதி வந்தது. போதாத காலமும் சேர்ந்து கொண்டது. இப்படியெல்லாம் நடந்தது.

**ப$_4$ாக்$_3$ய வைஷம்ய யோகேந**

**புராதுச்$_+$ச$_1$ரி தேநச।**

**மயைதத் ப்ராப்யதேஸர்வம்**

**ஸ்வக்ருதம் ஹி உபபு$_4$ஜ்யதே ||**

தன் வினைத் தன்னைச் சுடும்.

நீ நல்ல பிள்ளையல்லவா? இவர்களுக்கு கருணை செய். பார்க்கப்போனால் உலகில் தவறு செய்யாதவர்களே கிடையாது.

***கார்யம் கருணமார்யேண***

***நகச்$_+$சித் நாபராத்$_4$யதி***

ஸீதா தேவியின் இந்த வசனங்கள் ஊன்றி கவனிக்கத்தக்கவை.

அண்ணல் விட்டேத்தியாக செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறாரே - என்ற கேள்வி தேவியின் உள்ளத்தைக் குடைந்தது.

துளி வெளிச்சம் கிடைத்தது

பஞ்சவடீ - நினைவுக்கு வந்தது.

பிரபுவுக்கு ஆபத்து - என்று பதறிப் போய் தன்னே உண்மையான பக்தியுடன் காவல் காத்த மைத்துனரை என்ன பேச்சுப் பேசி விட்டோம்? என் வாயில் வரலாமா இப்படியெல்லாம் வார்த்தைகள்?

இதையெல்லாம் நினைத்து கலங்கினாள்.

ஜடாயுவிடமே கூறினாள். என் மைத்துனரை உடம்பைப் பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள். அண்ணாவைக் காப்பாற்றச் சொல்லுங்கள்.

ஹநுமானிடம் முதல் சந்திப்பில் சொன்னாள் - ப்ரபு வனத்திற்கு கிளம்பும் போது - எனக்கு முன்னமேயே - வனத்தில் துணைக்கு வரத் தயாராகிவிட்டார்.

ஹநுமானிடம் தேவி கூறுகிறாள்.

என்னைக் காட்டிலும் ராமனுக்கு பிரியமானவர் லட்சுமணர். அவரிடம் நான் விசாரித்தேன் என்று சொல்லு.

***மத்த: ப்ரியதரோ நித்யம்***

***ப்ராதா ராமஸ்யலக்ஷ்மண: |***

**ஸ மமார்த்த$_{2}$ாய குச$_{+}$லம்**

**வக்தவ்யோ வச$_{1}$நாந்மம ||**

இவையெல்லாம் லட்சுமணனிடம் துளிக்கூட தேவிக்கு கெட்ட எண்ணம் கிடையாது என்பதற்கு சான்றுகள்.

ஆயினும் வாயில் வார்த்தைகள் வந்துவிட்டனவே! அதை நினைத்து நினைத்து மருகினாள்.

தற்போது ஹநுமானிடம் பேசும் போது அவை நினைவுக்கு வந்துவிட்டன. அதைத்தான் ஹநுமானிடம் சொன்னாள். என்ன பாவம் பண்ணினேனோ! அரக்கர்களிடம் பேச்சுக் கேட்கும் படி ஆகவிட்டது.

நான் உத்தமி என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் நானும் தவறு செய்துவிட்டேன்.

உலகில் தவறு செய்யாதவர்களே கிடையாது. ஆகவே பாபிகளாகட்டும் நல்லவர்களாகட்டும் எவருமே வதத்திற்கு உரியவர்கள் அல்ல. நல்லவன் கருணை காட்டத் தான் வேண்டும். தவறு செய்யாதவர்களே உலகில் கிடையாது.

**பாபாநாம் வாசு$_{+}$ பாநாம் வா**

**அவத$_{4}$ார் ஹாணாம் ப்லவங்கம |**

**கார்யம் கருணம் ஆர்யேண**

**நகச்$_{+}$சித் நாபராத்யதி**

தேவி இப்போது சொன்னது கருணை உள்ளத்தின் அமுத வாக்கு. ஹநுமான் விடை பெற்று கிளம்பினார்.

ராமன் ஆவலோடு கேட்டார்.

''தேவி என்ன சொன்னாள்?''

ஹநுமான்: தங்கள் செய்தியை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டாள். கடமையை ஆற்றி வெற்றி வீரராக லட்சுமணனோடு கூட நிற்கின்ற பர்த்தாவைக் காண விரும்புகிறேன் என்றாள்.

**ப$_4$ர்த்தாரம் த்$_3$ரஷ்டும் இச்ச$_2$ாமி**

**க்ருதார்த்த$_2$ம் ஸஹல க்ஷமணம்||**

இதனைக் கேட்டவுடன் ராமனுடைய கண்களில் நீர் பெருகிற்று. ஆழ்ந்த யோஜனை செய்தார்.

**ராமோ தர்மப்ருதாம் வர :|**

**அக$_3$ச்ச$_2$த் ஸஹஸா த்$_4$யாநம்**

**ஈஷத் பாஷ்ப பரிப்லுத:||**

ஏற்கனவே நொந்து போய் குற்றுயிராய் குலையுயிராய் என்னைப் பார்க்க விரும்புகின்ற தேவிக்கு - லட்சுமணன் நிமித்தமாக தண்டனை கொடுத்து மேலும் புண்படுத்த வேண்டுமா? என்று நினைத்தார்.

கண்களில் நீர் சுரந்தது.

அடுத்த கணம் நினைத்தார், வலது பக்கத்தில் லட்சுமணன் நிற்பது போல ஸீதாதேவியும் இடது பக்கத்தில் நிற்க வேண்டுமானால் அவள் அப்பழுக்கற்றவளாகத்தான் நிற்க வேண்டும். இந்த இழுக்கைத் துடைத்துவிடத் தான் வேண்டும். அது தான் ஸமதர்மம்.

இதைத்தான் வால்மீகி பகவான்

**தர்மப்ருதாம் வர:** என்ற சொல்லால் உணர்த்துகிறார்.

ராமன் ஆணைக்குக் காத்திருக்கின்ற விபீஷணரிடம் கூறுகிறார்.

விபீஷண மஹாராஜனே! தேவியை மஞ்சள் பூசிக் கொண்டு மங்கள ஸ்நாநம் செய்வித்து மங்கள அணியுடன் அழைத்துக் கொண்டு வந்து என் முன்னே நிறுத்துங்கள். தாமதம் வேண்டாம்.

**திவ்யாங்கராகாம் வைதே$_3$ஹீம்**
**திவ்யாப$_4$ரண பூஷிதாம்|**
**இஹஸீதாம் சி$_+$ர: ஸ்நாதாம்**
**உபஸ்த$_3$ாபய மாசி$_1$ரம்||**

விபீஷணனுக்கு ரொம்ப ஸந்தோஷம்.

பஞ்சவடியில் ராவணன் தூக்கின போது கட்டியிருந்த ஒற்றைப் புடவையையே அன்றாடம் ஸ்நானம் செய்து- நாள் தோறும் தலைப்பு மாற்றிக் கட்டிக் கொண்டிருக்கிறாளே அந்த நிலையில் வந்தாளேயானால் ராமனுடைய வயிறு பற்றி எரியாதா? அந்த உள்ளம் துடித்தால் லங்கைக்கு க்ஷேமம் உண்டாகுமா?

ப்ரபு க்ருபை பண்ணி மங்கள ஸ்நாநம் செய்வித்து அழைத்து வரச் சொல்கிறாரே!

லட்சுமணன் நினைக்கிறார் ''பாவம் அண்ணாவின் உள்ளம் எவ்வளவு நொந்து போய்விட்டது. துயரமும் பசியும் பீடித்த நிலையில் மதனியைப் பார்ப்பதற்கு விருப்பமில்லை. ஸ்நாநம் செய்தாலாவது களைப்புத் தீர்ந்து - மதனி முகம் சற்றுத் தேர்ந்திருக்கட்டுமே - என்று நினைக்கிறார்.

''ஆஹா ப்ரபுவிற்குத்தான் என்ன பெரும் தன்மை! ராவணன் பாபி. தேவியை கை தொட்டு தூக்கிவிட்டான். விபீஷணன் அதற்குப் பிராயச்சித்தமாக தேவிக்கு மங்களஸ்நாநம் செய்விக்கின்ற பாக்யத்தைப் பெறட்டுமே - என்று நினைக்கிறாரே.

விபீஷணன் அவசரமாக அந்தப் புரம் சென்று தன் தேவிமார்களை அனுப்பி ஸீதாதேவிக்கு மங்கள ஸ்நாநம் செய்து வைத்து ஆபரணங்கள் பூட்டி அழைத்து வருமாறு பணித்தான்.

விபூணஷன் மனைவி தேவியிடம் சென்று விண்ணபப்பித்தாள்.

தேவி சொன்னாள்.

''ஸ்நாநம் எல்லாம் செய்து கொண்டு தாமதமாக வேண்டாமே. உடனே ஸ்நாநம் பண்ணாமலேயே பிரபுவை தர்சனம் பண்ணிவிடலாம் - என்று நினைக்கிறேன்.

**''அஸ்நாதா த்ரஷ்டும் இச்ச$_2$ாமி**

**ப$_4$ர்த்தாரம் ராக்ஷஸாதி$_4$ப''।**

வெளியே நின்று கொண்டிருந்த விபீஷணன் சொன்னார்.

''தங்கள் பர்த்தாவின் ஆணைப்படி அங்ஙனமே ஸ்நாநம் செய்து விட்டுத்தான் செல்வது உசிதமாகும்'' அரசரல்லவா அவர்.

**யத$_3$ாஹ ராஜா ப$_4$ர்த்தா தே**

**தத்த த$_2$ா கர்து மர்ஹஸி**

தேவி நினைத்தாள். பிரபுவின்ஆணை என்ற பிறகு - நான் என் இஷ்டப்படி நடக்கலாமா! அவர் ஆழ்ந்த கருத்தோடு தான் இவ்விதம் ஆணையிட்டிருப்பார். அதை மறுதளிப்பது அழகல்ல.

''சரி அப்படியே செய்கிறேன்'' என்றாள்.

**பர்த்ரு ப$_4$க்தி வ்ரதா ஸாத்$_4$வீ**

**ததே$_2$தி ப்ரத்யபாஷத**

வால்மீகி பகவான் - நாம் முன்னே விளம்பிய கருத்துக்களை உண்மையாக்குவது போல ஒவ்வொரு வார்த்தையையும் எண்ணிப் பாடுகிறார்.

தேவியைப் பல்லக்கில் ஏற்றி இருபுறமும் ராஜாங்க விருதுகள் புடை சூழ - தாம் முன்னே நின்று சாமரம் வீசிக் கொண்டு ஊர்வலத்தை நடத்திவருகிறார் **விபீஷணன்**. பல்லக்கின் இருபுறங்களில் மெல்லிய சல்லாத்திரைகள் பார்வையை மறைக்காமல் மூடிக் கொண்டிருக்கின்றன.

வாநர வீரர்கள் தமக்குப் பின்னே குதூகலத்துடன் வேடிக்கை பார்க்கின்ற குரங்குகளை - நீண்ட தடித் தடுப்பீனால் வழி வகுத்து விடுகிறார்கள். முண்டி அடிக்கின்ற வாநரர்களைத் தடி கொண்டு அடிக்கிறார்கள். வாநரர்கள் கூச்சல் போடுகிறார்கள்.

ராமன் இதைப் பார்க்கிறார்.

''ப்ரபுவின் கண்கள் சிவந்துவிட்டனவே. இந்த சின்ன விஷயத்திற்கு இப்படிப் பதட்டமடைய வேண்டுமா! ஹநுமான் முன்னே வருகிறார்.

அவரை விலக்கி ராமன் விபீஷணனிடம் சொல்கிறார். ''ராக்ஷஸ மஹாராஜனே! என்றும் என் ஸங்கல்பம் நிறைவேற வேண்டுமென்பதிலேயே துடிப்பீர்களே! ஏன் தாமதம்?

என் அபிப்ராயம் விளங்காமல் - ஏன் வாநரர்களை அடக்குகிறீர்கள்? அவர்கள் பட்ட பாட்டினால் தானே தேவியே இன்று வருகிறாள்

இப்படியெல்லாம் அரசாங்க கெடுபிடி அவளுக்குத் தேவையில்லை. அவளைக்கீழே இறக்கி நடத்தி அழைத்து வாருங்கள். நம்ம ஜனங்கள் எல்லாம் நன்றாகப் பார்க்கட்டும். என் முன்னிலையில் படுதா இல்லாமல் திறந்த முகத்துடன் வருவதால் தவறே இல்லை.

சீக்கிரம் அழைத்து வாருங்கள்.

எட்டி நின்று கொண்டிருந்த லட்சுமணரிடம் ஹநுமான் போனார்.

ஹநுமான் : பிரபு ஆணையிட வேண்டியது தானே? அதை ஏன் நியாயப் படுத்த வேண்டும் - என்று நினைக்கிறார்.

லட்சுமணன்: அண்ணனின் மனநிலையே எனக்கு விளங்கவில்லை. இத்தனை ஆண்டுகளாக அவர் ஒரு தடவை பதற்றப்பட்டதை - நான் கண்டதே இல்லை. தற்போது அண்ணா தன் இயல்பில் இல்லை. தன் இயல்புக்கு ஒவ்வாத ஒரு கடுமை அவரை ஆட் கொண்டிருக்கிறது. என்ன காரணமோ தெரியவில்லை.

ஸீதை பல்லக்கில் இருந்து இறங்கி - குனிந்த தலை நிமிராமல் - புடவைத் தலைப்பை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு - வாநரர்கள் விட்ட வழியில் மெதுவாக அடி எடுத்து வைத்து வந்தாள்.

விபீஷணன் தேவியைக் கொண்டு வந்து விட்டு அப்பால் நகர்ந்தார்.

ராமன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த - ஸாதாரண வாநரர்களுக்குக் கூட - ராமன் ஸீதையிடம் பிரியமில்லாதவர் போல நடந்து கொள்கிறார். என்பது விளங்கிவிட்டது.

**அப்ரீதமிவ ஸீதாயாம்**

**தர்க்கயந்திஸ் ம ராக$_4$வம் ।**

மனதிலே பொங்கி வந்த உவகையை மறைத்துக் கொண்டு தேவி - இனிமையான கணவனை - மிகவும் இனிமையான முகத்துடன் நிமிர்ந்து பார்த்தாள்.

**உதை$_3$க்ஷத முக$_2$ம் ப$_4$ர்த்து:**

**ஸௌம்யம் ஸௌம்யதராநநா ॥**

தனது முகத்தில் அளவுக்கு மீறின கடுமை வெளிப்படுகிறது - என்று உணர்ந்த ராமன் சமாளித்துக் கொண்டு இதயத்தின் அடித்தளத்திலே குமுறிக் கொண்டிருக்கின்ற கருத்தை நிதானமாக - சொற்களை அளந்து - வெளியிட்டார்.

**தாம் து பார்ச்$_+$வஸ்தி$_2$தாம் ப்ரஹ்வாம்**
**ராம: ஸம்ப்ரேக்ஷ்ய மைதிலீம் ।**
**ஹ்ருத$_3$ யாந்தர்க$_3$தம் ப$_4$ாவம்**
**வ்யாஹர்த்தும் உபச$_1$க்ரமே ॥**

''மங்கள மூர்த்தியே! தேவி - சத்ருவை ஜயித்து உன்னை மீட்டுவிட்டேன் - பௌருஷம் உள்ளவன் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்து விட்டேன்

எனக்கு நேர்ந்த அவமானத்தையும் சத்ருவையும் உதறிவிட்டேன். என் கடமையை நிறைவேற்றி நான் நிமிர்ந்து நிற்கிறேன். எனக்குத் துணை வந்தவர்கள் சுக்ரீவன் முதலியவர்களின் முயற்சி நிறைவேறி விட்டதில் எனக்கு பரமஸந்தோஷம். விபீஷணனும் தேறிவிட்டார்.

ஸீதா தேவியின் கண்களில் இருந்த கண்ணீர் பொங்கி மார்புச் சேலையை நனைத்துக் கீழே கொட்டியது.

ராமன் அதைக் கண்டு ஒரு கணம் தடுமாறினார். சமாளித்துக் கொண்டு மறுகணம் பேசினார்.

மானமுள்ள மனிதன் அவமதிப்பைப் பொறுக்கக் கூடாது. அதற்குத் தக்க பதில் அடி கொடுத்துவிட்டேன். என் குலத்தை நேரவிருந்த கொடிய அவமானத்திலிருந்து தப்பிக்க வைக்க என்னால் முடிந்தது.

இத்தனை நாட்கள் பிறர் வீட்டில் இருந்துவிட்டு என் கண்முன்னே நிற்கிறாய். தீபஒளி பிரகாசம் கண் வலி வந்தவனுக்கு உதவாதே. அது போல எனக்கு வேண்டாதவளாக நிற்கிறாய்.

போதும்! நீ எங்கே வேண்டுமானாலும் போகலாம். நற்குலத்தில் பிறந்தவன் பிறர் வீட்டில் இருந்த மனைவியை ஏற்கமாட்டான்.

எனக்கு நேரக்கூடிய அவமானத்தைத் தவிர்ப்பதற்காக உன்னை மீட்டேன். அவ்வளவு தான். நீ லட்சுமணனிடமோ பரதனிடமோ ஸுக்ரீவனிடமோ, விபீஷணனிடமோ - மனமுவந்து வாழலாம்.

**நி வேச்₊ய மந: ஸீதே**

**யத₂ா வா ஸுக₂மாத்மந:**

(ஸீதா தேவி லட்சுமணனைச் சாடிய கொடிய சொற்களுக்கு - எடைக்கு எடை ராமன் பேசிவிட்டார்)

ராமனுடைய ரோஷமடங்கிவிட்டது. இதயம் உருகியது. மூர்ச்சை வரும் போயிருந்தது. திட வைராக்கியத்தினால் அத்தனையும் சமாளித்தார்.

தேவிக்கு விளங்கிவிட்டது -எது நினைத்தோமோ! அது நடந்து விட்டது -வினை விதைத்தவன் வினை அறுப்பான். நமக்கு இதுவும் வேணும் இன்னமும் வேணும். பரமக்ருபாவான பிரபு இத்தோடு விட்டார்.

பேச ஆரம்பித்தாள். குரல் தழுதழுத்தது.

*ப்ரபோ! என்ன பேச்சுப் பேசிவிட்டீர்கள். பாமரன் கூட இப்படிப் பேசமாட்டான்.*

*நீங்கள் நினைப்பது போல நான் சீரழிந்து விடவில்லை. இப்படி என் வாயால் சொல்ல வைத்துவிட்டீர்களே!*

*இத்தனை ஆண்டுகள் உங்களுடன் வாழ்ந்த என்னைப்பற்றி எப்படி உங்களுக்கு இப்படி நினைக்க மனம் துணிந்தது?*

*எனக்கு அடங்கியது என் இதயம். அதில் உங்களைத் தவிர வேறொன்றுக்கும் இடமில்லை. உடலை பாபி தொட்டுவிட்டான். அதைத் தடுக்க என்னால் இயலவில்லை.*

**மத$_3$தீ$_4$நம் நு யத்தந்மே**
**ஹ்ருத$_3$யம் த்வயி வர்த்ததே।**
**பராதீ$_4$ நேஷு க$_3$ாத்ரேஷு**
**கிம் கரிஷ்யாம் யநீச்$_+$வரா**

*தெருவில் போகிறவன் போல - என்னை வெறும் பெண் ஜந்மமாக நினைத்து விட்டீர்களே!*

**லகு$_4$ நேவ மநுஷ் யேண**
**ஸ்த்ரீத்வமேவ புரஸ்க்ருதம்**

*நான் பூமியில் பிறந்தவள் - பெண் கருவில் பிறந்தவள் அல்ல. ஜநகராஜனிடம் வளர்ந்தவள். அறியாப்பருவத்தில் என் கையைப் பிடித்தீர்களே! என்னை எக்காலமும் விட மாட்டேன் என்று சபதம் செய்தீர்களே! என் அன்பு - என் நடத்தை இவற்றையெல்லாம் உதறிவிட்டீர்களே! தாங்கள் விதித்தது - இது தான் என்றால் அதையும் ஏற்கிறேன்.*

*மைத்துனரே!''*

*''லட்சுமணன் திரும்பிப் பார்த்தார்*

*''பஞ்சவடியில் உங்களிடம் பேசின பேச்சு நினைவுள்ளதா? அதற்கு பதிலடி வாங்கிவிட்டேன்.*

*உங்களுடன் மைத்துன உரிமையோடு நான் பேசவில்லை. உங்கள் தாயார் உங்களை எனக்கு மகனாகத் தாரை வார்த்துக் கொடுத்தாளே அந்த மகனிடம் சொல்கிறேன்.*

*எனக்கு ஒரு சிதை மூட்டுங்கள். எனக்கு ஏற்பட்டுள்ள விதிக்கு அது தான் வைத்யம்''*

***''சிதாம் மே குரு ஸௌமித்ரே***
***வ்யஸநஸ்யாஸ்ய பேஷஜம்***

*லட்சுமணனுக்கு சுரீர் என்றது. அவருக்கு பஞ்சவடீ நிகழ்ச்சி மறந்தே போய்விட்டது. ''ஆஹா! அண்ணல் அதை மறக்காமல் நினைவில் வைத்துக் கொண்டு தேவிக்கு பதிலடி கொடுத்துவிட்டாரே. அண்ணாவுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது''*

*எழுந்திருந்தான் - ஹநுமான் ஓடி வந்தார். வாயில் விரல்களை வைத்து மௌனம் உபதேசித்தார். உடனே லட்சுமணனுக்கு இந்திரஜித் போரில் தான் கண்ட உண்மை நினைவுக்கு வந்து விட்டது.*

*அண்ணா எது செய்தாலும் அதில் ஒரு தர்ம ஸூக்ஷ்மம் இருக்கும். செய்யத்தகாததைச் செய்கிறோமே - என்று அவரே அதனால் தான் பதற்றமடைந்திருக்கிறார்.*

*ஆயினும் தர்மத்தை மீறாமல் இந்தக் கொடிய பணியை நிறைவேற்றியிருக்கிறார்.*

*இப்போது பதற்றமடங்கி சாந்தமாக இருப்பதிலிருந்து அது தெரிகிறது.*

*அண்ணலை நிமிர்ந்து பார்த்தார். ராமனும் - ''உம்'' மென்று ஜாடை காட்டுவிட்டுத் தலைகுனிந்துவிட்டார்.*

*லட்சுமணன் சிதை மூட்டுகிறார் அக்நிபகவான் ஜொலிக்கிறார்.*

*''ஆஹா! நாம் அக்நியில் வீழ்ந்து சாக நினைத்துவிட்டோமே .*

*அது பெரும் தவறு. அப்படி நான் அவிந்து விட்டால் என் மீது சுமத்தப்பட்ட பழி போகாதே!*

*கூடாது. நாம் சாகக்கூடாது. என்னிடம் குற்றமில்லை நான் பரிசுத்தை - என்று இப்போது நிருபிக்க வேணடும்''*

*அவள்வேண்டினாள். அக்நிபகவானே! என்னைப் பொசுக்கிவிடாதீர்.*

*என்னுள்ளத்தில் ராமனைத்தவிர வேறு எதற்கும் இடமில்லை என்பது உண்மையானால் உலகில் - செய்கின்ற நன்மைகளுக்கெல்லாம் உங்களைத்தானே ஸாக்ஷியாக வைத்துக் கொள்கிறார்கள். அந்த முறையில் - என்னைக் காப்பாற்றுங்கள்.*

*செயலாலும், மனதினாலும், சொல்லினாலும் நான் பதி எண்ணத்தை மீறியவளே இல்லை என்பது ஸத்யமானால் என்னைக் காப்பாற்றட்டும்.*

*ஸூர்யபகவானே! வாயுவே! திக்குகளே! - சந்திரனே! பகல் தேவதையே! இரவு தேவதையே! என்னைக் கண்காணித்திருக்கிறீர்களே. நான் பவித்ரமானவள் என்பது உண்மையானால் நீங்கள் எல்லோரும் காப்பாற்றுங்கள் என்று வேண்டினாள்.*

*பிரதக்ஷிணம் செய்தாள்.*

*அக்நி குண்டத்துள் இறங்கிவிட்டாள். மூவுலகங்களும் கண்ணீர் விட்டன. ஹா ஹா என்று உலகமே கதறியது.*

*ராமனின் உள்ளம் நொந்து நெகிழ்ந்து மருகியது. ஆகாசத்தில் தேவதைகள் கூடி விட்டார்கள்.*

*தாங்கள் பரமாத்மா*

***ஸீதாலக்ஷ்மீ : பவாந் விஷ்ணு:***

***தேவ: க்ருஷ்ண: ப்ரஜாபதி:***

*தாங்கள் இப்படி ஸீதையை உதாஸீநம் செய்யலாமா?*

**உபேக்ஷஸே கத$_2$ம் ஸீதாம்**

**பதந்தீம் ஹவ்ய வாஹநே |**

அக்நிக்கு என்ன தெரியும். அதில் எதைப்போட்டாலும் பொசுக்கிவிடும். இது ஒரு பரீட்சையா என்று மன்றாடினார்கள்!

ராமன் சொன்னார். ''தேவர்களே நீங்கள் என்னைப்பற்றி - என்ன வெல்லாமோ சொல்கிறீர்கள். எனக்கு ஒன்று தான் தெரியும்'' நான் ஸாதாரண மனிதன். தசரதராஜ குமாரன் ராமன்.இந்த பெருமையை நான் காப்பாற்றிக் கொள்ள வேண்டாமா? அதற்காக இவ்விதம் செய்ய நேர்ந்தது.

**ஆத்மாநம் மாநுஷம் மந்யே**

**ராமம் த$_3$ச$_+$ரத$_2$ாத்மஜம்**

ஜொலிக்கின்ற அக்நியிலிருந்து அக்நி தேவனே - தேவியைக் கைகளில் தாங்கி ராமனை அழைத்து ஒப்புவித்தார். பரமபரிசுத்தை. பாபமே தீண்டாதவள். இவளை ஏற்றுக் கொள்வாயாக. பதில் ஏதும் சொல்ல வேண்டாம். இது என் ஆணை என்றார்.

முன்னொரு பகுதியில் அருணாசலகவிராயர் அக்நியிலிருந்து தேவி எழுந்ததை **மாலை வண்டு அசங்காமல்** என்று குறிப்பிட்டதைப் படித்திருக்கலாம்.

அக்நி தேவதை - தூய்மையின் தெய்வமாக பரமாத்மாவினால் பதவி அளிக்கப்பட்டவள். அந்த விஷயத்தில் அப்படிச் சான்றளிக்க அவருக்கு அதிகாரம் உண்டு. அந்த அதிகார தோரணையில் பேசினார்.

**விசுத்$_3$த$_4$ ப$_4$ாவாம் நிஷ்பாபாம்**

**ப்ரதி க்$_3$ருஹ்ணீஷ்வ ராகவ |**

**நகிம்சித்$_3$ அபி$_4$த$_4$ாதவ்யம்**

**அஹமாஜ்ஞாபயாமி தே ||**

ராமன்: அக்நிதேவனே! சூரியனுடைய ஒளிபோல் ஸீதை. சூரியனின்றி ஒளியில்லை, ஒளியின்றி சூரியனில்லை. என்னை விட்டு வேறுபட்டவள் அல்ல ஸீதா

**அநந்யா ஹிமயாஸீதா**

**ப$_4$ாஸ்கரேண ப்ரப$_4$ா யத$_2$ா।**

எனக்கு யாரும் ஸீதையைப் பற்றி சான்றுச்சீட்டு வழங்கத் தேவை இல்லை. என் புகழின்றி - எனக்கு இருப்பு உண்டா! அவளை என்னால் விடவே முடியாது.

**நஹி ஹாதும் இயம் ச$_+$க்யா**

**ப$_4$ாஸ்கரேண ப்ரப$_4$ா யத$_2$ா॥**

ஹநுமான் அவசரம் அவசரமாக எங்கிருந்தோ கொண்டு வந்து நறுமண மலர்களை பாறையின் மீது தூவினான்.

ஸீதா ராம தம்பதியை கைகூப்பி வணங்கி அதன்மீது அமரச் செய்தான். இணைந்து அமர்ந்த தம்பதிகளின் மீது தேவர்கள் பூமாரி பெய்தனர். வாநரர்கள் எதிரில் அமர்ந்து கண் கொட்டாமல் தர்சனம் செய்து கொண்டிருந்தனர்.

ஹநுமான் பாட ஆரம்பித்தார்.

**அயோத்$_4$யா புரநேதாரம்**

**மிதி$_2$லாபுர நாயிகாம்**

**ராக$_4$வாணாம் அலங்காரம்**

**வைதேஹாநாம் அலங்க்ரியாம்**

**ரகூணாம் குலதீ$_3$பம் ச$_1$**
**நிமீநாம் குலதீ$_3$பிகாம்**
**ஸூர்யவம்சஸ$_+$முத்$_3$பூதம்**
**ஸோம வம்ச$_+$ ஸமுத்$_3$ப$_2$வாம்**

**புத்ரம் தச$_3$ரத$_2$ஸ்யாத்$_3$யம்**

**புத்ரீம் ஜநகபூ$_4$பதே:**
**வஸிஷ்ட$_2$ாநுமதாசாரம்**
**ச$_+$தாநந்த$_3$மதாநுக$_3$ாம்॥**

கௌஸல்யா க$_3$ர்ப$_4$ஸம்பூ$_4$தம்
வேதி$_3$கர்பே$_4$ா தி$_3$தாம்ஸ்வயம் |
புண் ட$_3$ரீக விச$_+$ாலாக்ஷம்
ஸ்பு$_2$ர$_3$திந் தீ$_3$வரேக்ஷணாம் ||

ச$_1$ந்த்ரகாந்தாநநாம் பே$_4$ாஜம்
ச$_1$ந்த்ரபி$_3$ம்பே$_3$ாபமாநநாம் |
மத்தமாதங்க$_3$கமநம்
மத்தஹம்ஸ வதூ$_4$க$_3$திம் ||

ச$_1$ந்தநார்த்$_3$ர பு$_4$ஜா மத்$_4$யம்
குங்குமார்த்ர குச$_1$ஸ்த$_2$லீம் |
சாபாலங்க்ருதஹஸ்தாப்$_3$ஜம்
பத்மாலங்க்ருத பாணிகாம் ||

ச$_+$ரணாக$_3$த கே$_3$ாப்தாரம்
ப்ரணிபாத ப்ரஸாதிநீம் |
காலமேக$_4$ நிப$_4$ம் ராமம்
கார்த்தஸ்வர ஸமப்ரபாம் ||
தி$_3$வ்யஸிம்ஹாஸநாஸீநம்

தி$_3$வ்யஸ்ரக்$_3$ வஸ்த்ரபூ$_4$ஷணாம் |

அநுக்ஷணம் கடாக்ஷாப்$_4$யாம்
அந்யோந்யேக்ஷணகாங் க்ஷிணௌ

அந்யோந்ய ஸத்ருச$_+$ாகாரௌ
த்ரைலோக்ய க்ருஹத$_3$ம்பதீ
இமௌயுவாம் ப்ரணம் யாஹம்
ப$_4$ஜாம் யத்$_3$ய க்ருதார்த்த தாம்

உங்கள் இருவரையும் சேர்த்து வைத்து என் கடமை ஆற்றிவிட்டேன்

ஏவம் ஸ்ரீராம ச$_1$ந்த்ரஸ்ய
ஜாநக்யாச்ச விசே ஷத:
க்ருதம் ஹநுமதாஸ்தோத்ரம்
நித்யாநந்த$_4$ ப$_2$லப்ரத$_3$ம்

# ஸ்ரீராம பட்டாபிஷேகம்

ராமன் விபீஷணனை அழைத்து - நாளைக் காலை நான் பரதனை ஸந்தித்தாக வேண்டுமே என்றார். இதோ புஷ்பக விமானம் என்றார் விபீஷணன்.

ராமன் லட்சுமணனோடும் ஸீதையோடும் அனைத்து வாநரர்களுடன் விபீஷணனோடும் புஷ்பக விமானத்தில் ஏறி - பொழுதுவிடிவதற்கு முன் பரத்வாஜாச்ரமம் சேர்ந்தார். பரத் வாஜர் அளித்த விருந்தில் ராமன் ஹநுமானுடன் சேர்ந்து விருந்து அருந்தி வைபவம் முன்னொரு பகுதியில் கூறப்பட்டது.

அயோத்தியில் பரதனை ஸந்தித்த ஹநுமானுக்குத் தற்பெருமை கொஞ்சம் மட்டுப்பட்டது

ராமனிடம் தன் அந்தரங்க ஈடுபாடு - வேறு யாருக்கும் இருக்க முடியாது

அப்படி அவருடைய ஸேவையில் ஈடுபட்டுவிட்டோம். பரமபாக்யம் நமக்கு என்ற சில சமயம் நினைத்ததுண்டு.

பரதன் ஒரு ராம கைங்கர்யம் செய்திருக்கிறார். தனக்குத்தன் மாதா வரனாகப் பெற்ற அரசை - அண்ணனின் அரசை - ஏற்கமாட்டேன் என்று சொன்னது தியாகத்தின் சிகரம் தான். ஏற்கமாட்டேன் என்று தானும் ஒரு துறவியாகப் போயிருந்தால் அதற்காக எவரும் அவரைக் குற்றம் சாட்ட முடியாது.

தாயின் ஆணையை மறுத்த பரதன் தமையனின் ஆணையை ஏற்றுக் கொண்ட அழகே தனி.

அண்ணனுக்கே உரிய அரசை அண்ணனின் ஆணையின் பேரில் அண்ணாவின் சரணபாது கைகளை ஸிம்மாஸனத்தில் அமர்த்தி தன்னை ஊழியனாக்கிக் கொண்டு - அண்ணாவின் அரசுக்கு ஒரு குறையும் வந்துவிடாமல் அண்ணாவின் அரசுக்கு எவ்வளவு பெருமை சேர்க்க முடியுமோ அத்தனையும் சேர்த்து விட்டாரே.

அணுக்கத் தொண்டனாக அருகில் இருந்து ஸேவை செய்வதைக் காட்டிலும் ஏவலாளாக எட்டியிருந்து எஜமானின் சொத்தையும் பெருமையையும் பல மடங்கு பெருகச் செய்வது உத்த மோத்தமமான ஸேவை.

அணுக்க ஸேவை செய்து யஜமானின் மு கோல்லாஸத்தை - தர்சித்துப் பேருவகையைப் பெறலாமே. அதையுமல்லவா துறந்து ஸேவை செய்திருக்கிறார்.

தன்னைக்காட்டிலும் பரதன் பலமடங்கு பெரியவர் என்று அறிந்து அவருடைய திருவடிகளைத் தொழுதார்.

இந்த விளக்கம் பெறுவதற்காக அல்லவா ராமன் தன்னை முன்னே அனுப்பியிருக்கிறார், பிரபுவுக்கு நம்மீது எவ்வளவு பரிவு? என்று நினைத்து நினைத்து மகிழ்ந்தார் ஹநுமான்.

தியாகராஜஸ்வாமி ஒரு நாள் ராமனுக்குப் பூஜை செய்துவிட்டு பிரார்த்தனை செய்தார். ''ராம என்னை எப்போதும் உன் அருகிலேயே வைத்துக் கொள்''

**செந்தநே ஸத$_3$ா உஞ்சுகோ வையா**

ராமன்: நீ தான் என் ஸந்நிதியில் அமர்ந்து ஓய்ச்சல் ஒழிவில்லாமல் பாடிக் கொண்டிருக்கிறாயே

தியாகராஜர்: அப்படியல்ல - கைங்கர்ய ஸ்ரீமானான ஹநுமானைப் போல் உனக்கு ஸேவை புரியும் படி அருள்பாலிக்க வேண்டும்.

**மந்து கெக்கு ஸ்ரீமந்து டௌ ஹநு**
**மந்து ரீதிகா -ஸ்ரீகாந்த-**

ராமன் புன்னகை புரிந்தார்.

திரும்பவும் அநுபல்லவியை இருமுறை பாடினார். அவருக்கு மனதிலே ஒரு வெளிச்சம் ஏற்பட்டது.

''ஆஹா ஹநுமான் மாதிரி நம்மால் ஸேவை புரிய முடியுமா? ஸேவை புரிவதாக நினைத்துக் கொண்டு சில தொண்டர்கள் பிரியத்தினால் அன்புத் தொந்தரவு செய்வார்கள்.

வேளை கெட்ட வேளையில் - ஏதாவது பட்சணம் கொண்டு கொடுப்பார்கள். தூக்க நேரத்தில் பாடிக் கொண்டிருப்பார்கள்.

வேளை தெரிந்து ஹிதம் தெரிந்து பிரபுவின் மனம் தெரிந்து உபசாரம் செய்ய ஹநுமான் ஒருவனுக்குத்தான் தெரியும்.

ஆகவே எதுவும் வேண்டிக் கொள்ளாமல் ஹிம்ஸை செய்யாமல் இருந்தால் அதுவே பிரபுவுக்குப் பெரிய தொண்டு.

அப்போது தியாகராஜஸ்வாமிக்கு பரதனின் தொண்டு - மேலே சொன்ன தொண்டு - நினைவுக்கு வந்தது.

பிரபு இட்ட ஆணையை அவர் விருப்பப்படி நிறைவேற்றுவதே பெரிய உபகாரம். ஆணையைத் தலை மேல் தாங்கி ஆற்றுவதே பெரும் தொண்டு. அதை மறுமுறை நினைவு மூட்ட அவசியமில்லாமல் உடனே நிறைவேற்றுவது மிகச் சிறந்தது.

பரதனுக்கு இட்டது போல - எனக்கு ஏதாவது ஆணையிடுங்கள்.

*சரணம் :* **தலசிந பனுலநு நே தெலிஸி**
**தலதோ நடசி ஸந்தஸில்ஸதுரா**
**பலுமாறு பல்க பனிலேது ராம**
**பரதுநிவல த்யாராஜநுத**
**செந்தநே ஸத$_2$ா யுஞ்சுகோ வையா**

என்று குந்தலவராளியில் பாடினார்.

இது போல கிருஷ்ண அவதாரத்தில் ஒரு நிகழ்ச்சி. க்ருஷ்ணாவதாரத்தின் போது - கண்ணனின் ஒன்று விட்ட பெரியப்பாவின் குமாரன் உத்தவன். அவனுடைய தகப்பனார் தேவபாகர் கம்ஸனுடைய ஹிம்ஸை பொறுக்க முடியாமல் உத்தவனை அழைத்து கொண்டு ஹிமாசலம் போய்விட்டார்.

அங்கு உத்தவன் பிரஹஸ்பதி பகவானின் தர்சனம் பெற்று சுச்ருஷை செய்து ஸகல வித்யைகளையும் கற்றுக் கொண்டுவிட்டான். அவன் கற்றுக் கொண்ட வித்தைகளிலே மிகச் சிறந்த பாடம் - வஸுதேவனுடைய குமாரனாக அவதரித்திருக்கின்ற கண்ணன் ஸாக்ஷாத் பரமாத்மா - என்பது தான்

கம்ஸவதம் ஆன பிறகு அவனுடைய குடும்பம் மதுரைக்கு வந்துவிட்டது. வந்தவுடன் உத்தவன் கண்ணனிடம் வந்து ஒட்டிக் கொண்டுவிட்டான். க்ருஷ்ணனுடைய பிருந்தாவன லீலைகளைப் பற்றியெல்லாம் கேள்விப்பட்டான்.

''சிறுபிள்ளைத் தனமாக இவன் செய்த விஷமங்களையெல்லாம் இவர்கள் லீலைகள் என்று எல்லோரும் கொண்டாடுகிறார்கள்.'' - என்று அலட்சியமாக நினைத்தான்

ஆயினும் கண்ணனிடம் அபார பக்தி மிகவும் ஈடுபாட்டோடு கைங்கர்யம் செய்து வந்தான். கண்ணனே கொண்டாடியிருக்கிறார். பாகவதர்களுக்குளளே நீ நானே தான்

**''த்வம்து பாகவதேஷ் வஹம்''**

அவனைக் கண்ணன் ஒரு நாள் தனிமையில் அழைத்துப் போனார்.

''உத்தவ! நீ எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். யமுனைக்கரையில் பிருந்தாவனம் இருக்கிறது. அங்கு தானே நான் வளர்ந்தேன். அந்த வனத்தில் உள்ள கோபிகளுக்கு எல்லாம் என்னிடம் ப்ரியம்.

நான் அவர்களை விட்டு விட்டு - மதுரைக்குக் கிளம்பின போது அவர்களிடம் ''சீக்ரம் வந்து விடுகிறேன்'' - என்று சொல்லி விட்டு வந்தேன்.

இங்கே காரியங்கள் என்னைப் போக விடவில்லை - நீ போய் அவர்களை ஸமாதனாம் சொல்லி - கூடிய சீக்கிரம் வருவேன் என்று ஆறுதல் கூறிவிட்டு வா'' - என்றார்.

உத்தவன் நினைத்தான், கண்ணன் இன்னும் அறியாப்பாலகனாகவே இருக்கிறான். சிறு பெண்கள் பிள்ளைகள் கூடிக் குலவினால் சந்தோஷமாக இருப்பார்கள். விட்டுப் பிரிந்துவிட்டால் - புது ஸ்னேகம் பிடித்துக் கொண்டு உல்லாஸமாக இருப்பார்கள்.

கண்ணன் இது புரியாமல் அவர்கள் தன்னைப் பிரிந்து வருத்தப்படுவார்கள் என்று நினைக்கிறான்.

நமக்கென்ன? நாம் போய் அவன் சொன்ன படி செய்துவிட்டு வருவோம் -என்று ரதத்தில் ஏறிக் கிளம்பினான்.

பிருந்தாவனத்திற்கு அவன் வந்து கண்ட காட்சி முற்றிலும் வேறாக இருந்தது. விடியற்காலை - எழுந்து யமுனைக்கு ஸ்நானத்திற்குப் போனான். வீடுகளிலே தயிர் கடைகிறவர்கள் எல்லாரும்,

**நந்த முகுந்த கோபால**

**நவநீத சோர கோபால**

**கோவிந்த தாமோதர மாதவ**

என்று பாடிக் கொண்டே கடைகிறார்கள். பால் கறக்கிறார்கள். பசுக்களைக் குளிப்பாட்டுகிறார்கள். குழந்தைக்குப் பால் கொடுக்கிறார்கள் - சாணி தட்டி வராட்டி தயாரிக்கிறார்கள். உத்தவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஸ்நாநம் செய்து விட்டு - கண்ணன் போல கொண்டை போட்டுக் கொண்டு கண்ணன் உடுத்துக் களைந்த பீதாம்பரம் கொண்டு கஸ்தூரி திலகம் இட்டுக்கொண்டு ஜாம்ஜாமென்று நடந்து வருகிறான்.

உத்தவனைச் சூழ்ந்து கொண்டார்கள் கோபிச் சிறுமிகள்.

கோபிச் சிறுமி : யாரையா நீர்?

உத்தவன்: நான் கண்ணனின் தூதன். அவனைப்பிரிந்து நீங்கள் அழுது கொண்டிருப்பீர்கள். ஆறுதல் கூறிவிட்டுவா என்று அனுப்பினார்.

*கோபி: நாங்கள் அழுகிறோமா? யார் சொன்னா?*

*உத்தவன்: யாரோ சொன்னா. அது தப்புத்தான்.*

*மற்றொரு கோபி: நாங்கள் அழவில்லையா? யார் சொன்னா?*

*உத்தவன்: நீங்கள் அழுகிறீர்களா சிரிக்கிறீர்களா என்றே தெரியவில்லை*

*சொல்ல வந்ததைச் சொல்லி விடுகிறேன்.*

*க்ருஷ்ணன் உங்க ஊர் இடையப் பையன் என்று நினைக்காதீர்கள் அவன் அகில உலக நாயகன். அவன் பரமாத்மா.*

*கோபி பரமாத்மாவா? அப்படின்னா என்ன!*

*உத்தவன்: அதாவது நமக்குள்ள ஆத்மா இருக்கிறது நமக்குள்ள இருக்கிற ஆத்மாவுக்கெல்லாம் அவன் ஆத்மா பரமாத்மா!*

*கோபி: நமக்குள்ள ஆத்மா இருக்கிறதா? எங்கே ஐயா இருக்கு? எங்களுக்குள்ளே கண்ணன்தான் இருக்கிறான். அவனைத் தவிர வேறு யாரும் உள்ளே இருக்க முடியாது.*

*உத்தவன்: அதாவது நான் சொல்ல வந்தது என்னவென்றால் அவன் பரமாத்மா. அவனைக் கண்ணனாக நீங்கள் பார்க்கிறீர்கள்.*

*கோபி: யார் சொன்னது உங்களுக்கு? எங்கள் கண்ணனை வேண்டுமானால் நீங்கள் க்ருஷ்ண பரமாத்மா - என்று சொல்லுங்கள். உங்கள் பரமாத்மா - எங்களுக்கு வேண்டாம். கண்ணன் போதும்.*

*உத்தவன் விக்கித்துப் போனான்*

*இவர்களுடைய க்ருஷ்ண நிஷ்டை அவர் உள்ளத்தை ஆகர்ஷித்தது. அவர்களுக்குத் தலை வணங்கிவிட்டு விடை பெற்றார்.*

***வந்$_4$தே நந்த வ்ரஜஸ்த்ரீணாம்***

***பாதரேணும் அபீ$_4$க்ஷ்ணச$_+$:***

*யாஸாம் ஹரிக தே$_2$ாத் தீத$_2$ம்*

*புநாதி பு$_4$வனத்ரயம்*

உக்கீ$_2$தம் - என்று இரண்டாவது தடவை அழுத்திச் சொல்கிறார் சுகாசார்யார்.

கோபிகளுடைய ஹரி கதையானது உபநிஷத்தில் உள்ள உத்கீ$_3$த$_4$வித்யை போல பரம ரகசியமானது. பரம உத்தமமானது. பரா வித்யா - என்று சொல்லப்படுகின்ற பரமாத்ம ஞானத்திற்கு ஈடானது என்று பொருள்.

உத்தவன் பிரஹஸ்பதி பகவானிடம் கற்ற பிரம்ஹவித்தையைக் காட்டிலும் உயர் தத்துவத்தினை கோபிகளிடமிருந்து பெற்றார். அது போல - கைங்கர்ய சிரோமணியான ஹநுமானும் கைங்கர்ய ரஸத்தின் அருமையை பரதனிடம் கற்றார் என்பது குறிப்பு.

ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆயிற்று -

உலகெங்கிலும் ராமனுடைய புகழ் பரவிற்று. அகில உலகமும் ராம ராம ராம என்று சொல்ல ஆரம்பித்தது.

*ராமோ ராமோ ராம இதி*

*ஜநாநாம் அப$_4$வந் கத$_2$ா:*

## ஸ்ரீமத்ராமாயண அவதாரம்

தனி ஒருவராக - சித்ரகூடத்தில் தன்னைச் சுற்றி புற்று மண்டி - அது தெரியாமல் அதற்குள் உட்கார்ந்து கொண்டு ராம நாமம் சொல்லிக் கொண்டிருந்த வால்மீகி பகவானின் காதுகளில் உலகில் பரவிய ராம நாமப் பேரொலி தாக்கியது. அவருடைய தவம் கலைந்தது. புற்றிலிருந்து வெளியே வந்தார்.

தான் சொல்லிக் கொண்டிருந்த ராம நாமத்தை உலகம் முழுதும் சொல்லிக் கொண்டிருக்கிறதே! என்ற ஆச்சரியம்?

*என்ன காரணம்! என்று சிந்தனை செய்தார். வழிப் போக்கர்களைக் கேட்டார்.*

*''ராம ராம என்கிறீர்களே! அதன் பொருள் என்ன?''*

*''இது தெரியாதா? ஸர்வலோகசரண்யனான ராமனுடைய பெயர் இது''*

*வால்மீகி சிந்தித்தார்*

*''ஸர்வலோக சரண்யனா? ராமனா? அப்படி ஒருவன் இருக்கிறானா?''*

*அப்போது நாரதர் அங்கே வந்தார். அவர் தானே பல ஆண்டுகளுக்கு முன் வருண குமாரனான ப்ரஹ்ம ஞானியான வாருணி, ஸந்தர்ப்பக் கோளாறினால் வேடு வச்சியிடம் மயங்கி வேடனாக ஸஞ்சரித்தவனை தவத்தில் உட்கார வைத்தார்.*

*அப்படி உட்கார வைத்தோமே அவன் எப்படி இருக்கிறான் - என்று பார்க்க வந்தார்.*

*பகவானுடைய பல அவதாரங்களிலும் லீலைகளிலும் புகுந்து புறப்பட்ட நாரதர் - ராமாவதார காலத்தில் தலை நீட்டவே இல்லை.*

*நாராயணன் ராமாவதாரம் எடுப்பதற்கு முன் - நாரதரை அழைத்து ''நான் மநுஷ்யாவதாரம் எடுக்கப் போகிறேன். அந்த நேரத்தில் நீர் வந்து தலை நீட்டினீரானால் என் அவதார ரஹஸ்யம் வெளிப்பட்டு விடும். ஆகவே அந்த அவதாரத்தை நீர் எட்ட இருந்து ரஸிக்கலாமே தவிர என்கிட்ட வரக்கூடாது - என்று எச்சரித்திருந்தார்.*

*அதனால் தான் அவர் ராமனைச் சந்திக்கவே இல்லை. ஆனால் எட்ட இருந்து தர்சனம் செய்து கொண்டே இருந்தார்.*

*வால்மீகியைத் தேடிக் கொண்டு வந்த நாரதரைப் பார்த்து வால்மீகி கேட்டார்.*

*உலகிலே ஸகல கல்யாண குணங்களும் நிரம்பிய மனுஷ்யன் ஸர்வலோக சரண்யனாக இருக்கிறானா? அப்படி இருந்தால் எனக்குச் சொல்லுங்கள்''*

''ராமன் என்று ஒருவன் இருக்கிறாரே. இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்தவர். எல்லா ஜனங்களும் அறிவார்களே!''

**இக்ஷ்வாகுவம்ச$_+$ ப்ரப$_4$வோ**

**ராமோ நாம ஜனை: ச்ருத:**

என்று ஆரம்பித்துக் கதை சொன்னார். அதைக் கேட்டு வால்மீகி அந்த ராம என்ற சொல்லுக்கு உரியவன் இத்தகைய மஹாபுருஷனா - என்று ஆச்சரியப் பட்டிருக்கும் போது பிரஹ்ம தேவன் வந்தார்.

''அளவற்ற கோடி ராம நாமங்கள் ஜபித்திருக்கின்ற நீங்கள் தான் ராமனுடைய திவ்விய சரிதத்தை எழுதத் தகுதி பெற்றவர். அதை எழுதுங்கள் என்று அருள் பாலித்து விட்டுச் சென்றார்.

நாரதர் முகமாக - சுருக்கமாக கேட்ட ராம சரிதம் வால்மீகி முன்னே ஆகாசத்திலே - எல்லா நுணுக்கங்களுடன் காட்சி அளித்தது.

அவற்றை - இதற்கு முன் வேதங்கள் எந்த மொழியில் நாராயணன் மூச்சுக் காற்றாக வெளி வந்தனவோ - அதே மொழியில் இயற்றினார்.

மனிதக் குரலில் வேதங்கள் தான் முதல் முதலில் முழங்கின. அதன் பிறகு மனித வாக்கில் முதலில் பிறந்தது ஸ்ரீமத்ராமாயணம்.

## ஆதி காவியம்

அயோத்தியா ஸாம்ராஜ்யத்தில் ராமனுக்கு நித்ய கைங்கர்யம் செய்து கொண்டிருந்த - ஹநுமான் காதுகளில் வால்மீகி பகவான் ராமாயணம் எழுதிக் கொண்டிருந்த செய்தி விழுந்தது.

லட்சுமணனை அணுகி விநயத்துடன் வேண்டினார்.

''இரண்டு நாட்கள் - நான் பிரபுவுக்கு கைங்கர்யம் செய்ய இயலாது போல இருக்கிறது பிரபுவிடம் விண்ணப்பிக்க மனம் ஒப்பவில்லை. தங்களிடம் இதற்கு

மேல் நான் சொல்ல வேண்டியதில்லை. அநுமதி கொடுங்கள்''

''ஆஞ்ஜநேய! கவலைப்படாதே! நான் அண்ணாவைப் பார்த்துக் கொள்கிறேன். நீ போய் வா!''

ஹநுமான் வால்மீகி ஆச்ரமத்திற்கு ஓடினார். கவிஞர் பெருமான் - பரத்தியிருந்த ஒலைகளிடையே அமர்ந்து - எழுத்தாணியைக் கூர்தீட்டிக் கொண்டிருந்தார்.

''அடியேன் - ஹநுமான் - என்று வணங்கினார் முனிவரை''.

முனிவர் பரபரப்புடன் எழுந்து அவரை ஆலிங்கனம் செய்து கொண்டார்.

''ஹநுமானே! உங்களை தினமும் த்யானம் செய்து கொண்டு தான் காவியம் எழுதி வருகிறேன். தாங்களே நேரில் வந்தது -ஸ்ரீராமனுடைய க்ருபை. நான் எடுத்துக் கொண்ட பணி நல்லபடியாக நிறைவேற வேணும். அருள் பாலியுங்கள்''

''மஹாநுபாவரே! எங்கள் பிரபு அவதாரம் செய்தது தேவர்களின் பிரார்த்தனையினால்.

அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி- தான் ஏற்றுக் கொண்ட பணியை அவர் நிறைவேற்றி விட்டார். ஆனால் அவருடைய அவதார லட்சியம் அது மட்டுமல்ல.

மனுஷ்ய வர்கம் - தர்ம வழியில் வாழ்ந்து - பிரபஞ்ச நியதியை பரிபாலிக்க வேண்டும் - என்பது தான் அவருடைய லட்சியம்.

அது நிறைவேறுவது தங்கள் கையில் உள்ளது. அவருடைய சரிதம் நூல்வடிவிலே வடிக்கப்பட்டால் தானே அது சாச்வதமாக இருந்து -மனிதப் பண்புக்கு வழி காட்ட முடியும்.

அந்த மிகச் சிறந்த பணி - கோடிக்கணக்காக ராம நாம ஜபத்தினால் தூய்மையும் அருளும் பெற்ற தங்கள்

திருவாக்கினால் நிறைவேறும். அவருடைய ஸங்கல்பத்தினால் தான்.

எழுதிய வரை நான் கேட்கலாமா?

வால்மீகி - என் பாக்யம் - தாங்கள் கேட்டு ஒப்புதல் அளித்து விட்டால் அது பிரமாண நூலாகிவிடும். இது வரை பாதுகா பட்டாபிஷேகம் வரை காவியம் உருப்பெற்றிருக்கிறது கேளுங்கள்.

காலை முதல் யாமத்தில் ஆரம்பிக்கப்பட்ட பாராயணம் நான்காம் யாமத்தில் - ஸந்த்யா வந்தன நேரத்தில் முடிவுற்றுது.

ஹநுமான் கண்களை மூடினார். வால்மீகி பாடினார். என்றோ நடந்தது - இன்று ஹநுமான் இதயத்திலே இன்று நடந்தது.

**சிரநிர்வருத்தம் ப்யேதத்**
**ப்ரத்யக்ஷமிவ த$_3$ர்சி+தம்**

பாராயணம் முடிந்தது. வெகு நேரம் வரை ஹநுமான் கண்திறக்கவில்லை. முனிவர் காத்திருந்தார்.

ஜயஸ்ரீராம் என்று கோஷித்துக் கொண்டே கண்விழித்தார்.

**''பிரஹ்மாநந்தம் பரமஸுக$_2$தம்''**

என்று பரவசப்பட்டார். ''மஹரிஷே! நீங்கள் க்ருதார்த்தர். தங்கள் க்ருதியினால் ராமாவதாரம் பலமடங்கு பெருமை பெற்று விட்டது'' என்று கூறி விழுந்து வணங்கினார்.

''ராமதாஸரே! தங்களிடம் ஒரு விண்ணப்பம்''

''கூறுங்கள். காத்திருக்கிறேன்''

''தாங்கள் ஓர் உபகாரம் பண்ண வேண்டும் பிரஹ்ம தேவனின் அமோக ஆஜ்ஞையாலே இந்தப் பாவனக்ருதியில் இறங்கினேன்.

அது எனக்கு நினைத்து மாளாத அளவுக்கு விச்வரூபம் எடுத்துக் கொண்டிருக்கிறது.

இது வரை சுவடிகளில் பதிந்துள்ள பாகத்தை பிரஹ்ம தேவனிடம் கொண்டு காண்பித்து அவரின் ஆணை சரிவர நிறைவேறி வருகிறதா என்று அவரிடம் தெரிந்து கொண்டு வந்தால் பரம உபகாரமாக இருக்கும்.

அதற்காக தாங்கள் பிரஹ்ம லோகம் போக வேண்டும்.

''பிரஹ்ம லோகமா? நானா? எப்படி முடியும்?

''தங்களால் முடியாததே ஒன்று மில்லை. தயவு செய்து என் வேண்டுகோளை நிறைவேற்றுங்கள்.''

**அஸாத்$_4$ய ஸாத$_4$க ஸ்வாமிந்**
**அஸாத்$_4$யம் தவ கிம்?வ$_3$த**।
**ராமதூ$_3$த க்ருபாஸிந் தே$_4$ா**
**மத்கார்யம் ஸாதய ப்ரபோ**।''

''தங்களுடைய அமோகமான ஸத்யவாக்கு தான் இதை நிறைவேற்ற வேண்டும். சுவடியைக் கொடுங்கள். என் ப்ரபு அநுமதி அளித்தால் அருள் பாலித்தால் இது நிறைவேறும்''

விடை பெற்றுக் கொண்டு மாலையே அயோத்தி திரும்பிவிட்டார். கொண்டு வந்திருந்த சுவடிக்கட்டை ராமனுடைய திருக்கரங்களுக்கு நேரே நீட்டினார். ராமன் ஆவலுடன் எடுத்துக் கொண்டார்.

''ஹநுமானே இன்று இரவு இதைப் படித்துக் காண்பியேன். தேவி கருவுற்றிக்கிறாள். அவளும் நானும் கேட்கிறோம்''.

ஸீதாதேவி மஞ்சத்தில் சாய்ந்து கொண்டிருக்கிறாள். ஸ்ரீராமன் அவளருகில் உட்கார்ந்து கொண்டு கேட்கிறார்.

பால காண்டம் கேட்டு ஸீதாதேவி பரம குதூகலம் அடைந்தாள். அயோத்தியா காண்டம் படித்தார் ஹநுமான். அதில் வந்த ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஹநுமானின் உள்ளம் நெகிழ்ந்து விட்டது. நெக்குருகினார்

ஸ்தம்பித்து சில நிமிடங்கள் தன் உள்ளத்தைத் தேற்றிக் கொண்டார்.

விடியற்காலை நான்காவது யாமத்தில் பாராயணம் முடிந்தது. ராமனும் ஸீதாதேவியும் பரதனுடைய பெருமையை -தியாகத்தை - விநயத்தை கடமை உணர்ச்சியை -மாற்றி மாற்றி நினைத்துக் கண்ணீர் விட்டனர்.

ஸூர்ய உதயத்தில் - ஹநுமான் விடைபெற்று சுவடியுடன் பிரஹ்ம லோகம் போகப்புறப்பட்டு விட்டார்.

இனி வரப்போகின்ற நிகழ்ச்சிகளில் சில காலம் - ஹநுமான் கலந்து கொள்ளவில்லை. கலந்து கொண்டிருந்தால் -பிறகு நடந்த நிகழ்ச்சி நடக்காமலே போயிருக்கலாமே - என்று தியானித்துச் சிந்தித்துக் கொண்டிருந்த மஹானுபாவர் ஸ்ரீஸ்ரீக்ருஷ்ண ப்ரேமி ஸ்வாமிகளின் உள்ளத்தில் இப்படி ஹநுமான் ராமனை விட்டுப் பிரியும் நிகழ்ச்சி உருவாகி இருப்பதை அவருடைய ஜாநகீ விஜய காவியத்தில் காணலாம்.



# ஸீதா வநவாஸம்

மறுநாள் பகல் முழுவதும் அயோத்யா காண்டத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருந்த - ஸீதா தேவியும் ராமனும் இரவு அயர்ந்து தூங்கிவிட்டார்கள்.

விடியற்காலை - நான்காவது யாமத்திலேயே ராமன் விழித்தெழுந்து அந்தப்புரத்திலிருந்து வெளியே வந்தார். லட்சுமணன் காத்து நின்றான்.

இரவு வேவு காரன் வந்திருப்பதாக கூறினார். வேவு காரன் ஒரு சேதி சொன்னான்.

''நகரத்து நான்காவது வெளி வீதியிலே சுற்றிக் கொண்டு வரும் போது ஒரு வீட்டில் - பெருத்தக் கலவர ஓசை கேட்டது. கணவன் மனைவிகளுக்கிடையே சண்டை - கணவன் கத்தினான்.

''பிறத்தியான் வீட்டிலே இருந்தவளைச் சேர்த்து வைத்துக் கொள்ள - நான் ஒன்றும் ராமன இல்லையடி - வெளியே போ''

இதைக் கேட்டு என் மனது தாங்கவில்லை. இங்கு வந்து தெரிவிக்கலானேன்''

ராமன் கேட்டார். லட்சுமணனைப் பார்த்தார் -

சற்று நேரம் மௌனம். பிறகு லட்சுமணனைப் பார்த்துக் கூறினார்.

''லட்சுமணா! நான் சொல்லப் போவது உனக்குப் பிடிக்காது''

''அண்ணா! அப்படிச் சொல்லாதீர்கள். இந்திரஜித் வதத்தின் போதே நான் திருந்தி விட்டேன். தாங்கள் எது செய்தாலும் அது தர்மமாகவே இருக்கும் என்று எனக்கு முழுநம்பிக்கை. சொல்லுங்கள். மறுக்காமல் அப்படியே செய்வேன்.''

''ரொம்ப நல்லது. செய்தி கேட்டாயல்லவா! அரசரான எனக்கு ஒரு அவதூறு வந்துவிட்டது. அது நியாயமா - அந்நியாயமா? என்பது வேறு விஷயம்.

அவதூறை முதலில் களைய வேண்டும். அது பொய்யான அவதூறு என்று பின்னால் நிருபணம் ஆகிவிட்டால் சரி.

அதுவரை அவதூறு - என்னை ஒட்டிக் கொண்டு தானே இருக்கும். ஆகவே அதைஉடனே களைய வேண்டும்.

நீ ஒன்று செய்ய வேண்டும்

அவள் கர்ப்பமாக இருக்கிறாள் தெரியுமல்லவா - உனக்கு? முந்தாநாள் என் அம்மா என்னைக் கூப்பிட்டுச் சொன்னாள். குழந்தை ஜாநகிக்கு மசக்கை காலமப்பா! ஏதாவது வேண்டுமென்று கேட்டால் - உடனே அதை நிறைவேற்றிவிடு என்றாள்.

நேற்று காலை ஜாநகியை கேட்டேன் ''உனக்கு என்ன வேண்டும்?''

அவள் சொன்னாள் ''நாம் முன்பு வனத்திலிருந்த போது ருஷிகள் ஆச்ரமத்துக்கெல்லாம் போனோமே! ரிஷி மாமிகள் எல்லோரும் நமக்கு உபசாரம் செய்தார்களே! அந்த மாமிகளைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது - என்று சொன்னாள்.

அது தான் நமக்கு சாக்கு. நான் ஸ்நாநம் செய்து விட்டு வஸிஷ்டர் ஆசிரமம் போகிறேன்.

நீ தேவியிடம் சொல்லு,

''மதனி! நீங்கள் ருஷிகள் ஆசிரமங்களைப் பார்க்க வேண்டு மென்றீர்களாமே. ரதம் தயாராக இருக்கிறது - வாருங்கள் போகலாம் - என்று சொல்லு. அவளை வால்மீகி ஆச்ரமத்தில் கொண்டுவிட்டுவிடு''

லட்சுமண! நீ என்ன நினைக்கிறாய் என்பது எனக்கு விளங்குகிறது. ஏன் இந்த கபட நாடகம் என்றுதானே!''

''அண்ணா! அண்ணா! உங்கள் காரியங்களை ஆராய்ச்சி பண்ணுவதை விட்டு வெகு நாட்களாயிற்று

நீங்கள் எது செய்தாலும் தர்மம் தான். தயங்க மாட்டேன்.

''அப்படி அல்ல அப்பா! நீ நினைக்கமாட்டாய். ஆனால் எப்படி அவளிடம் இந்த அநியாயமான செய்தியைச் சொல்வேன்?

சொல்லிவிட்டு அவள் முகத்தை நான் பார்த்தால் - என் உள்ளம் - கல் நெஞ்சானாலும் - வெடித்து விடும்.

செய்தி கேட்டுச் செத்தேன் - என்றாலும் தர்மத்தை அநுஷ்டித்ததாகாது.

தர்மத்தை அநுஷ்டிப்பதற்காக உயிரோடு இருந்து தானே ஆக வேண்டும். அதற்கு ஒரு மருந்தாக கசப்பான இந்தக் கபட நாடகம்.

ராமன் சொற்படி லட்சுமணன் தேவியை ரதத்திற்கு அழைத்தான். அவள் குதூஹலமாகக் கிளம்பினாள். வழியெல்லாம் பேசினாள் ஸீதை.

''அநுஸூயாப் பாட்டியை பார்க்க வேண்டும் அவளுக்கு என்ன ப்ரியம் தெரியுமா? நான் உண்டாகியிருக்கிறேன் - என்று தெரிந்தால் ரொம்ப சந்தோஷப்படுவாள். பட்சணங்கள் - எல்லாம் செய்து கொடுப்பாள்.

சித்ர கூடத்திலே நான் இருந்தபோது -நான் வளர்த்த பெண்மான் கர்ப்பமாக இருந்தது. அது இத்தனை நாள் பேரன் பேத்தி எடுத்திருக்க வேண்டும் அதைப் பார்த்துத் தடவிக் கொடுக்க வேண்டும்''

ரதத்தை ஓட்டிச் சென்று கொண்டிருந்த லட்சுமணன் லகானை இழுத்து முளையில் கட்டினார். குதிரைகள் தடுமாறி நின்றன. வாயில் உத்தரீயத்தைத் திணித்துக் கொண்டு ''ஹோ'' என்று அழுதார்.

ஸீதை பதறிப் போய் ஆஸனத்திலிருந்து எழுந்தாள்.

லட்சுமணன் ''ஒன்றுமில்லை. பதறாதீர்கள் அமைதியாக உட்காருங்கள்''

லட்சுமணன் சற்று சமாளித்துக் கொண்டு உட்கார்ந்தார்.

''தேவீ! தங்களது மனக் கோட்டைகளைக் கேட்டேன். அத்தனையும் சற்று நேரத்தில் இடிந்து விழுந்து விடுமே'' என்று நினைத்தேன். அழுகை வந்து விட்டது.

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்''

''தாயே! என்னத்தை எப்படிச் சொல்வேன்''

தட்டுத்தடுமாறி விக்கித்து - நிறுத்தி நிறுத்தி ஒருவாறு நடந்ததைச் சொன்னார்.

தேவி ஆஸனத்தில் சாய்ந்தாள். ரதத்தில் தொங்கிய சாமரத்தை எடுத்து விசிறினார் லட்சுமணன். பெரு மூச்சினால் தேவி விம்மித் தணிந்தாள்''

மைத்துனரே! வருத்தப் படாதீர்கள். துயரப் படுவதற்காகவே எடுத்த ஜந்மா இது. துயரத்தை அநுபவித்து அநுபவித்து - இந்த என் உள்ளம் கசப்பிலே கெட்டிப்பட்டு விட்டது. ஒரு சேதி சொல்கிறேன் அவரிடம் சொல்லி விடுங்கள்.

என்னைப்பிரிவதினால் தான் தங்களுடைய தர்மம் காக்கப்படுமானால் ஸஹதர்மசாரிணி - என்று என் பிதாவினால் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்ட நான் அதை மனதார ஏற்று நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளேன். அதில் சிறிதும் தயக்கமில்லை.

தங்கள் புண்ணியக் கருவைத் தாங்குகின்ற நான் உயிரை விட மாட்டேன். பிள்ளை பெற்று ஆளாக்குகிற வரை பொறுமையாக துயரை சகித்துக் கொள்வேன்.

இன்னொன்றும் சொல்கிறேன். இனி எத்தனை பிறவி எடுத்தாலும் தாங்களே எனக்கு பர்த்தாவாக வர வேண்டும். ஆனால் பிரியக்கூடாது.

அந்தக் க்ருபை மட்டும அவர் செய்தால் போதும் போய் வாரும் - என்று லட்சுமணனை அனுப்பினாள்.

***ஜநநாந்தரேऽபி***

***த்வமேவ ப$_4$ர்த்தா – நசவிப்ரயோக:***

*(தேவியின் இந்த உரை மஹாகவி காளிதாஸருடையது)*

*தேவி தனி வழியிலே நடந்தாள். அங்கே - ஓர் ஆச்ரமம் தெரிந்தது. அதை நோக்கிச் சென்றாள்.*

*காதில் வீழ்ந்தது ஒரு நெஞ்சை உருக்குகின்ற கானம்.*

***கிம்தாவஸி ப்ரியே தூ$_3$ரம்..........***
***கிமர்த்த$_2$ம் மாம் உபேக்ஷஸே......***

*நில்லு. தேவி நில்லு. என்னிடம் கருணை யில்லையா?*

***திஷ்ட$_2$ திஷ்$_2$ட வராரோஹே***

***நதேऽஸ்தி கருணாமயி***

***ஏனம்மா என்னை விட்டு ஓடுகிறாய்? என்னை ஏன் உதாஸீனம் செய்கிறாய்?***

*ப்ரபுவின் குரல் மாதிரி இருக்கிறதே!*

*என்னைத்தான் அனுப்பிவிட்டாரே!*

*அரண்மனையில் இருக்க முடியவில்லையா? தேடி ஓடி வந்து விட்டாரா?*

*தேவி மூச்சு இறைக்க சற்று வேகமாக நடந்தாள்.*

*''இதோ வந்துவிட்டேன் நாதா! எங்கு இருக்கிறீர்கள்?*

*ஆச்ரமத்தில் நுழைந்தாள். முனிவர் எழுந்திருந்தார்.*

*''எங்கே என் பிரபு?''*

*''நீ யார் அம்மா?''*

''நான் ஸீதை அயோத்தியாதிபதியின் மனைவி. பர்த்தா என்னைத் தேடிக் கொண்டு வந்தாரே!

அவருடைய குரலைக் கேட்டேனே!.

''ஆஹா - ஸீதா தேவியா நீ!''

ராமனின் பட்ட மஹிஷியா?

''ஸீதை தான். பட்டமகிஷி அல்ல!''

''ஏனம்மா? அப்படிச் சொல்கிறாய்''

ஸீதாதேவி கதை சொன்னாள்.

''என்னை அனுப்பிவிட்டு - நாட்டில் இருக்க மனம் இடம் கொடுக்கவில்லை. தேடி ஓடி வந்தாரே!''

''அம்மா! உட்கார் - நந்திநி ஓடிவா-

ஒரு பெண் ஓடி வந்தாள். ''இந்த ராஜாத்திக்கு ஒரு கிண்ணம் பால் கொண்டு வா'' என்றார்.

பாலை வாங்கிச் சாப்பிட்டாள் ஸீதை.

''நான் எங்கு இருக்கிறேன்?''

''உன் தமையனார் வீட்டில் இருக்கிறாய்''

''எனக்குத் தமையனார் கிடையாதே''

''உண்டு. உனக்குத் தெரியாது - நீ பூமி புத்திரிதானே? நானும் பூமியின் (புற்றின்) புதல்வன் வால்மீகி.

''என் பர்த்தா எங்கே?''

''அவர் இங்கே இல்லை''

''குரல் கேட்டதே''

''கேட்ட குரல் அவருடையதல்ல. ஸாவதானமாக கேள். நான் வால்மீகி. வெகுநாள் ராம நாமம் சொன்னவன். பிரஹ்ம தேவனின் ஆணையினாலே உங்கள் சரிதத்தை எழுதிக் கொண்டிருக்கிறேன்.

ஆரண்யகாண்டத்தில் உன்னை ராவணன் கொண்டு போனபிறகு ராமன் தேடி அலைந்தார் - எங்கேயோ வேடிக்கையாக- ஒளிந்து கொண்டிருக்கிறாயே - என்று - உன்னை அழைக்கிறார் என்று பாடிக் கொண்டிருந்தேன்.

''இப்படிக் கதறி இருக்கிறாரா என் ப்ரபு?''

''ஆம்! அம்மா! ஜாநகி இது ஸத்யமாக நடந்தது தான் - நான் பாடின ச்லோகத்தைக் கேட்டு - நீ உன் பர்த்தாவின் குரல் - என்று கண்டுபிடித்தாயே -அதுவே ஸத்யமென நிரூபித்து விட்டது.

அது இருக்கட்டும்! நீ எப்படி இங்கே வந்தாய்?''

''என் மைத்துனர் ரதத்தில் ஏற்றி இங்கே கொண்டு வந்து விட்டார்.''

''அவர் எங்கே?''

''போயிருப்பார். வாசலிலே பார்க்க வேண்டும்''

முனிவர் எழுந்து வாசலுக்கு வந்தார் லட்சுமணன் வெகு நேரம் தலையில் கைகளை வைத்து உட்கார்ந்திருந்தார். ஒருக்கால் அடைக்கலம் கிடைக்காமல் மதனி திரும்பி வருவாளோ? என நினைத்தார். வரவில்லை.

ரதத்தைப் பூட்டிக் கொண்டிருந்தார்.

முனிவரைப் பார்த்து ஓடோடி வந்து நமஸ்கரித்தார்.

''தர்மாத்மா ராம பிரானுடைய ஸஹோதரன் நான் லட்சுமணன்''

உலகத்திலே - ராவணனுடைய கொடுமையைக் களைந்து விட்டார். அதனால் அவர் தர்மாத்மா ஆகிவிடுவாரோ! பூர்ண கர்ப்பிணியான தர்மபத்தினியை த்யாகம் செய்தாரே அது எந்த தர்மத்தைச் சேர்ந்தது? அவரிடம் எனக்கு கோபம் தான் என்று போய்ச் சொல்லு.

தர்மாத்மா பரதன் தான். அவனுடைய அண்ணாவாயிற்றே என்று நினைத்து மன்னிக்கிறேன்

உத்$_{3}$க$_{4}$ாத – லோகத்ரய கண்டகேSபி

....................................

அஸ்த்யேவ மந்யு: பரதாக்$_{3}$ர ஜேமே ||

(காளிதாஸ ரகுவம்சம்)

இவ்வாறு லட்சுமணனுக்கு விடை கொடுத்து விட்டு ஆச்ரமத்துள் நுழைந்தார்.

''தேவி!ஸீதே இது உன் தமையன் வீடு. பிரஸவத்திற்குப் பிறந்தகம் போவது என்று ஒன்று உண்டே! அது பகவத்க்ருபையால் உனக்குக் கிடைத்திருக்கிறது.

நான் ராமாயணம் இயற்றிக் கொண்டிருக்கிறேன். - வளர வளர உனக்குப் படித்துக் காண்பிக்கிறேன். அதிலே உன் மனது லயித்து விடும். பர்த்தாவின் பிரிவு உன்னை பாதிக்காது. கர்ப்பிணி ஸந்தோஷமாக இருக்க வேண்டும்.

பிரஹ்ம லோகம் போன ஹநுமான் அயோத்தி திரும்பி விட்டார். சேதி வாசலிலேயே காதில் வீழ்ந்தது. திடுக்கிட்டார்.

''ப்ரபு இஷ்டம் நாம் என்ன செய்வது?''

ப்ரபுவை அணுகி வணங்கினார்.

ப்ரபோ! ப்ரஹ்மதேவன் ராமாயணம் அயோத்தியா காண்டம் வரை கேட்டு பரமஸந்தோஷப்பட்டார்- நான் படைக்கிற பிரபஞ்சம் நல்ல படியாக நீண்ட காலம் வாழ வேண்டுமானால் அதற்கு இந்தப் புண்ய சரித்ரம் பேருதவி புரியும். என்று வாழ்த்தினார்.

இந்தச் சேதியை முனிவரிடம் சொல்லிவிட்டு - தேவியையும் தர்சனம் செய்து வருகிறேனே! அநுமதி அளிக்க வேண்டும்.

''ஹநுமந்தா - ராஜ தர்மபரி பாலனம் என்ற ரீதியில் - தேவியைத் தள்ளி வைத்து விட்டேனே தவிர ஒவ்வொரு கணமும் - என் உள்ளம் துடித்துச் கொண்டிருக்கிறது. ஆனால் இதை தேவியிடம் சொல்லிவிடாதே. அவள் தாங்க மாட்டாள்.

பொல பொல வென்று கண்ணீர் சொரிந்தது. ஹநுமான் ஸ்ரீராமனை - கண்களைத் துடைத்து விட்டு சாமரம் கொண்டு விசிறினார். சற்று நேரம் கழித்து இயல்புக்கு வந்தார் ராமன்.

''நீ கிளம்பவில்லையா?''

''உங்களை இந்த நிலையில் விட்டுவிட்டுப்போக மாட்டேன்''

''அப்படியல்ல ஹநுமந்தா! உன்னைப் பார்த்தால் - ஜாநகி ஸந்தோஷப்படுவாள். அவளுடைய பிரஸவம் வரை - நீ அங்கேயே தங்கிவிட்டு - நல்ல சேதி கொண்டுவா.

ஹநுமான் உடனே கிளம்பினார்.

வால்மீகி ஆச்ரமம் வந்து சேர்ந்தார்.

முனிவரை வணங்கினார். பிரஹ்ம தேவனுடைய ஸந்தோஷத்தை விவரித்தார். ஹநுமானுடைய குரல் கேட்டு - தேவியே உள்ளேயிருந்து வெளியே வந்தாள்.

ஹநுமான் எழுந்து தேவியை வணங்கினார்.

''ஹநுமந்தா! வா அப்பா!''

''அம்மா! தாயே! என் உள்ளம் துடிக்கிறது. இவ்வளவு ஸாதாரணமாகப் பேசுகிறீர்களே!''

''ஹநுமந்தா! இப்பொழுது என்ன நடந்து விட்டது? ராஜாங்கம் - என்று இருந்தால் பலவிதத் தொல்லைகள் வரத்தான் வரும். அநுபவிக்கத்தான் வேண்டும்.

''அம்மா! - நீங்கள் பூமி குமாரி அல்லவா! பூமியை குண்டு வைத்துத் துளைக்கிறார்கள். பொறுமையாகத் தாங்குகிறாள்.

அவள் எவ்வளவு பொறுமையாக இருந்தாலும் - சூழ்நிலை பாழ்பட்டுப் போவதால் - அவளுக்கே பூகம்பம் வருகிறது. பல பிராணிகளுக்கு கஷ்டம் வருகிறது.

உங்களுக்கு பூகம்பத்தை காட்டிலும் கடுமையான - அவச் சொல் என்கிற பேரிடி தாக்கியது. அதையும் பொறுமையாகத் தாங்குகிறீர்களே.

‘‘நான் தாங்கியது இருக்கட்டும் ப்ரபு எப்படி இருக்கிறார்? சாப்பிடுகிறாரா? தூங்குகிறாரா? திருமேனி பாங்காக இருக்கிறதா?

லட்சுமண ஸ்வாமி உடன் இருக்கும் போது உங்களுக்கு ஏனம்மா அந்தக்கவலை?

‘‘அப்படியல்ல! - என்ன இருந்தாலும் நீ உடன் இருந்தால் அவருக்கு ஒரு தெம்பு,

‘‘பிரபுவும் அப்படித்தான் சொல்கிறார் - ஹநுமந்தா - நீ போய் தேவியிடம் இரு. அவளுக்கு சுகப்ரசவம் ஆகும்’’ என்கிறார்.

‘‘அப்படியா! சொன்னார். இங்கேயே தங்கப் போகிறாயா? ரொம்ப ஸந்தோஷம்.

வால்மீகி பகவான் தினம் தோறும் ஒரு படைப்பு - ஒரு ஸர்கம் வெளியிடுகிறார். மாலையில் நாம் கேட்போம்.

இரண்டு மாதங்களில் பட்டாபிஷேகம் வரை இயற்றி முடித்தார் முனிவர். பட்டாபிஷேகத்தை எழுதி முடித்த அன்று - தேவி இரட்டைக் குழந்தைகளைப் பிரஸவித்தாள். இரண்டுமே மஹோத்ஸவமாக நடந்தன. ருஷிகளும் ருஷிபத்நீகளுடன் சோபனங்களை மங்களமாக முடித்து வைத்தனர்.

ஹநுமான் விடை பெற்று அயோத்தி திரும்பினார்.

அயோத்தியில் ராமனுக்கு ராஜ கார்யங்கள் வளர்ந்தன. பத்து ஆண்டுகள் போனது தெரியாமல் ஓடிவிட்டன. ஆயினும் உள்ளக் குடைச்சல் - தேவியை விட்டு அகலவே இல்லை.

ஹநுமான் அயோத்திக்கு பிரபுவின் தர்சனத்திற்காக வெகு தூரத்திலிருந்து வருகின்ற ஸாதுக்களையும்

யோகிகளையும் வரவேற்று உபசரித்து - தக்க தருணத்தில் அவர்களுக்கு ராம தர்சனம் செய்து வைத்தார்.

ஒரு நாள் தண்டகவனத்திலிருந்து ஒரு முனிவர் வந்தார். வயது முதிர்ந்தவர். தள்ளாடி நடந்து வந்து ஆஜார வாசலில் நின்றார். வாசல் காவலர்கள் அவரைக் கைப்பிடியாகப் பிடித்து படிகளில் ஏற்றி - முன் மண்டபத்தில் உட்கார வைத்தனர்.

அவர் தனது கமண்டலுவிலிருந்த தீர்த்தத்தை அருந்தினார். தூணில் சாய்ந்தார். கையில் ஜபமாலையை உருட்டினார்.

ஒரு வாசற்காப்பாளர் கேட்டார் ஐயா - உள்ளே மஹாராஜா தர்சனம் கொடுத்துக் கொண்டிருக்கிறாரே! - நீங்கள் போகவில்லையா?

''பிறகு போகிறேன்'' என்றார் அவர்.

வாசலுக்கு வந்த ஹநுமானிடம் வாசல் காப்போர் விண்ணப்பித்தனர்.

ஒரு முது கிழவர் - தர்சனத்திற்காக வந்திருக்கிறார்'' - என்று அவரைக் காண்பித்தனர்.

ஹநுமான் அவரருகில் சென்றார் ''பெரியவரே! உள்ளே வருகிறீரா?

''பல வாசற்படிகளில் ஏறி இறங்க வேண்டியிருக்கும் போலிருக்கிறதே!''

''அதனால் என்ன? நான் உங்களை ராமனுடைய ஸந்நிதிக்குத் தூக்கி கொண்டு போகிறேன்''

''நீர் ஹநுமான் தானே!'' ''ராமனைத் தூக்கிய தோளில் நான் ஏறமாட்டேன்''

''இந்தப் பணியாளரை உங்களைத் தூக்கிக் கொண்டு வரச் சொல்கிறேன்''

''வேண்டாம். நான் இங்கேயே இருக்கிறேனே''

''தங்கள் பெயரென்ன? பிரபுவிடம் விண்ணப்பிக்கிறேன்''

''வேண்டாம்! அவர் என்னைப் பார்க்க வர வேண்டாம்''

'' பின் எதற்காக இவ்வளவு தூரம் நடந்து வந்தீர்கள்?''

''நீர் ஹநுமானாக இருந்தால் இந்தக் கேள்வி என்னைக் கேட்கமாட்டீர்''

''உம்மை இப்படியே விட்டு விட்டேன் என்றால் ப்ரபு மிகவும் வருத்தப்படுவார் ஐயா!''

''வருத்தப்படட்டுமே! எனக்கென்ன?''

''சரி! சரி! உம்மோடு வழக்காடுவதில் பயனில்லை'' நான் பிரபுவிடம் போய் சொல்லிவிடுகிறேன்''

''ஹநுமானே இங்கே வாரும், ராமனுடன் இவ்வளவு பழகுகிறீர்? உமக்குத் தெரியவில்லையே''

''ஆமாம் ஐயா! நீர் சொல்வது முற்றிலும் உண்மை. பிரபுவின் ஹ்ருதயம் எனக்கு விளங்கவே இல்லை''

''எல்லாம் விளங்கும். கவலைப்பட வேண்டாம்''

''பெரியவரே! நான் நிறைய ராம நாமம் சொல்லுவேன். அதற்காகவாவது இரங்கி தங்களைப்பற்றி - எனக்குச் சொல்லலாகாதா?''

கிழவர் சிரித்தார்.

ஹநுமான்: ஏன் சிரிக்கிறீர்கள்

கிழவர்: நான் அழத்தான் வேண்டும் உம்மைப் பார்த்தால் - உம்முடைய அப்பாவித்தனத்தைப் பார்த்தால் சிரிப்பு வருகிறது.

ஹநுமான் துணுக்குற்றார் - நம்மைப் பார்த்து அப்பாவி என்று சொன்னவர் இந்தக் கிழவர் ஒருவர் தான். இவர் மஹாத்மாவாக இருக்க வேண்டும்.

ஹநுமான் : பெரியவரே இந்தப் பேதைக்கு கொஞ்சம் ஞானம் ஊட்டுங்களேன்.

கிழவர்: உட்காரும் சொல்கிறேன். ராமனும் ஸீதையும் பஞ்சவடியில் இருந்தார்களல்லவா? அப்போது நானும் அங்கிருந்தேன். நான் ஒரு வெற்றிலைக் கொடிக்கால் வைத்திருந்தேன். தினம் தோறும் மாலை வெய்யிலில் ராமனும் ஸீதையும் கோதாவரிப் படித்துறையில் பேசிக் கொண்டிருப்பார்கள் -

நான் முன்னமேயை ஒரு கவுளி வெற்றிலையிலிருந்து பத்து வெற்றிலை இளசாகப் பொறுக்கி எடுப்பேன்.

துடையில் வெள்ளைத் துணியைப் போட்டுக் கொண்டு அவற்றைத் துடைப்பேன். காம்புகளைக்கிள்ளி நடு நரம்புகளைக் கீறி எடுப்பேன். கையிலே - விளாம் பழக் குடுவைகளில் மெல்லியதாகச் சீவிய கொட்டைப்பாக்கு சீவல் - ஏலப்பொடி, கிராம்புப் பொடி, ஜாதிக்காய் துகள்கள், - எல்லாம் போட்டு விடயம் கட்டுவேன்.

இரண்டு விடயங்களைக் கொண்டு போய் அவர்களைப் பார்த்துக் கொண்டு எட்டி நிற்பேன்.

ஸீதாதேவி அழைப்பாள் - தேக்கு இலைகளில் இரண்டு விடயங்களை வைத்து - ஸீதாதேவியிடம் நீட்டுவேன்.

அவள் அதை வாங்கி - பிரபுவிடம் ஒன்று கொடுப்பாள். அவர் வாயில் போட்டுக் கொண்ட பிறகு தானும் உண்பாள்.

வெகு நேரம் - நன்றாகச் சுவைத்துக் கொண்டே இருவரும் பேசுவார்கள்.

அந்தக் காட்சியைக் கண்ணாரக் காண்பேன் பிறகு - .................

இதற்கு மேல் சொல்லமாட்டேன் என்றார் கிழவர்.

ஹநுமான் விழுந்து கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

''வலிக்கிறது ஐயா விடுமையா'' ஹநுமான் பிடியைத் தளர்த்தினார்.''

''எழுந்திருமையா! சொல்லிவிடுகிறேன்''

ஹநுமான் எழுந்திருந்து கையினால் வாயைப் பொத்திக் கொண்டு நின்றார்''

''தேவி தாம்பூலத்தை மெதுவாக மென்று வெகு நேரம் கழித்து விழுங்கிவிடுவாள். தாம்பூலத்தை ஸ்த்ரீகள் துப்பக் கூடாதாமே!

ராமன் திரும்பிப் துப்பும் போது - என் இரண்டு கைகளையும் விரித்து - அதன் மேல் தேக்கு இலையை வைத்து நீட்டுவேன். அதில் துப்புவார்.

அதை அங்கிருந்து நகர்ந்து போய் நான் உண்பேன். அது பிரஹ்மாநந்த ரஸம்.

என்னவோ தோன்றியது. ஒரு நாள் போய் திவ்யதம்பதிகளுக்கு தாம்பூலம் கொடுத்து வரலாமே! அதுவும் தேவீ உண்டாயிருக்காளாமே.

இந்த நேரத்தில் விடயம் மிகவும் சுவையாக இருக்குமே! ஆனால் தேவி இங்கே இல்லையாமே! வால்மீகி ஆச்ரமத்தில் பிரஸவித்துப் பிள்ளைகளுக்கு பத்து வயதாகி விட்டதாமே!

இந்த நேரத்தில் - நான் ப்ரபுவின் முன்னால் போய் நின்றால் அவருக்குப் பஞ்ச வடீ நினைவு வரும். பகவான் துடித்துப் போவார்.

எனக்கு அவருடைய தர்சனம் வேண்டாம். நான் போய் வருகிறேன்.

என்று கிளம்பிவிட்டார். ஹநுமான் தள்ளாடித் தள்ளாடி அடி வைத்துக் கொண்டிருக்கின்ற கிழவரைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

(இந்த நிகழ்ச்சி ஸூர்தாஸரின் ப3த்யாவளியில் வருகின்றது. அற்புதமான பதங்கள்)

## ராம அச்வமேதம்:

ஸ்ரீராமன் ஒருநாள் தனது ஸஹோதரர்களை அழைத்து ஆலோசனை நடத்தினார். ''நீங்கள் உங்களுக்கு வகுக்கப்பட்ட பகுதிகளில் ராஜ்ய பரிபாலனத்தைச் செவ்வனே நடத்தி வருகிறீர்கள் - என்று ஹநுமான் வந்து தெரிவித்தான். மிகவும் ஸந்தோஷமாக இருக்கிறது.

ஆனாலும் ராஜ்யத்தினுடைய க்ஷேமத்திற்காக நாம் செய்ய வேண்டியது அனைத்தையும் செய்து விட்டோமா? கவலையாக இருக்கிறது.

த்ரிகாலஞானியானநம் குருநாதர் வஸிஷ்டரிடம் போய் இது பற்றி அவருடைய ஆணையைப் பெறுவோம்.

நால்வரும் வஸிஷ்டருடைய ஆசிரமம் சேர்ந்தனர். முனிவர் ராஜர் அவர்களை முறைப்படி வரவேற்று ஆஸனங்களில் அமர்த்தி வினவினார்.

''மஹாராஜாவின் விஜயம் பரம ஸந்தோஷத்தை அளிக்கிறது. இங்கேயும் த்யானம் உபாஸனைஎல்லாம் விச்ராந்தியாக நடைபெறுகின்றன. விஜயத்திற்கு ஏதாவது முக்கிய காரணம் உண்டா?''

''குருதேவ! தங்கள் க்ருபையினாலும் மஹாஜனங்களுடைய தார்மீகப் பண்புகளாலும் ராஜ்யம் ஸுபிக்ஷமாக நாலா விதமாக மேன்மை அடைந்து வருகின்றது.

மேலும் நாம் என்ன செய்ய வேண்டும்? நமது கடமை என்ன என்பதை தங்களிடம் தெரிந்து கொள்ளலாம் என்று வந்தோம்''

''மஹாராஜா - எனக்கும் இது பற்றிச் சிந்தனை உண்டு. தாங்கள் இருக்கின்ற நிலையில் இதற்கு மேல் ஆற்ற வேண்டிய ராஜ்ய நலன்களை ஆற்றுவதற்குத் தங்களால் இயலாது என்ற காரணத்தினால் அது பற்றி தங்களிடம் பிரஸ்தாபிக்காமல் இருந்தேன்.

தாங்கள் இது பற்றி கேட்ட பிறகு மௌனமாக இருந்தால் - என் கடமையில் தவறியவனாவேன். ஆகவே வெளியிடுகிறேன்''.

*தங்கள் தகப்பனார் தசரத மஹாராஜர் அநுஷ்டித்த - அச்வமேதயாகம் பற்றி இன்றும் கூடப் பெரிய மஹரிஷிகள் எல்லாம் பெருமையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே லோகக்ஷேமார்த்தமாக தாங்களும் அச்வமேதயாகம் அனுஷ்டிப்பது அவசியம் தான் - ஆனாலும்.*

*''குருதேவா! ஏன் தயங்குகிறீர்கள் மேலும் சொல்லுங்கள்''*

*''சொல்லத்தான் போகிறேன். ஆனால் அதைச் சொல்வது - மஹாராஜாவிடம் - நான் குறை காண்பதாக முடியுமே தவிர - வேறு பயன் தராது.*

*''குருதேவ! என்னிடம் குறை இருந்தால் சொல்லிவிடுங்கள். அதைத்தீர்த்துக் கொள்கிறேன்.''*

*''அது தங்களால் முடியாது மஹாராஜா''*

*''என் குறையை என்னால் தீர்த்துக் கொள்ள முடியா தென்றால் நான் வாழ்ந்து தான் என்ன பயன்?''*

*''அப்படியல்ல. மற்ற விதங்களில் தங்களுடைய தார்மிகமான அநுஷ்டானங்கள் சரிவர நடை பெறுவதால் தங்கள் ஜீவிதம் ஸபலம் தான்.''*

*''தங்கள் விசாலமான - உதாரமான ஹ்ருதயத்தில் - என்னிடம் அளவற்ற க்ருபை இருப்பதால் - என் குறையை நீங்கள் பொருட்படுத்தவில்லையே தவிர - என்னிடம் குறை இருக்கத்தானே இருக்கிறது. அதை நான் போக்கிக் கொள்ள வேண்டும்.''*

*''அது தான் சொல்கிறேன், உங்களால் இயலாது''*

*''ராமசந்த்ர! நீ எனது சீடன். நீ அச்வமேத மஹாயாகத்தை அநுஷ்டிப்பதை - நான் பார்க்க வேண்டும் என்று ஆர்வமுள்ளது. அது சாத்தியமில்லையே''*

*''ஏன் குருதேவ!''*

*''யாகம் அநுஷ்டிக்கப் பத்நீ வேண்டுமே''*

*ராமன் குன்றிப் போனார்.*

*''பார்த்தாயா! என் சொல் உன் மென்மையான உள்ளத்தைக் கடுமையாகத் தாக்கிவிட்டது பார்த்தாயா? நீயோ ஏகபத்நீ விரதன். மறுமணம் செய்து கொள் - என்று நான் எப்படிச் சொல்வேன்?*

*ப்ரபோ! நான் அச்வமேதமே அனுஷ்டிக்க முடியாதா?*

*வஸிஷ்டர் தீர்க்க ஆலோசனை புரிந்தார். தன் குமாரன் ஸுயஜ்ஞனை அழைத்தார். சுவடிகளைக் கொண்டு வரச் சொன்னார்.*

*புரட்டினார் - ஒரு வாக்யம் கிடைத்தது.*

*''ராம! உன்னுடைய தர்ம நிஷ்டை ஜயித்து விட்டது நீ அச்வமேதயாகம் செய்யலாம்''*

*ராமர் குருதேவரின் சரணங்களில் வீழ்ந்தார். ''நான்பிழைத்தேன்'' என்று எழுந்தார்.*

*''ஸ்வாமி அதற்கு என்ன மார்க்கம் சொல்லுங்கள்''*

*இதோ பார் ஸ்ம்ருதி வாக்யம்.*

***நித்யாநுஷ்ட$_2$ாந பரம:***
***விது$_4$ரோ – யதி$_3$ சேத் ப$_4$வேத் ।***
***ஸுவர்ணப்ரதிமா பத்ந்யா** ऽऽ*
***ச$_1$ரேத் த$_4$ர்மம் அவிக்லவம் ॥***

*தவறாமல் தன் கடமையைப் பத்நியுடன் ஆற்றுகிறவன் - பத்நி அருகே இல்லாவிட்டால் அவளுடைய ஸுவர்ணபிரதிமையை வைத்துக் கொண்டு தர்மத்தை குறையின்றி அநுஷ்டிக்கலாம்.*

*ராம! எனக்கே ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. உனக்கு அச்வமேதம் அநுஷ்டிக்க மார்க்கத்தை திறந்து விட்டதே சாஸ்திரம். ஏற்பாடுகள் செய்யலாம்.*

*ராமன் முதலானோர் பரம குதூகலத்துடன் நகரம் திரும்பினர். மந்திரிமார்களை முடுக்கிவிட்டு நைமி*

*சாரண்யம் கோமதீ நதிக்கரையில் அச்வமேத யாக சாலை அலங்காரமாக அமைக்கப்பட்டது.*

*அச்வமேதக் குதிரை திக்விஜயத்திற்காக - சத்ருக்நன் தலைமையலான படைகளுடன் புறப்பட்டது.*

*ஜாபாலிமஹரிஷி வஸிஷ்டருடைய ஆச்ரமத்திற்கு வந்து சேர்த்தார்.*

*வஸிஷ்டர் சீடர்களுடன் அமர்ந்து - அச்வமேதப்பகுதி - வேதபாராயணம் செய்து கொண்டிருந்தார்.*

*ஜாபாலி முனிவர் காத்து நின்றிருந்தார். வஸிஷ்டர் அவரை அழைத்தார்.*

*''என்ன விஷயம்?''*

*''ஒன்றுமில்லை. ஒரு ஸந்தேஹம்''*

*''சொல்லுங்களேன்! எனக்குத் தெரிந்தால் பதில் சொல்கிறேன்''*

*''அதாவது - பத்நீ இல்லாவிட்டால் பிரதிமையை ப்ரதிநிதியாக வைத்துக் கொள்ளலாம். ராமனுக்கு பத்நீ தான் இருக்கிறாளே! அவளை அழைத்துக் கொண்டு வந்து யாகாநுஷ்டானம் பண்ணச் சொல்லக் கூடாதா?''*

*வஸிஷ்டர் : விதுரர் என்ற சப்தத்துக்கு பத்நீ இறந்துவிட்டால் என்று அர்த்தமில்லை. பத்நீ உயிரோடு இருந்து - தற்காலம் யாகத்தில் சேர்ந்து நிற்கத் தகுதியில்லாமல் இருந்தால் ப்ரதிநிதியை வைத்துக் கொள்ளலாம். எப்படியும் பத்நீ இல்லாமல் யாகம் செய்யக் கூடாது - என்று தானே பொருள்.*

*ஜாபாலி வாயைப் பொத்திக் கொண்டு போய்விட்டார்.*



## ராஜகுமாரர்கள்

வால்மீகி ஆச்ரமத்தில் ஸீதைக்குப் பிறந்த குழந்தைகள் குசனும் லவனும் பனிரெண்டு வயதுக் குமரர்கள் ஆகிவிட்டனர். முனிவர் அவர்களுக்கு ஸகல வித்தைகளையும் போட்டி விட்டார் - ஸீதாதேவி அவர்களுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்தாள். சூடி கையான பையன்கள் - நிறையப் பயிற்சி பெற்றார்கள்.

அவர்களுடைய குரல் வளம் கண்டு வால்மீகி பகவான் அவர்களுக்கு ராமாயணத்தை இசையோடு பாடப் பயிற்சி அளித்தார். அந்தந்த ஸந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு ராகங்கள் அமைத்துக் கொடுத்தார். ஏக்தார் - என்ற ஒற்றைக் கம்பியுள்ள துந்தணாவைச்ருதியாகவும் தாளமாகவும் கொண்டு இருவரும் ஆச்ரமங்கள் தோறும் போய்ப் பாடினர். ரிஷிகள் எல்லாரும் ஆனந்தமாகக் கேட்டு அநுபவித்தனர்.

பூணுல் கமண்டலு மரஉரி போன்ற பரிசுகளை அளித்தார்கள்.

ஒரு நாள் மாலையில் அவர்கள் ஆச்ரம வாசலில் அமர்ந்து ராமாயண கானம் செய்து கொண்டிருக்கும் போது ஒரு அலங்கரிக்கப்பட்ட குதிரை - முதுகில் வெண் குடை தாங்கி திறந்திருந்த வேலிக் கதவைத் தாண்டி உள்ளே - புகுந்தது.

அதை அவர்கள் ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஒரு வீரப்படை தொடர்ந்து வந்தது.

‘ அதன் பின்னே ராஜகுமாரர்கள், அவர்களுக்குப் பின்னே - ஓர்அரசர் நுழைந்தார். ஆச்ரமத்தின் அமைதி கலைந்தது. குசன் - குதிரைகளைப் பிடித்து - இழுத்துக் கொண்டு - கோசாலையில் ஒரு முளையில் கட்டிப்போட்டு விட்டு வெளியே வந்தான்.

அதற்குள் வெளியே வாக்கு வாதம். வீரர்கள் - ‘‘பையன்களா - இது அயோத்திராஜாவினுடைய குதிரை. இதை அவிழ்த்து விடுங்கள்! இல்லாவிட்டால்!

லவன்: இல்லாவிட்டால்’’?

*பின்னால் வந்த ராஜகுமாரர்கள் பரதனின் குமாரர்கள். தக்ஷன்புஷ்கரன் இருவரும் - வீரர்களைத் தடுத்து விட்டு முன்னே வந்தனர்.*

*புஷ்கரன்: முனி குமாரர்களே! உங்களுக்கு நமஸ்காரம். எங்களுக்குத் தெரியும்- ருஷிகள் ஆச்ரமத்தில் அமைதி கெடக்கூடாது.*

*ஆனால் இங்கே வந்தது அச்வமேதக் குதிரை! அதற்கு சுதந்திரமாக ஸஞ்சரிக்கத் தகுதி யுண்டு.*

*அதை எந்த ராஜாங்கமாவது வழி மறித்தால் அவர்களைப் போரிட்டு வென்று மேலே செல்வோம். இதுவோ ருஷி ஆச்ரமம். நீங்களோ ருஷி குமாரர்கள். அவமரியாதையாக நடக்கமாட்டோம். பணிவுடன் வேண்டுகிறோம்.*

*லவன்: அச்வமேதம் பற்றியெல்லாம் நாங்கள் படித்திருக்கிறோம். யார் வேண்டுமானாலும் குதிரையை மறிக்கலாம். குதிரைக்காப்பாளர்கள் மறித்த வரை போரில் வென்று குதிரையை அழைத்துச் செல்ல வேண்டுமே தவிர கெஞ்சுகிறோம் வேண்டுகிறோம் - என்று சொல்லக்கூடாது.*

*முடிந்தால் எங்களை வென்று குதிரையை அழைத்துப் போகலாம்.*

*சத்ருக்நன் எட்டிநின்று இந்த பாலகர்களைப் பார்த்தான். வசீகரமான முகம் வீரக்களை ஆகர்ஷித்தது. பரதகுமாரன் புஷ்கரனின் விநயத்தையும் ரஸித்தார்.*

*இந்த சகோதரர்களும் அந்த சகோதரர்களும் - போட்டி போட்டுக் கொண்டு அஸ்திரங்களை பிரயோகித்தனர். ஒரே நேரத்தில் இரு புறங்களிலும் இருந்த கிளம்பிய அஸ்திரங்கள் நடுவழியில் பரஸ்பரம் தாக்கிக் கொண்டனவே தவிர இலக்கை எட்டவில்லை.*

*ஆச்ரமத்துவாசலில் பார்த்துக் கொண்டிருந்த தேவி அவர்களிடையே வந்து நின்றாள்.*

''கு சா! லவா! என்னிடம் வில்லைக் கொடுங்கள் - என்று - அவர்களை நெருங்கி - கையிலிருந்து பறித்தாள்.

எதிரே நின்ற தக்ஷனும் புஷ்கலனும் வில்களிலிருந்து நாண் கயிற்றை தளர்த்திக் கொண்டு நின்றனர்.

அவர்களை அணுகினாள். ''உங்களுக்குக் குதிரை தானே வேண்டும். இதோ வந்துவிடும் சற்றுப் பொறுங்கள்'' என்றாள்.

''லவா! நீ நல்ல பிள்ளையல்லவா? அம்மா சொல்வதைக் கேட்பாயாம்? இது ராஜாங்கத்துக் குதிரை. அந்த ராஜாங்கத்துக்கு நாமெல்லாம் கட்டுப்பட்டவர். நமக்கேன் பொல்லாப்பு? குதிரையை அவிழ்த்துக் கொண்டு வந்து இவர்களிடம் ஒப்புவித்து விடு''

குசனும் சொன்னான். லவன் போய்க் குதிரையைக் கொண்டு விட்டான்.

இரண்டு ஜோடிகளும் மாற்றி மாற்றி சிரித்தனர். குசன் போய் தக்ஷனைத் தழுவிக் கொண்டான்.

இங்கே ஸீதாதேவியும் அங்கே சத்ருக்நனும் ஆனந்தக் கண்ணீர் மல்கினர்.

குசன் சொன்னான். அம்மா! அயோத்யாபதி அச்வமேதம் செய்கிறாராம். எங்கிருந்தெல்லாமோ ஜனங்கள் தர்சனம் செய்யக் கூடுவார்களாம். நாங்கள் போய் அவர்கள் மத்தியிலே ராமாயண கானம் செய்துவிட்டு வருகிறோமே''

குருதேவரிடம் விண்ணப்பித்து ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளுங்கள்- என்றாள் தாய்.

முனிவர் சரியென்று விடை கொடுத்தனுப்பினார். அயோத்தி வீதியில் சாரிசாரியாக ஜநங்கள் போய்க் கொண்டிருந்தனர்.

வீதிகள் எங்கும் - மையத்திலும் தெரு முனைகளும் - நடு மண்டபங்கள் அவற்றின் நடுவே -மேடைகள் அவற்றின் மேலே நின்று கொண்டு துந்துணாவை மீட்டிக் கொண்டு இரு

குமாரர்களுடைய ராமாயண கானம் நடைபெற்றது. மண்டபத்தை வளைத்து நின்று கொண்டு ஜனங்கள் கேட்டனர். ஒவ்வொரு ஸர்க முடிவிலும் ஜயஸீதாராம் என்று குமாரர்கள் முழங்குவார்கள். ஜனங்கள் எதிரொலிப்பார்கள்.

அயோத்தி மாநகர் ஜனங்களுக்கெல்லாம் இப்போது தான் ராமனுடைய வனவாஸச் செய்திகள் விளங்குகின்றன.

ஆவலுடன் கேட்டு ராமனுடைய தியாகத்தை வியந்தார்கள். லட்சுமணனுடைய வீரத்திற்கு சபாஷ் போட்டார்கள். ஸீதாதேவியின் துயரத்தில் கண்ணீர் விட்டார்கள். ஹநுமானுடைய கைங்கர்யத்தை - வெகுவாகப் பாராட்டினார்கள்.

ஸ்ரீராமன் உப்பரிகையில் அமர்ந்து இவர்களுடைய கானத்தைக் கேட்டார். பரத சத்ருக்நர்கள் அவ்வப்போது - ராமன் அநுபவித்த கஷ்டங்களை முதன் முதலாகக் கேட்டு அண்ணாவைப் பரிதாபத்தோடு பார்த்து விம்மினார்கள்.

ராமன் பரதனை அனுப்பி அவர்களை அணுகி - யார் என்று விசாரித்து வரச் சொன்னார்.

பரதன் வீதிக்குச் சென்று கூட்டத்தின் நடுவே - ஒரு சர்கம் பாடி - ஜயஸ்ரீராம் - கோஷம் முடிந்தவுடன் - பையன்களை அணுகி அன்புடன் ''நீங்கள் யாரப்பா! என்று விசாரித்தார்.

''நாங்கள் முனி குமாரர்கள். வால்மீகி பகவான் சீடர்கள்.''

''இப்போது பாடுகிறீர்களே - இதை யார் உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்?''

''பகவானே இயற்றியது. அவரே சொல்லிக் கொடுத்தது''

''நீங்கள் அயோத்தியா ராஜ குமாரர்களோடு போர் புரிந்தீர்களாமே''

''அவர்கள் தான் முதலில் அம்பு தொடுத்தார்கள். நாங்கள் பதிலுக்குத் தொடுத்தோம்.''

*''உங்களுக்கு விவ்வித்தை யார் சொல்லிக் கொடுத்தார்''*

*''எங்க அம்மா!''*

*''உங்கள் அம்மாவின் பெயர் என்ன?''*

*''வத்ஸா''*

*''வத்ஸாவா? பெயரென்ன?''*

*''வத்ஸே என்று தான் எங்கள் குருதேவர் அவளை அழைப்பார். ஆச்ரமத்து தாய்மார்களும் அப்படித்தான் வத்ஸே என்று அழைப்பார்கள்.''*

*''நாளை முதல் மஹாராஜா கோமதீ நதிக்கரையில் அச்வமேத யாகம் அநுஷ்டிக்கப் போகிறார்.*

*அந்த மண்டபத்தில் - மாலை ஓய்வு நேரத்தில் - நீங்கள் வந்து கானம் செய்வீர்களா?*

*''காத்திருக்கிறோம்''*

*மறுநாள் மாலை அச்வமேத மஹாமண்டபத்தில் - யாகதீக்ஷையுடன் திறந்த மார்போடு - பிரம்ம ருஷிகளையும் மஹாமந்திரிகளையும் ராஜ்யத்து பிரதானிகளையும் தரைவிரிப்பில் அவரவர்களுக்குத் தக்கப்படி ஆஸனமளித்து அமரவைத்து ஸ்ரீராமன் ஸஹோதரர்களுடன் ஓர் ஓரத்தில் அமர்ந்திருக்கிறார்.*

*யாக மண்டபத்தில் யாக வேதியைப் பார்த்தபடி தங்கச்சிலையாக ஸீதாதேவி நின்று கொண்டிருக்கிறாள். - ஸகோதரர்களுக்கு பின்புறம் நின்று சாமரம் வீசுகிறார் ஹநுமான்.*

*பனிரெண்டு வயது பாலகர்கள் இடுப்பில் - முழங்கால் தெரிய வரிந்து கட்டிய மூலகச்சம். அதன் மீது விரிந்துள்ள மான் தோல்பட்டை. தோளிலிருந்து பூணூலோடு சேர்ந்து மடிப்பு அங்கவஸ்திரம் மார்பின் குறுக்கே படிந்து இடுப்பின் வலது புறம் முடிச்சு தொங்குகின்றது. கையிலே துந்தணா. முன்னுச்சியிலிருந்து. சுருள் சுருளான கேசங்கள்*

நன்கு வாரி மேல் தலையில் கொண்டை போட்டுக் கரு கருவென்று விளங்குகின்றன.

அவர்களுடைய கண்களிலே மறையாத மென் மலர்ச்சி.

துந்தநாநாதத்தோடு பஞ்சமஸ்வரத்தில் இழைந்தனர்.

நிச்சப்தமான அந்த சபையில் அவர்களுடைய மெல்லிய நாதம் கூட்டத்தின் கடைசி வரை ஒலித்தது.

பாட ஆரம்பித்தனர்.

**தப:ஸ்வாத்$_4$யாய நிரதம்**
**தபஸ்வீ வாக்$_3$ வித$_3$ாம் வரம் |**
**நாரதம் பரிபப்ரச்ச$_2$**
**வால்மீகிர் முநிபுங்க$_3$வம் ||**

தங்குத்தடையில்லாமல் இரு குரல்களும் ஒருங்கிணைந்து ஒரே குரலில் அட்சரசுத்தமாக ஸர்வலகுதாளம் துந்தநா மீட்டலில் துலங்கப் பாடினர்.

ஒருவர் அசையவில்லை. ஒருவர் குனியவில்லை. திரும்பிப் பார்க்கவில்லை. குத்திட்ட கண்கள் கானம் செய்கின்ற குமாரர்களிடமே நிலைத்துவிட்டன. பாடலில் காட்சிகள் விரிந்தன. காதுகள் தானே கேட்க முடியும் மற்றப்புலன்கள் கண் மூக்கு நாக்கு சொரணை எல்லாமே காதுகளில் வந்து உட்கார்ந்து விட்டன - என்கிறார் வால்மீகி பகவான்.

**''ச்ரோத்ராச்$_+$ரய ஸுக$_2$ம் ரம்யம்''**

எல்லாப் புலன்களுக்கும் ஸுகானுபவம் கிடைத்தது. என்றோ நடந்த நிகழ்ச்சிகள் இவை இங்கே கண்ணெதிரே தெரிந்தன.

**ப்ரத்யக்ஷமிவ த$_3$ர்சிதம்**

கிராமத்து மக்கள், நாட்டுமக்கள், நகரத்து மக்கள், - நாளுக்கு நாள் அதிகம் கூடினர். ஸுந்தரகாண்டம் கேட்டனர்.

அவர்கள் என்ன ? ராமஸஹோதரர்களே இப்போது தான் கேட்கிறார்கள். ஹநுமானுடைய மனோதிடம், திட்டம், நாடகப்பாங்காக அவர் நிகழ்த்திய காட்சிகள் எதிர் பாராத திருப்பங்கள் எல்லாம் ஒவ்வொரு சமயமும் எல்லோருடைய ஆச்சரியத்தையும் ஆரவாரத்தையும் எழுப்பின.

பின்னால் நின்று சாமரம் போட்டுக் கொண்டிருந்த - ஹநுமானின் பக்கம் நோக்கினர். அங்கு ஹநுமானைக் காணோம். அவர் மண்டபத்து வாசல் பவள மல்லி மரத்தடியில் அமர்ந்து ராம நாமம் சொல்லிக் கொண்டிருந்தார்.

மஹரிஷிகள் ஞானிகள் உட்பட அந்த நேரம் ஹநுமானை தர்சனம் செய்ய விரும்பினர்.

ராமனும் திரும்பிப் பார்த்தார்.

''எங்கே ஹநுமான்?''

லட்சுமணன் போய் அழைத்து வந்தார், கூசிக் குறுகி கைகூப்பி வணங்கிய படி தலை குனிந்து - ராமன் எதிரே வந்து நின்றார்.

''ஹநுமந்த வீர! அடேயப்பா எத்தனை ஸாஹஸங்கள் தனி ஒருவனாகப் புரிந்திருக்கிறாய்?

எழுந்து அவரை இழுத்து ஆலிங்கனம் செய்தார்.

ஜயஸ்ரீராம ஜயஜய ஹநுமான் என்று ஜனம் முழுவதும் பலதடவை கோஷமிட்டது. இந்த வைபவத்தில் கலந்து கொள்ளாத ஜனங்கள் எல்லோரும் சேதி கேட்டு - தெரு முனைகளிலும் வீதிகளிலும் கூடி சபாஷ்- ஹநுமானே! ஜய ஜய ஹநுமான் என்றெல்லாம் பரவசமடைந்தார்கள். மறுநாள் - ஜனங்கள் முன்னேரத்திலேயே சபையில் கூடிவிட்டார்கள்.

குமாரர்கள் ராமாயண கானத்தில் ராவணவதம் முடித்து ஸீதையின் அக்நிப்ரவேசம் பகுதியை கானம் செய்த போது சபையே கண்ணீர் விட்டது. ஐயையோ - என்று கிராமத்து மக்கள் ஆஹாஹா - என்று ஸ்தீரிகள் ஓலமிட்டனர்.

‘‘நம்முடைய ராணி இந்த தேவியையா - நம்முடைய ராஜா ராமனா? - மறுபடியும் வனத்திற்கு அனுப்பியிருக்கிறார். சபையில் அமளி வலுத்தது.

வஸிஷ்டர் எழுந்தார்.

பிராஹ்மணர்கள் அனைவரையும் சேர்த்துக் கொண்டு ஓம் சாந்தி, சாந்தி: சாந்தி என்று மூன்று தடவை உரத்த குரலில் ஓதினார்.

ஆரவாரம் அடங்கியது.

‘‘பெருமக்களே! நாளைக்காலையில் அச்வமேத யாகம் மங்களமாக முடியும். எல்லோரும் கோமதியில் ஸ்நாநம் செய்யப்போகிறோம்.

அப்போது - எல்லோருடைய உள்ளங்களிலும் தாபம் தீர்ந்தது - குளிர்ந்து - மகிழ்ந்து - மங்களம் நிரம்பி விடும்.

உங்களுக்கெல்லாம் ராஜாவிடம் பரிவு இருக்குமானால் - அதைத் தற்போது அமைதி காப்பதின் மூலம் வெளிப்படுத்துங்கள்.



## ஸீதாராம மங்களம்

ஜயஸ்ரீராம் ஜயஸீதாராம் ராமாயண கானம் மேலே தொடர்ந்தது ராமன் அயோத்திவந்து பட்டாபிஷேகம் செய்து கொண்டார் - என்ற பகுதியைப் பாடும்போது - ஜனங்களை எவ்வளவு உற்சாகப்படுத்த முடியுமோ - அத்தனை விமரிசையாக கம்பீரமாக பெருமை துலங்கும் படியாகப் பாடினர்.

நாட்டு மக்கள் கண்டு களித்த வைபவத்தை - குமாரர்கள் வாயினால் கேட்டு பரவசப்பட்டார்கள். சபை கலைந்தது. பெரு வாரியான மக்கள் வெளியேறி விட்டனர். பிரமுகர் பிரதானிகள் காத்திருந்தனர்.

ராமன் ஹநுமானை அழைத்தார். ''ஹநுமந்தா! இரு பல்லக்குகள் தயார் செய்து கொள். ஒரு பல்லக்கு நிறைய தானியங்கள் வஸ்திரங்கள் ஆபரணங்கள் மங்களத்ரவ்யங்கள் எடுத்துக் கொள். ஒரு பல்லக்கில் இந்த முனி குமாரர்களை ஏற்றிக் கொள். பகவான் வால்மீகி ஆச்ரமத்திற்குப்போ.

மஹரிஷியை வணங்கி- காணிக்கைகளை அவர்களிடம் ஸமர்ப்பணம் செய்- குமாரர்கள் கானம் கேட்டு அயோத்தி நாடே ஆனந்த பரவசத்தில் மிதக்கிறது. என்று சொல் -

நான் பலதடவை மனதால் வணங்கி - அச்வமேத மஹாமண்டபத்திற்கு அவர்கள் விஜயம் செய்ய வேண்டும் - என்று பிரார்த்தித்ததாக விண்ணப்பம் செய்-

அதை ஏற்று அவர்கள் வர வேண்டும். அது உன் கையில் - அஸாத்யஸாதகனான உன் கையில் இருக்கிறது.

ஹநுமான் வணங்கி விடை பெற்றார்.

ராமன் குருதேவரை அணுகினார்.

குருதேவர் கூறினார்.

''ராம! கலங்காதே நீ அச்வமேத மஹாயஜ்ஞத்தை - சிறிது கூட முறை தவறாது ச்ரத்தை குறையாது முழுமனதுடன்

அனுஷ்டித்துப் விட்டாய். நாளை பூர்த்தி அது மங்களமாக முடியும்.

''குருதேவ! நாளை ஸூர்யோதயத்தில் ஹநுமான் வால்மீகி பகவானை அழைத்து வந்துவிடுவார். அவ்வமயம் தாங்களும் மந்திரிகளும் பிரதானிகளும் கூடி இருக்க வேண்டும். இந்த சரிதத்தை இயற்றியதற்காக அவரை தக்கபடி மஹாஸபையில் கெளரவிக்க விரும்புகிறேன்''

அனைவரும் ஏற்றனர்.

ஹநுமான் குமாரர்களை அழைத்துக் கொண்டு வால்மீகி ஆச்ரமம் போய்ச் சேர்ந்தார். காணிக்கைகளையும் குமாரர்களையும் ஒப்புவித்தார். ப்ரபுவின் விண்ணப்பத்தை விளம்பினார்.

''அப்படியா? ரொம்ப ஸந்தோஷம். ஹநுமந்தா. மூன்றாவது யாமத்திலேயே நான் கிளம்பி விடுகிறேன் - நீ தங்கி இருந்து ஸீதா தேவியையும் குமாரர்களையும் ஸ்நாநம் செய்வித்து அழைத்துவா''

மறு நாள் காலை சூரிய உதயத்தில் அச்வமேத மஹாமண்டபம் களை கட்டி விட்டது. மஹரிஷிகள் அனைவரும் காலை கர்மாநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பளபளவென்று ஜொலித்துக் கொண்டு கூடிவிட்டனர். மந்திரிகள் பிரதானிகளும் - மண்டப வாசலுக்கு வெளியே காத்து நின்றனர்.

ஸ்ரீராமனும் தம்பிகளுடன் பூர்ண கும்ப மரியாதைகளுடன் மங்கள வாத்யங்கள் முழங்க - வரும் வழி நோக்கி நின்றார்.

வால்மீகி பகவான் பல்லக்கில் வந்து இறங்கினார். வரவேற்பு மரியாதைகள் நடந்தன - ஊர்வலமாக வேத கோஷத்துடன் வால்மீகி பகவான் நடுவிலே. ஒருபுறம் ஸ்ரீராமன் - மறுபுறம் வஸிஷ்டர்.

பின்னால் ஸகோதரர்கள்.

அவர்கள் அரங்கத்திற்கு வந்து ஆஸனத்தில் அமர்ந்தனர் - மந்திரிகளும் பிரதானிகளும் இருபுறமும் அமர்ந்தனர்.

ஸ்ரீராமன் கைகூப்பிநின்றார்.

''மகரிஷே - தங்களால் - என் பிறவி ஸபல மாயிற்று தன்யனானேன்.

வால்மீகி - ஸபலமாகிவிட்டதா? என்று கேட்டார்.

வஸிஷ்டர் மஹரிஷியிடம் திரும்பினார்.

வஸிஷ்டர்: ஏதாவது குறையிருந்தால் தங்கள் விஜயத்தினால் அதுவும் தீர்ந்து விடுமே!

ராமன்: குமாரர்கள் வந்து கானம் பண்ணின சரிதம் - ஸத்யமாக என் குறை நிறைகளை - ஒன்று விடாமல் - எடுத்துச் சொல்லிற்று. அதைக் கேட்டபிறகு -ஒருவாறு பரீட்சையில் தேறிவிட்டேன்; கடமைகளை ஆற்றிவிட்டேன் - என்று நினைக்கிறேன்.

வால்மீகி: முற்றிலுமே - நீ தர்மத்தைக்கடைப் பிடித்து வாழ்ந்து விட்டாய். உன் லட்சியம் நிறை வேறிவிட்டது.

இனிவரப் போகும் ஸந்ததிகள் இந்த நூலைப் படித்து - தமது வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொள்வார்கள். அதில் ஸந்தேகமே இல்லை.

ராமன்: தங்கள் வாக்கில் இதுகேட்டு தன்யனானேன்.

வால்மீகி: உன் நடத்தையிலோ உன் வாக்கிலோ - உன் எண்ணத்திலோ எல்லாமே எப்படி மிகச்சிறந்தவையோ? அது போல தவறு ஒன்று - மிகப் பெரிது. மன்னிக்கவே முடியாதது.

எப்படி உன் தார்மீக வாழ்க்கையை முழுதும் ஆதர்சமாகக் கொண்டு தம் வாழ்க்கையில் கடைப்பிடிப்பார்களோ - அதே மக்கள் உன்னுடைய மாபெரும் தவறையும் - தர்மம் என்று நம்பி கடைப்பிடித்தார்களே யானால் நீ கடைப்பிடித்து சாதித்த மற்ற தர்மங்கள் அனைத்தும் பாழாகிவிடும்.

ராமன் திடுக்கிட்டார். வஸிஷ்டர் தலை குனிந்தார். மந்திரிகள் குழம்பினர். பிரதானிகள் ஒன்றும் விளங்காமல் விழித்தனர்.

ராமன்: மஹறிஷே - நான் அறியாமல் செய்ததவற்றை நான் அறியலாமா!

வால்மீகி: அது அறியாத தவறல்ல. தவறாக மேன்மை என்று அறிந்த கொண்ட தவறு.

ராமன்: அரசனாக இருப்பவன் அவதூறுக்கு ஆளாகக்கூடாது - என்று நான் நினைத்தது அதர்மமா?

வால்மீகி: அவதூறுக்கு ஆளாகக்கூடாது தான், அது உண்மையாக இருந்தால்.

ராமன் உண்மையோ பொய்யோ அவதூறு வந்துவிட்டதே.

வால்மீகி: அவதூறு எப்படி வந்தது? யார் சொன்னா? அது உண்மையா?

ராமன்: அது உண்மையே அல்ல. எனக்கு நன்றாகத் தெரியும்.

வால்மீகி: பொய்யை மதித்து எப்படி நடவடிக்கை எடுக்கலாம்?

ராமன்: பொய்யாகக்கூட நம்மீது அவதூறு வரக்கூடாது - என நினைத்தேன்.

வால்மீகி: அதுவும் நல்ல எண்ணம் தான். வந்து விட்ட பிறகு அதை ஆராய்வது தான் முறை. பொய் என்று நன்றாக உனக்குத் தெரிந்திருக்கும் போது - அவதூறு சொன்னவனை அழைத்து விசாரித்து - தண்டனை அளிக்காவிட்டாலும் - தவறை உணர வைக்க வேண்டியது தான் ராஜ தர்மம் -நீ செய்த தவறினால். - என்ன கொடுமை நேர்ந்திருக்கிறது பார் -

நீ தேவியைத் தள்ளி வைத்ததைக் கண்டு - நீதவறான கார்யம் செய்யமாட்டாய். ஏதோ தேவியிடம் குற்றம் இருந்திருக்கிறது என்று ஜனங்களில் பலர் நம்பி விட்டார்களே. அவர்கள்கூட - நேற்று ராமாயணம் கேட்டுக்

கூச்சலிட்டார்களாமே! நம்ம ராமனா இப்படித் தவறு செய்தான் - என்று குமுறினார்களாமே.

ராமன் தலை குனிந்தார்.

வால்மீகி: ராம! உன்னிடம் ஜனங்களுக்கு பக்தி இருக்கிறது. நம்பிக்கை உள்ளது. உன்னை தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். ஆனால் அவர்களுடைய உள்ளங்களில் இந்த நெருடல் இருக்கக்கூடாது. உடனே நீ அதர்மத்தில் - வைத்திருக்கின்ற தர்மபுத்தியை -விலக்கிக் கொள்வது தான் - நேர்மைக்கு அடையாளம்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருந்த போது வாசலிலே பரபரப்பு வெகுவாகக் கூடிய ஜனங்களின் ஆரவாரம். ஸீதா மாதா கீ ஜே ஸீதாராணிக்கு ஜே - என்ற கோஷம்.

ஸீதை பல்லக்கில் இருந்து இறங்கினாள். குமாரர்கள் இருவரையும் - கைகளில் பிடித்துக் கொண்டாள்.

அநஸூயா தேவியும் அருந்ததியும் - ஹாரதி எடுத்தனர். மாண்டவியும் சுருதகீர்த்தியும் சாமரம் வீசினர். ஊர்மிளை பன்னீர் தெளித்தாள். ஹநுமான் பின்புறம் நின்று வெண் குடை பிடித்தார்.

அருந்ததியும் அநஸூயையும் மங்கள இசைபாடிக் கொண்டு முன்னே வர ஸீதா வால்மீகி பகவான் அருகே நின்றாள்.

பகவான் சொன்னார் ராமா! அதோ பார்! முதிய மஹாஸுமங்கலிகள் மங்களம் பாடி அழைத்துவருகிறார்கள். பார். தேவியைப்பார். உன் குமாரர்களைப் பார்.

ராமன்: என் குமாரர்களா? இத்தனை நாட்கள் ராமாயணம் கானம் பண்ணியவர்கள் - என் குமாரர்களா?

ராமன் ஸிம்ஹாஸனத்திலிருந்து இறங்கினார். எதிரே வந்தார். தேவி - குமாரர்களை ராமன் திருவடிகளில் தள்ளினாள்.

ராமன் கைநீட்டி தேவியை வாரி அணைத்தார்.

வானத்திலிருந்து பூமாரி பெய்தது.

அருந்ததியும் - அநுஸூயயையும் தம்பதிகளையும் குழந்தைகளையும் சேர்த்து நிற்க வைத்து மங்கள ஹாரதி எடுத்தனர்.

வஸிஷ்டர் முன்னே வந்தார். ராம! நேரே யாக சாலைக்கு போவோம். லட்சுமண! யாகவேதிக்கு அருகே உள்ள ஸீதா பிரதிமையை அகற்றி பூஜை அறையில் வைத்துவிடு.

ராமன் தேவியின் கரம் பற்றிநின்றார். வால்மீகி பகவான் வந்தார்.

''ராம! நல்ல வேளை ஸ்ரீமத் ராமாயணத்தை - உன்னுடைய பட்டாபிஷேகம் வரை எழுதி மங்களம் பாடிவிட்டேன்.

நீ செய்த தவறு கூட சிறந்த மங்களத்திற்குக் காரணம் ஆகிவிட்டது. அதனால் தானே தேவி ஆச்ரமம் தேடி வந்தாள். அவளை சாட்சியாக வைத்துக் கொண்டு அவ்வப்போது சரிதானா என்று கேட்டுக் கொண்டு ராமாயணத்தை எழுதி முடித்தேன். அதை முதன் முதலில் உன் குமாரர்களுக்கே போதிக்கின்ற பாக்யம் கிடைத்ததே.

யார் வேணுமானாலும் எது வேண்டுமானாலும் எழுதட்டும். வ்யாஸ பகவான் தனது ஸ்ரீமத் பாகவதத்தில் இந்த சரித்ரத்தை எழுதப் போகிறார். அவர்கூட முன்னால் சற்றுக் குழப்பமாக எழுதிவிட்டுக் கடைசியாக உண்மையை எழுதிவிடுவார். அது போதும் - மங்களாநி ப வந்து என்று விடை பெற்றார்.

ஸ்ரீவ்யாஸாசாரியார் ஸ்ரீமத் பாகவதத்தில் எழுதினார்.

ஊரார் வாய்க்கு வந்த படி பேசுவார்கள். உண்மை அறியாமல் உளர்வார்கள். அவர்களை திருப்திப்படுத்த முடியாது.

அப்படி ஒருவன் பேச்சைக் கேட்டு பயந்து போனவரான - கணவனால் - ஸீதா தேவி கைவிடப்பட்டு வால்மீகி ஆச்ரமம் வந்து சேர்ந்தாள்.

**இதி லோகாத் ப$_4$ஹு முக$_2$ாத்**
**து$_3$ராராத்$_4$யாத் அஸம்வித:|**
**பத்யாபீ$_4$தேந ஸாத்யக்தா**
**ப்ராப்தா ப்ராசேதஸாலயம் ||**

அவளுக்கு இரு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களை முனிவரிடம் ஒப்படைத்து விட்டு தன்னைப் பாதுகாக்கக் கடமைப் பட்ட பர்த்தாவினால் கைவிடப்பட்டு ராமசரணங்களை த்யானம் செய்து கொண்டு

பூமி வெடித்து அந்தக் குழியில் விழுந்து விட்டாள்.

**முநௌ நிக்ஷிப்ய தநயௌ**
**ஸீதா ப$_4$ர்த்ரா விவாஸிதா**
**த்யாயந்தீ ராம சரணௌ**
**விவரம் ப்ரவிவேச ஹ ||**

ச்லோகத்தின் கடைசியில் வருகின்ற ஒற்றை எழுத்துச் சொல் ஹ - என்பது கவனத்திற்குரியது.

**''ஹேதி விதர்க்கே''**

என்று எழுதினார் உரையாசிரியர். அதன் பொருள் வருமாறு.

இப்படியெல்லாம் கதை சொல்வார்கள். அப்படிச் சொல்வது சரியில்லை என்று பொருள்.

வியாஸ பகவானும் இப்படிக் கதையை முடிக்க விரும்பவில்லை. முடிவுக்கு வந்து விட்ட அத்யாயத்தைத் தட்டி நீட்டுகிறார்.

பரீக்ஷித் கேள்வி கேட்கிறார். அதற்கு பதில் சொல்லும் முறையில் வ்யாஸ பகவான் கடைசியில் சொல்கிறார்.

அந்த அயோத்தியா ராமன் - ஆத்ம ஞானம் பெற்றவர்களிலே மிகச் சிறந்தவரான ராமன் ஸீதையோடு கூட வெகு ஆண்டுகள் ஸந்தோஷமாக வாழ்ந்தார். அந்த ஸீதை

எப்படிப்பட்டவள்? தன்னிடம் ஒட்டிக் கொண்டவள். தன்னிடம் பேரன்பு பூண்டவள். தனக்கு மிகவும் பிடித்தமானவள்.

*தஸ்மிந் ஸ ப$_4$கவாந் ராம:*
*ஸ்நிக்$_3$த$_4$யா ப்ரியயா இஷ்டயா*
*ரேமே ஸ்வாராம தீ ராணாம்*
*ருஷப$_4$: ஸீதயா கில ||*

இந்தச்லோகத்தில் கடைசி இரட்டை எழுத்துச் சொல் ''கில'' ஸ்வாரஸ்யமானது.

இப்படி அல்லவா நடந்தது என பொருள்.

ஸ்ரீராமன் - ஸீதாதேவி பின்னால் துணை நிற்க - ஆரம்பித்த - அச்வ மேதயாகத்தை முறைப்படி செய்து முடித்தார் மேலும் பலமுறை யாகங்கள் செய்தார். யாகங்களில் பங்கு கொண்ட ஹோதா அத்வர்யு - உத்காதா - மற்றும் ஸஹாயர்கள் எல்லோருக்கும் நிறைய தக்ஷிணைகளை வழங்கினார். முக்கியப் பங்கு கொண்டவர்களுக்கு அரசையே நான்கு பங்காகப் பிரித்து வழங்கினார். ஸீதை தன் திருமங்கல்யச் சரடு தவிர மற்ற ஆபரணங்களையும் தானத்திற்கு வழங்கினாள்

***''தத$_2$ா ராஜ்ஞீ அபி வைதேஹீ ஸௌ மங்கல்யாவ சேஷிதா''***

என்றெல்லாம் ஸீதாராமர்களைக் கொண்டாடி வியாஸ பகவான் ஸ்ரீமத் பாகவதத்தில் எழுதினார்.இதுவரை ஹநுமானின் சரிதம் ஸ்ரீமத்ராமாயணம் - துளஸீ ராமாயணம் இவற்றில் அடிப்படையில் - எழுதப்பட்டது.

பாமர இலக்கியங்களில் - ஹநுமானுடைய பெருமையே தமது கற்பனை வளத்தினால் அழகூட்டி பாமரர்கள் ரஸிக்கும் படி பலபக்தர்கள் எழுதியிருக்கிறார்கள். அவையெல்லாம் ராம குணாதிசயத்திற்குப் பொருந்துமா என்று கவலைப்படக் கூடாது. பக்தி அம்சத்தை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

# ஐந்தாவது பகுதி.

## ராம ஆஞ்ஜநேய யுத்தம்

ஒரு நாள் பிற்பகல் ராமனுடைய அந்தப்புரத்தில் - ஸீதையுடன் ராமன் உல்லாஸமாக அமர்ந்திருந்தார். ஹநுமான் இரண்டு நாட்கள் பிரபுவுக்குத் தேவையான பொருட்களைச் சேர்த்து - வரிசையாக அடுக்கி வைத்துவிட்டு லட்சுமணனை அழைத்துக் காண்பித்தார்.

''நான் தாயாரைப் போய் பார்த்துவிட்டு வரலாம் - என நினைக்கிறேன்- இரண்டு நாட்களுக்கு வேண்டிய உபசாரப்பொருள்கள் எல்லாம் இதே வரிசையாக மேடையில் அடுக்கி வைத்திருக்கிறேன். பிரபுவிடம் அநுமதி பெற்று - கிளம்புகிறேன்.

லட்சுமணன் - சிரித்துக் கொண்டே ''அப்பா! இரண்டு நாளைக்காவது அண்ணா ஸேவையை விட்டுக் கொடுத்தாயே! மிக்க நன்றி'' என்றார்.

அதற்குள் மஹாராஜா அழைப்பதாக - சேடி வந்து சொன்னான்.

ஹநுமான் ஓடினார்.

ஹநுமந்தா! தேவி சொல்கிறாள். ஹநுமான் இங்கேயே உழன்று கொண்டிருக்கிறானே! அவனுடைய தாயார் எங்கேயோ அஞ்ஜநாத்ரியில் உட்கார்ந்து கொண்டு ''பிள்ளைவர வில்லையே '' -என்று ஏங்கமாட்டாளா. ஹநுமானை அனுப்பி வையுங்களேன் என்கிறாள். நீ என்ன சொல்லுகிறாய்?''

ஹநுமான் கைத்துணியினால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மினார்.

ராமன் - ஏனப்பா அழுகிறாய்? என்னை விட்டுப்போக மனமில்லையா?

ஹநுமான்: ப்ரபோ! சற்று முன் நானும் இதையே நினைத்தேன். மாதாவுக்கும் இதே எண்ணம் வந்ததே! இந்தக் குரங்கிடம் தேவிக்கு என்ன க்ருபை?

ராமன்: நல்லது! நீ போய் தாயாரைப் பார்த்து விட்டுவா!''

ஹநுமான் கிளம்பினார். ஆஜார வாசலில் ஒரு ராஜபரிவாரம் வந்து கொண்டிருந்தது. ஹநுமான் சற்று நிதானித்தார்.

ஹநுமானைப்பார்த்தவுடன் அந்த அரசர் அவசரமாக முன்னே வந்தார். கைகூப்பினார்.

ஹநுமான்: காசி மஹாராஜாவா! ஆஹா பரம பாக்யம் விச்வேச்வரரையே தர்சித்த புண்யம் எனக்கு?

அரசர்: ஹநுமானே! அயோத்யாதிபதி மஹாராஜாதி ராஜனை பேட்டி காணலாம் என்று வந்தேன்.

ஹநுமான் :ரொம்ப ஸந்தோஷம் உள்ளேஓடி - காசி மஹாராஜாவின் வரவேற்புக்கு ஏற்பாடு செய்துவிட்டு - வெளியே வந்தார்.

ஹநுமான்: மஹாராஜா சற்று இந்த மண்டபத்தில் இளைப்பாறலாமே! குளிர்ந்த ஸுகந்த நறுமணம் வீசுகின்ற மஹாமண்டபத்தில் அரசர் அமர்ந்தார். ஹநுமான் அஞ்ஜநாத்ரிக்கு கிளம்பினார்.

அப்போது விச்வாமித்ரர் வந்தார். நாரதரும் கூட வந்தார்.'' ப்ரபு அந்தரங்கமாக தேவியிடம் பேசிக் கொண்டிருப்பார். பிறகு போகலாம்'' என்றார். நாரதர் குழந்தைகளை நான் காணத்தடையுண்டா? என்று அந்தப்புரக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போய்விட்டார் விச்வாமித்ரர்.

நாரதர் காசிமஹாராஜாவிடம் வந்தார். காசிராஜா எழுந்து வணங்கினார்.

''நல்ல வேளை உங்களிடம் ஒரு வேண்டுகோள். இந்த விச்வாமித்ரருக்கு இங்கிதம் தெரியவில்லை. அஹங்காரம் தான் தலைக்கு மேல் இருக்கிறது. அதை நீங்கள் சற்று மட்டுப்படுத்த வேண்டும்.

காசிராஜா: நான் அவரை அவமரியாதை செய்யமாட்டேன்.

நாரதர் - அவமானப்படுத்த வேண்டாம். அவர் வெளியே வருவார். அவரை கவனியாது நீங்கள் உங்கள் வழியே போனால் போதும்.

காசிராஜா அரைமனதோடு ஏற்றுக் கொண்டார்.

விச்வாமித்ரர் வெளியே வந்தார். காசிராஜா ஒதுங்கினார். அவரை கவனியாது விரைப்பாக நடந்து வெளியே போனார் முனிவர்.

காசிராஜா உள்ளே அழைக்கப்பட்டார். மஹாராஜாவைப் பேட்டி கண்டார். ஸ்ரீராமன் அவரைப் பெருமைப்படுத்தினார். விடைபெற்று வெளியே வந்து - காசிக்குச் சென்றார்.

விச்வாமித்ரர் வாசலுக்கு வந்தார். அவருக்கு மூளை வேலை செய்தது ''காசிராஜன் தானே அங்கே நின்றான். என்னைப்பார்த்து விட்டு தடிக் கம்பு போல நின்றானே! கொஞ்சம் கூட மரியாதை தெரியவில்லேயே! இதைவிடக் கூடாது. அவனுக்குப் பாடம் புகட்ட வேண்டும்.''

திரும்பினார் - ராஜசபைக்கு வந்தார். ராமன் அப்போது தான் ஸுமந்திரரிடம் ராஜ காரியம் பற்றிப் பேசிவிட்டு ஆஸனத்திலிருந்து எழுந்தார்.

விச்வாமித்ரர் வேகமாக விரைப்பாக வருவதைப் பார்த்துக் கலவரம் அடைந்தார்.

''மஹரிஷே! என்ன? என்ன? ஏன் இப்படி தங்கள் முகம் கடுமையாகத் தெரிகிறது''

''ஒன்றுமில்லை காசிராஜா இப்போ வந்தானே! உன்னை தரிசித்தானே! நீ அவனுக்கு ஸகல மரியாதைகளையும் செய்திருப்பாய்.

ஆனால் அவனுக்கு மரியாதை தெரியவில்லை. இப்போது நான் வெளியே போனேனா? எதிரிலே இவன் நின்றானா? தடிக்கம்பு போல நிற்கிறான். கையெடுத்து ஒரு கும்பிடு கூடப் போடவில்லை.

அவனுக்கு அவ்வளவு அஹங்காரம். அவனைச் சும்மா விடக்கூடாது அவனைப் போருக்கு அழைத்து - நீ அவனை ஸம்ஹாரம் பண்ணி விட வேண்டும்.

ராமன்: காசி ராஜாவையா? நானா? ஸம்ஹாரம் பண்ணுவதா? அவரை உலகம் முழுவதும் - ஸாக்ஷாத் விச்வ நாதனாகவே பாவிக்கிறார்களே.

விச்வா: அதனால் தான் அவனுக்கு மமதை எகிறிவிட்டது. ஒரு ப்ரஹ்மரிஷியை அவமதித்து விட்டாள்.

ராமன்: தாங்கள் அப்படி நினைக்ககூடாது. காசிராஜா - மிகவும் கண்யமானவர் விநயமே உருவெடுத்தவர் அவர் தங்களை அவமதித்திருக்க மாட்டார் .

விச்வா: ஒரு தவறுமில்லையா? - நான் ஒன்று சொல்கிறேன். அதில் நீ ஸந்தேஹப்படுகிறாயே!

ராமன்: அபசாரம் அபசாரம்! தங்களிடம் நான் அப்படி நடந்து கொள்வேனா?

விச்வா: நான் சொன்னபடி செய்தால்தானே - உனக்கு என்னிடம் உள்ள மரியாதை வெளிப்படும்.

ராமன்: உங்கள் ஆணையை மீற மாட்டேன். தாங்கள் தயவு செய்து தங்கள் ஆணைகளை மறு பரிசீலனை செய்ய வேண்டும்.

விச்வா: அதற்கு அவசியமில்லை. நீ உடனே அவனுடன் போருக்குப் புறப்படு. நான் காசியில் காத்திருப்பேன் - அவன் யுத்தகளத்தில் படுகாடு கிடப்பதை நான் காணவேண்டும்'' - என்று சொல்லி கிளம்பிவிட்டார்.

ராமன் திரும்பினார். ''ஹநுமந்தா - என்று அழைத்தார். லட்சுமணன் ஓடோடி வந்தார். அவன் அப்போதே தாயாரைப் பார்ப்பதற்காக அஞ்ஜநாத்ரிக்குப் பறந்து விட்டானே!.

காசிராஜனுக்கு செய்தி கிடைத்தது. ''ஒரு தவறும் செய்யாத நம்மீது - இந்த ஸ்ரீராமனைப் போர் தொடுக்கத் தூண்டிவிட்டாரே! என் செய்வேன்?

மந்திரி கூறினார் ''மஹாராஜா நீங்கள் அஞ்ஜநாத்ரிரீக்கு கிளம்புங்கள்.

ராஜா -எதற்கு?

மந்திரி - அஞ்ஜநாதேவியை சந்திக்க?

ராஜா - நான் ராமன் போருக்கு வருகிறாரே என்று கவலைப்படுகிறேன். நீர் க்ஷேத்ராடனம் போகச் சொல்கிறீரே.

மந்திரி - ராஜா தயவுசெய்து நான் சொல்வதைக் கேளுங்கள்: ராமன் போருக்கு வருகிறார் என்றால் அவரை யாரும் எதிர்க்க முடியாது. நினைத்தால் ஹநுமானால் முடியும்.

ராஜா - என்ன மந்திரியாரே! நடக்கிற வழி சொல்லுங்கள். ராமனோடு எதிர்த்துப் போராட - ஹநுமானை அழைக்க முடியுமா? அப்படி நினைத்தாலே மஹாபாபம். ஹநுமான் வருவாரா? ஒருக்காலும் வரமாட்டார்.

மந்திரி - அதனால் தான் நானும் சொல்கிறேன். அஞ்ஜநாத்ரிக்கு போய் அஞ்ஜநாதேவியின் காலில் விழுவோம். காசிராஜா என்றால் அவளுக்கு மிகவும் மரியாதை உண்டு. அவளிடம் உதவி செய்ய வேண்டும் - என்று கேட்டோம்.

''என்ன உதவி?'' என்று கேட்டாள் அஞ்ஜநாதேவி.

''செய்கிறேன் - என்று பிரதிஜ்ஞை செய்தால் தான் - உதவியைச் சொல்வோம்'' என்போம்.

அவள் சொல்வாள் - காசி மஹாராஜா பெரிய புண்யாத்மா! அவரே வந்து உதவி கேட்கிறார் என்றால் அது என்னால் முடிந்தால் செய்யாமல் இருப்பேனா? என்பாள்

''தங்களால் முடியும்'' - என்று சொல்வோம்

சரி -என்று பிரதிஜ்ஞை செய்வாள்.

''அப்போது - சொல்வோம்''

ராமன் எதிர்த்துப் போராட வருகிறார். அவரிடம் இருந்து எங்களைக் காப்பாற்ற ஹநுமானை அனுப்ப வேண்டும் என்போம்''

அதற்கென்ன! ஹநுமானை எதிர்த்து ஸ்ரீராமன் போரிடவே மாட்டார். சமாதானம் ஆகிவிடும். நீங்கள் ஹநுமானை இங்கே வரச்சொல்லுங்கள் -

என்று இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் போதே - ''இதோ வந்தேன் -அம்மா! என்று ஹநுமான் ஓடிவந்து தாயாரை வணங்கினார்..............

ஹநுமானை வழியில் நாரதர் பிடித்துக் கொண்டு விட்டார்.

விச்வாமித்ரர் வந்ததையும் இங்கிதம் இல்லாமல் அவர் அந்தப்புரத்தில் நுழைந்ததையும் ஹநுமானிடம் கூறினார். ஹநுமான் கேட்டுத் துடித்துப் போனார்.

ரிஷி - அநுமதியில்லாமல் அந்தப்புரத்தில் நுழைந்தாரா?

நாரதர்- அவர் தான் ராமனுக்கு கல்யாணம் செய்து வைத்தாராம். ராமனுக்கு அவரிடம் அபாரப்பிரியமாம்.

ஹநுமான்: அதுசரி! விச்வாமித்ரரிடம் பிரபுவுக்கு மிகுந்த அபிமானம். க்ஷத்ரியனாகப் பிறந்து - தபோபலத்தினால் - பிராமணன் ஆனார், அதிலும் வஸிஷ்டர் மெச்சுகிறாப் போல பிராமணன் ஆனார் என்று பிரபு ஆச்சரியமாகச் சொல்வார். இருந்தாலும் அந்தப்புரத்தில் நுழைய - நானாக இருந்தால் விட்டிருக்க மாட்டேன்.

பிரபுவுக்கு என்ன சங்கடம் நேர்ந்ததோ - சரி சரி. நான் தாயாரைப் பிறகு பார்த்துக் கொள்கிறேன் இப்போது அயோத்தி திரும்புகிறேன்.

நாரதருக்கு அடுத்த தகவல் விச்வாமித்ரருக்காக ராமன் காசி மன்னருடன் போரிடப் போகிறார் - என்ற தகவலைச் சொல்லலாமா? - என நினைத்தார்.

இந்தச் சேதி தெரிந்தால் - ஹநுமான் விச்வாமித்ரரைப் பிடித்துக் கிஷ்கிந்தைச் சிறையில் அடைத்துவிடுவார் என்று நினைத்தார்.

ஆஞ்ஜநேயா! பிரபு ஸேவை என்றால் எப்போதும் இப்படித்தான். ஏதாவது நெருக்கடி வந்து கொண்டிருக்கும் - பாதி வழிக்கு மேல் வந்து விட்டாய் - தாயாரைப் பார்த்து விட்டு ஒரு நாள் அவளுக்கு பணிவிடை செய்து ஸந்தோஷப்படுத்து.

நாரதர் தாயாருக்குப் பணி விடையை - நினைவு மூட்டின உடன் அஞ்ஜனையிடம் ஓடி வந்து விட்டார்.

அஞ்ஜநை பிள்ளையை வாரி அணைத்தாள் - ''என் கண்ணே! எத்தனை நாளாயிற்று உன்னைப் பார்த்து. நீ வந்தது ரொம்ப ஸந்தோஷம்.

சரியான நேரத்தில் நீ வந்து விட்டாய் நான் ஒருவருக்கு அபயப்ராதானம் பண்ணிவிட்டேன். அவரை நீ காப்பாற்ற வேண்டும்.

ஹநுமான்: யாரம்மா! சொல், அவரைக் காப்பாற்றி விட்டு அதற்கு பிறகு உன்னிடம் வந்து தயிர் சாதம் சாப்பிடுகிறேன்''

அஞ்ஜனா: நிச்சயம் செய்வாயா?

ஹநுமான்: கண்டிப்பாகசெய்வேன். ராமன் மீது ஆணை. நீ ஒரு நாளும் எனக்காக இதைச் செய் என்று கேட்டதே இல்லை. கேட்ட போது செய்யாமல் இருப்பேனா?

அஞ்ங்ஜநா: இந்த காசி ராஜாவைக் காப்பாற்று. விபரம் அவரிடம் தெரிந்து கொள்.

காசி ராஜா வந்து வணங்கினார்.தன் கதையைச் சொன்னார்.

''ராமன் அயோத்திலிருந்து புறப்பட்டு விட்டாராம். இங்கேயே தேடி வந்தாலும் வருவார்'' என்றார் அரசர்.

''அம்மா! என்ன இது ?- என்னைச் சங்கடத்தில் மாட்டிவிட்டாயே.

*அஞ்ஜநா: உனக்கு காசியில் - ஸங்கடமோசநன் - என்று பெயராமே! காசி ராஜா சொன்னார்.*

*ஹநுமான்: நான் பிறர் சங்கடத்தைப் போக்குவேன். நானே அல்லவா இப்போது சங்கடத்தில் மாட்டிக் கொண்டுவிட்டேன்.*

*அஞ்ஜநா: என்ன செய்வாயோ தெரியாது. காசிராஜா புண்யாத்மா. அவரை என் பிள்ளை காப்பாற்றினால் எனக்குப் புண்ணியம் உண்டு. உனக்கும் உண்டு.*

*தாயிடம் பேசிப்பயனில்லை. பிரபு காசிராஜனைத் தேடி இவ்வளவு தூரம் வருகின்ற சிரமத்தை - நாம் கொடுக்கக் கூடாது - என்று நினைத்தார். காசிராஜனையும் மந்திரியையும் தோளில் தூக்கிக் கொண்டு - பிரயாகக்ஷேத்ரம் அருகே பறந்த போது - ராமன் எதிரே வருவதைப் பார்த்துவிட்டார்.*

*உடன் கீழே இறங்கி காசிராஜனை பிரபுவின் அருகே கீழே இறக்கினார்.*

*ராமன்: ராஜாவை இங்கே ஏன் கொண்டு வந்தாய்? முனிவர் காசியில் காசி வாசிகள் பார்க்க இவரோடு போரிட வேண்டுமென்று - என்னிடம் வாக்கு வாங்கிவிட்டாரே:*

*காசிக்குப் போவோம். ரிஷி அங்கு காத்திருப்பார். நாம் இருவரும் அவர் எதிரே போர் புரிவோம்*

*ஹநுமான்: நாம் இருவருமா? போரா?*

*ராமன்: எனக்கே உன்னோடு போரிட வேண்டுமென்று வெகு நாட்களாக ஆசை. நீ அப்படி ஒரு குத்துவிடுவாயாமே! ராவணன் கதிகலங்கித் தரையில் வீழ்ந்தானாமே! ஜாம்பவான் சொன்னார்.*

*ஹநுமான் : க்ஷமிக்க வேண்டும் என் தாயார் இந்த ராஜாவுக்கு அபயப்ரதானம் கொடுத்து விட்டாள். நான் இவரைக் காப்பாற்றியே ஆக வேண்டும்.*

*ராமன்: அதோ பார் விச்வாமித்ரர் பார்த்துக் கொண்டிருக்கிறார். உனக்குத் தான் தெரியுமே! நானாக யார்மீதும் முதலில் பாணம்*

தொடுக்கமாட்டேன். நீ என் மார்பில் ஒரு குத்துவிடு. நான் உன் மீது பாணம் தொடுக்கிறேன்.

ஹநுமான்: ப்ரபோ! என்னைச் சோதிக்காதீர்கள். நான் உங்கள் மார்பில் குத்து விடுவதா? நீங்கள் என்னை எது வேணுமானாலும் செய்யுங்கள்.

ராமன்: உன்னை நான் ஏன் அடிக்க வேண்டும்? நான் காசி ராஜாவுடன் அல்லவா போர்புரிய வேண்டும்?

ஹநுமான்: அவர் மீது தங்கள் அம்பு ஒன்று எய்யப்பட்டாலும் அதை நான் என் மார்பு மீது தாங்குவேன்.

ராமன்: நீ எதிரே வந்தால் - என் அம்பு அம்புறாத்தூணிக்கு திரும்பிவிடுமே! -நீ நகரு.

ஹநுமான்: மாட்டேன். காசிராஜா மீது ஓர் அம்பு கூடப் படக்கூடாது அது என் பொறுப்பு.

ராமன் ஓர் அம்பு எய்தார். அது காசிராஜாவின் மீது பாய்ந்தது. ஹநுமான் தன் வாலை நீட்டி - காசிராஜவை இழுத்துக் கொண்டு விட்டார். இலக்கு அகப்படாமல் அம்பு அம்புறாத்தூணிக்கு வந்துவிட்டது.

ராமன்: ஹநுமந்தா - என் மார்பில் ஒரு குத்து விடு. நான் வீழ்ந்துவிடுவேன் - நீ காசிராஜாவை தூக்கிக் கொண்டு ஓடி விடு.

ஹநுமான்: இந்த ஆணையை மட்டும் ஏற்காமல் இருப்பதற்கு - என்னை மன்னித்துவிடுங்கள்.

ராமன்: உன்னையும் மீறி - நான் இப்போது விடப் போகின்ற அம்பு - காசி ராஜனை தாக்கத்தான் செய்யும் பார்க்கிறாயா?

ஹநுமான் திடீரென பாய்ந்து காசிராஜனைத் தோளில் தூக்கிக் கொண்டு ஓடினார். கங்கைக் கரையில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த விச்வாமித்ரர் காலடியில் வீழ்த்தினார். காசிராஜா முனிவரின் சரணங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

விச்வாமித்ரர் - ஹநுமானை நிமிர்ந்து பார்த்தார்.

*சிஷ்யன்ஸ்ரீராமனுடைய தாஸன் வேண்டுகிறேன். காசிராஜனை மன்னித்து விடுங்கள்.*

*விச்வாமித்ரர் யோஜித்தார்.*

*ஹநுமான் - என்ன யோஜிக்கிறீர்கள்? தாங்கள் காசிராஜாவை மன்னிக்காவிட்டால் - என்னுடைய ப்ரபு வந்து தங்கள் சரணத்தில் வீழ்ந்து காசிராஜனுக்கு அபயம் கேட்பார். அப்பொழுதும் மறுதளிப்பீர்களோ? அப்போது ஹநுமான் விச்வேச்வரராக காட்சி அளித்தார். முனிவர் நடுங்கிவிட்டார்.*

*விச்வாமித்ரர் ராமனிடம் ஓடோடி வந்தார். காசிராஜனை நான் மன்னித்துவிட்டேன். ராம! காசிராஜனை விட்டுவிடு. அவன்க்ஷேமமாக இருக்கட்டும்.*

*ராமன்: ஹநுமந்தா - என் குருநாதர் விச்வாமித்ர ப்ரஹ்ம ரிஷியையே ஜயித்துவிட்டாயே! என்று ஹநுமானை இழுத்து அணைத்துக் கொண்டார். இப்படி எத்தனை ஆலிங்கனங்கள் பெற்றாரோ - ஹநுமான்!!.*



# அஹிமஹி ராவணன் கதை

**ஆநந்த தனயர்** என்று ஒரு மஹாராஷ்ட்ர மஹாகவி. மஹாராஷ்ட்ர பஜந ஸம்பிரதாயத்தில் நாமகீர்த்தன முறையில் பல பாகவதர்கள் அமர்ந்து கோஷ்டியாக கூடி மஹான்களின் கீர்த்தனங்களையும் அபங்கங்களையும் ஒருவர் பாட அவர் பாடியதை வாங்கி மற்றவர் கோஷ்டியாகப் பாடுவது என்ற முறை உண்டு.

அதன் மத்தியில் ஒரு பாகவதர் ஹரிதாகாலக்ஷேபம் செய்வார். முதலில் பஞ்சபதீ பாடுவார். கணேசன் சாரதா - குரு -ஸாதுக்கள் ஹநுமான் என்று ஐந்து தைவங்களைப் பற்றி பாடல்கள்.

பிறகு நாமஸித்தாதந்தம் - என்ற முகவுரை அதைத் தொடர்ந்து - ஒரு பக்த சரித்ரம் அல்லது பகவத்சரித்ரம்.

இந்த ஹரிகதைக்கு அநுகூலமாக - ஸாகி திண்டி கட்கா ஓவி முதலிய சந்தங்களில் பாடல்கள் தயாரித்துக் கொடுத்திருக்கிறார், ஆநந்ததநயர். அவற்றிற்கு **நிரூபணம்** என்று பெயர். அந்த முறையில் பக்தியும் ஹாஸ்யமும் மாயாஜாலங்களும் சேர்த்து ஸாதாரண ஜனங்கள் ரஸிக்கும் படியாக பகவத் சரித்ரங்களைப் புனைந்து எழுதியிருக்கிறார்.

அவற்றில் பக்தி பாவம் இருக்கும். தெய்வங்களை சங்கடங்களில் மாட்டிவிட்டுக் கடைசியில் கரை ஏற்றி விடுவார். அவற்றில் ஒன்று

ராவணன் வீரத் தலைவர்கள் அத்தனை பேர்களையும் பறி கொடுத்துவிட்டுத் தனியாகச் சிந்தனையில் ஆழ்ந்தான். அவனுடைய மாற்றான் தாய் பிள்ளைகள் இருவர். அஹி என்றும் மஹி என்றும் பாதாளத்தில் அரசாட்சி செய்து வந்தனர்.

இருவரும் மாயவித்யை முழுதும் கற்றவர்கள். அவர்கள் ஒரு தடவை பூலோகம் வந்து இமயமலைச் சாரலில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த போது - **சந்திரஸேநா** - என்ற பெயருள்ள அப்ஸரஸைக் கண்டனர். காமமுற்றனர்.

பாதாளத்துக்கு கொண்டு சென்றனர் அவளை அடைய இருவரும் போட்டி போட்டனர் அவள் முடிவாகக் கூறிவிட்டாள்.

''உங்களில் ஒருவர் - என்னை அடையலாம். யார் என்பதை நீங்களே தீர்மானித்துக் கொள்ளுங்கள் அதுவரை நான் காத்திருக்கிறேன்.

அவளுக்கு மாடமாளிகை கட்டிக் கொடுத்து தனிமையில் ஸௌக்யமாக வாழ வைத்தனர்.

ஹரிகதாநிபுணர் சூல மங்கலம் ஸௌந்தரராஜ பாகவதர் சந்த்ரஸேனையின் மனதைத் கவர்வதற்காக போட்டி போட்டுக் கொண்டு அஹிமஹிகள் செய்த மாயங்களை - திடீர் திருப்பங்களுடன் சொன்னதை நினைத்து நினைத்து இந்த நூலின் ஆசிரியன் - பனிரெண்டு வயதில் மூன்று நாட்கள் சிரித்துக் கொண்டிருந்தான்.

அவர்களை ராவணன் நினைத்தான். வந்து நின்றனர்.

ராவணன் தனது அவல நிலையை அவர்களிடம் விவரித்தான்.

''ராமலட்சுமணர்களை நீங்கள் மாயம் செய்து எப்படியாவது கொண்டு போய் பாதாளத்தில் கொன்று விடுங்கள். இந்த உதவி நீங்கள் செய்தால்தான் நான் தப்ப முடியும் என்றான்.

அவனுடைய பரிதாப நிலைக்கு இரங்கி அவர்கள் அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார்கள்.

போர்க்களம் வந்து ராம லட்சுமணர்களைத் தேடினார்கள்.

ஹநுமான்- இரவு நேரங்களில் ராமலட்சுமணர்கள் - அவர்களுடைய பணிவிடைக்காக விபீஷணன் ஜாம்பவான் அங்கதன் மூவரையும் சேர்த்து- ஒரு புல் தரையில் படுக்க வைத்தார். அவர்களைச் சுற்றி வட்டமாக வாலை வளைய விட்டு - பத்து அடி உயரத்திற்கு கோட்டை கட்டினார். அதன்

உச்சியில் அமர்ந்துக் கண்விழித்துக் காவல் காத்தார்.

தன் தகப்பனாரான வாயு பகவானை அழைத்து கோட்டைக்குள் ராம லட்சுமணர்களுக்கு மெல்லிய பூங்காற்றை வீச வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்.

நள்ளிரவுக்கு சற்று முன்னே அஹியும் மஹியும் வால் கோட்டை அருகே வந்தனர். உள்ளே தான் ராமலட்சுமணர்கள் பத்திரமாக இருப்பார்கள் - என்று கணித்தனர் - வால் கோட்டையை ஒரு சுற்றுச் சுற்றினார்கள். எங்கும் இடைவெளி யில்லை.

அருகே நெருங்கினார்கள். கைகளைக் கீழே கொடுத்து ''தூக்கலாம்'' -என்று நுழைத்தனர். இரண்டு நட்டு வாக்கிளித் தேள்கள் அவர்களின் கைகளில் கொட்டின.

விரல்கள் துடித்தன. வலி தாங்க முடியவில்லை. வாயில்விரலை வைத்துச் சப்பினர். நாக்குகள் விஷம்பட்டுத் துடித்தன. தொண்டையில் புண். இருவரும் மணலில் விழுந்து புரண்டார்கள்.

மஹி ராவணன் பக்கத்தில் இருந்த பாறை மீது ஏறி - வால் கோட்டையின் உள்ளே பார்த்தான்.

தமது சகோதரன் விபீஷணனும் ஒரு கரடியும். - படுத்திருந்த ராமலட்சுமணர்களின் கால் அடியில் நின்று உஷாராகக் காவல் காப்பதைப் பார்த்தான். கீழே, இறங்கினான்.

அஹியிடம் வந்தான் ''உள்ளே ஒரு கரடியும் நம் அண்ணனும் நிற்கிறார்கள். அவர்களை நான் பார்த்து விட்டேன். நான் ஒரு மாயம் புரிகிறேன்.

நான் கரடி ஆகிவிடுகிறேன். -நீ விபீஷணனாகி விடு.

''கரடியா? பேரென்ன?

''ஜாம்பவானாம்''

இந்த ஹநுமானை வேண்டிக் கொண்டு உள்ளே போய் விடுவோம்.

இரண்டு பேரும் கூச்சலிட்டார்கள். ஹநுமான் குனிந்து பார்த்தார்.

''நான்தான் வீபீஷணன் இதோ ஜாம்பவான்!''

''கோட்டையிலிருந்து எப்படி வெளியே போனீர்கள்?''

ஹநுமானே! அதைக்கேளும் நானும் ஜாம்பவானும் பெருமாள் காலடியில் நின்றோமா? சற்றுப் பின்னால் காலை வைத்தோமா? ஒரே புதை மணல் கிடுகிடு வென்று இழுத்துப் போய் கடற்கரையில் தள்ளிவிட்டது.

ஹநுமான்: அதனால் தான் உடம்பெல்லாம் புழுதியாக இருக்கிறதா? சரி சரி இடது முனையில் - வால்நுனி இருக்கிறது அதை சற்று வெளியே நீட்டுகிறேன் இடுக்கு வழியாக உள்ளே போய் விடுங்கள் ஜாக்கிரதை''

அஹி (விபீஷணனும்) மஹி (ஜாம்பவானும்) கோட்டைக்குள் புகுந்தனர். விபீஷணனையும் ஜாம்பவானையும் மூக்கிலே துணியை வைத்து மருந்தால் மயக்கினார்.

கோட்டைக்குள் திடீரென்று வெளிச்சம் தெரிந்தது. குனிந்து பார்த்தார் ஹநுமான். கண்கள் கூசின - விரலால் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தார். ஆகாசத்தில் வெளிச்சம் தெரிந்தது.

குடக்கென்று உள்ளே குதித்தார். விபீஷணனும் ஜாம்பவானும் சுக்ரீவனும் அங்கதனும் மயங்கிக்கிடந்தனர். ராமலட்சுமணர்களைக் காணோம்.

மயங்கிக் கிடந்தவர்களை ஜலம் தெளித்து - எழுப்பினார். முக்கி முக்கி எழுந்தனர். பேந்தப் பேந்த விழித்தனர்.

''எங்கே ஐயா! பிரபு இளையவர் எங்கே? இப்படியா தூங்குவீர்களா?''

''நாங்கள் தூங்கவே இல்லையே!''

''தூங்கவே இல்லையானால் - எப்படி பள்ளத்தில் கடற்கரைக்கு உருண்டீர்கள்!''

''ஏது பள்ளம்?''

சற்று முற்றும் பார்த்தனர். இது அரக்கர் மாயை என்று தெரிந்து விட்டது. விபீஷணன் சொன்னார்.

''இது சாதாரண மாயை இல்லை. லங்கை அரக்கர் மாயை யெல்லாம் என்னிடம் செல்லாது. இது மிகக் கொடிய மாயை. அஹி மஹி ராவணர்களுக்குத் தான் தெரியும்?

ஹநுமான்: அஹி மஹி ராவணர்களா?'' யார் அவர்?

விபீஷணன்: எங்கள் மாற்றான் தாயின் மக்கள் - பாதாளத்தில் இருக்கிறார்கள். என் அண்ணன் தான் பூமியில்நிர்கதியாகப் போய்விட்டானே! அவன் அவர்களை அழைத்திருக்கிறான். அழுதிருக்கிறான்- அவர்கள் நமது தெய்வங்களைக் கொண்டு போய் விட்டார்கள்.

ஹநுமான்: எங்கே போய் விட்டார்கள்!

விபீஷணன்: பாதாளத்துக்குத் தான்.

ஹநுமான்: அப்படியா சங்கதி ? - சரி நான் போகிறேன். பாதாளத்திற்கு. விபீஷணரே - ஒரு அறுபது நாழிகை நீங்கள் இங்கே - மஹாராஜாவோடு - சேர்ந்து - வருகின்ற - யுத்தத்தை சமாளிக்க வேண்டும்.

பிரபுவும் இளையவரும் ஒரு நாள் தவத்தில் இருக்கிறார்கள் - என்று சொல்லிவிடுங்கள் மற்ற செய்தி வெளியே தெரிய வேண்டாம் .

முக்கியமாக ராவணனுக்கே தெரியக் கூடாது. அவன் ஆங்காரத்தோடு போருக்கு வருவான். அவனைத் தேக்குவது உங்கள் பொறுப்பு.

ஹநுமான் கிளம்பிவிட்டார். ஸூர்யோதயத்துக்கு முன்பே - கடலில் குதித்து விட்டார். ப்ராணாயாம பலத்தினால் கடலின் அடி மட்டத்தைத் துளைத்துப் பாதாளத்தில் இறங்கிவிட்டார்.

அங்கே அப்போது மாலை வேளை. இருட்ட ஆரம்பித்து விட்டது.

அஹி மஹி ராவணர்கள் ராம லட்சுமணர்களை தூக்கிக் கொண்டு சந்த்ர ஸேனையின் வீட்டுக்குப் போனார்கள்.

அவளிடம் தான் அவர்களுடைய ப்ரத்யேக பூஜைக்குரிய காளிகோவிலின் சாவி இருந்தது. அதை வாங்கிக் கொண்டார்கள்

சந்த்ரஸேனை - மயக்கத்தில் இருந்த ஸ்ரீராமன் முகத்தைப் பார்த்தாள். மயக்கத்திலும் அந்த முகம் பிரஸந்நமாக உதட்டில் புன்னகை துலங்க அவளுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது.

அஹி மஹிகளைப் பார்த்து ''அவன் இங்கேயே இருக்கட்டும்'' என்றாள்''

''அதெல்லாம் முடியாது. இவர்களைப் போன்ற பலி தேவிக்கு இது வரை நாங்கள் கொடுத்ததே இல்லை. இன்று இவர்களை தேவிக்கு பலி கொடுத்து விட்டால் தேவி எங்களை இந்த பிரபஞ்சத்திற்கே சக்ரவர்த்தி ஆக்கிவிடுவாள். அப்புறம் வருகிறோம் - உன்னிடம்''

சந்த்ரஸேனை திடுக்கிட்டாள் அவர்கள் ராமலட்சுமணர்களைக் கொண்டு போய் தேவி கோவிலில் - சுரங்க கஜானாவில் வைத்துப்பூட்டி விட்டு - சாவியைக் கொண்டு வந்து சந்த்ரஸேனையிடம் ஒப்புவித்தார்கள்.

ஹநுமான் பாதாளத்தில் இறங்கி கிழவடிவம் - எடுத்து பாதாள லங்கையில் பிரவேசித்தார்.

பின்னாலேயே யாரோ வந்து அவருடைய வாலைப் பிடித்து இழுத்தார். திரும்பிப் பார்த்தார். பெரிய வாநரன்.

''கிழக் குரங்கே! எங்கே போறே ஓடிப்போ - என்று அதட்டியது பெரிய குரங்கு.

''பெரிய குரங்கே! வயதானவன் வழி தவறிப் போய் இங்கே வந்துவிட்டேன். என்னை ஏன் விரட்டுகிறாய்? நீ யாரப்பா!''

*''யாராக இருந்தால் உனக்கென்ன?''*

*என்னை அதிகாரம் பண்ணுகிறாயே! உன்னைப் போல நானும் வந்தேன். உன் வேலையை பார்த்துக் கொண்டு போ''*

*''என்ன சொன்னாய் கிழக்குரங்கே! நான் யார் தெரியுமா?''*

*''அதைத்தானே கேட்டேன்''*

*''நான் ராமதூதன் அஞ்ஜநா புத்திரன் ஹநுமானின் குமாரன். **மகரத் வஜன்***

*ஹநுமான் தடுக்கி வீழ்ந்தார். அவனை ஊன்றிப் பார்த்தார்.''*

*''ஹநுமானின் குமாரனா? என்னப்பா!'' புதுக்கதைவிடுகிறாய்? ஹநுமான் கட்டை பிரம்மச்சாரி. அவர் பெயரை ஏன் கெடுக்கிறாய்?''*

*மகரத்வஜன்: அவர் பெயரைக் கெடுக்கிறேனா? அல்லவே அல்ல. அவருடைய புகழை நிலை நாட்டுவேன்.*

*ஹநுமான்: கட்டை பிரம்மசாரிக்கு ஒரு பிள்ளை என்றால் அவருக்கு அவமானமில்லையா?*

*மகரத்வஜன்: அவருக்கே தெரியாது - நான் எப்படிப் பிறந்தேன் -என்று! என்ன அவமானம்?*

*ஹநுமான்: அவருக்கு தெரியாமல் ஒரு பிள்ளை எப்படிப் பிறப்பான்?*

*மகரத்வஜன்: பிறந்திருக்கிறான். அவன் தான் உன்னோடு பேசிக் கொண்டிருக்கிறான்.*

*ஹநுமான்: ஹநுமான் பெயரை சொல்லிக் கொண்டு பொய் சொல்லாதே. மஹாபாவம். அளந்து பொய் சொல்லு.*

*மகரத்வஜன்: உனக்குத் தெரியாவிட்டால் நான் சொல்வது பொய் ஆகிவிடுமோ!*

*ஹநுமான்: தெரியும் படியாகச் சொல்லேன். பிரம்மசாரி ஹநுமானுக்கு பிள்ளை பிறந்தானாம் இவன்!!*

*மகரத்வஜன்: அலட்சியமாகப் பேசாதே. நான் பொய்யே சொல்லமாட்டேன்.*

*ஹநுமான்: ஆகாசத்திலே பூப்பூத்திருக்கிறது என்று சொன்னால் - யாராவது நம்புவார்களா? அது நிஜம் தான் - என்று எத்தனை தடவை சொன்னாலும் நிஜமாகிவிடுமா?*

*மகரத்வஜன்: விபரம் தெரியாமல் மேலே மேலே பேசாதே! எனக்கு கோபம் வரும்*

*ஹநுமான்: வரட்டுமே! எனக்கென்ன?*

*மகரத்வஜன்: கோபம் வந்தால் என்ன செய்வேன் தெரியுமா?*

*ஹநுமான்: என்னை அதட்டியே - பொய்யை நிஜமென்று என்னை நம்ப வைக்க முடியாது.*

*மகரத்வஜன்: மறுபடியும் நான் சொல்வது பொய் -என்று எண்ணாதே. விபரத்தைத் தெரிந்து கொள்ளு.*

*ஸீதாதேவியைத் தேடிக் கொண்டு ஹநுமான் ஆகாசத்திலே பறந்து கடலைத் தாண்டினாரா?*

*ஹநுமான்: அது உண்மை*

*மகரத்வஜன்: அப்போது வெயில் அடித்ததா?*

*ஹநுமான்: அது உண்மை*

*மகரத்வஜன்: ஹநுமானின் நெற்றியெல்லாம் வியர்த்துக் கொட்டியதா?*

*ஹநுமான்: அது உண்மை.*

*மகரத்வஜன்: அதை இடது கையால் நெற்றியை வழித்து உதறினாரா?*

*ஹநுமான்: இருக்கலாம்*

*மகரத்வஜன்: உமக்குத் தெரிந்தது போல மற்றதெல்லாம் உண்மை என்றீர். இதை மட்டும் ''இருக்கலாமே'' - என்றீரே!*

*ஹநுமான்:அவருக்குத் தெரியாது*

*மகரத்வஜன்: அவருக்குத் தெரியாது - என்று உமக்கு எப்படித் தெரியும்?*

*ஹநுமான்: கேள்வி கேட்காதே! மேலே கதையைச் சொல்லு.*

*மகரத்வஜன்: நிஜம்மா அவர் நெற்றி வியர்வையை இடது கையால் வழித்து உதறினாரா ஐயா!*

*ஹநுமான்: சரி! மேலே சொல்லு*

*மகரத்வஜன்: அப்போ கீழே கடலிலே - ஒரு சுறாமீன் - வெயில் தாங்காமல் - வாயைப் பிளந்தது ஐயா! அதிலே அந்த வியர்வைத்துளி விழுந்ததையா : சுறாமீன் கர்ப்பத்திலே வாநரக்குஞ்சு வளர்ந்ததையா - அந்தச் சுறாமீனை மீன் பிடிப்பவன் பிடித்தான் ஐயா! -*

*அதைக் கொண்டு போய்- அஹி ராவணன் வீட்டிலே கொடுத்தானா? அந்த வீட்டு சமையற்காரர் அந்த சுறாமீனை அரிவாள் மனையிலே கொடுத்து நேராகப் பிளந்தானா? அப்போது அந்த வானநரக்குஞ்சு விழுந்ததையா? ரொம்ப அழகா இருந்ததாம்.*

*சமையல்காரன் அதைக் கொண்டு போய் அஹிராவணனிடம் காண்பித்தானாம் அந்தக் குழந்தையின் அழகைப் பார்த்து அஹிராவணன் ஆச்சரியப்பட்டானாம். அதை எடுத்துக் கொண்டு போய் - சந்திரஸேனா வீட்டிலே கொடுத்து அந்த வாநரச்சிசுவை - நீ வளர்த்துவா - என்று கொடுத்தானாம். அந்தக் குஞ்சுதானய்யா - நான்.*

*ஹநுமான் மலைப்போடு கதை கேட்டார். மகரத்வஜன் உற்சாகமாகக் கதை சொன்னான்.*

*மகரத்வஜன்: - சந்திரஸேனை என்னை நன்றாக வளர்த்தாள். நான் ரொம்ப ரொம்ப விஷமம் பண்ணினேனாம்.*

அதையெல்லாம் கதை கதையா - எங்கம்மா சொல்லுவாள். நான் வளர்ந்து பெரியவனாகிவிட்டேன்.

அரக்கர்களை வம்புக்கிழுத்து அவர்களோடு மல்லுக்கு நின்று போராடுவேன்.

என் பராக்கிரமத்தைப் பார்த்து அஹிராவணன் - என்னைக் கோட்டைக் காவல் தலைவனாக நியமித்திருக்கிறார்.

ஹநுமான் மகரத்வஜனைப் பிள்ளை பாசத்தோடு அணைத்துக் கொண்டார். நான்தானப்பா - ஹநுமான்.

''அப்படியா?''

ஆமாமப்பா?''

'' நிஜம்மாவா?'' ''எங்கே -பார்க்கலாம் என் வாலை நீட்டுகிறேன். உங்கள் வால் அத்தனை நீளுமா? - என்று வாலை நீட்டினான்.

மகரத்வஜனின் வால் - பாதாள லங்கையையே ஒரு சுற்றிச்சுற்றி - வந்து ஹநுமானின் முன்னே வந்து சொடுக்கியது. ஹநுமானின் வாலும் மகரத்வஜனின் வாலை அணைத்தபடியே நீண்டு - வந்து இங்கே அவனுக்கு முன்னே - மகரத்வஜனின் வாலினுடைய நுணியோடு பின்னிக் கொண்டது.

இரண்டு பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''மகரத்வஜா! வீண் பொழுது போய்விட்டது - நான்முக்கியமான காரியமாக வந்திருக்கிறேன் - என்று விஷயத்தைச் சொன்னார்.

மகரத்வஜன் ''ஆமாம் அஹிமஹிராவணர்கள் அந்த ராமலட்சுமணர்களை இன்று மாலை காளிக்கு பலி கொடுக்கப் போகிறார்களாம்.

ஹநுமான்: அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?

*மகரத்வஜன்: கவலைப்படாதீர்கள் என்னோடு வாருங்கள் - என்றான் - சந்திரஸேனையின் மாளிகைக்கு அழைத்துப் போனான்.*

*''அம்மா! என் தகப்பனார் அம்மா ஆஞ்ஜநேயர் வந்திருக்கிறார்''*

*''அப்படியா? - என்று விழுந்து வணங்கினாள்.*

*''அம்மா! - உன்னிடம் ராம லட்சுமணர்களை அடைத்து வைத்திருக்கிற கோவிலின் சாவி இருக்கிறதாமே அதைக் கொடு.*

*சந்திரஸேனை: அது முடியாதே. அஹிமஹிக்கள் இரண்டு பேரும் சேர்ந்து வந்தால் தான் கொடுக்க வேண்டும். ஒருவர் தனியாக வந்து சாவி கேட்டால் கூட கொடுக்கக்கூடாது என்று ஆணை. நான் கொடுக்க மாட்டேன்.*

*மகரத்வஜன்: ஹநுமானைத்திரும்பிப் பார்த்தான்.*

*ஹநுமான்: எனக்கு சாவியெல்லாம் வேண்டியதில்லை. ஒரு நிமிஷத்தில் வாசற்கதவை உடைத்து கர்பக்ருஹ கதவையும் உடைத்து விடுவேன். அப்படியெல்லாம் செய்தால் - என் காரியம் கெட்டுவிடும்.*

*உன் அம்மாவிடம் சொல்லி எப்படியாவது சாவியை வாங்கி வா - கோவில் கதவைத் திறந்து - என்னை உள்ளே விட்டு விட்டு - மறுபடியும் பூட்டி - சாவியை உன் அம்மாவிடம் கொடுத்து விடு. அது போதும்.*

*மகரத்வஜன்: என் அப்பா - கெஞ்சுகிறார். அவர் சொல்கிறார் அம்மா! அவர் யாரையும் கெஞ்சவே மாட்டார். காரியம் சிக்கலாக இருப்பதனால் கெஞ்சுகிறார். அவர் சொல்கிறபடி - கதவைத் திறந்து அவரை உள்ளே விட்டு உடனே பூட்டி சாவியைக் கொண்டு கொடுத்துவிடுகிறேன்.*

*சந்த்ரஸேனை: சரி கொடுக்கிறேன். உன் தகப்பனார் தன் காரியத்தை - ராமலட்சுமணர்களை அநாயாசமாக விடுவித்து சாதித்துவிடுவார். ஆனால் அவர் எனக்கு ஒரு வரம் தர வேண்டும்.*

ஹநுமான்: என்னம்மா செய்ய வேணும்?

சந்த்ர: ராமலட்சுமணர்களை என் வீட்டுக்கு அழைத்துவர வேண்டும்.

ஹநுமான்: எனக்கு மிக அவசரம் அம்மா. தாமதிக்க முடியாது பிறகு அழைத்து வருகிறேன்அம்மா.

சந்த்ரஸேனை: அதெல்லாம் நடக்காது. நான் தாமதப்படுத்தமாட்டேன். அவர் என் வீட்டில் கால் அடி வைக்க வேண்டும் அவரை நான் இழுத்து ஒரு முத்தம் கொடுக்க வேண்டும்.

ஹநுமான் காதைப் பொத்திக் கொண்டார்.

ராம ராம ராமராம ராம

ஹநுமான்: என்ன வார்த்தை சொல்லிவிட்டாய்! அம்மா! இப்படி யெல்லாம் எண்ணுவதே மஹாபாவம்

சந்த்ரஸேனை: மாருதி ராயரே! நான் ரொம்ப நாட்களாக ராம நாமம் சொல்லிக்கொண்டு வருகிறேன். அது உமக்குத் தெரியாது. அவர் என் தெய்வம் தான்.

இத்தனை நாட்கள் இந்த அரக்கர்களிடம் மாட்டிக் கொண்டு தவிக்கிறேனே! ஏன் தெரியுமா? ராம நாமம் தான் - என்னை இந்தச் சிறையில் அமைதியாக வைத்திருக்கிறது.

அவரைப் பார்ததுவிட்டேன். மயக்க நிலையில்கூட அவருடைய அந்த ஸுந்தர முகத்தின் அழகை நான் கண்ணாரப்பார்த்துவிட்டேன். என்ன அழகு? ஒரே ஒரு நிமிஷம்? அவனைக் கட்டிப்பிடித்து முத்தம் கொடுத்து விட்டால் - என்ஜந்மா ஸபலம் ஆகும்.

ஹநுமான்: இதற்கெல்லாம் - நான் உடந்தையாக இருக்க முடியாது. சாவியைக் கொடுப்பாயா மாட்டாயா?

மகரத்வஜன் :அம்மம்மா!என்னைப் பாருங்கம்மா. அப்பா காரியங்கள் இதுவரை ஒன்றுகூட தடைப்பட்டதே இல்லை. அதற்கு உதவி செய்கிற பாக்யம் எனக்கு கிடைத்திருக்கிறது. அதை நான் இழக்கக் கூடாதம்மா. தயவு செய்யம்மா!

சந்த்ர: சரி! சாவி தருகிறேன். ஒரே ஒரு நிபந்தனை - மயக்கத்தில் அவரை நான் பார்த்தேன். ப்ரஸந்நமாக அவருடைய முகத்தை நான் பார்த்து விட வேண்டும்.

வாசற்படியில் கால்வைத்து உள்ளே வந்தால் போதும்.கண்ணாரக் கண்டுவிடுகிறேன். இவ்வாறெல்லாம் நான் அவரை கேட்கமாட்டேன்.

ஹநுமான்: இது ஸத்யம் தானா!

சந்த்ரஸேனை: என் பிள்ளை தலைமேல் கைவைத்துச் சொல்கிறேன்.

ஹநுமான்: சரி சாவியைக்கொடு!

சந்த்ரஸேனை சாவியை மகரத்வஜன் கையில் கொடுத்தாள்.

ஹநுமான் மகரத்வஜன் இருவரும் காளி கோவிலை அடைந்தனர். வாசற்கதவைத் திறந்து விட்டான் மகரத்வஜன். ஹநுமான் உள்ளே நுழைந்தார். பையன் பூட்டிக் கொண்டுபோய்விட்டான்.

ராமலட்சுமணர்களைத் தேடினார் ஹநுமான். காணவில்லை. தேவியின் ஸந்நிதிக்குச் சென்றார். பூட்டை உலுக்கினார். கர்பக்ருஹ கதவு திறந்து கொண்டது.

கர்பக்ருஹம் விசாலமாக இருந்தது. உள்ளே ஸந்நிதி - அமைப்பை நோட்டம் விட்டார். திட்டம் போட்டார். வெளியே வந்தார். கதவில் பூட்டை மாட்டினார். பூட்டிக் கொண்டது.

கோபுரத்தின் மேல் ஏறினார், கலசத்திற்கு கீழே இருந்து பத்மதளத்தைப் பெயர்த்தார். அதை எட்டி எறிந்தார். அது கடலில் போய்விழுந்தது. உள்ளே இறங்கினார்.

தேவியை வணங்கினார். தேவியின் அலங்காரங்களைக் களைந்தார். அத்தனை ஆபரணங்களையும் தங்க கவசத்தையும் பூட்டிக் கொண்டார். தேவியை ஒரு முக்கு முக்கிப் பெயர்த்தார். வஸ்திரத்தோடு மட்டும் - கர்ப்பக்ருஹத்தின் கன்னி முலையில் சார்த்தினார்.

கர்ப்பக்கிருஹத்தின் உள் தாழ்ப்பாளை அழுத்திப்போட்டார்.

பிற்பகல் பதினெட்டு நாழிகைக்கு கொட்டுமேளம் கொம்பு வாத்யம் எல்லாம் முழங்கின. அபிஷேகத் திரவியங்களும் நைவேத்ய த்ரவ்யங்களும் வந்தன. பல்லக்கில் மயக்க நிலையில் ராமலட்சுமணர்களை அமர்த்தி வைத்து அஹிமஹி ராவணர்கள் அரக்கர் குழாம் புடைசூழ ஸந்நிதிக்கு வந்தனர்.

அஹி ராவணன் சாவியை எடுத்து கர்பக்ருஹக் கதவைத் திறக்க முற்பட்டான்.

உள்ளே இருந்து தேவியின் குரல் (ஹநுமான் குரல் தான்) கேட்டது.

''மகன்களே! கதவைத் திறக்க வேண்டாம். இன்று நாம் உக்கிர கலையோடு இருக்கிறோம் - எழும்பினோம். - கர்ப்பக்ருஹகத்தின் பத்ம தளம் கலசமெல்லாம் பெயர்ந்து கடலில் போய் விழுந்து விட்டது.

அஹிமஹி ராவணர்கள் நிமிர்ந்து பார்த்தார்கள் ஆமாம் கோபுரத்தின் மேல் பகுதி காணோம், ஆச்சரியப்பட்டார்கள்.

தேவியின் குரல் கேட்டது.

''இன்று நமக்கு அபிஷேகம் நைவேத்யங்கள் ஒன்றும் வேண்டாம் - பலியின் பொருட்டு இரண்டு மனிதர்களைக் கொண்டு வந்திருக்கிறீர்களாமே

அவர்களைக் குளிப்பாட்டி நல்ல வஸ்திரங்கள் அணிவித்து - மார்பில் சந்தனம் பூசி பீடத்தில் வைத்து - கோபுரம் வழியாகக் ஜாக்ரதையாக இறக்குங்கள். பலிகளுக்கு ஏதாவது காயம் ஏற்பட்டால் அதை நான் ஏற்கமாட்டேன் அவர்களை நாம் உள்ளே புஜித்து விட்டு கதவைத்திறப்போம்.

மற்றவர்கள் எல்லோரையும் கோயிலுக்கு வெளியே அனுப்பி - கோவில் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட வேண்டும். இன்று உங்கள் இருவருக்கும் மட்டும் நல்ல பதவியளிப்போம். அந்த அருளைப் பெறுவதற்கு நீங்கள் -

இந்த பலிகளைக் கொண்டு வந்ததன் மூலம் பாக்யம் செய்து விட்டீர்கள் - நாம் கதவைத் திறப்போம். நீங்கள் இருவர் மட்டும் வாசற்படியில் நில்லுங்கள் - என்று ஆணை வந்தது.

அஹிமஹிகளுக்கு ஸந்தோஷம் தாங்கவில்லை. ''பார்த்தாயா'' இந்த உயர்தரமான பலியினால் - தேவிக்கு நம்மீது அளவற்ற க்ருபை வந்துவிட்டது.

ஆணையின்படி அனைவரையும் கோயிலிலிருந்து அகற்றி - வாசற்கதவை அடைத்துவிட்டு வந்தார்கள். ராமலட்சுமணர்களை தேவியின் தங்க ஊஞ்சலில் அமர்த்தினார்கள். வெள்ளிச் சங்கிலிகளை இருபுறம் பிடித்துக் கொண்டு கோயிலின் கோபுரத்தில் ஏறி நின்று கொண்டு ஊஞ்சல் சங்கிலியை ஜாக்கிரதையாகத் தளர்த்தினார்கள்.

திறந்திருந்த - கோபுரத்வாரத்தின் வழியாக ராமலட்சுமணர்கள் அமர்ந்த ஊஞ்சலை இறக்கினார்கள். கீழே அவர்களுக்குத் தெரியாமல் கோயிலின் பின்புறம் நின்றிருந்த மகரத்வஜன் கோயிலில் மீது ஏறி உள்ளே குதித்தான்.

ஹநுமான் ராமலட்சுமணர்களை ஆச்வாஸப்படுத்தி - மயக்கத்திலிருந்து தெளிய வைத்தார்.

ஹநுமான் வாய்மூடி சைகை செய்தார். கர்பக்ருஹத்தின் உட்புறம் மறைவில் ராமலட்சுமணர்கள் நின்றனர். தேவி -(ஹநுமான்) கவசத்தின் மேல் ஸர்வாலங்கார பூஷிதையாகக் கதவைத் திறந்தாள். அஹிமஹிகள் தர்சனம் செய்து வணங்கினர்.

உள்ளே தேவிக்கு அலங்காரமாக வைத்திருந்த உடை வாளால் மகரத்வஜனும் ஹநுமானும் அவர்களை வணங்கின கழுத்தில் ஒரு போடு போட்டார்கள். வெட்டுப் பட்ட தலைகள் சடலங்கள் படிகளில் உருண்டன. அப்பால் போய் விழுந்தன.

ஓசைப்படாமல் ராமலட்சுமணர்களைத் தூக்கிக் கொண்டு கோயிலின் பின்புறச் சுவரேறி வெளிவந்து நேரே சந்த்ரஸேனை வீட்டுக்கு வந்தார்கள்.

*திவ்யாலங்கார பூஷிதையாக சந்த்ரஸேநா வாசலில் காத்திருந்தாள். அவர்களை வரவேற்றாள்.*

*''கைகூப்பிக் கண்கலங்கினாள்''*

*''பெண்ணே! அடுத்த அவதாரத்தில் உன் இஷ்டத்தைப் பூர்த்தி பண்ணுவோம்'' - என்று கடாட்சித்தார் ராமன்.*

*க்ருஷ்ணாவதாரத்தில் அவள் தான் மதுரா வீதியில் சந்தனக் கிண்ணம் தாங்கி வந்த குப்ஜை. அவளுடைய அபீஷ்டம் குறைவின்றி நிறைவேறியது.*

*வெகுநேரம் காத்திருந்த ஜனங்கள் கோவில் கதவை உடைத்துத் திறந்து - நடந்ததை அறிந்தார்கள்.*

*மகரத்வஜனை - அந்தப்பாதாள லங்கையின் அதிபனாகப் பட்டாபிஷேகம் செய்து வைத்து விட்டார் ஹநுமான்.*

*மறுநாள் விடியற்காலையில் ராமலட்சுமணர்களை தமது தோள்களில் ஏற்றுக் கொண்டு லங்கையின் போர்க்களம் வந்து சேர்ந்தார்.*

*ராமலட்சுமணர்கள் இல்லாத அன்று ராவணன் கோபாவேசம் கொண்டு - ஸீதையைக் கொன்றுவிடுவது என்று கிளம்பினான்.*

*ஸுபார்ச்வன் என்ற ராவணனுடைய மந்திரி வந்து தடுத்தான்.*

*''பெண் பாவம் பொல்லாதது.*

***ஸ்த்ரியா: கஸ்மாத் வதம் வீர***
***மந்யஸே ராக்ஷஸேச்வர!***

*நாளை அமாவாஸ்யை. ராக்ஷஸ வர்க்கத்திற்குச் சிறந்த நாள். நாளை நீங்கள் சத்ருக்களை ஸம்ஹரித்து வெற்றி பெறுவீர்கள் என்று சமாதானப் படுத்தினான். ஆகவே அன்று போர் நிகழவில்லை.*

*திரும்பி வந்த ராமலட்சுமணர்களைப் பார்த்த பிறகு சுக்ரீவாதிகளுக்கு உயிர்வந்தது.*

*ஹநுமான் - ப்ரபோ! ஒரு ஸந்தேஹம். தாங்கள் நிஜமாகவே தொண்ணூறு நாழிகள் மயக்க முற்றிருந்தீர்களோ!*

*லட்சுமணன் சிரித்தான். அஹிமஹி வந்து தூங்கிக் கொண்டிருந்த எங்கள்மூக்கில் ஒரு திரியை நுழைத்தான். அந்த நெடி எங்களை உணர்விழக்கச் செய்துவிட்டது. ஆனால் அவர்கள் எங்களைப் பாதாள லங்கைக்கு கொண்டு போனவுடன் - எங்கள் மயக்கம் தெளிந்து விட்டது.*

*அவன் சந்த்ரஸேனையிடம் சொன்னான். நான் அவர்களை தேவிக்குப்பலி கொடுக்கப் போகிறேன்'' இதைக் கேட்டவுடன் அண்ணா சொன்னார்!*

*''லட்சுமணா பயப்படுகிறாயா?''*

*''உங்களோடு இருக்கும் போது எனக்கு என்ன பயம்?''*

*''அப்படியானால் நாம் மயங்கிக் கிடைப்பதாகவே பாவனை செய்வோம் - என்ன தான் நடக்கிறது பார்ப்போம். அவர்கள் ஏதாவது கொடுமையில் இறங்கினால் - அப்போது நாம் நம் வலிமையைக் காட்டலாம்'' என்றார். நாங்கள் மயங்கியே கிடந்தோம்.*

*ஹநுமான் வந்து விட்டான்.*

*நான் அண்ணாவைக் கேட்டேன்.*

*''ஹநுமானுடன் பேசுவோமா!?''*

*''வேண்டாம். ஹநுமான் சுதந்திரமாக என்ன செய்கிறான் - என்று பார்க்க ஆசையாக இருக்கிறது - மயங்கிக் கிட'' என்றார்.*

*சுக்ரீவா! ஜாம்பவந்தா! ஒரு ரகசியம் ஒருவருக்கும் தெரியாதது - என்று ஹநுமானைப் பார்த்தார் லட்சுமணன்.*

ஹநுமான் தலை குனிந்தது.

''ஒருவருக்குமே தெரியாமல் - ஒரு பிள்ளை பெற்றிருக்கிறான் என்று சொன்னது தான் தாமதம் அனைவரும் ஹநுமானைச் சூழ்ந்து கொண்டு கேட்டனர்.

அப்படியா சேதி - என்றான் ஒருவன்.

சுக்ரீவன்: எங்காணும் பிரம்மசாரி வேஷமா போட்டீர்! என்னைப் பரிஹாஸம் பண்ணினீரே!

லட்சுமணன் - எல்லோரையும் அடக்கினார். ''நான் சொல்வதைக் கேளுங்கள் ஹநுமான் பிள்ளை பெற்றது ஹநுமானுக்கே தெரியாது.

சுக்ரீவன்: அது என்ன கூத்து? எந்தப் பெண்ணாவது ஹநுமானுக்கு மயக்க மருந்து போட்டுக் கெடுத்துவிட்டாளா?

லட்சுமணர்: வாநர மஹாராஜா! கொஞ்சம் வாய் அடக்கிப் பேச வேண்டும். அண்ணா பக்கத்தில் இருக்கிறார்.

சுக்ரீவன்: ''சரி! சரி! சொல்லுங்கள்.

லட்சுமணன் மகரத்வஜன் பிறந்த கதையை சொன்னார். அவனுடைய பராக்ரமத்தை புகழ்ந்தார். எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

ராமன்: ஹநுமந்தா! தேவி சிறைப்பட்டிருக்கிறாள். அவளைத் தேடிக் கண்டுபிடித்து விட்டாய். நாங்கள் சிறைப்பட்டோம். எங்களை மீட்டுக் கொண்டு வந்து விட்டாய். பாதாள லங்கையில் மிகக் கொடுமையான அரக்களின் மத்தியில் மாட்டிக் கொண்ட எங்களை நாஸூக்காக மீட்டாய். அதை எத்தனை பாராட்டினாலும் போதாது.



## கருட கர்வ பங்கம்

ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் - ஹநுமான் அவதார சரித்திரத்தில் கலந்து கொண்டார் - என்பதற்கு ஸ்ரீமத்பாகவதத்தில் வெளிப்படையாக சான்று ஒன்றுமில்லை.

த்வாரகா வாஸியான பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் ஸத்ய பாமாவினுடைய மாளிகையில் உல்லாஸமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீக்ருஷ்ணன் - தான் ஸாக்ஷாத் வைகுண்டபதியான நாராயணன் தான் - என்று பல ஸந்தர்ப்பங்களில் வெளிக்காட்டி கொண்டிருந்தபடியால் - கருடாழ்வார் அடிக்கடி கிருஷ்ண தர்சனம் செய்ய வருவார்.

ஒரு நாள் அப்படி வந்த வைநதேயனை ஸ்ரீக்ருஷ்ணன் கேட்பார்.

''எங்கே போய் விட்டு வருகிறாய்?''

கருடன்:- நேரே இங்கு தான் வருகிறேன். வருகிற வழியில் ராமேச்வரத்தில் இறங்கினேன்.

அங்கே ராமதாஸன் ஹநுமானைப் பார்த்தேன். ராம ராம ராம - என்று சொல்லிக் கொண்டு தாரை தாரையாகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்.

பாவமாக இருந்தது. பகவான் ராமன் தான் ''என்னோடு வைகுண்டம் வா - என்று கூப்பிட்டாரே! உடன் போயிருக்க வேண்டியது தானே. ஸாதுக்களோடு உட்கார்ந்து ராம நாம சொல்லிக்கொண்டு இங்கேயே இருக்கிறேன் - என்றார்.

பகவான் தாங்கள் அவதாரம் செய்த பிறகு எல்லோரும் கோவிந்த நாமம் வாஸுதேவ நாமம் தான் சொல்கிறார்கள். ராமனை எல்லோரும் மறந்து விட்டார்கள். இப்போது ராம நாம தனியே சொல்லிக் கொண்டு அழுகிறார்.

அழுவானேன். நீங்கள் தான் இங்கே பிரஸந்நமாக இருக்கிறீர்களே! வந்து தர்சனம் செய்யலாம் அல்லவா?

*ஸ்ரீக்ருஷ்ணன். கருடா!நீ ஹநுமானைப் பார்த்தாயா? அழுது கொண்டா இருக்கிறான்? பாவம் நீ போய் அழைத்து வாயேன்.*

*ஸத்யபாமா: அழைப்பதென்ன? லோகமனைத்துக்கும் தெரியும். த்வாரகாதீசனாக தாங்கள் இருக்கிறீர்கள் - என்று - வர வேண்டியது தானே!*

*க்ருஷ்ணன்: ப்ரியே ராமனாக அவதாரம் பண்ணினவன் க்ருஷ்ணாவதாரம் பண்ணியிருக்கிறேன் என்று அவனுக்குத் தெரியாது. அவனை அழைத்து வரச்சொல்லி - நான் தான் ராமன் - என்று அவனுக்கு காட்ட வேண்டும்.*

*ஸத்யபாமா: அது போதாது - நான் தான் ஸீதை - என்று நான் காட்டி விடுகிறேன்.*

*ஸ்ரீக்ருஷ்ணன்: நான் தான் ஸீதை என்று உன்னால் காட்ட முடியுமா!*

*ஸத்யபாமா: என்னால் முடியும். உங்களால் தான் நான் ராமனாகக் காட்டிக் கொள்ள முடியாது.*

*ராமனோ ஏகபத்நீ விரதன். நீங்கள் பதினாறாயிரம் பெண்டாட்டிகளோடுநின்றால் ஹநுமான் நம்புவாரா? அதனாலே நான் மட்டும் உங்களோடு நிற்கிறேன். மற்றவர்களை வர வேண்டாம் என்று தடுத்து விடுங்கள்.*

*ஸ்ரீக்ருஷ்ணன் : அப்படியா! சரி பார்ப்போம். கருடா! நீ போய் ஹநுமானிடம் ராம பிரான் உங்களை அழைக்கிறார் - என்று சொல்லி அழைத்துவா.*

*கருடா! ஹநுமான் ராமப்பித்து தான். அவரிடம் நான் பரமாத்மா - என்று எல்லாம் சொல்லாதே. இங்கிதமாக - ராம தர்சனம் செய்யலாம் - என்று சொல்லி அழைத்துவா.*

*கருடன் கிளம்பிவிட்டார். நேரே ராமேச்வரம் வந்தார்.*

*ஹநுமான் நிம்மதியாக ராம நாமம் சொல்லிக்கொண்டு அமர்ந்திருந்தார். ஆலயத் தூணில் சாய்ந்து கொண்டு காலை நீட்டிக் கொண்டிருந்தார்.*

*ஆகாசத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.*

*கருடன் வந்தார். -ஹநுமானே! உம்மைத்தானையா - ஹநுமானே - நான் விஷ்ணுவாஹநன் கருடன் வந்திருக்கிறேன். குனிந்து பாருமையா!*

*ஆகாயத்திலே என்ன பார்க்கிறீர்? மேகங்கள் நகருகின்றன? அதெல்லாம் வெறும் மேகம் தானய்யா! ராமன் அல்ல. அதை என்ன பார்வை?*

*காதும் செவிடாகிவிட்டதா? பாவம் ஹநுமானின் வலது காதில் முகம் வைத்து - ராம - என்று உரக்கச் சொன்னார். ஹநுமான் திரும்பினார்.*

*கைஎடுத்துக் கும்பிட்டார். ஈனக்குரலில் கேட்டார்.*

*ஹநுமான் : யார்?*

*கருடன்: நான் தான் வைநதேயன் விஷ்ணுவாஹநன்*

*ஹநுமான்:பகவான் இங்கே வந்திருக்கிறாரோ!*

*கருடன் ''இல்லை'' என்று கை அசைத்தார்.*

*தனியாக எங்கே வந்தீர்?*

*கருடன் : துவாரகாதீசன் கண்ணன் உங்களை அழைத்து வரச் சொன்னார். என்று சொல்லிவிட்டு கருடன் பல்லைக்கடித்து கொண்டார். அஹாஹா! தவறிச் சொல்லிவிட்டோம் - என்று குழைந்தார்.*

*ஹநுமான் : யாரு?*

*கருடன்: த்வாரகாதீசன் வஸுதேவ தேவகீ மைந்தன் யசோதா நந்த தனயன்.*

*ஹநுமான்: அவருக்கு எத்தனை தாயார் தகப்பனார்?*

*கருடன்: வஸுதேவன் பிள்ளை தான், நந்த கோபரிடம் வளர்ந்தான். கண்ணனுக்கு பதினாறாயிரம் பத்நிகள்.*

*ஹநுமான் காதைப் பொத்திக் கொண்டார்.*

கருடரே! நான் அவரைப் பார்க்க வேண்டிய அவசியமில்லை. நான் ராமனை த்யானம் செய்து ராம நாமம் - சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

நீர் போகலாம் - என்று கூறித்திரும்பிப் படுத்துக் கொண்டு விட்டார் ஹநுமான்,

கருடன்: துவாரகை திரும்பினார். நடந்ததைச் சொன்னார்.

கண்ணன்: நான் தான் சொன்னேனே! ராமன் அழைக்கிறான் - என்று சொல்ல வேணும் என்று

கருடன்: எனக்கு எப்போதும் உங்கள் த்யானம் தானே! அது வாயில் வந்துவிட்டது.

ஸத்யபாமா: கருடனே! இப்படியெல்லாம் செய்து விட்டு எங்கே வந்தீர்!

கண்ணன்: பாமா கோவிக்காதே! கருடன் தான் வாய் தவறிச் சொல்லிவிட்டேன் என்றானே ! கருடா! உன்னால் தான் இந்தக் காரியம் நடக்கும். வேறு யாராலும் சாதிக்க முடியாது. கிளம்பு - என்றார் கருடன் மறுபடியும் ராமேச்வரம் வந்தார்.

ஹநுமான்: மறுபடியும் எங்கே வந்தீர்?

கருடன்: ராம பிரான் வரச் சொன்னார்.

ஹநுமான்: ராம பிரானா? அவர் எங்கே? அவர் ஏன் உம்மை அனுப்பினார்?

கருடன்: நான் தான் அவரிடம் போனேன்.

ஹநுமான்: நீங்கள் எதற்காக அவரிடம் போனீர்?

கருடன்: உமது கேள்விகளுக்கெல்லாம் என்னால் பதில் சொல்லி முடியாது. அவர் அழைக்கிறார் - நீர் வருவீரா? மாட்டீரா?

ஹநுமான்: கூர்மையாக கருடனைப் பார்த்தார் கைகூப்பினார்.

''கோபித்துக் கொள்ளாதீர்கள். எனக்கு வயது ரொம்ப ஆகிவிட்டது. தள்ளவில்லை ப்ரபுவோ அழைக்கிறார்? என்

செய்வது? எனக்குப்ராப்தம் இல்லை. என்னால் வரஇயலவில்லை - என்று நமஸ்கரித்து அவரிடம் சொல்லுங்கள். இதுவே எனக்குநீங்கள் செய்யக் கூடிய பரம உபகாரம்.

என்று சொல்லிவிட்டு ஹநுமான் தூண்டியிலேயே படுத்துக்கொண்டார்.

''இதேதுடா வம்பாகப் போய்விட்டது. கிழம் வராது போலிருக்கிறதே! கண்ணன் வரும் போதே சொன்னாரே - இங்கிதமாகச் சொல்லி எப்படியாவது அழைத்துவா என. நாம் பதற்றப்பட்டுவிட்டோமே!

அவருடைய தலை மாட்டில் கருடன் உட்கார்ந்து கொண்டார். ராம ராம ராம ராம ராம - என்று ஜபம் செய்தார். அவருடைய புத்தி வேலை செய்தது.

கிருஷ்ணபரமாத்மாவுக்கும் ஹநுமானிடம் எவ்வளவு மதிப்பு? அவரை எப்படியாவது அழைத்துவா - என்றாரே! அந்த ஹநுமானை நாம் அலட்சியமாக நினைத்து விட்டோமே! இதற்குக் காரணம். பகவான் பரமக்ருபையோடு நம்முடன் ஸ்வாதீனமாக சலுகையோடு பேசுகிறார். நமக்கோ ரொம்பப் பெரியவன் என்ற அஹங்காரம் தானே!

ஸநகாதிமுனிவர்கள் எல்லோரும் எவ்வளவு விநயத்தோடு பகவானிடம் நடந்து கொள்கிறார்கள்.

மிகவும் நெருக்கமாக ஒருவருடன் நாம் பழகிவிட்டால் அவர்களிடம் எவ்வளவு பெருமை யிருந்தாலும் ஒரு உதாஸீன புத்தி வந்து விடுகிறது

அடிக்கடி ஒரு உறவினர் வீட்டுக்குப் போக ஆரம்பித்தால் - முன்பெல்லாம் ஆதரவோடு - வாசலுக்கு வந்து அழைத்துப் போகிறவர்கள் - இப்போது உள்ளே வந்துவிட்ட போது - வா - என்று கூட கூறுவதில்லை.

அலட்சியமாக அவர்களின் கார்யத்திலேயே ஈடுபாடுவார்கள் -

மலயபர்வதத்தில் வஸிக்கின்ற வேடுவச்சி அடுப்புமூட்ட - கருவேலம் குச்சி கிடைக்காவிட்டால் - பக்கத்தில் உள்ள சந்தன மரக்கிளையை ஒடித்து அவசரமாக அடுப்பு மூட்டுவாள்.

**அதிபரிச$_1$ யாத் அவஜ்$_3$ஞா**
**ஸந்தத க$_3$மநாத் அநாத$_3$ ரோபவதி ।**
**மலயே பி$_4$ல்ல புரந்த்$_4$ரீ**
**ச$_1$ந்த$_3$ந தரு காஷ்ட$_2$ம் இந்த$_4$நீ குருதே ॥**

அதனால் தான் நமக்கு ஹநுமானின் பெருமை விளங்கவில்லை - என்று கருடன் வருந்தினார்.

படுத்திருந்த ஹநுமானின் பக்கத்தில் அமர்ந்து பத்து ராம நாமம் சொன்ன கருடனுக்கு நல்ல புத்தி வந்து விட்டது.

''ஹநுமானே! எழுந்திருமையா! ராமன் உமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார் ஐயா!

''காத்திருக்கிறாரா! அடடே பெரிய அபசாரம்! கருடாழ்வாரே! படுத்துக் கொண்டு விட்டால் லேசில் எழுந்திருக்க முடியாது. சற்றுத் தூக்கிவிடுமையா!

கருடன் குனிந்து மூக்கைப் கொடுத்து முக்கி இடுப்பை தூக்கினார். மூக்கு ஹநுமானின் இடுப்பில் அகப்பட்டுக் கொண்டு விட்டது. வெளியே இழுக்க முடியவில்லை.

கருடன் ஙொண ஙொண வென்று ராம நாமம் சொன்னார்.

''ராம ராம ஹநுமானே! சற்று இடுப்பை - அந்தப்புறம் ................

அந்தப்புறம் ஐயா - இந்தப்புறம் திரும்பினால். முகமே மாட்டிக்கொண்டு விடும்! அந்தப்புறம் திரும்புமையா!

ஹநுமான் எழுந்திருந்தார். கருடன் மூக்கு நசுங்கி - அலகு வழியாக ரத்தம் கொட்டியது.

ஹநுமான் கருடனுடைய மூக்கைச் சற்று தடவினார்.

''அப்பாடா! பிழைத்தேன் ஹநுமான்! முனகிக் கொண்டே எழுந்தார்.

ஹநுமானே கிளம்பலாமா?

ஹநுமான்: கிளம்புவோம் காலெல்லாம் வலிக்கிறது என்னைப் பிடித்துக் கொள்ளும். நடந்து போய்விடுவோம்.

கருடன்: நடந்தா! ராமேச்வரத்திலிருந்து துவாரகைக்கு - ..........நடந்தா?

பகவான் அடுத்த அவதாரம் எடுக்கும் போது தான் போய்ச் சேருவோம். என் தோளில் ஏறிக் கொள்ளும் ஐயா! நான் உம்மைத் தூக்கிக் கொண்டு பறந்து விடுகிறேன்''

ஹநுமான்: உங்க தோளிலே நானா? ஸாக்ஷாத் நாராயணன் ஏறின அந்தத் தோளிலே - நான் ஏறுவதா? மாட்டேன்.

கருடன்: ஆபத்துக்கு தோஷமில்லை ஐயா! ஏறும்.

ஹநுமான்: இப்போ என்ன ஆபத்து? ராம தர்சனம் கிடைக்கப்போகிறது வாரும்- நடந்து போவோம்.

கருடன்: ஹநுமானே -படுத்தாதீர் சொன்னதைக் கேளும் என் தோளில் ஏறிக் கொள்ளும் ஐயா!

ஹநுமான் முக்கி முக்கி எழுந்திருந்தார்.

தடுமாறி உட்கார்ந்து விட்டார். கருடன் கையைப் பிடித்துத் தூக்கினார். ஹநுமான் இழுப்பிலே கருடன் இழுபட்டு கருடனும் உட்கார்ந்துவிட்டார்.

கருடனுக்கும் தலைச்சுற்றியது. அவரைத் தாங்கிப் பிடித்தார் ஹநுமான். தோளில் தூக்கிக் கொண்டார். துவாரகை கடற்கரையில் இறக்கினார்.

கருடன் கண்விழித்தார் நாற்புறமும் பார்த்தார்.

கருடன்: எப்படி வந்தோம்?

ஹநுமான்: எல்லாம் ராம நாம மஹிமை. நான் கோமதியில்

ஸ்நாநம் செய்து விட்டுவருகிறேன். நீர்போய் பிரபுவிடம் சொல்லும்.

கருடன் நேரே கண்ணனிடம் ஓடினார்.

கண்ணன்: ஹநுமான் வந்தாச்சா?

கருடன் கண்ணன் காலில் வீழ்ந்தார்.

ப்ரபோ - என் கண்களைத் திறந்து விட்டீர்கள். பல அபாராதங்கள் செய்துவிட்டேன். எனக்கு விநயத்தைக் கற்பித்துவிட்டார் ஹநுமான். பகவத் ஸேவகன் ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ள வேண்டிய பாடம் விநயம் தான்.

கண்ணன்: பாமா! நீ தயாராகிவிட்டாயா? ஹநுமான் வந்து விட்டான்.

பாமா: இதோ நினைத்து நினைத்து ஸீதை மாதிரி அலங்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறேன்.

கண்ணன் தலையிலிருந்து மயிற்பீலியை அகற்றினார். இடுப்பில் சொருகி இருந்த புல்லாங்குழலை அகற்றினார். பஞ்ச கச்சத்தை சரி செய்து கொண்டார். இடது கையில் வில்லேந்தினார். வலது கையில் ஒருஅர்த்த சந்தர பாணம். தோளின் இருபுறமும் தொங்குகின்ற அங்கவஸ்திரம் திறந்த மார்பு.

ஹநுமான் அந்த மஹாமண்டபத்தில் - பிரவேசமாகி - தூணில் ஓரமாக - கூப்பிய கைகளுடன் பணிவுடன் நடந்து வந்தார்.

கண்ணன் - ''ஸீதை'' - என்று குரல் கொடுத்தார். ஹநுமான் அதற்குள் ராமபிரான் சரணங்களில் வீழ்ந்தார்.

ஹநுமான்: என்னக்ருபை? இவனை நினைத்தீர்களாமே! அழைத்தீர்களாமே! ராம ராம ராம தர்சனம் கிடைத்தது.

பாமா அதற்குள் ஸர்வாலங்கார பூஷிதையாக முந்தானை பின்புறம் விசிறித் தொங்க மிடுக்கோடு நடந்து வந்தாள்.

ஹநுமான் திரும்பிப் பார்த்தார்.

நேரே வாசலுக்கு வந்து விட்டார்.

எதிர்த்தமாளிகை - ருக்மிணிதேவியினுடையது அதில் வாசலில் ஒரு துளஸீமாடம். ருக்மிணி - ஸ்நாநம் செய்து விட்டுத் தலையைத் துவட்டி -நுனி முடிச்சுப் போட்டுக் கொண்டு நெற்றியின் இருபுறம் சுருள் சுருளையான குந்தலங்கள் தொங்கின. நெற்றியிலும் தலையின் வகிட்டு முனையிலும் குங்குமம் துலங்கியது. முந்தானையை இழுத்து இடுப்பில் சொருகிக் கொண்டு திருமாங்கல்யம் மட்டும் கழுத்திலே தொங்க சேலையினால் இரு தோள்களையும் மூடிக்கொண்டு.

துளஸீமாடத்தின் அருகே கைகூப்பி நின்றாள்.

ஹநுமான் ஓடினார் - ''தாயே ஜாநகி அம்மா! தாஸன் ஹநுமான் வணங்குகிறேன்.'' என்றான்.

அதற்குள் ராமபிரானும் (கண்ணன்) அங்கு வந்து விட்டார்.

ஸீதை (ருக்மிணி) குழந்தாய்! பிரபுவை நீ பார்த்து எத்தனை நாளாயிற்று ஸௌக்யமாக இருக்கிறாயா?

ஹநுமான் ''ஆனந்தமாக இருக்கிறேன்''

எதிர் மாளிகை வாசலில் ஸத்ய பாமாவும் அறுபதினாயிரம் தேவிகளும் கூடிவிட்டனர்.

எல்லோரும் ஸீதாராம தர்சனம் பெற்றார்கள்.

கண்ணன் ருக்மிணியுடன் ஹநுமானுடன் - பாமா மாளிகைக்கு வந்தார். ருக்மிணி முன்னே போய் பாமாவை இழுத்துக் கட்டிக் கொண்டாள்.

''பாமா! மஹாலெட்சுமி மாதிரி இருக்கிறாய்!''

பாமா! ''இவர் என்னை ஸீதாமாதிரி வா என்று சொன்னாரே தவிர ஸீதை இவ்வளவு ஸாதாரணமாக இருப்பாள் என்று சொல்லவே இல்லை. ஸீதை

மஹாலெட்சுமி மாதிரி இருப்பாள் என்று நினைத்து அலங்காரம் செய்து கொண்டேன். இந்த ஹநுமான் என்னை லட்சியம் செய்யவில்லை.

ஹநுமான் ஸத்யபாமாவிடம் வந்தார். ''அம்மா! நீங்கள் மஹாலட்சுமியாகவே காட்சி அளித்தீர்கள்- ஆனால் நான் விரும்பியது - ஜாநகீமாதாவைக் காண்போம் - என்று. ருக்மிணி தேவி அப்படி எனக்கு தர்சனம் அளித்தாள். மஹாபாக்யம் பண்ணியிருக்கிறேன்.

ஸத்யபாமா: ஹநுமானே - எனக்கு ருக்மணி மாதிரி விநயம் வரவேண்டு மென்று அநுக்ரஹம் பண்ணுங்கள்.

ஹநுமான்: இப்படி நினைத்துவிட்டீர்களே. அதுவே போதும் எல்லாம் ராமக்ருபை.

***ஹநுமான் வணங்கி விடைபெற்றார்.***



## 4.பீமாஞ்ஜநேய ஸந்திப்பு

*த்வாபரயுகக் கடைசியில் பாண்டவர்களுடைய வரலாறு. பாண்டவர்கள் வனவாஸத்தில் இருக்கிறார்கள். முறைப்படி - துரௌபதி பீமேஸநனுடன் வாழ்கிறாள். அர்ஜுனன் பதரிகாச்ரமத்தில் நரநாரயணர்களைச் தர்சிக்க சென்றிருந்த சமயம். தர்சனம் செய்த அர்ஜுனனைப் பார்ப்பதற்காக - பீமஸேனன் துரௌபதியுடன் பதரிகாச்ரமம் சென்று அர்ஜுனனை ஸந்தித்த பிறகு- அந்த ஆச்ரம சூழ்நிலையிலேயே சில நாட்கள் தங்கினான்.*

*ஒரு நாள் மாலை மலைச் சாரலில் துரௌபதியும் பீமனும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு காற்று வீசிற்று. அது எங்கிருந்தோ - அபூர்வமான நறுமணத்தைத் தாங்கி வந்தது. அத்துடன் ஒரு மலரின் இதழும் துரௌபதியின் மடியில் வீழ்ந்தது. அதை நுகர்ந்து பார்த்தாள்.*

*அதனுடைய நறுமணம் தான் காற்று வீச்சில் தான் நுகர்ந்தது - என்று தெரிந்து கொண்டாள். ''இங்கே தான் - எங்கேயோ - இந்த மலர் பூக்கிறாப் போல இருக்கிறது கிடைக்குமா? பார்ப்போமா? -என்றாள்.*

*அங்கு ஒரு தவசி நடந்து போய்க் கொண்டிருந்தார். அவரிடம் விசாரித்தார். அவர் சொன்னார் - ''இது* ***ஸௌகந்திகா மலர்*** *- அது இந்த மலையின் அடுத்த சரிவில் கிடைக்கும். அங்கே யாரும் போகமுடியாது - என்று சொல்லிவிட்டுப் போனார்.*

*துரௌபதியை -ஒரு ஸாதுவின் ஆச்ரமத்தில் தங்க வைத்து விட்டு பீமன் தேடக் கிளம்பினான். செங்குத்தான மலை மீது ஏறிவிட்டான்.*

*சற்றுதூரத்தில் - ஒரு சரிவு - யாரும் நடந்ததாகத் தெரியவில்லை. மனிதச் சுவடே காணப்படவில்லை.*

*சற்றுதூரம் நடந்தான் பீமன். அங்கே ஒரு கிழக்குரங்கு - வழியை மறைத்துக் கொண்டு படுத்துக் கிடந்தது. இருபுறமும் இரண்டு பெரிய பாறைகள்.*

*பீமன் குரங்கைப் பிடித்துத் தள்ளினான் - நகர்த்த முடியவில்லை.*

*''குரங்கே! எழுந்திரு - என்றான்.*

*குரங்கு - யாரையா அது? என்னை ஏன் எழுப்புகிறாய்?*

*பீமன் - நான் அந்தப்புறம் போகவேண்டும். வழிவிடு!*

*குரங்கு - அந்தப்பக்கம் போகக்கூடாது. வேற எங்காவது போய்த் தொலை.*

*பீமன் : என்ன குரங்கே? அவமரியாதையாகப் பேசுகிறாய்?*

*குரங்கு: நான் ஸௌக்கியமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறேன். என்னை எழுப்பிவிட்டாய். உன்னோடு கொஞ்சுவேனா?*

*பீமன்:வழியில் படுத்திருந்தால் - எழுப்பத்தானே வேண்டும்?*

*குரங்கு: இது வழியல்ல என்றுதான் சொல்கிறேன்.*

*பீமன்: இது உன் இஷ்டமா! நான் அந்தப் புறம் போகத்தான் வேண்டும். வழிவிடு.*

*குரங்கு: அட ஏன்ஐயா தொல்லை பண்றே - தாண்டிப் போயேன் ஐயா!*

*பீமன்: மனுஷாள் படுத்துக்கொண்டிருப்பவரைத் தாண்ட மாட்டார்கள். நீ குரங்கு - எதையும் தாண்டுவாய்.*

*குரங்கு: மஹாமநுஷன் நீ - தாண்ட மாட்டாயாக்கும். உன் பருத்த உடலை வைத்துக் கொண்டு உன்னால் தாண்ட முடியவில்லை என்று சொல்லேன் - அதற்கு சாஸ்திரம் எதற்கு பேசுகிறாய்?*

*பீமன்: இப்போது வழிவிடப் போகிறாயா இல்லையா?*

*குரங்கு: எனக்கு தூங்குவதற்கு இது தான் சுகமான இடம். என்னைத் தொந்தரவு செய்யாதே!*

*பீமன்: அப்படியா சங்கதி? இதோ பார் உன்னைப் புரட்டி பள்ளத்தில் தள்ளிவிடுகிறேன்*

*குரங்கு: செய்யேன் - நான் தடுக்கவில்லை*

*பீமன்: வாலை மட்டும் நகர்த்து அது வழியாகப் போகிறேன்.*

*குரங்கு: நீயே நகர்த்து*

*பீமன் குனிந்தான். வாலின் அடியில் இடது காலை கொடுத்தான். முக்கிமுனகி உள்ளே செலுத்தினான். இடது கால் வாலில் கெட்டியாகச் சிக்கிக் கொண்டு விட்டது. இழுத்தான். முடியவில்லை. வலது புறங்கையை வாலின் கீழே சொருகினான். அதுவும் மாட்டிக் கொண்டுவிட்டது.*

*நிற்கவும் முடியவில்லை. உட்காரவும் முடியவில்லை. வலது காலால் வாலை உதைத்தான். முழங்கால் மளுக்கென்று சுலுக்கிக்கொண்டு விட்டது. காலைக் கீழே ஊன்ற முடியவில்லை.*

*''குரங்கே -நகரு .என் கை கால்களை விடு''*

*ஹநுமான் திரும்பினார்.*

*வாலும் திரும்பியது.சுலுக்கு கொண்ட பீமனின் வலது காலை அழுத்தியது! வலி தாங்க முடியவில்லை.*

*பீமஸேனனுக்கு கோபம் வந்தது - கர்ஜித்தான்.*

*''நான் யார் தெரியுமா?''*

*''யாரையா நீ''*

*''பாண்டு மஹாராஜனின் குமாரன், குந்திபுத்ரன் யுதிஷ்ரன் தம்பி அர்ஜுனனின்அண்ணா!''*

*ஹநுமான்: ஒஹோ! இன்னும் யார் பெயராவது சொல்லேன்.*

*பிமன்: சொல்லிவிடுகிறேன். சொன்னால் நீ பயந்து செத்துவிடுவாய்,*

*ஹநுமான்: அது யார்? புதுப் பெயராக இருக்கிறதே.*

*பீமன்: புதுப்பெயரா? ஹநுமானைப்பற்றி தெரியாதா? இப்படி ஒரு பிறவி நீ எடுத்திருக்க வேண்டாம்.*

*ஹநுமான்: நான் யாருன்னு உனக்கு தெரியவில்லை - நீயும் பிறந்திருக்க வேண்டாம்.*

பீமன்: ஹநுமானைப் போல் வேறு ஒருத்தன் கிடையாது.

ஹநுமான்: ஒன்றோ இரண்டோ? அவன் யாருன்னு சொல்லேன்.

பீமன்: அவன் ராமதாஸன், வாயு குமாரன், கடலையே தாண்டினானய்யா.

ஹநுமான்: நான் இந்த ஹிமவத் பர்வதத்தையே தாண்டியிருக்கிறேன். அது தெரியுமா? உனக்கு?

பீமன்: யார் கண்டா? நீதான் சொல்றே!

ஹநுமான்: எல்லோருக்கும் தெரியும் உனக்குத்தான் தெரியவில்லை.

பீமன்: அதெல்லாம் சரி! வலது கால் சுலுக்கு ரொம்ப வலிக்கிறது. இடது காலை விடுமையா! கொஞ்சம் நகரு.

ஹநுமான் சற்று வாலை நகர்த்தினார். இடது கால் விடுபட்டுப்பின்னால் சாய்ந்தான். - விழுந்தால் அதல பாதாளம்.

ஹநுமான் எழுந்து அவனைத் தாங்கிப்பிடித்தார். கை கால்களைத் தடவிக் கொடுத்தார். வலி போன இடம் தெரியவில்லை. பீமன் நிமிர்ந்து நின்றான்.

ஹநுமான் அவனை இறுக்கி அணைத்தார்.

''நான் யார் தெரிகிறதா?'' - என்றுகேட்டார்.

பீமன் ஹநுமானை நிமிர்ந்து பார்த்தான்.

ஹநுமான் விச்வ ரூபம் எடுத்தார்.

மேக மண்டலத்தின் மேலே அவருடைய மார்பு மறைந்தது. மேக மண்டலத்துக்கப்பாலே ஹநுமானின் முகம் ஜோதிர் மயமாகத் தெரிந்தது.

ஹநுமானை விழுந்து வணங்கினான் பீமன். ஹநுமான் பீமனை அழைத்துப் போய் சுவர்க்கத்திலிருந்த ஆகாச மண்டலத்தில் தொங்கிய கொடியிலிருந்து -

ஸௌகந்திக மலர்களைப் பறித்து -பீமஸேனனிடம் கொடுத்தார்.

பீமஸேனன்: அண்ணா எனக்கு மற்றொரு உபகாரம் செய்ய வேண்டுமே?

ஹநுமான்: என்ன அது?

பீமன்: துர்யோதனன் வஞ்சனை செய்து எங்கள் ராஜ்யத்தைப் பிடுங்கிக் கொண்டான். என் அண்ணா - தர்ம புத்ரர் தர்மம் தர்மம் - என்று சொல்லிக் கொண்டு அந்த வஞ்சகனுடன் சூதாட்டத்தில் தோற்றார். வனவாஸம் வந்திருக்கிறோம்.

பனிரெண்டு ஆண்டுகள் கழித்தும் துர்யோதனன் ஸமாதான ஒப்பந்தத்திற்கு கட்டுப்பட்டு - எங்கள் ராஜ்யத்தைக் கொடுக்கப் போவதில்லை. போர்தான் மூளப் போகிறது.

எங்களுடைய ஒரே பலம் என் தம்பி அர்ஜுனன். மஹாவீரன். அவனால் எங்களுக்கு சத்ருக்களை ஒழித்து வெற்றிதேடித் தரமுடியும். அவனுக்கு ஒரு பலஹீனம்.

கண்ணனைக் கண்டால் - எல்லாவற்றையும் போட்டுவிட்டு அவனிடம் போய்விடுவான். நாங்களும் கண்ணனைத்தான் முழுமையாக நம்பியிருக்கிறோம்.

கண்ணனின் லீலைஎந்த சமயம் எப்போது - என்ன செய்வான் என்று யாருக்கும் தெரியாது. யுத்த களத்தில் இவர்களை போரில் முழுமனதாகத் தாங்கள் தான் ஈடுபடுத்த வேண்டும். இந்த வரம் கொடுங்கள்.

ஹநுமான்: கவலையே படாதே அர்ஜுனனுடைய ரதத்தில் கொடி மரத்தைப் பிடித்து உட்கார்ந்து கொண்டு இருவரையும் கண் காணிக்கிறேன் - என்று அருள் பாலித்தார்.

மங்களம்:

இவ்வாறெல்லாம் ஹநுமானின் பக்தர்கள் பலரின் அநுபவங்களைபற்றி யெல்லாம் பலசரித்திரங்கள் உண்டு பிழைத்துக் கிடந்தால் அவற்றைத் தொகுத்துக் கொண்டே போகலாம் என்று இவனுக்கு ஸங்கல்பம் உண்டு.

ஹநுமானின் அமோகமான க்ருபை கூட்டிவைக்கட்டும்.

இத்துடன் இந்த நூலுக்கு மங்களம் பாடப்படுகிறது.

**அஞ்ஜநா கேஸரீ புண்யாய மங்களம்**
**ஸ்ரீராம ப$_4$க்தா க்$_3$ர க$_3$ண்யாய மங்களம்**

**ஸ்ரீராம நாமைக வத நாய மங்களம்**
**ஜாநகீ சே$_+$ாகாத்$_3$ரி தமநாய மங்களம்**

**ஸஞ்ஜீவிதாநுஜ ராமமோதாய மங்களம்**
**த்வம் ஜீவஸர்வதே$_3$ த்யாசி$_+$ஷே மங்களம்**

**க$_3$ாத்ராச்$_+$லிஷத்ராம ப$_4$த்ராய மங்களம்**
**ஆத்ரேய ஸாபல்யதாயிநே மங்களம்.**

*ஜய ஜய ஹநுமான் க்ருபையால் 18.02.2008ல் எழுத ஆரம்பிக்கப்பட்டு 20.05.2008ல் முடிவுற்றது.*